# தென்னிந்தியாவைப்பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள்

(மெகஸ்தனிஸ் முதல் மா ஹுவான் வரை)


தொகுத்துப் பதிப்பித்தவர் :

கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி, எம்.ஏ.

தமிழாக்கம் :

மு. ரா. பெருமாள் முதலியார், எம்.ஏ., எல்.டி.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—714

# தென்னிந்தியாவைப்பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள்

(மெகஸ்தனிஸ் முதல் மா ஹுவான் வரை)

தொகுத்துப் பதிப்பித்தவர் :
**கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி,** எம்.ஏ.,
பேராசிரியர்,
இந்திய வரலாறு - தொல்பொருளியல்,
சென்னைப் பல்கலைக்கழகம்.

தமிழாக்கம் :
**மு. ரா. பெருமாள் முதலியார்,** எம்.ஏ., எல்.டி.,
சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரி முன்னாள் முதல்வர்,
ஓய்வுபெற்ற தமிழ் வளர்ச்சி இயக்குநர்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition - July, 1976

T.N.T.B.S. (C.P.) No. 714



# FOREIGN NOTICES OF SOUTH INDIA
## (FROM MEGASTHENES TO MA HUAN)

Collected and Edited by
K. A. NILAKANTA SASTRI

Translated into Tamil from English by
M. R. PERUMAL MUDALIAR

*Price Rs. 12-15*

This translation of Foreign Notices of South India, Collected and Edited by K. A. Nilakanta Sastri, 1972 Edition, is published by arrangement with the University of Madras, Madras.

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed out of the Paper allotted by the Government of India.

*Printed by*
Nanbargal Achagam,
Madras-600018

# பதிப்புரை

தென்னிந்தியாவைப்பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள் என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 714ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 749 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப்படுகிறது.

மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# முன்னுரை

தென்னிந்தியாவின் முற்கால வரலாற்றுக்கு இதுவோர் ஆதார நூல். இந்த நூலைப் பொறுத்தவரையில் தென்னிந்தியா என்பது இலங்கையையும் உள்ளடக்கிய நிலப் பகுதியைக் குறிக்கிறது. வெளி நாட்டினர் பலர் தென்னிந்தியாவையும் இலங்கையையும் பற்றி ஏராளமான குறிப்புகளை எழுதிவைத்துள்ளனர். அவை பொதுமக்களுக்கு எளிதில் கிடைக்காத நூல்களிலும் அறிஞர் குழுக்களின் வெளியீடுகளிலும் சிதறிக் கிடக்கின்றன. சாதாரண வாசகர்களுக்கும் அவை எளிதிற் கிடைக்குமாறு செய்ய வேண்டும் என்னும் நோக்கத்துடன் இந்த நூலை உருவாக்கியுள்ளேன். வெளிநாட்டினர் சிலர் அரபு மொழியிலும் சீன மொழியிலும் எழுதிய குறிப்புகள் ஃபிரெஞ்சு மொழியில் பெயர்த்தெழுதப் பட்டுள்ளன. அவற்றுள் சில, இந்த நூலில் சேர்ப்பதற்காகவே, ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

இந்த நூலிலுள்ள குறிப்புகள் பெரும்பாலும் கிரேக்க, லத்தீன், அரபு, சீன, பாரசீக ஆசிரியர்கள் எழுதியவை. அந்த மொழிகளில் எனக்குப் பயிற்சியில்லை. ஆனால், அவை தற்கால ஐரோப்பிய மொழிகளில் பெயர்த்தெழுதப்பட்டுள்ளன. அந்த மொழிபெயர்ப்புகளின் அடிப்படையில்தான் இந்த நூலை உருவாக்கியுள்ளேன். வெளிநாட்டினர் எழுதிய குறிப்புகள் அனைத்தும் இந்த நூலில் இடம்பெறவில்லை. எனினும், முக்கியமான குறிப்பு எதனையும் நான் விடவில்லை.

வெளி நாட்டினர் குறிப்புகளுள் எவ்வெப் பகுதிகள் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளன, அவை தென்னிந்திய வரலாற்று மாணவர்களுக்கு எவ்வாறு முக்கியமானவை என்னும் செய்திகள் தோற்றுவாய் என்னும் பகுதியிலும் அதையொட்டிய குறிப்புகளிலும் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன. தெரிந்தெடுக்கப்பட்டுள்ள குறிப்புகளே இந்தச் செய்திகளை விளக்குவதற்குத் துணை புரியும் என்று நான் நம்புகிறேன்.

இபன் பதூதாவின் குறிப்பிற் காணப்படும் ஆட்பெயர், இடப்பெயர் போன்றவற்றின் எழுத்துப் பெயர்ப்பைச் செய்து உதவிய டாக்டர் என். வேங்கடரமணையா அவர்களுக்கும் ஃபிரெஞ்சு மொழிக் குறிப்புகள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும், ஃபிரெஞ்சு மொழிப் பருவ இதழ்களிலிருந்து எடுத்துக்காட்டப்பட்டுள்ள மேற்கோள்களைச் சரிபார்த்தும் உதவிய செல்வி சௌமினிக்கும் நான் என் மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இபன் பதூதாவின் குறிப்பைத் தவிர ஏனைய குறிப்புகளில் வரும் ஆட்பெயர், இடப்பெயர் ஆகியவற்றைப் பெயர்த்தெழுதும்போது, அவை மூலக் குறிப்புகளில் எவ்வாறு உள்ளனவோ அவ்வாறே எழுதியுள்ளேன்.

For permission to include extracts I am indebted to M. Paul Pelliot, Directeur, Toung Pao, for Nos. II, IX, XI, XVI, XXIV, XXXII, XXXIII, XXXIV A—B; to Archibald R. Maclean, Esq., for Nos. III, IV, VI and XII A i to iii, B and C, and to the High Commissioner for India, London, for procuring this permission; to the Director, Philadelphia Commercial Museum, for V and VII; to the Clarendon Press, Oxford, for Nos. VIII and XV B-D; to the General Secretary, Royal Asiatic Society of Bengal, Calcutta, for X, XIII and Appendix IV; to the Secretary, Royal Asiatic Society, London, for XIV, XXXIV C-D; to the Librarian, Societe Asiatique, Paris, for XV A, XVIII, XXX A-BB, C-ii, Appendix i, ii and iii; to Secretaire General, Libraire Ernest Leroux, Paris, for XV E; to the Directeur B.E.F.E.O., Hanoi, for XVII; to Dr. A. Rouhier of Libraire et Editions, Vega, Paris, who now represents Editions Bossard, for XIX; to Messrs. Kegan Paul, Trench Trübner & Co., for XX; to the Honorary Secretary, Hakluyt Society, London, for XII A iv, XXII, XXVI, XXVII, XXVIII, XXX, C-i and XXXI; and to Messrs. John Murray, London, for XXV. Extracts No. XXI and XXIX are from publications issued under the auspices of the Governments of Burma and France. Finally, Extract No. XXIII is from Chau Ju. kua (Hirth and Rockhill), published by the Imperial Academy of Sciences, St. Petersburg, with whom or whose representatives no communication could be established. Extract No. I contains matter which appeared in the *Indian Antiquary* (Vol. VI) and was also published in book form by Messrs. Thacker Spink & Co.; and is

included with the permission of Mr. C.E.A.W. Oldham on behalf of the *Indian Antiquary*.

இந்நூலைப் பல்கலைக்கழக வரலாற்று நூல் வரிசையில் சேர்த்துக்கொண்டதற்காகச் சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிக் குழுவிற்கு (Syndicate) என் நன்றி உரித்தாகும்.

இந் நூலை விரைவாகவும் மிக நன்றாகவும் அச்சிட்டுக் கொடுத்ததற்காக ஜி. எஸ். அச்சகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்திய வரலாற்றுத் துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை,
20—9—1939.

K. A. N.

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

கிழை நாடுகளின் கடற்பயணங்களைப் பற்றிய செய்திகளை நாம் அறியுந்தோறும் அறியுந்தோறும் அவற்றின் வரலாற்றுத் தொன்மையும் உயர்ந்து கொண்டே போகிறது.

—யூல்.

இந்திய வரலாற்றைப் பயில்வோர் அந்நாடு ஒரு கண்டம் என்பதையும் கடல் சார்ந்த நாடு என்பதையும் கருத்திற் கொள்ளவேண்டும்.

—சில்வெயின் லெவி.

**இந்துமாக் கடல்**

மத்தியதரைக் கடல் நாற்புறமும் நிலஞ்சூழ்ந்த ஒரு பள்ளம் போன்றது. ஆனால் இந்துமாக் கடல் அத்தகைய தன்று. அதன் தென்புறம் மிகப் பரந்த நீர்நிலையோடு இணைந்துள்ளது. அக் கடலில் உள்ள நீரோட்டங்கள் அங்கு வீசும் பருவக் காற்றுகள் ஆகியவற்றின் விளைவாக ஆப்பிரிக்கக் கடற்கரை, அரேபியா, பாரசீக வளைகுடா, இந்தியா, அதனை யடுத்துள்ள தீவுகள், இந்தோச் சீனு, கொரியா, ஜப்பான் ஆகிய நாடுகளுக் கிடையில் மிகப் பழங்காலந் தொட்டுக் கடற் பயணங்கள் நிகழ்ந்துகொண்டே இருந்தன. அந்தப் போக்குவரவுத் தொடர்பில் அந்த நாடுகள் அனைத்துமே பங்கு கொண்டன. அந்த இணைப்பில் இந்தியா அடைந்த பங்கு கழிமிகை யானது என்று சொல்ல இயலா தெனினும் தனிச் சிறப்புடையது என்று சொல்லலாம். நிலவியல் அமைப்பில் இந்தியா அடைந்துள்ள தனிவாய்ப்பும் அதன் கடற்கரையின் நீள மிகுதியும் அந்தத் தனிச் சிறப்புக்குக் காரண மாயின. மேலே சொன்ன போக்குவரவு இணைப்பின் பல தடங்கள் இந்தியாவை மையமாகக் கொண்டுள்ளன. இந்தத் தொடர்பை எடுத்துரைக்கும் ஆவணங்கள் நமக்கு அதிகமாய்க் கிடைக்கவில்லை என்பது உண்மையே. ஆனால் கடல் கடந்த

நாடுகளான பர்மா, சயாம், காம்போஜம் (கம்போடியா), இந்தோச்சீனு, ஜாவா ஆகிய நாடுகளிலும், மடகாஸ்கரிலும் இந்திய நாகரிகத்தைப் பரப்பிய இனத்தினர் நீர்வழிச் செலவுத் திறம் பெற்றவர்களாகத்தான் இருந்திருப்பர்.

**மக்கள் மரபுச் செய்திகள்**

பண்டைக் காலத் தென்னிந்தியா, பொதுவாக, மேலை நாடுகளைக் காட்டிலும் கீழை நாடுகளுடன்தான் அதிகத் தொடர்பு கொண்டிருந்தது என்று சொல்லலாம். எனினும் சூர்ப்பாரகம், பாருகச்சம், முஜிரிஸ் (முசிறி) ஆகிய துறைமுகங்கள் வரலாற்றிலும் மரபு வழிக் கதைகளிலும் மிகப் புகழ் பெற்றுள்ளன. இராமாயண ஆராய்ச்சியில் புகழ் பெற்ற சில்வெயின் லெவி என்பவர், இராமாயணத்தின் நான்காம் பகுதியில் காணப்படும் நிலவியல் காண்டங்கள் எடுத்துரைக்கின்ற செய்திகளுக்கும் அரபு நில நூலாசிரியர்கள் எழுதி வைத்துள்ள செய்திகளுக்கும் இருக்கின்ற ஒற்றுமைகள் பலவற்றை வற்புறுத்திச் சுட்டிக் காட்டுகிறுர்.[1] 'தாங்களாகவோ வழக்கத்திற்கு மாருக அடித்த காற்றில் சிக்கிக் கொண்டதாலோ நெடுந்தொலைவில் இருந்த நாடுகளைச் சென்றடைந்த' மாலுமிகளிடையில் வழக்கில் இருந்த கதைகளை 'இந்துமாக்கடல் மரபு வழிக் கதைகள்' என்று சொல்லலாம் என்று சில்வெயின் லெவி கூறுகிறுர். 'நிலத்தில் நெடுந்தொலைவு உள்வாங்கிச் செல்லும் குடாக்களையும் வெளியே நீண்டு நிற்கின்ற திண்மைச் செறிவுடைய நிலப்பகுதிகளையும் உடையவையும் ஆப்பிரிக்கா முதல் சீனுவரையில் பரந்து கிடப்பவையும் ஆகிய இந்தக் கழிமிக நீண்ட கடற்கரைகளில் அந்தக் கதைகள் மீண்டும் மீண்டும் எடுத்துரைக்கப் படுகின்றன; மீண்டும் மீண்டும் ஆய்வு பெறுகின்றன; புதுப்புதுச் சான்றுகளால் உரம் பெறுகின்றன. அந்தக் கதைகள் கூறுகின்ற, புனித அற்புதங்களைத் தன்மானமுடைய மாலுமி, ஒவ்வொருவனும் தன்னுடைய கண்களாலேயே கண்டிருக்க வேண்டும். பெரிப்ளஸின் ஆசிரியர் முதல் சிந்துபாது வரையிலும் வாழ்ந்த எத்தனையோ மாலுமிகள் அதே கதைகளைச் சொல்லுகிருர்கள். ஒன்றன் பின் ஒன்ருக வந்த கதைத் தொகுதிகள் அனைத்திலும் அதே கதைகள் இடம் பெறுகின்றன. ஆல்பருனி[2] வாழ்ந்த காலத்தில் ஆப்பிரிக்காவுக்கும் சீனுவுக்கும் சுறுசுறுப்பான நீர்வழித் தொடர்பு இருந்தது என்பதும்,

[1] Pour l' Histoire du Ramayana, JA 11:11 (1918) pp. 147-8. Cf. also IHQ. vi. pp. 597 ff.

[2] Al- , ed. Sachau, Vol-ii, p. 104.

அத்தொடர்பு தொன்மை வாய்ந்தது என்பதும், அத்தொடர்பில் இந்தியாவும் பங்கு பெற்றிருந்தது என்பதும் தெளிவாய்த் தெரிகின்ற செய்திகள். 'சோமநாதபுரம் ஒரு துறைமுகம் என்பதும், ஜாஞ்சு (ஆப்பிரிக்க) நாட்டிலுள்ள சுபாலாவிலிருந்து சீனவுக்கும் சீனுவிலிருந்து சுபாலாவுக்கும் பயணம் செய்த கப்பல்கள் அங்குத் தங்கிச் சென்றன என்பதுமே சோமநாதபுரம் இவ்வளவு புகழ் பெறுவதற்குக் காரணமா யிருந்தன' என்று அவர் சொல்கிறார்.

**சீனவுக்குச் செல்லும் தரைவழி**

நிலவழிச் செலவிலும் இந்தியாவுக்கும் சீனுவுக்கும் இருந்த தொடர்பு நீர்வழிச் செலவைப் போலவே சுறுசுறுப்பாய் இருந்தது. பாஹியனும் யுவான் சுவாங்கும் இந்தியாவுக்கு வருவதற்குத் தெரிந்தெடுத்த நிலவழியில் மேலும் பலர் வந்தனர். அவர்களுடைய பயணங்களுக்குச் சமயத்தைப் போலவே வாணிகமும் காரணமா யிருந்தது. தம்மைப் போலவே சமய அறிவு பெறுவதற்காகத் தம் காலத்தில் இந்தியாவுக்கு வந்த அறுபது சீனத் துறவிகளைப் பற்றி இட்சிங் எழுதி வைத்துள்ளார். ஆனல் அதே காலத்தில் இந்தியாவுக்கும் சீனவுக்கும் இருந்த வாணிகத் தொடர்பைப் பற்றிய செய்தி எதுவும் நமக்குக் கிடைக்க வில்லை. எனினும், சாசேனியர் காலத் திலேயே பாரசீகர்கள் ஜொராஸ்ட்ர மதத்தின் பிறப்பிடமான பாக்ட்ரியானவை இந்திய நாடாகவும் ஆக்சஸ் நதியை பௌத்தர் பார்ப்பனர் ஆகியவர்களுடைய ஆறாகவும் நடைமுறையில் கருதினர்கள் என்பதை காரஜ் என்பவர் எடுத்துக்காட்டி யுள்ளார்.[3] ஏறக்குறைய எண்ணூருண்டுக் காலம் (கி.மு. 125—கி.பி. 650) பாக்ட்ரியானு குஷாணர்களுடைய ஆட்சியில் இருந்தது. அவர்களுடைய ஆட்சி பாக்ட்ரியானுவோடு நின்று விடாமல், காபூல் பள்ளத்தாக்கு முழுவதிலும் சிந்து நதிப் பள்ளத்தாக்கில் குஜராத்து வரையிலும் பரவியிருந்தது. இவ்வாறு அரசியல் துறையில் இந்திய நாட்டோடு தொடர்பு கொண்டிருந்த பாக்ட்ரியானவை உண்மையிலேயே ஈரான் என்று சொல்லக்கூடிய நிலப்பகுதியினின்று ஒரு பாலைவனம் பிரித்து வைத்திருந்தது. அதனல் பாக்ட்ரியானவில் சிறிது சிறிதாக இந்தியாவின் செல்வாக்கு வளர்ந்தது. எனவே மாகியின் பண்டைச் சமயம் மறைந்து பார்ப்பன மதமும், முக்கியமாக,பௌத்த சமயமும் அங்குச் செல்வாக்குப் பெற்றன. அந்தக் காலத்து கிரேக்க நூலாசிரியர்கள் பாக்ட்ரியானவைக்

[3] JA. vi; 13 (1869) pp. 176-84.

குறிப்பிடும் போதெல்லாம் அதனை இந்தியாவோடு இணைத்தே குறிப்பிட்டு அங்கே வாழ்ந்த ஆயிரக் கணக்கான பார்ப்பனர் களையும் சமணர்களையும் பற்றி எழுதுகிறார்கள். பாக்ட்ரியாவை ஆண்ட கிரேக்க மன்னர்களுள் பலருடைய பதக்கங்களில் இந்திய மொழி ஒன்றன் எழுத்துகள் பொறிக்கப் பட்டுள்ளன. அதே காலத்தில் வெளியான இந்தோ சித்தியப் பதக்கங்கள் சிலவற்றில் ஈரானியத் தெய்வங்களின் பெயர்கள் சில காணப்படு கின்றன என்பது உண்மையே. எனினும், அவற்றில் பொறிக்கப் பட்டுள்ள உருவங்களில் இந்திய இயல்புகள் காணப்படுகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது. சில உருவங்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட தலைகளும் இரண்டுக்கு மேற்பட்ட கைகளும் இருக் கின்றன. இந்த விசித்திர இயல்பு இந்துத் தெய்வ உருவங் களின் தனி இயல்பு என்பதை நாம் கவனிக்க வேண்டும். இந்தோ சித்திய அரசர்களைப் பற்றிய மிக முக்கியமான செய்திகள் பலவற்றைச் சீன வரலாற்றாசிரியர்கள் காப்பாற்றி வைத்திருக் கிறார்கள். அவர்கள் எழுதி வைத்துள்ள ஆண்டு நிகழ்ச்சிப் பதிவேடுகள் அவ்வரசர்கள் ஆர்வமிக்க பௌத்தர்கள் என்பதைத் தெரிவிக்கின்றன. அவ்வரசர்களுள் பலருக்கு இந்தக் கூற்றுப் பொருந்தும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. அவர்களுள் மிகவும் புகழ் பெற்றவரான கனெர்க்கிக்கு (கனிஷ்கருக்கு) இந்தக் கூற்று மிக மிகப் பொருந்தும். பால்ஹி என்ற ஈரானியப் பெயர் சமஸ்கிருத இலக்கியத்தில் இடம் பெற்றதும், பௌத்தர் பார்ப்பனர் ஆகிய இரு சாராருடைய அண்ட இயல் அமைப்பு நூல்களிலும் ஆக்சஸ் நதி இடம் பெற்றதும் இந்தோ சித்திய அரசர்கள் காலத்தில்தான். (ஆக்சஸ் நதியின் பழைய பெயர் இந்த நூல்களில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. அந்தப் பெயரின் சுவடே ஈரானில் இல்லை.) டாரிம் என்னும் ஆற்றுக்கு ராமாயணத்தில் காணும் பெயர் 'சீதா' என்பதாகும். இந்த ஆறு மட்டுமன்றி, சிந்து, கங்கை, ஆக்சஸ் ஆகிய நதிகளும் அனவதப்தா என்னும் ஏரியில்தான் தோன்றுகின்றன என்று பௌத்த மரபு அண்ட இயல் எடுத்துரைக்கின்றது. இச் செய்திகளை சில்வெயின் லெவி சுட்டிக் காட்டுகிறார்.[4]

**செரிந்தியா** ஹுவான் சுவாங் இந்தியாவுக்கு வரும் வழியில் பாக்ட்ரி யாவைக் கடந்து வந்தபோது, "பௌத்தம், பொதுவாக, ஆக்சஸ் நதிக்கரையில் இருந்த டெர்மஸ் என்னும் இடத்திலிருந்து காபூலின் நுழை வாயிலில் இருந்த பாமியான் வரையிலும், தென் மேற்கில்

[4] *op. cit*, pp. 133-4.

பொலசே (பாரசீகம்) நாட்டின் எல்லையில் இருந்த தலக்கியன் வரையிலும் பரவிச் செழித்திருந்தது என்று சொல்லலாம். பல்க் நாட்டில் மட்டும் ஏறக்குறைய 100 மடங்கள் இருந்தன. அவற்றில் 53,000 துறவிகள் இருந்தார்கள். அந்த மடங்களுள் ஒன்றுக்குப் 'புதுமடம்' (நவசங்காராமம், நவ விஹாரம்)[5] என்று பெயர்." அதன் வீழ்ச்சி அழகு மிகவும் குறிப்பிடத் தக்கது. அது நகரின் தென்மேற்கில் அமைந்திருந்தது. அந்த நுபெஹாரை (புதுமடத்தை) ஹுவான் சுவாங் பார்வையிட்ட பின் அரை நூற்றுண்டு முடிவதற்குள் இஸ்லாமியப் படைகள் தகர்த்து எறிந்துவிட்டன. சில நூற்றுண்டுகளுக்குப்பின் புத்த மதத்திற்கு இந்தியாவில் நேர்ந்த கதியே மைய ஆசியாவிலும் நேர்ந்தது. அதற்குப் பிறகு பல நூற்றுண்டுக் காலம் இந்தியா வின் வடமேற்கு எல்லையைக் கடந்து சென்ற நில வழிகளில் சீன வணிகர்களும் யாத்ரிகர்களும் நடமாடுவது நின்றுவிட்டது. ஆனால், சீனவையும் இந்தியாவையும் இணைத்த கடல்வழிகள் திறந்தே யிருந்தன. பிற்காலத்தில் அந்த வழியாக நடைபெற்ற வாணிகத் தொடர்புகளைப் பற்றி நமக்குப் பல சான்றுகள் கிடைத்துள்ளன.

ஆப்பிரிக்கா, அரேபியா, சீன ஆகிய நாடுகளுடன் இந்தியாவுக்கு இருந்த மேற்சொன்ன தொடர்புகளே யன்றி, கிறிஸ்து சகாப்தத்தின் முன்னைய நூற்றுண்டுகளில் இந்தியா வுக்கும்—குறிப்பாகத் தென்னிந்தியாவுக்கும் — ரோமானியப் பேரரசின் கிழக்குப் பகுதிக்கும் முறையான வாணிகத் தொடர்புகள் இருந்தன. அத்தொடர்புகள் நேராகவும் இருந்தன, வேறு நாடுகள் மூலமாகவும் நிகழ்ந்தன.

**ஆதாரங்கள்**

சமயம் வாணிகம் ஆகிய காரணங்களுக்காகவோ வேறு காரணங்களுக்காகவோ தென்னிந்தியாவோடு (இதில் இலங்கை யையும் சேர்த்துக் கொள்ளலாம்) தொடர்பு கொண்ட வெளி நாட்டினர் அந்நாட்டைப் பற்றி என்ன நினைத்தனர் என்பதைத் தெரிந்து கொள்வதே நமது நோக்கம். தென்னிந்தியாவைப் பற்றி நமக்குக் கிடைத்துள்ள வெளி நாட்டார் குறிப்புகளுள் மிகவும் முற்பட்டவை கிரேக்க, லத்தீன் ஆசிரியர்கள் எழுதியவை ஆகும் என்று பொதுவாகச் சொல்லலாம். அவை நமக்குக் கி.பி. இரண்டாம் நூற்றுண்டின் இறுதி வரையில் கிடைக்கின்றன. அந்தக் குறிப்புகள் தொடக்கத்தில் இருந்ததைக் காட்டிலும் நாளாக நாளாக விரிவும் திருத்தமும் பெறுகின்றன. அவற்றிற்குப்

[5] Garrez, loc. cit. p. 178.

பின்னர் நமக்குச் சீனப் பயணிகளின் குறிப்புகளும் சீன வரலாற்றாசிரியர்கள் எழுதிவைத்துள்ள ஆண்டு நிகழ்ச்சிப் பதிவேடுகளும் கிடைக்கின்றன. ஆனால், அவற்றைப் பற்றிய ஆராய்ச்சி இன்னும் முடிவடைய வில்லை. எட்டாம் நூற்றாண்டு முதல் அரபு வணிகர்கள், பயணிகள், வரலாற்றாசிரியர்கள், நிலநூல் ஆசிரியர்கள் ஆகியவர்களுடைய குறிப்புகள் முக்கியத்துவம் பெறுகின்றன. அதே சமயத்தில் சீனக் குறிப்புகளும் ஏராளமாய்க் கிடைக்கின்றன.

அவை முன்னைக் குறிப்புகளைக் காட்டிலும் தெளிவாக இருப்பதோடு ஐயத்திற்கு இடம் தாராமலும் இருக்கின்றன. மேலும் அவ்வப்போது வந்த ஐரோப்பியப் பயணிகளும் குருமார்களும் எழுதி வைத்த குறிப்புகளும் நமக்குக் கிடைக்கின்றன. அவ்வாறு வந்தவர்களுக்கு எடுத்துக் காட்டாக மார்க்க போலோவையும், டியூடலா பெஞ்சமினையும் சொல்லலாம். பதினைன்காம் நூற்றாண்டிற்குப் பின்னர் வந்த ஐரோப்பியர்களுடைய குறிப்புகள் மிகவும் ஏராளமாய் இருக்கின்றன. மேலும் அவை மிகவும் விரிவாய் இருக்கின்றன. எனவே, இந்த நூலில் அவற்றைச் சேர்க்கவில்லை. ஆனால், விதி விலக்காக, மிகவும் முக்கியமான ஒரு சில குறிப்புகள் இந்த நூலில் இடம் பெறுகின்றன.

ஏனையோர் எழுதிய நூல்களின் வாயிலாய் அன்றித் தாமே எழுதிய சொற்களின் வாயிலாய் நமக்கு இப்போது கிடைத்துள்ள சான்றுகளுள் இந்தியாவைப் பற்றி ஹெரடோட்டஸ் எழுதி வைத்துள்ள குறிப்பே மிகவும் பழமையானது.

**பண்டைய கிரேக்க லத்தீன் ஆசிரியர்கள்**

கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த இந்த வரலாற்றுத் தந்தை இந்தியாவைப் பற்றி எழுதிய குறிப்புகள் அந்நாட்டைப் பற்றி அவருக்கு மிகவும் குறைந்த செய்திகளே தெரிந்திருந்தன என்பதையும் அந்தச் செய்திகளும் மிகவும் தெளிவற்றவையாய் இருந்தன என்பதையும் காட்டுகின்றன. ஆனால், அவற்றை நாம் மதிப்பதற்குக் காரணமா யிருப்பது அவற்றின் விசித்திரமான தன்மையாகும். எடுத்துக் காட்டாக, இந்தியாவில் தாமாகவே வளர்ந்த மரங்கள் சிலவற்றில் கம்பளி மயிர் விளைந்தது என்றும், அம்மயிர் செம்மறியாட்டு மயிரைக் காட்டிலும் அழகும் தரமும் வாய்ந்திருந்தது என்றும், அதனை இந்தியர்கள் ஆடை நெய்வதற்குப் பயன்படுத்தினார்கள் என்றும் அவர் எழுதி வைத்துள்ளார்.[6] அவருக்கு

[6] Mc Crindle—Ancient India as Described in Classical Literature, p. 4, para 106.

முன்னும் பின்னும் பலர் இந்தியாவையும் அதில் வாழ்ந்த மக்களையும் பற்றி எழுதியுள்ளார்கள். ஆனால் அவருடைய குறிப்பே அறிவுக்குப் பொருத்தமான முதற் குறிப்பாகும். ஏனையோர் பலருடைய குறிப்புகளில் காணப்படும் கட்டுக் கதைகள் அவருடைய குறிப்பில் இல்லை என்று பொதுவாய்க் கூறலாம். மெகஸ்தனீஸ் குறிப்பே தென்னிந்தியாவைப் பற்றிய குறிப்புகளுள் முதலில் எழுதப்பட்ட குறிப்பாகும். அவர் பாண்டிய நாட்டைப் பற்றி எழுதிய குறிப்பு விசித்திரக் கவர்ச்சி யுடையது. அந்தக் குறிப்பில் உண்மையும் அப்போது நிலவிய கட்டுக் கதைகளும் கலந்து நிற்கின்றன (I ஆ. 1 & 2).

**கி.மு. இரண்டாம் நூற்றூண்டில் காஞ்சியும் சீனுவும்**

மிக முன்னைய சீன ஆசிரியர்களுள் ஒருவரான பான்கூ என்பவருடைய குறிப்புகளை ஆராய்ந்த பால் பெலியோ என்ற ஆராய்ச்சியாளர் ஒரு முக்கியமான செய்தியைக் கண்டு பிடித்துள்ளார். ஒருபுறம் சீனவுக்கும் இன்னொரு புறம் இந்தியாவை அடுத்துள்ள தீவுகள் தென்னிந்தியா ஆகிய நாடுகளுக்கும் இடையில் இரண்டாம் நூற்றூண்டின் தொடக்கத்திலிருந்து சுறுசுறுப்பான தொடர்பு இருந்தது என்று பான்கூ ஒரு குறிப்பில் எழுதியுள்ளார். அப்போது சீனவில் ஹான் வமிசத்து அரசர்கள் ஆட்சிசெய்து வந்தார்கள். இந்தத் தொடர்பைப் பற்றிய செய்தி புதுமையாய் இருப்பதோடு அண்மையில் நடைபெற்ற ஆராய்ச்சியின் ஒரு வியத்தகு விளைவாகவும் இருக்கிறது. பான்கூவின் குறிப்புச் சரியானபடி விளக்கப்பட்டிருக்குமானல், கீழை நாடுகளில் இந்துக் குடியேற்றம் தொடங்கிய காலத்தைப் பற்றி நாம் இப்போது கொண்டுள்ள கருத்துகளில் கடுமையான மாற்றம் தேவைப்படும்.[6a]

**கிரேக்கரைச் சார்ந்த காலம்**

கிரேக்கரைச் சார்ந்த காலத்தில் எகிப்து நாட்டு அலெக்சாண்ட்ரியா நகரம் செல்வச் செழிப்பு மிகுந்ததாய் இருந்தது. அந்தச் செழிப்புக்கு அங்கு நடைபெற்ற தொழில்கள் பெரிதும் உதவின என்றாலும், அந்நகரின் பெருஞ் செல்வத்தில் ஒரு பகுதி 'கீழை நாடுகளுடன் நடந்த வாணிகத்தால் கிடைத்தது. இந்தியா வோடு அலெக்சாண்ட்ரியாவுக்கு ஏற்பட்ட நேர்த் தொடர்பு அந்த வாணிகம் மிகவும் பெருகு வதற்குக் காரணமாயிற்று'. கி.மு. 190ஆம் ஆண்டில் திறக்கப்

[6a] Cf The beginnings of Intercourse between India and China—IHQ, XIV. 2 (Winternitz Comm. Vol.) pp. 380-7.

பட்ட நைல்-செங்கடல் கால்வாயின் வழியாக 'டாலமி மரபு மன்னர் காலத்து வாணிகக் கப்பல்கள் செங்கடலின் தென் துறை முகங்களுக்குச் சென்றன'.[7] அலெக்சாண்ட்ரியாவுக்கும் இந்தியா முதலிய தூரக் கிழக்கு நாடுகளுக்கும் நடைபெற்ற வாணிகத்தில் அரேபியர்களும் இந்துக்களும் இடையீட்டாளர்களாய் இருந்தார்கள்.இந்த நிலை ரோமானியர் காலம் வரையில் நீடித்தது.

இந்தியாவில் ஆந்திர மன்னர்களே முதன் முதலில் கடலாதிக்கத்தில் நாட்டங் கொண்டு அதனை வளர்த்தவர்கள் என்பதையும் கடல் வாணிகத்துக்கு ஊக்கம் அளித்தவர்கள் என்பதையும் நாம் திட்ட வட்டமாய் அறிகிறோம் கடல் கடந்த நாடுகளில் இந்தியக் குடியேற்றத்தைத் தொடங்கியவர்களும் அவர்களாகவே இருக்கக் கூடும். பாணர் தம்முடைய ஹர்ஷ சரிதத்தில் ஆந்திர மன்னர்களுக்கு 'த்ரிசமுத்ராதிபதி' (மும்மாக் கடல் தலைவன்) என்னும் பட்டத்தைத் தந்துள்ளார். கிறிஸ்துவத் திருமறைத் தொகுதியிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட 'அபோக் ரைபா' ஏடு மேற்கு இந்தியாவில் 'ஆந்திராப்பாலிஸ்' என்னும் துறைமுகத்தைக் குறிப்பிடுகிறது மேலும் இந்த அரச வமிசத்தின் நாணயங்கள் பலவற்றில் இரு பாய்மரங்களையுடைய கப்பலின் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது.[8]

**ரோமானியப் பேரரசு**

'ரோமுக்கும் இந்தியாவுக்கும் நடைபெற்ற வாணிகத்திற்குப் பயன்பட்ட தரை வழிகள் பார்த்தியாவைக் கடந்து சென்றன. பார்த்தியாவோ ரோமுடன் தொடர்ந்து பகைமை பாராட்டி வந்தது. அதனால் ரோமுக்கும் இந்தியாவுக்கும் நடைபெற்ற வாணிகத்திற்கு அடிக்கடி தடை ஏற்பட்டது. அதன் விளைவாக ரோமானியப் பேரரசின்வருமானத்திற்குக் குந்தகம் ஏற்பட்டது. அதனால் தரை வழிகளுக்குப் பதிலாகக் கடல் வழியில் இந்தியா

[7] Commerce and Society, W.F. Oakeshott. (1936) p. 19. டாலமி காலத்தைச் சேர்ந்த பொறிப்பு ஒன்றை ஒ. ஸ்டெயின் எடுத்துக் காட்டுகிறார். தான் மேற்கொண்ட பயணம் ஒன்று வெற்றியுடன் முடிந்ததற்காக நன்றி செலுத்தும் முறையில் இந்திய வணிகன் ஒருவன் எகிப்தில் இருந்த அம்மன் ராவின் கோயிலில் காணிக்கை செலுத்தி வழிபட்டான் என்று அந்தப் பொறிப்புக் கூறுகிறது. See Z11, Vol 3, p. 318.

[8] J. A. Jan—Mar 1936, p. 96; Rapson: Coins of the Andhra, etc. கரை அண்மையில் இருக்கிறதா இல்லையா என்பதை அறிவதற்கு மாலுமிகள் பறவைகளைப் பயன்படுத்தினார்கள் என்பது டண்டை வரலாற்றுக் காலத்தில் இந்தியர்கள் கடல்வழிச் செலவுத் திறத்தில் வல்லவர்களாய் இருந்தார்கள் என்பதற்கு மிகத் தெளிவான சான்றாய் இருக்கிறது. Digha Nikaya, XI Kevaddha Sutta, 85.

வோடு நேர்த் தொடர்பு கொள்வதையே ரோமானியப் பேரரசு கிறிஸ்துக்குப் பிற்பட்ட இரண்டு நூற்றாண்டுகளில் ஊக்குவித்தது.'[9] தம்முடைய காலத்தில் வாழ்ந்த ரோமானியர்கள் இந்தியாவைப் பற்றித் தங்களுடைய முன்னோர்களைக் காட்டிலும் அதிகமான செய்திகளை அறிந்திருந்தார்கள் என்று ஸ்ட்ராபோ எழுதி வைத்துள்ளார். இந்திய வாணிகத்தில் ஈடுபட்ட ரோமானியர்கள் ஏடன்—செங்கடல் வழியையே மிகவும் விரும்பினார்கள். ஆதலால் அந்த வழியை ரோமானியப் பேரரசின் அதிகாரத்திற்குள் கொண்டு வருவதற்காக காலிஸ் என்னும் தளபதியின் தலைமையில் கி மு 25ஆம் ஆண்டில் அகஸ்டஸ் ஒரு கடற்படையை அனுப்பினார். அந்தப் படையெடுப்பு வெற்றியுடன் நிறைவேறியது. இந்தச் செய்தியையும் ஸ்ட்ராபோ எழுதி வைத்துள்ளார் (IIIஇ). அதன்பின் சிறிது காலத்தில் எகிப்தியரும் கிரேக்கரும் சேர்ந்த ஒரு கூட்டம் ஏடனைக் கைப்பற்றி அங்குக் குடியேறியது. ரோமானியப் படையில் பணியாற்றிய ஹிப்பாலஸ் என்னும் எகிப்திய மாலுமி பருவக் காற்றுகளின் தன்மைகளைக் கண்டுபிடித்தான். அதனால் ரோமுக்கும் இந்தியாவுக்கும் இடையில் நடைபெற்ற கடற்பயணம் முன்பிருந்ததைக் காட்டிலும் குறுகிய காலத்தில் முடிந்தது. அன்றியும், கப்பல்கள் நடுக்கடலில் பயணம் செய்வதற்கு வசதி ஏற்பட்டதால் கரையோரப் பகுதிகளில் மொய்த்து ஊடாடிக் கொண்டிருந்த கடற் கொள்ளைக்காரர்களால் நேர்ந்த அபாயமும் குறைந்தது. 'இந்தக் கண்டுபிடிப்புக்கு முன்னர் இந்தியாவுக்குச் சென்ற கப்பல்களின் எண்ணிக்கை ஆண்டொன்றுக்கு இருபதுக்கும் குறைவாய் இருந்தது என்றும், அதன் பின்னர்ச் சராசரி ஒரு நாளைக்கு ஒரு கப்பல் எகிப்தியத் துறைமுகங்களிலிருந்து கீழை நாடுகளுக்குச் சென்றது என்றும் நாம் அறிகிறோம். அவ்வாறு சென்ற கப்பல்களின் மாலுமிகள் இந்தியாவின் மேற்குக் கடற்கரை முழுவதையும் நன்றாய்த் தெரிந்து வைத்திருந்தார்கள்.'[10] இந்தியாவில் கண்டுபிடிக்கப் பட்டுள்ள ரோமானிய நாணயங்களுள் பாதிக்கும் மேற்பட்டவை

[9] Schoff : Parthian stations. p. 19

[10] Oakeshott, *op, cit*, p, 32; also Cary and Warmington. The Ancient Explorers, pp. 73-77. See JRAS, 1904, pp, 399-405,

மேற்கண்ட ஆதாரங்களில் இந்தியாவுக்கும் மேலை நாடுகளுக்கும் இருந்த தொடர்புகளைப்பற்றி ஹால்ட்ஸ் தெரிவித்துள்ள சில முக்கியமான கருத்துகளைக் காணலாம். அவற்றுள், இந்தியர்கள் ரோமானியப் பேரரசின் பல வேறு பாகங்களுக்கும் அடிக்கடி சென்று வந்தார்கள் என்னும் செய்தி நமது தனிக் கவனத்திற்கு உரியது. எடுத்துக்காட்டாக, எகிப்துக்குச் சென்றிருந்த இந்துப் பயணியான சோபனே (சுபானுவை)க் கூறலாம். (p. 402). ஆனால்,

அகஸ்டஸ், டைபீரியஸ் ஆகியவர்கள் காலத்திலிருந்து வெளியிடப்பட்டவை என்பது குறிப்பிடத் தக்கது. கி.பி. முதல் நூற்றாண்டு பிறந்து சில ஆண்டுகளுக் குள்ளாகவே இந்திய வாணிகம் மிகவும் பெருகிவிட்டது. அதன் விளைவுகளைப் பற்றி ரோமானிய அறிஞர்கள் கவலை கொள்ளும் அளவுக்கு அந்தப் பெருக்கம் நிகழ்ந்தது.

மலேயாவிற் கிடைத்த கிராம்பு முதலிய பண்டங்களையும், சீனாவில் செய்யப்பட்ட பட்டையும், இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் கிடைத்த பொருள்களான மிளகு, யானைத் தந்தம், அவுரி, எஃகு, மஸ்லின், கருங்காலி, தேக்கு ஆகிய வற்றையும், குமரி முனையிற் கிடைத்த முத்தையும், சோழ

கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆக்சிரின்சஸ் பெப்பரைஸில் கன்னடச் சொற்கள் இருக்கின்றன என்னும் கருத்துக்கு ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை. அச்சொற்களைக் கன்னடச் சொற்கள் என்று ஏற்றுக் கொள்ள பார்னட் மறுக்கிறார். (Journal of Egyptian Archaeology, Vol xii, 1926, pp. 13-15), கன்னடச் சொற்கள் என்று சொல்லப்படும் அச் சொற்களுள் பல கிரேக்கச் சொற்கள் என்றும், படிப்பவர்கள் அவற்றை வேற்றுமொழிச் சொற்கள் என்று நினைக்க வேண்டும் என்பதற்காக வேண்டுமென்றே திரித்து எழுதப்பட்டவை என்றும் ஓ. ஸ்டெயின் கருதுகிறார். Indologica Pragensia, i pp. 41-42. Contra Colas, i p. 620; Mys, Arch. Rep, 1926, pp. 11-21; Ancient Karnataka, Saletore, pp. 584-97. ரோமானியப் பேரரசின் மாகாணங்களுள் ஒன்றான சிரியா இந்தியாவோடும் பார்த்தியாவோடும் நடத்திய வாணிகத்தில் ஒன்றுக்குப் பத்து என்ற விகிதத்தில் இலாபம் அடைந்தது என்று கி.பி. 125ஆம் ஆண்டில் எழுதப்பட்ட சீனக் குறிப்பு ஒன்றன் மூலம் அறிகிறோம். (T.P. ii, 8, 1907 p. 184)

ரோமானியப் புற மாகாணமான கால் நாட்டின் தலைவராய்க் கி.மு. 60-59இல் பணியாற்றிய மெடலஸ் செலருக்கு சுவி அல்லது போயி அரசன் இந்தியர் சிலரைப் பரிசாக அளித்தான் என்றும், அந்த இந்தியர்கள் பயணஞ் செய்த கப்பல் கவிழ்ந்ததால் அவர்கள் ஜெர்மானியக் கரையில் ஒதுக்கப்பட்டார்கள் என்றும் ப்ளினியும் பாம்போனியஸ் மெலாவும் எழுதி வைத்துள்ள விசித்திரமான குறிப்பின்மீது நாம் அதிகக் கவனம் செலுத்த வேண்டியதில்லை என்பது என் கருத்து. எனக்குத் தெரிந்த வரையில் லாசன்தான் இந்தக் குறிப்புகளை முதன் முதலில் ஆராய்ந்தவர். (Ind. Alter, iii, pp. 57-8) அவ்வளவு - பழைய காலத்தில் இந்தியர்கள் ஆப்பிரிக்கக் கரை, மேற்கு ஐரோப்பாக் கரை ஆகியவற்றைச் சுற்றி வளைத்துக்கொண்டு ஜெர்மனி வரையிலும் சென்றிருக்க இயலாது என்றும், அந்த இந்தியர்கள் சென்ற கப்பல் காஸ்பியன் கடலில் கவிழ்ந்த ஒன்றாய் இருக்கும் என்றும் அவர் கருதுகிறார். அவர்கள் அமெரிக்க இந்தியர்கள் என்றும் அட்லாண்டிக் மாக் கடலின் மீது அவர்கள் கலம் மிதந்து வந்திருக்கக் கூடும் என்றும் சிலர் கருதுகின்றனர். அவர்கள் ஐரோப்பியர்களே என்று வேறு சிலர் கருதுகின்றனர். ஆனால், இந்தியர்களே ஆப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு சென்றார்கள் என்று இந்திய அறிஞர் சிலர் உறுதியாய் நம்புகின்றனர். See Cary and Warmington, Ancient Explorers, p. 55; and Warmington, Commerce, pp. 27 and 338 n. 72.

மண்டலக் கரையில் உற்பத்தியான பருத்தி நூல் துணிகளையும் ஏற்றிக் கொண்டு வாணிகக் கப்பல்கள் ரோமுக்குச் சென்றன. (பாரசீக வளைகுடாக் கரைகளில் வாழ்ந்த தச்சர்கள் தங்கள் தொழிலுக்கு இந்தியத் தேக்கு மரத்தைப் பயன்படுத்தினார்கள். அந்தப் பகுதிகளில் தேக்கு மரம் வளரவில்லை யென்று பொதுவாகச் சொல்லலாம்.) அது போலவே ரோமானியக் கப்பல்கள் ஒயினையும் (கொடி முந்திரிப் பழச் சாற்றையும்), வெள்ளீயத்தையும், ஈயத்தையும், வெண்கலத்தையும், எகிப்தியத் துணிகளையும், கீழை நாடுகளில் அதிகமாய்க் கிடைக்காத பவழத்தையும் ஏற்றிக்கொண்டு வந்தன. ஆனால் ரோமானியர்கள் கொண்டுவந்த பண்டங்களின் விலையைக் காட்டிலும் அவர்கள் வாங்கிக் கொண்டு போன பண்டங்களின் விலை அதிகமாய் இருந்ததால் அவர்கள் ரொக்கமாய்ப் பணம் கொடுக்க வேண்டியதாயிற்று.[11]

கீழை நாடுகளைப்பற்றி ரோமானியர்களுக்குத் தெரிந்த செய்திகள் அதிகரித்துக் கொண்டே போயின என்பதைப் 'பெரிப்ளஸ்' என்ற நூலை இயற்றிய பெயர் தெரியா ஆசிரியர், மூத்த ப்ளினி, டாலமி ஆகியவர்களுடைய நூல்கள் காட்டுகின்றன. இந்தியாவைப்பற்றி ரோமானியர்கள் ஒருசில செய்திகளை அறிந்திருந்தார்கள் என்பதை நாம் முதலில் ஸ்ட்ராபோ எழுதிய குறிப்புகளின் வாயிலாய் அறிகிறோம். ப்ளினி சுமார் கி.பி. 75ஆம் ஆண்டில் 'இயற்கை வரலாறு' (Natural History) என்னும் நூலை இயற்றினார். தமக்கு முன் வாழ்ந்த ஆசிரியர்களது நூல்களின் வாயிலாகத்தான் அவர் இந்தியாவைப் பற்றிய செய்திகளைத் தெரிந்துகொண்டார் என்று பொதுவாகக் கூறலாம். எனினும், இந்திய வாணிகத்தைப் பற்றியும் அதன் விளைவாக ஏராளமான தங்கம் ரோமிலிருந்து வெளியேறியதைப் பற்றியும் அவர் எழுதி வைத்துள்ள செய்திகள், (IV ஆ) அவர் இயற்கை வரலாற்றை எழுதிய காலத்தில் ரோமில் தாம் நேரிற் கண்ட நிலைமையைக் குறிப்பதாக நாம் கொள்ளலாம்.

**ப்ளினி**

இயற்கை வரலாறு வெளிவந்த சில ஆண்டுகளுக்கு முன்னரோ பின்னரோ பெரிப்ளஸ் என்னும் நூல் எழுதப்பட்டிருக்கலாம். அதனை நாம் துல்லியமாய்ச் சொல்ல இயலாது. ஆனாலும் பெரிப்ளஸை இயற்றிய ஆசிரியர் இந்தியாவின் மேற்குக்

**பெரிப்ளஸ்**

[11] Reinaud, JA.; Mai-Juin, 1863, pp. 308-9.

கடற்கரையில் இருந்த வாணிக மையங்களை நேரிற் சென்று கண்டவர் என்பதில் ஐயமில்லை. அவற்றைப் பற்றி அவர் எழுதிய குறிப்புகள் திருத்தமாகவும், சுற்றி வளைக்காமலும் இருக்கின்றன. அதனால் அவை மிகவும் முக்கியமானவை.

**ஆய்வுப் பயணங்கள்**

சுமார் கி.பி. முதல் நூற்றாண்டின் இறுதியிலிருந்து கிரேக்க மாலுமிகள் குமரி முனையோடு நின்று விடாமல் அதற்கப்பாலும் தங்களுடைய மரக்கலங்களைச் செலுத்தத் தொடங்கினார்கள். அவ்வாறு செய்ததன் விளைவாக அவர்கள் வங்காள விரிகுடாவில் பல புது வழிகளைக் கண்டுபிடித்தார்கள். "அத்தகைய முன்னோடிகளுள் ஒருவர் பெயர் அலெக்சாண்டர் என்பதாகும். அது மிகவும் பொருத்தமான பெயர்தானே. அவர் மலேசியாவின் அருகிலுள்ள இடைகரை வழியாகத் தம்முடைய மரக்கலத்தைச் செலுத்தி அன்னும் கடற்கரை ஓரமாய்க் கட்டிகரா வரையில் சென்றார். கட்டிகரா என்பது டோன்கின் அருகிலுள்ள ஹனாய் என்னும் இடமாக இருக்கக்கூடும். இறுதியாகத் தங்களை 'அன்-டுன்' (எம். அரீலியஸ் அன்டோனியஸ்) என்ற பேரரசரின் தூதர்கள் என்று கூறிக் கொண்ட 166 கிரேக்க வணிகர்கள் அடங்கிய குழு ஒன்று லொயங்குக்குச் சென்று, ஹுவான்—டி என்னும் பேரரசரைக் கண்டு, மத்தியதரைக் கடல் நாடுகளுக்கும் சீனாவுக்கும் இடையில் முறையான கடல் வாணிகம் தொடங்குவதைப் பற்றிப் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினார்கள்."[12] ஆனால் இத்தகைய பயணங்கள் எப்போதோ ஒரு முறை மேற்கொள்ளப்பட்ட துணிகரச் செயல்களே. எனவே, ரோமானியப் பேரரசின் வாணிகத் தொடர்புகளில் அந்தப் பயணங்கள் பெரு மாறுதல் எதனையும் தோற்றுவிக்க வில்லை. ஆனால் கீழை நாடுகளைப் பற்றிய நிலவியல் அறிவில் நிகழ்ந்த முன்னேற்றத்தின் அறிகுறிகளை டாலமியின் நூலில் நாம் காண்கிறோம். ப்ளினிக்கும் பெரிப்ளஸ் ஆசிரியருக்கும் தூரக்கிழக்கு நாடுகளைப் பற்றி ஒன்றுமே தெரியாது. பாரிகஜம், முஜிரிஸ் ஆகிய துறைமுகங்களுக்கு அடிக்கடி வந்துபோன மாலுமிகளுக்கு இந்தியாவுக்கு அப்பால் இருந்த கடல் வழிகளைப் பற்றி எதுவும் தெரியாது. தப்ரபானே என்பது ஒரு தீவா அல்லது ஆப்பிரிக்காவுடன் இணைந்த ஒரு கண்டமா என்று இன்னும்

[12] Cary, History of Rome (1935), p. 671. See, however, Ferrand in JA. 11 : 13, pp. 456-7; இதே அதிகாரத்தில் அடிக்குறிப்பு 24ஐயும் பார்க்க.

கேட்டுக்கொண்டே இருந்தார்கள்.[13] ஆனால் ட்ரஜன் என்னும் அரசனுடைய (கி.பி. 98—117) நாணயங்களும், ஹேட்ரிய னுடைய (கி.பி. 117—138) நாணயங்களும் தென்னிந்தியாவின் மேற்குக் கரையில் மிகவும் அருமையாகவே கிடைக்கின்றன வெனினும், அதனுடைய கிழக்குக் கரையில் ஓரளவு மிகுதியாய்க் கிடைத்துள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. டாலமி வரைந்த 'இந்திய தேசப் படத்தில் ஒரு பெரும் பிழை நேர்ந்துவிட்டதால் அது இந்திய தேசத்தின் படமென்று தெரிந்து கொள்வதே கடினமாகி விட்டது.' எனினும் இலங்கை, இந்தியாவின் உள்நாட்டுப் பகுதி, கங்கைக்கு அப்பாலுள்ள இந்தியா ஆகிய பகுதிகளைப் பற்றிய நிலவியல் அறிவு பெருகு வதற்கு டாலமி எழுதி வைத்துள்ள குறிப்புகள் சில மிகவும் முக்கியமாய் இருந்தன.[14] டாலமிக்குப் பின்னர், சில்வெயின் லெவி எடுத்துக் காட்டியதைப் போல, கிரேக்க நூல்கள் இந்திய நூல்கள் ஆகிய இரு திறத்து நூல்களும் டாலமியின் நூலுடன்தான் தொடர்புடையவாய் இருக்கின்றன. டாலமி இயற்றிய 'நிலவியலுக்கு வழிகாட்டி' (Guide to Geography) என்னும் நூலுக்கும் ஸ்ட்ராபோவின் நூலுக்கும் உள்ள வேறுபாடு 'எலும்புக் கூட்டுக்கும் உயிருள்ள உடலுக்கும் உள்ள வேறு பாட்டைப் போன்றது' என்று அறிஞர்கள் எடுத்துக் காட்டி யுள்ளார்கள்.[15] மேலும், தென்னிந்தியாவைப் பற்றி அவர் உருவாக்கி வைத்துள்ள அட்டவணைகள் குறிக்கும் இடங்களை அடையாளங் கண்டு கொள்வதில் கடும் பிரச்சினைகள் பல இருக்கின்றன. அந்தப் பிரச்சினைகளைப் போகிற போக்கில் விவரித்து அவற்றிற்குரிய தீர்வு காண இயலாது. எனவே, அவற்றை இந்த நூலில் நான் சேர்க்கவில்லை.

**ஹெரக்லியாவைச் சேர்ந்த மார்சியன்**

டாலமியின் காலத்தைச் சேர்ந்த வணிகர்கள் பயணிகள் முதலியவர்கள் தாங்கள் கண்டவற்றைப் பற்றிய செய்திகளையும் அவற்றைப் பற்றித் தங்களுக்குத் தோன்றிய எண்ணங்களையும் எழுதி வைத் தார்கள். டாலமி அவற்றை அறிவியல் முறைப்படி தொகுக்க முயன்றார். டாலமிக்குப் பின்னர் வந்த ஆசிரியர்கள் முன்னரே யிருந்த செய்தி களைப் பார்த்தெழுதுவதிலும் திரட்டித் தொகுப்பதிலுமே

[13] Sylvain Levi—Ptolemee, Le Niddesa et la Brahatkatha, in Etudes Asiatiques, ii. pp. 1-55, esp. 50-52.

[14] McCrindle, Ancient India as described in Classical Literature' p. xviii.

[15] McCrindle, *ibid.*, p. xix.

ஈடுபட்டார்கள். புதுச் செய்திகளைக் கொண்ட, உண்மையிலேயே புதுநூல் என்று கொள்ளத்தக்க நூல் எதுவும் வெளிவர வில்லை. வெளிவந்த நூல்கள் அனைத்தும் முன்னர் இருந்த நூல்களைப் பார்த்து எழுதப்பட்ட இரண்டாந்தர நூல்களே. இந்த நிலை நெடுநாள் நீடித்தது.[16] இதற்கிடையில் ரோமானியப் பேரரசு தன்னுடைய வலிமையை இழக்கத் தொடங்கியது. கிரேக்கரைச் சார்ந்த காலத்திலும் முன்னைய பேரரசு காலத்திலும் தோன்றி வளர்ந்த நொய்மையான வாணிகத் தொடர்புகள் கி.பி. மூன்றும் நூற்றுண்டின் இறுதியில் முழுதும் அறுந்து போயின. ரோமானியப் பேரரசின் மேற்குப் பாதியில் அரசியல் ஒருமைப்பாடு அழிந்த பின்னரும் அதனுடைய கிழக்குப் பாதியாகிய கிரேக்கப் பகுதியில் அந்த ஒருமைப்பாடு நீண்ட காலம் நிலைத்து நின்றது. ஆனால் அங்கும் 'துணிவும் அறிவும் நலிந்து கொண்டே போயின. முகமது நபியினைப் பின்பற்றிய மக்கள் பல நாடுகளை வென்று, மேற்கையும் கிழக்கையும் மீண்டும் இணைத்து, ஒழுங்கான தொடர்புகளை ஏற்படுத்தும் வரையிலும் அந்தச் சோர்வு நிலை தொடர்ந்தது. அதன்பின்னர்த் துணிவும் அறிவும் புத்துயிர் பெற்றன''[17] ஹெரக்லியாவைச் சேர்ந்த மார்சியனுடைய நூல் இந்தக் காலத்தில் இயற்றப் பட்டது (VII). ஆனால் அந்நூல் முழுதும் நமக்குக் கிடைக்க வில்லை. அதனுடைய சில பகுதிகளே கிடைத்திருக்கின்றன. 'நூல் முழுதும் நமக்குக் கிடைத்திருந்தால் ரோமானிய நிலவியல் அறிவைப் பற்றிய பொதுப் பார்வைநூல் என்ற முறையில் அது டாலமியின் மிகு நுட்ப நூலைக் காட்டிலும் நமக்குப் பெரிதும் பயன்பட்டிருக்கும்' என்று ஷாப் கருதுகிறார்.[18]

காஸ்மாஸ்

ஆனால் காஸ்மாஸ் என்ற துறவியே பைஜாண்டிய மக்களின் தன்மைகளுக்குப் பொருத்தமான எடுத்துக் காட்டாய்ச் சொல்லக் கூடியவர் ஆவார். அவரை விசித்திர மனப் போக்குடைய துறவி என்று மக்கள் சொல்வது வழக்கம். அவருக்கு 'இண்டிகோப்ளியஸ்டஸ்'— பாய்மரக் கப்பலைச் செலுத்தி இந்தியாவுக்குச் சென்றவர்— என்ற பெயரும் வழங்கிற்று. அவர் தமது வாழ்க்கையின் தொடக்கத்தில் ஒரு வணிகராய் இருந்தார். வாணிகத்திற்காக அவர் பாரசீக வளைகுடாவை யொட்டிய நாடுகள், மேற்கிந்தியா, அதற்கும் கிழக்கு நாடான இலங்கை முதலிய பல நாடுகளுக்குச்

16 Schoff, Periplus of the Outer Sea, p. 6.

17 Schoff, *ibid.*

18 *ibid*, Contra Yule, Cathay, i. 13-14.

சென்றுர் (XII இ). அவர் எழுதிய நூலின் பெயர் 'கிறிஸ்துவ இடக்கிடப்பியல்' என்பதாகும். அந்த நூலை யூல் 'மண்கண்டம்' என்று வர்ணிக்கிருர். அவ்வர்ணனை முற்றிலும் நியாய மற்றது என்று சொல்ல முடியாது. எனினும், அந்த மண்கண்டத்தி லிருந்து 'குறிப்பிடத்தக்க அளவு கவர்ச்சியுடைய புதை படிவங்கள் சிலவற்றைப் பிரித்தெடுக்க இயலும்.'[19]

**இரண்டாம் புலிகேசியும் குஸ்ருபர்விசும் சுமார் கி.பி. 625**

தென்னிந்தியாவுக்கும் பாரசீகத்திற்கும் கி.பி. ஏழாம் நூற்றுண்டின் முதற் பகுதியில் சுறுசுறுப்பான தொடர்பு இருந்தது என்பதற்கு ஒரு சிறந்த சான்று இருக்கிறது. அஜந்தாவில் முதல் குகையில் தீட்டப்பட்டுள்ள வண்ண ஓவியத்திற்கும் சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசி சாசேனிய மன்னன் இரண்டாம் குஸ்ருவுக்கு எழுதிய கடிதத்திற்கும் மிகவும் குறிப்பிடத் தக்க தற்செயல் இணைவு இருப்பதை நாம் காண்கிறோம். அந்தக் கடிதத்தைப் பாரசீக வரலாற்றுசிரியர் களுள் ஒருவரான டபரீ (கி. பி. 838—923) விவரமாக விளக்கு கிருர். நாம் மேலே சொன்ன அஜந்தா ஓவியம் இரண்டாம் குஸ்ரு அவனுடைய புகழ் பெற்ற மனைவி ஷிரீன் ஆகியவர்களுடைய படங்களைக் கொண்டது என்னும் கருத்தைச் சிலர் ஏற்றுக் கொள்ளாதது போலவே, இரண்டாம் புலிகேசி பாரசீகத் தூதுக் குழு ஒன்றுக்குப் பேட்டி தருவதை அந்த ஓவியம் குறிக்கிறது என்னும் கருத்தையும் சிலர் ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனர். ஆனல், இரண்டாம் குஸ்ருவுக்கும் அவனுடைய மகன் ஒரு வனுக்கும் ஏற்பட்ட பூசலைப் பற்றி டபரி எழுதியுள்ள விவரங்கள் மிகவும் தெளிவாகவும் ஐயமற்றவை யாகவும் இருக் கின்றன. இரண்டாம் குஸ்ரு இறந்ததற்குப் பின்னர் (ஆனல் பாரசீகத்தை அரேபியர் வெல்வதற்கு முன்னர்) எழுதப்பட்ட பெஹ்லவி நூல் ஒன்றைப் பின்பற்றி டபரி இந்த விவரங்களை எழுதினர் என்று நோல்டெகே கருதுகிருர். இரண்டாம் குஸ்ருவின் கூற்றுகப் பின்வரும் விவரங்களை டபரி எழுதுகிருர். "இரண்டாண்டுகளுக்கு முன்னர், அதாவது நம்முடைய ஆட்சியின் முப்பத்தாரும் ஆண்டில், இந்திய மன்னரான இரண்டாம் புலிகேசி நம்முடைய அவைக்கு ஒரு தூதுக் குழுவினை அனுப்பினர். அந்தத் தூதர்கள் பரிசுகள் பலவற்றையும் நமக் கென்று ஒரு கடிதத்தையும் கொண்டு வந்தார்கள். புலிகேசி நமக்கு எழுதிய கடிதத்தில் பல செய்திகள் இருந்தன. பரிசு

[19] Cathay, i p. 27. காஸ்மாஸ் எழுதிய நூலை யூல் மிகவும் குறைத்து மதிப்பிடுகிருர் என்று மெக்ரிண்டில் கருதுகிருர்.

களுள் நமக்கென்று சிலவும், உனக்கென்று சிலவும், நம்முடைய மற்ற மக்களுக்கென்று சிலவும் இருந்தன. அன்றியும், நம்முடைய மக்களாகிய உனக்கும் உன் உடன் பிறந்தவர்களுக்கும் தனித் தனி கடிதங்களையும் புலிகேசி எழுதியிருந்தார். உனக்கு அவர் ஒரு யானை, ஒரு வாள், வெள்ளை வல்லூறு ஒன்று, பொற்சரிகை வேலைப்பாடு பெற்ற துணி ஒன்று ஆகியவற்றைப் பரிசாக அனுப்பி யிருந்தார். அது உனக்கு நினைவில்லையா? கடிதங்களையும் பரிசு களையும் நாம் பார்வையிட்டபோது உன்னுடைய கடிதத்தின் உறையின் மீது 'உன் பார்வைக்கு மட்டும்' என்று இந்திய மொழியில் எழுதப்பட்டிருந்தது. பரிசுப் பொருள் களையும் கடிதங்களையும் உரியவர்களுக்குச் சேர்க்குமாறு நாம் ஆணையிட்டோம். ஆனால், உன்னுடைய கடிதத்தை மட்டும் நாமே வைத்துக் கொண்டோம். பின்னர், இந்திய எழுத்தர் ஒருவரை வரவழைத்து, உனக்கு வந்த கடிதத்தின் உறையைக் கிழித்து அதனுள் ளிருந்த கடிதத்தைப் படிக்குமாறு சொன்னோம். அந்தக் கடிதத்தில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது. 'நீ மகிழ்ச்சியாய் இருப்பாயாக! குஸ்ருவின் ஆட்சியின் முப்பத் தெட்டாம் ஆண்டில் தை — பா — ஆதர் நாளன்று உனக்கு முடி சூட்டப்பட்டு நீ பேரரசு முழுவதையும் ஆளப்போகிறாய். ஒப்பம் புலிகேசி.' அந்தக் கடிதத்தை நாம் உனக்கு அனுப்ப வில்லை. மாறாக, அதனை மீண்டும் உறையிலிட்டு, நம்முடைய முத்திரையைப் பொறித்து, நம் மனைவி ஷிரீனிடம் கொடுத்து, பாதுகாப்பாக வைத்திருக்குமாறு ஆணையிட்டோம்.[19a]

இந்தியாவுக்கும் சீனாவுக்கும் இருந்த தொடர்பு நீண்ட காலத்தது, பல செய்திகளை நாம் அறிந்து கொள்வதற்கு உதவுவது. ஆனால் தென்னிந்தியா இலங்கை சீனா ஆகிய நாடுகளுக்கும் சீனாவுக்கும் இருந்த

[19a] JRAS. 1879, pp. 165-6; Yezdani, Ajanta, Text i, pp. 46-51, நோல்டெகே புருமேசன் என்னும் பெயரைப் புலுகேசன் என்று கொள்வது (Geschichte Des Perser und Araber, Tabari, 1879, p. 371 n), சரியன்று என்றும் புருமேசன் என்பதைப் பரமேஸ்வரன் என்று கொள்வதுதான் சரியென்றும், தென்னாட்டுப் பரமேஸ்வரனை புலிகேசனை அது குறிக்கிறது என்றும் எட்டிங்ஹாசன் (Harsavardhana pp. 52-4) கருதுகிறார். அந்த ஓவியங்களின் காலத்தைப்பற்றி பெர்குசனுடைய கணிப்புச் சரியானது என்று ஏற்றுக் கொண்டால், அவற்றிற்குத் தாம் கொடுத்துள்ள விளக்கத்தை யாராலும் மறுக்க இயலாது என்று நோல்டெகே சொல்கிறார். (op. cit., p. 503). அஜந்தாவில் எந்த இடத்திலும் வரலாற்றுக் காட்சிகள் சித்திரிக்கப் படவில்லை என்பது பூஷருடைய கருத்து (Journal of the Hyderabad Archaeological Society, 1919-20, pp. 99-100) டபரியின் குறிப்பு ஹர்ஷவர்த்தனரைப் பற்றியது என்று ஆர். சி. மஜும்தார் கருதுகிறார். (Journal of Indian History, Vol. iv, pt. ii, pp. 29ff.)

தொடர்புகளும் இந்த இரு நாடுகளையும் சீனவையும் இணைத்த கடல்வழியைப் பற்றிய செய்திகளுமே இந்நூலில் இடம் பெறும். எனினும், அந்த வழியில் இருந்த மலேயாத் தீபகற்ப நாடுகளோடு சீனவுக்கிருந்த தொடர்புகளின்மீதும் அவ்வப்போது நம் கவனத்தைச் செலுத்துவது நாம் எடுத்துக் கொண்ட பொருளை நன்குய்ப் புரிந்து கொள்வதற்கு உதவும். இந்தத் தொடர்புகள், நாம் முன்னரே கண்டவாறு, கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலேயே தொடங்கின. அதற்கும் சற்று முன்னரே அவை தொடங்கியிருக்கக்கூடும் என்று நாம் கருதினாலும் அது தவறாகாது. கி. பி. முதல் நூற்றாண்டு இரண்டாம் நூற்றாண்டு ஆகிய காலத்தில் அந்தத் தொடர்புகள் எவ்வாறு இருந்தன என்பதை அறிந்துகொள்வதற்கு ஏற்ற சான்றுகள் நமக்கு மிகச் சிலவே கிடைத்துள்ளன. எனினும், இந்தியாவின் அரசியல் நிலைமையையும் அதனுடைய பல்வேறு பகுதிகள் வெளி நாடுகளுடன் வைத்திருந்த வாணிகத் தொடர்புகளையும் பற்றிய செய்திகளைச் சீனர்கள் நன்குய்த் தெரிந்துவைத்திருந்தார்கள் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இதனைக் கி. பி. 125ஆம் ஆண்டில் தளபதி பான் யோங் சீனப் பேரரசுக்குப் பணிந்தனுப்பிய ஓர் அறிக்கையின் வாயிலாக நாம் தெளிவாக அறிகிறோம்.

**பான் யோங்**

பான் யோங் புகழ்பெற்ற பான்-ட்ச்-ஆவோ என்பவரின் மகன். பான்-ட்ச்-ஆவோ வரலாற்றாசிரியர் பான் கூ என்பவரின் உடன்பிறந்தார் புதல்வர். சீனப் பேரரசின் மேற்குப் பகுதிகளை வென்று அவற்றைப் பேரரசின் நிர்வாகத்தின்கீழ்க் கொண்டுவந்த பெரும்பணியில் பான் யோங் முக்கியமான பங்கு பெற்றவன். அப்பணியை அவன் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் ஆற்றினன். அவன் இந்தியாவைப் பற்றி எழுதிய குறிப்பு, சுருக்கமாய் இருந்தாலும், நிலைமையைத் துல்லியமாய் எடுத்துரைக்கிறது. அதனல் அது மிகவும் முக்கியமாய் இருக்கிறது. எனவே, அதனை அப்படியே கீழே தருகிறோம்.[20]

"இட் ஈயன்-கூ (இந்தியா) என்னும் நாட்டுக்கு 'சென்டு' என்னும் வேறு பெயரும் வழக்கில் இருக்கிறது. இந்த நாடு 'ஹியோங்-நூ'வுக்குத் தென்கிழக்கில் பல்லாயிர 'லீ'களுக்கு

[20] Chavannes in TP. ii. 8 (1907), pp 149 and 192-4. See Elmer H Cutts on *Chinese-Indian Contacts* (prior to the latter half of the first century), IHQ, xiv, No. 3 (Winternitz Comm. Volume pp. 486-502, where this passage is reproduced at the end in Chavannes' French Version.

அப்பால் இருக்கிறது. சென்டூவின் பழக்க வழக்கங்கள் ஹியோங் நூவின் பழக்கவழக்கங்களை ஒத்திருக்கின்றன. ஆனால், சென்டூவின் நிலப்பரப்புத் தாழ்ந்திருக்கிறது. அது வெப்பம் மிகுந்த நாடு. அங்கு வீசுகின்ற காற்றில் ஈரப்பசை அதிகமாய் இருக்கிறது. அந்த நாடு ஒரு பெரிய ஆற்றின் கரையில் இருக்கிறது. அந்நாட்டு மக்கள் போருக்குப் போகும்போது யானைமீது ஊர்ந்து செல்கிறார்கள். அவர்கள் யூவெச்சி மக்களைக் காட்டிலும் வலிமை குறைந்தவர்கள். அவர்கள் புத்த மதத்தைப் பின்பற்றுகிறார்கள். அதனால், கொலை செய்தல் போர் செய்தல் ஆகியவற்றைத் தவிர்த்தல் அவர்களுடைய பழக்கமாய் விட்டது.

"யூவெச்சிகளின் ஆட்சிக்குட்பட்ட 'கவோபூ' (காபூல்) என்னும் நாட்டைக் கடந்து தென்மேற்காய்ச் சென்றால் சென்டூ நாட்டின் மேலைக்கடலை அடையலாம். கிழக்கே சென்றால் பான்-கி[21] என்னும் இராஜ்யத்தை அடையலாம். இந்நாடுகள் எல்லாமே சென்டூவின் பகுதிகளாகும். சென்டூவில் (தலை நகைரைத் தவிர) பல நகரங்கள் இருக்கின்றன. நகரம் ஒவ்வொன்றுக்கும் ஆளுநர் ஒவ்வொருவர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். சென்டூ நாட்டில் முதன்மை அரசரே யன்றி வேறு பல அரசர்களும் இருக்கிறார்கள். அவர்களுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகளும் இராஜ்யங்கள் என்றே வழங்குகின்றன. அந்தப் பலவேறு ராஜ்யங்களுக்கும் இடையில் சிறு வேறுபாடுகள் சில காணப்படுகின்றன. என்றாலும், அவை அனைத்தையும் சேர்த்து சென்டூ என்றே சொல்கிறார்கள். இந்த நேரத்தில் (கி.பி. 125ஆம் ஆண்டு போலும்) அந்த ராஜ்யங்கள் அனைத்தும் யூவெச்சி ஆட்சியில் இருக்கின்றன. யூவெச்சிகள் சென்டூ அரசனைக் கொன்று விட்டுத் தங்களுடைய ஆளுநன் ஒருவனை நியமித்துள்ளார்கள்.

"இந்த நாட்டில் யானை, காண்டாமிருகம், ஆமையோடு, தங்கம், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், வெள்ளீயம் ஆகியவை கிடைக்கின்றன. மேலைக் கடல் வழியாக டா-ட்சின் இராஜ்யத்தோடு இந்நாட்டு மக்கள் தொடர்பு கொண்டுள்ளார்கள். (டா-ட்சின் என்பது ரோமானியப் பேரரசின் ஒரு மாகாணமாயிருந்த சிரியாவாகும்).[22] டா-ட்சின் நாட்டிலிருந்து வந்த விலை மதிப்புள்ள பல பொருள்கள் அங்கே காணக்கிடக்கின்றன. மேலும், நேர்த்தியான துணிகள், உயர்தரக் கம்பளி விரிப்புகள்,

[21] அன்னும் அல்லது பர்மாவில் இருந்த இடம் என்று கருதலாம்.—சவானே.

[22] TP. *ibid*., p. 179. Also Yule, *Cathay*, i, 42, *n*. 2.

பலவகைப்பட்ட நறுமணப் பொருள்கள், வெல்லம், இஞ்சி, காருப்பு ஆகிய பொருள்களும் அங்கே கிடைக்கின்றன.

"பேரரசர் ஹோவின் காலத்தில் (கி.பி. 89—105) இந்திய நாட்டுத் தூதர்கள் திறையும் பரிசும் எடுத்துக் கொண்டு பலமுறை சீனாவுக்குச் சென்றார்கள். பின்னர், மேற்குப் பகுதிகள் கலகஞ் செய்து சுயேச்சை பெற்றுவிட்டதால், மேலே சொன்ன தொடர்புகளுக்கு இடையூறு நேர்ந்தது. பின்னர்ப் பேரரசர் ஹுவானுடைய ஆட்சிக் காலத்தின் இரண்டாம் ஆண்டிலும் (கி.பி. 159) நான்காம் ஆண்டிலும் (கி.பி. 161) அவர்கள் மீண்டும் இருமுறை ஜெனானுக்கு[23] அப்பாலிருந்து வந்தார்கள்." கி.பி. 166ஆம் ஆண்டில்[24] மார்க்கஸ் அரீலியஸின் தூதர்கள் என்று சொல்லிக்கொண்ட வணிகர்கள் எந்த வழியாகச் சீனாவுக்குச் சென்றார்களோ அதே வழியில்தான் இந்தியத் தூதர்களும் கி.பி. 159ஆம் ஆண்டிலும் கி.பி. 161ஆம் ஆண்டிலும் சீனாவுக்குச் சென்றார்கள். அவ்வாறு சென்றவர்கள் தங்களுடன் யானைத் தந்தம், காண்டாமிருகக் கொம்பு, ஆமையோடு முதலியவற்றைப் பரிசுப் பொருள்களாகக் கொண்டுபோனார்கள்.

மூன்றும் நூற்றாண்டில் மீண்டும் ஒரு முறை இந்தியாவுக்கும் சீனாவுக்கும் இருந்த தொடர்பு அறுந்து போயிற்று என்றும் இந்த இடைவெளி முன்னைய இடைவெளியைக் காட்டிலும் நீளமானது என்றும் சில்வெயின் லெவி சொல்கிறார்.[25]

**கடல்வழி**

இதற்குச் சீனக் குறிப்பொன்றை அவர் ஆதாரமாய்க் காட்டுகிறார். ஆனால் சீனாவையும்

[23] அதாவது, டோன்கினுடைய தென்பகுதி.

[24] 'பார்த்தியாவின்மீது அவிடஸ் காசியஸ் தொடுத்த போர்களாலும் அவற்றை அடுத்துத் தோன்றிய கொள்ளை நோயாலும் தரைவழியாய் நடைபெற்றுவந்த சீனப்பட்டு வாணிகத்திற்கு இடையூறு நேர்ந்ததால், சீனாவுடன் கடல் வழியாய்த் தொடர்பு கொள்வதற்கு அரீலியஸ் விரும்பினார் என்பதற்கு இந்தப் புகழ்பெற்ற தூது சான்று தருகிறது என்று சிலர் கருதுகின்றனர். ஆனால், மார்க்கஸ் அரீலியஸின் தூதன் என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்ட ஆள் ஒரு சாதாரண வணிகன் என்பதையும் அரசரிடம் அதிகாரம் பெற்றுச் சென்றவன் அல்லன் என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. அன்றியும், இசை வல்லுநர்களும் செப்படி வித்தைக்காரர்களும் டா இட்சினிலிருந்து கி.பி. 120ஆம் ஆண்டிலேயே பர்மாவுக்குச் சென்றார்கள் என்பதை நாம் பின்னர்க் காண்போம். எனவே, தூரக்கிழக்கு நாடுகளுக்கும் ரோமானியப் பேரரசின் கிழக்குப் பகுதிக்கும் மார்க்கஸ் அரீலியஸ் காலத்திற்கு முன்னரே கடல்வழித் தொடர்பு இருந்தது என்பது தோற்றம். Chavannes, TP. ib., 185 *n.* 1. See also Yule and Cordier, *Cathay*, i. pp. 50–3.

[25] Yule, *Cathay* i. p. 66 *n.* 2.

இந்தியாவையும் இணைத்த தெற்குக் கடல்வழிக்கு இந்தக் கூற்றுப் பொருந்துமா என்பது ஐயத்திற்கு இடமானது. எது எப்படி இருந்தாலும், தென்னிந்தியாவுக்கும் இந்தோனேசியக் குடியேற்ற நாடுகளுக்கும் சுறுசுறுப்பான தொடர்பு இருந்தது என்பதற்கும் அந்தக் குடியேற்ற நாடுகள் சீனவுடன் கொண்டிருந்த வாணிகத் தொடர்பில் தென்னிந்தியப் பண்டங்கள் இடம் பெற்றன என்பதற்கும் போதுமான சான்றுகள் உள.

கி.பி. 225ஆம் ஆண்டில் புனனும் (பண்டைக் காம்போஜம்) ஏனைய நாடுகளும் நவமணிகளுள் ஒன்ருகிய வியூலியைச் சீனப் பேரரசுக்குப் பரிசாக வழங்கின. (வியூலி ப்ராக்ருதத்தில் வெளுல்யா என்றும் சமஸ்கிருதத்தில் வைடூரியம் என்றும் சொல்லப்படும்.) வைடூரியம் தென்னிந்தியாவிலிருந்து கொண்டு போகப்பட்டதாய்த்தான் இருக்கவேண்டும்.[26] ஏறக்குறைய அதே காலத்தில் புனன் அரசன் இந்தியாவுக்கும் ஒரு தூதுக் குழுவை அனுப்பினன். அந்தக் குழு கங்கையாற்றின் கரையில் மேற்கு நோக்கிச் சென்று, முருண்ட மன்னனுடைய அவைக் களத்தை யடைந்து, அங்கு நான்கு ஆண்டுகள் தங்கிய பின்னர், நான்கு குதிரைகளைப் பரிசாய்ப் பெற்றுக்கொண்டு புனனுக்குத் திரும்பியது. அந்தக் குதிரைகள் யூவெச்சி நாட்டிலிருந்து வந்தவை. (யூவெச்சி மக்கள் இந்தோ - சித்தியர்கள் ஆவார்கள்)[27] புனனிலிருந்து சீனவுக்குப் பல தூதுக் குழுக்கள் சென்றன என்பதற்கு ஆதாரங்கள் பல கிடைத்துள்ளன. அத்தகைய குழுக்கள் 225—30, 243, 268, 285, 286, 287, 357, 434, 435, 438, 484 ஆகிய ஆண்டுகளில் புனனிலிருந்து சீனவுக்குச் சென்றன. அவைகள் எடுத்துச்சென்ற பரிசுப் பொருள்கள் பலவகைப்பட்டவையாய் இருந்தன. அவற்றுள் 'ஒன்று புராணக் கதைகளுள் விவரிக்கப் படுகின்ற ட்ராகன் என்னும் விலங்குகளுக்கரசன் அமர்வதற்கான ஆசனம் ஆகும். அந்த ஆசனம் பொன்னல் செய்யப்பட்டது. (ட்ராகன் என்பது விலங்கு, பறவை, பாம்பு, முதலே ஆகியவற்றின் தோற்றங்

[26] Ferrand, JA. 11 :14 pp. 21-22.

வைடூரியம் என்னும் .சொல் ஒளி பிறங்கும் கண்ணுடிச் சில்லைக் குறிக்குமே யன்றி மணிக்கல்லை யன்று என்றும், பீ-லியோ-லீ என்னும் சீனச் சொல்லும் வண்ணக் கண்ணுடியைத்தான் குறிக்கிறது என்றும், கி.பி ஐந்தாம் நூற்ருண்டு வரையிலும் அது ஓர் இயற்கைக் கனிப்பொருள் என்று சீனர் கருதினர் என்றும் சவானே சொல்கிருர், TP. ii. 8 (1907) p. 182, n 3.

[27] Ferrand JA: 11:13, pp. 458-9; pelliot, BEFEO iii, pp. 277-8.

கலந்த நெருப்புயிர்க்கும் பாரிய விலங்கு). வெண் சந்தனக் கட்டையிற் செதுக்கிய யானை, யானைத் தந்தத்திற் செதுக்கிய இரு தூபிகள், பருத்திநூலில் நெய்த இரு துணிகள், இரு கண்ணாடிச் சுரர்ஹிகள், கொட்டாங்கச்சியிலும் ஆமை யோட்டிலும் செதுக்கிய ஒரு தட்டு ஆகியவை ஏனைய பரிசுப் பொருள்களாய் இருந்தன.' மீண்டும் 503, 511, 514, 519 ஆகிய ஆண்டுகளில் சீனவுக்குச் சென்ற தூதுக் குழுக்கள் இந்தியாவி லிருந்து கொண்டுபோகப்பட்ட சந்தனக் கட்டையாலான அதிட்ட உருவ மொன்றையும், சால மரத்தின் இலைகளையும், முத்தையும், படிகக் கற்களையும், மஞ்சளையும், குங்கிலியம் முதலிய நறுமணப் பொருள்களையும் பரிசுப் பொருள்களாய் எடுத்துச் சென்றன. இன்னும் பிற்காலத்திற் சென்ற தூதுக் குழுக்களுள் ஒன்று உயிருள்ள காண்டாமிருகம் ஒன்றைப் பரிசு கொடுத்தது.[28] வைடூரியம், சந்தனக் கட்டை முத்து ஆகியவை தென்னிந்தியப் பொருள்கள் என்பதை எளிதில் உணரலாம்.

சம்பா ராஜ்யமும் (பண்டைக் கொச்சின்-சீனு) 230, 268, 284, 340 ஆகிய ஆண்டுகளில் தூதுக் குழுக்களைச் சீனவுக்கு அனுப்பிற்று. அந்தக் குழுக்கள் பழகிய யானைகளைப் பரிசாகக் கொடுத்தன. அக்குழுக்களுள் ஒன்று எடுத்துக்கொண்டுபோன கடிதம் 'நாகரிகமற்ற' எழுத்துகளில் எழுதப்பட்டிருந்தது. அதாவது, அந்தக் கடிதம் சம்பாவில் வழக்கிலிருந்த நெடுங் கணக்கு ஒன்றில் எழுதப்பட்டிருந்தது. அந்த எழுத்து முறை தென்னிந்தியாவைச் சேர்ந்தது என்பது நன்ருகத் தெரிந்த செய்தியாகும்.[29]

கி.பி. மூன்ரும் நூற்ருண்டின் தொடக்கத்தில் கல்நார் இந்தியாவிலிருந்து புனைக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது.[30] ஐந்தாம் நூற்ருண்டில் குறைந்தது ஏழு தூதுக் குழுக்கள் ஜாவாவிலிருந்து சீனவுக்குச் சென்றன என்பதை அறிகிருேம். அவ்வாறு 430ஆம் ஆண்டிற் சென்ற தூதுக் குழு ஒன்று இந்தியப் பொருள்களான வைர மோதிரங்கள், செங்கிளிகள், பருத்தித் துணிகள் (முரட்டுத் துணிகளும் மென்மையான துணிகளும்) ஆகியவற்றையும் யெ-போ நாட்டைச் சேர்ந்த

[28] JA. 11:14, pp. 7-8. BEFEO iii, p. 255.

[29] JA. *ibid.* For the alphabet of Campa see JOR x, pp. 192-99= BEFEO xxxv, pp. 233-41. See Pagel, ZDMG. 91 pp. 747-8 on Tamil influence on the Katakana alphabet of Japan.

[30] TP. xvi pp. 349-50.

பருத்தித் துணிகளையும் சீனப் பேரரசின் அவைக்கு எடுத்துச் சென்றது. (யெ-போ என்பது காந்தார நாடு என்று பெலியோ கருதுகிறார்)[31].

கிறிஸ்து சகாப்தத்தின் முன்னைய நூற்றாண்டுகளில் இந்தியாவையும் சீனாவையும் இணைத்த கடல்வழிப் போக்கு வரவு சுறுசுறுப்பாய் இருந்தது என்பதை நாம் மேலே கண்ட செய்திகள் காட்டுகின்றன. இந்தியாவுக்கும் சீனாவுக்கும் நேர்த் தொடர்பு மிகுதியாய் இல்லை யென்றே வைத்துக்கொண்டாலும், இந்தோனேசியாவில் நிறுவப்பட்டிருந்த இந்துக் குடியேற்ற நாடுகளின் வாயிலாய் அந்தத் தொடர்பு மிகவும் சுறுசுறுப்பாய் இருந்தது என்பதை உய்த்துணரலாம். இந்த ஊகம் சரியானதுதான் என்பதற்குக் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாஹியன் மேற்கொண்ட பயணம் சான்றாக இருக்கிறது. இலங்கையிலிருந்து சீனாவுக்குக் கடல்வழியாய்ச் சென்ற முதல் பௌத்தர் பாஹியனே. அவர் தென்னிந்தியாவுக்கு வரவில்லை. அதற்கு மாறாக, அவர் தம்லுக் துறைமுகத்திலிருந்து கடல் வழியாக நேரே இலங்கைக்குச் சென்றுவிட்டார். (VIII ஆ, இ) அவருடைய நாட்ட மெல்லாம் புத்த மதத்தைப் பற்றி அறிந்து கொள்வதிலேயே சென்றுவிட்டது. அவர் தக்காணத்தைப் பற்றியும் 'புறா மடத்தைப்' பற்றியும் எழுதி வைத்துள்ள குறிப்பு ஓர் உயர்தர வம்பளப்பு என்று கொள்ளலாம் (VIII அ).

**பாஹியன்**

இந்தப் பண்டைக் காலத்தில் சீனாவுக்கும் மேலை நாடுகளுக்கும் நடைபெற்ற கடல் வாணிகம் வளர்வதற்கு அரேபியர்களும் இந்தியர்களும் காட்டிய துணிவும் அவர்கள் மேற்கொண்ட முயற்சிகளுமே காரணமாயின என்பதை நாம் இங்குக் குறிப்பிடுதல் பொருத்தமாகும். சீனர்கள் இன்னமும் எளிதில் மருளுபவர்களாகவும் கடற்கொள்ளைக்காரர்களை நினைத்து அஞ்சுபவர்களாகவும் இருந்தார்கள்.[32]

பாஹியனுக்குப் பின்னர், தொடர்ந்து பல பௌத்தர்கள் தென்னிந்தியாவுக்கும் சீனாவுக்கும் இடையிற் பயணஞ் செய்வதற்குக் கடல்வழியையே தேர்ந்தெடுத்தார்கள். சங்கவர்மி என்னும் இலங்கைத் துறவி சீனாவுக்குக் கி.பி. 420ஆம் ஆண்டில் போய்ச் சேர்ந்தார். அங்கு அவர் மஹிஷாசக வினயம் என்னும்

**குணவர்மர்**

[31] JA. *ibid* p. 7.

[32] Hirth and Rockhill—*Chau Ju-Kua*, p. 7.

நூலைச் சீன மொழியில் பெயர்த்தெழுதினார். இன்னும் சிறிது காலத்திற்குப்பின் அவரைக் காட்டிலும் புகழ் பெற்ற குணவர்மர் சீனாவுக்குப் போனார். அவரைப் பற்றிக் கூறப்படும் கதைகள் அனைத்துமே உண்மையாய் இருக்க இயலாது. எனினும், ஜாவாவில் புத்த மதம் பரவுவதற்கு அவர் பெரிதும் காரணமாய் இருந்தார் என்பதிலும் சீனாவில் அவர் பெண் துறவிகளின் அமைப்பு ஒன்றை நிறுவினார் என்பதிலும் எவ்வித ஐயமும் இல்லை. அந்தத் துறவியமைப்பை நிறுவ உதவுவதற்காக அவர் இலங்கையிலிருந்து பெண் துறவிகள் சிலரைச் சீனாவுக்கு வரவழைத்தார். மேலும், அவர் பௌத்த நூல்கள் பலவற்றைச் சீன மொழியில் பெயர்த்து எழுதினார் (IX). ஐந்தாம் நூற்றாண்டில் கடல் வழியாகச் சீனாவுக்குச் சென்ற இன்னும் பலரது பெயர்களைச் சீனத் திரிபிடகத்தில் இருக்கின்ற க்வாய்-யுவன் பெயர்ப் பட்டியல் வரிசையில் காணலாம். அப்பட்டியல் கி.பி. 730ஆம் ஆண்டில் தொகுக்கப்பட்டது.[33]

**ஆறு ஏழாம் நூற்றாண்டுகள்**

சீனாவுக்கும் இந்தியாவுக்கும் இருந்த கடல்வழித் தொடர்பு கி. பி. ஆறு ஏழாம் நூற்றாண்டுகளிலும் மிகவும் சுறுசுறுப்பாய் இருந்தது. மிகத் தொலைவில் இருந்த நாடுகளிலிருந்து கப்பல்கள் பல இலங்கைக்கு வந்தன என்று காஸ்மாஸ் எழுதிவைத்துள்ளார். அத்தகைய கப்பல்களுள் இட்' சினிஸ்டா(சீனா)விலிருந்து பட்டுத் துணிகளை ஏற்றிக்கொண்டு வந்த கப்பல்களும் இருந்தன என்று அவர் கூறுகிறார். அவரே ஒரு வணிகர் என்பதையும் கி. பி. ஆறாம் நூற்றாண்டில் இலங்கையுடன் நடைபெற்ற வாணிகத்தில் அவரும் நேர்ப்பங்கு கொண்டார் என்பதையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டும். கியா-தான் (கி.பி. 730—835) என்னும் சீன நிலவியல் வல்லுநர் அன்னாட்டிலிருந்து இந்தியாவுக்குச் சென்ற நிலவழி யொன்றை விவரிக்கிறார். என்றாலும், கடல்வழியே மிகவும் விரைவாய்ச் செல்வதற்கு ஏற்ற வழியாய் இருந்திருக்கும் என்று சூ கியூபீ (1178) சௌ ஜு-குவா (1225) முதலிய பிற்காலச் சீன ஆசிரியர்கள் கருதுகிறார்கள். புகழ்பெற்ற போதிதர்மர் கி. பி. 520ஆம் ஆண்டில் கடல்வழியாய் அன்றி நிலவழியாகவா காண்டன் நகருக்கு வந்துசேர்ந்தார் என்று அவர்கள் கேட்கிறார்கள்.[34] கி. பி. ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்

[33] Anesaki in JRAS 1903 pp. 368-70.

[34] *Chau Ju-Kua*, pp. 97, 101-2 and Pelliot's remarks at TP. xiii (1912) pp. 471-2. Ferrand, JA. 11 : 13 (1919) p 461 has missed Pelliot's remarks on the citation from Kia Tan. The story of Bodhidharma is obscure. TP. xxii (1923) pp. 253 *ff*.

தென்னிந்தியாவிலிருந்து சீனுவுக்குச் சென்ற தூதுக் குழு ஒன்றைப் பற்றிய செய்திகளை மா-ட்வான்-லின் என்பவர் எழுதிவைத்துள்ளார் (X). அந்தக் குழுவினர் உயர்சாதிக் குதிரைகள் சிலவற்றைச் சீனப் பேரரசருக்குப் பரிசு தந்தனர். மேலும், அவர்கள் தென்னிந்தியாவில் உற்பத்தியான பொருள்களைப் பற்றிக் கவர்ச்சி மிக்க செய்திகள் பலவற்றை எடுத்துரைத்தார்கள். கி.பி. 500ஆம் ஆண்டுக்கும் 550ஆம் ஆண்டுக்கும் இடையில் சீனுவில் விற்பனைக்கு வந்த விலையுயர்ந்த மேற்கிந்திய முகம்பார்க்கும் கண்ணுடி ஒன்றைப் பற்றிய விசித்திரக் குறிப்பைப் படித்தால், தென்னிந்தியாவுக்கும் சீனுவுக்கும் நடைபெற்ற கடல்வாணிகத்தில் புனன் எவ்வாறு இடையீட்டு நாடாய் இருந்தது என்பது வெளிப்படையாய்த் தெரிகிறது. (XI) ஆரும் நூற்ருண்டின் இரண்டாம் பாதியிலோ அதற்குச் சிறிது முன்னரோ இந்தியாவில் காணப்பட்ட நிலைமையைப் பற்றிய செய்திகள் சிலவற்றை மா-ட்வான்-லின் எழுதிவைத்துள்ளார் (XIII). அவருடைய குறிப்புச் சிறியதாகவும் தெளிவற்றதாகவும் இருக்கிறது. எனினும். அது முக்கியமானதே. இந்தியர் சிலர் பவழ மாலைகளையும் மட்டரக முத்தையும் விற்பனைசெய்வதற்காக புனன்,டோன்கின் முதலிய மிகத் தொலைவிலுள்ள நாடுகளுக்குச் சென்றனர் என்று அவர் கூறுகிருர். மேலும், அவர் இந்தியர்களுடைய பழக்கவழக்கங்கள், அவர்கள் அணிந்த ஆடைகள் முதலியவற்றைப் பற்றியும் ஒரு சிறு குறிப்பு எழுதியுள்ளார்.

**தர்மகுப்தர்**

இந்திய பௌத்தத்தின் வரலாற்றில் ஏழாம் நூற்ருண்டு ஒரு மிகச் சிறந்த இடத்தை வகிக்கிறது. அந்தக் காலத்தில் பக்தி மிக்க சீனர் பலர் பௌத்தத்தின் பிறப்பிடமாகிய இந்தியாவுக்கு வந்து அந்த மதத்தைப் பற்றிய செய்திகளை நேரில் கண்டு கேட்டு அறியும் ஆர்வம் மிக்கவராய் இருந்தனர். அதுபோலவே, புத்த மதத்தின் வளர்ச்சிக்குத் துணை புரிவதற்காக இந்தியத் துறவிகள் பலர் சீனுவுக்குச் சென்றனர். எடுத்துக்காட்டாக, குஜராத்திலிருந்த லாட்டா நகரைச் சேர்ந்த அறிஞரான தர்மகுப்தர் தம்முடைய சொந்த ஊரை விட்டு வெளியேறி,முதலில் மைய இந்தியாவுக்குச் சென்று, பின்னர்ச் சிறிது சிறிதாக நடந்து, கபிசா, படக்ஷன், காஷ்கார், டர்பான் முதலிய ஊர்களின் வழியாகச் சுமார் கி.பி. 590ஆம் ஆண்டில் சீனத் தலைநகரை யடைந்து அங்கேயே தங்கிவிட்டார். அங்கு அவர் இந்திய நூல்களைச் சீனமொழியில் பெயர்த்தெழுதுவதிலும் மேற்கு நாடுகளைப் பற்றிய குறிப்புகளை எழுதுவதிலும் தம் வாழ்நாளைக் கழித்தார்.[35]

[35] BEFEO iii pp. 439–40.

இந்தியாவுக்கு வந்த சீனப்பயணிகள் அனைவருள்ளும் யுவான் சுவாங்கே மிக முக்கியமானவர். மற்றவர்களைக் காட்டிலும் அவர் வரலாற்று ஆசிரியர்கள் தொல்பொருளியல் வல்லுநர்கள் ஆகியவர்களுடைய கவனத்தை மிகவும் அதிகமாய்க் கவர்ந்திருக்கிறார். பிற சீனப்பயணிகளைக் காட்டிலும் அவர் இந்தியாவில் அதிகமான இடங்களுக்குச் சென்றார் என்பது மட்டுமன்றி, பிற துறவிகளைப் போல அவர் அவ்வளவாக ஒதுங்கி வாழ்ந்த வரும் அல்லர். ஏனையோரைப் போலவே அவரும் புத்தமதப் புனித நூல்களைத் திரட்டி அவற்றை ஆராய்வதையும் புகழ் பெற்ற பௌத்த விஹாரங்களைக் காண்பதையும் தம்முடைய அடிப்படை நோக்கமாய்க் கொண்டிருந்தார் என்பது உண்மையே. எனினும், வாட்டர்ஸ் சொல்வதைப் போல, 'அவருடைய சமயக் கோட்பாடு பரந்த மனப்பான்மையை அடிப்படையாய்க் கொண்டது; இயல்பாகவே அவர் சமரச நோக்குடையவர்; அவருடைய பக்தி கடுநோன்பின் தன்மையைப் பெறவில்லை.' அவருடைய பயணங்களையும் அனுபவங்களையும் பற்றிய குறிப்புகள் நாம் எதிர்பார்ப்பது போலவே பலவகைப்பட்டவை யாகவும் கவர்ச்சியாகவும் இருக்கின்றன. புத்தமத அற்புதங்களைப் பற்றிய குறிப்புகளைத் தவிர ஏனைய குறிப்புகள் எல்லாம் அவரே நேரில் கண்டும் கேட்டும் அனுபவித்த செய்தி களின் பதிவாய் இருக்கின்றன (XIV). அப்படியிருந்தும் அக்குறிப்புகள் தற்கால வரலாற்று மாணவர்களின் வேட்கையைத் தணிப்பதற்குப் போதுமானவையாய் இல்லை. 'அவரிடத்தில் போதுமான அளவு உற்றுநோக்கும் ஆற்றல் இல்லை; பார்த்தவற்றை விழிப்புடன் அலசி ஆராயும் பயிற்சியும் இல்லை; தெரிந்துகொண்ட செய்திகளை உள நிறைவு தரும் முறையில் எழுதிவைக்கும் திறனும் இல்லை; அதனால் சொல்லவேண்டிய செய்திகள் பலவற்றை அவர் சொல்லாமல் விட்டுவிட்டார்.'' இது வாட்டர்ஸின் கூற்று.

**யுவான் சுவாங்**

ஹுவான் சுவாங்கோடு இட்சிங்கை ஒப்பிடும்போது இட்சிங் வெறும் புத்தகப் பூச்சியாய்த் தோன்றுகிறார். ஹுவான் சுவாங் கி.பி 645ஆம் ஆண்டில் சீனாவுக்குக்குத் திரும்பிய போது இட்சிங்குக்குப் பன்னிரண்டு வயதே ஆகியிருந்தது.[36] 649ஆம் ஆண்டிலேயே இட்சிங் ஹுவான் சுவாங்கைப் போல இந்தியாவுக்குப் போக விரும்பினார்.

**இட்சிங்**

[36] இட்சிங் என்பது அவர் துறவறத்தை ஏற்றுக்கொண்டபோது வைத்துக்கொண்ட பெயர். அவருடைய பழைய பெயர் சாங்-வென்-மிங் என்பதாகும்.

ஆனால் என்ன காரணத்தினாலோ அந்த எண்ணத்தைக் கி. பி. 671ஆம் ஆண்டு வரையிலும் அவர் செயல்படுத்தாமல் விட்டு விட்டார். அந்த ஆண்டில் அவர் காண்டனிலிருந்து புறப்பட்ட பாரசீகக் கப்பல் ஒன்றில் ஏறி இந்தியாவுக்குப் பயணமானார். அவருடன் வேறு பல துறவிகளும் புறப்படுவதாகச் சொல்லி யிருந்தார்கள். ஆனால் கடைசி நேரத்தில் அவர்கள் பின்தங்கி விட்டார்கள். அவருடைய மாணவரான சான்–ஹிங் என்பவர் மட்டும் அவருடன் புறப்பட்டார். இட்சிங் கி.பி. 673ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இந்தியாவை அடைந்து தம்லுக் துறைமுகத்தில் இறங்கினார். அங்கேயே அவர் மூன்று மாதம் தங்கி, பன்னிரண்டு ஆண்டுக்கு முன்னரே இந்தியாவுக்கு வந்துவிட்ட சீனர் ஒருவருடைய நட்பைத் தேடிக்கொண்டார். அந்தச் சீனருடன் சேர்ந்து அவர் புத்த மதத்தின் உண்மைப் புனித நிலமாகிய பிஹாருக்குச் சென்றார். அவர்கள் தம்லுக்கிலிருந்து நூற்றுக் கணக்கான வணிகர்கள் கொண்ட கூட்டத்துடன் சேர்ந்து பிஹாருக்குப் பயணஞ் செய்தார்கள். போகும் வழியில் அவர் நோயுற்றார். பின்னர் ஆறலை கள்வர்கள் அவருடைய உடைமைகள் அனைத்தையும் பறித்துக்கொண்டார்கள். அந்த வழிப்பறியில் அவர் தம்முடைய ஆடைகளையும் இழந்தார். சில நாட்களுக்குப் பின்னர் அவர் மீண்டும் அந்த வணிகர்களோடு சேர்ந்துகொண்டார். அதன்பிறகு அவர் எவ்வித இடையூறு மின்றித் தம்முடைய புனிதப் பயணத்தை முடித்தார். அவர் நாலந்தாவில் பத்தாண்டு தங்கியிருந்த பின்னர்க் கி.பி. 685ஆம் ஆண்டில் முதலில் தாம் வந்த வழியாகவே சீனாவுக்குத் திரும்பிப் போக முடிவு செய்தார். போகும் வழியில் ஸ்ரீவிஜயத்தில் அவர் நான்கு ஆண்டுகளைக் கழித்தார். அதன்பின் அவர் காண்டனுக்குத் திரும்பிச் சிறிது காலம் அங்குத் தங்கியிருந்துவிட்டு மீண்டும் ஸ்ரீவிஜயத்திற்குத் திரும்பினார். அப்போது அவருடன் நான்கு தோழர்கள் வந்தார்கள். ஸ்ரீவிஜயத்தில் அவர் தம்முடைய எழுத்துப் பணியில் தொடர்ந்து ஈடுபட்டார். அவர் ஸ்ரீவிஜயத்தில் இருந்தபோதுதான் தம்முடைய வாழ்க்கைக் குறிப்புகளை எழுதினார். அவர் கி.பி. 695இல் சீனாவுக்குத் திரும்பியபோது, தகாவழிப்பேர்போன பேரரசி வூ அவருக்கு மிகவும் ஆடம்பரமான வரவேற்பளித்தாள். அவர் 713இல் இறந்துபோனார். அதுவரையிலும் அவர் தம்முடைய எழுத்துப் பணியைச் செய்துகொண்டே யிருந்தார்.[37]

இட்சிங் தென்னிந்தியாவுக்கும் வரவில்லை, இலங்கைக்கும் செல்லவில்லை. அதனால் அந்நாடுகளைப் பற்றி அவர் சொல்லக்

[37] Chavannes—*Religieux Eminents*, Introduction.

கூடிய நேர்ச்செய்தி எதுவும் இல்லை. ஆனால், அவருடைய பயண விவரங்கள் (XV அ), வெவ்வேறு நாடுகளில் வாழ்ந்த பௌத்தர்களின் கோட்பாடுகளிலும் சமுதாய நடைமுறைகளிலும் அவர் கண்ட வேறுபாடுகள் (XV ஆ,இ,ஈ), எல்லாவற்றுக்கும் மேலாக, அவர் இந்தியாவில் தங்கியிருந்தபோது அங்கு வந்த மாண்பு மிக்க துறவிகளின் சுருக்கமான வாழ்க்கை வரலாறுகள் (XV உ) ஆகியவை யெல்லாம் அவருடைய நூல்களில் இடம்பெற்றுள்ளன. அதனால் அவருடைய நூல்கள் மிகவும் முக்கிய மானவை. ஒரு தலைமுறைக் காலத்திலேயே அறுபது பேர் இன்னல் நிறைந்த அந்த நீண்ட பயணத்தை மேற்கொண்டார்கள் என்பதை நோக்கும்போது நாம் உண்மையிலேயே வியப்படைகிறோம் என்று சவானே என்னும் ஆசிரியர் கூறுகிறார். அது போலவே இட்சிங்கின் காலத்துக்குப் பின்னரும் முன்னரும் நூற்றுக் கணக்கான பயணிகள் இந்தியாவுக்கு வந்திருக்கக் கூடும் என்று நாம் கருதினால் அக்கருத்து ஏற்புடையதாய்த்தான் இருக்கும். அத்தகையோரின் பயணச் செய்திகள் வரலாற்று மாணவர்களுக்குக் கிடைக்காமலே போய்விட்டது, அந்தோ, எத்துணைப் பேரிழப்பு!

**வாணிகமும் அரசியலும்**

இந்தியாவும் சீனாவும் ஒன்றோடொன்று தொடர்பு கொள்வதற்குச் சமயம் மட்டும் காரணமாய் இருந்தது என்று சொல்ல இயலாது. வாணிகம் அரசியல் ஆகியவையும் அந்தத் தொடர்புக்குக் காரணமாய் இருந்தன என்பதை ஏழாம் நூற்றாண்டின் இறுதி யாண்டுகளிலும் எட்டாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளிலும் இந்திய ராஜ்யங்கள் சிலவற்றிலிருந்து சீனாவுக்குச் சென்ற தூதுக் குழுக்களையும் சீனாவிலிருந்து இந்திய ராஜ்யங்களுக்கு வந்த தூதுக் குழுக்களையும் பற்றிய குறிப்புகளின் வாயிலாய் அறிகிறோம் (XVI.)[37a] இந்தக் குறிப்புகளைப் பதினொன்றும் நூற்றாண்டில் உருப்பெற்ற சீனக் கலைக் களஞ்சியம் ஒன்றிலிருந்து சவானே திரட்டித் தொகுத்துவைத்துள்ளார். அன்றியும், விடா முயற்சிக்குப் பேர்போன மா-ட்வான்-லின்னும் அந்தக் குறிப்புகளைத் திரட்டிச் சுருக்கி எழுதி வைத்துள்ளார். இந்தக் குறிப்புகள் இந்திய வரலாற்றாசிரியர்களுடைய கவனத்தைப் போதுமான அளவில் இன்னும்

[37a] கி.பி. 695இல் சீனப் பேரரசர் பிறப்பித்த ஆணை யொன்றின்படி தென்னிந்தியாவிலிருந்து சீனாவுக்குச் சென்ற தூதர்கள் தங்கங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை ஆறு மாதத்திற்கு அரசனிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். BEFEO, 4, pp. 343-4.

பெறவில்லை. மேற்கிந்திய அரசனான சிலாதித்யனும்[38] தென்னிந்தியச் சாளுக்கிய அரசனான வல்லபனும் தங்களுடைய தூதர்களைச் சீனவுக்கு கி.பி. 692இல் அனுப்பினார்கள். ஆனால் இந்தக் குறிப்புகளின் வாயிலாய் நமக்குத் தெரிகிற மிக வியத்தகு செய்தி யாதெனில், இராஜசிம்மன் என்ற பட்டப் பெயரின் மூலம் வரலாற்றாசிரியர்களுக்கு மிக நன்றாய்த் தெரிந்த காஞ்சி மன்னன் இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவன் கி.பி. 720ஆம் ஆண்டில் சீனவுக்குத் தன்னுடைய தூதர் குழு ஒன்றை அனுப்பியதாகும். தான் அரேபியர்களோடும் திபேத்தியர்களோடும் போருக்குப் புறப்படப் போவதாகவும், அப்படிப் புறப்படவிருக்கும் படைக்கு ஒரு பெயர் வைக்க வேண்டுமென்று சீனப் பேரரசரைக் கேட்டுக் கொள்வதாகவும் தன்னுடைய தூதர்களிடத்தில் இராஜசிம்மன் சொல்லி யனுப்பினான். மேலும், சீனப் பேரரசர் சார்பில் தான் ஒரு கோயில் கட்டியிருப்பதாகவும், அந்தக் கோயிலுக்கு ஏற்ற பெயரையும் சீனப் பேரரசரே வைக்க வேண்டும் என்றும் இராஜசிம்மன் சொல்லியனுப்பினான். இந்தச் செய்தியைத் தாங்கிச் சென்ற தூதரைச் சீனப் பேரரசர் மிகவும் உயர்வாக நடத்தினார். அதன் பின்னர், அவர் தம்முடைய தூதுக் குழு ஒன்றைத் தென்னிந்தியாவுக்கு அனுப்பி இராஜசிம்மனுடைய விருப்பத்தை நிறைவேற்றினார்.

**பல்லவர்களும் சீனவும்**

நரசிம்மவர்மனைப் பற்றிய இந்தத் துல்லியமான குறிப்பை நோக்கும்போது, ஏழாம் நூற்றாண்டின் இறுதியிலும் எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் ஆட்சி செய்த பல்லவ மன்னர்கள் எந்தெந்த ஆண்டுகளிலிருந்து எந்தெந்த ஆண்டுகள் வரையிலும் ஆட்சி செய்தார்கள் என்ற செய்திகள் சரியாய்க் கணிக்கப்பட்டுள்ளனவா என்பதில் நமக்கு ஐயம் ஏற்படுகிறது. அச்செய்திகள் சரியாய்க் கணிக்கப்பட்டுள்ளன என்றே நாம் இதுவரையில் எண்ணியிருந்தோம். ஆனால் மேலே கண்ட சீனக் குறிப்புகளின் அடிப்படையில் பார்த்தால், நரசிம்ம வர்மனுடைய ஆட்சி மேலும் சிறிது காலம் நீடித்திருக்கலாம் என்றும், இரண்டாம் நந்திவர்மப் பல்லவ மல்லனுடைய ஆட்சி இன்னுஞ் சிறிது பின்னர்த் தொடங்கியிருக்கக்கூடும் என்றும் நாம் கருதலாம்[39] இந்தக் காலத்தில் அரேபியர்களும் திபேத்தியர்களும் பல்லவர்களுடைய பகைஞர்களாய் இருந்தார்கள் என்ற குறிப்பும் நம்முடைய

[38] A later monarch than the one noticed by Smith, *Early History*, 4 pp. 343-4.

[39] Cf. N. Venkataramanayya in JOR, viii pp. 1-8.

கவனத்திற்கு உரியது. திபேத்தியர்களும் அரேபியர்களும் தனித்தனியாகவோ கூட்டாகவோ சீனுவிடந்தான் பகைமை பாராட்டினுர்களே யன்றி, நம்முடைய கவனத்தில் இருக்கும் காலத்தில் அவர்கள் எந்த இந்திய ராஜ்யத்தோடும் பகைமை கொண்டிருந்ததாக நாம் நினைக்க இயலாது. குறிப்பாக, அவர்கள் தென்னிந்தியாவில் இருந்த பல்லவ ராஜ்யத்துடன் பகைமை பாராட்டினுர்கள் என்று சொல்வதற்குச் சான்றே இல்லை. எனவே நரசிம்மவர்மனுடைய அரசியல் வலிமையை நன்ருய் உணர்ந்திருந்த சீனப் பேரரசுதான் திபேத்தியர்களுக்கு எதிராகப் பல்லவர்களுடைய துணையை நாடியது என்று நாம் கருதினுல் அது தவருகாது.

**திபேத்தியர் வலிமை**

'திபேத்தியர்கள் ஏழாம் நூற்ருண்டிலும் எட்டாம் நூற்ருண்டிலும் மத்திய ஆசியப் பகுதியில் மிகவும் முக்கியமான இடத்தை வகித்தார்கள் என்பது சீன ஆசிரியர் சிலர் எழுதி வைத்துள்ள குறிப்புகளின் வாயிலாய் மிகவும் உறுதியாய்த் தெரிகிறது. (அவ்வாசிரியர்கள் திபேத்தியர்களைத் துபர்கள் என்று குறிப்பிட்டிருக்கிருர்கள்.) வடகிழக்கிலும் தென் கிழக்கிலும் இருந்த நாடுகளைத் தங்களுடைய அதிகாரத்தின் கீழ்க் கொண்டுவந்திருந்த திபேத்தியர்களுடைய வலிமையைக் கண்டு சீனத் தலைநகரிலிருந்த பேரரசர்கள் நடுங்கினுர்கள். கி.பி. 787ஆம் ஆண்டுக்குச் சரியான ஒரு காலத்தில் சீனப் பேரரசர் தம்முடைய பாதுகாப்பைக் கருதி, யுன்னுன் மன்னனேடும் பாக்தாதுக் கலீபாவோடும் இந்திய மன்னர் சிலரோடும் ஒப்பந்தம் செய்துகொள்ளவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டார் என்று சீன ஆசிரியர் ஒருவர் எழுதி வைத்துள்ளார். திபேத்தியர்களுடைய அதிகாரம் வங்காள விரிகுடாவின் தொலைதூரப் பகுதிகளிலும் பரவியிருந்தது என்று நாம் கருதலாம். இன்றேல், வங்காள விரிகுடாவைத் திபேத்தியக் கடல் என்று இஷ்டக்ரியும் இபன் ஹாகலும் தங்கள் குறிப்புகளில் எழுதிவைத்துள்ளதற்கு எவ்வாறு விளக்கந்தர இயலும்?'[40] இவ்வாறு ரெய்னுட் என்னும் ஆசிரியர் கூறுகிருர்.

நாம் சற்று முன் குறிப்பிட்ட தென்னிந்தியத் தூதுக் குழுக்கள் சீனுவுக்குச் சென்ற அதே காலத்தில்தான் நம்

[40] Reinaud—*Aboulfeda*, i. pp. cccLvii-viii. Also Smith—*Early History of India*, 4 p. 377.

கவனத்தை மிகவும் கவர்கிற வஜ்ரபோதி[41] என்னும் துறவி வாழ்ந்தார். மேலும், அந்தத் தூதுக் குழுக்களுள் மிகவும் புகழ்பெற்ற குழுவோடு அவருக்குத் தொடர்பு இருந்தது என்பதும் நம் கவனத்திற்கு உரியது. அவர் தென்னிந்தியாவில் கி.பி. 661ஆம் ஆண்டில் பிறந்தவர். அவர் நாலந்தாவில் தமது இருபத்தாறும் வயது வரையில் கல்வி கற்றார். கி.பி. 689இல் அவர் கபில வாஸ்துக்குப் புனிதப் பயணஞ் செய்தார். அதன்பின் அவர் தென்னிந்தியாவுக்குத் திரும்பினார். அப்போது அவலோகி தேச்வரச் சமயக் கோட்பாட்டு முறைக்குத் தென்னிந்தியா மையமாய் இருந்தது. அவர் தென்னிந்தியாவுக்குச் சென்ற சமயம் காஞ்சிக்குச் சோதனைக் காலமாய் இருந்தது. அங்கே மூன்றாண்டு மழை பெய்யாததால் மக்கள் மிகவும் துன்புற்றிருந்தார்கள். காஞ்சியரசன் நரசிம்ம போதவர்மன் வஜ்ரபோதியிடம் முறையிடவே, வஜ்ரபோதி தம்முடைய வழிபாட்டு வலிமையால் மழை பெய்யச் செய்தார். சிறிது காலத்திற்குப் பின்னர் அவலோகிதேச்வரர் அவருடைய கனவில் தோன்றி, முதலில் இலங்கைக்குச் செல்லுமாறும் பின்னர்ச் சீனாவுக்குச் சென்று மஞ்சுஸ்ரீயை வழிபடுமாறும் அவரைப் பணித்தார். எனவே அவர் இலங்கைக்குச் சென்றார். அங்கு அவருக்குப் பயபக்தி மிக்க நல்ல வரவேற்புக் கிடைத்தது. அங்கே அவர் ஆறு மாதம் தங்கி, புத்தருடைய திருச்சின்னங்களை வழிபட்டார். அதன் பின்னர் அவர் இந்தியாவுக்குத் திரும்பினார். அங்கிருந்து அவர், அரசனுடைய இசைவு பெற்று, சீனாவுக்குச் சென்ற தூதரோடு சேர்ந்து கப்பல் ஏறினார். அந்தத் தூதர் சீனப் பேரரசருக்குக் கொடுப்பதற்குரிய பரிசுகளை எடுத்துச் சென்றார். வஜ்ரபோதி சீனாவுக்குச் செல்லலாம் என்று இசைவு தந்த அரசன் நரசிம்ம வர்மனாய்த்தான் இருக்கவேண்டும். தூதுக் குழுவும் அவன் அனுப்பிய தூதுக் குழுவாய்த்தான் இருக்கவேண்டும். அதைப் பற்றி நாம் சற்று முன்னர் எழுதியிருக்கிறோம். அந்தக் குழு இருபத்து நான்கு மணி நேரத்தில் இலங்கைக்குச் சென்று பொட்சிலி என்னும் துறைமுகத்தை அடைந்தது. அதற்கு முன்னரே அங்கு முப்பத்தைந்து பாரசீக மரக்கலங்கள் காத்துக் கொண்டிருந்தன. அவற்றில் வந்திருந்த வணிகர்கள் மணிக்கல் வியாபாரிகள். வஜ்ரபோதி அந்த வணிகர்களோடு நட்புறவு கொண்டார். அவ்வாறு இலங்கையில் ஒரு மாதம் தங்கியபின்,

[41] For the sketch that follows I depend on Levi and Chavannes in JA. 9:15 (1900) May-June, pp. 418-21, and 11.8 (1916) pp. 48-9, accepting the latter statement regarding the native place of Vajrabodhi. Cf. Watters, *Yuan Chwang* ii, p. 231.

அவர்கள் எல்லாருமே ஒன்றுகப் புறப்பட்டு, ஒரு மாதத்திற்குப் பின்னர் ஸ்ரீவிஜயத்தை அடைந்தார்கள். ஆனால் அந்த நெடும் பயணத்தின் இறுதிக் கட்டத்தில் வீசிய புயலில் அவர்கள் அகப்பட்டுக்கொண்டார்கள். அதன் விளைவாக வஜ்ரபோதியின் மரக்கலத்தைத் தவிர ஏனைய கலங்கள் அனைத்துமே சின்ன பின்னமாய்ச் சிதறிப்போயின. அதன் பின்னர் எத்தனையோ இன்னல்களுக்கு இலக்காகிய வஜ்ரபோதி இறுதியில் கான்டன் துறைமுகத்தில் இறங்கி, சீனப் பேரரசின் கீழைத் தலைநகரைக் கி.பி. 720ஆம் ஆண்டில் அடைந்தார். வஜ்ரபோதி இலங்கையில் தங்கியிருந்த காலத்தில் அங்கு மஹாயான பௌத்தத்தைப் பரப்பினுர். கி.பி. 732இல் அவர் இறப்பதற்கு முன்னர்த் தம்முடைய மாணவரான அமோகவஜ்ரரை அழைத்து, ஐந்து இந்தியாக்களுக்கும் இலங்கைக்கும் அவர் செல்லவேண்டும் என்று பணித்தார். அதற்கிணங்க அமோகவஜ்ரர் கி.பி. 741இல் கான்டன் நகரிலிருந்த மலேய மரக்கலம் ஒன்றில் ஏறி இலங்கையை அடைந்தார். அங்கு ஆட்சி செய்த சீலமேகன் என்னும் அரசன் அமோகவஜ்ரருக்கு ஆடம்பரமான வரவேற்பளித்தான். அமோகவஜ்ரரும் அங்கே தங்கித் தம்முடைய மதத்தைப் பரப்பும் முயற்சியில் கடுமையாக உழைத்தார். அவருடைய முயற்சியின் பயனுக மஹாயான பௌத்தக் கோட்பாடுகள் தம்முடைய முழு உருவையும் பெற்றன.

**போதிசேனர்**

பாரச்சி (பாரத்வாஜர்?) குலத்தைச் சேர்ந்த போதிசேனர் என்ற தென்னுட்டுப் பார்ப்பனர் சீனுவின் புகழைக் கேள்விப் பட்டு அந்நாட்டுக்குச் செல்ல விரும்பினுர் மேலும், அங்கே மஞ்சுஸ்ரீ அப்போது வசித்து வந்ததாக அவர் கேள்விப்பட்டு அவரையும் காண விரும்பினுர். போகும் வழியில் சம்பா நாட்டைச் சேர்ந்த புட்டெட்சு என்ற பெயருடைய ஒரு புரோகிதனை அவர் சந்தித்தார். அதன்பின் அவ்விருவரும் சேர்ந்து பயணஞ் செய்து கி.பி. 733இல் சீனுவை யடைந்தனர். சீனுவில் போதிசேனர் சந்தித்த புரோகிதன் ஒருவன் விளையாட்டிலும் வேடிக்கையிலும் விருப்பம் உடையவன். மஞ்சுஸ்ரீ ஜப்பானுக்குப் போய்விட்டதாக அவன் விளையாட்டாக போதிசேனருக்குச் சொன்னுன். சரியாக அந்த நேரத்தில் சீனப் பேரரசர் அவையிலிருந்து விடை பெற்றுக் கொண்டு தமது நாட்டுக்குத் திரும்ப விருந்த ஜப்பானியத் தூதுக் குழுவினர் தம்மோடு ஜப்பானுக்குப் புறப்படுமாறு போதி சேனரை வற்புறுத்தினர். பழம் நழுவிப் பாலில் விழுந்தது என்று கருதிய போதிசேனர் அந்த அழைப்பை உடனே ஏற்றுக்

கொண்டு கி.பி. 736இல் நனிவாவை (இன்றைய ஓசாகா) அடைந்தார். அங்கே அவரை அரசவை அலுவலர்களும் குருமார் களும் மிகுந்த ஆடம்பரத்துடன் வரவேற்றார்கள். அதன்பின் அவரும் அவருடைய நண்பன் புட்டெட்சும் பெருமதிப்பிற்குரிய விருந்தினர்களாகப் பல்லாண்டு வாழ்ந்தார்கள். கி.பி. 749ஆம் ஆண்டில் புத்த வைரோசனருடைய பெரிய சிலை ஒன்று அங்கு நிறுவப்பட்டது. அந்த விழாவில் போதிசேனர் புரோகிதஞ் செய்தார். 750இல் அவர் சோஜோப் பதவி பெற்றார்—அதாவது, அனைத்து ஜப்பானிய பௌத்த குருக்கள் சபையின் தலைவர் ஆனார். அதிலிருந்து அவருக்கு பரமோன் சோஜோ (பிராமண சோஜோ) என்ற பெயரே அதிகமாய் வழக்கிலிருந்தது. அவர் மூன்று பௌத்த மடங்களில் சமஸ்கிருதத்தையும் மஹாயானக் கோட்பாடான கண்டவியூஹத்தையும் கற்பித்தார். இறுதியில், கி.பி. 760ஆம் ஆண்டில், தம்முடைய ஐம்பத்தேழாம் வயதில், அவர் இறந்து போனார். பத்தாண்டுகளுக்குப் பின்னர் நாட்டப் பட்ட ஒரு தூபியும் அதிற் பொறிக்கப்பட்டுள்ள வாசகங்களும் அவர் இறுதி ஓய்வு பெற்ற இடத்தை இன்றைக்கும் காட்டிக் கொண்டிருக்கின்றன. ஏறக்குறைய அதே காலத்தில் உருப்பெற்ற ஜப்பானிய நெடுங்கணக்கில் சமஸ்கிருத மொழியின் செல்வாக்கை நாம் தெளிவாய்க் காண்கிறோம். அதற்கு போதிசேனர் தொடங்கிய சமஸ்கிருதப் பயிற்சியும் ஒரு காரணமாய் இருக்கக் கூடும் என்று தககுசு கருதுகிறார்.[42]

**காண்டன் நகரில் பார்ப்பனர்**

எட்டாம் நூற்றாண்டில் இலங்கையிலிருந்து தூதுக் குழுக்கள் பல சீனாவுக்குச் சென்றன என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன[43]. சீன இந்தியத் தொடர்பு களின் இந்தப் படியிலிருந்து நம் கவனத்தைத் திருப்புமுன் இன்னுஞ் சில மிக முக்கியமான செய்திகளை நாம் கவனிப்பது நல்லது. கியன் ட்சென் என்ற சீன மதகுருவின் மாணவர் ஒருவர் கி.பி. 749 இல் சீனாவிலிருந்து ஜப்பானுக்குப் போனார். அந்தப் பயணத்தை அவர் விவரிக்கின்றபோது (XVIII) காண்டன் ஆற்றில் இந்தியா, பாரசீகம், அரேபியா ஆகிய நாடுகளிலிருந்து வந்த மரக் கலங்கள் ஏராளமாய் இருந்தன வென்றும், காண்டன் நகரிலேயே இந்தியப் பார்ப்பனர் பலர் வசித்தனர் என்றும், அங்கே மூன்று பார்ப்பனக் கோயில்கள் இருந்தன வென்றும் குறிப்பிடுகிறார். கி.பி. 881இல் இந்தியாவுக்குப் புனிதப் பயணந்

[42] BEFEO, xxviii (1928-29) pp. 24-6. See also *n* 29 *ante*

[43] JA: 9:15 (1900) pp. 411-8; 428.

தொடங்கிய ஷின்னியோடக ஓகா என்ற பெயருடைய ஜப்பானிய அரச குமாரன் ஒருவன் வழியில் மலேயாத் தீபகற்பத்தின் தென்பகுதியில் லோயுவே என்னும் இடத்தில் இறந்து போனான்.[44] இறுதியாக, தகுவாபாவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள தமிழ்க் கல்வெட்டும், அதிற் கூறப்பட்டுள்ள திருமால் கோயில், நாரணம் என்னும் குளம், மணிக்ராமம் (வாணிகச் சங்கம்) ஆகியவையும் இதே காலத்தைச் சேர்ந்தவை என்று கொள்ளலாம்.[45]

எட்டாம் நூற்றாண்டுச் செய்திகளைப் பதிவு செய்வதற்காக ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகச் சொல்லப்படும் சீன நூல் ஒன்று வெளிநாட்டு வாணிகத்தைப் பற்றி முக்கியமான செய்திகள் பலவற்றை எடுத்துரைக்கிறது. 'கான்டன் துறைமுகத்துக்கு வந்த வெளிநாட்டு மரக்கலங்கள் மிகவும் பெரியவையாய் இருந்தன.. நீருக்குமேலே அவை மிகவும் உயர்ந்து நின்றன. ஆதலால், அவற்றில் ஏறுவதற்கு எத்தனையோ பத்தடி உயரமுள்ள பல ஏணிகள் தேவைப்பட்டன. அந்த மரக்கலங்களின் தலைமை மாலுமிகள் கடல் வாணிக ஆய்வாளர் அலுவலகத்தில் (ஷி-போ-ஷி) தங்களுடைய பெயர் முதலிய விவரங்களைப் பதிவு செய்து கொள்ளவேண்டும் என்பது விதி. அத்தகையதோர் அலுவலகம் இருந்தது என்பதே வெளி நாட்டு வாணிகத்தின் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டுகின்றதன்றோ? மரக்கலங்கள் துறைமுகத்திலிருந்து புறப்பட்டுப் போவதற்கு முன்னர்ச் சரக்குப் பட்டியலைக் கடல் வாணிக ஆய்வாளர் அலுவலகத்தினரிடம் காட்டவேண்டும், அதைத் தணிக்கை செய்த பின்னர் அவ்வலுவலர்கள் ஏற்றுமதித் தீர்வையையும் சுமை கூலியையும் வசூல் செய்தார்கள். அதன் பின்னரே மரக்கலம் வெளியேறுவதற்கு அவர்கள் இசைவு தந்தார்கள். மதிப்புமிக்க பொருள்களையும் அரும் பொருள்களையும் ஏற்றுமதி செய்வதற்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது. கள்ளக் கடத்தல் குற்றவாளிகள் சிறைத் தண்டனை பெற்றார்கள்.[46]

எட்டாம் நூற்றாண்டில் நாம் அடியெடுத்து வைத்ததும் புகழ் பெற்ற அரபுப் பயணிகள், வரலாற்றாசிரியர்கள், நிலவியல் வல்லுநர்கள் ஆகியவர்களுடைய காலம் தொடங்குவதை அறிகிறோம்.

**அரபு ஆசிரியர்கள்**

மிகப் பழங்காலத்திலிருந்தே இந்து மாக்கடல் வாணிகத்தின் பெரும் பகுதி அரேபியர்கள் கையில் இருந்தது. இஸ்லாம் மதம் தோன்றியதும் அரேபியர்களுடைய ஆதிக்கம் மிக

[44] Takakusu: *I-tsing*, p. xiv, *n*. 3; BEFEO iv p. 232.

[45] JOR. vi. pp. 300 *ff*.

[46] Hirth and Rockhill, *Chau Ju-Kua*, p. 9.

வேகமாய் விரிவடைந்தது. அவ்விரிவின் விளைவுகள் மதத்துறை அரசியல் துறை ஆகியவற்றோடு நின்றுவிடாமல், வாணிகம் அறிவியல் ஆகிய துறைகளுக்கும் பரவின. தொடக்கத்தில் நபிகள் நாயகமே வணிகராய் இருந்தார். எனவே, முஸ்லிம் வணிகர்கள் மிகவும் உயர்வாய் மதிக்கப்பட்டதை நாம் எளிதில் புரிந்துகொள்ளலாம். தொடக்க ஆண்டுகளில் பதவி வகித்த கலிபாக்களின் காலத்தில் முஸ்லிம் ஆதிக்கம் அடைந்த வியத்தகு பெருக்கத்தை அனைவரும் நன்கு அறிவர். அதனால் ஏற்பட்ட அரசியல் புரட்சிகள் வாணிகத்திற்கு இடையூறாய் இருந்திருக்கு மென்று பொதுவாக யாரும் கருதக்கூடும். ஆனால் மிக விரைவாகவும் வியக்கத்தக்க வகையிலும் நிகழ்ந்த போர்கள் கிடைத்த வெற்றிகள் ஆகியவற்றுக்கிடையில் வாணிகமும் வேகமாய்ப் பெருகிக்கொண்டே போயிற்று. ஹிஜ்ராவின் 16ஆம் ஆண்டில் (கி.பி. 637), ஓமார் என்பவர் கலீபாவாய் இருந்த காலத்தில், ஓமான் கரையிலிருந்து அரபுக் கடற்படையொன்று புறப்பட்டு, சிந்து ராஜ்யத்தையும் இந்தியாவின் மேலைக் கடற்கரையின் பிற பகுதிகள் சிலவற்றையும் தாக்கிச் சூறையாடியது. ஏழாம் நூற்றாண்டின் இறுதிக்குள் இலங்கையில் அரபு வணிகர் குடியிருப்பு ஒன்று தோன்றிவிட்டது. இலங்கையில் வசித்த அனாதை முஸ்லிம் பெண்கள் சிலரை இந்தியக் கடற்கொள்ளைக் காரர் சிலர் தம்முடன் தூக்கிக்கொண்டு வந்து விட்டனர். இதை ஒரு சாக்காக வைத்துக்கொண்டுதான் புகழ்பெற்ற ஹஜாஜ் சிந்து சமவெளியின் மீது படையெடுத்தான்.[47] கான்டன் நகரில் கி.பி. 758ஆம் ஆண்டில் ஆர்ப்பாரவாரம் ஒன்றைக் கிளப்பி அதனால் தோன்றிய குழப்பத்தின் மூலம் பயனடையக்கூடிய அளவுக்கு அங்குக் குடியேறியிருந்த அரபு வணிகர்கள் பாரசீக வணிகர்கள் ஆகியவர்களுடைய எண்ணிக்கை பெரிதாயிருந்தது.[48] உண்மையில் அரசியல் துறையில் அரபுப் பேரரசு நெடுநாள் நிலைத்து நிற்கவில்லை. எவ்வளவு விரைவில் அது உருவாயிற்றோ அவ்வளவு விரைவில் அது சிதைந்தும் போயிற்று. பேரரசு ஒன்று இருந்த இடத்தில் சிறு ராஜ்யங்கள் பல தோன்றி விட்டன. ஆனால், பொருளாதாரத் துறையிலும் பண்பாட்டுத் துறையிலும் அரபுச் செல்வாக்குச் சிதையவில்லை. மாறாக, உலக வரலாற்றில் அது மிகவும் முக்கியமான இடத்தை வகித்தது. அந்தச் செல்வாக்கின் பயனாக, பொருளாதார முன்னேற்றமும் அறிவு முன்னேற்றமும் நிகழ்வதற்கு ஏற்றதொரு சூழ்நிலை

[47] Cf. Elliot and Dowson, i, pp. 118-119.

[48] Reinaud-*Relation* pp. xl–xlii and cix, Also Hirth and Rockhill, *Chau Ju-Kua*, p. 15.

உருவாயிற்று. அந்த முன்னேற்றத்திற்குக் காரணமாய் இருந்த முயற்சியில் அரபு அறிஞர்களும் கலைஞர்களும் ஓரளவு நேர்ப்பங்கு கொண்டார்கள் என்பது உண்மையே. ஆனால், அதனைக் காட்டிலும் ஏனையோர் அம்முயற்சியில் ஈடுபடுவதற்கு அவர்கள் அளித்த ஊக்கமும் தூண்டுதலும் முக்கியமானவையாய் இருந்தன. அரேபியர் உருவாக்கிய பேரரசை அரபுப் பேரரசு என்பதைக் காட்டிலும் முஸ்லிம் பேரரசு என்பது பொருத்தமாயிருக்கும். அந்தப் பேரரசு தோற்றுவித்த ஒருமைப்பாட்டை இன ஒருமைப்பாடு என்பது பொருந்தாது. அது மத ஒருமைப்பாடு. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றும் நூற்றாண்டு வரையிலும் அரபு மொழியில் நூல்களை எழுதிய 'குறிப்பிடத்தக்க பதினறு நிலவியல் வல்லுநர்களுள் 'நால்வர் பாரசீக நாட்டிற் பிறந்தோர், இன்னும் நால்வர் பாக்தாது நகரிற் பிறந்தோர், வேறு நால்வர் ஸ்பெயினிற் பிறந்தோர் என்று தற்கால வரலாற்று ஆசிரியர் ஒருவர் எடுத்துக் காட்டுகிருர்.'[49]

அபுல் காசிம் ஔைபதுல்லா பின் அகமது என்பவர் மேலே சொன்ன ஆசிரியர்களுள் முதலில் இருந்தவர்களுள் ஒருவர் ஆவார். அவர் குர்தாத் பே என்னும் பாரசீகப் புரோகிதர் ஒருவருடைய பேரர். அதனுல், அவர் குர்தாத் பே என்னும் குடிப் பெயரையும் தம்முடைய பெயரோடு சேர்த்துக்கொண்டார். அந்தப் பெயரே அதிகமாக வழக்கிலிருந்த பெயராயிற்று.

**இபன் குர்தாத் பே**

புரோகிதரான குர்தாத் பேயும், ஏனைய பாரசீகர் பலரைப் போல, இஸ்லாம் மதத்தில் சேர்ந்துவிட்டார். அவருடைய பேரரான அபுல் காசிம் ஔைபதுல்லா பின் அகமது (இபன் குர்தாத் பே) அரசாங்கத்தில் உயர்ந்த நிர்வாகப் பதவி ஒன்றை வகித்தார். அதனுல், பேரரசின் பல்வேறு பகுதிகளைப் பற்றியும், ஏனைய நாடுகளோடு பேரரசு கொண்டிருந்த தொடர்புகளைப் பற்றியும் அதிகார பூர்வமான செய்திகள் பலவற்றைத் திரட்டுவதற்கு அவருக்கு வாய்ப்பு இருந்தது. 'வழிகளும் இராஜ்யங்களும்' என்னும் அவருடைய நூல் கி.பி. 844க்கும் 848க்கும் இடையில் எழுதப்பட்டது. ஆனல் அதனை அவர் தொடர்ந்து மாற்றிக்கொண்டேயிருந்தார். கி.பி. 885ஆம் ஆண்டிலும் அதனை அவர் திருத்தி எழுதிக் கொண்டிருந்தார் என்பதை அறிகிறோம்.[50] ஆனல், மசூதி சொல்வதைப் போல, அவர் எழுதிய முறை கவர்ச்சியற்றதாகவும் அவர் விளக்குகின்ற செய்திகள் முழுமையுறுமலும்

[49] Oakeshott—*op. cit.* pp. 48-9.

[50] Reinaud—*Aboulfeda* i. lvii-lviii; Ferrand—*Relations* pp. 21-2.

இருக்கின்றன. அவர் எப்போதாவது விவரமாக எழுதுகிறார் என்றால், அது அறிவுக்குப் பொருந்தாத விசித்திரக் கட்டுக் கதையாய் இருக்கிறது. ஆனால், கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியில் ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இருந்த தொடர்பைப் பற்றி அவர் எழுதியுள்ள குறிப்பு மிகவும் முக்கிய மானதாய் இருக்கிறது. அதனைக் கீழே தருகிறோம்.

'யூத' வணிகர்கள் பாரசீகம், ரோமன் (கிரீக்கும் லத்தீனும்), அரபு, பிரெஞ்சு, ஸ்பானிஷ், ஸ்லாவ் ஆகிய மொழிகளைப் பேசுகிறார்கள். அவர்கள் மேற்கிலிருந்து கிழக்கேயும், கிழக்கி லிருந்து மேற்கேயும் பயணஞ் செய்கிறார்கள். சில சமயங்களில் நிலவழியிலும் சில சமயங்களில் நீர்வழியிலும் அவர்கள் செல்கிறார்கள். மேலை நாடுகளிலிருந்து அவர்கள் அலிகளையும், அடிமைப் பெண்களையும், பையன்களையும், பட்டு, குறுமென் மயிர்த் தோல்கள், வாள்கள் முதலிய பொருள்களையும் கொண்டு போகிறார்கள். அவர்கள் மேலைக் கடலின் கரையிலுள்ள பிராங்குகளின் நாட்டிலிருந்து கப்பலேறி பரமாவுக்குச் செல்கிறார்கள். அங்கிருந்து அவர்கள் தங்களுடைய வாணிகப் பண்டங்களை விலங்குகளின் முதுகில் ஏற்றிக்கொண்டு, தரை வழியாக ஐந்து நாள் பயணஞ்செய்த பின்னர், 20 பரசங்குத் தொலைவிலுள்ள கோல்ஜோம் என்னும் ஊரை அடைகிறார்கள். அதன் பின்னர் அவர்கள் கீழைக்கடலில் (செங்கடலில்) கப்பலேறி, முதலில் ஹெட்ஜாஸ், ஜித்தா ஆகிய ஊர்களுக்கும் பின்பு சிந்து, இந்தியா, சீனா ஆகிய நாடுகளுக்கும் செல்கிறார்கள். திரும்பி வரும்போது அவர்கள் கஸ்தூரி, சோற்றுக் கற்றாழை, கருப்பூரம், இலவங்கம் முதலிய கீழை நாட்டுப் பண்டங்களைக் கொண்டு வருகிறார்கள். முதலில் கோல்ஜோம், பரமா ஆகிய ஊர்களுக்கும் பின்பு மேலைக்கடல் நாடுகளுக்கும் அவர்கள் செல்கிறார்கள். அவர்களுட் சிலர் கான்ஸ்டான்டி நோப்பிலுக்கும், சிலர் பிராங்குகளின் நாட்டிற்கும் சென்று தாம் கொண்டுவந்த கீழைநாட்டுப் பண்டங்களை விற்கின்றனர்.

'சில சமயங்களில் யூத வணிகர்கள், மேலைக் கடலில் கப்பலேறி (ஓரோன்டி நதியின் முகத்துவாரத்திலுள்ள) ஆண்டியோக் வரையிலும் செல்கிறார்கள். அங்கிருந்து மூன்று நாள் பயணத்திற்குப் பின்னர் அவர்கள் யூப்ரிட்டிஸ் நதியின் கரையை அடைந்து பாக்தாதுக்குச் செல்கிறார்கள். அங்கிருந்து அவர்கள் டைக்ரிஸ் நதி வழியாக ஓபோலாவுக்குச் சென்று மரக்கலம் ஏறி நீர்வழியாக ஓமான், சிந்து, இந்தியா, சீனா ஆகிய நாடுகளுக்குச்

செல்கிறார்கள். இவ்வாறு அவர்களுடைய பயணம் இடையீடின்றி நடந்தேறுகிறது.'[51]

பாரசீகவளைகுடாக் கரையில் உள்ள சிராப் என்னும் ஊரைச் சேர்ந்த அபு ஜைது ஹசன் பல நாடுகளிற் பயணஞ் செய்தவர் அல்லர். ஆனால், அவ்வாறு பயணம் செய்தவர் பலரைக் கண்டு பேசும் வாய்ப்பு அவருக்கு மிகுதியாய் இருந்தது.

**சுலைமான்**

அவர் கண்டு பேசியவர்களுள் புகழ்பெற்ற மசூதியும் ஒருவர். அந்தக் காலத்தில் சிராப் சுறுசுறுப்பாய் இயங்கிய ஒரு துறைமுகமாய் இருந்தது. அங்கே பல நாட்டு வணிகர்களும் அடிக்கடி வந்துபோனார்கள். இந்தியாவையும் சீனாவையும் பற்றி முன்னரே எழுதப்பட்டிருந்த ஒரு நூலிற் காணப்பட்ட செய்திகளோடு தம்முடைய சொந்த ஆராய்ச்சியாலும் கீழை நாடுகளுக்குச் சென்று வந்தவர்களுடன் கலந்து பேசியதாலும் கிடைத்த புதுச்செய்திகளைச் சேர்த்து எழுதுவதே தம்முடைய நோக்கம் என்று அபு ஜைது சொல்கிறார். கி.பி. 851இல் எழுதப்பட்ட அந்தப் பழைய நூலின் ஆசிரியர் சுலைமானே என்று சிலர் கருதுகின்றனர். ஆனால், அந்தக் கருத்துக்குப் போதுமான சான்று கிடைக்கவில்லை. கிடைத்திருக்கிற சான்றுகளை ஆராய்ந்த யூல் ஓர் எச்சரிக்கையான முடிவுக்கு வந்திருக்கிறார். அந்த முடிவைப் பெலியோவும் ஏற்றுக் கொள்கிறார். அபு ஜைது பதிப்பித்த நூல் பெயர் தெரியாத ஒருவர் தொகுத்துவைத்த குறிப்புக்களைக் கொண்டது ஆகும். 'அந்தக் குறிப்புக்களைத் தொகுத்தவர் குறைந்தது இரண்டு முறையேனும் கீழை நாடுகளுக்குச் சென்றவர் என்று சொல்லலாம். முதற்பயணத்திற்கும் இரண்டாம் பயணத்திற்கும் பதினாறு ஆண்டு இடைவெளி இருந்தது. அவ்வாறு அவர் பயணஞ் செய்தபோது தாம் பெற்ற அனுபவங்களையும் சீனாவுக்குச் சென்றுவந்த ஏனையோர் சொன்ன செய்திகளையும் தொகுத்துவைத்துள்ளார்.' இவ்வாறு பெலியோ கூறுகிறார்.[52] அபு ஜைது பதிப்பித்த நூலை ஆராய்ந்த யூல் 'அவருடைய தெளிவற்ற குறிப்புகளை நோக்கும்போது,' இந்தியாவைப் பற்றி அவர் அறிந்திருந்த செய்திகள் குறைவாகவும் திருத்தமற்றவையாகவும் இருந்தன என்பதையும் அந்த நாட்டின் பெரும் பரப்பை அவர் சரியாக அறியவில்லை என்பதையும் நாம் தெளிவாக உணர்கிறோம்' என்று கூறுகிறார். (XIX அ). அது எப்படியிருந்தாலும்

[51] JA. 6 : 5 (1865) pp. 512–14. Reinaud-*Aboulfeda* i. p. lvii.

[52] Yule, *Cathay*, i. p. 126. Pelliot in TP. 21 (1921) pp. 401-2. Reinaud himself had his own doubts on this subject in 1845, *Relation* pp. xiv-xv.

இந்தியாவிலும் இலங்கையிலும் பயணஞ் செய்தவரும் இந்தியாவைப் பற்றி எழுதுவதில் தனிக்கவனம் செலுத்த விரும்பியவரும் ஆகிய மசூதி அபு ஜைது பதிப்பித்த நூலிலிருந்து பல செய்திகளை எடுத்தாளுகிறார்.[53] பெயர் தெரியாத ஆசிரியர் எழுதிய நூலை அபு ஜைது ஐம்பதாண்டுகளுக்குப் பின்னர்ப் பதிப்பித்தார். அபு ஜைதுக்கும் மசூதிக்கும் முற்பட்ட இபன் அல் பக்கிஹ் (902) என்பவரும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் வாழ்ந்த ஓர் ஆசிரியரே.[54] அவ்வரும் பெயர் தெரியாத ஆசிரியர் எழுதிவைத்த குறிப்புகளுள் பலவற்றைத் தம்முடைய நூலில் எடுத்தாண்டுள்ளார். இவற்றையெல்லாம் நோக்கும்போது, அரபு ஆசிரியர்கள் ஒருவரையொருவர் பார்த்து எழுதுவது பொதுவான வழக்கமாய் இருந்தது என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். எனவே, அவர்கள் எழுதிவைத்துள்ள குறிப்புகள் அனைத்தையும் நாம் மீண்டும் எடுத்துரைப்பது பயனற்ற வேலையாகிவிடும்.

**அபு ஜைது**

தமக்கு முன்னர் இருந்த ஆசிரியர்கள் எழுதிவைத்த குறிப்புகளுடன் கவர்ச்சி மிக்க செய்திகள் பலவற்றை அபு ஜைது சேர்த்திருக்கிறார் XIX, ii. சுலைமான் சீனாவுக்கு ஒரு முறையோ பல முறையோ சென்று வந்த பின்னர் அங்கு நடைபெற்ற அரசியல் புரட்சியின் விளைவாய்த் தோன்றிய குழப்பத்தையும், அதனால் சீனாவுடன் நடைபெற்ற அரபு வாணிகம் தம் காலத்தில் முழுதும் நின்று போனதையும் அபு ஜைது எழுதி வைத்துள்ளார். அந்தக் குறிப்புகள் முழுதும் உண்மையா யிருக்கின்றன. எனவே அவர் திரட்டிய செய்திகள் உண்மையானவை என்பதை நாம் உணர்கிறோம்.

இதுவரையில் நாம் கண்ட அரபு ஆசிரியர்களே யன்றி, பத்தாம் நூற்றாண்டில் இன்னும் பல அரபு ஆசிரியர்களும், பயணிகளும், நிலவியல் வல்லுநர்களும் இருந்தார்கள்.[55] ஆனால் அவர்களுடைய நூல்களில் தென்னிந்தியாவைப் பற்றிய செய்திகள்

[53] *Aboulfeda*, i. p.lxv;

[54] Ferrand: *Relations* pp. 54–66, esp. 60–3.

[55] இபன் ராஸ்டே (903), அபு தலாப் மிஸார் முல்ஹல்வில் (940) இஷ்டக்ரி, (951) இபன் ஹாகல் (976) ஆகியோர் அவர்களுட் சிலர். சில்வெயின் லெவி குறிப்பிடுகிற இந்துமாக்கடல் மரபுக் கதைகளைத் தெரிந்து கொள்வதற்கு மிகவும் துணை புரிகின்ற நூல் புசுர்க் இபன் ஷாரியர் எழுதிய 'கிதாப் அஜாயபுல் ஹிந்த்' அல்லது 'இந்திய அற்புதங்களைப் பற்றிய புத்தகம்' என்பதாகும். இதற்கு இரண்டு பதிப்புகள் இருக்கின்றன. (Vide Bibliography).

மிக மிகக் குறைவாய் இருக்கின்றன. இருக்கிற செய்திகளும் உயர்வு நவிற்சியாகவும், கட்டுக் கதைகளாகவும் இருக்கின்றன. எடுத்துக் காட்டாக, மான்கீர் (மான்கெட்) கோயிலைப் பற்றி அபுல் பரஜ் எழுதியுள்ள குறிப்பைக் கூறலாம். (988).[56]

புகழ்பெற்ற ஆல்பருனி (சுமார் கி.பி. 1030) அறிவியல் துறைகள் அனைத்திலும் பயிற்சி யுடையவராய் இருந்தார். தத்துவம், கணிதம், காலக்கணிப்பு முறை, மருத்துவம் முதலிய எந்தத் துறையையும் அவர் விட்டுவைக்கவில்லை. அவருக்கு சமஸ்கிருதம் நன்முய்த் தெரியும். கிரேக்க மொழி மூல நூல்களையும் அவர் படித்தார் என்று அறிகிறோம்.[57] அவர் இந்தியாவில் பல ஆண்டு வசித்தார்; கஜினி மாமூதுக்கும் அவனுடைய மகன் மசூதுக்கும் அவர் நண்பர். அவிசென்னுவோடு அவர் கடிதப் போக்குவரவு வைத்திருந்தார். அவர் கி.பி. 1048இல் கஜினியில் இறந்தார். இந்தியாவைப் பற்றி அவர் எழுதிய பெருநூலில் இந்தியாவின் சமயம், தத்துவம், இலக்கியம், வானூல், சோதிடம், சட்டம், பழக்கவழக்கங்கள் முதலிய எத்தனையோ செய்திகள் இருக்கின்றன. இராமனைப் பற்றிய புராணக் கதைகள் மக்கள் மனத்தை எவ்வாறு பற்றிக்கொண்டிருந்தன என்பதையும் அந்தக் கதைகளில் ஆல்பருனிக்கு எத்தகைய ஈடுபாடு இருந்தது என்பதையும் கிஷ்கிந்தைப் பற்றி அவர் எழுதியுள்ள கவர்ச்சி மிக்க கதையின் மூலம் நாம் உணர்கிறோம். (XX).

**ஆல்பருனி**

இப்போது நாம் சீனுவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இருந்த தொடர்புகளை மீண்டும் கவனிப்போம். ஒன்பதாம் நூற்றுண்டின் பிற்பாதியில் சீனுவில் ஏற்பட்ட அரசியல் குழப்பத்தின் விளைவாக மேலைநாடுகளோடு நடைபெற்ற வாணிகத்திற்குத் தடை ஏற்பட்டது என்று அபு ஜைது எழுதிவைத்துள்ள குறிப்பை நாம் முன்னர்க் கண்டோம். கான்டனிலும், சுவான் சூவிலும் வசித்துவந்த வெளிநாட்டினர் மலேயாத் தீபகற்பத்தின் மேற் கரையிலுள்ள காலாவிலும் சுமாத்ராவிலுள்ள பாலம்பாங்கிலும் அடைக்கலம் புகுந்தனர்.

சிறிது காலத்திற்கு வெளிநாட்டுக் கப்பல்கள் காலாவைத் தாண்டிச் செல்லவில்லை. அவற்றைச் சீன மரக்கலங்கள் காலாவில் சந்தித்தன. இந்த நிலை குறைந்தது பத்தாம் நூற்றுண்டின்

[56] Ferrand: *Relations* pp. 119-20.

[57] Reinaud, *Aboulfeda* i. p. xcv.

தொடக்கம் வரையிலேனும் நீடித்திருந்தது என்று கூறலாம். அதாவது, மருதி அந்த இடத்திற்குப் போகும் வரையிலும் அந்த நிலை தொடர்ந்தது.[58] அதற்குப் பின்னர் நடைபெற்ற நிகழ்ச்சிகளை சுங் ஆண்டுநிகழ்ச்சிப் பதிவேடுகள் பின்வருமாறு விவரிக்கின்றன.

மறுமலர்ச்சி

'கை-பவோ' நான்காம் ஆண்டில் (கி.பி. 971) கான்டனில் வாணிகக் கப்பல் அலுவலகம் ஒன்று திறக்கப்பட்டது. அதன் பின் அத்தகைய அலுவலகங்கள் ஹாங் சூவிலும் (அதாவது, நிங்-போவிலும்) திறக்கப்பட்டன. தா-ஷிஹ் வணிகர்களும் (அரேபிய வணிகர்களும்), கு-லோ (காலா) ஷெபோ (ஜாவா) சான் செங் (அன்னும்) போனி (போர்னியோ) மாயி (பிலிப்பைன் தீவுகள்) சான்-போட்சி (சுமத்ராவில் பாலம்பாங்) ஆகிய இடங்களிலிருந்து வந்த வெளிநாட்டு வணிகர்களும் தாம் கொண்டுவந்த நறுஞ்சுவை மண மருந்துப் பொருள்கள், காண்டாமிருகக் கொம்பு, யானைத் தந்தம், பவழம், அம்பர், முத்து, எஃகு, கடலாமையோடு, ஆமையோடு, கார்னிலியன் என்னும் மணிக்கல், படிகக் கல், துணிகள், கருங்காலி மரம், சம்பங்கிமரச் சாயம் முதலிய பண்டங்களைக் கொடுத்துவிட்டுத் தங்கம், வெள்ளி, ஈயம், வெள்ளீயம், பலவண்ணப் பட்டு, பீங்கான் பொருள்கள் முதலியவற்றை வாங்கிக்கொண்டு போனார்கள். பேரரசர் டை-ட்சு ஆட்சி செய்துகொண்டிருந்த காலத்தில் (கி.பி. 960-976) வெளிநாட்டார் கான்டன், கியாவோசிஹ் (டோன்கின்) லியாங் சே, சூவன் சூ (ஜைட்டன்) முதலிய இடங்களுக்குக் கொண்டு வந்த நறுஞ்சுவை மண மருந்துப் பொருள்களையும் ஏனைய விலை மதிப்புடைய பண்டங்களையும் அரசினர் கிடங்குகளில் ஒப்படைக்க வேண்டும் என்றும், முத்து, ஆமையோடு, காண்டாமிருகக் கொம்பு, யானைத்தந்தம், எஃகு, கடலாமையோடு, அம்பர், கார்னிலியன், குங்கிலியம் முதலிய பொருள்களை அரசாங்கச் சந்தைகளில் விற்பனை செய்யவேண்டுமே யன்றித் தனியார் விற்கவோ வாங்கவோ கூடாது என்றும் ஆணை பிறப்பிக்கப் பட்டது. மேலே சொன்ன பண்டங்களைத் தவிர ஏனைய பண்டங்களைத் தனியார் தம் விருப்பம்போல விற்கவும் வாங்கவும் செய்யலாம்.[59]

இவ்வாறு சீன அரசு வெளிநாட்டு வாணிகத்தைப் பொதுவாக ஒழுங்குபடுத்தியதுடன், வெளிநாட்டினருடன் நடைபெற்ற

[58] Hirth and Rockhill, *op. cit.*, p. 18,

[59] TP. xv p. 420, *n.* 1.

சுகபோகப் பொருள் வாணிகம் முழுவதையும் தன்னுடைய தனியுரிமையாய் வைத்துக்கொண்டது. வெளிநாட்டு வாணிகத்தை மேலும் பெருக்கவேண்டும் என்னும் நோக்கத்துடன் சீன அரசு வணிகக் குழு ஒன்றனை வெளிநாடுகளுக்கு அனுப்பியது. அக்குழுவினர் வெளிநாடுகளில் சந்தித்த வணிகர்களுக்குச் சிறப்புச் சலுகைகளை வழங்கினர். அதன் விளைவாக, சீன வெளிநாட்டு வாணிகம் மேலும் பெருகிற்று. இந்தப் புது வாணிக இயக்கம் தெற்கு சுங் மரபினர் ஆட்சிக் காலத்தில், அதாவது பதினொன்று பன்னிரண்டாம் நூற்றாண்டுகளில், தன்னுடைய உச்ச வளர்ச்சியைப் பெற்றது. நாளடைவில் சுகபோகப் பொருள்களில் கள்ள வாணிகம் தலைதூக்கி வளர்ந்தது. அதனால் ஏராளமான தங்க வெள்ளி நாணயங்கள் சீனுவிலிருந்து வெளியேறின. அதைக் கண்ட சீன அரசு கவலை கொள்ளத்தொடங்கியது.[60]

**கொரியா தரும் சான்று**

காஸ்பர் கொரியா என்னும் போர்ச்சுகீசியப் பயணி கி.பி. 1512இல் இந்தியாவுக்கு வந்து, அங்கேயே 1563இல் இறந்து போனார். வேறு சில செய்திகளை எழுதிக் கொண்டிருந்தபோது இடையில் அவர் எழுதி வைத்துள்ள ஒரு செய்தி பதினொன்றும் நூற்றாண்டின் இறுதியிலும் பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் சீனுவுக்கும் தென்னிந்தியாவுக்கும் நடைபெற்ற வாணிகத்தைக் குறிப்பிடுகிறது. அந்த வாணிகத்தில் பார்மோசாவுக்கும் ஒரு பங்கு இருந்தது என்பதைக் கொரியாவின் கூற்றின் மூலம் நாம் உய்த்துணரலாம். அவருடைய கூற்றைக் கூழே தருகிறோம்.

'போர்ச்சுகீசியக் கப்பல்கள் (கி.பி. 1498இல் கோழிக்கோட்டுக்கு) வருவதற்கு நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னர் மலாக்கா, சீனு, லெக்வியாஸ் (பார்மோசா) ஆகிய நாடுகளிலிருந்து எண்ணூறுக்கும் அதிகமான மரக்கலங்கள் கோழிக்கோட்டுக்கு வந்தன. அவற்றுள் பெரிய கப்பல்களும் இருந்தன, சிறிய கப்பல்களும் இருந்தன. அவற்றைச் செலுத்திய மாலுமிகள் பல்வேறு நாடுகளைச் சேர்ந்தவர்களாய் இருந்தார்கள். அவற்றில் விற்பனைக்கு வந்த பண்டங்கள் விலையுயர்ந்தவை. கோழிக்கோட்டை அடைந்தபின் அந்தக் கலங்கள் இந்தியாவின் மேற்குக் கரை முழுவதையும் கடந்து காம்பேயை அடைந்தன, அவற்றின் எண்ணிக்கை மிகப் பெரிதாய் இருந்ததால் அவை நாடு முழுவதும் பரவிகின்றன.'[61]

[60] See Rockhill in TP. xv, pp. 419-21.

[61] Cited by Ferrand JA: 11:12 (1918), p. 131.

அரேபிய வணிகர்கள் தங்கள் கலங்களைச் செலுத்திச் சென்ற வழியைப் பற்றிச் சூ-கூ-பீ கி.பி. 1178ஆம் ஆண்டில் பின்வரும் குறிப்பினை எழுதிவைத்துள்ளார்.

**சூ-கூ-பீ**

அது சுருக்கமாய் இருந்தாலும் நமக்கு மிகவும் பயன் தருவதாய் இருக்கிறது. 'தஷீயிலிருந்து வருகின்ற வணிகர்கள் குலின் (கொல்லம்) வரையிலும் சிறு கலங்களில் வருகிறார்கள். குலினில் அவர்கள் பெரிய கலங்களில் ஏறி, கிழக்கு முகமாய்ப் பயணஞ் செய்து, சன்போட்சியை (பாலம்பாங்கை) அடைகிறார்கள். அதன் பின்னர் அவர்கள் பாலம்பாங் கலங்கள் பயணஞ் செய்கிற வழியையே பின்பற்றிச் சீனாவை அடைகிறார்கள்.'[62]

சீனாவோடு வாணிகம் செய்த நாடுகளைக் குறிப்பிடும்போது சூ-கூ-பீ. பின்வருமாறு எழுதிவைத்துள்ளார். 'விலையுயர்ந்த பலவகைப்பட்ட பண்டங்களை விற்பனைக்கு

**சோழத் தூதுக் குழுக்கள்**

எடுத்துவருகின்ற செல்வச் செழிப்புடைய வெளி நாடுகளுக்குள் அரேபியர்களுடைய நாடான தஷீ முதல் இடத்தை வகிக்கிறது; அதற்கு அடுத்த படியில் இருப்பது ஷேபோ (ஜாவா) ஆகும்; சான் போட்சி (பாலம்பாங்) மூன்றாம் இடத்தை வகிக்கிறது; அடுத்த படிகளில் இன்னும் பல நாடுகள் இருக்கின்றன.'[63] மேலே சொன்ன நாடுகளுள் தென்னிந்தியா இடம் பெறவில்லை என்பதை நாம் அறிகிறோம். ஆனால் சூ-கூ-பியின் வேறொரு குறிப்பு கொல்லத்திலிருந்து சென்ற அரபுக் கலங்கள் அல்லாத வேறு கலங்களைப் பற்றிய செய்தியை எடுத்துரைக்கிறது.[64] அந்தக் காலத்தில் கொல்லமே இந்தியாவின் முக்கியத் துறைமுகம் என்பதை நாம் அறிவோம். மேலும், அந்தக் காலத்தில் பெருங் கடல்மீது கப்பலோட்டியவர்களுள் அரேபிய மாலுமிகளே மிகவும் சுறுசுறுப்பாய் இயங்கியவர்கள் என்பதையும், அவர்கள் தென்னிந்தியப் பண்டங்களைப் பல்வேறு நாடுகளுக்கும் தங்களுடைய கலங்களில் ஏற்றிச் சென்றார்கள் என்பதையும், அவ்வாறு அரேபியக் கப்பல்களில் வந்திறங்கிய பொருள்களைச் சீனர்கள் அரேபிய நாட்டுப் பொருள்கள் என்றே பொதுவாய்க் கருதினார்கள் என்பதையும் கருத்திற் கொண்டால், சூ-கூ-பீ தென்னிந்தியாவைக் குறிப்பிடாதது அவ்வளவு பெரிய குறை யாக நமக்குத் தோன்றாது. அதுவெப்படியிருந்தாலும் சீனர்கள்

[62] Hirth and Rockhill, *Chau Ju-Kua*, p. 24.

[63] *Ibid.*, p. 23.

[64] *Ibid.*, p. 23, *n.* 2.

வெளிநாட்டு வாணிகத்தை மீண்டும் வளர்ப்பதற்கான முயற்சிகளைப் பத்தாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தொடங்கிய நேரத்தில்தான் தமிழர்களுடைய மிகப் பெரிய பேரரசாகிய சோழப் பேரரசும் தொடங்கியது. அந்தக் காலந்தான் முதலாம் இராஜராஜனும் அவனுடைய புகழ்பெற்ற சந்ததியார்களும் ஆட்சி செய்த காலம். அந்தப் பேரரசின் கடலாதிக்கம் எந்த வகையிலும் குறைந்ததன்று. அந்தக் காலத்துச் சோழ ராஜ்யத்திலிருந்து சீனவுக்குச் சென்ற தூதுக் குழுக்களைப் பற்றிய செய்திகளைச் சீன ஏடுகளிற் காண்கிறோம். அத்தகைய தூதுக் குழுக்களுள் முதற் குழு கி.பி. 1015இல் சீனவை அடைந்தது. அந்தச் குழுவைப் பற்றிய முழு விவரங்களையும் சுங்-ஷி, மா ட்வான்-லின் ஆகியவர்களுடைய குறிப்புகளில் நாம் காண்கிறோம். அவை இந்நூலின் பிறிதோரிடத்தில் தரப்பட்டுள்ளன. (Notes to XXIII ஈ) அந்தத் தூதுக் குழுவினர் சோணுட்டிலிருந்து சீனவுக்குச் செல்வதற்கு மூன்றுண்டுகள் ஆயின. அனல் அவர்கள் உண்மையில் 247 நாட்களே கடல்மீது பயணஞ் செய்தார்கள். அவர்கள் தங்களுடைய அரசன் பெயர் லோட்சா-லோட்சா (ராஜராஜன்) என்று சொன்னர்கள். ராஜராஜன் சீனப் பேரரசருக்குப் பல பரிசுகளை அனுப்பியிருந்தான். தூதர்கள் தங்கள் சார்பிலும் சில பரிசுகளைத் தந்தார்கள். ஷி-லோ-லோ சா-யின்-டோ-லோ-சுலோ (ஸ்ரீ ராஜேந்திர சோழன்) அனுப்பிய தூதுக்குழு ஒன்று கி.பி. 1033ஆம் ஆண்டில் சீனவை யடைந்தது. இன்னும் ஒரு தூதுக் குழு 1077ஆம் ஆண்டில் சீனவை யடைந்தது. அதனை அனுப்பிய சோழ அரசன் டி-ஹூவா-கியா-லோ என்பவன். இந்தப் பெயர் யாரைக் குறிக்கிறது என்பது தெரியவில்லை.[65]

**சோழ அரச குமாரனைப் பற்றிய மான் ஆவணம்**

நமது கவனத்திலிருக்கும் காலத்தில் சோழப் பேரரசுக்கும் வெளிநாடுகளுக்கும் இருந்த தொடர்புகளைப் பற்றி ஒரு விசித்திரமான சான்று கிடைத்திருக்கிறது. க்யான்சித்தா (கி.பி. 1084—1112) என்ற மான் அரசன் ஆட்சிசெய்துகொண்டிருந்த காலத்தைச் சேர்ந்த பொறிப்பு ஒன்று ப்ரோமில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. சோழ அரசகுமாரன் ஒருவன் புத்த மதத்தைத் தழுவினன் என்றும் அதன்பின் அவன் தன்னுடைய மகளை மான் அரசனுக்குத் திருமணம் செய்துவைத்தான் என்றும் அந்தப் பொறிப்பு எடுத்

[65] See Hirth and Rockhill, *op. cit.*, pp. 101-2 and *The Colas* for further details of these embassies.

துரைக்கின்றது. இந்தச் செய்தி மறைபுதிரான செய்தியாய் இருக்கிறது. அந்த அரசகுமாரன் யாவன் என்பது நமக்குத் தெரியவில்லை. (XXI)

**எட்ரிசி**

எட்ரிசி என்ற புகழ் பெற்ற நிலவியல் வல்லுநர் தம்முடைய நூலை சிசிலி அரசனுன இரண்டாம் ரோஜருடைய ஆதரவில் எழுதி, அதனை 1153—4ஆம் ஆண்டில் முடித்தார். இந்தியாவைப் பற்றி அவர் எழுதிய செய்திகள் அனைத்துமே தமக்குமுன் வாழ்ந்த இபன் குர்தாத்பே, இபன் ஹாகல் போன்றவர்களுடைய குறிப்புகளிலிருந்து திரட்டப்பட்டவையாகும். இந்தியா உட்பட்ட தென்னுசியாவைப் பற்றி எட்ரிசி எழுதிவைத்துள்ள செய்திகள் விவரமாய் இல்லை யென்பது மட்டுமன்றிக் குழப்பம் விளைவிப்பவை யாகவும் இருக்கின்றன என்று யூல் கூறுகிருர்.[66] ஊர்களுக்கிடையில் உள்ள தூரங்களைக் குறிப்பதாகக் கூறிக்கொள்ளும் எட்ரிசி, பொதுவாக, அவற்றை மிகக் குறைத்து மதிப்பிடுகிருர் என்றும், அந்தத் தூரங்களின் அடிப்படையில் ஆசியாவின் படத்தை வரைந்தால் அக்கண்டம் மிகமிகச் சிறியதாய் இருக்கும் என்றும் யூல் கூறுகிருர்.

**டியூடலாவைச் சேர்ந்த பெஞ்சமின்**

எட்ரிசிக்குப் பின் ஒருசில ஆண்டுகளே சென்ற பிறகு ஸ்பெயின் நாட்டு டியூடலாவைச் சேர்ந்த பெஞ்சமின் என்னும் யூதப் பயணி இந்தியாவுக்கு வந்தார். அவர் கொல்லத்தைப் பற்றியும் தென்னிந்தியாவைப் பற்றியும் கவர்ச்சி மிக்க குறிப்புகள் சிலவற்றை எழுதி வைத்துள்ளார் (XXII). ஆனுல், அவர் பாரசீக வளைகுடாவிலுள்ள கிஷ் என்னும் தீவுக்குக் கிழக்கே வந்தாரா என்பதே ஐயத்திற்கு இடமானது என்றும், அவர் இந்தியாவைப் பற்றி எழுதியுள்ள குறிப்புகள் எல்லாம் பிறர் வாயிலாய்க் கேட்ட செய்திகள் போலவே தோன்றுகின்றன என்றும் யூல் கருதுகின்ருர்.[67]

**சௌ ஜு-குவா**

இடைக்காலத் தென்னிந்தியாவிலிருந்த ராஜ்யங்களைப் பற்றி மிக முக்கியமான செய்திகள் சிலவற்றை சௌ ஜு-குவா எழுதி வைத்துள்ளார் (XXIII). அவர்சீன வெளிநாட்டு வாணிக ஆய்வாளராய் இருந்தவர். சுமார் கி.பி. 1225ஆம் ஆண்டில் அவர் சு-பான்-சி என்னும்

[66] *Cathay* i, p. 141. Extracts relating to India may be read conveniently in Elliot and Dowson i· pp. 75-93.

[67] *Cathay* i, pp. 144-5.

நூலைத் தொகுத்தார்.[68] அந்த நூலின் பதிப்பாசிரியர்கள் சௌ ஜு-குவாவைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறுர்கள். 'அவர் எழுதியுள்ள குறிப்புகளில் பிறர் வாயிலாய்க் கேட்ட செய்திகள் ஓரளவு இடம் பெறுகின்றன என்பது உண்மையே. எனினும் தாமாகவே தெரிந்து கொண்ட செய்திகள் பல அந்தக் குறிப்புகளில் இருக்கின்றன என்பதையும் அவை நமது கவனத்தை மிகவும் கவரத்தக்கவையாய் இருக்கின்றன என்பதையும் நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். அவருடைய நூலில் நாம் காணும் செய்திகளுள் எளிமையும் உண்மையும் பொருந்திய செய்திகளின் விழுக்காடு உயர்வாய் இருக்கிறது. அவர் காலத்தில் ஏனைய கீழைநாட்டு ஆசிரியர்கள் எழுதி வைத்துள்ள குறிப்புகள் இயல்பாக நிகழக்கூடாதவை யாகவும், நம்புதற்கரியவை யாகவும், கட்டுக்கதைக் கலப்பு உடையவை யாகவும் இருக்கின்றன. அதனுல் இடைக்கால இனப்பரப்பு விளக்க இயலைப் பற்றி எழுதிய ஆசிரியர்களுள் சௌ ஜு-குவா முக்கியமான இடத்தை வகிக்கிறுர். அவர் மார்க்க போலோவுக்கு ஒரு நூற்றுண்டுக்கு முன் வாழ்ந்தவர். அதனுல் அவருடைய காலம் நமது கவனத்தைச் சிறப்பாய்க் கவர்கிற காலமாய் இருக்கிறது. ஒன்பது—பத்தாம் நூற்றுண்டுகளைச் சேர்ந்த அரபு ஆசிரியர்கள் காலத்திலிருந்து மார்க்க போலோவின் காலம் வரையிலும் சீனுவின் வெளிநாட்டுத் தொடர்புகளை அறிந்துகொள்ள விரும்பும் நம் போன்றவர்களுக்கு சௌஜு-குவாவின் குறிப்புகள் அந்தத் தொடர்புகளின் வரலாற்றிலுள்ள இடைவெளி ஒன்றை நிரப்புவதற்கு உதவுகின்றன.'[69]

விரைவிலேயே சீனுவில் சுங் மரபினரின் ஆட்சி அழிந்து போயிற்று. மங்கோலியர் சீனுவைக் கைப்பற்றிக் கொண்டனர். மங்குகான் என்பவன் கி.பி. 1251இல் பெருங்கான் ஆகிவிட்டான்.

**மங்கோலியப் பேரரசு**

அவன் தன்னுடைய தம்பி குப்ளாகானைச் சீனுவின் கவர்னர் ஜெனரலாக நியமித்தான், குப்ளாகான் போரில் திறமையும் சுறுசுறுப்பும் உடையவனுய் இருந்தது மட்டுமன்றி அரசியலிலும் நிர்வாகத்திலும் வல்லுநனுகவும் இருந்தான். எனவே, அவன் சுங் பேரரசின் எல்லைக்குள் இருந்த நிலப் பகுதிகளை ஒவ்வொன்ருக வென்று, உறுதியாக முன்னேறி, இறுதியில் அப்பேரரசு முழுவதையும் தன் அதிகாரத்திற்குள் கொண்டு வந்தான். கி.பி. 1259ஆம் ஆண்டில் மங்கு இறந்த பின்னர்க்

[68] TP. xiii (1912) p. 449.

[69] p. 66.

குப்ளாகான் கி.பி. 1260ஆம் ஆண்டில் பெருங்கான் ஆனான். அந்த ஆண்டிலிருந்து அவன் கி.பி. 1294ஆம் ஆண்டில் இறந்து போகும்வரையில், உலகத்திலேயே மிகப் புகழ்பெற்ற பேரரசனாய் இருந்தான். மங்கோலிய ஆட்சியில், சீனா முன் எப்போதும் இல்லாத அளவில் வெளி நாடுகளுடன் தொடர்பு கொள்ளுவதற்கு வாய்ப்புப் பெற்றது. மேலும், குப்ளா கானுடைய புகழ் உலகின் பல்வேறு பாகங்களிலும் பரவியதால் அவனுடைய அவைக்குப் பல வேறு நாடுகளிலிருந்தும் பலவகைப் பட்ட மக்கள் வந்தார்கள். அறிஞர்களும், கலைஞர்களும், வணிகர்களும், அரசுத் தூதர்களும், இசை வல்லுநர்களும், செப்படி வித்தைக்காரர்களும், மதப் பிரசாரகர்களும் சீனாவுக்கு வந்து குவிந்தார்கள். குப்ளாகான் சீனாவிலேயே பல்லாண்டு வாழ்ந்ததால், அவனுடைய பழக்கவழக்கங்களும், மனப்பாங்கும், பொது நோக்கும் சீனர்களுடைய வாழ்க்கை முறையை ஒட்டி மாறிவிட்டன. அவன் காலத்தில் நல்ல சாலைகளும், விரைவும் திறனும் உடைய அஞ்சல் அமைப்பும் இருந்ததால் மங்கோலியப் பேரரசின் எல்லைக்குள் இருந்த பரந்த பகுதிகளுக்குள் போக்கு வரவும் செய்தித் தொடர்பும் மிகச் சிறந்த முறையில் நடை பெற்றன. ஜைட்டன் துறைமுகம் (சூவன்-சூ) உச்ச நிலையில் இருந்தபோது, அது அலக்சாண்ட்ரியாத் துறைமுகத்தைக் காட்டிலும் மிகச்சிறந்ததாய் இருந்தது என்று மார்க்கபோலோ எழுதிவைத்துள்ளார். அந்தக் காலத்தில் சீனச் செல்வாக்கு மலேயாத் தீவுக் கூட்டத்தில் வேகமாய்ப் பரவியது. இந்தியா விலும் ஓரளவு அந்தச் செல்வாக்குப் பரவியது. கி.பி. 1266ஆம் ஆண்டில் இலங்கை அரசனுடைய சேனையில் சீனப் போர்வீரர் களும் இருந்தார்கள் என்பதை நாம் அறிகிறோம்.[70] அதுபோலவே இந்தியாவின் மேற்குக் கடற்கரையிலிருந்த துறைமுகங்களில் ஏராளமான சீனர்கள் இருந்தார்கள் என்று அங்கு வந்த பயணிகள் எழுதிவைத்துள்ளார்கள்.[71]

[70] Yule, *Cathay*, i. p. 75.

[71] சீனாவிலிருந்து ஆசியாவைக் கடந்து தரைவழியாகவே மேலை நாடுகளுக்குச் சென்ற பயணிகளும் இந்தியாவைப்பற்றிய செய்திகளைத் தெரிந்துகொள்வதில் ஆர்வமுடையவர்களாய் இருந்தார்கள். மங்கு கானுக்குப் பரிசாக எட்டுச் சிறுத்தைப் புலிகளையும் பத்து வேட்டை நாய்களையும் கொண்டுசென்ற இந்திய சுல்தான் ஒருவனுடைய தூதனைக் கண்டதாக ருப்ரக்கைச் சேர்ந்த வில்லியம் என்னும் மடத்துறவி சுமார் 1254இல் எழுதிவைத்துள்ளார். அந்த நாய்கள் சிறுத்தைப் புலிகள் அமர்வதைப் போலக் குதிரைமீது அமர்வதற்குப் பயிற்சி பெற்றவையாம்! (Rockhill, *The Journey of Friar William of Rubruck*, p. 248). சாங்டே என்பவர் கி.பி. 1259இல் இந்தியாவைப்பற்றிப் பின்வருமாறு எழுதிவைத்துள்ளார்:

**குப்ளாகான் விடுத்த தூதுகள்**

குப்ளாகானின் துடிப்பும், தற்பெருமையும், புதுச் செய்திகளைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்னும் ஆர்வமும், அந்த நேரத்தில் பாண்டிய நாட்டிற் காணப்பட்ட அமைதியும் உறுதியும் அற்ற அரசியல் நிலையும் சேர்ந்து, சீனவுக்கும் தென்னிந்திய ராஜ்யங்களுக்கும் இடையில் தூதுக் குழுக்கள் பல சென்று வருவதற்குச் காரணமாயின. இந்தச் சுறுசுறுப்பான தொடர்புகள் கி.பி. 1279ஆம் ஆண்டுக்கும் கி.பி. 1292ஆம் ஆண்டுக்கும் இடையில் நிகழ்ந்தன. அந்தத் தூதுக் குழுக்களைப் பற்றிய செய்திகளை ராக்ஹில் என்பவர் மணிச்சுருக்கமாக எடுத்துரைக்கிறார். அவருடைய கூற்றுகளுக்கு ஆதாரமாக யூவன் ஷிஹ் என்னும் சீன ஆண்டுநிகழ்ச்சிப் பதிவேட்டிலிருந்து மேற்கோள்கள் பலவற்றை அவர் எடுத்தாள்கிறார் (XXIV). இலங்கையிலிருந்த புத்தருடைய திருச்சின்னங்களைக் காணவேண்டும் என்னும் விருப்பம் தூதுக் குழுக்கள் பலவற்றுக்குத் தூண்டுதலாகவும் அவற்றின் தெளிவான நோக்கமாகவும் இருந்தது.

---

'பிண்டு (இந்துஸ்தான்) என்னும் நாடுதான் சீனவுக்கு மிகவும் அண்மையில் உள்ள நாடு. அந்நாட்டில் 120 லட்சம் குடும்பங்கள் இருக்கின்றன. அங்குப் புகழ்பெற்ற மருந்துகளும், பெரிய வாதுமை மரங்களும், இரத்தினக் கற்களும், இலவங்கமும், உயர்தர எஃகும், இன்னும் பல பொருள்களும் இருக்கின்றன. அரசனுடைய அரண்மனை முகப்பில் பெரிய மணிகள் கட்டப்பட்டுள்ளன. குடிமக்களுள் யாருக்கேனும் யாதேனும் குறையிருந்தால் அந்த மணியை அடிப்பர். அவர்களுடைய பெயர்களும் வழக்குகளும் பதிவு செய்யப்பட்டு, வழக்குகள் விசாரிக்கப்பட்டு, நீதி வழங்கப்படும். அங்குள்ள வீடுகளின் கூரைகள் புல் வேயப்பட்டவை. வேனிற் காலத்தில் அங்குக் கடுமையான வெயில் அடிப்பதால், மக்கள் எப்போதும் நீரில் படுத்துக் கிடப்பார்கள்.' (Bretschneider, *Med. Res.* i. p. 146). அதே ஆசிரியர் மேலும் எழுதியுள்ள குறிப்புகள் இங்குத் தரப்படுகின்றன: 'வைரக்கல் பிண்டு நாட்டிலிருந்து வருகிறது. மக்கள் இறைச்சித் துண்டுகளை மலைகளுக்கு இடையிலுள்ள பள்ளத்தாக்குகளில் போட்டு விடுகிறார்கள். அவற்றைத் தின்பதற்குப் பறவைகள் வருகின்றன. அதன்பின் அவை எச்சமிட்டால் அதில் வைரக் கற்கள் கிடைக்கின்றன.' (*ib.* pp. 151-2.) ஆராய்ச்சி மணியைப்பற்றிய செய்தியும் வைரம் எடுக்கும் முறையைப் பற்றிய செய்தியும் பழைய கட்டுக் கதைகள் என்று கருதலாம். சித்தியாவில் செவ்வந்திக் கற்களைத் திரட்டும் முறையைப் பற்றி எபிபானியஸ் (கி.பி. 403இல் இறந்து போனவர்) இவ்வாறுதான் எழுதி வைத்துள்ளார் என்றும், அதனை அடிப்படையாகக்கொண்ட கட்டுக் கதைதான் சாங்டே எழுதியுள்ள வைரக்கற் கதை என்றும் மேஜர் கூறுகிறார். (*India in the Fifteenth Century*, p. xiii). ஆனால், சாங்டே எழுதியுள்ள செய்திகள் இரண்டும் தென்னிந்திய மக்களுக்கு நன்கு தெரிந்தவை. மனுநீதிகண்ட சோழனுடைய ஆராய்ச்சி மணியை ஒரு பசு அடித்து நீதி பெறவில்லையா? கோல்கொண்டாவில் வைரக் கற்களைத் திரட்டிய முறையும் தென்னாட்டினர் அறிந்த ஒன்றுதான்.

**பாண்டிய நாட்டு அரசியல்**

கி.பி. 1281ஆம் ஆண்டில் குப்ளாகானுடைய தூதனுக்குப் பாண்டிய மன்னன் ஒருவன் இரகசியச் செய்தி யொன்றை அனுப்பினான். மா'பார் நாட்டை ஆள்வதற்கு அவனே சட்டப் படி உரிமை பெற்ற அரசன் என்று சொல்லப் படுகிறான். அவன் குலசேகரனாகத்தான் இருக்க வேண்டும். ஷிராசில் வாழ்ந்த முஸ்லிம் வரலாற்று சிரியரான வசப் அவனைக் காலஸ் தெவார் என்று குறிப்பிடுகிறார். அவனைப் பற்றி வசப் பின் வருமாறு எழுதுகிறார். "மா'பார் மன்னனான காலஸ் தெவார் நாற்பதாண்டுக்கு மேல் மிக வளமான வாழ்வு வாழ்ந்தான். அந்த நீண்ட காலத்தில் அவனுடைய நாட்டின்மீது வெளியார் யாரும் படையெடுத்து வரவும் இல்லை; அவனும் நோய் நொடியென்று படுக்கையில் கிடக்கவும் இல்லை. அவனுடைய கருவூலத்தில் செல்வம் நிரம்பி வழிந்தது. மர்தி (மதுரை) நகரிலிருந்த அவனுடைய கருவூலத்தில் 1200 கோடி பொன் இருந்தது. ஒவ்வொரு கோடியும் ஆயிர லட்சத்துக்கும், ஒவ்வொரு லட்சமும் நூறாயிரந் தினாருக்கும் சமம். அன்றியும் அவனிடம் ஏராளமான மணிக் கற்களும் இருந்தன. அவற்றுள் பவழம், முத்து, மாணிக்கம், மரகதம், நீலரத்தினம் முதலியவை இருந்தன. அவற்றை யெல்லாம் விவரிப்பதற்கு ஏற்ற சொற்களே இல்லை யென்று சொல்லலாம். (செல்வ நிலையாமை போன்ற உலகியலைப் பற்றிய நீண்டதொரு கருத்துரை இங்கு இடம் பெறுகிறது.)

"இத்தகைய நற்பேறும் மகிழ்ச்சியும் பெற்ற அரசனுக்கு இரண்டு ஆண்மக்கள் இருந்தார்கள். மூத்தவன் பெயர் சுந்தர்ப்பாண்டி என்பது. அவன் காலஸ் தெவார் சட்டப்படி மணந்து கொண்ட மனைவிக்குப் பிறந்தவன். மற்றவன் பெயர் தீரபாண்டி என்பதாகும். அவன் காலஸ் தெவாரின் வைப்பாட்டி களுள் ஒருத்தியின் மகன். அவள் காலஸ் தெவாரின் இடை யீடில்லா இன்பத்துக்குக் காரணமாய் இருந்தவள். அரசனுடைய நிர்வாக அலுவல்கள் முடிந்து, அரசவையின் கூட்டம் கலைந்த பின்னர், அவனுடைய அந்தப்புரத்தில் ஆயிரம் அழகிய கணிகையர் சூழ்ந்து அவனை மகிழ்விப்பது அந்த நாட்டு வழக்கம், அந்தக் கணிகையர் அவரவர்க்குரிய பணிகளில் ஈடுபட்டனர். சிலர் அரண்மனை அகவினைஞர்களாகவும், சிலர் மொழிபெயர்ப் பாளர்களாகவும் சிலர் குடிகலம் பரிமாறுபவர்களாகவும் பணி யாற்றினர். ஆடவரும் மகளிரும் இரவும் பகலும் வரையறை யற்றுக் கூடிக்களித்தனர். எந்தப் பெண்ணுக்குச் சீட்டு விழுகிறதோ அந்தப் பெண் அன்று அரசனுடன் உறங்க

வேண்டும். அந்த நாட்டுப் பழக்கவழக்கங்களுக்கு எடுத்துக் காட்டாக இந்தச் செய்திகளை எழுதியுள்ளேன்.

"திரபாண்டி துணிச்சலும் நுண்ணறிவும் பெற்றவன். அதனால் காலஸ் தெவார் அவனைத் தனக்குப்பின் பட்டத்திற்கு வரவேண்டிய இளவரசனாக நியமித்தான். அதனால் சினமடைந்த சுந்தர்ப்பாண்டி, தன்னைப் பெற்ற தந்தை யென்றும் பாராமல் காலஸ் தெவாரைக் கொன்றுவிட்டுத் தானே அரசனென்று ஹிஜிரா 709ஆம் ஆண்டில் (கி.பி. 1310இல்) மர்தியில் முடிசூடிக் கொண்டான். கருவூலத்திலிருந்த செல்வங்களுள் ஒரு பகுதியை எடுத்துக்கொண்டு, தனக்கு ஆதரவாயிருந்த படைகளுடன், அவன் யானைகளும் குதிரைகளும் புடைசூழ, மிகுந்த ஆடம்பரத் துடன் மன்குல் நகருக்குச் சென்றான். அதனைக் கண்ட திரபாண்டி தன் தந்தையின் கொலைக்குப் பழிவாங்கும் எண்ணத்துடன் ஒரு படையைத் திரட்டிக்கொண்டு சென்றான். இரு படைகளும் அவர்களுடைய மொழியில் தலச்சி என்று சொல்லப்படும் ஓர் ஏரியின் கரையில் மோதின. மற்றவனுக்கு என்ன நேர்ந்தது என்பதை அறியாத உடன்பிறந்தார் இருவரும் போர்க்களத்தி லிருந்து ஓடிப்போயினர். ஆனால், ஆகூழ் இல்லாத் திரபாண்டி எதிரிகள் கையில் மாட்டிக்கொண்டான். மேலும், ஏழு யானைகள் சுமந்து சென்ற தங்கத்தையும் சுந்தர்ப்பாண்டியின் படைவீரர்கள் கைப்பற்றிக் கொண்டார்கள்.

"நன்றி கொன்றவர்கள் இன்றில்லாவிட்டாலும் நாளைக் கேனும் அதற்குரிய தண்டனையை அடைவார்கள் என்பது அறிஞர் கூற்று. சுந்தர்ப்பாண்டியின் வாழ்க்கையில் இந்த உண்மையை நாம் காண்கிறோம். காலஸ் தெவாரின் மகள்வழிப் பேரனான மனர் பர்முல் என்பவன் திரபாண்டிக்குத் தன் ஆதரவை அளித்தான். அப்போது அவன் கலுல் என்ற ஊருக்கு அருகில் இருந்த கரம்ஹத்தி என்னும் இடத்தில் இருந்தான். தன்னுடைய சகோதரியின் மகனிடமிருந்து படைகளையும் பொருளையும் பெற்ற திரபாண்டி, சுந்தர்ப்பண்டியோடு போர் புரிவதற்குத் தயாரானான். இதற்கிடையில், பாண்டிநாட்டுப் படைகளையும் செல்வங்களையும் தனதாக்கிக் கொண்டிருந்த சுந்தர்ப்பாண்டி அதிகாரத்தில் அமர்ந்திருந்தான். ஆனால், தீமை செய்தவன் என்றுமே இன்பமாய் வாழ்வதில்லை. இது எல்லா மதங்களும் எடுத்துரைக்கும் உண்மை. அதைப்பற்றி நாம் விரிவாய்க்கூற வேண்டிய தேவையில்லை. செல்வங்கள் பலவற்றையும் படைவீரர்களுடைய ஆதரவையும் பெற்றவனாய் இருந்தும் சுந்தர்ப் பாண்டியால் இன்பமாய் வாழ இயலவில்லை. அவன் பண்பற்றவ

னுகவும், செருக்கு மிகுந்தவனுகவும் இருந்தான். இறுதியில் அவன் நன்றி கொன்றதற்கான தண்டனையை அடைந்தான். 701ஆம் ஆண்டின் இடையில் (கி.பி. 1310) தீரபாண்டி ஒருபெரும் படையுடன் சுந்தர்ப்பாண்டியை எதிர்த்தான். அதனைக் கண்டு அஞ்சி நடுங்கிய சுந்தர்ப்பாண்டி தன் சொந்த நாட்டை விட்டு டில்லிக்கு ஓடி அலாவுதீனிடம் அடைக்கலம் புகுந்தான். அதனால் தீரபாண்டி தன்னுடைய அதிகாரத்தை உறுதியாய் நிலைநாட்டிக் கொண்டான்.

"இந்தச் செய்திகளை நான் எழுதிக் கொண்டிருந்த நேரத்தில் என்னுடைய நண்பர்களுள் ஒருவர் என்னைக் கண்டு பின்வருமாறு கூறினார்: ஹிந்து நாட்டு மன்னர்கள் நுண்ணறிவுக்கும் விவேகத்திற்கும் பேர்போனவர்கள். அப்படியிருந்தும் காலஸ் தெவார் தான் உயிரோடிருக்கும்போதே சட்டப்படி தனக்குப்பின் பட்டத்திற்கு வருவதற்கு உரிமை பெற்றிருந்த மூத்த மகனை ஒதுக்கி விட்டு, தன்னுடைய வைப்பாட்டிக்குப் பிறந்தவனும் வயதில் இளையவனும் ஆகிய ஒருவனை ஏன் இளவரசனுக நியமித்தான்? அதனுல்தானே மணமகளைப்போல அழகு பொருந்திய ஒரு ராஜ்யத்தில் குழப்பமும் அழிவும் ஏற்பட்டன?"[72]

குலசேகரனுக்கும் அவனுடைய ராஜ்யத்திற்கும் ஏற்பட்ட கேடுகள் அனைத்திற்கும் காரணமாய் இருந்தது அவனுடைய மக்களுக்குள் தோன்றிய பூசல் என்பதைக் கண்டோம். அந்தப் பூசல் குலசேகரன் கொல்லப்படுவதற்கு நெடுநாள் முன்னரே தோன்றிவிட்டது என்பதை யூவன் ஷிஹில் உள்ள குறிப்பு ஒன்று நமக்கு எடுத்துக் காட்டுகிறது. அந்தக் குறிப்பு சுமார் கி.பி. 1281இல் பாண்டிய ராஜ்யம் என்ன நிலையில் இருந்தது என்பதை விளக்குகிறது. அவ்வளவு தொலைவில் இருந்த ஒரு ராஜ்யத்தின் உள்நாட்டு விஷயங்களில் தலையிட்டு உருப்படியான ஒரு முடிவைத் தோற்றுவிப்பது என்பது குப்ளாகானுலும் இயலாத காரியமே. எனினும், பிறநாடுகள் எவ்வளவு தொலைவில் இருந்தாலும் அவற்றைப் பற்றிய செய்திகளை அறிந்துகொள்ள வேண்டும் என்ற துடிப்பும் ஆர்வமும் குப்ளாகானுக்கு இருந்ததால், அந்த நேரத்தில் பாண்டிய நாட்டில் தோன்றியிருந்த குழப்ப நிலையைப்பற்றிய தெளிவான ஆவணங்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன, இல்லாவிட்டால் அதைப்பற்றி நமக்கு எதுவும் தெரியாமல் போயிருக்கும். ஆனுல், சீனுவும் இந்திய

[72] Elliot and Dowson : iii, pp. 52-4.

ராஜயங்களும் பரிமாறிக்கொண்ட தூதுக் குழுக்களைப் பற்றி நாம் இந்த இடத்தில் இதற்குமேல் சொல்வதற்கில்லை.

மார்க்கஸ் அரிலியஸ் காலத்தில் சீனை நாடுகளுக்கு வந்த தூதுக் குழுவைப்பற்றி நாம் முன்பே எழுதியுள்ளோம். அதற்குப் பின்னர் மார்க்கபோலோவே ஐரோப்பாவுக்கும் தூரக் கிழக்கு நாடுகளுக்கும் நேர்த்தொடர்பைத் தொடங்கிய முதற் பயணியாவார்.[73] ஆசியாவின் குறுக்கே மூன்றரை யாண்டு பல இன்னல்களுக் கிடையில் பயணஞ் செய்த பின்னர்ப் பயணிகளுக்குள் அரசர் என்று பாராட்டப்படும் மார்க்கபோலோ குப்ளாகானின் பேரவையை அடைந்தார். குப்ளாகான் அவரிடம் தனிப்பெரும் பற்றுடையவனாய் இருந்தான். அதனால் அவர் பதினேழாண்டு அவனுடன் தங்கிவிட்டார். அந்தக் காலத்தில் அவர் குப்ளாகானுடைய பரந்த பேரரசின் பல்வேறு பகுதிகளுக்கும் சென்று அவன் இட்ட முக்கியமான பணிகள் பலவற்றை நிறைவேற்றித் தந்தார். இறுதியாக, குப்ளாகானின் குடும்பத்தைச் சேர்ந்த அரசகுமாரி ஒருத்தியைப் பாரசீக நாட்டுக்கு அழைத்துச் செல்லும் பணி அவருக்கு இடப்பட்டது. அந்த அரசகுமாரி பாரசீக மன்னனை மணந்து கொள்வதற்காகத் தெரிந்தெடுக்கப்பட்டவள். அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு அவர் கி.பி. 1292ஆம் ஆண்டில் சீனாவிலிருந்து கிளம்பினார். இந்தியக் கடல்களைக் கடந்து அவர் பாரசீகத்தை அடைவதற்குப் பதினெட்டு மாதங்கள் பிடித்தன. அதன்பின் அவர் கான்ஸ்டான்டி நோபிளுக்குச் சென்று, அங்கிருந்து புறப்பட்டு 1295ஆம் ஆண்டில் வெனிஸ் நகரை அடைந்தார்.

மார்க்க போலோ

மார்க்கபோலோ சீனைநாடுகளில் இருந்த காலத்தில் அவற்றைப் பற்றிய செய்திகளை அறிந்துகொள்வதற்கு அவருக்குச் சிறந்த வாய்ப்புகள் கிடைத்தன. வெளி நாட்டினர் வேறு யாருக்கும் அவ்வளவு சிறந்த வாய்ப்புக் கிடைக்கவில்லை யென்றே சொல்லலாம். அவரும் அந்த வாய்ப்புகளை நன்கு பயன் படுத்திக் கொண்டார். பாரசீகத்துக்குச் செல்லும் வழியில்தான் அவர் தென்னிந்தியாவின் பகுதிகள் சிலவற்றைக் கண்டார். அப்படியிருந்தும் அந்த நாடுகளைப் பற்றி அவர் திரட்டிய செய்திகளின் தொகையும் வகையும் நமக்கு வியப்பூட்டுகின்றன. அவருடைய நூல் பலமுறை திருத்திப் பதிப்பிக்கப் பட்டுள்ளது. அந்தப் பதிப்புகள் மூலபாடத்தை அப்படியே பின்பற்றினவா

[73] Oakeshott, *op. cit.* p. 87.

என்பது ஐயத்திற்கு இடமானது. அதனல் மூலபாடம் யாது என்பதையும் பின்னர்ச் சேர்ந்த புறவொட்டுகள் யாவை என்பதையும் அறிந்துகொள்வது சில சமயங்களில் கடினமாய் இருக்கிறது. அவருடைய நூலைப் படியெடுத்தவர்கள் கட்டுக் கதைகள் பலவற்றை நுழைத்து விட்டார்கள். எனவே, அவர் எழுதிவைத்த செய்திகள் உண்மையானவையா அல்லது அவருடைய கற்பனையில் தோன்றியவையா என்று அறிஞர்கள் சிறிது காலம் ஐயுறுவதற்கு அந்தப் புறவொட்டுகள் (accretions) காரணமாயின. இப்போதோ வெனில், 'நாம் மறந்துபோன செய்திகள் ஒவ்வொன்ருக மீண்டும் நம் கவனத்திற்கு வரும் போதெல்லாம் அவருடைய கூற்றுகளின் உண்மையும் நியாயமும் மேலும் ஒளிவிட்டுத் திகழ்கின்றன' என்று யூல் கூறுகிருர்.[74] மார்க்கபோலோ தாமே கண்ட செய்திகளோடு பிறர்வாயிலாய்க் கேட்ட செய்திகள் சிலவற்றையும் எழுதிவைத்துள்ளார். அன்றியும், அவர் எத்தனையோ புது நாடுகளுக்குச் சென்ருர். அங்கெல்லாம் அவர் கண்டவை அனைத்தையும் சரியாகப் புரிந்து கொண்டார் என்று நாம் கருத இயலுமா? எனவே, அவர் நூலிற் காணும் கட்டுக் கதைகள் சிலவற்றிற்கு அவரே காரணமா யிருந்தார் என்பதில் ஐயமில்லை. நம்பத்தகாதவை உண்மை யல்லாதவை என்று நாம் பல செய்திகளை ஒதுக்கிவிட்ட பின்னரும் அவர் சென்று கண்ட நாடுகளைப்பற்றி அவர் எழுதிவைத்துள்ள குறிப்புகள் நமக்கு மிகவும் பயனுடையவையாய் இருக்கின்றன.

மார்க்கபோலோ கி.பி. 1292ஆம் ஆண்டில் சீனுவிலிருந்து பாரசீகத்துக்குப் புறப்பட்டார் என்பதை நாம் மேலே கண்டோம்; அந்தப் பயணந்தான் நம்முடைய கவனத்தை இப்போது முதன்மையாய்க் கவர்வது. அதைப் பற்றி மேஜர் என்பவர் எழுதியுள்ள சுருக்கமும் மதிப்பீடும் மிக நன்ருய் அமைந்துள்ளன. அவருடைய எழுத்தை அப்படியே இங்குத் தருகிறேன். மார்க்கபோலோ 'ஜியாம்பா ராஜ்யத்தில் இறங்கினுர். (ஜியாம்பா=ட்சியாம்பா=சம்பா). அங்கே அவர் பெரிய ஜாவாவைப் பற்றிய செய்திகள் பலவற்றைத் தெரிந்துகொண்டார். ஆனல் அவர் ஜாவாவுக்கும் போகவில்லை, அதனையடுத்துள்ள போர்னியோவுக்கும் போகவில்லை. அதன் பின்னர் அவர் வடக்கு நோக்கிப் பயணஞ்செய்து, வழியில் இருந்த பென்டன் (பின்டாங்) என்னும் சிறு தீவைக் கடந்து, சிறு ஜாவாவை அடைந்தார். சுமாத்ராவையே அவர் சிறு ஜாவா என்று குறிப்பிடுகிருர். அதன் பின்னர் அவர் சுமாத்ராவின் கரையோரமாகவே பயணஞ் செய்து

[74] *Cathay*: i, p. 165.

மலாக்காக் கடற்கால் (Strais of Malacca) வழியாக இலங்கையை அடைந்தார். வழியில் அவர் அங்கமன் (அந்தமான்) தீவைக் கண்டார். இலங்கையில் சிறிது காலம் இருந்தபின் அவர் மா'பாரை அடைந்தார். மா'பார் என்பது மலபார் அன்று. சோழ மண்டலக் கரையே அந்தக் காலத்தில் மா'பார் என்று சொல்லப் பட்டது. அங்கு உற்பத்தியான மென்மையும் அழகும் பொருந்திய பருத்திநூல் துணிகளை அவர் பார்த்தார். மேலும், அங்கு அவர் கண்ட 'மூடப்பழக்கங்கள்' பலவற்றைக் குறிப்பிடுகிறார். பசு வழிபாடு, ஊன் உண்ணுமை, தேவதாசிகள் கோயிலுக்குப் பொட்டுக் கட்டிக்கொள்ளுதல், தெய்வங்களுக்கு மக்கள் தங்களையே பலியிட்டுக்கொள்ளுதல், பெண்கள் உடன்கட்டை யேறுதல் முதலியவை அவற்றுள் சிலவாகும். பின்னர் அவர் குமரி முனையைத் தாண்டி மலபார்க் கரையோராமாய்ப் பயணஞ் செய் தார். அங்கு அவர் மிளகும் இஞ்சியும் ஏராளமாய் விளைவதைக் கண்டார். அதன்பின் அவர் குஜராத்துக் கரை காம்பேக் கரை ஆகியவற்றின் வழியாக இந்துமாக் கடலினைக் கடந்து தம்முடைய பயணத்தைத் தொடர்ந்தார்.

'புதிய இடங்களைப் பார்க்கும்போதும், அவற்றைப் பற்றிய செய்திகளைத் தெரிந்துகொள்ளும்போதும், மார்க்கபோலோ அவற்றின் இயற்கை வரலாற்றைத் தெரிந்துகொள்வதற்குத் தனி முயற்சி செய்தார். முக்கியமாக, அந்த நாடுகளில் விளைந்த பொருள்களுள் விலையுயர்ந்தவை யாவை மிகவும் பயனுள்ளவை யாவை என்பதைத் தெரிந்துகொள்வதற்கு அவர் தவறவில்லை. அத்தகைய பொருள்களே வாணிகத்திற்கு முக்கியமான பொருள்கள் என்பதை அவர் உணர்ந்திருந்தார். பல்வேறு நாடுகளிலும் உற்பத்தியான பொருள்கள் அந்த நாட்டு மக்களின் நீர்வழிச் செலவுத் திறம் ஆகியவற்றை அறிந்துகொள்ள முயன்ற போதெல்லாம், நீர்வழிச் செலவுத் திறத்திலும் வாணிகத்திலும் சிறந்தவர்களான வெனிஸ்நகர மக்களுடைய கவனத்தைக் கவரக்கூடிய செய்திகளைத் தெரிந்து அவற்றின்மீது தனிக் கவனம் செலுத்தினர். அவரும் வெனிஸ்நகரைச் சேர்ந்தவர் தானே! அவ்வாறு அவர் கவனத்தைக் கவரக்கூடிய செய்திகளும் ஏராளமாய் இருந்தன. இந்திய வாணிகம் சங்கிலித் தொடர் போலக் கிழக்கே குப்ளாகானின் ஆட்சிக் குட்பட்ட நாடுகளி லிருந்து மேற்கே பாரசீக வளைகுடா-செங்கடல்பகுதிகள் வரை யிலும் நீண்டு பரவிக்கிடந்தது. இந்தியக் கரைகளிலும் அவற்றை யடுத்த தீவுகளிலும் இயற்கையன்னை தரக்கூடிய மிகச் சிறந்த வளங்கள் கணக்கின்றிப் படர்ந்து கிடப்பதை அவர் கண்டார். கொடிமுந்திரிப்பழச் சாற்றுக்கு (ஒயினுக்கு) பதிலாகத்

தென்னை பனை போன்ற ஒற்றைத்தடி மரங்கள் தம்முடைய பாலைத் தந்தன. ஈரப்பலா மரங்கள் நலந்தரும் உணவைத் தந்தன. மக்கள் விரும்பிச் சுவைக்கும் பாக்கு நறுமணப் பொருள்கள் போன்ற பண்டங்கள் எல்லாம் அங்கே கணக்கின்றிக் கிடைத்தன. அவற்றின் இயல்புகள் எல்லாவற்றையும் அவர் விவரமாய் எடுத்துரைக்காவிட்டாலும், அவற்றை ஈந்த செடி கொடி மரங்களின் பெயர்களை எழுதிவைத்துள்ளார். அன்றியும், இந்திய நாட்டின் நிலத்தடியில் மறைந்து கிடக்கும் பொருள்களையும் அவர் குறிப்பிடத் தவறவில்லை. அவை மேலே சொன்ன பொருள்களைப் போல அவ்வளவு பயனுள்ளவை அல்ல எனினும் மக்கள் அவற்றைப் பெரிதும் விரும்புகிறார்கள். அத்தகைய பொருள்களுள் அவர் புட்பராகம், செவ்வந்திக்கல், மரகதம், இலங்கை நீலமணி, கோல்கொண்டா வைரம், திபேத்திய மாணிக்கம் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார்.'[75]

**சீன வெளிநாட்டு வாணிகத்தின் அளவைக் குறைக்க முயல்கிறது**

தங்கம் வெள்ளி ஆகியவற்றின் ஏற்றுமதிக்குத் தடை விதிக்கவும், மா'பார் (சோழமண்டலம்) குலம் (கொல்லம்)பண்டரை ஆகிய நாடுகளுடன் நடைபெற்ற வாணிகத்தை ஒரு குறிப்பிட்ட அளவுக்குள் நிறுத்தவும் சீன அரசு கி.பி. 1296ஆம் ஆண்டில் மேற்கொண்ட முயற்சி ஒன்றை யூவன் ஷிஹ் குறிப்பிடுகிறது.[76] சுமார் கி.பி. 1300ஆம் ஆண்டில் இந்தியப் பார்ப்பனர் பலர் பான்-பான் அரசவையில் இருந்தனர் என்றும் அந்த நாட்டு அரசனுடைய தனிப்பற்றை அவர்கள் பெற்றிருந்ததால் அவன் அவர்களுக்குப் பரிசுகள் பலவற்றை அளித்தான் என்றும் மா-ட்வான்-லின் எழுதிவைத்துள்ளார்.[77]

**கிறிஸ்துவப் பாதிரிகள்**

மார்க்கபோலோ என்ற பெரிய விண்மீனின் முன்னால் ஏனைய இடைக்கால ஐரோப்பியப் பயணிகள் ஒளியிழந்த நட்சத்திரங்களைப் போலத் தோன்றுகிறார்கள். மேல்நாடுகளுக்கும் கீழ்நாடுகளுக்கும் இருந்த பண்பாட்டுத் தொடர்பின் ஒரு பக்கத்தை மார்க்கபோலோ காட்டுகிறார் என்றால், அவருக்குச் சிறிது காலத்

[75] Major : *India in the Fifteenth Century*, pp. li–liii.

[76] TP. xv. pp. 425-6.

[77] JA : 11 : 13 (1919) p. 255.
பான்பான் என்பது மலேயாத் தீபகற்பத்தில் தெனாசரிமுக்கும் கெடாவுக்கும் இடையில் இருந்தது என்று பெலியோ கருதுகிறார். (BEFEO, iv, p. 229)

திற்குப் பின்னர்த் தென்னிந்தியாவுக்கு வந்த மூன்று பாதிரிகள் அத்தொடர்பின் மற்றொரு பக்கத்தைக் காட்டுகிறார்கள்.

**ஜான்**

அவர்களுள் முதலில் வந்தவர் மாண்டி கார்விேனாவைச் சேர்ந்த ஜான் என்னும் பிரான்சிஸ்கன் மடத்துறவி யாவார். அவருக்கு அப்பொழுதே ஏறக்குறைய ஐம்பது வயது ஆகி விட்டது. எனினும், அவர் தமியராகவே சீனாவுக்குச் சென்று, கிறிஸ்துவ ரல்லாதவர்களும் அவர்களைக் காட்டிலும் எவ்வகையிலும் உயர்ந்த வர்கள் என்று அவரால் கருத இயலாத நெஸ்டாரியர்களும் வாழ்ந்த மாக்கடல் போன்ற அந்தப் பெரிய நாட்டில் கிறிஸ்துவின் நற்செய்தியைப் பரப்புவதற்கு முயன்றார்.[78] அவர் கி.பி. 1292—93ஆம் ஆண்டில் இந்தியா வழியாகச் சீனாவுக்குச் சென்றார். பிற்காலத்தில் அவர் காம்லக் ஆர்ச்சுபிஷப் பதவியை வகித்தார். அங்கு அவர் 1328ஆம் ஆண்டில் இறந்தார். தம் வாழ்க்கையைத் தனிமையில் கழித்துப் பழகிய அந்தத் துறவிக்கு இந்திய மக்களின் பழக்கவழக்கங்களிற் பெரும்பாலானவை பிடிக்க வில்லை (XXVI). அவரைப் போலவே அவருக்குப்பின் வந்த துறவிகளுக்கும் இந்திய மக்களின் வாழ்க்கை முறையும் பழக்க வழக்கங்களும் பிடிக்கவில்லை. ஆனால், அவர்களுடைய கருத்துகள் அறிவார்ந்தவை என்றோ பெருந்தன்மை வாய்ந்தவை என்றோ சொல்ல இயலாது. இந்தியக் கடல்களில் தாம் கண்ட மரக்கலங் களையும் நீர்வழிச் செலவுத் திறத்தையும் பற்றி ஜான் எழுதி வைத்துள்ள குறிப்புகள் ஏனையோர் எழுதிவைத்துள்ள குறிப்பு களோடு பல வகைகளில் ஒற்றுமை யுடையவையாய் இருக் கின்றன. எனவே, அவற்றை ஒப்பு நோக்குவது பயனுடையதாய் இருக்கும்.

**ஓடோரிக்**

இந்தியாவிலிருந்து ஜான் திரும்பிப் போன பின்னர் ஏறக் குறைய முப்பதாண்டு கழித்துப் பார்தனோன் என்னும் இடத்தைச் சேர்ந்த ஓடோரிக் என்னும் துறவி வந்தார். அவர் 1321ஆம் ஆண்டுக்குச் சிறிது பின்னர் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். அவர் ஆர்மஸில் கப்பலேறி பம்பாய்க்கு அருகிலுள்ள தானாவுக்கு வந்தார் (XXVIIஅ). அந்த இடத்திலோ அதற்குச்சிறிது தொலைவிலிருந்த சூரத்திலோ கி.பி. 1331ஆம் ஆண்டில் உயிரிழந்த நான்கு துறவிகளின் எலும்புகளைப் பொறுக்கி யெடுத்துக்கொண்டு அவர் கிழக்கு நோக்கிப் பயணஞ் செய்தார். (ஜார்டனஸ் துறவி

[78] Yule : *Cathay*, i. p. 169.

இச் செய்தியை எழுதிவைத்துள்ளார்). அவர் மலையாளக் கரையில் பந்தரனி, கொடுங்களூர், கொல்லம் முதலிய ஊர்களின் வழியாக இலங்கைக்குச் சென்றார். பின்னர் அங்கிருந்து அவர் மயிலாப்பூருக்கு வந்து புனித தாமஸ் கோயிலைக் கண்டு வழிபட்டார். அந்த இடந்தான் இன்று சென்னை என்று சொல்லப் படுகிறது.[79] இந்துப் பழக்கவழக்கங்கள் சிலவற்றைப்பற்றி அவர் எழுதிவைத்துள்ள குறிப்புகளைப் படித்தால், அவற்றை நேரில் பார்த்த பின்னரே அவர் அந்தக் குறிப்புகளை எழுதினார் என்பது நமக்குத் தெளிவாக விளங்கும் (XXVII—ஆ,இ,ஈ).

**ஜார்டனஸ்**

கடைசியாக, ஜார்டனஸ் என்னும் துறவியின் குறிப்புகள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. ஒடோரிக் இந்தியாவுக்கு வருவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னர் அவர் இந்தியாவுக்கு ஒரு முறை வந்திருக்கக்கூடும் என்று நாம் கருத இடமிருக்கிறது. இந்தியாவிலிருந்து அவர் கி.பி. 1321ஆம் ஆண்டில் ஒரு கடிதமும், பின்னர் கி.பி. 1324ஆம் ஆண்டில் ஒரு கடிதமும் எழுதியுள்ளார். கீழை நாடுகளில் கிறிஸ்துவப் பாதிரிகள் ஆற்ற வேண்டிய பணிகள் ஏராளமாய் இருக்கின்றன என்று அந்தக் கடிதங்களில் அவர் ஐரோப்பியப் பாதிரிமார்களுக்குத் தெரிவித்தார் (XXIII—அ). எடுத்துக் காட்டாக, 'நமக்காகக் காத்துக் கொண்டிருக்கும் அறுவடை மிகப் பெரியது என்றும் நமக்கு ஊக்கம் அளிப்பதாய் இருக்கிறது என்றும் சொல்வதோடு அமைகிறேன்' என்று அவர் கி.பி. 1321ஆம் ஆண்டில் எழுதிய கடிதத்தில் தெரிவிக்கிறார். 'துறவிகள் இங்கு வருவதற்குத் தயார் செய்து கொள்வார்களாக. அவர்கள் பெரிய அறுவடை செய்வதற்கும் ஒன்றாகச் சேர்ந்து வாழ்வதற்கும் எனக்குத் தெரிந்த மூன்று இடங்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று சுபரா என்னும் இடமாகும். அங்கு இரு துறவிகள் இருக்கலாம். இரண்டாம் இடம் பராச்சோ மாவட்டத்தில் இருக்கிறது. அங்கே இரண்டுமூன்று துறவிகள் இருக்கலாம். கொலம்பஸ் என்பது மூன்றாம் இடம். இன்னும் எனக்குத் தெரியாத எத்தனையோ இடங்கள் இருக்கின்றன.'[80] இவ்வாறு ஜார்டனஸ் எழுதினார். அவர் கடிதத்தில் காணும் மூன்று இடங்களும் இன்று சுபாரா, புரோச், கொல்லம் என்று சொல்லப்படுகின்றன. கி.பி. 1328ஆம் ஆண்டில் ஜார்டனஸ் 'கொலம்பும்' (கொலம்பஸ் அல்லது கொல்லம்) பிஷப்பாக

[79] Yule: *Cathay*, ii. p. 10.

[80] Yule: *Cathay*, iii. p. 77

நியமிக்கப்பட்டார்[81]. அவர் தம்முடைய 'மிராபிலியா' என்னும் நூலைக் கி.பி. 1328ஆம் ஆண்டுக்கும் 1330ஆம் ஆண்டுக்கும் இடையில் எழுதியிருக்கக்கூடும் என்று நாம் கருதலாம். கி.பி. 1330இல்தான் அவர் ஐரோப்பாவிலிருந்து இரண்டாம் முறையாகக் கீழைநாடுகளுக்குப் புறப்பட்டார்[82]. ஜார்டனஸ் கொல்லம் பிஷப் பதவிபெற்றபின் அங்கு வந்தாரா என்பதே நமக்குத் தெரியவில்லை. பாரசீகர் பிணங்களைக் கழுகு தின்னுமாறு வெட்ட வெளியில் வைத்துவிடுகின்றனர் என்று அவர் எழுதிவைத்துள்ளார். இந்தியாவில் வாழ்ந்த பாரசீகரைப் பற்றி நமக்குக் கிடைத்துள்ள குறிப்புகளுள் ஜார்டனஸின் குறிப்பே முதற் குறிப்பாய்இருக்கக்கூடும். எப்படியிருந்தாலும், அத்தகைய மிகப் பழைய குறிப்புகளுள் ஜார்டனஸின் குறிப்பும் ஒன்று என்பதில் ஐயமில்லை (XXVIII—ஆ,இ).

**ஜான் டி' மரிக்னெல்லி**

நம்முடைய கவனத்தைக் கவர்கிற இன்னொரு துறவியும் இருக்கிறார். அவர் பிளாரன்சில் பிறந்த மரிக்னெல்லி ஜான் என்பவர் ஆவார். அவர் போப்பாண்டவரின் பிரதிநிதியாகக் குப்ளாகான் அரசவைக்குப் போனார். அப்படியொருவரை அனுப்புமாறு குப்ளாகான் போப்பாண்டவருக்கு வேண்டுகோள் விடுத்திருந்தான். அந்த வேண்டுகோள் மான்டி கார்வினோ ஜான் இறந்து பத்தாண்டுகளுக்குப்பின் போப்பாண்டவருக்குக் கிடைத்தது. (மான்டி கார்வினோ ஜான் காம்லக் ஆர்ச்சு பிஷப்பாக இருந்தார் என்பதை நாம் முன்பு கண்டோம். அவர்தான் காத்தே சமயப்பரப்புக்குக் குழுவை நிறுவியவர்). மார்க்கபோலோவைப் போலவே மரிக்னெல்லி ஜானும் தரை வழியாகச் சீனாவுக்குச் சென்றார். அங்கிருந்து திரும்பும்போது அவர் ஜைட்டன் துறைமுகத்தில் கப்பலேறிக் கடல்வழியாகப் பயணஞ் செய்தார். அந்தப் பயணத்தை அவர் 1346ஆம் ஆண்டிலோ 1347ஆம் ஆண்டிலோ தொடங்கினார். மலையாளக் கரையில் உள்ள கொல்லத்துக்கு வந்து சேர்ந்தார் என்பதைத் தவிர அவர் அந்தப் பயணத்தைப் பற்றி வேறு செய்தி எதனையும் தெரிவிக்கவில்லை (XXVIII அ). அவர் கொலம்பத்திலிருந்த கிறிஸ்துவர்களோடு ஓராண்டுக்குமேல் தங்கியிருந்தார். அதன் பின் அவர் கி.பி. 1348ஆம் ஆண்டிலோ அதற்கு அடுத்த ஆண்டிலோ தென்மேற்குப் பருவக்காற்று வீசிக் கொண்டிருந்த

[81] கொலம்பும் என்பதுதான் வடமொழி நூல்களில் நாம் வழக்கமாகக் காணும் பெயர்.

[82] Yule, *Cathay*, pp. 29-31.

காலத்தில் திருத்தொண்டர் தாமஸ் கோயிலைக் கண்டு வழி படுவதற்காகக் கடல்வழியாய்ச் சோழ மண்டலக் கரைக்குப் புறப்பட்டார். அங்கு நான்கே நாட்கள் தங்கியபின்' அவர் சாபாவுக்குப் போய்விட்டார். சாபா என்பது எந்த ஊர் என்று இன்னும் உறுதியாய்ச் சொல்லமுடியவில்லை. எனினும், அது சுமத்ராவின் ஏதோ ஒரு பகுதி என்பதை ஒருவாறு ஊகிக்கலாம். அவர் சாபாவிலிருந்து திரும்பியபோது அவர் பயணஞ் செய்த கப்பல் புயலில் அகப்பட்டுக்கொண்டு அவர் விருப்பத்திற்கு மாறாக இலங்கையை அடைந்தது. இலங்கையில் இருந்த முஸ்லிம் தலைவன் ஒருவன் மரிக்னெல்லிக்குப் பல தொல்லைகளைக் கொடுத்தான். அப்படியிருந்தும் இலங்கையைப் பற்றிய அவருடைய நினைவுகள் இனிமையாகவே இருந்தன. பூவுலக சொர்க்கம் அந்தத் தீவிலேயே இல்லாவிட்டாலும் அதற்கு மிக அண்மையில் இருப்பதாக அவர் கருதினார். இலங்கையிலிருந்த பௌத்தத் துறவிகளைப் பற்றி அவர் எழுதிவைத்துள்ள குறிப்புகள் படிப்பதற்குக் கவர்ச்சியாய் இருக்கின்றன. அவர் 1353இல் ஐரோப்பாவுக்குத் திரும்பினார், அதன் பின் அவர் கீழை நாட்டுப் பயண நினைவுகளை எழுதி வைத்தார் (XXXI—ஆ.இ). அப்போது அவர் தம்முடைய முதுமைப் பருவத்தில் இருந்தார் என்று நாம் கருதலாம்.[83]

**அபுல்பேடா**

அபுல்பேடா என்பவர் (கி.பி. 1273—1331) மிகவும் புகழ் பெற்ற அரபு ஆசிரியர். அவர் வரலாற்றுத் துறையிலும் நிலவியல் துறையிலும் வல்லுநர். ஆனால் இந்தியாவைப் பற்றிய புதிய செய்தி ஒன்றும் அவருடைய நூல்களில் இல்லை. தென்னிந்தியாவைப் பற்றி அவர் எழுதியுள்ள குறிப்புகள் மிகக் குறைவாகவும் தெளிவற்றவையாகவும் இருக்கின்றன (XXIX) ஓயாது ஊர் சுற்றிக் கொண்டேயிருந்த பயணியும் நிலவியல் வல்லுநரும் ஆகிய இபன் சையது எழுதிவைத்த குறிப்புகளை அபுல்பேடா அடிக்கடி எடுத்தாள்கிறார்.

**இபன் பதூதா**

மூர் இனத்தைச் சேர்ந்த இபன் பதூதா ஆய்வுப் பயணங்களை ஓய்வின்றி மேற்கொண்டவர். அவர் சுமார் 1300ஆம் ஆண்டில் டாஞ்சியரில் பிறந்தார். அவர் தம்முடைய இருபத்திரண்டாம் வயதில் சொந்த ஊரைவிட்டுப் புறப்பட்டு அடுத்த முப்பதாண்டுக் காலம் ஓயாது பயணஞ் செய்துகொண்டே யிருந்தார். கி. பி.

[83] Yule, *Cathay* iii. pp. 177-207.

1377ஆம் ஆண்டில் அவர் பெஜ் என்னும் இடத்தில் இறந்தார். அவர் தம்முடைய நூலைத் தம்முடைய கையாலேயே எழுதவில்லை. தாம் சென்று கண்ட நகரங்களின் வர்ணனைகளையும், தம்முடைய நினைவிற்கு வந்த நிகழ்ச்சிகள் வரலாற்றுச் செய்திகள் ஆகிய வற்றையும் அவர் ஓர் எழுத்தருக்கு எடுத்துச் சொல்ல, அந்த எழுத்தர் அவற்றையெல்லாம் எழுதினர். அவர் இஸ்லாமியச் சட்டம் மரபு ஆகியவற்றில் வல்லுநர். அவருடைய தொழிலும் அந்தத் துறையைச் சார்ந்ததே. தென்னிந்தியப் பயணத்தின் போது அவர் பெற்ற அனுபவங்களைப் பற்றிய குறிப்புகளின் விவரமான சுருக்கத்தை இந்த நூலின் பிற்சேர்க்கையிற் காணலாம் (XXX-இ-i). அதனை எழுதியவர் யூல். அந்தச் சுருக்கம் பின்னர் வரும் மூலநூல் மொழிபெயர்ப்புக்கு ஒரு முன்னுரை போன்றதாகும். மேஜர் என்பவர் இபன் பதூதாவைப் பற்றிப் பின்வருமாறு எழுதுகிறார் :

'இபன் பதூதா இந்தியாவில் நீண்ட காலம் தங்கியிருந்தார். அப்போது அவர் பெற்ற அனுபவங்கள் விசித்திர மானவையாக வும் நிகழ்ச்சிச் செறிவுடையவை யாகவும் இருந்தன. அவருடைய சுற்றுப் பயண வரலாற்றில் அவை மிக முக்கியமான இடத்தை வகிக்கின்றன. இந்தியாவைப் பற்றிய அவரது குறிப்புகள் நமக்குப் பலவகையில் முக்கியமானவை. இந்திய நாட்டின் இயற்கை வளங்கள் பயிர்த்தொழில் முதலியவற்றைப் பற்றி மட்டும் அவர் எழுதவில்லை. ஹிந்துஸ்தான் மக்களின் பழக்க வழக்கங்கள், ஆப்கானிய ஆட்சியில் அவர்களுடைய அரசியல் சமுதாய அமைப்புகள், வரலாறு முதலிய செய்திகளையும் அவர் எழுதிவைத்திருக்கிறார். ஹிந்துஸ்தானத்தில் முகலாய ஆட்சி ஏற்படுவதற்குமுன் சுமார் முந்நூறாண்டுக் காலம் ஆப்கானிய ஆட்சி நடைபெற்றது என்பதை நாம் அறிவோம். எனவே, இபன் பதூதாவின் பயணக் குறிப்புகள் நமக்கு மிகவும் பயனுள்ளவை யாய் இருக்கின்றன. அவருடைய குறிப்புகள் வரலாற்றில் பின்னோக்கிச் சென்று, கி.பி. 1188ஆம் ஆண்டில் குத்புதீன் ஐபெக்கின் தலைமையில் முஸ்லிம்கள் டில்லியை வென்ற காலந் தொட்டு கி.பி. 1325ஆம் ஆண்டில் துக்ளக்கின் மகன் முகமது டில்லி சுல்தான் ஆன காலம் வரையிலும் நடைபெற்ற நிகழ்ச்சிகள் பலவற்றை எடுத்துரைக்கின்றன. இபன் பதூதா இந்தியாவில் இருந்த காலத்தில் முகமது துக்ளக் டில்லி சுல்தானாக இருந்தான். பெரிஷ்டா எழுதிவைத்துள்ள செய்திகள் விளக்கம் பெறுவதற்கும் புதிய செய்திகளை நாம் தெரிந்துகொள்வதற்கும் இபன் பதூதாவின் குறிப்புகள் துணைபுரிவதால் அவை நமக்குத் தனிப்பட்ட கவர்ச்சி யுடையவையாய் இருக்கின்றன. இந்தப்

பூர்வாங்கமான செய்திகளுக்குப் பின்னர் இபன் பதூதா தாமே நேரிற் கண்ட செய்திகளை எழுதிவைத்திருக்கிறார். அவர் இந்தியாவுக்கு வந்த நேரம் மிகவும் முக்கியமான நேரம். முகமது துக்ளக்கின் கொடுங்கோல் ஆட்சியின் விளைவாகப் பட்டாணி யரின் ஆதிக்கம் இந்தியாவில் அழிந்துபோகும் தறுவாயில் இருந்தது. பட்டாணிய ஆட்சி என்றுமே நிலைபெற்ற அரசாட்சி யாய் இருந்ததில்லை. போரில் வல்ல ஒருசில உயர்குடியினரின் ஆட்சியாகவே அது விளங்கியது. எனவே முகமது துக்ளக்கின் கொடுங்கோல் ஆட்சியால் பட்டாணிய ஆதிக்கம் சிதைந்து போகும் நிலைக்கு வந்துவிட்டது என்றால் அதில் வியப்பொன்றும் இல்லை. வங்காளமும் தக்காணமும் முகமது துக்ளக்கின் கொடுங் கோன்மையை எதிர்த்துச் சுயேச்சை யரசுகளாக மாறின. இந்த நெருக்கடியான நேரத்தில் டில்லியில் இருந்த இபன் பதூதா அங்கிருந்து வெளியேறுவதற்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. சீனப் பேரரசர் அனுப்பிய ஒரு தூதுக்குழு டில்லிக்கு வந்ததால், முகமது துக்ளக் சீனாவுக்கு ஒரு தூதுக் குழுவை அனுப்பினான். அந்தக் குழுவிற் சேர்ந்துகொண்டு சீனாவுக்குப் போகுமாறு அவன் இபன் பதூதாவைக் கேட்டுக்கொண்டான். டில்லியிலிருந்து வெளியேறிவிடுவதே நல்லது என்று எண்ணிக் கொண்டிருந்த இபன் பதூதா சீனாவுக்குச் செல்வதற்கு மிகுந்த மகிழ்ச்சியுடன் இசைந்தார். அந்தப் பதவிக்குரிய துணிமணி களையும், அறிமுகக் கடிதங்களையும், சீனப் பேரரசுக்கு முகமது கொடுக்க விரும்பிய பரிசுகளையும் பெற்றுக்கொண்டு, சிறிதும் தாமதிக்காமல், அபாயம் நிறைந்த டில்லியிலிருந்து இபன் பதூதா ஹிஜிரா 743 (கி.பி. 1342)ஆம் ஆண்டில் சீனாவுக்குப் பயணமானார்.'[84]

**சிதி ஆலி**

இந்தியாவைப் பற்றி எழுதிய வெளிநாட்டு முஸ்லிம் ஆசிரியர்களுள் மிகவும் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவர்களுள் சிதி ஆலி செலிபி (1554) என்பவரும் ஒருவர். கடற்படைத் தலைவராக இருந்த சிதி ஆலி எழுத்தாளராகவும் கவிஞராகவும் இருந்தார். நீர்வழிச் செலவுத்திறக் கலையைப் பற்றி அரபு, பாரசீக, துருக்கிய மொழிகளில் எழுதப்பட்ட நூல்களைத் திரட்டிக்கொண்டு போவதற்காக அவர் இந்தியாவிற்கு வந்தார். அதற்காக அவர் இந்திய அறிஞர் பலரைக் காண விரும்பினார். அதனால் அவர் இந்திய நகரங்கள் பலவற்றிற்குச் சென்றார். அவர் தரைவழி

[84] Major : *India in the Fifteenth Century* : pp. liv-lv; Also Ferrand *Relations*, pp. 426-27.

யாகக் கான்ஸ்டான்டிநோப்பிளுக்குத் திரும்பிச் சென்றார். போகும் வழியில் இந்தியாவின் வடமேற்கு எல்லைப் பகுதி, படக்ஷன், ட்ரான்சாக்சியானு, பாரசீகம் ஆகிய நாடுகளைக் கடந்துசென்றார். அவர் எழுதிய 'மொஹித்' (மாக்கடல்) என்னும் நூலில் கப்பலை இயக்குவதற்கான அறிவுரைகள் இருக்கின்றன. அவற்றுள் சிலவற்றைப் பிற்சேர்க்கை IVஇல் காணலாம். தமக்குமுன் எழுதப்பட்ட பத்து நூல்களை ஆராய்ந்தபின் சிதி ஆலீ தமது நூலை எழுதினார். அந்தப் பத்து நூல்களுள் மூன்று பண்டைக் காலத்தைச் சேர்ந்தவை, ஏழு தற்காலத்தைச் சேர்ந்தவை.

**அஹமது இபன் மஜீது**

அந்தத் தற்கால நூல்களுள் ஒன்றை எழுதியவர் அஹமது இபன் மஜீது (கி.பி. 1489-90) என்பவர் ஆவார். அவர், 'நீர்வழிச் செலவுத்திறத் தலைவர்' என்றும், 'சீறுங் கடலின் சிங்கம்' என்றும் தம்மைப் பற்றிக் கூறிக்கொள்கிறார். அவர் வாஸ்கோடகாமா இந்தியாவை அடைவதற்கு உதவி செய்திருக்கக்கூடும் என்பது தோன்றுகிறது. ஆனால் அதைப்பற்றித் தெளிவான போர்ச்சுகீசிய ஆதாரம் ஒன்றும் நமக்குக் கிடைக்கவில்லை. இபன் மஜீது தாம் எழுதிய 'மாலுமிகளுக்கு அறிவுரை' என்னும் நூலில் சோழ மாலுமிகளின் கருத்துதலை அடிக்கடி மேற்கோள் காட்டுகிறார். (சுலைமானும் அவ்வாறு செய்கிறார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அவர் சுமார் கி.பி. 1511–53இல் வாழ்ந்தவர்.) தம்முடைய காலத்தில் மரக்கலத் தொகுதி யொன்று சாபாக் காலத்தின் (கீழ்க்காற்றுக் காலத்தின்) தொடக்கத்தில் கோமார் (மடகாஸ்கார்) என்னும் இடத்திலிருந்து புறப்பட்டு ஜங்குக்கும் (கிழக்கு ஆப்பிரிக்கக் கடற்கரை — வட தீர்க்காம்ச ரேகை 3 க்கும் தென் தீர்க்காம்ச ரேகை 3–க்கும் இடையிலுள்ள பகுதி என்று வைத்துக் கொள்ளலாம்) மரிமாவுக்கும் (அதே கடற்கரை-தென் தீர்க்காம்சரேகை 8 க்கும் தென் தீர்க்காம்சரேகை 11-க்கும் இடையிலுள்ள பகுதி என்று கொள்ளலாம்.) ஹார்மசுக்கும் அல்ஹிண்டுக்கும் (இந்தியாவின் மேற்குக் கடற்கரை) சென்றது என்று இபன் மஜீது எழுதிவைத்துள்ளார்.[85]

வாங் டா யூவன் என்னும் சீன வணிகர் இபன் பதூதாவின் காலத்தில் வாழ்ந்தவர். அவர் வாணிகத்திற்காக கி.பி. 1330க்கும் 1349க்கும் இடையில் வெளிநாடுகள் பலவற்றிற்குச் சென்றார்.

[85] Ferrand JA: 11:13, p. 484; and 11:14 pp. 171-2.

**வாங்-டா-யூவன்**

அவர், 'தவோ இசிலியோ' (தீவுகளில் வாழும் காட்டு மிராண்டிகள்) என்னும் நூலை எழுதினார். அவர் உண்மையிலேயே பல நாடுகளிற் சுற்றியவர். ஆதலால் அந்நூலில் உள்ள செய்திகள் அவரே நேரிற் கண்டவை என்பது தெளிவு. எனவே, அவருடைய நூல் சௌ ஜூ குவாவின் நூலைக் காட்டிலும் சிறந்தது என்பதில் ஐயமில்லை; சௌ ஜூ குவா தாம் கேள்விப் பட்ட செய்திகளையே எழுதினார். வாங் டா யூவனின் நூலில் பல நாடுகளையும், துறைமுகங்களையும், குறிப்பிடத்தக்க வேறு இடங்களையும் பற்றிய செய்திகள் இருக்கின்றன. அது மொத்தம் 99 இடங்களைப் பற்றிப் பேசுகிறது. எழுதும் முறையில் வாங் டா யூவன் சௌ ஜூ குவாவையே பின்பற்றுகிறார் XXXII. வாங் டா யூவனின் நடை சிறப்புடையதன்று. ஆனால், அவர் பல நூல் பயின்றவர் என்பதையும், தத்துவ விசாரணையில் நாட்டம் உடையவர் என்பதையும் அவருடைய நூல் எடுத்துக் காட்டுகிறது.[86]

1382ஆம் ஆண்டில் ஜாவாவிலிருந்து சீனாவுக்குச் சென்ற தூதுக்குழு ஒன்று 'கறுப்பு அடிமைகள் (ஆண்களும் பெண்களும்) நூறு பேரையும், பெரிய முத்துகள் எட்டையும், 75,000 'சட்டி' மிளகையும் எடுத்துக்கொண்டு போயிற்று'.[87] பதினான்காம் நூற்றாண்டின் இறுதியிலும் சீனா, ஜாவா, இந்தியா ஆகிய நாடுகளுக்கிடையில் இருந்த தொடர்புகள் ஏறக்குறைய முன்போலவே இருந்தன என்றும் அவற்றில் மாறுதல் ஏதும் நிகழவில்லை என்றும் மேலே கண்ட செய்தியின் மூலம் நாம் அறிகிறோம்.

**மிங் அரசினர் காலத்தில்**

பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மிங் மரபின் மூன்றாம் பேரரசர் சீனாவில் ஆட்சி புரிந்தார் (கி.பி. 1403-25). அவருடைய ஆட்சி 'யோங்லோ' ஆட்சி என்று சொல்லப்பட்டது: 'அவர் தம்முடைய கப்பற் படையைப் பலமுறை வெளி நாடுகளுக்கு அனுப்பினார். அதன் விளைவாகப் புதிய (மிங்) மரபின் புகழும் மீயுயர்வும் பல்வேறு நாடுகளிலும் பரவின. அதனைக் கண்ட இருபது அரசர்கள் தங்களுடைய தூதுக்குழுக்களைச் சீனாவுக்கு அனுப்பிப் பேரரசருக்குத் தங்கள் பணிவைத் தெரிவித்துக்கொண்டார்கள்.'[88] அவ்வாறு வெளி

[86] Rockhill, TP. xvi, pp. 61-9.

[87] JA. 11 : 14, p. 6.

[88] Duyvendak, *Ma Huan Re-examined*, p. 3.

நாடுகளுக்குச் சென்ற கடற்படைகள் மருட்சி யூட்டத்தக்க தறுகண்மை வாய்ந்தவை. முதலில் சென்ற கடற்படையில் ஒவ்வொன்றும் 440 அடி நீளமும் 180 அடி அகலமும் கொண்ட 62 கப்பல்கள் இருந்தன. அவற்றில் 37,000 வீரர்கள் இருந்தார்கள்.

**செங்ஹோ**

படைத் தலைவர்களுள் செங்ஹோ என்னும் அலியே தலைசிறந்தவன். சீனப் பேரரசர் தமக்குமுன் ஆட்சிப் பீடத்திலிருந்த தம்முடைய அண்ணன் மகனை கியன்வென் என்பவனை இறக்கிவிட்டுத் தாமே ஆட்சியைப் பிடித்துக்கொண்டார். கியன்வென் தப்பியோடிக் கடல்கடந்த நாடு ஏதோ ஒன்றில் தலைமறைவாய் இருப்பதாய்க் கேள்விப்பட்ட பேரரசர் அவனைக் கண்டு பிடிப்பதற்காகத்தான் தொடக்கத்தில் தம் கப்பற் படையை வெளிநாடுகளுக்கு அனுப்பினர் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.[89]

**பெய்ஹிசின்**

செங்ஹோ வெளிநாடுகளுக்குச் சென்றபோதெல்லாம் அவனுடன் பயணஞ்செய்த இரண்டு பேர் எழுதி வைத்துள்ள குறிப்புகள் அவர்கள் கண்ட நாடுகளைப்பற்றிப் பல செய்திகளை நமக்குத் தெரிவிக்கின்றன. அவர்களுள் ஒருவர் பெய்ஹிசின் என்பவர் ஆவார். அவர் எழுதிய நூலின் பெயர் 'ஹிசிங் சா ஷெங் லான்' என்பதாகும். அது 'விண்மீன் மிதவை' என்று பொருள்படும்; அந்த நூலில் கி.பி. 1436இல் எழுதப்பட்ட முன்னுரை ஒன்று இருக்கிறது. அதனுல் பெய்ஹிசினுடைய நூல் செங்ஹோவின் பயணங்களை விவரிக்கிற மிக முன்னைய நூல்களுள் ஒன்று என்பது தெரிகிறது. செங்ஹோவின் பரிவாரத்தில் பெய்ஹிசின் எத்தகைய இடத்தை வகித்தார் என்பது நமக்குத் தெரிய வில்லை. அவருடைய நூல் பலவேறு நாடுகளையும் இடங்களையும் விவரிக்கிறது. அவற்றின் மொத்த எண்ணிக்கை நாற்பதாகும். முன்னைய நூல்களிலிருந்து பல செய்திகளை எடுத்து பெய்ஹிசின் தம்முடைய நூலில் சேர்த்திருக்கிறுர் என்பது உண்மையே. ஆனுல், எத்தனையோ புதுச் செய்திகளையும் அவர் எழுதி யிருக்கிறுர். மேலும், அவர் எழுதிவைத்துள்ள செய்திகள் முன்னைய செய்திகளை விளக்குவதற்கும் குறைநிரப்புவதற்கும் உதவுகின்றன[90] (XXXIII).

[89] Bretschneider, *Med. Res.* ii, p. 142, *n* 880.

[90] TP. xvi, pp. 73-6 and Duyvendak *op. cit.*

**மாஹுவான்**

செங்ஹோவுடன் சென்ற இன்னொருவர் மாஹுவான் என்பவர் ஆவார். அவர் பெய்ஹிசினைக் காட்டிலும் புகழ் பெற்றவர். அவர் இஸ்லாம் மதத்தைச் சேர்ந்த சீனர். அவர் வெளிநாட்டு மொழிகள் பலவற்றை அறிந்தவர். அதனால் கி.பி. 1412-1413இல் செங்ஹோவின் தலைமையிற் சென்ற கடற்படைக்கு அவர் மொழிபெயர்ப்பாளராகச் சென்றார். செங்ஹோவின் பயணங்களையும் மாஹுவானுடைய குறிப்புகளையும், அண்மையில் டுய்வெண்டக் என்பவரும் பெலியோ என்பவரும் ஆராய்ந்து பார்த்தார்கள். அந்த ஆராய்ச்சி மிகக் கவனமாகவும், மிகத் திறமையாகவும் செய்யப்பட்டுள்ளது. அதனால் அவ்வராய்ச்சியின் பொதுவான முடிவுகளை இங்கு எடுத்துச் சொல்வது பொருத்தமாய் இருக்கும்.

**செங்ஹோவின் பயணங்கள்**

மேலைக் கடல்களுக்குச் சென்ற முதற் கடற்படை யோங்லோவின் மூன்றும் ஆண்டின் ஆறும் மாதத்தில் புறப்பட்டது; அதாவது, கி.பி. 1405ஆம் ஆண்டு ஜூன் 2க்கும் ஜூலை 25க்கும் இடையில் புறப்பட்டது. செங்ஹோ அந்தப் பயணத்தின்போது கூ-லீ என்னும் ஊருக்குச் சென்றான் (கூ-லீ என்பது கோழிக்கோடு). அங்கு அவன் பெயர்வரி பொறித்த ஒரு கற்சிலையை நாட்டினான். அதன் பின் அவன் இலங்கைக்கும் சென்றிருக்கக்கூடும். திரும்புகாவில் அவன் பாலம்பாங்கைச் சேர்ந்த சென்ட்சியுயீ என்னும் கடற் கொள்ளைக்காரனைச் சிறைபிடித்துச் சீனாவுக்குக் கொண்டு போனான். அங்கே அவன் கொல்லப்பட்டான்.[91] செங்ஹோவின் இரண்டாம் பயணம் கி.பி. 1408 செப்டம்பர்-அக்டோபரில் தொடங்கியது. இலங்கைக்குச் செல்வதே அந்தப் பயணத்தின் முதன்மையான நோக்கமாக இருந்தாலும் செங்ஹோ கொச்சி கோழிக்கோடு ஆகிய ஊர்களுக்கும் சென்றான் (பெய்ஹிசின்). இலங்கையின் அரசனான ஆ-லி-கூ-நை-இயூல் (அலகக்கொனாரா, அதாவது, ஆறும் விஜய பாஹு) செங்ஹோவை வஞ்சகமாக உள்நாட்டுக்கு அழைத்து, அவன் அங்கேயிருந்த நேரத்தில் சீனக் கப்பல்களைக் கொள்ளையடிப்பதற்குத் தன்னுடைய போர் வீரர்களை அனுப்பினான். செங்ஹோ அதனால் மனமுடைந்து போகவில்லை. இலங்கைப் போர்வீரர்கள் கடற்கரைக்குப் போய் விட்டதால், செங்ஹோ தன்னுடன் வந்திருந்த சுமார் 2000 சீனப் போர்வீரர்களின் உதவியுடன் தலைநகரைக் கைப்பற்றி,

[91] cf. Krom, *Hindoe-Javaansche Geschiedenis*, p. 434.

அரசனையும், அவனுடைய மனைவி மக்களையும், முக்கிய அலுவலர்களையும் பிடித்துச் சிறையில் அடைத்துவிட்டான். பின்னர்ச் செங்ஹோ அவர்கள் எல்லோரையும் தன்னுடைய கப்பல்களில் ஏற்றிக்கொண்டு சீனுவுக்குச் சென்றுன். பேரரசர் அவர்களிடம் இரக்கம் காட்டி, அவர்களை மன்னித்து, ஊருக்கு அனுப்பிவிட்டார். செங்ஹோவின் இலங்கைப் பயணங்களைவுச் சின்னமான சீனக் கல்வெட்டு ஒன்று கி.பி. 1911ஆம் ஆண்டில் இலங்கையிலுள்ள கல்லே என்னிமிடத்தில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.[92] கி.பி. 1412 டிசம்பருக்கும் 1413 ஜனவரிக்கும் இடையில் தொடங்கிய மூன்றும் பயணம் கி.பி. 1415 ஆகஸ்டு-செப்டம்பர் வரையில் நீடித்தது. மாஹுவானும் அந்தப் பயணத்தில் கலந்துகொண்டார். அந்தப் பயணத்தின்போது செங்ஹோ இலங்கை, கொச்சி, கோழிக்கோடு, மாலத்திவு, ஆர்மஸ் ஆகிய இடங்களுக்குச் சென்றுன். காயலுக்கும் செங்ஹோ சென்றதாக மிங் ஷிஹ் குறிப்பிடுகிறது. அது எப்படியிருந்தாலும், அந்தப் பயணத்தின்போது செங்ஹோ முதன் முறையாக இந்தியாவுக்கு அப்பாலும் சென்றுன் என்பது தெரிகிறது. அவனுடைய நான்காம் பயணம் கி.பி. 1416-க்கும் 1419-க்கும் இடையில் நடைபெற்றது. மாஹுவான் அந்தப் பயணத்திற் சேரவில்லை. அந்தப் பயணத்தின்போது செங்ஹோ ஆப்பிரிக்கா வரையிலும் சென்றுன். அதன் பயனுகப் பத்தொன்பது ராஜ்யங்கள் சீனுவுக்கு தூதுக் குழுக்களை அனுப்பின. அக்குழுக்கள் சீனப் பேரரசுக்குத் திறை கொண்டு சென்றன. ஐந்தாம் பயணம் 1421-1422இல் நடைபெற்றது. அதில் மாஹுவானும் சேர்ந்து கொண்டார். மிகமிக விரைவாக நிகழ்ந்த அந்தப் பயணத்தின் பயனுகப் பதினைந்து ராஜ்யங்கள் 1423இல் தங்களுடைய தூதுக் குழுக்களைச் சீனுவுக்கு அனுப்பின. அவற்றுள் கோழிக்கோடும் ஒன்றுகும். செங்ஹோவின் ஆறும் பயணம் 1424 பிப்ரவரி முதல் 1425 மார்ச்சு வரையில் நடைபெற்றது. அந்தப் பயணம் முடிந்து செங்ஹோ சீனுவுக்குத் திரும்புவதற்குள் அங்குப் புதுப்பேரரசர் ஒருவர் ஆட்சிக்கு வந்துவிட்டார். அவர் அத்தகைய பயணங்களை விரும்பவில்லை. எனவே, அவர் சீனுவின் தென்தலைநகரான நான்கிங்கின் காவற் பொறுப்பைச் செங்ஹோவுக்கு அளித்து அவனை அங்கேயே இருக்குமாறு பணித்தார். ஆனுல், அந்தப் பேரரசர் கி.பி. 1425 மே மாதத்தில் இறந்துபோனுர். புதிதாக வந்த பேரரசர் ஐந் தாண்டுகளுக்குப் பின்னர் அந்தப் பயணங்களை மீண்டும் தொடங்குமாறு செங்ஹோவுக்கு ஆணையிட்டார். செங்ஹோ

[92] *Spolia Zeylanica*, viii (1913) pp. 122-32.

ஏழாம் முறையாகத் தன்னுடைய பயணத்தைத் தொடங்கினான். அதுவே அவனுடைய கடைசிப் பயணமாகவும் இருந்தது. கி.பி. 1430இல் தொடங்கிய அந்தப் பயணத்தின்போது செங்ஹோ கோழிக்கோடு, கொல்லம், கொச்சி, ஆகிய இடங்களுக்குச் சென்றான். அவனுடன் மாஹுவானும், பெய்ஹிசினும் இருந்தார்கள். செங்ஹோ மாலத்தீவுக்கும் சென்றான் என்று மிங் ஷிஹ் குறிப்பிடுகிறது. அந்தப் பயணத்தின்போது மாஹுவான் மெக்காவுக்குச் சென்றார் என்று கருத இடமிருக்கிறது.

செங்ஹோவே இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவன். அவனுடைய தந்தையார் ஒரு ஹாஜி. ஆனாலும், அவன் புத்த மதத்தின்பால் ஈடுபாடு கொண்டவனாய் இருந்தான். பல மதங்களின் நற்கூறுகளையும் திரட்டிப் போற்றும் இத்தகைய இயல்புக்கு மங்கோலிய ஆட்சிக் காலத்தில் பல எடுத்துக் காட்டுகள் இருந்தன.[93]

இவ்வாறு வெளியுலகத்தைப் பற்றிய எத்தனையோ செய்திகளை அறிந்து சீனமக்கள் தங்கள் அறிவைப் பெருக்கிக் கொண்டார்கள். ஆனால், அதன்பின்னர் வெகு விரைவில் வந்த ஐரோப்பியர்களுக்கு ஈடுகொடுப்பதற்கு அந்த அறிவு போதவில்லை. எனினும், மேலே கண்ட பயணங்களைப் பற்றிய குறிப்புகள், மார்க்கபோலோ இபன் பதூதா ஆகியவர்களுடைய காலத்திற்கும், முன்னைய போர்ச்சுகீசியர் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தைப் பற்றி நாம் தெரிந்துகொள்வதற்கு உதவுகின்றன.

**மாஹுவானுடைய நூல்**

மாஹுவானுடைய நூல் முதன்முதலில் கி.பி. 1451இல் வெளியாயிற்று. அவருடைய நடை கல்வியறிவில்லா மாலுமி ஒருவனின் நடையைப் போன்றது. சலிப்பூட்டும் அளவுக்கு ஏராள்மான சொற்களை அவர் பயன்படுத்தியுள்ளார். இலக்கிய நயம் அந்த நடையிற் சிறிதும் இல்லை. அவருடைய நூலின் பெயர் 'யிங்-யை-ஷெங்-லான்' என்பதாகும். 'பெருங்கடற் கரைகளின் வருணனை' என்பது அதன் பொருள். க்ரோவன்வெல்டும் பிலிப்சும் தம்முடைய ஆராய்ச்சிக்கு இந்த முதற் பதிப்பைத்தான் பயன்படுத்தினார்கள். சாங் ஷெங் என்பவர் மாஹுவானின் நூலைத் திருத்தி எழுதி அதனுடைய நடைக்கு மெருகேற்றி

[93] Pelliot : *Les grands voyages maritimes Chinois au debut du XVe siecle*, TP. xxx (1933), pp. 237-452; and *Encore a propos des voyages des, Tcheng Houo*, TP. xxxii (1936), pp. 210-22.

இருக்கிறார் (கி.பி. 1522). அந்தத் திருந்திய பதிப்பை ராக்ஹில் மொழிபெயர்த்திருக்கிறார் XXXIV.[94]

தனிக் கவர்ச்சியுடைய வேறு சில குறிப்புகளும் இந்த நூலில் பிற்சேர்க்கைகளாக இடம் பெற்றுள்ளன. அவை பின்வருமாறு: இந்துமாக் கடலில் பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் நடைபெற்ற நீர்வழிச் செலவு (பிற்சேர்க்கை I); இடைக்காலக் கடல்கடந்த வாணிகத்தின் வரலாற்றில் குஜராத்திகள் கொண்டிருந்த பங்கு (பிற்சேர்க்கை II); மலாக்காவுக்குச் சென்ற இந்திய வணிகர்களும் வாணிகப் பண்டங்களும் (பிற்சேர்க்கை III).

[94] **Duyvendak**, *op, cit.*

# I. மெகஸ்தனிஸ்

## அ. தப்ரபானே

தப்ரபானேயிக்கும் தலைநிலத்திற்கும் இடையில் ஓர் ஆறு ஓடுவதால் தப்ரபானே தலைநிலத்திலிருந்து பிரிந்துநிற்கிறது என்றும், அங்கு வாழும் மக்கள் பலையோகோனாய்[1] என்று சொல்லப்படுகிறார்கள் என்றும், இந்தியாவில் கிடைப்பதைக் காட்டிலும் அதிகமான பொன்னும் முத்தும் அங்கே கிடைக்கின்றன என்றும் மெகஸ்தனிஸ் எழுதிவைத்துள்ளார். தப்ரபானேயின் ஒரு பகுதியில் காட்டு விலங்குகளும் யானைகளும் வசிக்கின்றன; அவை இந்திய விலங்குகளைக் காட்டிலும் பெரியவை. இன்னொரு பகுதியில் மக்கள் வாழ்கிறார்கள்.

— *Ancient India as describeel by Megasthenes and Arrian,*
J. w. McCrindle, pp. 62 – 63.

## ஆ. 1. பாண்டியா

பண்டேய நாடு பெண்களால் ஆளப்படுகிறது. அந்த நாட்டின் முதல் அரசி ஹெர்க்குலிசின் மகள் என்று சொல்வர். அந்த நாட்டில்தான் நைசா நகரம் இருக்கிறது என்று சொல்கின்றனர். அது போலவே அங்கேதான் ஜுபிட்டரின் மலையும் இருக்கிறது. அதற்கு மெராஸ் என்று பெயர். மெராஸ் மலையிலுள்ள ஒரு குகையில் தந்தை பாக்கஸ் வளர்ந்தார் என்று இந்தியர்கள் சொல்கிறார்கள். பாக்கஸ் என்னும் பெயர் அவர் தம்முடைய தந்தையின் தொடையிலிருந்து பிறந்தார் என்னும்

[1] பலையோகோனாய் என்பது பாலி–ஜனங்கள் என்ற தொடரின் மாற்றுரு என்றும் புனிதக் கொள்கையைப் பின்பற்றும் மக்கள் என்று அத்தொடர் பொருள்படும் என்றும் மெக்ரிண்டில் விளக்குகிறார். ஆனால், அவ்விளக்கம் மனநிறைவு தருவதாயில்லை.

நம்பமுடியாத கதைக்குக் காரணமாயிற்று. அந்தக் கதை பலருக்கும் தெரிந்த ஒன்றன்றோ? சிந்து நதியின் கடல்வாய்க்கு அப்பால் க்ரைசே, அர்கயர் என்னும் இரு தீவுகள் இருக்கின்றன. அங்கு அளவிட இயலாத உலோகங்கள் கிடைக்கின்றன. அதனால் அந்தத் தீவுகளின் மண் பொன்னாலும் வெள்ளியாலும் ஆனது என்று ஆசிரியர் பலர் சொல்கின்றனர்.

—*Op. cit.* 156.

## 2. ஹெர்க்குலிசும் பண்டேயாவும்

ஹெரக்லிஸ் இந்தியாவில் இருந்தபோது அவருக்கு ஒரு பெண் மகவு பிறந்தது. அதற்கு அவர் பண்டையா என்று பெயரிட்டார். அந்தப் பெண்ணுக்கு அவர் கடல் வரையில் பரவியிருக்கும் இந்தியாவின் தென்பகுதியை வழங்கினார். அந்தப் பகுதியில் அவளுடைய ஆட்சிக்குட்பட்ட மக்களை 365 கிராமங்களில் குடியேற்றி, ஒவ்வொரு கிராமமும் அரசுக் கருவூலத்திற்குக் சேர வேண்டிய திறைப் பொருள்களை ஒவ்வொரு நாள் செலுத்த வேண்டும் என்று ஆணையிட்டார். திறை செலுத்திய கிராமத்தினர், திறை செலுத்தாத கிராமத்தினர் யாரேனும் இருந்தால் அவர்களை வற்புறுத்தித் திறை செலுத்துமாறு செய்வதற்கு அந்த ஏற்பாடு துணை புரிந்தது. அதனால் அரசிக்குத் துணையாக எப்போதும் சிலர் இருப்பர்.[2].

—*Op. cit-158—59*

## இ. இந்திய விலங்குகள்[3]

(17) முன்னர்ச் சொல்லப்பட்ட கடலில் ஒரு மிகப் பெரிய தீவு உள்ளது என்றும் அதன் பெயர் தப்ரபானே என்றும் சொல்கிறார்கள். அந்தத் தீவு மிகவும் நீளமானது என்றும் மலைப் பாங்கானது என்றும் நான் கேள்விப்பட்டேன். அதனுடைய நீளம் 7000 ஸ்டேடியா, அகலம் 5000 ஸ்டேடியா.[4] அங்கே

[2] See *Pandyan Kingdom*, p 34.

[3] இந்த விசித்திரச் செய்திகள் மெகஸ்தனிஸ் எழுதிவைத்தவை என்று ஈலியன் தம்முடைய Hist. Anim என்னும் நூலில் கூறுகிறார். ஆனல் இக்கூற்று உண்மை என்பதற்குப் போதுமான ஆதாரம் இல்லை. ஈலியன் கி.பி. 117 முதல் 138 வரையில் ஆட்சி செய்த ஹட்ரியன் காலத்தில் வாழ்ந்தவர்.

[4] இந்தத் தீவின் பரப்பை லத்தீன்-கிரேக்க ஆசிரியர்கள் மிகைப் படுத்தியே எழுதிவைத்துள்ளார்கள்.—McCrindle.

நகரங்களே இல்லை. மக்கள் அனைவரும் கிராமங்களிலேயே வாழ்கிறார்கள். அங்கு மொத்தம் 750 கிராமங்கள் இருக்கின்றன. மக்கள் மரத்தால் ஆன வீடுகளில் வசிக்கிறார்கள். சில வீடுகள் நாணல், புல் முதலியவற்றாலும் கட்டப்பட்டுள்ளன.

(18) தீவுகளைச் சூழ்ந்துள்ள கடலில் ஆமைகள் இருக்கின்றன. அவ்வாமைகள் மிகமிகப் பெரியவை. எனவே, அவற்றின் ஓடுகளை மக்கள் வீட்டுக் கூரைகளாகப் பயன்படுத்துகிறார்கள். ஒவ்வோர் ஓடும் 15 முழ நீளமுள்ளது. அதனால் அதனடியில் பல மக்கள் தங்கிக் கதிரவன் கடுவெப்பத்திலிருந்து தங்களைக் காத்துக்கொள்ளலாம். ஆமையோடு தருகின்ற குளிர்நிழலை மக்கள் பெரிதும் விரும்புகிறார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக, ஆமையோட்டுக் கூரை கடுமழையிலிருந்து மக்களைக் காக்கிறது. சாதாரண ஓடு வேய்ந்த கூரையைக் காட்டிலும் ஆமையோட்டுக் கூரை சிறந்தது. அதன்மீது விழுகிற பெருமழைத்தாரை எளிதில் வழிந்தோடி விடுகிறது. அதனடியில் இருக்கிற மக்கள் மழையின் சடசட என்ற பேரொலியைக் கேட்கிறார்கள். ஆனால் அவர்கள் மீது ஒரு சொட்டு நீரும் விழுவதில்லை. அன்றியும் பெருமழை பெய்தால் சாதாரணக் கூரையோடுகள் உடைந்து போவதைப் போல ஆமையோட்டுக் கூரை உடைந்துபோவதில்லை. ஆமையோடு மிகவும் கெட்டியானது. பாறையிற் குடைந்த குழிவைப் போலவும் இயற்கை மலைமுழைஞ்சைப் போலவும் அது உறுதியாய் இருக்கிறது. சாதாரண ஓட்டுக் கூரை உடைந்துபோகும். அதனால் மக்கள் வேறு வீடுகளுக்குச் செல்லும் அவசியம் உண்டாகிறது. ஆனால், ஆமையோட்டுக் கூரைவீடுகளில் வசிப்பவர்களுக்கு அத்தகைய கவலையும் தொல்லையும் இல்லை.

ஆமைகள்

பெருங்கடலில் இருப்பதும் தப்ரபானே என்று சொல்லப் படுவதுமான அந்தத் தீவில் ஏராளமான தென்னந் தோப்புகள் இருக்கின்றன. தோப்புகளில் உள்ள தென்னை மரங்கள் வரிசை வரிசையாகவும் ஒழுங்காகவும் வளர்க்கப் பட்டுள்ளன. அந்த ஒழுங்கைக் காணும்போது வியப்பும் மலைப்பும் ஒருங்கே தோன்றும். மக்களுக்கு மகிழ்வூட்டுவதற்காக வைத்துள்ள பூங்காக்களில், தெரிந்தெடுக்கப்பட்ட நல்ல இடங்களில், தோட்டக்காரர்கள் நட்டு வளர்த்திருக்கும் நிழல்மரங்கள் எவ்வளவு ஒழுங்காகவும் வரிசையாகவும் இருக்குமோ அவ்வளவு ஒழுங்காகவும் வரிசை யாகவும் அந்தத் தென்னை மரங்கள் இருக்கின்றன. அந்தத்

யானைகள்

தீவில் யானைகள் கூட்டங் கூட்டமாக இருக்கின்றன. அவை மிகவும் பெரியவை. அந்த யானைகள் தலைநிலத்தில் இருக்கும் யானைகளைக் காட்டிலும் உருவத்தில் பெரியவை; வலிவு மிக்கவை; எல்லா வகையிலும் நுண்ணறிவு மிகுந்தவை. தீவில் வாழும் மக்கள் அந்த யானைகளைப் பிடித்து எதிரிலுள்ள தலைநிலத்திற்கு ஏற்றுமதி செய்கிறார்கள். அந்த வேலைக்காகவே அவர்கள் தனிப்படகுகளைக் கட்டுகிறார்கள். படகுகளுக்கு வேண்டிய மரம் தீவிலுள்ள காடுகளில் கிடைக்கின்றது. யானைகள் கலிங்க நாட்டு மன்னனுக்கு விற்கப்படுகின்றன.

**கடலில் வாழும் அஞ்சுவரு பேருருவுடைய விலங்குகள்**

தீவு மிகவும் பெரிதாய் இருப்பதால் உள்நாட்டில் வாழும் மக்கள் கடலைக் கண்டதேயில்லை. தீவைச் சுற்றிலும் கடல் இருக்கிறது என்று மற்றவர்கள் அவர்களிடம் சொல்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால், அவர்களோ வெனில் ஏதோ ஒரு பெரிய கண்டத்தில் வாழ்ப வர்களைப் போலவே தங்கள் வாழ்நாளைக் கழிக் கிறார்கள். அதுபோலவே கடற்கரையில் வாழும் மக்களுக்கும் யானை வேட்டையைப் பற்றிய நேர் அனுபவம் கிடையாது. அதைப் பற்றி மற்றவர் சொல்வதைத்தான் அவர்கள் கேட்டிருக்கிறார்கள். அவர்களுடைய நேரமெல்லாம் கடலில் மீன் பிடிப்பதிலும், ஆழ்கடலில் வாழும் அஞ்சுவரு பேருருவ விலங்குகளை வேட்டையாடுவதிலுமே கழி கின்றது. தீவைச் சூழ்ந்துள்ள கடலில் கணக்கில் அடங்கா மீன்கள் இருக்கின்றன. அவற்றுள் சிறு மீன்களும் இருக்கின்றன, மிகப் பெரிய மீன்களும் இருக்கின்றன. பெரிய மீன்கள் சிலவற்றிற்குச் சிங்கத்தலையும், சிலவற்றிற்குச் சிறுத்தைத் தலையும், சிலவற்றிற்கு ஆட்டுக்கிடாய்த்தலையும் இருக்கின்றன. இன்னும் எத்தனையோ வகையான காட்டுவிலங்குகளைப் போன்ற மீன்களும் இருக்கின்றன. இவை எல்லாவற்றைக் காட்டிலும் வியத்தகு செய்தி என்னவெனில், சில மீன்கள் சாட்டிரின் உருவைப் பெற்றிருப்பதுதான். (சாட்டிர் என்பது குதிரைக் காதும் வாலும் மனித வடிவும் உடைய வனதெய்வம் ஆகும்.) சில மீன்கள் பெண்களைப் போல இருக்கின்றன. ஆனால், அவற்றிற்குத் தலைமயிர் இல்லை. அதற்குப் பதிலாகப் பொடிமுள் கற்றைகள் இருக்கின்றன. இந்தக் கடலில் விசித்திரமான உருவுடைய சில விலங்குகள் இருக்கின்றன என்றும், அவற்றைப் படத்தில் வரைந்து காட்டுவதற்கு எந்த ஓவியனாலும் இயலாது என்றும், காண்போர் மனத்தில் மலைப்பு ஏற்பட வேண்டும் என்பதற்காகப் பலவேறு விலங்குகளின் பலவேறு பகுதிகளை ஒட்டவைத்தது போலச் சில கோர உருவங்களை ஓவியர்கள்

வரைந்து காட்டுகிறார்கள் என்றும் உண்மையின் பெயரால் சிலர் உறுதி கூறுகின்றனர். இந்த விசித்திர விலங்குகளுக்கு வால் இருக்கிறது என்றும், பிற பகுதிகள் சுருண்டும் மிக நீண்டும் இருக்கின்றன என்றும், கால்களுக்குப் பதிலாக வளை நகங்களும் துடுப்புப்போன்ற உறுப்புகளும் இருக்கின்றன என்றும் சொல்கின்றனர். அன்றியும், அவை நீரில் மட்டுமன்றி நிலத்திலும் வாழ்கின்ற விலங்குகள் என்றும், இரவில் அவை ஆடு மாடுகளைப் போல மேய்ச்சல் நிலத்திலிருக்கின்ற புல்லை மேய்கின்றன என்றும், பறவைகளைப் போல விதைகளையும் கொட்டைகளையும் பொறுக்கித் தின்கின்றன என்றும் கேள்விப்படுகிறேன். பேரீச்சம் பழத்தை அவைகள் மிகவும் விரும்புகின்றன. பேரீச்சம் பழம் முற்றிக் கனிந்திருக்கும்போது, அந்த விலங்குகள் தங்களுடைய சுருள் உறுப்புகளால் மரத்தைச் சுற்றி வளைத்துக் கொள்கின்றன. அவ்வுறுப்புகள் எளிதில் வளையக்கூடியவையாகவும், உறுதியாகவும் இருக்கின்றன. பின்னர் அவை மரத்தை வேகமாகவும் வலிமையாகவும் ஆட்டுகின்றன. அந்த ஆட்டத்தின் வேகத்தில் மரத்திலிருக்கும் பழங்கள் கீழே விழுகின்றன. அவ்வாறு உதிர்கின்ற பழங்களை அந்த விலங்குகள் ஆவலோடு தின்று மகிழ்கின்றன. பின்னர் இரவு முடிந்து வைகறை தொடங்கும் நேரத்தில் அவை கடலுக்குள் முழுகி மறைந்து விடுகின்றன. திமிங்கிலங்களும் இந்தக் கடலில் இருக்கின்றன என்று சொல்கிறார்கள். ஆனால் அவை கரையின் அருகில் வந்து சூரை மீன்களுக்குகாகக் காத்திருக்கின்றன என்பது உண்மையன்று. இந்தக் கடலில் இருவகையான கடற்பன்றிகள் இருக்கின்றன என்று சொல்கிறார்கள்; ஒருவகையைச் சேர்ந்த கடற்பன்றி மூர்க்கமானது என்றும், மிகவும் கூர்மையான பற்களையுடையது என்றும், கொடிய இரக்கமற்ற இயல்புடையது என்றும் சொல்கிறார்கள். ஆனால், இரண்டாம் வகையைச் சேர்ந்த கடற்பன்றி இயற்கையாகவே மென்மையுடையதென்றும், மகிழ்ச்சியாகத் துள்ளி விளையாடும் இயல்புடையதென்றும், வாலைக் குழைக்கும் நாயைப் போலப் பழகக் கூடியதென்றும் சொல்கிறார்கள். அதனை யார் வேண்டுமானாலும் தடவிக் கொடுக்கலாம்; ஆளைக் கண்டு ஓடாது; தின்பண்டம் ஏதாவது கொடுத்தால் அதனை மகிழ்ச்சியாக ஏற்றுக்கொள்கிறது.

—*Ancient India as described by Megasthenes and Arrian*, J. W. McCrindle, pp. 169—172.

# II. கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் காஞ்சியும் சீனாவும்

கி.பி. முதல் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் என்று கருதப்படுகின்ற பான் கூ என்னும் சீன எழுத்தாளர் இட்சியன் ஹான் சூ என்ற தம்முடைய நூலில் பின்வருமாறு எழுதியுள்ளார்:

'ஜெனான்[1] என்னும் நாட்டின் எல்லையிலிருந்து, சியுவென் ஹோ-பூ என்னும் இடங்களிலிருந்து, மரக்கலத்தில் ஐந்து மாதம் பயணஞ் செய்த பின்னர் நாம் டோன்-யுவான் என்னும் இராஜ்யத்தை அடைகிறோம். அதன் பின்னர் இருபது நாள் பயணஞ்செய்தால் நாம் சென்-லி- என்னும் இராஜ்யத்தை அடையலாம். அங்கிருந்து பூ-கான்-டு-லூ[2] என்னும் இராஜ்யத்தை அடைவதற்குத் தரை வழியாகப் பத்து நாளைக்குமேற் பயணஞ் செய்யவேண்டும். பின்னர் இரண்டு மாதத்திற்குமேல் மரக்கலத்தில் பயணஞ் செய்தால் ஹுவாங்ட்சே என்னும் இராஜ்யத்தை அடையலாம். அந்த நாட்டு மக்களின் பழக்கவழக்கங்கள் பொதுவாக ட்சூ-யை நாட்டு மக்களின் பழக்கவழக்கங்களை ஒத்திருக்கின்றன. அந்த நாடுகள் எல்லாம் மிகவும் பரந்தவை. அங்கு மக்கள் நெருக்கம் அதிகமாய் இருக்கிறது. அங்கு நாம் கண்டிராத விசித்திரமான பொருள்கள் உற்பத்தியாகின்றன. பேரரசர் வூவின் காலந் தொட்டு (கி.மு. 140-86) அந்த நாடுகள் எல்லாம் சீனாவுக்குத் திறைசெலுத்தி வருகின்றன.[3] அரண்மனை 'மஞ்சள் வாயிலில்' அரசாங்க நிர்வாகத்தைச் சேர்ந்த மொழிபெயர்ப்பாளர்கள் இருக்கிறார்கள். தங்களுடன் வர விரும்புகிறவர்களை அழைத்துக்

**பயணவழி**

[1] மேல் அன்னாம், டோன்கின் வளைகுடாவின் உட்பகுதியில்.

[2] பாகன்—Ferrand, JA. 11:14, p. 47.

[3] அதாவது, சீனாவுடன் வாணிகத் தொடர்பு வைத்திருந்தன.

கொண்டு, அவர்கள் கடல்வழியாகச் சென்று, தங்களுடன் எடுத்துச்சென்ற பொன்னையும் பட்டையும் கொடுத்து, அவற்றிற்கு மாருக ஒளிமிக்க முத்து, கண்ணுடி,[4] மணிக்கற்கள், தங்கள் நாட்டில் கிடைக்காத புதுப் பொருள்கள் ஆகியவற்றை வாங்கிக்கொண்டு வருகிருர்கள். அவர்கள் செல்கின்ற நாடுகளில் வாழ்கின்ற மக்கள் அவர்களுக்கு உணவுப் பொருள்களை அளித்து அவர்களோடு சேர்ந்து உண்கிருர்கள். வெளிநாட்டு வாணிகக் கப்பல்கள் தங்களுக்குள் முறை போட்டுக்கொண்டு அவர்களை ஏற்றிச் சென்று அவர்கள் போகவேண்டிய இடங்களில் இறக்கு கின்றன. அந்த வாணிகத்தின்மூலம் அந்த வெளிநாட்டினரும் இலாபம் அடைகின்றனர். சில சமயங்களில் அந்த வெளி நாட்டினர் கொலையிலும் கொள்ளையிலும் ஈடுபடுகின்றனர். மேலும், கப்பலைக் கவிழ்க்கும் புயல்களுக்கும் பயணிகள் அஞ்ச வேண்டியவர்களா யிருக்கிருர்கள். மேலே சொன்ன இடையூறு ஒன்றுமே நிகழவில்லை யென்ருலும் அவர்கள் பயணத்தை முடித்துக்கொண்டு தங்களுடைய நாட்டுக்குத் திரும்புவதற்குப் பல ஆண்டுகள் ஆகின்றன. அவர்கள் கொண்டுவருகிற பெருமுத்து ஒவ்வொன்றும் ஏழு அங்குல நீளமுள்ளது.[5] யுவான்-சே காலத்தில் (கி.பி. 1—6) பேரரசர் வாங் மாங், அரசாங்கத்தின் இயல்பை மாற்றியமைத்து அதனுடைய பெருமையை நிலைநாட்ட விரும்பினர். அதற்காக அவர் ஹுவாங்-ட்சே அரசருக்கு விலையுயர்ந்த பரிசுகளை அனுப்பி, தம்முடைய பேரவைக்கு ஒரு தூதுக் குழுவைத் அனுப்பவேண்டு மென்றும், அக்குழுவின ரிடம் உயிருள்ள காண்டாமிருகம் ஒன்றனை அனுப்ப வேண்டு மென்றும் சொல்லியனுப்பினர், ஹுவாங்-ட்சே ராஜ்யத்தி லிருந்து, மரக்கலத்தில் ஏறி, சுமார் எட்டு மாதம் பயணஞ் செய்தபின் பீ—இட்சாங் என்னும் இடத்தை அடைகிறேம்.[6] மீண்டும் கடல்வழியாகச் சுமார் இரண்டு மாதம் பயணம் செய்தால் ஜெனன் நாட்டில் சியாங்லின் எல்லையை அடைகிறேம். ஹுவாங்-ட்சே ராஜ்யத்திற்குத் தெற்கில் சென்-ட்செங்-பூ என்னும் இராஜ்யம் இருப்பதாகச் சொல்கிருர்கள். ஹான் மொழி பெயர்ப்பாளத் தூதர்கள் அங்கிருந்து திரும்புகிருர்கள்.[7]

[4] பி-லியூ-லி : இதனை வைடூரியம் என்றும் சிலர் சொல்கின்றனர்.

[5] இந்த வாக்கியத்தின் மொழிபெயர்ப்புச் சரியாக இருக்க முடியாது என்று பெலியோவே கருதுகிறர்.

[6] இது மலேயாத் தீபகற்பத்திலுள்ள பிசாங் தீவு. JA. 11:14. p. 47.

[7] Pelliot in *Toung Pao*, xiii (1912), pp. 457-9; cf. JA. 11 : 13 pp. 451-5.

பான்-கூ இரு வேறுபட்ட செய்திகளை ஒன்றாக இணைத்து எழுதியிருக்கிறார் என்று பெலியோ கூறுகிறார். ஒரு செய்தி பேரரசர் வூ (கி.மு. 140—86) காலத்தைச் சேர்ந்தது. இன்னொரு செய்தி கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்க ஆண்டுகளில் வாங் மாங் அனுப்பிய தூதுக் குழுவைப் பற்றியது. பான்-கூவின் குறிப்புகளில் தெளிவற்ற தன்மையைக் காண்கிறோம். எனினும் அவற்றில் நாம் காணும் செய்திகள் வரலாற்று உண்மைகளாய் இருக்கின்றன; கட்டுக் கதைகள் அல்ல. இந்தப் பயணம் இந்தோ சீனவின் கரையிலிருந்த ஊர்களிலிருந்துதொடங்கி ஓராண்டுக்குப் பின் முடிகிறது. (பயணத்தின் இறுதியில் சீனர்கள் அடைகின்ற நாட்டில் முத்தும் கண்ணாடியும் கிடைக்கின்றன.) அதனால் அந்த நாடு இந்துமாக் கடலின் மையத்தில் இருந்திருக்கவேண்டும்.[8] இன்னும் சொல்லப் போனால், அக்கடலின் மேற்கு எல்லையில் அந்த நாடு இருந்திருக்கக்கூடும். ஹுவாங்-ட்சே என்பது அபிசீனியாவில் இருந்த ஓர் இடமென்று ஹெர்மன் கருதுகிறார். அது மலேயாவில் இருந்த இடமென்று லாபர் கருதுகிறார். இவ்விரு கருத்துகளையும் பெரண்டு (Ferrand) ஏற்றுக் கொள்ள மறுக்கிறார்.[9] அம்மறுப்பு நியாயமாகத் தோன்றுகிறது. அவர் கருத்தை இப்போது காண்போம். ஒலியியல் அடிப்படையில் ஹுவாங்-ட்சே என்பதைக் காஞ்சி என்று கொள்ளலாம். ஹான் காலத்திற்கு அது பொருத்தமாய் இருக்கிறது. கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் சீனவுக்கும் காஞ்சிக்கும் தொடர்பு இருந்தது என்பது வரலாற்று உண்மையாய் இருக்கக்கூடும்[10] என்றும் பெரண்டு கருதுகிறார். பதினோராம் நூற்றாண்டில் சோழமண்டலக் கரையிலிருந்து சீனவுக்குச் சென்ற தூதுக் குழு ஒன்று கான்டன் நகரை அடைவதற்கு எட்டு மாதம் பிடித்தது என்று நமக்குத் தெரியும். அதற்குப் பத்துப் பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற அத்தகைய ஒரு பயணத்திற்குப் பத்துப் பன்னிரண்டு மாத காலம் ஆயிற்று என்று பான்-கூ சொல்கிறார். பான்-கூவின் காலத்தில் சீனக் கலங்கள் இந்தியாவுக்கு வரவில்லை என்பதையும் நெடுங்காலத்திற்குப் பின்னரே அவை அந்தப் பயணத்தை மேற்கொண்டன என்பதையும் நாம் மனத்திற் கொள்ள வேண்டும். சீனர்கள் வெளிநாட்டுக் கலங்களில்தான் அந்தப் பயணத்தை மேற்கொண்

[8] Pelliot, *ibid.*, p. 460

[9] JA. 11: 13, p. 453 *n*. 2.

[10] JA. 11: 14, pp. 45-6.

டார்கள் என்பதைப் பான்-கூ தெளிவாக எடுத்துரைக்கிருர். ஆனல், கி.மு. முதல் நூற்ருண்டிலிருந்தே தென்னிந்தியப் பண்டங்கள் கடல்வழியாகச் சீனுவுக்குச் சென்றன என்பதையும் கிறிஸ்து சகாப்தத் தொடக்கத்தில் சீனப் பேரரசின் ஆணைப்படி சீனத் தூதுக் குழு ஒன்று இந்துமாக்கடல் முழுவதையும் கடந்து சென்றது என்பதையும் பான்-கூ தெளிவாகவே எடுத்துரைக்கிருர்.[11]

[11] TP. xiii, p. 461.

## III. ஸ்ட்ராபோ

### அ. 1. அகஸ்டசின் அவைக்குச் சென்ற பாண்டிய (?) தூதுக்குழு :—

எகிப்திலிருந்து இந்தியாவிற்கு நைல் நதி அரபு வளைகுடா ஆகியவற்றின் வழியாகச் செல்கின்ற இன்றைய வணிகர்கள் கங்கை நதி வரையிலும் பயணஞ் செய்வதில்லை. அவர்கள் அறியாதவர்கள்; தாங்கள் கண்ட இடங்களைப் பற்றி எழுது வதற்குத் தகுதியற்றவர்கள். இந்திய ராஜ்யங்களுள் ஒன்றி லிருந்து ஒரு தூதுக் குழு அகஸ்டஸ் சீசரின்[1] அவைக்கு வந்தது. அந்தக் குழுவை அனுப்பிய அரசன் பாண்டியன் என்பவன் ஆவான். ஆனால் சிலர் அந்த அரசன் போரஸ் என்று சொல் கின்றனர். அந்தக் குழு அகஸ்டசுக்கு அளிப்பதற்காகப் பரிசுகள் சிலவற்றையும் கொண்டுவந்தது. அந்தக் குழுவுடன் ஒரு சோபிஸ்டும் வந்தான். சோபிஸ்டு என்றால் பண்டைய கிரேக்கக் கோட்பாடுகளுள் சோபிசம் என்ற கோட்பாட்டைப் பின்பற்றியவர் என்று பொருள்படும். அந்த சோபிஸ்டு ஏதென்ஸ் நகரில் தீக்குளித்து உயிர் துறந்தான். கலனஸ் என்பவனும் அலெக்சாண்டர் முன்னிலையில் அவ்வாறு செய்தான் என்பதை நாம் அறிவோம்.

*Ancient India as described in Classical Literature.*
J.w. McCrindle p. 9, para. 4.

### அ. 2. அகஸ்டசின் அவைக்குச் சென்ற இந்தியத் தூதுக்குழு

டாப்னேயின் அருகிலுள்ள ஆன்டியோக் என்னுமிடத்தில் அகஸ்டசின் அவைக்குச் சென்றுகொண்டிருந்த இந்தியத் தூதுக்

[1] இந்தத் தூதுக்குழுவைப் பற்றிய ஐயுறவான விமர்சனத்தை JRAS—1860 பக்கம் 321இல் காண்க.

குழு ஒன்றைத் தாம் கண்டதாக நிக்கலஸ் டெமாஸ்கஸ் சொல்கிறார்.[2] அந்தத் தூதுக் குழுவில் மூன்று உறுப்பினர் இருந்ததாக அவர் சொல்கிறார். ஆனால் அந்தக் குழுவினர் எடுத்துச் சென்ற கடிதத்தைப் பார்த்தால் இன்னும் பல பேர் அக்குழுவில் இருந்தனர் என்பதும் அவர்கள் இறந்து போனார்கள் என்பதும் நமக்குத் தெரியும். நீண்ட பயணமே அவர்கள் இறந்து போனதற்கு முக்கிய காரணமாய் இருந்தது. அந்தக் கடிதம் தோலின்மீது கிரேக்க மொழியில் எழுதப் பட்டிருந்தது. அதை எழுதியவர் போரஸ் என்ற அரசர் என்றும், அவருக்கு அடங்கிய அரசர்கள் 600 பேர் இருந்தனரெனினும் அகஸ்டஸ் சீசரின் நட்பை (அவர்) பெரிதும் விரும்பினார் என்றும், தம்முடைய ராஜ்யத்தின் வழியாய் அகஸ்டஸ் எங்கேனும் போக விரும்பினால் அதற்குத் தமது இசைவினைத் தருவதாகவும், அகஸ்டஸ் யாதேனும் பெரும் பணியை மேற்கொள்வதாய் இருந்தால் அதற்குத் தம் உதவியைத் தருவதாகவும் போரஸ் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தார் என்றும் நிக்கலஸ் டெமாஸ்கஸ் சொல்கிறார். தூதர் கொண்டுவந்த பரிசுகளை ஆடையில்லாப் பணியாட்கள் எண்மர் சீசருக்குக் கொடுத்தனர். அவர்கள் இடைக்கச்சை அணிந்திருந்தார்கள்; உடலெல்லாம் வாசனைத் தைலம் பூசியிருந்தார்கள். பரிசுப் பொருள்களுள் பத்து முழ நீளமுள்ள ஒரு பாம்பும், ஏனைய பெரும் பாம்புகள் சிலவும், மூன்று முழ நீளமுள்ள ஆற்று ஆமையும், கழுகைக் காட்டிலும் பெரிய கௌதாரி ஒன்றும் இருந்தன. அன்றியும், ஹெர்மிசைப் போல இரு கைகளும் இல்லாத ஒரு மனிதனையும் இந்தியர்கள் அகஸ்டசுக்குப் பரிசு தந்தார்கள். அவனை நானே என் கண்ணால் கண்டேன். பரிசுப் பொருள்களோடு வந்த ஒரு மனிதன் ஏதன்சில் தீக்குளித்து உயிர்விட்டான். துன்பங்களிலிருந்து விடுதலையடைய விரும்பியவர்களும், செழிப்பு மிகுந்த வாழ்க்கையை அனுபவித்தவர்களும் இவ்வாறு உயிர் துறப்பது வழக்கம். ஏதன்சில் உயிர் துறந்த மனிதன் இரண்டாம் வகையைச் சேர்ந்தவன். அவன் வேண்டியவெல்லாம் வேண்டியவாறே அவனுக்கு இதுவரையில் கிடைத்து வந்தன. இனிமேலும் உயிருடன் இருந்தால் அவனுக்கு யாதேனும் துன்பம் நேரிடக்கூடும். எதிர்பாரா வகையில் அவ்வாறு ஏற்படக்கூடிய துன்பத்தைத் தவிர்ப்பதற்காக அவன் உயிர்விடத் துணிந்தான். எனவே, அவன் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த

[2] இவர் ஹெராட் என்னும் வலிமை வாய்ந்த அரசனுடைய நெருங்கிய நண்பர். அகஸ்டசும் இவரைப் பெரிதும் மதித்தார். இவர் Universal Historyயை 144 பகுதிகளில் எழுதினார்.

சிதையின்மீது புன்முறுவலோடு பாய்ந்தான். அப்போது அவனுடைய ஆடையில்லா உடம்பில் நறுமணத் தைலம் பூசப் பட்டிருந்தது; அவனுடைய இடையில் கச்சை யிருந்தது. அவனுடைய கல்லறையின்மீது, 'பார்கோசாவிலிருந்து [4] வந்த சர்மனோச்செகாஸ் [3] என்னும் இந்தியன் தன்னுடைய சொந்த நாட்டின் வழக்கப்படி அமரத்துவம் எய்திய பின்னர் இந்தக் குழியில் படுத்திருக்கிறான்' என்று எழுதப்பட்டது.

— *Ibid.*, pp. 77-78, Para 73[5].

[3] ஸ்ரமணாச்சாரியா (?)

[4] பர்கைசா, பரோச்.

[5] ட்ரஜனுடைய காலத்தில் (கி.பி. 98-117) வாழ்ந்த ப்ளோரஸ் தம்முடைய Epitome of Roman History என்னும் நூலின் இறுதியில் இதே தூதுக் குழுவைப்பற்றி எழுதியுள்ளார் :-

'சித்தியர்களும் சர்மாஷியர்களும் நம்முடைய நட்பை விரும்பித் தங்களுடைய தூதர்களை அனுப்பினார்கள். செரஸ்களும் அவ்வாறே செய்தார்கள். அதுபோலவே, 'கதிரவனுக்குக் கீழே வாழ்கின்ற' இந்தியர்களும் அணி மணிகளையும், யானைகளையும் தங்கள் பரிசுப் பொருள்களாகக்கொண்டு வந்தார்கள். அவர்களுடைய மேனி நிறம் அவர்கள் வேறு தட்பவெப்ப நிலையுடைய நாட்டிலிருந்து வந்தவர்கள் என்பதை எடுத்துக் காட்டியது. இருந்தாலும், நான்கு ஆண்டு பிடித்த அவர்களுடைய நெடும் பயணத்தின் காரணமாகவே அவர்களைப் பேரரசர் வரவேற்பார் என்று அவர்கள் நம்பினார்கள்.'

டரகோ (டரகோனா) என்னும் ஊரைச் சேர்ந்த ஒரோசியஸ் என்பவரும் அந்த ஊரில் தாம் இருந்த காலத்தில் (சுமார் கி.பி. 420) அகஸ்டசின் அவைக்குத் தூதுக் குழு ஒன்று வந்தது என்று தாம் எழுதியுள்ள வரலாற்று நூலில் (vi-12) எடுத்துரைக்கிறார். நிகலஸ் குறிப்பிடுகிற தூதுக் குழுவின் காலம் ஒரோசியஸ் குறிப்பிடுகிற தூதுக்குழுவின் காலத்தினின்று வேறுபடுவதால், இரு வேறு தூதுக்குழுக்கள் இந்தியாவிலிருந்து வந்தன என்று சிலர் கருதுகின்றனர். ஆனால், அது சரியான கருத்தாக இருக்க இயலாது. ஒரோசியஸ் எல்லாச் செய்திகளையும் சரியான கால வரையறைப்படி எழுதியிருப்பார் என்று நம்ப முடியாது. அவர் அவ்வளவு சிறந்த வரலாற்றாசிரியர் அல்லர்.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த டயன் காசியசும் இந்த இந்திய தூதுக்குழுவைப்பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளார் :-

அகஸ்டஸ் சாமோசில் இருந்தபோது (கி.மு. 21) "பல தூதுக்குழுக்கள் அவனுடைய அவைக்கு வந்தன. இந்தியர்கள் முதலில் அவனுடன் நட்புறவு கொண்டதாகத் தெரியப்படுத்தினார்கள். அதன்பின் அவர்கள் அதனை உறுதி செய்யும் வகையில், அவனைக் கண்டு, பரிசுகள் பலவற்றை அளித்தார்கள். அவற்றுள் புலிகளும் இருந்தன. ரோமானியர்கள் புலியைப் பார்த்தது அதுவே முதல் முறையாகும். கிரேக்கர்களும் அதற்குமுன் புலியைப் பார்த்ததில்லை என்றே நான் நம்புகிறேன். அன்றியும், அவர்கள் அகஸ்டசுக்கு ஒரு சிறுவனையும் பரிசாக அளித்தார்கள்

## ஆ. இலங்கை

இந்தியாவில் மிகத் தெற்கிலுள்ள பகுதிகளுக்கும் தெற்கேயிருக்கும் கடலில் தப்ரபானே என்னும் தீவு இருக்கிறது என்று சொல்கிருர்கள். (இந்தியாவின் தென்பகுதிகள் கோனியாக்காய் என்னும் நாட்டிற்கு அருகில் இருக்கின்றன). இந்தியாவின் தென்பகுதியிலிருந்து ஏழுநாள் பயணஞ் செய்தால் தப்ரபானேத் தீவை யடையலாம். அது எதியோப்பியாவை நோக்கி 8000 ஸ்டேடியாத் தொலைவு பரந்திருக்கிறது. அங்கும் யானைகள் மிகுதியாய் வாழ்கின்றன. இந்தச் செய்திகளை எரஸ்டோதனிஸ் எழுதிவைத்துள்ளார். இந்தச் செய்திகளோடு ஏனைய ஆசிரியர்கள் எழுதியுள்ள துல்லியமான செய்திகளையும் சேர்த்துத்தான் நாம் இந்தியாவைப் பற்றிய குறிப்புகளை எழுதுகிறோம்.

தப்ரபானே 5000 ஸ்டேடியா அளவுள்ளது என்று ஒனிசிக்ரிட்டாஸ்[6] சொல்கிருர். ஆனல் அது அந்தத் தீவின் அகலமா நீளமா என்று அவர் தெரிவிக்கவில்லை. அத்தீவு தலைநிலத்திலிருந்து இருபது நாள் பயணத்திற்கு அப்பால் இருக்கிறது என்றும், அந்தப் பயணத்திற்குப் பயன்படும் மரக்கலங்களின் பாய்மரங்கள் பாய்கள் ஆகியவை மிகக் குறைந்த தரமுடையவையாய் இருப்பதோடு அவை நமக்குப் புதிதான ஏதோ ஒரு வகையாய்ச் செய்யப்பட்டிருப்பதாலும் அந்தக் கலங்கள் கடல் மீது சரியாகச் செல்வதில்லை யென்றும், தப்ரபானேயிக்கும்

---

அவனுக்குக் கைகள் இரண்டும் இல்லை. (ஹெர்மிஸின் சிலையைப்போல அவன் இருந்தான் என்று கூறலாம்.) எனினும், மற்றவர்கள் தங்களுடைய கைகளை எவ்வளவு திறமையாகப் பயன்படுத்துவார்களோ அவ்வளவு திறமையாக அந்தப் பையன் தன் கால்களைப் பயன்படுத்தினன். கால்களாலேயே அவன் வில்லை வளைத்தான், வேலை எறிந்தான், எக்காளத்தை வாயில் வைத்து ஊதினன். ஏதன்ஸ் குடிமக்களுக்கும், அப்போது ஏதன்சில் இருந்த அகஸ்டஸுக்கும் தன்னுடைய பெருமையைக் காட்டவேண்டும் என்று விரும்பியதாலோ என்னவோ ஜார்மாரஸ் என்னும் இந்தியன் தன்னுடைய உயிரை விடுவதற்குத் தீர்மானித்தான். டெமட்டர், பெர்சிபோன் ஆகிய இரு தெய்வங்களைப்பற்றிய ரகசிய வழிபாட்டில் தீக்கை பெற்றபின் அவன் தீக்குளித்தான். (வேற்று நாட்டினர்க்கு அவ்வாறு தீக்கை அளிப்பது பொதுவாகக் கிடையாது என்று சொல்லாம். எனினும், அகஸ்டசே அந்தத் தீக்கையை அளித்தார். அதைப்பற்றி யாரும் எதுவும் சொல்லவில்லை.) (McCrindle. *op. cit.* pp. 78-79).

[6] 'அலெக்சாண்டருடைய மாலுமிகளின் தலைவன் என்று இவனைச் சொல்வதற்குப்பதிலாக, கதைபளப்பவர்களின் தலைவன் என்று சொல்லலாம்.' —ஸ்ட்ராபோ (McCrindle, pp. 34-5.)

இந்தியாவுக்கும் இடையில் வேறு பல தீவுகள் இருக்கின்றன என்றும், தப்ரபானேதான் கடைசியில் இருக்கிறதென்றும், அந்தத் தீவைச் சூழ்ந்துள்ள கடலில் வாழும் மீன் போன்ற விலங்குகள் நீர், நிலம் ஆகிய இரண்டிலும் வாழ்கின்ற இயல்புடையவை யென்றும், அவற்றுட் பல மாடு குதிரை முதலிய நிலம் வாழ் விலங்குகளைப் போன்ற தோற்றமுடையவை என்றும் ஒனிசிக்ரிட்டாஸ் சொல்கிறார்.

—*Ibid.* pp. 20-21, Paras 14 and 15.

## இ. காலஸ் அரேபியாவுக்கும் இந்தியாவுக்கும் சென்றது

என்னுடைய நண்பன் ஈலியஸ் காலசின் தலைமையிற் சென்ற ரோமானியப் படை அரேபியா பெலிக்ஸை வென்று அந்த நாட்டிற்குள் சென்றதும், அலெக்சாண்ட்ரிய வணிகர்களின் மரக் கலங்கள் நைல் நதி, அரபு வளைகுடா ஆகியவற்றின் வழியாக இந்தியாவுக்குச் செல்வதும் அந்த நாடுகளைப் பற்றி நாம் நமது முன்னோர்களைக் காட்டிலும் அதிகமான செய்திகளைத் தெரிந்து கொள்வதற்குக் காரணமாய் இருக்கின்றன. காலஸ் எகிப்தின் படையாட்சியாளனாய் இருந்தபோது நான் அவனுடன் இருந்தேன். அவனுடன் சேர்ந்து நான் சயீன், எதியோப்பிய எல்லை ஆகியவற்றிற்குச் சென்றேன். மயோஸ் ஹார்மஸ்[7] என்னும் இடத்திலிருந்து இந்தியாவிற்குச் சுமார் 120 கப்பல்கள் சென்றதை நான் அப்போது கண்டேன். டாலமி மரபினர் காலத்தில் அவ்வாறு இந்தியாவுக்குச் செல்லும் துணிவுடையவர்களைக் காண்பது மிகவும் அரிது என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

— *Ancient India as deseribed in classical literaturee,* McCrindle, p. 98.

[7] இன்று ஜிபாட்டின் என்று சொல்லப்படும் தீவுக் கூட்டத்தின் இருப்பிடத்தை வைத்து மயாஸ் ஹார்மஸின் இருப்பிடத்தை உறுதி செய்யலாம். (அட்சரேகை—27-12 வடக்கு; தீர்க்கரேகை—35-55 கிழக்கு).

# IV. ப்ளினி

## அ. தப்ரபானே (இலங்கை) வருணனை

தப்ரபானேயிக்கு, 'ஆன்டிக்தானஸ்' என்ற பெயரும் உண்டு. அந்தப் பெயரில் அந்த நாடு நெடுங்காலம் வரையிலும் வேறோர் உலகம் என்று கருதப்பட்டு வந்தது. அலெக்சாண்டருடைய காலமும் அவருடைய வெற்றிகளும் அது ஒரு தீவு என்பதைத் தெளிவுபடுத்தின. அந்தத் தீவில் வாழ்ந்த யானைகள் இந்திய யானைகளைக் காட்டிலும் பெரியவை யென்றும், போர் விருப்புடையவை யென்றும் அலெக்சாண்டருடைய கடற்படைத் தலைவனான ஒனிசிக்ரிட்டாஸ் சொல்லியிருக்கிறான். இந்தியாவையும் அந்தத் தீவையும் ஆறு ஒன்று பிரிக்கிறதென்றும், அந்தத் தீவில் வாழும் மக்கள் பாலியோகோனி என்று சொல்லப் படுகிறார்கள் என்றும், இந்தியாவிற் கிடைப்பதைக் காட்டிலும் அங்கு அதிகமான தங்கமும் பெரிய முத்தும் கிடைக்கின்றன என்றும் மெகஸ்தனிஸ் எழுதிவைத்துள்ளார். அதனுடைய நீளம் 7000 ஸ்டேடியா என்றும், அதன் அகலம் 5000 ஸ்டேடியா என்றும்,[1] அங்கு நகரங்கள் இல்லையென்றும், கிராமங்கள் மட்டுமே இருக்கின்றன என்றும், அவற்றின் எண்ணிக்கை 700 என்றும் எரட்டாஸ்தனிஸ் எழுதிவைத்துள்ளார். அந்தத் தீவு கிழைக் கடலில் தொடங்கி, இந்தியாவின் எதிரில் கீழ் மேலாய்ப் பரவியிருக்கிறது. பெப்பைரசால் கட்டப்பட்டவையும் நைல் நதியில் பயணஞ் செய்த கலங்களின் பாய்மர அமைப்பைக் கொண்டவையும் ஆகிய கலங்களில் முன்காலத்தில் பயணஞ் செய்தபோது, ப்ரசியை நாட்டிலிருந்து அந்தத் தீவு இருபது நாள் பயணத்திற்கு அப்பால் இருந்தது என்று மக்கள் கருதினார்கள்.

[1] இத்தகைய உயர்வுநவிற்சி கிரேக்க ரோமானிய ஆசிரியர்களுடைய நூல்களில் நாம் வழக்கமாகக் காணும் ஒன்றுதான். 'அந்தத் தீவின் மிக அதிகமான நீளம்—தெற்கு வடக்காக—271½ மைல்; அதனுடைய மிக அதிகமான அகலம் 137½ மைல். —McCrindle.

ஆனால், நம்முடைய கப்பல்களின் வேகத்தை வைத்துப் பின்னர்க் கணக்கிட்டபோது அந்தப் பயணத்திற்கு ஏழு நாள் போது மென்பது தெரிந்தது. இந்தியாவுக்கும் அந்தத் தீவுக்கும் இடையில் ஆழமில்லாப் பகுதிகள் ஏராளமா யிருக்கின்றன. அந்த இடங்களில் நீரின் ஆழம் ஆறு காலடிக்குமேல் இல்லை. எனினும், சில இடங்களில் நங்கூரம் தரையைத் தொட இயலாத அளவிற்குக் கடற்கால்கள் ஆழமா யிருக்கின்றன. அதனால், கலத்திற்கு முன்பகுதி பின்பகுதி என்று இல்லாமல் இரண்டு பக்கமும் முன்பகுதியாகவே வடிவமைத்துவிடுகிறார்கள். அப்படிச் செய்வதால் மிகவும் குறுகிய கடற்கால்களிற் செல்லும் போது கலம் திரும்பாமலே முன்னும் பின்னும் போகக்கூடிய வசதி கிடைக்கிறது. அந்தக் கலங்களின் சரக்கேற்ற எடையளவு 3000 ஆம்பொரே யாகும்.[2] கடற்பயணத்தை மேற்கொள்ளும் தப்ரபானே மாலுமிகள் விண்மீன்களைப் பார்த்துத் திசை தெரிந்து கொள்வதில்லை. சப்தரிஷி மண்டலத்தை அவர்கள் காண்பதில்லை. ஆனால், அவர்கள் தங்களுடன் பறவைகளைக் கொண்டு செல்கிறார்கள். அவற்றைப் பறக்கவிட்டு, அவை எந்தத் திசையில் செல்கின்றன என்பதைக் கண்டு, அந்தத் திசையில் நிலம் இருக்கிறது என்பதை அறிந்து, தங்கள் கலங்களைச் செலுத்திக் கரையை அடைகிறார்கள்[3]. ஆண்டில் நான்கு மாதக் காலமே அவர்களுடைய கடற்பயணத்திற்கு ஏற்ற பருவமாய் இருக்கிறது. வேனில் கதிர்த்திருப்பத்தை யடுத்த நூறு நாட்களில் அவர்கள் கடலில் தங்கள் கலத்தைச் செலுத்து வதேயில்லை. அப்போது அந்தக் கடல்களில் குளிர்காலமாய் இருக்கிறது.[4]

இத்தனை செய்திகளையும் நாம் முன்னைய ஆசிரியர்களுடைய நூல்களின் வாயிலாய்த் தெரிந்துகொள்கிறோம். ஆனால், அந்தத் தீவைப் பற்றி இன்னும் துல்லியமான அறிவைப் பெறுகின்ற வாய்ப்பு நமக்குக் கிடைத்தது. பேரரசர் க்ளாடியசின் ஆட்சியில்[5] அந்தத் தீவிலிருந்து தூதர்கள் வந்தார்கள். அவர்கள் வருவதற்கேற்ற சூழ்நிலை எவ்வாறு உருவாகியது என்பதை இப்போது காண்போம். 'அன்னியஸ் ப்ளோகாமஸ்'

**ரோமுக்கு வந்த தூதுக் குழு**

[2] ஆம்பொரா என்பது ஒரு டன்னில் நாற்பதில் ஒரு பங்கு.—McCrindle.

[3] புத்தமதக் கதைகளிலும் இந்தச் செய்தியைக் காண்கிறோம்.

[4] தென்மேற்குப் பருவக் காற்று ஜூன் முதல் அக்டோபர் வரையில் அடிக்கிறது.—McCrindle.

[5] கி.பி. 41-54.

என்பவருடைய விடுதலை பெற்ற அடிமையொருவன் அரேபியாவைச் சுற்றிக் கொண்டு செல்லும்போது, கார்மேனியாவிற்கு வடக்கே யிருந்துவந்த புயற்காற்றில் அவன் கலம் சிக்கிச் கொண்டது. பதினைந்து நாட்களுக்குப் பின்னர் அது தப்ரபானே யிலிருந்த துறைமுகங்களுள் ஒன்றான ஹிப்புரி[6] என்னும் இடத்தில் கரை சேர்ந்தது. அவனை அந்நாட்டு மன்னன் அன்பாக வரவேற்று அவனுக்குத் தேவையான வசதிகளை அளித்தான். ஆறு மாதத்தில் அவன் அந்த நாட்டு மொழியை அறிந்து கொண்டான். அதன்பின் அவன் அரசன் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் விடையளித்தான். அவனிடமிருந்து கைப்பற்றப்பட்ட நாணயங்களைப் பார்வையிட்ட அரசன், தெனரிகளின்மீது பொறிக்கப்பட்டிருந்த உருவங்கள் பலவகைப் பட்டவையாய் இருந்ததால் அவை பல்வேறு பேரரசர்கள் காலத்தில் வெளியிடப்பட்டவை என்பதை உணர்ந்தான். எனினும், அவை யெல்லாமே ஒரே எடையுடையவையாய் இருந்தன. எனவே ரோமானியர்களும் அவர்களுடைய பேரரசர்களும் நேர்மையின் பால் காண்டற்கரிய பெரும்பற்றுக் கொண்டவர்கள் என்று நினைத்த அரசன் அவர்களைப் பெரிதும் மதித்துப் பாராட்டினான். அதனால் அவன் ரோமானியர்களோடு நட்புறவு கொள்ள விரும்பினான். எனவே, ரச்சியா (ராஜா) என்பவன் தலைமையில் நால்வரடங்கிய ஒரு தூதுக் குழுவை ரோமுக்கு அனுப்பினான்.

அந்தத் தூதர்களிடத்திலிருந்து தப்ரபானேயைப் பற்றிய பல செய்திகளைத் தெரிந்து கொண்டோம். புதுச்செய்திகள் அவை பின் வருமாறு :

தப்ரபானேயில் 500 நகரங்கள் இருக்கின்றன. பலீசிமுண்டஸ் என்னும் நகருக்கு அருகில் தெற்கு நோக்கி யமைந்த துறைமுகம் ஒன்று இருக்கிறது. பலீசிமுண்டஸ் அந்தத் தீவிலேயே மிகவும் புகழ்பெற்ற நகரம். அந்த நகரில்தான் அரசன் வசிக்கிறான். அதனுடைய மக்கள் தொகை 2,00,000. உள்நாட்டில் மெகிஸ்பா என்னும் ஏரி ஒன்று இருக்கிறது. அதனுடைய சுற்றளவு 375 மைல். அந்த ஏரியில் சிறுசிறு தீவுகள் இருக்கின்றன. அவை மிகவும் செழிப்பானவை. எனினும், கால்நடைகள் மேய்வதற்குத்தான் அவை பயன் படுகின்றன.[7] அந்த ஏரியிலிருந்து இரண்டு ஆறுகள் தோன்றிப்

[6] குதிரைமலை (?) : *contra* JRAS 1904 pp. 539-41. தப்ரபானே என்பது சுமாத்ராவாக இருக்கக்கூடும் என்று இந்தக் கட்டுரை எடுத்துரைக்கிறது.

[7] அத்தகைய ஏரி எதுவும் இல்லை.

பாய்கின்றன. அவற்றுள் ஒன்றின் பெயர் பலீசிமுண்டஸ் என்பதாகும். அவ்யாறு அதே பெயருடைய நகரின் அருகிலுள்ள துறைமுகத்தை அடைகிறது. துறைமுகத்தை அடைவதற்குமுன் அது மூன்று கிளைகளாகப் பிரிகிறது. அவற்றுள் ஒன்றின் அகலம் ஐந்து ஸ்டேடியா. அதுதான் மிகக் குறுகியது. மிக விரிவான கிளை பதினைந்து ஸ்டேடியா அகலமுடையது. மூன்றும் கிளையின் பெயர் சைதரா என்பதாகும். அது இந்தியாவை நோக்கி வடதிசையில் ஓடுகிறது. தப்ரபானேத் தீவுக்கு மிகவும் அருகில் உள்ள இந்தியப் பகுதி கொலியகம்[8] என்னும் முனையாகும். அது தப்ரபானேயிலிருந்து நான்கு நாள் பயணத்திற்கு அப்பால் இருக்கிறது.

கொலியகத்திற்கும் தப்ரபானேயிக்கும் இடையில் கதிரவன் தீவு இருக்கிறது. அந்த இடத்திலும் அதனைச் சுற்றியுள்ள இடங்களிலும் கடல் நீருக் கடியில் ஏராளமான மரங்கள் வளர்ந் திருக்கின்றன[9]. அதனால் அங்கெல்லாம் கடலின் நிறம் மிகவும் பச்சையாய் இருக்கிறது. கப்பலின் சுக்கான் தாக்குவதால் அடியிலுள்ள மரங்களின் உச்சிக் கிளைகள் ஒடிந்து போவது அடிக்கடி நடைபெறும் நிகழ்ச்சியாய் இருக்கிறது. தூதர்கள் நம் ஊரில் தெரியும் சப்தரிஷி மண்டலம் கார்த்திகை போன்ற விண்மீன் கூட்டங்களைக் கண்டு, அவை புதியதொரு வானில் பூத்திருக்கின்றனவோ என எண்ணிப் பெருவியப்பு அடைந் தார்கள். அவர்களுடைய நாட்டில் எட்டாம் நாளிலிருந்து பதினாறும் நாள் வரையில்தான் சந்திரன் தொடுவானத்திற்கு மேல் தெரிகிறது என்றும்,[10] மிகுந்த ஒளிவிட்டுக் கொண் டிருக்கும் அகத்திய நட்சத்திரமான பெரிய விண்மீன்தான் அங்கு மண்ணுக்கு இரவில் ஒளி தருகின்றது என்றும் அவர்கள் சொன்னார்கள். `விண்மீன்களின் நிழல் அவர்கள் ஊரின் பக்கம் விழாமல் நம் ஊரின் பக்கந்தான் விழுகிறது என்பதும், கதிரவன் வலக்கைப் பக்கம் தோன்றி இடக்கைப் பக்கம் மறையாமல், இடக்கைப் பக்கம் தோன்றி வலக்கைப் பக்கம் மறைகிறது என்பதும் அவர்களுடைய பெருவியப்புக்கு முக்கியமான காரணங்களாய் இருந்தன.[11]

[8] கோரி (கோடி) முனை.

[9] பவழப் பாறைகளா ?

[10] கட்டுக் கதையாய் இருக்கலாம். இன்றேல் ரோமானியர்கள் தவறாகப் புரிந்துகொண்டதன் விளைவாயும் இருக்கலாம்.

[11] இதுவும் ஒரு கட்டுக்கதை.

அந்தத் தூதர்கள் இன்னும் பல செய்திகளையும்
சொன்னார்கள். அவற்றைக் கீழே தருகிறோம் :

செரஸ்

இந்தியாவிற்கு எதிரில் இருக்கும் அவர்களுடைய தீவின் பகுதி 10,000 ஸ்டேடியா நீளமுடையது. அது தென்கிழக்காக நீண்டு செல்கிறது. ஹெமோடி மலைக்கு அப்பால் செரஸ் நாடு இருக்கிறது. செரஸ் மக்களோடு அந்தத் தீவுக்கு வாணிகத் தொடர்பு இருக்கிறது.[12] ரச்சியாவின் தந்தை செரஸ் நாட்டுக்குப் பலமுறை சென்றிருக்கிறான். அவ்வாறு செல்கின்ற பயணிகள் செரஸ் நாட்டை அடைந்ததும் செரஸ் மக்கள் அவர்களை வரவேற்கிறார்கள். அவர்கள் பிறநாட்டு மக்களைக் காட்டிலும் அதிக உயரமாய் இருக்கிறார்கள். அவர்களுடைய மயிரும் கண்ணும் மஞ்சள் நிறமாய் இருக்கின்றன அவர்களுடைய குரல் இனிய ஓசையும் பண்பு நயமும் அற்றதாய் இருக்கிறது. அவர்கள் தங்கள் கருத்துகளை மொழியின்மூலம் வெளிப்படுத்த இயலாத நிலையில் உள்ளார்கள்.

செரஸ் மக்களைப் பற்றி அந்தத் தூதர்கள் சொன்ன ஏனைய செய்திகள் நம் நாட்டு வணிகர்கள் சொல்லும் செய்திகளை ஒத்திருக்கின்றன. நம்முடைய வணிகர்கள் இங்கிருந்து கொண்டு போகும் பண்டங்களை செரஸ் மக்களுடைய நாட்டிலுள்ள ஆறு ஒன்றின் மறுகரையில் வைக்கிறார்கள். செரஸ்மக்கள் தங்களுடைய பண்டங்களையும் அங்கே வைக்கிறார்கள். இருவகைப் பண்டங்களையும் ஒப்புநோக்கிய பின், பண்டமாற்றின் தன்மை அவர்கட்குப் பிடித்தால், அவர்கள் தங்களுடைய பண்டங்களை விட்டுவிட்டு நம்முடைய பண்டங்களை எடுத்துச் செல்கிறார்கள்.[13] தொலைவிலிருந்து எத்தகைய பொருள்கள் எவ்வளவு கீழான நோக்கத்தோடு கொண்டுவரப்படுகின்றன என்பதை எண்ணிப் பார்ப்பவர்கள் நம்நாட்டு மக்கள் சுகபோக வாழ்க்கையில் காட்டும் விருப்பத்தை வெறுப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

12 சீன வாணிகத்தைப்பற்றிய இந்தப் பழைய குறிப்பைக் கவனிக்க.

13. Cf. Periplus, Sec. 65 and Fa-hien, *post.*

இங்கே கூறப்படும் செரஸ் என்னும் சொல் சேரரைக் குறிக்கும் என்று சிலர் கருதுகின்றனர். ஆனால் அது தவறு. இச்சொல் சீனரைக் குறிக்கிறது. ஹெமோடி மலை என்றால் இமயமலை என்று கொள்ளலாம்.

*Contra* JRAS. 1904, pp. 359-62:

சேரர் என்ற கருத்தைக் கென்னடி ஆதரிக்கிறார். (539-41) See also IHQ. XIV. 3 Winternitz Comm. Vol. pp. 487-9.)

தப்ரபானே பிற நாடுகளிலிருந்து இயற்கையாகவே தனித்திருக்கிறது என்றாலும், அங்கும் மக்கள் சுகபோக வாழ்க்கையை விரும்பத்தான் செய்கிறார்கள். நம்முடைய தீயொழுக்கங்கள் அவர்களிடத்திலும் காணப்படுகின்றன. அவர்களும் பொன்னையும் வெள்ளியையும் உயர்வாக மதிக்கிறார்கள். ஆமையோட்டைப் போலத் தோற்றமளிக்கும் பளிங்குக் கல் அவர்கள் நாட்டில் இருக்கிறது. மேலும், அங்கு முத்தும் மணியும் இருக்கின்றன. அவர்களுடைய இன்ப வாழ்க்கைப் பொருள்கள் நம் நாட்டுச் சுக போகப் பொருள்களைக் காட்டிலும் சிறந்தவை. அவை அங்கு ஏராளமாய் இருக்கின்றன. அவர்களுடைய செல்வங்கள் நம் நாட்டுச் செல்வங்களைக் காட்டிலும் அதிகமாய் இருந்தாலும், செல்வச் செழிப்பால் அடைக்கூடிய இன்பக்கலையில் அவர்களைக் காட்டிலும் நாம் தேர்ச்சி பெற்றவர்கள் என்பதை அவர்கள் ஒப்புக் கொள்கிறார்கள்.

**அரசியல்–சமுதாய அமைப்பு**

அந்தத் தீவில் அடிமைகள் இல்லை. மக்கள் கதிரவன் தோற்றத்திற்கு முன்னரே எழுந்து விடுகிறார்கள். பகலில் அவர்கள் தூங்குவது இல்லை. அவர்களுடைய வீடுகள் தரை மட்டத்திலிருந்து ஓரளவுதான் உயரமாயிருக்கின்றன. தானிய விலையை யாரும் ஏற்றுவதேயில்லை. அந்தத் தீவில் நீதிமன்றங்கள் இல்லை; வழக்காடுபவர்களும் இல்லை. ஹெர்க்குலிஸ் அவர்கள் வணங்கும் கடவுள். அந்தத்தீவில் மக்களே தங்களுடைய அரசனைத் தெரிந்தெடுக்கிறார்கள். அரசன் முதியவனாயும் இனிமையும் மென்னயமும் உடையவனாயும் இருக்கவேண்டும். அவனுக்குப் பிள்ளைகள் இருத்தல் கூடாது. அரசனான பின்னர் அவனுக்குக் குழந்தை பிறந்தால் அவன் அரச பதவியைத் துறக்க வேண்டும். இல்லாவிட்டால் அரசுரிமை பரம்பரை உரிமையாகிவிடும். அதனை அந்தத் தீவின் மக்கள் விரும்பவில்லை. அரசனுக்கு உதவி செய்ய முப்பது ஆலோசகர்களைக் குடிமக்கள் நியமிக்கிறார்கள். அவர்களுள் பெரும்பாலார் தீர்மானித்தாலன்றி யாருக்கும் தண்டனை யளித்தல் கூடாது. அவ்வாறு தண்டனை யடைந்த குடிமகனுக்கு மேல்முறையீடு செய்ய உரிமையுண்டு. அப்படி யாரேனும் மேல்முறையீடு செய்தால், அதனை விசாரித்து நீதி வழங்குவதற்கு எழுபது பேர் கொண்ட அறங்கூறாயம் அமைக்கப்படும். மேல்முறையீடு செய்தவனுக்கு இந்த ஆயம் விடுதலை அளித்துவிட்டால், முன்னர் அவனுக்குத் தண்டனை தந்த முப்பது ஆலோசகர்களும் பெரும்பழிக் குள்ளாவார்கள். அவர்களுக்கு அதுவரையில் இருந்த மதிப்பு அனைத்தும் போய்விடும். அரசன் தந்தை

பாக்கஸைப் போல ஆடையணிந்து கொள்கிறான். (பாக்கஸ்–கிரேக்க மதுக் கடவுள்.) அந்தத் தீவின் மக்கள் அரேபியர்களை விரும்புகிறார்கள். அரசன் யாதேனும் தவறு செய்தால் அவனுக்கு மரண தண்டனை வழங்கப்படுகிறது. ஆனால், அவனை யாரும் கொல்வதில்லை. அவன் முகத்தில் யாரும் விழிக்க மாட்டார்கள்; அவனைக் கண்டாலே வேறுபுறம் திருப்பிக் கொள்வார்கள்; அவனுடன் எத்தகைய தொடர்பும் வைத்துக் கொள்ளமாட்டார்கள்; அவனுடன் பேசவும் மாட்டார்கள். விழாக்கள் போன்ற மகிழ்ச்சி நிரம்பிய நாட்களில் மக்கள் வேட்டையாடப் போய் விடுவார்கள். புலி வேட்டையும் யானை வேட்டையும் அவர்களுக்கு மிகவும் பிடிக்கும். மக்கள் நிலத்தை நன்றாய் உழுகிறார்கள். அவர்கள் திராட்சையைப் பயிரிடுவதில்லை. ஆனால் பிற பழங்கள் ஏராளமாய் விளைகின்றன. மீன் பிடிப்பதில் மக்கள் பெரு மகிழ்ச்சி யடைகிறார்கள். ஆமைகளைப் பிடிப்பதென்றால் அவர்களுடைய மகிழ்ச்சிக்கு எல்லையே யில்லை. அவை மிகப் பெரியவையாய் இருப்பதால், அவற்றின் ஓட்டின் கீழ் ஒரு குடும்பமே இருக்க முடியும்.[14] நூறு ஆண்டு என்பது வாழ்க்கையில் அவ்வளவு ஒன்றும் நீண்ட காலம் என்று அவர்கள் கருதுவதில்லை. இவையே தப்ரபானேயைப் பற்றி நாம் அறிந்துகொண்ட செய்திகள் ஆகும்.

—*Ancient India as described in Classical Literature*, McCrindle, pp 102—106.

## ஆ. இந்தியப் பயணங்கள்.

அரேபியாவிலுள்ள சயாக்ரஸ்.[15] என்னும் முனையிலிருந்து மேற்காற்றின் துணையுடன் இந்தியாவுக்குப் போகலாம் என்று பிற்காலத்தவர் கருதினர் என்பது மறுக்க இயலாத உண்மையாகும். அந்தக் காற்றிற்கு ஹிப்பாலஸ் என்று பெயர். அந்தப் பயணத்தின் தூரம் 1335 மைல் என்று கணக்கிட்டிருந்தனர். அதே முனையிலிருந்து இந்தியாவிலுள்ள துறைமுகங்களுள் ஒன்றான சிகரஸ்[16] என்னும் இடத்திற்கு விரைவாகச் செல்லக் கூடிய வழி ஒன்று இன்னும் சிறிது காலத்திற்குப்பின் கண்டு

[14] முன் பக்கங்களில் காணும் 1-இ என்னும் பகுதியைப் பார்க்க.

[15] இப்போது ராஸ் பர்ட்டாக் என்று சொல்லப்படுகிறது.—McCrindle.

[16] இது ஜெயகத் என்னும் துறைமுகமாய் இருக்குமென்று வின்சென்ட் கருதுகிறார்.—McCrindle.

பிடிக்கப்பட்டது. அந்த வழி முன்னைய வழியைக் காட்டிலும் தூரத்தில் குறைந்திருந்தது மட்டுமன்றி அபாயமும் குறைந்த தாய் இருந்தது. நெடுநாள் வரையிலும் அந்த வழியே இந்தியப் பயணத்திற்குப் பயன்பட்டு வந்தது. இறுதியில் வணிகன் ஒருவன் இன்னும் குறுகிய வழியொன்றைக் கண்டுபிடித்தான். இவ்வாறு பொருளாசையின் விளைவாக இந்தியநாடு நம் நாட்டுக்குப் பக்கத்தில் வந்துவிட்டது. அதனால், இப்போ தெல்லாம் ஆண்டுதோறும் பலர் இந்தியாவுக்குச் செல்கின்றனர். இந்தியக் கடல்களில் கொள்ளைக்காரர்கள் ஏராளமாய் இருப் பதால் இங்கிருந்து செல்லும் கப்பல்கள் வில்வீரர்களையும் ஏற்றிக் கொண்டு போகின்றன.

**முசிரீஸ்**

ஹிப்பாலஸ் என்னும் காற்று நிற்காமல் அடிக்குமானால் இங்கிருந்து இந்தியாவிலுள்ள வாணிக மையங்களுள் நமக்கு மிகவும் அண்மையிலுள்ள மையமான முசிரிசுக்கு நாற்பது நாளிற் சென்றுவிடலாம். ஆனால் முசிரிஸ் அவ்வளவாக விரும்பத்தக்க ஊரன்று. அதன் அருகிலுள்ள நிட்ரியஸ் என்னும் இடத்தில் கடற்கொள்ளைக்காரர்கள் இருக்கிறார்கள். வாணிகத்திற்குத் தேவையான பண்டங்களும் அங்கே போதுமான அளவில் இல்லை.[17] அன்றியும், கப்பல்கள் கரைக்கு நெடுந்தொலைவில் நிற்கவேண்டியதாய் இருக்கிறது. சரக்குகளைத் தோணிகளில் தான் கரைக்கு எடுத்துச்செல்ல வேண்டும். நான் இதனை எழுதிக்கொண்டிருந்த நேரத்தில் சிலோபோத்ராஸ் என்பவன் அந்நாட்டு மன்னனாய் இருந்தான். பெகரே என்று சொல்லப் படுகின்ற நியாசிண்டன் துறைமுகம் முசிரிசைக்காட்டிலும் வசதி யானது. அங்குப் பாண்டியன் ஆட்சி செய்துகொண்டிருந்தான். அவன் துறைமுக நகருக்கு வெகு தொலைவில் உள்நாட்டி லிருந்த மதுரை என்னும் நகரில் வசித்தான். கொட்டனாரா[18] என்னும் மாவட்டத்திலிருந்து படகுகள் மிளகை ஏற்றிக் கொண்டு பெகரேயிக்கு வந்தன. இந்த நாடுகளையும் துறை முகங்களையும் நகரங்களையும் பற்றிய குறிப்புகள் முன்னைய நூல் களில் இல்லை. எனவே, அந்த இடங்களின் பெயர்கள் நாளடை வில் மாறியிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. இந்தி யாவுக்குச் சென்றவர்கள் தங்களுடைய நாட்டுக்குத் திரும்பு

[17] பின்னால் பெரிப்ளஸ் முசிரிசைப்பற்றிக் கூறுவதைப் பார்க்க.

[18] 'தலைச்சேரிக்கு அருகில் உள்ள மிளகு விளையும் மையமான கோளத்து நாடுதான் கொட்டனாரா என்று சொல்லப்பட்டுள்ளது என்று டாக்டர் பர்னல் கருதுகிறார்'.—McCrindle.

வதற்கான பயணத்தை எகிப்து மாதமான டைபிஸ் என்னும் மாதத்தில் தொடங்குகிறார்கள். டைபிஸ் என்பது டிசம்பர் மாதமாகும். என்னதான் தாமதமாகப் புறப்பட்டாலும், எகிப்து மாதமான மெசிர் மாதம் 6ஆம் தேதிக்குள், அதாவது, ஜனவரி 15க்குள், புறப்பட்டுவிடுகிறார்கள். அவ்வாறு செய்வதால் அவர்கள் தங்கள் நாட்டிலிருந்து புறப்பட்ட ஆண்டிலேயே இந்தியாவுக்குப் போய்விட்டுத் திரும்பியும் வந்துவிட இயலும். அவர்கள் தென்கிழக்குக் காற்றுடன் இந்தியாவிலிருந்து புறப்படுகிறார்கள்; செங்கடலை யடைந்ததும் தென்மேற்கு அல்லது தெற்குக் காற்றுடன் பயணத்தைத் தொடர்கிறார்கள்.

—*Op. Cit.* pp. 111—112.

## V. எரித்ரியக் கடலின் பெரிப்ளஸ்.*

**பாரிகாஜா**

45. இந்தியாவில் ஆறுகள் பல இருக்கின்றன. இந்தியக் கடல்களில் வேலையேற்றமும் (கடல்நீர் கரையை நோக்கி எழுதல்) வேலை யிறக்கமும் (கடல்நீர் கரையிலிருந்து வடிதல்) அதிகமாய் இருக்கின்றன. அமாவாசையை யொட்டிய மூன்று நாட்களிலும் முழுநிலவை யொட்டிய மூன்று நாட்களிலும் இந்த ஏற்ற இறக்கங்கள் அதிகமாகவும் ஏனைய நாட்களில் குறைவாகவும் இருக்கின்றன. ஏனைய இடங்களைக் காட்டிலும் பாரிகாஜாவில் இந்த ஏற்ற இறக்கங்கள் மிக அதிகமாய் இருக்கின்றன. திடீரென்று கடலின் அடிப்பாகம் தெரியும்; அதன்பின் வெகு விரைவில் அங்குத்தண்ணீர் அலைமோதும். இன்னும் சிறிது நேரங்கழித்துப் பார்த்தால், கப்பல் சென்று கொண்டிருந்த இடத்தில் நீருக்குப் பதிலாக நிலந்தான் இருக்கும். வேலையேற்றத்தின்போது கடலின் ஆற்றல் எல்லாம் சேர்ந்து ஆற்று நீரைத் தள்ளும்.[1] அதனால் ஆற்றுநீர் முன்னோக்கிப் பாய்வதற்கு மாறாகப் பல ஸ்டேடியாத் தொலைவு பின்னோக்கிச் செல்லும்.

46. மேலே சொன்ன காரணங்களால் அனுபவமில்லாத மாலுமிகளும், அந்த வாணிக மையத்திற்கு முதன் முறையாக

* பெரிப்ளஸ் என்றால் கரையோரக் கடற்பயணம் என்பது பொருள்.

[1] "இளவேனிற் காலத்தில் காம்பே வளைகுடாவில் வேலையேற்றம் நிகழும்போது அலைகள் 33 அடி உயர்ந்து தாழ்கின்றன. அவை முன்னேறிச் செல்லும் வேகம் மணிக்கு ஆறு ஏழு நாட் ஆகும். சாதாரண அலைகள் 25 அடி ஏறி இறங்கும். அவற்றின் வேகம் மணிக்கு 4½ முதல் 6 நாட் வரையிலும் இருக்கும். அதனால் அங்குச் செல்லும் கப்பல்களுக்குப் பெருஞ்சேதம் ஏற்படும். எனவே, மாலுமிகள் காம்பேத் துறைமுகங்களை விட்டு வேறு துறைமுகங்களை நாடினார்கள். அவ்வாறுதான் முதலில் சூரத்தும் பின்னர் பம்பாயும் வளர்ந்தன என்று இம்பீரியல் கெஜட்டியார் ஆப் இந்தியா (IX, 297) எடுத்துரைக்கிறது."—Schoff. Cf. Ibn Battuta.

வருகின்ற மாலுமிகளும் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர்களுடைய கலங்களுக்குப் பேராபத்து ஏற்படக்கூடும். வேலை பொங்கியெழுந்து கரையை நோக்கிச் செல்லும்போது, அதனை எதிர்த்து நிற்க எந்தக் கலத்தாலும் இயலாது. கலத்தை ஒரேயிடத்தில் பிடித்து வைத்திருக்கும் நங்கூரம் நீரோட்டத்தோடு சேர்ந்து செல்லுமேயன்றி நிலைத்து நிற்காது. அதனால் பெருங் கலங்கள் நீரோட்டத்தால் இழுக்கப்பட்டு நீரடித் திடலில் மோதி உடைந்து சிதறிவிடும். சிறு படகுகள் அந்த வேகத்தில் கவிழ்ந்து விடும். வேலையிறக்கத்தின்போது கடல்நீர் வடிகிறது. அப்போது அத்துடன் கடலை நோக்கி வருகின்ற படகுகள் நீர்க்கால்களின் ஓரத்தில் ஒதுக்கப்படுகின்றன. அவற்றுக்கு முட்டுக் கொடுத்து நேராக வைத்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் மீண்டும் வேலையேற்றம் நிகழும்போது திடீரென்று வருகின்ற நீரில் படகு நிரம்பிவிடும். நாம் முன்னர்க் கண்டவாறு, வேலையேற்றமும் இறக்கமும் அமாவாசையன்று மிக அதிகமாய் இருக்கும். அப்போது இரவில் நிகழ்கின்ற வேலையேற்றம் மிகவும் வலிமையுடையதாயிருக்கும். கடல் அமைதியாய் இருக்கிறதென்று நினைத்துக் கலத்தைத் துறைமுகத்திற்குள் செலுத்தத் தொடங்கினால், திடீரென்று ஒரு பெரிய சேனை தூரத்தில் வருவது போன்ற இரைச்சல் கேட்கும். அடுத்த சில நிமிடங்களில் கடலே பொங்கியெழுந்து பேரிரைச்சலோடு நீரடித் திடல்களின் மீது பாய்ந்து மோதும். இத்தகைய பொங்கோதத்திற்கு பாரிகாஜா பேர்போனது.

**பொங்கோதம்**

47. பாரிகாஜாவுக்குப் பின்னுலிருக்கும் உள்நாட்டுப் பகுதியில் குக்குலங்கள் (tribes) பலவற்றைச் சேர்ந்த மக்கள் வாழ்கிறார்கள். அரத்தீ, அரக்கோசீ, காந்தாரீ[2] முதலியவர்களும், பொக்லெயிஸ்[3] என்னும் ஊரைச் சேர்ந்தவர்களும் அங்கே வாழ்கிறார்கள். பொக்லெயிசில்தான் பூசிபாலஸ் அலெக்சாண்ட்ரியா இருக்கிறது. இன்னும் மேலே சென்றால் பேராற்றல் மிக்க பாக்ட்ரியர்கள் இருக்கிறார்கள். பாக்ட்ரிய அரசனே அவர்களை ஆள்கிறான். மேலே சொன்ன பகுதிகளின் வழியாகத்தான் அலெக்சாண்டர் கங்கைநதி வரையிலும் படையெடுத்துச்

[2] காந்தார நாட்டு (தற்காலப் பிஷாவர்) மக்கள்.

[3] சமஸ்கிருதத்தில் புஷ்கலாவதி எனப்படும் காந்தார நாட்டின் மேற்குத் தலைநகரம்.

சென்ருர்.[4] அவர் டமிரிக்காவுக்கும் இந்தியாவின் தென் பகுதிக்கும் போகவில்லை. இன்றைக்கும் பாரிகாஜாவில் ட்ராக்மே என்னும் பண்டைய நாணயங்கள் செலாவணியில் இருக்கின்றன. அவற்றில் கிரேக்க எழுத்துகளும் அலெக்சாண்டருக்குப் பின்னர் ஆட்சி செய்த, அபாலோடோட்டஸ், மினண்டர் ஆகியவர்களுடைய சின்னங்களும் பொறிக்கப்பட்டுள்ளன.

48. பாரிகாஜாவிலிருந்து கிழக்கே போனுல் ஒஜீன்[5] என்னும் நகரை அடையலாம். அது முன்னர் ஒரு ராஜ்யத்தின் தலைநகராய் இருந்தது. அந்த இடத்திலிருந்து பாரிகாஜாவின் நலனுக்கும் நம்முடைய வாணிகத்திற்கும் தேவையான பொருள்கள் எல்லாம் வருகின்றன. அவற்றுள் அகேட், கார்னீலியன் ஆகிய மணிக்கற்களும், மஸ்லின் துணியும், பிறமென்றுகிலும், சாதாரணத் துணியும் அடங்கும். அந்தப் பகுதி இன்னும் மேலேயுள்ள பகுதி ஆகியவற்றிலிருந்து இலாமிச்சை பொக்லெயிஸ் வழியாக எடுத்துவரப்படுகிறது, அதாவது, காஸ்பபைரனே,[6] பரோபபனிசனே,[7] கபோலிடிக்[8] ஆகிய இடங்களிலிருந்து வருகிறது. சித்தியாவிலிருந்தும் அந்தச் சரக்கு வருகிறது. அது போன்றவைதான் காஸ்டஸும் பெடலியமும்.

49. பாரிகாஜாவில் ஒயின், செம்பு, வெள்ளீயம், ஈயம், பவழம், புட்பராகம், துணி, கச்சை, குங்கிலியம், சக்கிமுக்கிக்கல், கண்ணுடி, செந்தாளகம், அஞ்சனக்கல், நறுமணப் புல், பொன் வெள்ளி நாணயங்கள்[9] ஆகியவை இறக்குமதி யாகின்றன. இத்தாலி நாட்டு ஒயினை மக்கள் மிகவும் விரும்புகிருர்கள். அத்துடன் லவொடிசிய ஒயினும் அரேபிய ஒயினும் இறக்குமதி யாகின்றன. இறக்குமதியாகும் துணிகளுள் மெல்லிய துணி மட்டுமன்றிப் பலவகைப்பட்ட மலிவுத் துணிகளும் இருக்

[4] 'ஆசிரியர் அலெக்சாண்டரையும் மினண்டரையும் பிரித்தறிய இயலாமல் குழம்புகிருர்.'' Schoff. ஆனுல், அலெக்சாண்டர் தெற்கே போகாமல் கங்கை நதியை நோக்கிச் சென்ருர் என்று ஆசிரியர் சொல்ல விரும்புகிருர் என்றும் கொள்ளலாம்.

[5] பாலியில் உஜ்ஜேனி.

[6] கஸ்யபபுரம் (காச்மீரம்?)

[7] இந்துக்குஷ்,

[8] காபூல்.

[9] 'ரோமானிய நாணயங்களான அவுரியஸ், தெனரியஸ் ஆகியவை மேற்கு இந்தியா முழுவதிலும் செலாவணியில் இருந்தன. குஷாண, சத்ரப நாணயங்கள் அவற்றைப் பார்த்து அடிக்கப்பட்டவை.'—Schoff.

கின்றன. கச்சை ஒவ்வொன்றும் ஒவ்வொரு முழ அகலமுள்ளதாயும், பல வண்ணம் உடையதாயும் இருக்கிறது. நறுமணப் புல் மாட்டுத் தீவனமாகப் பயன்படுகிறது. இந்தப் பொருள்களை விற்று இந்திய நாணயங்களைப் பெறுகிற வணிகர்கள் நல்ல லாபம் அடைகிறார்கள். இறக்குமதிப் பொருள்களுள் அவ்வளவாக விலையுயர்ந்தது என்று கருதமுடியாத மருந்து செய்யும் அடங்கும். ஆனால், அது மிகக் குறைவாகத்தான் இறக்குமதியாகிறது. உயர்ந்த விலையுடைய வெள்ளிக் கலங்கள், பாடும் பையன்கள், அழகிய பெண்கள், உயர்தர ஒயின், மிக நேர்த்தியாய் செய்யப் பட்ட மெல்லிய துணிகள், தெரிந்தெடுத்த உயர்தரத் தைலங்கள் முதலிய பொருள்கள் அரசனுக்காக இறக்குமதியாகின்றன. இங்கிருந்து ஏற்றுமதியாகும் பொருள்கள் இலாமிச்சை, காஸ்டஸ், பெடலியம், யானைத் தந்தம், அகேட் கார்னீலியன் போன்ற மணிக்கற்கள், லைசியம், பலவகைப்பட்ட பருத்தித் துணிகள், பட்டுத் துணி, நூல், மிளகு முதலியவையும் பல நகரங்களிலிருந்து இங்கே கொண்டுவரப்படுகிற வேறு பொருள் களும் ஆகும். எகிப்திலிருந்து பாரிகாஜாவுக்கு வருகிற வாணிகக் கப்பல்கள் ஜுலை மாதத்தில் புறப்பட்டு இடையூறின்றி வந்து சேர்கின்றன.

50. பாரிகாஜாவை அடுத்துள்ள கடற்கரை வடக்கிலிருந்து தெற்கு முகமாக நேராக நீண்டு கிடக்கிறது. அதனால் அந்தப் பகுதி தட்சிணபடஸ் என்று சொல்லப்படுகிறது.

**தக்காணம்**

இந்தியர்களுடைய மொழியில் தட்சணஸ் என்றால் தெற்கு என்று பொருள்படும். கரையிலிருந்து கிழக்கேயிருக்கும் உள்நாட்டுப் பகுதியில் பாலைவனங் களும் பெரிய மலைகளும் பல இருக்கின்றன. அங்கே சிறுத்தை, புலி, யானை, பெரும்பாம்பு, கழுதைப் புலி, பெருங் குரங்கு முதலிய காட்டு விலங்குகள் ஏராளமாய் இருக்கின்றன. அன்றியும், கங்கை நதி வரையிலும் பரவியுள்ளவையும் மக்கள் தொகை மிக்கவையும் ஆகிய ராஜ்யங்களும் இருக்கின்றன.

51. தட்சிணபடஸிலுள்ள வாணிக மையங்களுள் இரண்டு நகர்கள் மிக முக்கியமானவை. ஒன்று பீத்தனா[10]

**நகரங்கள்**

என்பதாகும். அது பாரிகாஜாவிலிருந்து 20 நாள் பயணத்தில் இருக்கிறது. அங்கிருந்து இன்னும் பத்து நாள் கிழக்கு நோக்கிப் பயணஞ் செய்தால் தகரா[11]

[10] பிரதிஷ்டானம் (இன்றைய பைத்தன்).

[11] தேர் ? (Fleet).

என்னும் மிகப்பெரிய நகரம் இருக்கிறது. அந்த நகரங்களி லிருந்து வண்டிகளிலும் சாலைகளே யில்லாத பகுதிகளின் வழி யாகவும் வாணிகச் சரக்குகள் பாரிகாஜாவுக்குக் கொண்டுவரப் படுகின்றன. பீத்தனவிலிருந்து ஏராளமான கார்னீலியனும், தகராவிலிருந்து சாதாரணத் துணி, நார்மடி, மஸ்லின் துணி முதலியவையும் வருகின்றன. அன்றியும், கடற் கரையோரத்திலுள்ள ஊர்களிலிருந்து வேறுபல பண்டங்களும் வருகின்றன. பாரிகாஜாவிலிருந்து அந்த இடங்கள் ஏழாயிரம் ஸ்டேடியா வரையிலும் பரவியிருக்கின்றன. ஆனால், கடற்கரை நாடு இன்னும் அதிகத் தொலைவில் இருக்கிறது.

52. பாரிகாஜாவுக்கு அடுத்தபடியாக இந்தப் பகுதியிலுள்ள முக்கிய வாணிக நகரங்கள் சுபாரா,[12] கல்லியெனு[13] என்பவை யாகும். மூத்த சரகனஸ் காலத்தில் கல்லியெனு சட்டப்படி வாணிக மையமாயிற்று. ஆனால் அது சாந்தரஸின் அதிகாரத் திற்குள் வந்தபின்னர் அங்குள்ள துறைமுகத்தில் கப்பல்கள் புகுவதற்குப் பல தடைகள் தோன்றியுள்ளன. அங்குச் செல் கின்ற கிரேக்கக் கப்பல்களை அரசு அலுவலர்கள் பிடித்து பாரி காஜாவுக்குக் கொண்டுபோகக்கூடிய அபாயம் இருக்கிறது.[14]

53. இந்தப்பகுதியில் கல்லியெனுவுக்கு அப்பால் செமில்லா[15] மண்டகோரா,[16] பலீபட்மே,[17] மெலிஜிகரா,[18] பைசாண்டியம்,[19]

[12] சொபாரா (பம்பாய்க்கு வடக்கில்).

[13] கல்யாண்.

[14] சாதகர்ணி—ஆந்திர அரசர் சிலருடைய பட்டப்பெயர். மூத்த சரகனஸ் என்பவன் அரிஷ்ட சாதகர்ணி (கி.பி. 44-69) என்றும் அவனுக்கு அடுத்தபடி பட்டத்திற்கு வரும் உரிமை பெற்றிருந்த சுந்தரனே சாந்தரஸ் என்று இங்குப் பேசப்படுகிறான் என்றும் ஷாப் கருதுகிறார். ஆனால், சாந்தனஸ் என்னும் சொல்லே சாந்தரஸ் என்று எழுதப்பட்டுள்ளது என்றும், சந்தன என்பது குஷாண அரசன் ஒருவனுடைய பட்டப்பெயர் என்றும் கருதலாம். (J. A. Jan—March, 1936, pp. 75-85).

[15] இன்றைய சால்; பம்பாயிலிருந்து தெற்கே 25 மைல் தொலைவில் உள்ளது—Schoff.

(இனிவரும் அடிக்குறிப்புகளுக்கும் ஷாபின் கருத்தையே நான் பின் பற்றுகிறேன்).

[16] பான்காட் ?

[17] தாபோல்.

[18] ராஜாப்பூர்.

[19] விஜத்ராக் என்பதன் மருஉ.

தொகரம்,[20] அவுரன்னபோவாஸ்,[21] ஆகிய வாணிக நகரங்கள் இருக்கின்றன. வாணிக நகரங்களேயன்றி, செசக்ரியனே,[22] ஈகிடீ,[23] கேனீடே[24] ஆகிய தீவுகளும் இருக்கின்றன. அவை செர்சொனீசஸ்[25] என்னும் இடத்திற்கு எதிரில் இருக்கின்றன. இந்த இடங்கள் எல்லாவற்றிலும் கடற்கொள்ளைக்காரர்கள் இருக்கிறார்கள். இன்னும் சற்றுத் தள்ளி வெள்ளைத் தீவு[26] இருக்கிறது. அதற்கப்பால் டமிரிக்காவின்[27] முதல் வாணிக மையங்களான நவுரா,[29] திண்டிஸ்[28] ஆகிய பட்டினங்கள் இருக்கின்றன. அவற்றிற்கப்பால் முசிரிஸ்,[30] நெல்சிண்டா[31] ஆகிய பட்டினங்கள் இருக்கின்றன. அவை இப்போது மிகவும் முக்கியமான வாணிக மையங்களாய் உள்ளன.

திண்டிஸ் செரபோத்ராவின் இராஜ்யத்தில் இருக்கிறது. அது கட்டிலிருந்து பார்த்தால் நன்றாய்த் தெரிகிற ஒரு கிராமமாய் இருக்கிறது. முசிரிசும் அதே ராஜ்யத்தில்தான் இருக்கிறது. அங்குப் பல அரேபியக் கப்பல்களும் கிரேக்கக் கப்பல்களும் சரக்குகளை ஏற்றிக்கொண்டுவந்து நிற்கின்றன. அது ஓர் ஆற்றின் கரையில் இருக்கிறது. கடற்கரையிலிருந்து அது இருபது ஸ்டேடியாத் தொலைவில் இருக்கிறது. அங்கிருந்து ஆற்று வழியாகவும் கடல் வழியாகவும் சுமார் ஐந்நூறு ஸ்டேடியாப் போனால் திண்டிசை அடையலாம். நெல்சிண்டா

20 தேவ்கர்.

21 மால்வன்.

22 வெங்குர்லப் பாறை.

23 கோவா.

24 கார்வார் தங்கு துறையை நோக்கி மேற்கில் இருக்கிறது.

25 கார்வார்: பதினாறும் நூற்றாண்டிலும் இது ஒரு முக்கிய துறைமுகமாய் இருந்தது. ஹூப்ளியிலும் உள்நாட்டின் பிற இடங்களிலுமிருந்து வந்த மெல்லிய மஸ்லின் துணியும், மிளகு, ஏலக்காய், பேதி மருந்தாகப் பயன் படும் இலை, துங்காரி என்னும் நீலவண்ண முரட்டுத் துணி ஆகியவையும் இந்தத் துறைமுகத்திலிருந்து ஏற்றுமதியாயின.

26 புருத் தீவு.

27 கண்ணனூர்.

28 பொன்னானி.

29 தமிழர் நாடு.

30 கொடுங்களூர்.

31 இன்றைய கோட்டயத்திற்கு மிக அண்மையில் உள்ளது.

பாண்டிய ராஜ்யத்தில் உள்ளது. முசிரிசிலிருந்து கடல்வழியாகவும் ஆற்றுவழியாகவும் சுமார் ஐந்நூறு ஸ்டேடியாப் போனால் நெல்சிண்டாவை அடையலாம்.

55. இந்த நதியின் கடல்வாயில் பகரே[32] என்னும் கிராமம் இருக்கிறது. நெல்சிண்டாவிலிருந்து வருகின்ற கப்பல்கள் அங்குள்ள தங்குதுறையில் நங்கூரம் பாய்ச்சிநின்று சரக்குகளை ஏற்றிக்கொள்கின்றன. கப்பல்கள் ஆற்றின் கடல்வாய்க்குச் செல்வதற்கு அங்குள்ள நீரடித் திடல்கள் தடையாய் இருக்கின்றன. இந்த வாணிக மையங்கள் இரண்டுக்கும் உரிமையுடைய மன்னர்கள் உள்நாட்டில் வசிக்கிறார்கள். கடலிலிருந்து அந்த இடங்களுக்கு வருகின்றவர்களுக்கு அடையாளம் காட்டுகின்ற வகையில் பாம்புகள் முன்னேக்கி வருகின்றன. அவை கறு நீறமாகவும், குட்டையாகவும் இருக்கின்றன. அவற்றின் கண்கள் இரத்தச் சிவப்பாய் இருக்கின்றன.

56. இந்த வாணிக நகரங்களில் கிடைக்கின்ற ஏராளமான மிளகு மலபத்ரம் ஆகிய பண்டங்களை ஏற்றிச்செல்வதற்காகக் கப்பல்கள் பல வருகின்றன. இங்கே பல பொருள்கள் இறக்குமதி ஆகின்றன. அவற்றுள் நாணயங்கள்[33] முதன்மையானவை. அவை அதிகமாய் வந்து இறங்குகின்றன. அடுத்து, புட்பராகமும் மெல்லிய துணியும் வருகின்றன. ஆனால் அவை அதிகமாக வருவதில்லை. பூப்போட்ட லினன், அஞ்சனக் கல், பவழம், நேர்த்தியற்ற கண்ணாடி, செம்பு, ஈயம், வெள்ளீயம் ஆகிய பண்டங்களும் வருகின்றன. ஒயினும் வருகிறது. ஆனால் அது அதிகமாய் வருகிறதென்று சொல்ல முடியாது. எனினும், பாரிகாஜாவில் வந்து இறங்கும் அளவுக்கு அது இங்கும் இறக்குமதியாகிறது. அதுபோலவே செந்தாளகம், அரிதாரம், கோதுமை ஆகிய பண்டங்களும் வருகின்றன. இங்குள்ள வணிகர்கள் கோதுமை வாணிகத்தில் ஈடுபடுவதில்லை. எனவே, மாலுமிகளுக்குத் தேவையான அளவுக்கே அது இறக்குமதியாகிறது. இங்கிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களுள் ஒன்றான மிளகு கொட்டனரா என்னும் மாவட்டத்தில்தான் மிகுதியாய் விளைகிறது. அதைத் தவிர, ஏராளமான முத்தும், யானைத் தந்தமும், பட்டுத் துணியும், கங்கைக் கரையிலிருந்து வருகின்ற இலாமிச்சையும், உள்நாட்டு ஊர்கள் பலவற்றிலிருந்து வருகின்ற மலபத்ரமும்,

[32] பொறக்காடு.

[33] இந்திய வாணிகத்தால் ரோமிலிருந்து ஏராளமான நாணயங்கள் வெளியேறின. அதனால் ரோமுக்குப் பல துன்பங்கள் நேர்ந்தன.

பலவகைப்பட்ட மணிக்கற்களும்,[34] வைரமும், நீலமணியும், ஆமையோடும் இங்கிருந்து ஏற்றுமதியாகின்றன. (ஆமையோடு க்ரைசேத் தீவிலும், டமிரிக்காவின் கரையிலுள்ள தீவுகளிலும் கிடைக்கிறது.) எகிப்து மாதமாகிய எபிபி (ஜூலை) மாதத்தில் எகிப்திலிருந்து கப்பல்கள் புறப்படுகின்றன. அப்போது கப்பற் பயணத்திற்கு உகந்த பருவமாயிருக்கிறது. அதனால் அவை இடையூறின்றி இங்கு வந்து சேர்கின்றன.

57. கானு, யுடேமன் அரேபியா ஆகிய இடங்களிலிருந்து தொடங்கிய இந்தப் பயணத்திற்கு, முன்பெல்லாம் சிறிய கலங்களே பயன்பட்டன. அவை வளைகுடாக்களின் கரையோரமாகச் சென்றன. ஹிப்பாலஸ் என்னும் மாலுமி துறைமுகங்களின் இருப்பிடத்தையும் கடலின் இயல்புகளையும் கவனமாய் ஆராய்ந்து, பெருங்கடலின் குறுக்கே கலத்தைச் செலுத்தும் முறையைக் கண்டுபிடித்தான்.[35] நம்முடைய நாட்டில் எட்டீசியக் காற்று அடிக்கின்ற அதே காலத்தில் இந்தியாவிலும் கடலிலிருந்து கரையை நோக்கிக் காற்று வீசுகிறது. அவ்வாறு வீசுகின்ற தென்மேற்குக் காற்றுக்கு ஹிப்பாலஸ் என்பது பெயர். ஹிப்பாலஸ்தானே முதன் முதலில் கரையோரத்தில் மட்டுமன்றி நடுக்கடலிலும் கப்பலோட்டும் முறையைக் கண்டுபிடித்தான்? ஹிப்பாலஸ் காலந்தொட்டு இன்று வரையிலும் இந்தியாவுக்குச் செல்கின்ற கப்பல்களுள் சில நேராகக் கானுவிலிருந்தும் இன்னுஞ் சில நறுமணப் பொருள்களின் முனையிலிருந்தும் (Cape of spices) புறப்பட்டுச் செல்கின்றன. டமிரிக்காவுக்குச் செல்கின்ற கலங்கள் காற்றின் திசையிலிருந்து வெகுதூரம் தள்ளிச் செல்கின்றன. பாரிகாஜாவுக்கும் இத்தியாவுக்கும் செல்கின்ற கலங்கள் மூன்று நாள் வரையிலும் கரையை ஒட்டிச் செல்கின்றன. அதன்பின் அவை கரையை விட்டுவிட்டு நேராகக் கடலுக்குள் சென்று, வாய்ப்பாக அடிக்கின்ற காற்றின் உதவியோடு போகவேண்டிய இடத்திற்குப் போய்ச் சேர்கின்றன.

ஹிப்பாலஸ்

[34] கோயம்புத்தூர் மாவட்டத்தில் கிடைத்த மணிக்கற்களே இவற்றுள் முதன்மையானவை: அவற்றிற்கு ரோமில் எப்போதும் கிராக்கி யிருந்தது. —ஷாப்.

[35] ஹிப்பலாஸ் சுமார் கி.பி. 45ஆம் ஆண்டில்தான் பருவக் காற்றின் தன்மைகளை அறிந்தான். ஆனால், அதற்கு நெடுங்காலத்திற்கு முன்னரே இந்திய மாலுமிகள் பருவக் காற்றுகளை அறிந்து பயன்படுத்தினார்கள் என்று சொல்லலாம்.

58. பகரேயிக்கு அப்பால் கருஞ்சிவப்பு மலையும் கடற்கரையில் தெற்கு நோக்கிப் பரவியிருக்கும் பரலியா[36], என்னும் இன்னொரு மாவட்டமும் உள்ளன. அந்தப் பகுதியில் முதலில் உள்ள ஊர் பலிதா[37] என்பதாகும்.

**கொமாரி**

அங்கு ஒரு சிறந்த துறைமுகமும் கரையை யொட்டிய கிராமம் ஒன்றும் இருக்கின்றன. அதற்கும் அப்பால் கொமாரி என்னும் இடம் இருக்கிறது. அங்கேதான் குமரிமுனையும் துறைமுகமும் இருக்கின்றன. தங்களுடைய வாழ்நாளில் எஞ்சியுள்ள பகுதியைப் புனிதத் தொண்டுக்கென ஒதுக்கிவைக்க விரும்பிய மனிதர்கள் அங்கு வந்து குடியேறி, அந்தக் கடலில் நாள்தோறும் நீராடி, பெண்களுடன் உடலுறவு கொள்ளாத வாழ்க்கையை நடத்துகிறார்கள். பெண்களும்[38] அத்தகைய புனிதத் துறவுவாழ்க்கையை மேற்கொள்கிறார்கள். குமரி முனையில் முன்னொரு காலத்தில் ஒரு பெண் தெய்வம் அவ்வாறு வாழ்ந்ததாகச் சொல்கிறார்கள்.

59. குமரி முனையிலிருந்து இன்னுஞ் சிறிது தொலைவு போனால் கொல்சி[39], என்னும் ஊர் இருக்கிறது. அங்கேதான் முத்துச் சலாபம் நடைபெறுகிறது. அந்த ஊர் பாண்டிய மன்னனுடைய ஆட்சியில் உள்ளது. முத்துக்குளிக்கும் வேலையைத் தண்டனையடைந்த குற்றவாளிகள் செய்கிறார்கள்.

**கொற்கை**

கொல்சிக்கு அப்பால் கடற்கரைநாடு[40] இருக்கிறது. அந்த மாவட்டம் ஒரு விரிகுடாவின் ஓரத்தில் உள்ளது. உள்நாட்டில் அர்கரு[41] என்னும் இடம் ஒன்று இருக்கிறது. கடலில் எடுக்கப்பட்ட முத்தெல்லாம் அவ்வூரில்தான் விற்பனை செய்யப்படுகின்றன. முத்தைத் தவிர அங்கிருந்து மஸ்லின் துணியும் ஏற்றுமதியாகிறது. அந்தத் துணிக்கு அர்கரிட்டிக் என்பது பெயர்.

60. அந்தப் பகுதியில் சில முக்கியமான வாணிக மையங்களும் துறைமுகங்களும் இருக்கின்றன. டமிரிக்காவி

[36] திருவிதாங்கூர்க் கடற்கழிக்குக் கீழே, குமரிமுனையைச் சுற்றி ஆதாம் பாலம் வரையிலும் உள்ள கடற்கரைப் பகுதி.

[37] வர்க்கலே.

[38] மணிமேகலையைப்போல.

[39] கொற்கை.

[40] சோழநாடு.

[41] உறையூர்.

விருந்தும் வடநாட்டிலிருந்தும்[42] கப்பல்கள் அங்கு வருகின்றன. அந்த ஊர்களை வரிசையாய்ச் சொன்னால் முதலில் கமரா[43] என்னும் துறைமுகப் பட்டினத்தைச் சொல்ல வேண்டும்; அடுத்தது பொதுக்கா.[44] மூன்றாவது சொபட்மா.[45] அந்த இடங்களிலிருந்து அந்த நாட்டுக் கப்பல்கள் கரையோரமாகவே டமிரிக்கா வரையிலும் செல்கின்றன. தனித்தனி மரக் கட்டைகளைப் பிணைத்துக் கட்டிய சங்கரா என்னும் பெயருடைய வேறு பெரிய கலங்களும் அந்தப் பயணத்தை மேற்கொள்கின்றன. ஆனால், க்ரைசேயிக்கும் கங்கைக் கரைக்கும் செல்கின்ற கலங்கள் மிகப் பெரியவை. அவற்றிற்குக் கொலந்தியா என்பது பெயர். டமிரிக்காவில் உற்பத்தியாகிற பொருள்களும், எகிப்திலிருந்து வருகின்ற பண்டங்களுள் மிகப்பெரும் பகுதியும், பரலியா வழியாக வருகின்ற பண்டங்களும் இந்த இடங்களுக்கு வருகின்றன.

**சோழத் துறைமுகங்களும் கப்பல்களும்**

61. அந்தப் பகுதிக்கு அடுத்தாற்போலக் கிழக்கு நோக்கிச் செல்லும்போது, கடலின் மேற்குப் பக்கத்தில் பலீசிமுண்டு[46] என்னும் தீவு இருக்கிறது. முன்காலத்தில் அது தப்ரபானே என்னும் பெயருடையதாய் இருந்தது. அதனுடைய வடபகுதியை ஒருநாள் பயணத்திற்குப் பிறகு அடையலாம். தென்பகுதி சிறிதுசிறிதாக மேற்கு நோக்கிப் பரவி, எதிரில் உள்ள அசனியாக் கரையைத் தொட்டுவிடுவது போல அமைந்துள்ளது. அங்கு முத்து, மணிக் கற்கள், ஆமையோடு, மஸ்லின் ஆகியவை கிடைக்கின்றன.

**இலங்கை**

62. மேலே சொன்ன இடங்களுக்கு அருகில் மசலியா[47] இருக்கிறது. அந்தப் பகுதி கடற்கரையோரம் வெகு தொலைவு நீண்டிருக்கிறது. அங்கு மஸ்லின் அதிகமாய் உற்பத்தியாகிறது.

[42] வங்காளம்.

[43] காவிரிப்பூம்பட்டினம்.

[44] புதுச்சேரி.

[45] மரக்காணம், தமிழிலக்கியத்தில் சோபட்டினம்.

[46] 'பாலிசிமந்தா' என்பதுதான் இவ்வாறு மருவிற்று என்று லாசன் கருதுகிறார்.

[47] 'மைசோலியா' என்று டாலமி எழுதினார். ஆந்திராவின் மிகப் பெரிய வாணிக மையம்.

62. அந்தப் பகுதிக்கு அப்பால் கிழக்கு நோக்கிச் சென்று அங்குள்ள விரிகுடாவைக் கடந்தால், தொசரனே[48] என்னும் பகுதி இருக்கிறது. அங்கு தொசரனிய யானைத் தந்தம் கிடைக்கிறது. அதற்கும் அப்பால் வடக்கு நோக்கிச் சென்றால் நாகரிகமற்ற குக் குலங்களைச் சேர்ந்த மக்கள் பலரைக் காணலாம். அவர்களுள் சிர்ஹறதே[49] என்பவர்களும் பார்கைசி[50] என்பவர்களும் இருக்கிறார்கள். சிர்ஹறதே மக்கள் சப்பை மூக்கை உடைய காட்டுமிராண்டிகள். அந்த இருவகை மக்களேயன்றி, நீண்ட முகத்தையும் குதிரை முகத்தையும் உடைய மக்களும் இருக்கிறார்கள். அவர்கள் மனித இறைச்சியைத் தின்பவர்கள் என்று சொல்கிறார்கள்.

**ஆந்திரா, ஒரிசா மக்கள்**

63. அதற்குப் பின்னர் இடப்புறம் இருக்கும் கடற்கரையை ஒட்டினாற் போலவே வடக்கே சென்றால் கங்கையாற்றைக் காணலாம். அதற்குப் பக்கத்தில் க்ரைசே இருக்கிறது. அதுவே கிழக்குப் பக்கத்திலுள்ள கடைசி நிலப் பகுதியாகும்.

—(pp. 40—47, ed. Sehoff)

48 தசார்ணா, ஒரிசா.

49 கிராதர்.

50 பர்கா மக்கள். இவர்கள் கிராதர்கள் வாழ்ந்த இடத்திற்கு அருகில் இருந்தார்கள் என்று விஷ்ணு புராணம் கூறுகிறது.

# VI. ஈலியன்

## முத்துச் சலாபம்

எரித்ரியக் கடலில் எவ்வாறு மூத்தெடுக்கிருர்கள் என்பதைப் பற்றி நான் முன்னரே எழுதியுள்ளேன். இப்போது இந்தியாவில் எவ்வாறு முத்துக்குளிக்கிருர்கள் என்பதைச் சொல்லப் போகிறேன். பாக்ட்ரியர்களுக்கு யூக்ரட்டைடிஸ் என்பவன் அரசனுய் இருந்த காலத்தில் (கி.மு. 181—147) பெரிமுதா என்னும் நகரைச் சோரமரபில்.[1] வந்த அரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அந்த நகருக்கருகில் கடற்கரையை உள்ளே அறுத்துச் கொண்டு செல்கின்ற பெரியகுடா ஒன்று இருக்கிறது. அந்த நகரத்தில் வாழ்கின்ற மீன் தின்னும் இனத்தைச் சேர்ந்த மக்கள் வலைகளை எடுத்துக்கொண்டு அங்கே சென்று முத்துச் சிப்பிகளைப் பிடிக்கிருர்கள். அவை பெருந்திரளாக நீந்திக்கொண் டிருக்கும் என்றும், தேன் கூட்டில் இராணி ஈ இருப்பதைப் போல முத்துச் சிப்பித் திரள்களுக்கும் தலைமைச் சிப்பிகள் இருக்கின்றன என்றும் சொல்கிருர்கள். தலைமைச் சிப்பிகள் பிற சிப்பிகளைக் காட்டிலும் பெரியவையாகவும் அழகிய வண்ணம் உடையவையாகவும் இருக்கின்றன. அவற்றைப் பிடித்துவிட்டால் பிற சிப்பிகள் தலைவனில்லாத நிலையில் செய்வ தறியாது திகைத்து நின்றுவிடுகின்றன. அவை இடையன் இல்லா ஆட்டு மந்தையைப்போல ஆகிவிடுகின்றன என்று சொல்லலாம். எனவே, எந்தப் பக்கத்திலிருந்து ஆபத்து வருகின்றது என்பதை உணராமல் அவை மயங்கி நிற்கின்ற நேரத்தில் மீனவர்கள் அவை அனைத்தையும் எளிதாகப் பிடித்து விடுவார்கள். ஆனல், தலைமைச் சிப்பி மீனவர் வலையில் அகப் படாத வரையில், அது ஏனைய சிப்பிகளைக் கட்டுப்பாடாகவும் திறமையாகவும் வழிநடத்திச் செல்கிறது. அதனல்தான்

[1] சோழ மரபு

தலைமைச் சிப்பிகளைப் பிடிக்கும் முயற்சியில் மீனவர்களுக்குள் பெரும்போட்டி ஏற்படுகிறது. பிடிபட்ட சிப்பிகளைத் தொட்டியி விட்டு வைத்துவிடுகிறார்கள். சதை அழுகி விழுந்துவிட்ட பிறகு உருண்டையான முத்து மட்டும் நிற்கிறது. இந்திய முத்தும் செங்கடல் முத்துந்தான் மிகச் சிறந்த முத்துகள் என்று கருதப் படுகின்றன. பிரிட்டிஷ் தீவு இருக்கிற மேற்குக் கடலிலும் முத்தெடுக்கிறார்கள். ஆனால் அந்த முத்து ஓரளவு மஞ்சள் நிறமாய் இருக்கிறது. அதனைத் தங்க நிறமென்று சொல்லலாம். அதனுடைய ஒளி மிகவும் குறைவாய் இருக்கிறது. பாஸ்பரஸ் கடற்காலிலும் முத்து எடுக்கிறார்கள் என்று ஜூபா சொல்கிறார். ஆனால் அது பிரிட்டிஷ் முத்தைக்காட்டிலும் தரத்தில் குறைந்தது. எனவே, அதனைச் செங்கடல் முத்தோடும் இந்திய முத்தோடும் ஒப்பு நோக்குதல் என்ற பேச்சுக்கே இடமில்லை, இந்தியாவின் உள்நாட்டுப் பகுதிகளில் கிடைக்கின்ற முத்தில் உண்மையிலேயே முத்தின் இயல்புகள் இல்லை. அதனைப் படிகக்கல் என்பதுதான் பொருந்தும்.

—*Ancient India as described in Classical Literature*, McCrindle, pp. 143-144.

# VII. ஹெரக்லியாவைச் சேர்ந்த மார்சியன்—சுமார் கி.பி. 400

## அரேபிய வளைகுடா, எரித்ரியக் கடல், இந்து மாக்கடல் ஆகியவற்றின் இடப்பக்கக் கரையையொட்டிய நீர்வழிச் செலவு

இடப்பக்கத்தில்—அதாவது, ஆசியாப் பகுதியில்—நிலமும் கடலும் பின்வருமாறு அமைந்துள்ளன. தனித்தனி துறை முகங்கள், ஊர்கள் ஆகியவற்றின் பெயர்களைக் கூறுவதற்கு மாறாக, அவை இருக்கிற பகுதிகளின் பொதுப் பெயர்களையும் அவற்றுக்கிடையில் உள்ள தொடர்புகளையும் கூறுவது நல்லது என்று கருதுகிறேன்.

ஆசியாக் கண்டம் இடப்பக்கம் இருக்குமாறு அரேபிய வளைகுடாவில் பயணஞ்செய்தால், முதலில் நாம் அரேபியாபெலிக்ஸை அடைவோம். அந்தப் பகுதி அரேபிய வளைகுடாக்கரை முழுவதிலும் பரவியிருக்கிறது. குறுகிய அரேபிய நீர்க்காலுக்கு அப்பால் எரித்ரியக் கடல் இருக்கிறது. அந்தக் கடலின் வழியாக நிலம் இடப்பக்கம் இருக்குமாறு பயணஞ் செய்தால், நமக்கு மிகவும் நன்றாய்த் தெரிந்த அரேபியர்களைக் காணலாம். அவர்கள் இந்தப் பகுதி முழுவதிலும் பரவி வாழ்கிறார்கள். கடலின் இந்தப் பகுதியிலேயே ஹோமரைட்டிஸ் மக்களும் இருக்கிறார்கள். அவர்கள் அரேபியர்களுடைய நாட்டில் குடியேறி இந்துமாக்கடல் தொடங்குகின்ற இடம் வரையிலும் பரவியிருக்கிறார்கள். எரித்ரியக் கடலுக்கு அப்பால் இந்துமாக்கடல் இருக்கிறது. எரித்திரியக் கடலின் கரையையொட்டி அரேபியர்களுடைய நாட்டின் பக்கமாகவே பாரசீக வளைகுடாவின்

தொடக்கம் வரையிலும் சென்ருல், சயாக்ரஸ்[1] என்னும் மலையையும் சச்சலேட்டிஸ்[2] என்னும் பெரிய விரிகுடாவையும் அடையலாம். அந்த விரிகுடா பாரசீக வளைகுடாவின் தொடக்கம் வரையிலும் நீண்டு கிடக்கிறது. பாரசீக வளைகுடாவில் புகுந்து, கரை இடப் பக்கமாக இருக்குமாறு டைக்ரிஸ் நதியின் கடல்வாய் வரையிலும் சென்ருல், மீன்உண்ணிகளின்.[3] விரிகுடாவை அடையலாம். அது நெடுந்தூரம் பரயிருக்கிறது. அதன் பின்னர் அரேபியா பெலிக்ஸிலுள்ள லீயனைட் விரிகுடா[4] வருகிறது. அதற்குப்பின்னர் மெசனைட்டிஸ்[5] விரிகுடா இருக்கிறது. அதற்கப்புறம் டைக்ரிஸ் நதியின்[6] கடல்வாயைத் தாண்டிப் பாரசீக வளைகுடாவின் ஓரத்திலேயே சென்ருல் சுசியானு மாகாணத்தை அடையலாம். அதனையடுத்துப் பர்சிஸ் இருக்கிறது. அதற்கும் அப்பால், பாரசீக வளைகுடாவின் குறுகிய நீர்க்கால் வரையிலும் கார்மேனியாவின் பெரும்பகுதி யிருக்கிறது. பாரசீக வளைகுடா காஸ்பியன் கடலுக்கு எதிரில் இருக்கிறது. அதற்கு ஹிர்சானியன் கடல் என்னும் பெயரும் உண்டு. அந்த இரு கடல்களுக்கும் இடையில் குறுகலான ஆசிய பூசந்தி இருக்கிறது.

[1] ராஸ் பர்ட்டாக்—அரேபியாவின் தென்கரையில் உள்ளது; அதன் அரபுக் குக்குலப் பெயர் சவுக்கார் என்பதாகும்; சவக்கிர் என்பது அதனுடைய பன்மையாகும்.

[2] அரேபியாவின் கரையில் ராஸ்-எல்-கெல்புக்கும் ராஸ் ஹசிக் என்னும் இடத்திற்கும் இடையில் கடல்நீர் கரையை அறுத்துக்கொண்டு வெகு தூரம் உள்ளே போயிருந்தது என்றும், அந்த விரிகுடாவை ராஸ் பர்ட்டாக் (சயாக்ரஸ் முனை) இரண்டாக வெட்டியது என்றும் முன்னைய சில நூலாசிரியர்கள் தவருக நினைத்துக்கொண்டிருந்தார்கள். கடற்கரையின் இந்தப் பகுதியை அரேபியர்கள் எஸ்-ஷெஹர் என்று சொன்னுர்கள். சச்சலேட்டிஸ் என்னும் சொல் அரபுச் சொல்லான சஹில் என்னும் சொல்லிலிருந்து வந்தது. சஹில் என்ருல் கடற்கரை என்று பொருள்படும்.

[3] இது மொசிரஹ் கால்வாயாக இருக்கக்கூடும்.

[4] அரபு மொழியில் விஹ்வான் எனப்படுவது: பெஹ்ரீன் விரிகுடா.

[5] பாரசீக வளைகுடாவின் வடகரை; சரியான பெயர் மைசான் என்பதாகும்; அது இன்றைய பஸ்ராவுக்கு அருகில் இருந்தது; நெடுங்காலம் அது ஒரு முக்கியமான துறைமுகமாய் இருந்தது.

[6] அரபு மொழியில் திக்லத் என்றும் ஹீப்ரு மொழியில் ஹிடக்கல் என்றும் சொல்லப்பட்டது. ஒரேயாறு இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளதை நோக்கும்போது, இன்று போலவே அன்றும் டைக்ரிஸ் யூப்ரிட்டிஸ் ஆகிய இரு நதிகளும் ஒரே கடல்வாயின் வழியாகக் கடலில் விழுந்தன என்பது தெரிகிறது. அந்தக் கடல்வாய்க்கு ஷட்-எல்-அரப் என்பது பெயர்.

இந்த வளைகுடாவிலிருந்து கரை இடப்பக்கம் இருக்குமாறு கிழக்கு நோக்கிச் சென்றால், நாம் மீண்டும் இந்து மாக்கடலுக்கு வருகிறோம். அங்கேதான் கார்மேனிய மக்களுள் எஞ்சிய பகுதியினர் வாழ்கின்றனர். அதற்கப்பால் கெட்ரோசியர் வாழ்கின்றனர். அதற்கப்பால் கங்கைக்கரை இந்தியா இருக்கின்றது. அந்த நிலத்தின் மையப்பகுதிக்கு எதிரில் தப்ரபானு என்று சொல்லப்படுகின்ற பெரிய தீவு இருக்கிறது. அதற்கப்பால் மற்றோர் இந்தியா இருக்கிறது. இரண்டு இந்தியாக்களுக்கும் இடையில் கங்கை நதி எல்லையாய் அமைந்துள்ளது. கங்கையாற்றுக்கு அப்பால் உள்ள இந்தியாவில் தங்கச் செர்சனீஸ் (சுவர்ணபூமி) என்று சொல்லப்படும் நாடு இருக்கிறது. அதற்கும் அப்பால் பெருவிரிகுடா என்னும் கடல் இருக்கிறது. அதன் நடுவில் கங்கைக்கப்பால் உள்ள இந்தியாவையும் சைனே என்னும் நாட்டையும் பிரிக்கிற எல்லை உள்ளது. பின்னர் நாம் சைனே மக்களைக் காண்கிறோம். அவர்களுடைய தலைநகர் தைனே என்று சொல்லப்படுகிறது. அதுவே நமக்குத் தெரிந்த உலகிற்கும் தெரியாத உலகிற்கும் இடையில் உள்ள ஊர்.

ஆசியா, அரேபிய வளைகுடா, எரித்ரியக்கடல், பாரசீக வளைகுடா, இந்துமாக்கடல் ஆகியவற்றில் நீர்வழிப் பயணஞ் செய்யும்போது நமக்கு இடப்பக்கமாக உள்ள நிலப்பகுதிகளைப் பற்றிய பொதுக் கூற்றையும் வர்ணனையையும் நாம் இதுவரையில் கண்டோம். —(pp. 17-18)

## கங்கைக்கரை இந்தியா, விரிகுடாக்கள், அவற்றிலுள்ள தீவுகள் ஆகியவற்றின் நீர்வழித்தடம்

கங்கைக்கரை இந்தியாவுக்கு இமாவோ மலை வடக்கெல்லையாய் இருக்கிறது. அதற்கு மேலே சோக்டியானி, சாசே என்னும் மக்கள் வாழ்கிறார்கள். மேற்கில் கடலும் முன்னர்ச் சொன்ன கெட்ரோசியாவும் இருக்கின்றன. அதே பக்கத்தில் உள்நாட்டில் அரக்கோசியாவும், பரொப்பனிசாதேயும் இருக்கின்றன. கிழக்கே கங்கை நதியும், தெற்கே இந்துமாக் கடலும் இருக்கின்றன. இது பொது வர்ணனை. தனித்தனி இடங்களைப் பற்றிய வர்ணனையைக் கீழே தருகிறோம். (அந்த வர்ணனை கிடைக்கவில்லை).

கங்கைக் கரையிலுள்ள இந்தியாவின் நவுஸ்டத்மஸ்[7] துறைமுகத்திலிருந்து கோரிமுனைக்குச்[8] செல்லும் நீர்வழித் தடம் 21,725 ஸ்டேடியா நீளம் உள்ளது.

[7] இந்தத் துறைமுகம் சன்தி வளைகுடாவில் இருக்கிறது என்று 38ஆம் பிரிவில் கூறப்பட்டுள்ளது. கட்சு வளைகுடாவில் மண்ட்வி என்றும் கச்

## தப்ரபானுத் தீவின் நீர்வழித்தடம்

இந்தியாவிலுள்ள கோரிமுனைக்கு எதிரில் தப்ரபானுவிலுள்ள பொரியம்[9] முனை உள்ளது. தப்ரபானுவை முன்பெல்லாம் பலீசிமுண்டு என்று சொல்லிவந்தார்கள். இப்போது அதன் பெயர் சலிகா என்று மாறிவிட்டது. கோரிமுனைக்கு எதிரில் உள்ளதும் நாம் மேலே சொன்ன பொரியம் என்னும் பெயருடையதுமான முனை கீழ்வானத்திலிருந்து 26, 460 ஸ்டேடியாத் தொலைவிலும், மேல் வானத்திலிருந்து 61, 626 ஸ்டேடியாத் தொலைவிலும், வடக்கேயுள்ள நில நடுக்கோட்டிலிருந்து தெற்கு நோக்கி 6,350 ஸ்டேடியாத் தொலைவிலும் இருக்கின்றது.

(தனித்தனி இடங்களின் வர்ணனை கிடைக்கவில்லை).

தப்ரபானுத் தீவில் பொரிய முனைக்கு அப்பாலுள்ள பகுதியின் வர்ணனை, நீர்வழித்தடம் ஆகியவை பின் வருமாறு :—

விட்டத்தின் வழியாக அதன் நீளம் 9,500 ஸ்டேடியா; அகலம் 7,500 ஸ்டேடியா. அங்கு மாகாணங்கள் பதின்மூன்றும் குறிப்பிடத்தக்க நகர்கள் வாணிக மையங்கள் ஆகியவை இருபத்திரண்டும், குறிப்பிடத்தக்க மலைகள் இரண்டும், குறிப்பிடத்தக்க ஆறுகள் ஐந்தும், குறிப்பிடத்தக்க துறைமுகங்கள் நான்கும் பெருவிரிகுடாக்கள் இரண்டும், பெருங்கடற்கரை ஒன்றும் இருக்கின்றன. தப்ரபானுவின் நீர்வழித் தடத்தின் மொத்த நீளம் 26,385 ஸ்டேடியா வாகும். தப்ரபானுத் தீவைப் பற்றி நாம் போதுமான அளவு எழுதியாயிற்று. இனி, கங்கைக் கரை இந்தியாவின் நீர்வழித் தடத்தை மீண்டும் காண்போம். (தனித்தனி யிடங்களின் வர்ணனை கிடைக்கவில்லை.)

## கங்கை விரிகுடாவின் நீர்வழித்தடம்

க்ரைசேயிக்குச் செல்கின்ற நீர்வழித்தடத்தில், இந்தப் 'புறப்பாட்டுத்துறை'யிலிருந்துதான்[10] கங்கை யென்னும் பெயர்

---

என்றும் சொல்லப்பட்ட இடமாக இருக்கக்கூடும். அது பழங்காலத்திலிருந்தே மேற்கு இந்தியாவில் முக்கியமான வாணிகத் துறைமுகமாக இருந்தது.

[8] குமரி முனை—இந்தியாவின் தெற்கில் இருக்கிற கடைசியிடம்—(கோடிக்கரை என்று கொள்வது இன்னும் பொருத்தமாய் இருக்கும். K.A.N.).

[9] பனைமர முனை (Point Palmyra) ? (K.A.N.)

[10] மசூலிப்பட்டினமாய் இருக்கக்கூடும்.

உடைய பெருவிரிகுடாத் தொடங்குகிறது. அந்த விரிகுடாவின் தலைப்பகுதியில் கங்கையாறு ஐந்து கிளைகளாய்ப் பிரிந்து கடலோடு கலக்கிறது. இந்த இடமே கங்கைக்கரை இந்தியா வையும் அதற்கு அப்பாலுள்ள இந்தியாவையும் பிரிக்கின்ற எல்லையாய் இருக்கிறது என்று நாம் முன்னரே சொன்னோம். (தனித்தனி இடங்களைப் பற்றிய வர்ணனை கிடைக்கவில்லை).

கங்கைக்கரை இந்தியாவின் நீள அகலத்தை இப்போது காண்போம். கங்கையின் ஐந்து கிளைகளுள் ஒன்றான ஆன்டிபோல் என்னும் கிளையிலிருந்து நவுஸ்டத்மஸ் என்னும் துறைமுகம் 18,290 ஸ்டேடியாத் தொலைவில் இருக்கிறது. கங்கைக் கரை இந்தியாவிலுள்ள இடங்களுள் அந்த இரண்டு இடங்களே ஒன்றுக்கொன்று மிகத் தொலைவில் உள்ள இடங்களாகும். நவுஸ்டத்மஸ், சன்தி என்னும் வளைகுடாவில் இருக்கிறது. நாம் மேலே சொன்ன 'புறப்பாட்டுத்துறை'யின் முனையிலிருந்து கங்கை நதி தோன்றும் இடம் 13000 ஸ்டேடியாத் தொலைவில் இருக்கிறது. இந்த எல்லைகளுக்குள் அடங்கிய இந்தியாவில் மாகாணங்கள் ஐம்பத்து நான்கும், குறிப்பிடத்தக்க நகர்கள், ஊர்கள், வாணிக மையங்கள் ஆகியவை இருநூற்றுப் பதினாறும், குறிப்பிடத்தக்க மலைகள் ஆறும், குறிப்பிடத்தக்க ஆறுகள் இருபத்து மூன்றும், குறிப்பிடத்தக்க முனைகள் இரண்டும், குறிப்பிடத்தக்க துறைமுகம் ஒன்றும், குறிப்பிடத் தக்க விரிகுடாக்கள் ஐந்தும், குறிப்பிடத்தக்க ஆற்று முகத் துவாரங்கள் பன்னிரண்டும், குறிப்பிடத்தக்க புறப்பாட்டுத் துறை ஒன்றும், குறிப்பிடத்தக்க (ஆற்றுக்) கூடல்கள் பத்தும், குறிப்பிடத்தக்க தீவுகள் எட்டும் இருக்கின்றன.

புறப்பாட்டுத் துறையிலிருந்து ஆன்டிபோல் என்னும் கங்கைக் கிளை வரையிலும் உள்ள கங்கை விரிகுடாவின் நீர்வழித் தடத்தின் மொத்த நீளம் 5,660 ஸ்டேடியா ஆகும். கங்கைக் கரை இந்தியாவில் நவுஸ்டத்மஸ் துறைமுகத்திலிருந்து கங்கையின் ஐந்தாம் கிளையினுடைய கடல் வாய் வரையிலும் உள்ள நீர்வழித் தடங்களின் மொத்த நீளம் 35,695 ஸ்டேடியாவாகும்.[11]

—*Periplus of the Outer Sea* by Marcian of Heraclea — W. H. Schoff - pp. 17–18 and 24-25.

[11] இந்தியாவின் நீள அகலம் தெளிவாகக் கூறப்படவில்லை. சிந்து நதி முகத்துவாரத்திற்கும், கங்கை நதி முகத்துவாரத்திற்கும் இடையிலுள்ள தொலைவு, கங்கையாற்றின் நீளம், இந்தியாவைச் சுற்றிவரும் நீர்வழித் தடம், கங்கை நதியின் கழிமுக நடுவரங்கத்தின் அகலம் ஆகிய எல்லாமே அதிகமாக மதிப்பிடப்பட்டுள்ளன. ஆனால், அதனால் நேர்ந்துள்ள பிழை அவ்வளவாகப் பெரியதன்று.

# VIII. பாஹியன் (கி.பி. 401-410)

## அ. தட்சிணமும் புரு மடமும்

தட்சிணம்[1] என்னும் நாட்டில் (முன்னைய) கஸ்யப புத்தருக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட மடம் ஒன்று இருக்கிறது. அது ஒரு குன்றைக் குடைந்து அமைக்கப்பட்டது. அந்த மடத்தில் மொத்தம் ஐந்து தளங்கள் உள. யானை உருவில் அமைந்துள்ள அடித்தளத்தில் 500 தனியறைகள் இருக்கின்றன. அதற்குமேல் சிங்க உருவில் அமைந்துள்ள தளத்தில் 400 தனியறைகளும், குதிரையுருவில் அமைந்துள்ள மூன்றும் தளத்தில் 300 தனியறைகளும், எருது உருவத்தில் அமைந்துள்ள நான்காம் நிலையில் 200 தனியறைகளும், புரு வடிவில் அமைந்துள்ள ஐந்தாம் நிலையில் 100 தனியறைகளும் இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் மேலே ஒரு நீரூற்று இருக்கிறது. அதில் ஊறுகின்ற நீர் ஒவ்வோர் அறைக்கு முன்னாலும் ஓடி, இறுதியில் அடித்தளத்திற்கு வந்து, அங்குள்ள கதவின் வழியாய் வெளியே செல்கிறது. ஐந்தாம் மாடிக்கு மேலிருந்து அடிநிலைக்கு வருவதற்கு முன்னர் அவ்வூற்று மடத்தின் வடிவமைப்புக்கு ஏற்றவாறு வளைந்தும் நெளிந்தும் சுற்றியும் பாய்கிறது. துறவிகள் தங்குகின்ற அந்தத் தனியறை ஒவ்வொன்றிலும் பாறையில் குடையப்பட்ட சாளரம் ஒவ்வொன்று இருப்பதால், அவை எல்லாமே வெளிச்சமாய் இருக்கின்றன. எந்த அறையும் இருட்டாய் இல்லை. ஒவ்வொரு நிலையிலும் அதனுடைய நான்கு மூலைகளிலும் பாறையில்

[1] தட்சிணம் தென்னிந்தியாவின் மிகப் பழைய பெயர். இந்த அதிகாரத்தில் அற்புதங்கள் பல சொல்லப்பட்டுள்ளன. அவையெல்லாம் பிறர் வாயிலாய்த் தாம் கேள்விப்பட்டவையே என்று பாஹியன் இறுதியில் எழுதியுள்ளார். *Buddhist Records of the Western World* என்னும் நூலின் இரண்டாம் பகுதியில் 216-215ஆம் பக்கங்களைப் பார்க்க. அங்கு எழுதப்பட்டுள்ள வர்ணனை வேறு விதமாய் இருக்கிறது.—லெக்.

வெட்டப்பட்ட படிகள் இருக்கின்றன. எனவே, அந்த நிலைகளிலுள்ள அறைகளை அடைவது எளிதாய் இருக்கிறது. இன்றைய மனிதர்கள் சிற்றுருவம் படைத்தவர்களாதலால், அவர்கள் ஒவ்வொரு படியாக ஏறித் தங்களுடைய அறைகளை அடைகிறார்கள். ஆனால், முற்கால மனிதர்கள் ஓரடி எடுத்து வைத்ததுமே தங்கள் அறைகள் இருந்த நிலையை அடைந்து விடுவார்கள். அதனாற்றான் இந்த மடம் 'பாராவதம்' என்னும் பெயரைப் பெற்றுள்ளது. இந்திய மொழியில் பாராவதம் என்றால் புறா என்று பொருள்படும். இந்த மடத்தில் எப்போதும் துறவிகள் இருந்து கொண்டேயிருக்கிறார்கள்.

அந்த மடத்தைச் சுற்றியுள்ள பகுதி குன்றுகள் நிறைந்ததாய் இருக்கிறது. அங்குப் பயிர்த்தொழில் நடைபெறுவதில்லை. அந்தக் குன்றுகளுக்கு வெகு தொலைவிற்கு அப்பால் கிராமங்கள் இருக்கின்றன. அந்தக் கிராமங்களில் வாழ்கின்ற மக்கள் தவறானவையும் நன்மை பயக்காதவையும் ஆகிய கருத்துகளை உடையவர்களாய் இருக்கிறார்கள். அவர்களுக்கு பிராமணர்களைப் பற்றியோ, போதி தர்மத்தைப் பின்பற்றும் சிரமணர்களைப் பற்றியோ, ஏனைய கோட்பாடுகளைப் பின்பற்றும் பிற குழுக்களைச் சேர்ந்த மற்ற மக்களைப் பற்றியோ ஒன்றும் தெரியாது. பறந்து வந்து அந்த மடத்திற் புகுகின்ற மனிதர்களை அந்தக் கிராம வாசிகள் எப்போதும் காண்கிறார்கள். அந்த மடத்தில் வழிபடுவதற்காக வேறு பல நாடுகளிலிருந்து ஒரு சமயம் அங்குப் போந்த மக்கள் சிலரைக் கண்ட அந்தக் கிராமவாசிகள் 'இங்கு வருகின்ற பக்தர் அனைவரும் பறந்து வருகின்றனர்; நீங்கள் ஏன் அவ்வாறு செய்யவில்லை?' என்று கேட்டார்கள். 'எங்களுடைய இறகுகள் இன்னும் போதுமான அளவு வளரவில்லை' என்று சொல்லி அந்த பக்தர்கள் நிலைமையைச் சமாளித்தார்களாம்!

தட்சிண ராஜ்யம் ஒதுங்கியிருக்கிறது. அங்குப் பயணஞ் செய்வது இடர் நிறைந்தது. அங்குள்ள பாதைகள் சீராக இல்லை. அந்தத் தொல்லைகள் அனைத்தையும் அறிந்த பின்னரும் அங்குப் போக விரும்புபவர்கள் பொன்னையும் வேறு பொருள்களையும் எடுத்துக்கொண்டு போய் அந்நாட்டின் மன்னனுக்குக் கொடுக்க வேண்டும். அவ்வாறு செய்தால் அந்த அரசன் தன்னுடைய ஆட்களைத் துணைக்கு அனுப்புவான். அவ்வாறு துணைக்கு வருகிற ஆட்கள் குறிப்பிட்ட தொலைவு சென்றதும் தங்களுடன் வருகின்ற பயணிகளை அடுத்த வழித்துணைக் குழுவினரிடம் ஒப்படைத்து விடுவார்கள். அவர்கள் மிகக் குறுகிய வழியில் பயணிகளை அழைத்துக் கொண்டுபோய் அடுத்த குழுவினரிடம் ஒப்படைப்

பார்கள். ஆனால், பாஹியன் தட்சிணத்திற்குப் போகவேயில்லை. அந்நாட்டு மக்கள் சிலர் சொன்ன செய்திகளை எழுதிவைத் துள்ளார்.

—Legge—*Fa-hein*, pp. 96-8 (cf. Giles–*Fa-hsien* pp. 62-3; Beal, *Budshist Records*, pp. lxviii-lxx.)

## ஆ. தாமலிப்தீயும் இலங்கையும்

கங்கைக் கரையை ஒட்டிக் கிழக்கு நோக்கிப் பதினெட்டு யோசனை சென்றபின், அதனுடைய தென்கரையில் இருந்த பெரிய ராஜ்யமான சம்பாவை[2] அவர் அடைந்தார். அங்கு புத்தர் தம்முடைய விஹாரத்துக்கருகில் தியானஞ் செய்தவாறே நடந்து கொண்டிருந்த இடங்களிலும், அவரும் அவருக்கு முற்பட்ட மூன்று புத்தர்களும் அமர்ந்திருந்த இடங்களிலும் புத்த தூபிகள் எழுப்பப்பட்டிருந்தன. அங்கெல்லாம் துறவிகள் வசித்தார்கள். அங்கிருந்து அவர் கிழக்கு நோக்கி மீண்டும் சுமார் ஐம்பது யோசனை பயணஞ் செய்தபின் தாமலிப்தீ[3] என்னும் நாட்டை அடைந்தார். அதனுடைய தலைநகர் ஒரு துறைமுகமாகவும் இருந்தது. அந்த நாட்டில் இருபத்திரண்டு[4] மடங்கள் இருக்கின்றன. அவை அனைத்திலும் துறவிகள் வசிக்கிறார்கள். போதி தர்மம் அந்த நாட்டில் செழித்தோங்கி யிருக்கிறது. பாஹியன் தம்முடைய சூத்திரங்களை எழுதிக்கொண்டும் படிமங்களின் படங்களை வரைந்துகொண்டும் அங்கே ஈராண்டு தங்கியிருந்தார்.

அதன்பின் அவர் பெரிய வாணிகக் கப்பல் ஒன்றில் ஏறிக் கடலில் தென்கிழக்காய்ப் பயணஞ் செய்தார். அப்போது குளிர் காலம் தொடங்கிவிட்டதால் காற்று வாய்ப்பாக வீசியது. பதினான்கு நாள் இரவு பகலாய்ப் பயணஞ் செய்தபின் கப்பல்

[2] இன்றைய சம்பா நகராய் இருக்கக்கூடும். அது பகல்பூரிலிருந்து மூன்று மைல் மேற்கில் உள்ளது; 25° வட அட்சரேகை—56° கிழக்குத் தீர்க்க ரேகை.—லெக்.

[3] இலங்கையோடும் சீனாவோடும் நடைபெற்ற வாணிகத்தின் முக்கிய மையமாய் அந்தக் காலத்தில் இருந்தது. ஹூக்ளி நதியின் முகத்துவாரத்தில் இன்று இருக்கிற தம்லுக்; 22° வட அட்சரேகை— 88° கிழக்குத் தீர்க்க ரேகை.—லெக்.

[4] இருபத்து நான்கு—பீல்.

சிங்கள நாட்டை அடைந்தது. அந்நாடு தாமலிப்தியிலிருந்து 700 யோசனைத் தொலைவில் இருந்ததென்று பாஹியன் கேள்விப் பட்டார்.

Legge—*Fa-hein*, p. 100. (cf. Giles, *Fa-hsien* pp. 65—66; Beal, *Buddhist Records* lxviii-lxx.)

## இ. இலங்கை

சிங்களம் ஒரு பெரிய தீவு. கீழ்மேலாக அதனுடைய நீளம் ஐம்பது யோசனை. தெற்கு வடக்காக அதனுடைய அகலம் 30 யோசனை. அதனுடைய இடப்பக்கமும் வலப்பக்கமும் 100 சிறு தீவுகள் இருக்கின்றன. அவை ஒன்றுக்கொன்று பத்திருபது லீ தொலைவில் அமைந்திருக்கின்றன. ஒருசில தீவுகள் 200 லீ தொலைவிலும் இருக்கின்றன. ஆனால், அவை எல்லாமே பெரிய தீவின் ஆட்சிக்குட்பட்டவை. பெரும்பாலான தீவுகளில் முத்தும் பலவகைப்பட்ட மணிக்கற்களும் கிடைக்கின்றன. ஒரு தீவில் மிகவும் தூய்மையானதும் ஒளி மிக்கதும் ஆன முத்துக் கிடைக் கிறது.[6] அந்தத் தீவு சுமார் 10லீ நீளமும் 10லீ அகலமும் உள்ள சதுரமாய் இருக்கிறது. அந்தத் தீவைக் கண்காணித்துக் காப்பதற்கென அரசன் தன்னுடைய காவலர்களை நியமித் துள்ளான். அங்கே கிடைக்கும் முத்துகளில் பத்தில் மூன்று பாகத்தை அரசன் எடுத்துக்கொள்கிறான். தொடக்கத்தில் சிங்களத்தில் மக்கள் வாழவில்லை.[7] தேவதைகளும் நாகர்களும் மட்டும் அங்கிருந்தார்கள். அவர்களோடுதான் பல நாடுகளையும் சேர்ந்த வணிகர்கள் தங்களுடைய வாணிகத்தை நடத்தினார்கள். பொருள்களை விற்பனை செய்யும்போது வணிகர் கண்ணுக்கு

[5] 'சிங்கத்தின் இராஜ்யம்'; இலங்கை. இந்தியாவிலிருந்து சென்ற துணிவு மிக்க சிங்களன் என்னும் வாணிகன் இந்த ராஜ்யத்தை நிறுவினான் என்று சொல்கிறார்கள். அவனுடைய தந்தையின் பெயர் சிங்கன் என்பது. அதுவே அந்த நாட்டின் பெயராயிற்று. சிங்கனுடைய நாடு சிங்கள நாடு.—லெக்.

[6] மணி: குற்றமற்றது. ஒளி மிக்கது, தூய்மையானது என்று விளக்கப் படுகிறது. அது புத்தரையும் அவருடைய தர்மத்தையும் குறிக்கும் அடையாளம் இந்த மணியால்தான் மிக உயர்ந்த செப மாலைகள் செய்யப்படுகின்றன. —லெக்.

[7] சிங்களத்தில் முதலில் வாழ்ந்தவர்கள் அரக்கர்கள் என்று வேறு சிலர் சொல்கின்றனர். அவர்களைக் கண்டு மக்கள் அஞ்சினார்கள். அவர்கள் மனிதர்களைத் தின்னும் இராட்சசர்கள். எனவே, கவிழ்ந்த கப்பலில் தப்பிப் பிழைத்துக் கரையேறிய மாலுமிகள் அவர்களை நினைத்து நடுங்கினார்கள். ஆனால், பாஹியன் சொல்கின்ற தேவதைகள் அவ்வளவு கொடியவை அல்ல. அவர் விவரிக்கின்ற ட்ராகன்களும் நாகர்களும் நம்முன் அடிக்கடி தோனறு கிறார்கள்—லெக்.

ஆவிகள் தோன்றமாட்டா. தங்களிடமிருந்த மதிப்பு மிக்க பொருள்களின்மீது அவற்றின் விலையைக் குறிக்கும் அடையாளங்களைப் பொருத்தி அவற்றை ஓரிடத்தில் வைத்துவிட்டு ஆவிகள் போய்விடும். வணிகர்கள் பண்டங்களின் விலைக்குரிய பொருளை வைத்துவிட்டு அவற்றை எடுத்துக்கொண்டு போய்விடுவார்கள்.[8]

இவ்வாறு பலநாட்டு வணிகர்களும் சிங்களத்திற்கு வந்து போய்க்கொண்டிருந்தார்கள். அந்த வணிகர்கள் தங்கள் நாட்டு மக்களுக்கு அந்தத் தீவைப் பற்றிச் சொல்லாமல் இருப்பார்களா? நாளடைவில் அந்தப் பல்வேறு நாட்டு மக்களும் அந்தத் தீவு மனத்திற்கு உகந்த இனிய இடம் என்பதை அறிந்து அங்குச் சென்று குடியேறத் தொடங்கினார்கள். இவ்வாறு பலநாட்டு மக்கள் பெருவாரியாய்ச் சென்று குடியேறியதால் சிங்களம் ஒரு வலிமை மிக்க நாடாக வளர்ந்தது. அந்தத் தீவின் தட்ப வெப்ப நிலை மிதமாகவும் இனிமையாகவும் இருக்கின்றது. அங்கு வேனிற்காலத்திற்கும் குளிர்காலத்திற்கும் வேறுபாடில்லை. அங்கு வளர்கின்ற மரஞ்செடிகொடிகள் எப்போதுமே மிகவும் செழிப்பாய் இருக்கின்றன. அங்கு எப்போது வேண்டுமானாலும் பயிர்த்தொழில் செய்யலாம். விதைப்பதற்கென்றும் அறுப்பதற்கென்றும் அங்கே குறிப்பிட்ட பருவம் எதுவும் இல்லை.

தீயவர்களான நாகர்களை நல்லவர்களாக மாற்றவேண்டும் என்னும் நோக்கத்துடன் புத்தர் சிங்களத்துக்குச் சென்றபோது[9] தம்முடைய இயற்கை மீறிய பேராற்றலால் தம்முடைய திருவடிகளுள் ஒன்றனை அரச நகரின் வடபாலும் இன்னொரு திருவடியை

[8] cf. Pliny, *ante* re. Seres.

[9] சாக்ய முனிவர் இலங்கைக்குப் போனார் என்பதை என்னால் நம்ப இயலவில்லை. அவர் புத்தரான பிறகு முதல் ஆண்டிலும், ஐந்தாம் ஆண்டிலும், எட்டாம் ஆண்டிலும் இலங்கைக்குச் சென்றார் என்ற கட்டுக் கதைகள் மூன்றனை ஹார்டி தொகுத்துவைத்துள்ளார். (M.B. pp. 207-213) ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அந்தத் தீவு முழுவதிலும் புத்த மதம் பரவியிருந்தது என்பதை பாஹியன் கூற்றுத் தெளிவாய்க் காட்டுகிறது. பட்னாவில் நடைபெற்ற பௌத்தப் பேரவைக் கூட்டத்திற்குப் பின்னர் அசோகர் அனுப்பிய சமயக் குழுவின் முயற்சியால்தான் இலங்கையில் புத்த மதம் பரவியது என்று டேவிட்ஸ் தம்முடைய 'புத்திசம்' என்னும் நூலின் இறுதி அதிகாரத்தில் சொல்கிறார். அப்போது அத்தீவில் திசன் (தெய்வங்களுக்கு மகிழ்வூட்டுபவன்) அரசனாய் இருந்தான் (கி மு. 250-230) என்றும் டேவிட்ஸ் கூறுகிறார்.—லெக்.

ஒரு மலையின் உச்சியிலும்[10] வைத்தார். அவ்விரண்டு இடங்களுக்கும் இடையில் பதினைந்து யோசனை தூரம் இருக்கிறது. அரச நகரின் வடபால் புத்தர்பிரான் திருவடி பட்ட இடத்தில் 400 முழ உயரமுள்ள[11] ஒரு தூபியை அரசன் கட்டினான். அத் தூபியைப் பொன்னும் வெள்ளியும் பல்வகை மணிகளும் அணி செய்தன. எனவே அது மிகவும் அழகாய் இருந்தது.

அந்தத் தூபிக்கருகில் அரசன் அபயகிரி[12] என்னும் மடத்தையும் கட்டிமுடித்தான். அந்த மடத்தில் இன்று 5000 துறவிகள் வாழ்கிறார்கள். மடத்தின் மையத்தில் புத்தர்பிரான் மண்டபம் ஒன்று இருக்கிறது. பொன்னும் வெள்ளியும் எழுவகை மணிகளும் பதித்த செதுக்கு வேலை அந்த மண்டபத்திற்குப் பேரழகு ஊட்டுகின்றது. அதில் 20 முழ உயரத்திற்கு மேற்பட்ட[13] புத்தர் சிலை ஒன்றிருக்கிறது. பச்சை மணியில் செதுக்கப்பட்ட அவ்வுருவத்தில் பன்மணி பதிக்கப்பட்டிருப்பதால் அது பேரொளி வீசித் திகழ்கிறது. அந்தச் சிலையின் பயபக்தி யூட்டுகின்ற வீறார்ந்த தோற்றத்தை வர்ணிப்பதற்குச் சொற்களில்லை. அந்த விழுமிய சிலையின் வலக்கையில் விலை மதிக்க இயலா முத்து ஒன்று இருக்கிறது. பாஹியன் ஹான் நாட்டை விட்டு வந்து பல ஆண்டுகள் கழிந்து விட்டன. அவர் கண்டு பேசிய மக்கள் முன்னர் அவர் அறியாத புது நாடுகளைச் சேர்ந்தவர்கள். அவர் முன்பெல்லாம் பார்த்துப் பழகிய மலையோ யாறோ மரமோ செடியோ எதுவுமே இப்போது அவர் கண்ணிற் படவில்லை. அவருடன் வந்த பயணிகள் யாரும் இப்போது

**அபயகிரி விஹாரம்**

[10] இது 'ஆதாம் சிகரம்' என்று கருதலாம். அதற்கு செலுசுமானோ, சமஸ்தகூடம், சமநிலம் என்னும் மூன்று பெயர்கள் உண்டு என்று ஹார்டி சொல்கிறார். (pp. 211, 212. குறிப்புகள்) 'அதனுடைய உச்சியில் ஆழமற்ற உட்குழிவு ஒன்று இருக்கிறது. அதனுடைய நீளம் 5அடி 3½அங்குலம், அகலம் சுமார் 3½அடி. அது சிவபெருமானுடைய திருவடிபட்ட இடமென்று இந்துக்களும். ஆதாமின் திருவடிபட்ட இடமென்று முஸ்லிம்களும், புத்தருடைய திருவடிபட்ட இடமென்று பௌத்தர்களும் நம்புகிறார்கள்.—லெக்.

[11] 470 அடி—பீல்.

[12] அபயகிரி என்றால் அச்சம் தவிர்க்கும் மலை என்று பொருள்படும். இலங்கையில் அபயகிரித் தூபி இன்னும் இருக்கிறது. அதுவே அத்தீவின் தூபிகளுள் மிகவும் உயரமானது. அது 250 அடி உயரம் உள்ளதென்றும், வட்ட காமினி என்னும் அரசன் காலத்தில், சுமார் கி.மு 90ஆம் ஆண்டில், கட்டப்பட்டது என்றும், அதே காலத்தில் அதாவது, பட்னுப் பேரவைக்கு 160 ஆண்டுகளுக்கும் சாக்கிய முனியின் சாவுக்கு 330 ஆண்டுகளுக்கும் பின்னர், திரிபிடகம் முதன் முதலில் இலங்கையில் எழுத்து வடிவம் பெற்றது என்றும் டேவிட்ஸ் சொல்கிறார்.—லெக்.

[13] சுமார் 22 அடி—பீல்.

அவருடன் இல்லை. அவர்களுட் சிலர் மாண்டுபோயினர். ஏனையோர் வேறுதிசைகளிற் சென்றுவிட்டனர். தம்முடைய முகத்தையும் நிழலையும் தவிர வேறு முகத்தையும் நிழலையும் அவர் இப்போது காண்பதில்லை. எனவே துயரம் அவருடைய உள்ளத்தில் நிலையாய்க் குடிகொண்டு விட்டது. ஒருநாள் அவர் பச்சைமணிச் சிலையின் அருகில் நின்றிருந்தபோது அந்தச் சிலைக்கு வெண்பட்டால் ஆன விசிறி[14] யொன்றைக் காணிக்கை யாய்ச் செலுத்திக் கொண்டிருந்த வணிகர் ஒருவரை எதிர்பாரா வகையில் அவர் கண்டார். அப்போது அவருடைய கண்களில் துன்பக் கண்ணீர் நிறைந்து வழிந்தது.

அந்த நாட்டை முன்பு ஆண்டுகொண்டிருந்த அரசன் ஒருவன் மைய இந்தியாவிற்குத் தன்னுடைய ஆளை அனுப்பி, அங்கிருந்த பத்ர மரம்[15] ஒன்றிலிருந்து ஒரு கிளையைக் கொண்டு

[14] அந்த வணிகர் சீனர் என்று நாம் கருதுவது இயல்பே. சீன நூல்களும் அவ்வாறே குறிப்பிடுகின்றன. விசிறியும் பாஹியன் தம்முடைய சொந்த நாட்டில் பயன்படுத்திய விசிறியைப் போன்றது என்று கருதலாம்.—லெக்.

[15] இது பிப்பலா என்னும் போதி மரமாய் இருக்க வேண்டும். போதி மரத்தின் அடியில்தான் சித்தார்த்தர் புத்தரானார். பாஹியன் இந்தச் செய்தியைக் குழப்பியிருப்பது விந்தையாகத் தோன்றுகிறது. இலங்கையில் இன்னும் உயிரோடிருக்கிற அந்த மரத்தை எவ்வாறு நட்டார்கள், அது எவ்வாறு வளர்ந்தது, அதனைக் காப்பதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் யாவை என்பதைப் பற்றி பாஹியன் என்ன சொல்கிறார் என்பதை இங்கே கண்டோம். அசோகருடைய மைந்தரான மஹிந்தனர் பௌத்தத்தின் திருத் தூதராக இலங்கைக்குச் சென்றார் என்பதை நாம் முன்னொரு குறிப்பில் கண்டோம். இலங்கை அரச குடும்பத்துப் பெண்கள் சிலர் துறவுபூண வேண்டுமென்று விரும்பியதால் அவர்களுக்கு உதவுவதற்காக மஹிந்தனர் தம்முடைய உடன் பிறந்தாரான சங்கமித்தா என்னும் பெண்மணியை இலங்கைக்கு வரவழைத்தார். அந்த அம்மையாரும் மஹிந்தனர் துறவுபூண்ட அதே சமயத்தில் துறவுபூண்டவர். இந்தியாவிலிருந்து கிளம்பும்போது புத்தகயாவிலிருந்த புனித போதி மரத்தின் ஒரு கிளையை எடுத்துக்கொண்டு அவர் இலங்கைக்குச் சென்றார். அந்தப் புனித மரத்தின் அடியில்தான் புத்தர் மெய்யுணர்வு பெற்றார். அந்த மரம் எவ்வாறு வளர்ந்தது, எவ்வாறு இன்னும் உயிரோடு இருக்கிறது என்பதையெல்லாம் டேவிட்ஸ் தம்முடைய புத்திசம் என்னும் நூலில் எழுதியுள்ளார். அதுதான் வரலாற்றிலேயே மிகவும் வயதான மரம் என்ற சர் எமர்சன் டெனன்ட் என்பவருடைய கூற்றை டேவிட்ஸ் மேற்கோள்காட்டுகிறார். இந்தக் கூற்றை மறுக்கவேண்டும் என்று எய்ட்டல் சொல்கிறார். எந்த மரத்தின் கிளை இரண்டாயிரத்துக்கும் அதிகமான ஆண்டுகளுக்கு முன்னர் இலங்கைக்கு எடுத்துச் செல்லப்பட்டதோ அந்த மரமே இன்னும் புத்தகயாவில் உயிரோடிருப்பதால் அதுதான் வரலாற்றிலேயே மிகவும் வயதான மரமாய் இருக்கவேண்டும் என்று எய்ட்டல் கூறுகிறார். இவை எல்லாவற்றையும் நோக்கும்போது பாஹியன் இலங்கையில் இருந்த போது மஹிந்தனரையும் சங்கமித்தாவையும் பற்றிக் கேள்விப்படவேயில்லை என்ற முடிவுக்குத்தான் நாம் வரக்கூடும்.

வந்து, அதனை புத்தர்பிரான் மண்டபத்தின் அருகில் நட்டு வைத்தான். அங்கே ஒரு மரம் 200 முழ உயரத்திற்கு[16] வளர்ந்தது. ஆனால் அது தென் கிழக்குப் பக்கமாய்ச் சாய்ந்து வளைந்து நின்றது.

**புனித மரம்**

அது விழுந்து விடக்கூடும் என்று அஞ்சிய அரசன் எட்டு ஒன்பது சாண் சுற்றளவுள்ள[17] ஒரு கம்பத்தை முட்டுக் கொடுத்தான். அந்த முட்டின் நடுவில் (அதாவது, அந்த முட்டும் அடிமரமும் சந்தித்த இடத்தில்[18]) அந்த மரம் வளரத் தொடங்கியது. அடி மரத்தில் முளைத்த கொப்பு ஒன்று அந்தக் கம்பத்தைப் பிளந்து கொண்டு கீழே சென்று நிலத்தில் வேர்விட்டு மேலே கிளம்பிற்று. அதனுடைய சுற்றளவு சுமார் நான்கு சாண் இருக்கும். முட்டுக் கொடுத்திருந்த கம்பம் நடுவில் பிளந்து போயிற்று என்றாலும். அதனுடைய வெளிப் பகுதிகள் அந்தப் புதுக் கொப்பை விடாமல் பற்றிக் கொண்டு நின்றன. மக்கள் அவற்றை அப்படியே விட்டு விட்டார்கள். மரத்தின் அடியில் ஒரு விஹாரம் கட்டப்பட்டது. அந்த விஹாரத்தில் ஒரு புத்தர் சிலை இருக்கிறது. புத்தர் பிரான் இருந்த திருக்கோலத்தில் அந்தச் சிலை அமைந்துள்ளது. துறவிகளும் பொது மக்களும் அதன்முன் நின்று ஓயாமல் வழிபட்டுக்கொண்டே இருக்கிறார்கள். புத்தர்பிரானுடைய திருப்பல் மடம் ஒன்றும் நகரில் கட்டப்பட்டுள்ளது. இந்த மடத்திலும் முன்னர்ச் சொன்ன மடத்திலும் எழுவகை மணிகள் இழைத்த அலங்கார வேலைப்பாடுகள் உள்ளன.

**கருவூலம்**

பார்ப்பனர் செய்துவைக்கின்ற தூய்மைச் சடங்குகளுக்கு அரசன் தன்னை ஆட்படுத்திக் கொள்கிறான். நகரில் வாழ்கின்ற குடிமக்களும் உண்மையான நம்பிக்கையும் பயபக்தியும் உடையவர்களாய் இருக்கிறார்கள். நாட்டில் அரசாங்கம் ஏற்பட்ட பின்னர் இது வரையிலும் அங்குப் பஞ்சமோ பற்றாக் குறையோ அரசியல் புரட்சியோ ஏற்பட்டதில்லை. துறவிகள் வாழ்கின்ற மடங்களில் ஏராளமான ரத்தினங்களும் விலைமதிக்க இயலா 'மணிகளும்' இருக்கின்றன. முன்னொரு காலத்தில் துறவிமடக் கருவூலங்களுள் ஒன்றைக் காணச் சென்ற அரசன் ஒருவன் விலை மதிக்க இயலா முத்துக் குவியலைக் கண்டு, அவற்றின் மீது பேராசை கொண்டு, வன்முறையில் அவற்றை எடுத்துக்

[16] 220 அடி—பீல்.

[17] மரத்தைத் தாங்குவதற்காக அதனைச் சுற்றிலும் எட்டொன்பது முட்டுகள் கொடுக்கப்பட்டன.—பீல்.

[18] மரமும் முட்டும் சந்தித்த இடத்தில் மரம் வளர்ந்தது.—கைல்ஸ்.

கொண்டு போய்விடவேண்டும் என்று எண்ணினான். ஆனால் மூன்றே நாளில் அவனுடைய மனம் திருந்திவிட்டது. உடனே அவன் மடத்திற்குச் சென்று, துறவிகளின் முன்னால் தன் தலை தரையிற் படுமாறு தாழ்ந்து வணங்கி, தன்னுடைய தீய எண்ணத்திற்காகக் கழிவிரக்கங் கொண்டான். பின்னர் அரசர் யாரும் துறவிமடக் கருவூலங்களைப் பார்க்கக் கூடாது என்றும், துறவிகளும் துறவறம் பூண்டு நாற்பாதண்டு கழியும் வரையிலும் அத்தகைய கருவூலங்களுக்குள் நுழையக் கூடாது என்றும் புது விதிகளை வகுக்குமாறு அவன் துறவிகளுக்கு வேண்டுகோள் விடுத்தான்.

**சமயப் பிரசாரம்**

நகரில் வைசிய குலத்தைச் சேர்ந்த மூத்தோர்களும் சோ-போக்களும்[19] பலர் வாழ்கின்றனர். அவர்களுடைய வீடுகள் அழகாகவும் கம்பீரமாகவும் காட்சியளிக்கின்றன. தெருக்கள், சந்துபொந்துகள், மூலைமுடுக்குகள் ஆகிய அனைத்தும் ஒழுங்காகவும் குப்பைகூளம் இல்லாமலும் இருக்கின்றன. நகரின் முதன்மைத் தெருக்கள் நான்கும் தொடங்குகின்ற இடங்களில் பிரசார மண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. ஒவ்வொரு மாதமும் எட்டாம் நாள், பதினான்காம் நாள், பதினைந்தாம் நாள் ஆகிய நாட்களில் அந்த மண்டபங்களில் சமுக்காளம் விரித்து, பேசுபவர்க்கான மேடையமைத்து, சமயப் பிரசாரச் சொற்பொழிவுகளை நடத்துகிறார்கள். அவற்றைக் கேட்பதற்காக நகரின் பல பகுதிகளிலிருந்தும் பொது மக்களும் துறவிகளும் வருகிறார்கள்.

**துறவிகளின் உணவு**

அந்த ராஜ்யத்தில் மொத்தம் அறுபதினாயிரம் துறவிகள் இருக்கிறார்கள் என்றும் அவர்களுக்குத் தேவையான உணவுப் பொருள்கள் அவர்களுடைய பொதுப் பண்டாரங்களிலிருந்து வருகின்றன என்றும் சொல்கிறார்கள். மேலும், அரசனும் ஐயாயிர ஆறாயிரந் துறவிகளுக்கு உணவு அளிக்கக் கூடிய பொது உணவுச் சாலை ஒன்றனை நகரின் வேறொரு பகுதியில் நடத்துகிறான் என்றும் சொல்கிறார்கள். பசியெடுக்கும்போது, துறவிகள் தங்களுடைய பெருங் கிண்ணங்களைக் கையில் ஏந்திக் கொண்டு,

[19] சோ-போ என்னும் சொற்களுக்கு பீல் கொடுத்துள்ள ஆங்கில வடிவின் அடிப்படையில் அவை சபீய வணிகர்களைக் குறிக்கிறது என்று லெக் கருதுகிறார். ஆனால் அது தவறு. சோ-போ என்பதனை 'சார்த்த வாஹன்' (வணிக மன்னன்) என்று கொள்ள வேண்டுமென்று பெலியோ கருதுகிறார். BEFEO, iv, p. 356, n. 1.

உணவுச் சாலைக்குச் சென்று, கிண்ணங்கள் நிறைய உணவு பெற்றுக் கொண்டு திரும்புகிறார்கள்.

மூன்றும் மாதத்தின் இடையில் திருப்பல் திருவிழா நடைபெறுகிறது. விழாவுக்குப் பத்து நாளுக்கு முன்னரே அரசன் திருவிழாவைப் பற்றிய செய்தியைப் பொது மக்களுக்கு அறிவிக்கிறான். ஒரு பெரிய யானைக்கு அணிமணி பூட்டி, ஒருவனை அதன்மீது அமர்த்தி, அவனிடத்தில் ஒரு பெரிய முரசையும் கொடுத்து அனுப்புகிறான். அவன் அரசு ஊழியருக்குரிய ஆடைகளை அணிந்து கொண்டு, யானைமீது அமர்ந்தவாறே, பின் வரும் செய்தியை முரசறைந்து தெரிவிக்கிறான்:

**திருப்பல் விழா**

'போதிசத்வர் மூன்று அசங்கேய கல்ப காலம்[20] வாழ்ந்து தம்முடைய திருத்தொண்டினை நடாத்தினார். தம்முடைய நலன் எதனையும் கருதாமல் அவர் தம் வாழ்நாளை மக்களுடைய நலனுக்காகச் செலவிட்டார். அவர் தம்முடைய ராஜ்யத்தையும் தலை நகரத்தையும் மனைவியையும் மகனையும் துறந்தார்; தம்முடைய கண்களைப் பிடுங்கி வேறொருவனுக்குக் கொடுத்தார்; ஒரு புறாவின் உயிரைக் காப்பதற்காக அவர் தம்முடைய உடம்பின் தசையில் ஒரு துண்டை வெட்டிக்கொடுத்தார்; தம்முடைய தலையை வெட்டி இரப்பவர்க் கீந்தார்; பசியால் வாடிய ஒரு பெண்புலிக்குத் தம்முடைய உடலை இரையாக்கினார்; தம்முடைய நல்லியையும் மூளையையும் தானஞ் செய்வதற்கும் அவர் தயங்கவில்லை. இத்தகைய பல்வேறு வழிகளிலும் அவர் மற்ற மக்களின் இன்பத்திற்காகத் தமக்குத் துன்பம் ஊட்டிக் கொண்டார். புத்தர்பதத்தை யடைந்த பின்னரும் அவர் நாற்பத்தைந்தாண்டு உயிர் வாழ்ந்து, போதி தர்மத்தைப் பிரசாரம் செய்வதிலும், மக்களுடைய இயல்புகளை மாற்றி உயர்த்துவதிலும் ஈடுபட்டார். களைத்தவர்கள் இளைப்பாறினார்கள். தர்மத்தை அறியாதவர்கள் அதனையறிந்து திருந்தினார்கள்.

[20] கல்பம் என்பது மிக நீண்ட காலத்தைக் குறிக்கிறது. பிரபஞ்சம் படைக்கப்பட்டும் அழிந்துகொண்டும் இருக்கிறது. இவ்வாக்கமும் அழிவும் ஒருமுறை நிகழ்வதற்கு ஒரு கல்ப காலம் பிடிக்கிறது. அசங்கேயம் என்பது வழக்கிலிருக்கும் எண்களுள் மிகப்பெரிய எண்ணைக் குறிக்கிறது. ஒன்றுக்குப் பின் பதினேழு பூஜ்யங்களைப் போட்டால் அது அசங்கேயம் ஆகிறது என்று சீனர் கருதுகின்றனர். ஆனால் ஒன்றுக்குப் பின்னால் தொண்ணூற்றேழு பூஜ்யங்களைப் போட்டால்தான் ஓர் அசங்கேயம் ஆகும் என்று திபேத்தியரும் சிங்களரும் கருதுகின்றனர். நான்கு அசங்கேய கல்பங்கள் சேர்ந்தால் ஒரு மகா கல்பம் ஆகும், Eitel p. 15-Legge.

இவ்வாறு உலகத்தார்க்கு ஆற்ற வேண்டிய பணிகளை ஆற்றி முடித்ததும் அவர் இவ்வுலக வாழ்வை நீத்துப் பரிநிர்வாணம் எய்தினார். 1497 ஆண்டுகளுக்கு முன்னர் நடந்த அந்த நிகழ்ச்சிக்குப்பின் உலகத்தின் ஒளி அணைந்துவிட்டது.[21] இன்று வரையிலும் உலகமே துயரத்தில் ஆழ்ந்து கிடக்கிறது. இன்றைக்குப் பத்தாம் நாளில் புத்தருடைய திருப்பல் வெளியே எடுத்துவரப்படும். பின்னர் அது அபயகிரி விஹாரத்திற்கு ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும். இந்நகரில் வாழ்கின்ற பொதுமக்களும் துறவிகளும் புண்ணியந் தேட விரும்பினால், தெருக்களையெல்லாம் செப்பம் செய்து, அவற்றிலுள்ள மேடுபள்ளங்களைச் சமமாக்கி, சந்து பொந்துகளையும் துப்புரவு செய்து, அவற்றிற்கு அழகூட்டி, புத்தர்பிரான் திருப்பல்லை வழிபடுவதற்காக ஏராளமான மலர்களையும் நறும்புகைப் பொருள்களையும் திரட்டி வைப்பார்களாக!'

இந்த அறிவிப்பு முடிந்தபின், புத்தர்பிரான் தம்முடைய வாழ்நாளில் எந்தெந்த உருவங்களில காட்சியளித்தாரோ அந்தந்த உருவங்களைப் பொதுமக்கள் காண்பதற்காகச் சாலையின் இருமருங்கிலும் அரசன் வரிசையாக நிறுத்தி வைக்கிறான். புத்தர் பிரான் ஐந்நூறு உருவங்களில் காட்சியளித்திருக்கிறார். இதோ இங்கு அவர் சுதானா[22] உருவில் நிற்கிறார். அதோ அங்கு சாமா[23] உருவில் நிற்கிறார். இந்த இடத்தில் அவர் யானைகளின் அரசராகவும், அந்த இடத்தில் குதிரையாகவும், இன்னோரிடத்தில் ஆண் மானாகவும்[24] காட்சியளிக்கிறார்.

[21] Compare *Sacred Books of the East*, Vol. XI. *Buddhist Suttas*, pp. 89-121, and note on p. 89.—Legge.

[22] புத்தர் கௌதமராகப் பிறந்தபோதுதான் முழு மெய்யுணர்வு பெற்று புத்த மதத்தை அடைந்தார். அதற்கு முன்னைய பிறவியில் சுதானா என்ற பெயரும் சுதத்தா என்ற பெயரும் இருந்தன. அந்தக் காலம் வெசந்தர ஜாதகம் என்று சொல்லப்படுகிறது. அதைப்பற்றிய விவரத்தை ஹார்டி மிக நீளமாய் எழுதியுள்ளார். M.B. pp. 116–124; see also *Buddhist Birth Stories*, p. 158.—Legge.

[23] சுதான ஜாதகம்: வெசந்தர ஜாதகம் என்றாலும் சுதான ஜாதகம் என்றாலும் ஒன்றுதான். இந்த ஜாதகத்தையும் சாம ஜாதகத்தையும் சாஞ்சிச் சிற்பங்களில் காண்கிறோம்.-Beal. For the stories see *Jatakas* Nos. 547 and 540 respectively in the *Jataka*, ed. Cowell, Vol. VI.

[24] தம்முடைய ஜாதகப் பிறவிகளில் சாக்கிய முனிவர் எந்தெந்த உருவங்களில் எத்தனை எத்தனை முறை தோன்றினார் என்பதனை ஹார்டி கணக்கிட்டுச் சொல்கிறார் (M.B. p. 100). அவர் ஆறு முறை யானையாகவும், பத்து முறை மானாகவும், நான்கு முறை குதிரையாகவும் தோன்றினார்.—லெக்.

அந்தச் சிலைகளெல்லாம் மிகவும் அழகாகச் செய்யப்பட்டு வண்ணம் பூசப்பட்டுள்ளன. பார்ப்பதற்கு அவை உயிருள்ளவை போலவே தோன்றுகின்றன. பின்னர் புத்தருடைய திருப்பல் வெளியே எடுத்து வரப்பட்டுச் சாலையின் நடுவில் ஊர்வலமாய்ச் செல்கிறது. வழியெல்லாம் மக்கள் தங்கள் காணிக்கைகளைச் செலுத்தி அந்தத் திருச்சின்னத்தை வழிபடுகிறார்கள். இறுதியில் அது அபயகிரி விஹாரத்திலுள்ள புத்தமண்டபத்தை அடைகிறது. அங்கே துறவிகளும் பொதுமக்களும் திரண்டு நிற்கிறார்கள். அவர்கள் அந்தத் திருச் சின்னத்தின் முன்னர்ச் சாம்பிராணி புகைத்தல் விளக்கேற்றுதல் போன்ற வழிபாட்டுக் கடன்கள் அனைத்தையும் செலுத்துகிறார்கள். இந்த வழிபாடு தொண்ணூறு நாள் இரவும் பகலும் இடையீடின்றி நடைபெறுகிறது. அதன்பின் புத்தர்பிரானுடைய திருப்பல்லை மீண்டும் நகரிலுள்ள விஹாரத்திற்கு எடுத்துச் செல்கிறார்கள். நோன்பு நாட்களில் அந்த விஹாரத்தின் கதவுகள் திறக்கப்படுகின்றன. விதிக்கப்பட்ட வழிபாட்டுச் சடங்குகள் எல்லாமே அப்போதும் செய்யப்படுகின்றன.

அபயகிரி விஹாரத்திற்குக் கிழக்கே 400 லீ தொலைவில் உள்ள குன்றின்மேற் கட்டப்பட்ட சைத்தியம்[25] என்னும் விஹாரம் ஒன்று இருக்கிறது. அங்கு 2000 துறவிகள் வசிக்கிறார்கள். அவர்களுள் தர்மகுப்தர்[26] என்னும் மிகச் சிறப்பு வாய்ந்த ச்ரமணர் ஒருவர் இருக்கிறார். நாட்டு மக்கள் அனைவருமே அவரை மிக உயர்வாக மதித்துப் போற்றுகின்றனர். அவர் நாற்பதாண்டுக் காலமாகக் கல்லில் செதுக்கப்பட்ட அறையொன்றில் வாழ்ந்து வருகிறார். எப்போதும் அவரது உள்ளத்தில்

[25] சைத்தியம் என்பது பௌத்த வழிபாட்டோடு தொடர்புடைய இடங்களையும் பொருள்களையும் குறிக்கின்ற ஒரு பொதுச் சொல். அதனால், அது தூபிகள், கோயில்கள், திருச்சின்னங்கள், படங்கள், சிலைகள் முதலிய அனைத்தையும் குறிக்கும். அதற்குக் கோயில் என்றும் வழிபடுவதற்கும் காணிக்கை செலுத்துவதற்கும் உரிய இடம் என்றும் பொருள் சொல்கிறார்கள் என்று எய்ட்டல் சொல்கிறார் (p. 141). இங்கே சொல்லப்படுகின்ற மலை மிஹின்தலே என்னும் மலையாகும் அது போதி மரத்திற்குக் கிழக்கில் எட்டு மைல் தொலைவில் உள்ளது.—Davids, *Buddhism* pp. 230-231—Legge.

[26] 'அவர் ஒரு புகழ்பெற்ற துறவி; புத்தமதக் கோட்பாட்டுக் குழு ஒன்றை நிறுவியவர்; அந்தக் குழு இலங்கையில் கி.பி. 400ஆம் ஆண்டில் மிகவும் ஓங்கியிருந்தது'. இது எய்ட்டல் கூறுவது. ஆனால், தர்மகுப்தர் கோட்பாட்டுக் குழு ஒன்றை நிறுவியதைப்பற்றி பாஹியன் ஒன்றும் சொல்லவில்லை.—லெக். தர்மகுப்தர் என்னும் பெயரை பீல் தர்மகோடி என்றும் எழுதியுள்ளார்.

அருள் சுரந்து பொங்கி வழிகிறது. அப்பேரருளினால் ஆட்கொள்ளப்பட்ட பாம்புகளும் எலிகளும் ஒன்றுக்கொன்று எவ்வித தீங்கும் செய்து கொள்ளாமல் ஒரே அறையில் சேர்ந்து வாழ்கின்றன.

## ஆருகதர் ஒருவரின் ஈமக்கடன்

நகருக்குத் தெற்கில் 7 லீ தொலைவில் மஹாவிஹாரம் என்னும் மடம் ஒன்று இருக்கிறது. அங்கு 3000 துறவிகள் வாழ்கிறார்கள். அவர்களுக்குள் மிகவும் உயர்ந்த இயல்புகளை உடைய ச்ரமணர் ஒருவர் இருந்தார். துறவிகளுக்கு விதிக்கப் பட்ட கடமைகளை இம்மியும் தவறாது கடைப்பிடித்தவர் அவர். அவர் மிகவும் புனிதமான வாழ்க்கையை நடத்தியவர். எனவே மக்கள் அவர் ஓர் ஆருகதர் என்பதை உணர்ந்தார்கள். அவருடைய முடிவு நெருங்கிவிட்டது என்பதை அறிந்த அரசன் அவர் ஓர் ஆருகதர்தானா என்பதை ஆராய்வதற்காக அந்த மடத் திற்குப் போனான். விதிகளின்படி மடத்தில் வாழ்ந்த துறவிகளை யெல்லாம் ஒன்றுகூட்டியபின், அந்த ச்ரமணர் பூரண ஞானத்தையும் அடைந்தவர்தானா என்று அவர்களிடம் அரசன் கேட்டான். அவர் முழு மெய்யுணர்வு பெற்ற ஆருகதர்தான் என்று அவர்கள் மறுமொழி கூறினார்கள். ஆருகதருக்குச் செய்ய வேண்டியவை என்று விதிக்கப்பட்ட ஈமக் கடன்கள் எல்லா வற்றையும் அரசன் அவருக்கும் செய்தான்.

மஹா விஹாரத்திற்குக் கிழக்கில் நான்கைந்து லீ தொலைவில் முப்பது முழ நீளம், முப்பது முழ அகலம், முப்பது முழ உயரம் உள்ள சிதை[27]யொன்று உருவாக்கப்பட்டது. சிதையின் மேல்பகுதியில் சாதாரண விறகுக்கு மாறாகச் சந்தன மரம் போன்ற நறுமணமரக் கட்டைகள் அடுக்கப்பட்டன. சிதையின் நான்கு பக்கங்களிலும் ஏறிச் செல்வதற்கேற்ற படிகள் கட்டப்பட்டன. ஆருகதரின் உடலின்மீது தூய வெண் கம்பளத் துணி சுற்றப்பட்டது. பார்ப்பதற்கு அது ஏறக் குறையப் பட்டுத் துணி போலவே இருந்தது. அதன் பின்னர் உடலைச் சுமந்து செல்வதற்கு ஏற்ற வகையில் செய்யப்பட்ட பெரிய தேர் ஒன்றில் ஆருகதரின் உடல் வைக்கப்பட்டது. அந்தத் தேர் நம் நாட்டுச் சவ வண்டியைப் போல இருந்தது.

[27] 34 அடி.—பீல்.

ஆனால், அதில் மீன் உருவங்களும் ட்ராகன் உருவங்களும் இல்லை.[28]

எரியூட்ட உடலை எடுத்துச் சென்றபோது பல திசைகளி லிருந்தும் ஏராளமான மக்கள் வந்து கூடிவிட்டார்கள். அவர்கள் சாம்பிராணி புகைத்தும் உடலின்மீது மலர் தூவியும் தங்கள் மரியாதையைத் தெரிவித்துக் கொண்டார்கள். ஈமத் தேர் சுடுகாட்டை[29] நோக்கிச் சென்றபோது அரசனே மலர் தூவியும் சாம்பிராணி புகைத்தும் வழிபட்டான். இத்தகைய வழி பாடெல்லாம் முடிந்த பின்னர், தேரைச் சிதையின்மீது தூக்கி வைத்தார்கள். சிதை முழுவதும் துளசி எண்ணெயை ஊற்றித் தீ வைத்தார்கள். நெருப்பு கொழுந்துவிட்டு எரியத் தொடங்கி யதும் கூடியிருந்த மக்கள் தாங்கள் அணிந்திருந்த மேலாடை, கையில் கொண்டுவந்திருந்த இறகுவிசிறி, குடை ஆகிய வற்றைத் தொலைவில் இருந்தவாறே சிதையின்மீது வீசினார்கள். தீ மேலும் வேகமாக எரிந்தது. மக்கள் உள்ளங்களெல்லாம் பயபக்தியால் நிரம்பின. உடல் வெந்து சாம்பலான பின்னர், எஞ்சியிருந்த எலும்புகளைப் பொறுக்கிச் சேர்த்து, அவற்றின் மீது தூபியொன்றைக் கட்டத் தொடங்கினார்கள். பாஹியன் அங்குப் போகுமுன்னரே அந்த ச்ரமணர் இறந்து போனதால் அவரை உயிரோடு பார்க்க இயலாது போயிற்று. அவருடைய ஈமக் கடன்களை மட்டும் பாஹியன் கண்டார்.

அப்போது சிங்களத்தை ஆட்சி செய்துகொண்டிருந்த அரசன்[30] புத்த மதத்தில் உண்மையான நம்பிக்கை உள்ளவன்.

[28] ஈமத்தேர் அதனுடைய அலங்காரம் ஆகியவற்றை அறிந்துகொள்ள *Sacred Books of the East*, Vol. xxvii, the LiKi, Book xix—ஐப் பார்க்க. இந்த ஈமக்கடனைப் பற்றி பாஹியன் இலங்கையில் இருக்கும்போதே எழுதவில்லை என்பதையும், அங்கே குறித்துவைத்த செய்திகளைச் சீனாவுக்குத் திரும்பிய பின்னரே விவரமாய் எழுதினார் என்பதையும், அப்படி எழுதும்போது ஈமக்கடன் பற்றிய சீனப் பழக்கவழக்கங்களை அகக்கண்ணிலோ முகக்கண்ணிலோ கண்டார் என்பதையும் 'நம் நாட்டுச் சவவண்டி' என்னும் சொற்கள் காட்டுகின்றன.—லெக்.

[29] பாஹியன் சுடுகாடு என்பதற்குப் பதிலாக இடுகாடு (பிணங்களைப் புதைக்கும் இடம்) என்று எழுதியுள்ளார். சுடுவதும் புதைப்பதும் பிணம் அழிவதற்குத்தானே? பிணத்தின் அழிவிற்கு இங்கே சிதை பயன்பட்டது, எனவே பாஹியன் அவ்வாறு எழுதியுள்ளார்.—லெக்.

[30] இந்த மன்னன் மகாநாமனாக (கி.பி. 410-432) இருக்கவேண்டும். அவனுக்குமுன் ஆட்சி செய்த உபதிசன் காலத்தில்தான் (கி.பி. 368-410) பிடகங்கள் முதன்முதலில் சிங்களத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. மகாநாமன் காலத்தில் புத்தகோசர் தம்முடைய விரிவுரையை எழுதினார். அவ்விரண்டு அரசர்களுமே விஹாரங்கள் பலவற்றைக் கட்டியவர்கள்.—லெக்.

அதனால் துறவிகளுக்காக அவன் ஒரு புது மடத்தைக் கட்ட விரும்பினான். அதற்காக அவன் துறவிகளின் பெருங்கூட்டம் ஒன்றை நடத்தினான். அவர்களுக்கு அரிசிச் சோறு போட்டு உபசரித்து, வழக்கமான பரிசுகளை அளித்த பின்னர், அவன் தலை சிறந்த எருதுகள் இரண்டைத் தெரிந்தெடுத்து, அவற்றின் கொம்புகளைப் பொன்னாலும் வெள்ளியாலும் எழுவகை மணிகளாலும் அணி செய்து, தங்கக் கலப்பையைப் பூட்டி, மடங் கட்டுவதற்குத் தெரிந்தெடுத்த இடத்தைச் சுற்றி அதனுடைய நான்கு பக்கங்களிலும் அவனே ஒரு சால் உழுதான். அதன் பின்னர், அந்த மடத்திற்கு விளைநிலங்களையும் வீடுகளையும் அவற்றில் வாழ்ந்த மக்களோடு சேர்த்துத் தானஞ் செய்தான். அந்த மானியத்தின் விவரங்கள் உலோகத் தகடுகளில் பொறிக்கப்பட்டன. அந்த மானியத்தை அந்த மடத்துத் துறவிகள் தலைமுறை தலைமுறையாக ஆண்டு அனுபவிக்கலாம் என்றும், அதனை மாற்றுவதற்கோ விலக்கு வதற்கோ யாருக்கும் உரிமையில்லை யென்றும் அந்தப் பட்டையம் எடுத்துரைத்தது.

—Legge *op. cit.* pp. 101-109 (Cf. Giles *op. cit.* pp. 66-74. Beal, *op. cit.* lxxii—lxxviii).

## ஈ. ஜாவாவுக்குச் செல்லுதல்

பாஹியன் இலங்கையில் ஈராண்டு தங்கியிருந்தார்; பட்னாவில் அவருக்கு பௌத்த நூல்கள் பல கிடைத்தன. இப்போது இலங்கையிலும் அவருக்குச் சில நூல்கள் கிடைத்தன. அவற்றுள் மஹிஷாசகாஹம்[31] என்னும் கோட்பாட்டுப் பிரிவைச் சேர்ந்த வினயபிடகம் என்பது ஒன்று. திர்க்காகமம், சம்யுக்தாகமம்[32] என்னும் சூத்திரங்களும் சம்யுக்த

[31] No. 1122 in Nanjio's Catalogue, translated into Chinese by Buddhajiva and a Chinese Sramana about A.D. 425.

மஹிஷாசகாஹம் என்றால் 'பண்புயர்ந்த உலகம்' என்றும் 'புத்த தர்மம் செல்வாக்குப் பெற்ற வட்டம்' என்றும் மொழிபெயர்க்கலாம். இந்தக் கோட்பாட்டுக் குழு சர்வாஸ்தி வாதம் என்னும் கோட்பாட்டுக் குழுவின் உட்பிரிவுகளுள் ஒன்று.—லெக்.

[32] Nanijo's 545 and 504. ஹீனயான பௌத்தத்தின் ஆகமங்கள் அல்லது சூத்திரங்கள் நான்கு பிரிவுகளைக் கொண்டவை என்றும், அவற்றுள் நேர்மையான நடத்தையைப்பற்றி எடுத்துரைக்கின்ற திர்க்காகமங்கள் (நீண்ட ஆகமங்கள்) முதற் பிரிவைச் சேர்ந்தவை யென்றும், மூன்றும் பிரிவில் சம்யுக்தாகமங்கள் (கலப்பு ஆகமங்கள்) இருக்கின்றன என்றும் எய்ட்டல் (பக்கம் 4, 5) சொல்கிறார்.—லெக்.

சஞ்சயபிடகமும்[33] அவருக்குக் கிடைத்த பிற நூல்கள். மேலே சொன்ன நூல்களுள் எதனையும் ஹான் நாட்டினர் அதுவரையிலும் கண்டதில்லை. அந்த வடமொழி நூல்களை எடுத்துக் கொண்டு பாஹியன் பெரிய வாணிகக் கப்பல் ஒன்றில் ஏறினார். அதில் 200 பயணிகள் இருந்தார்கள். அந்தப் பெருங்கலத்தோடு கயிற்றால் பிணைக்கப்பட்ட ஒரு சிறு கலமும் இருந்தது. பெருங் கலத்திற்கு யாதேனும் ஆபத்து நேர்ந்தால் பயணிகள் அந்தச் சிறு கலத்தில் ஏறிக்கொள்ளலாம். கப்பல் இலங்கையை விட்டுப் புறப்பட்ட மூன்று நாள் வரையிலும் காற்று வாய்ப்பாக இருந்தது. எனவே கப்பல் கிழக்கு நோக்கி வசதியாய்ச் சென்றது. அதன்பின் திடீரென்று கடுங்காற்று வீசத் தொடங்கியது. அதனால் கப்பலில் ஓட்டையொன்று விழுந்து அதன் வழியாய்க் கடல்நீர் உள்ளே புகுந்தது. வணிகர் அனைவரும் சிறு கலத்தில் ஏறிக்கொள்ள விரும்பினர். ஆனால் அதிகம் பேர் ஏறினால் அச்சிறு கலத்திற்கும் ஆபத்து நேர்ந்துவிடும். அதனால் மாலுமிகள் சிறுகலத்தைப் பிணைத்திருந்த கயிற்றை அறுத்துவிட்டார்கள். அதைக் கண்ட வணிகர்கள் கப்பல் நீர் நிறைந்து கவிழ்ந்துவிடும் என்றும் தாங்கள் கடலில் மூழ்கி உயிர் துறக்க நேரிடும் என்றும் அஞ்சினார்கள். அதனால் சுமையைக் குறைக்கும் நோக்கத்துடன் அவர்கள் தங்களுடைய வாணிகப் பண்டங்களைத் தூக்கிக் கடலில் எறிந்தார்கள். பாஹியனும் தம்முடைய செம்பையும் கும்பாவையும் இன்னும் சில பொருள்களையும் தூக்கிக் கடலில் எறிந்துவிட்டார். ஆனால் வணிகர்கள் தம்முடைய நூல்களையும் தூக்கி எறிந்துவிட்டால் என்ன செய்வது என்று அவர் பெரிதும் அஞ்சினார். வேறொன்றும் செய்ய இயலாத நிலையில் அவர் க்வான்-ஷே-யின்னை[34] நினைத்து வழுத்தித் தம்முடைய உயிரைக் காக்கும் பொறுப்பை ஹான் நாட்டுத் திருக்கோயிலுக்கு விட்டுவிட்டார். 'தர்மத்தை அறிந்துகொள்வதற்காக நான்

[33] 'பல்பொருள் கதம்பம்' என்று பொருள் கூறலாம்; இதனை நான்காம் பிடகம் என்றே சொல்லலாம். (See Nanjio's fourth division of the Canon, containing Indian and Chinese miscellaneous works.) ஆனால், இந்தப் பெயர்கொண்ட நூல் வடமொழியிலும் இல்லை, பாலியிலும் இல்லை என்று டேவிட்ஸ் சொல்கிறார்.—லெக்.

[34] க்வான்-ஷே-யின் ஆணா பெண்ணா என்பது தெரியவில்லை. அந்தத் தெய்வத்தைப் பின்பற்றுவர்களுடைய கொள்கைகளும் தெரியவில்லை. மஞ்சுஸ்ரீயைப் போலவே க்வான்-ஷே-யின் யாரென்பதும் மறைபொருளாகவேயுள்ளது. அவலோகிதேச்வரர் என்பதையே சீனர்கள் தவறாக மொழிபெயர்த்து க்வான்-ஷே-யின் என்று எழுதியிருக்கின்றார்கள். பாஹியன் தம்முடைய அனுபவங்களை யார் படிக்கவேண்டுமென்று எழுதினாரோ அவர்கள் க்வான்-ஷே-யின் என்று படிக்கும்போது அவலோகிதேச்வரர் என்றே புரிந்துகொள்வார்கள்.

எவ்வளவோ தொலைவு சுற்றிவந்திருக்கிறேன். என் சொந்த மண்ணுக்குத் திரும்பி இளைப்பாறுவது உன் கையில் இருக்கிறது. உன்னுடைய இயற்கைக்கு மேம்பட்ட அஞ்சுவரு பேராற்றல் என்னைக் காக்குமாக' என்று அவர் வேண்டிக் கொண்டார்.

புயல் பதின்மூன்று நாள் இரவு பகலாய் அடித்தது. அதன்பின் கப்பல் ஒரு தீவின் கரையை அடைந்தது. அங்கு வேலையிறக்கம் நிகழ்ந்த நேரத்தில் கப்பலில் இருந்த ஓட்டையை மாலுமிகள் கண்டுபிடித்து அடைத்தார்கள். அதன்பின் பயணம் தொடர்ந்தது. இந்த (அப்போது கப்பல் சென்று கொண்டிருந்த) இடங்களில் கடற் கொள்ளைக்காரர் மிகுதியாய் இருக்கின்றனர். அவர்கள் கையில் அகப்பட்டுவிட்டால் உடனே சாவை அணைத்துக்கொள்ள நேரிடும். பெருங்கடல் எல்லாப் பக்கங்களிலும் பரந்து விரிந்து கிடக்கிறது. திசையே தெரியவில்லை. பகலவனையும், விண்மீன்களையும், தண்மதியையும் பார்த்துக் தான் கப்பலைச் செலுத்தவேண்டும். எனவே வானம் இருண்டாலும் மழை பெய்தாலும் கப்பலை நாம் விரும்புகின்ற திசையில் செலுத்த இயலாது. காற்றடித்த பக்கம் அது தானே செல்ல வேண்டியதுதான். இரவில் அலைகளைத் தவிர வேறொன்றையும் காண இயலவில்லை. அந்தப் பேரலைகள் ஒன்றோடொன்று மோதிக் கொள்வதால் உண்டாகும் நெருப்பைப் போன்ற ஒளியில் பெரிய பெரிய ஆமைகளும் ஏனைய அஞ்சுவரு பேருருவ விலங்குகளும் தெரிகின்றன. கப்பல் செல்லும் திசையை அறிய இயலாததால் வணிகர்கள் பேரச்சத்திற்கு ஆளானார்கள். கடலோ மிகவும் ஆழமாய் இருந்தது. அதனால் நங்கூரம் பாய்ச்சிக் கப்பலை நிறுத்துவதென்பது நடைபெறாத முயற்சியாய்ப் போயிற்று. வானம் வெளுத்தால் திசை தெரிந்து கப்பலைச் செலுத்தலாம். இருட்டாய் இருக்கும்போது யாதேனும் நீரடிப் பாறையில் மோதிக் கொண்டால் இறப்பதைத் தவிர வேறு வழியில்லை.

இவ்வாறு பயணந் தொடர்ந்தது, நாட்களும் ஓடின. 90 நாளுக்குப்பின் கப்பல் ஜாவாத் தீவின் கரையை அடைந்தது. அந்த நாட்டில் பிழைபட்ட சமய நெறிகள் பலவும் பார்ப்பன மதமும் செழித்தோங்கியிருந்தன. கவனத்தைக் கவரும் நிலையில் அங்கே, பௌத்த மதம் இல்லை. அங்கே ஐந்து திங்கள் தங்கியிருந்தபின் பாஹியன் மீண்டும் பெரியதொரு வாணிகக் கப்பலில் ஏறினார். அந்தக் கலத்திலும் இருநூற்றுக்கும் அதிகமான மக்கள் இருந்தார்கள். 50 நாளைக்குத் தேவையான உணவுப் பொருள்களை எடுத்துக்கொண்டு அந்தக் கப்பல் நான்காம் மாதத்தின் பதினாரும் நாளில் புறப்பட்டது.

Legge— *Fa-hein* pp. III-113 (Cf. Giles: *Fa-hsien* pp. 76-78; Beal *Buddhist Records*. (lxxix-lxxxi).

# IX. குணவர்மர்-கி.பி. 367-431

ஹூயி-கியாவோ எழுதிய கவோ-செங்-ட்சூவன் என்பதன் மொழிபெயர்ப்பு. இது கி.பி. 519இல் எழுதப்பட்டது. இந்தத் துறவியைப் பற்றிய சீன வாழ்க்கை வரலாறுகளுள் இதுவே மிக அதிகமான செய்திகளைக் கொண்டுள்ளது. இதுவே முழு உருப் பெற்ற வரலாறு என்று சொல்லலாம்.

**சுருக்கம்:** குணவர்மர் காச்மீர அரச வம்சத்தைச் சேர்ந்த சத்திரியர். அவர் மிகுந்த நுண்ணறிவும் ஆழ்ந்து சிந்தனை செய்யும் மனப்பாங்கும் உடையவர். அவர் தம்முடைய இருபதாம் வயதிலேயே துறவு பூண்டு, ஆகமங்களைக் கற்றுணர்ந்து அந்தத் துறையில் சிறந்த வல்லுநர் ஆனார். அதனால். அவர் 'திரிபிடகதர்மப் பேரறிஞர்' என்னும் பட்டத்தைப் பெற்றார். அவருக்கு முப்பது வயது நடந்துகொண்டிருக்கையில் காச்மீர மன்னன் சந்ததியின்றி மாண்டுபோனான். குணவர்மரே அரசராக வேண்டுமென்று அமைச்சர்கள் அவரை வற்புறுத்தினார்கள். ஆனால், அவர் அதற்கு இசையவில்லை. அவர் காட்டுக்குச் சென்று யார் கண்ணிலும் படாமல் மறைந்து வாழ்ந்தார்.

சிறிது காலத்தில் அவர் இலங்கைக்குச் சென்று சமயச் சடங்குகளை நன்கு பயின்றார். அதன்பின் அவர் சோ-போ (ஜாவா) நாட்டுக்குப் போனார். அவர் அந்த நாட்டில் காலடி யெடுத்து வைப்பதற்கு முன்னாள் இரவில் அந்த நாட்டு அரசனுடைய அன்னையார் அவரைப் பற்றி ஒரு கனவு கண்டார். அதனால் அவரை அந்த அம்மையார் மிகுந்த பணிவன்புடன் வரவேற்று, புத்த மதத்தைத் தழுவினார். அதைக் கண்ட அரசனும் அந்த மதத்தைத் தழுவினான். அதனால் அந்த நாட்டில் பௌத்தம் பரவியது. அதன்பின் குணவர்மர் அற்புதங்கள் பலவற்றைச் செய்தார். சீன மொழியில் எழுதப்பட்டுள்ள குணவர்மர் வாழ்க்கை வரலாற்றைச் சவானே மொழிபெயர்த்துள்ளார். அதனைக் கீழே தருகிறோம்.

'தலைநகரில்[1] வாழ்ந்த புகழ்பெற்ற துறவிகளான ஹுயி கூவன், ஹுயிட்சாங் முதலியவர்கள் குணவர்மருடைய சிறந்த தொண்டைக் கேள்விப்பட்டு அவரைப் பற்றித் தங்களுடைய அரசரிடம் பேசவேண்டுமென்று எண்ணினார்கள். அதன்படியே யுவான்-கியா முதல் ஆண்டு ஒன்பதாம் மாதத்தில் பேரரசர் 'வென்'னைக் கண்டு, குணவர்மரைச் சீனவுக்கு அழைத்துவர வேண்டும் என்ற தங்களுடைய விருப்பத்தைத் தெரிவித்தார்கள். ஹுயி-கூவனையும் அவருடன் தொண்டாற்றிய பிற துறவிகளையும் மரக்கலத்தில் ஏற்றி வழியனுப்புவதற்குத் தேவையான நடவடிக்கைகளை எடுக்குமாறு கியாவோட்சியூ (ஹுனுய்) நகரின் படையாட்சியாளனுக்குப் பேரரசர் ஆணையிட்டார். அதே சமயத்தில் நேரிற் சென்று குணவர்மரை அழைத்து வருவதற்காக பா-ட்சாங், டவோ-ட்சோங், டவோ-ட்சியுன் முதலிய ச்ரமணர்களையும் பேரரசர் அனுப்பினார். குணவர்மரைக் காணவேண்டும் என்ற பேராவலையும், அவர் சாங் நாட்டுக்கு வந்து மதப்பிரசாரம் செய்யவேண்டும் என்ற விருப்பத்தையும் தெரிவித்து, குணவர்மருக்கும் சோபோ (ஜாவா), போ-டோ-கியா[2] , அரசனுக்கும் பேரரசர் எழுதிய கடிதங்களையும் அந்தத் துறவிகள் எடுத்துச் சென்றார்கள். புத்தமதக் கொள்கைகளைப் பரப்புவது முக்கியமானது என்று கருதிய குணவர்மர், அந்தப் பணியை ஆற்றுவதற்காக ஒரு சிறு ராஜ்யத்திற்குப் போகும் நோக்கத்துடன் நந்தி என்ற இந்து வணிகனுடைய மரக்கலத்தில் ஏறி, சீனப் பேரரசரின் தூதர்கள் வந்து சேர்வதற்கு முன்னரே, சோபோ நாட்டிலிருந்து புறப்பட்டுவிட்டார். பயணஞ் செய்வதற்கு அவர் அஞ்சாதவர். காற்று வாய்ப்பாக அடித்ததால் முதலில் நினைத்த சிறு ராஜ்யத்திற்குப் போவதற்கு மாறாக, குணவர்மர் குவாங்-ட்சியூ (கான்டன்) நகரத்திற்குப் போய்ச் சேர்ந்தார். குணவர்மர் இறந்தபின் வெளியிடப்பட்ட அவருடைய நூலில் நாம் காணும் ஒரு செய்திக்கு இந்த எதிர்பாரா நிகழ்ச்சி விளக்கமாய் அமைந்துள்ளது. அந்தச் செய்தி பின்வருமாறு:

'நான் (சோபோவை விட்டுப் புறப்பட்டுப்) பயணஞ் செய்துகொண்டிருந்தபோது, காற்று எங்கள் கலத்தை அடித்துக்கொண்டுபோய் சாங் நாட்டுக் கரையில் சேர்த்தது.' குணவர்மர் நன்-ஹை மாகாணத்திற்கு வந்துவிட்ட செய்தியறிந்த பேரரசர்

சீனர் விடுத்த அழைப்பு

[1] சாங் நாட்டுத் தலைநகரம் நான்கிங் என்பதாகும்.

[2] இதன் பொருள் விளங்கவில்லை, Cf. Krom H.J.G. p. 83.

அவருக்குத் தேவையான உணவுப் பொருள்களைத் தந்து அவரைத் தலைநகருக்கு அனுப்புமாறு ஆளுநர்களுக்கும் படையாட்சியாளர்களுக்கும் புதியதோர் ஆணையைப் பிறப்பித்தார்.

'தலைநகருக்குப் போகும் வழியில் சே-ஹிங்[3] என்னும் ஊர் இருந்தது. குணவர்மர் அங்கே ஓராண்டு தங்கினார். அங்கே ஹூ-சே என்னும் மலையொன்று உள்ளது. அங்கு இருப்பது அந்த ஒரே மலைதான். அது உயர்ந்தோங்கி நின்றது.

**சே-ஹிங் என்னும் இடத்தில்**

அதனுடைய சிகரங்கள் சிறிது சிறிதாகச் சாய்ந்து செல்லாமல் திடீரென்று தோன்றி உயர்ந்து நின்றன. அது கிரிதரகூடத்தைப் போல இருந்தது என்று குணவர்மர் சொன்னார். எனவே மக்கள் அதனுடைய பெயரைக் கழுகுமலை என்று மாற்றி விட்டார்கள். அந்த மலைமீதிருந்த கோயிலுக்கு வெளியே தியான மண்டபம் ஒன்று இருந்தது. அது ஒரு தனியிடத்தில் அமைந்திருந்தது. அது மலைக்கோயிலிலிருந்து பல லீ தொலைவில் இருந்தது. அங்கு எவ்வித ஓசையும் கேட்காது. எனினும், மலைக்கோயில் மணி ஒலிக்கத் தொடங்கியதும் பார்த்தால், அவர் அங்கே நின்றுகொண்டிருப்பார். மழை பெய்யும்போது வந்தாலும் அவர் நனைந்திருக்க மாட்டார். சேற்றில் நடந்து வந்தாலும் அவருடைய உடலிலோ ஆடையிலோ கறை எதுவும் இருக்காது. எனவே, பொதுமக்கள் துறவிகள் ஆகிய அனைவருமே அவரிடத்தில் வியப்பும் மரியாதையும் தோன்ற நடந்துகொண்டார்கள். அந்த வியப்பும் மரியாதையும் நாளுக்கு நாள் உயர்ந்துகொண்டே போயின.

'கோயிலில் பவோ-யூ (ரத்னச்சந்திரா) என்னும் மண்டபம் இருந்தது. அந்த மண்டபத்தின் வடபாற் சுவரில் குணவர்மர் தம்முடைய கையாலேயே லோயுன் (ராஹுலன்) படத்தையும் தீபங்கரக் காட்சியையும், இள மாணவன் தலையை விரித்துப் போடும் காட்சியையும் வண்ணங் குழைத்து வரைந்தார்.[4] அந்த ஓவியங்கள் மாலை மயங்கும் நேரத்தில் முடிவடைந்தன. அப்போது அவற்றிலிருந்து வந்த ஒளி மறைவதற்கு நெடுநேரம் பிடித்தது

'சே-ஹிங்கில் படையாட்சியாளனாய் இருந்த ட்சாய்-மவோ ட்சே குணவர்மரை மிகப்பெரிதும் மதித்துப் போற்றினான்.

[3] இப்போது சவோ-ட்சியூ என்ற பெயருடையது — குவாங்-டாங் மாகாணத்தில் (Chavannes).

[4] See J.A. Sep-Oct. 1903, pp. 199-209 and fig. 11 (Chavannes).

அவன் சாகுந் தறுவாயில் இருந்தபோது, குணவர்மர் நேரே சென்று, அவனைக் கண்டு, தர்மத்தை அவனுக்கு உபதேசம் செய்து, ஆறுதல் கூறினார். அதன் பின்னர் ஒருநாள் ட்சாய்-மவோ-ட்சேயின் உறவினன் ஒருவன் குணவர்மர் ஒரு கோயிலில் துறவிகள் கூட்டத்தின் இடையில் நின்று தர்மத்தை விளக்கும் காட்சியைத் தன்னுடைய கனவில் கண்டான். குணவர்மருடைய முயற்சியால் புத்தமதத்தைத் தழுவியவர்கள் எவ்வளவு நம்பிக்கையும் ஆர்வமும் உடையவர்களாய் இருந்தார்கள் என்பதை இது எடுத்துக்காட்டுகிறது.

'அந்த மலையில் ஒருகாலத்தில் ஏராளமான புலிகள் இருந்தன. குணவர்மர் அந்த மலைக்குப் பகலிற் போய் இரவில் திரும்புவது வழக்கமாய் இருந்தது. வழியில் அவ்வப்போது அவர் கண்ட புலிகளின் தலையைத் தம்முடைய கையிலிருந்த குறுந்தடியால் தடவித் தட்டிக் கொடுத்துவிட்டுப் போவார். அதன்பின்னர் அந்த வழியாக மலைக்கும் ஆற்றுக்கும் போன வழிப்போக்கர்களுக்கு எவ்வித இடையூறும் நேரவில்லை. அத்தகைய அன்பால் ஆட்கொள்ளப்பட்ட வழிப்போக்கர்களுள் பத்துக்கு ஏழெட்டுப்பேர் புத்தமதத்தைத் தழுவினர்.

**அற்புதங்கள்**

'ஒருமுறை குணவர்மர் தனியேயிருந்த ஒரு மண்டபத்தில் தியானஞ் செய்துகொண்டிருந்தார். பலநாள் ஆகியும் அவர் அந்த மண்டபத்திலிருந்து வெளியே வரவில்லை. அதனால் கலவரமடைந்த துறவிகள் அவர் எப்படியிருக்கிறார் என்று பார்த்துவருமாறு ஒரு ச்ரமணரை அனுப்பினார்கள். மண்டபத்திற்குச் சென்ற ச்ரமணர் ஒரு தூணுக்கருகில் வெண்சிங்கம் ஒன்று நேராக நின்றுகொண்டிருப்பதையும் மண்டபம் முழுவதிலும் நீலத் தாமரை பூத்திருப்பதையும் கண்டார். குணவர்மருக்கு ஆபத்து நேரப் போகிறது என்று அஞ்சிய ச்ரமணர் பெருங்கூச்சல் போட்டுக் கொண்டே சிங்கத்தைத் துரத்துவதற்காக உள்ளே ஓடினார். ஆனால் மண்டபம் வெறிச்சோடிக் கிடந்தது. அங்கு யாருமே இல்லை. இத்தகைய ஒப்பற்ற அற்புதங்கள் பலவற்றை குணவர்மர் நிகழ்த்தினார்.

**நான்கிங் நகரில்**

'இதற்கிடையில், குணவர்மரை உடனே தலைநகருக்கு அழைத்து வருமாறு ஹூயி-கூவனுக்கும், அவருடைய தோழர்களுக்கும் பேரரசர் வென் மீண்டும் ஆணையிட்டார். குணவர்மர் மரக்கலத்தில் ஏறிப் பயணஞ் செய்து, யுவான்கியா எட்டாம் ஆண்டின்(431) முதல் மாதத்தில் கியன்-யே (நான்கிங்)

போய்ச் சேர்ந்தார். பேரரசரே சென்று குணவர்மரை வரவேற்று நலன் விசாரித்தார். மேலும் அந்த நல்ல வாய்ப்பைப் பயன்படுத்த விரும்பிய பேரரசர் பின்வரும் கேள்வியை குணவர்மரிடத்திற் கேட்டார். 'தங்களுடைய மாணவனாகிய நான் பௌத்தம் விதிக்கின்ற தடைகளை மீற விரும்பவில்லை. கொலையைத்தவிர்ப்பதற்கு எப்போதுமே விரும்புகிறேன். ஆனால் என்னுடைய விருப்பு வெறுப்புகளைக் காட்டிலும் பிறருடைய விருப்பு வெறுப்புகளுக்கு மிகுந்த மதிப்புத் தரவேண்டிய நிலையில் நான் இருக்கிறேன். அதனால் என்னுடைய சொந்தக் கருத்துகளின்படி நடக்க இயலவில்லை. தர்மத்தின் தலைவரவர்களே, இந்த நாட்டு மக்களை பௌத்தத்திற் சேர்ப்பதற்காக 10,000 லீ தொலைவையும் பொருட்படுத்தாது இங்கு எழுந்தருளியுள்ள தாங்கள் எனக்கு என்ன வழி காட்டுகிறீர்கள்?' குணவர்மருடைய மறுமொழியைக் கீழே காணலாம்.

'மெய்யறிவு என்பது உள்ளத்தில் இருப்பது, செயல்களில் அன்று. சமயம் உன்னுள் தொடங்குகிறது. அது பிறர் கொடுத்து நீ பெற்றுக் கொள்ளக் கூடியதன்று. மேலும், அரசர்களுடைய நடைமுறைக் கோட்பாடு குடிமக்களுடைய நடைமுறைக் கோட்பாட்டிலிருந்து முழுதும் வேறுபடுகிறது. சாதாரண மனிதனுடைய வாழ்க்கை அவ்வளவு உயர்ந்த மதிப்புடையது அன்று. அவன் அடைகின்ற பெருமையும் சிறுமையும் அது போன்றவையே. அவனுடைய ஆணைக்கு யாரும் அஞ்சுவதில்லை, அஞ்சவேண்டியதும் இல்லை. எனவே அவன் தன்னைத்தானே அடக்கி ஒடுக்கி நோற்காவிட்டால் அவனால் என்ன நன்மை விளையும்? அரசனுடைய வாழ்க்கை அப்படிப்பட்டதா? நாற்கடல் சூழ்ந்த நாடு முழுவதுமே அவனுடைய வீடு. நாட்டில் வாழ்கின்ற குடிமக்கள் அனைவருமே அவனுடைய மக்கள். அவனுடைய நற்சொல்லைக் கேட்டு நாடே மகிழ்கிறது. அவன் நல்லாட்சி நடத்தினால் மக்களும் தெய்வங்களும் ஒருங்கே உவக்கிறார்கள்; குடி மக்களுடைய வாணாள் தண்டனையால் குறைவதில்லை; கட்டாய வேலை மக்களின் உடலை ஒறுத்துத் தளர்ச்சியடையச் செய்வதில்லை; காற்றும் மழையும் காலம் தவறாமல் வருகின்றன, வெயிலும் குளிரும் உரிய பருவத்தில் அடிக்கின்றன; கூலவளம் பெருகுகின்றது; முசுக்கட்டையும் சணலும் செழித்து வளர்கின்றன. நல்லாட்சி நடாத்துவதன்மூலம் தீயன தவிர்த்தலும் நோன்புதானே? அந்த நோன்பு மிகவும் விழுமியது. நல்லாட்சியால் உயிர்க் கொலையைத் தவிர்ப்பது மிகப் பெரிய நன்மையாகும். அதன் பயனும் பன்மடங்கு பெருகும். ஒருவேளை உணவை ஒழிப்பதோ, ஒரு விலங்கின் உயிரைக் காப்பதோ நாம் மேலே

சொன்ன விழுமிய தொண்டுக்கு நிகராகுமா?' பேரரசர் மேசையை மெதுவாய்த் தட்டிப் பெருமூச்சு விட்டார். பின் அவர், 'அடிப்படைக் கொள்கைகளில் பொதுமக்கள் தவறிழைக்கிறார்கள். துறவிகளோவெனில் அன்றாட வாழ்க்கை நெறியில் குழம்புகிறார்கள். அடிப்படைக் கொள்கைகளில் தவறிழைப்பவர்கள் முழு மெய்யுணர்வைப் பற்றி வெட்டிப் பேச்சுப் பேசுகிறார்கள். அன்றாட நடைமுறைகளில் குழம்புபவர்கள் முன்னேக்கிப் போகவும் முடியாமல் பின்னேக்கிப் போகவும் முடியாமல் திண்டாடுகிறார்கள். சான்றோர் எழுதிவைத்துள்ள விதிகளே தளைகளாக மாறி அவர்களைக் கட்டிப்போட்டுவிட்டன. தர்மத்தின் தலைவரவர்களே, தங்கள் பேச்சுத் தங்களுடைய நுண்ணறிவையும் திறந்த மனத்தையும் காட்டுகிறது. அதனால் இம்மையையும் மறுமையையும் பற்றித் தங்களிடம் பேசுவது அனைவருக்கும் பயன்தரக் கூடியதாய் இருக்கும்' எனக்கூறினார். அதன்பின் குணவர்மர் ட்சே-ஹூவன் என்னும் கோயிலில் (ஜெதவன விஹாரம்) தங்கியிருப்பதற்கு ஏற்பாடு செய்யுமாறும் அவருடைய தேவைகளுக்கேற்ற வசதிகளைத் தாராளமாய்ச் செய்து தருமாறும் பேரரசர் ஆணையிட்டார். அரசர்கள் பிரபுக்கள் முதலிய பெரிய மனிதர்கள் அனைவரும் குணவர்மருக்குத் தங்களுடைய பணிவையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொண்டார்கள்.

'ஜெதவன விஹாரத்தில் குணவர்மர் சத்தர்ம புண்டரீக சூத்திரத்தையும், தசபூமி சூத்திரத்தையும் விளக்குவதற்கான சொற்பொழிவுகளை நிகழ்த்தத் தொடங்கினார். அவர் சொற்பொழிவாற்றிய நாட்களில் அரசு அலுவலர்களுடைய மேனுக்களும் விதானங்களும் வழியை அடைந்தன. சொற்பொழிவு கேட்கச் சென்றவர்களும் கேட்டுவிட்டுத் திரும்பியவர்களும் ஒருவர்மீது ஒருவர் இடித்துக் கொண்டும் ஒருவர் காலை ஒருவர் மிதித்துக் கொண்டும் நடந்தார்கள். அத்துணைப் பெருங்கூட்டம்! குணவர்மர் இயற்கையிலேயே மிகச்சிறந்த ஆற்றல்களைப் பெற்றவர். அவருடைய வாதத்திறமை வியக்கத்தக்கதாயும் புனிதமான மாட்சியுடையதாயும் இருந்தது. சில சமயங்களில் அவருக்கு மொழிபெயர்ப்பாளர் துணை தேவைப்பட்டது. காரண காரியங்காட்டி வாதத் திறமையோடு அவர் ஆற்றிய சொற்பொழிவுகளின் பயனாக அதுவரையிலும் விளங்காதிருந்த செய்திகளெல்லாம் விளக்கம் பெற்றன.

பிரசாரகர்

அதன் பின்னர் ட்சே-ஹூவன் கோயிலைச் சேர்ந்த துறவியான ஹூயி-யீ, பூ-சா-சான்-கீ என்னும் நூலை வெளியிடு

மாறு குணவர்மரைக் கேட்டுக்கொண்டார். அதற்கு இசைந்த குணவர்மர் அந்த நூலில் இருபத்தெட்டுப் பகுதிகளை வெளியிட்டார். பின்னர் அவருடைய மாணவர்களுள் ஒருவர் தம்முடைய ஆசிரியரின் சார்பில் இரு பகுதிகளை வெளியிட்டார். இவ்வாறு முப்பது பகுதிகள் வெளிவந்தன. ஆனால் அந்நூலை மீண்டும் பார்த்தெழுதுவதற்குள்ளாகவே, முன்னுரைகளைக் கொண்ட பகுதியும் தடைகளைப் பற்றிய பகுதியும் காணமற்போய்விட்டன. அதனாற்றான் பாடபேதங்கள் கொண்ட (இருவேறு) பதிப்புகள் இன்னும் இருக்கின்றன.[5]

**நூலாசிரியர்**

அதற்குமுன், அதாவது 'யுவான்-கியா மூன்றும் ஆண்டில் (426), ட்சா-சின்[6] என்னும் நூலை மொழி பெயர்க்குமாறு, சின்-ட்சூவின் படையாட்சி யாளனாயிருந்த வாங்-ட்சோங்-டோ என்பவன் பாங்-ட்செங் என்னும் ஊரில் இருந்த போது வெளிநாட்டினரான ஈ-செ-போ-லோ (ஈச்வரர்) என்பவரை வேண்டிக்கொண்டான். ஈச்வரரும் அந்தப் பணியைத் தொடங்கினர். ஆனால் விருப்பத் தேர்வு என்ற பகுதியை மொழிபெயர்க்க முயன்றபோது நேர்ந்த தொல்லையினால் மொழிபெயர்ப்பு வேலை அத்துடன் நின்றுவிட்டது. இப்போது அந்தப் பணியைச் செய்யுமாறு குணவர்மரைக் கேட்டுக்கொண்டார்கள். மொழிபெயர்ப்பதற்காக இன்னும் பதின்மூன்று அதிகாரங்கள் இருந்தன. அந்தப் பணியை குணவர்மர் செய்து முடித்தார். முன்னர் வெளிவந்த சியூ-பென்-கீ-மோ, இயூ-போ-சை வொன் கீ லியோ லூவன், இயூ-போ-சை-இயுல்சே இயுல் கீ என்ற நூல்களையும் சேர்த்தால், மொத்தம் 26 அதிகாரங்கள் ஆகின்றன. இந்த மொழிபெயர்ப்புகள் அனைத்திலும் சொல்லும் பொருளும் இம்மியும் பிசகாது ஒருங்கிணைந்து முழு நிறைவு தந்தன. வடமொழி மூலத்திற்கும் சீன மொழி பெயர்ப்புக்கும் எள்ளளவு வேறுபாடும் இல்லை.

இதற்கிடையில் யிங்-பூ என்னும் கோயிலைச் சேர்ந்த ஹுயீ-குவோ, ட்சிங்-யின் முதலிய பிக்குணிகள்[7] குணவர்மருக்கு ஒரு

[5] ஜப்பானியத் திரிபிடகத்தில் இப்போது காணப்படுகிறது. (Chavannes).

[6] சம்யுக்த அபிதர்ம ஹிருதய சாஸ்திரம். இதனுடைய சீன மொழி பெயர்ப்பு இப்போது கிடைக்கவில்லை.

[7] இனிக் கூறப்படும் செய்திகள் விளக்கமற்றவையாய் இருக்கின்றன, ஹுயீ-குவோ, ட்சிங்-யின் முதலியவர்களே இலங்கையிலிருந்து வந்ததாகப் பின்னால் சொல்லப்படும் பெண் துறவிகள் என்பது என் கருத்து (சவானே). அந்த பிக்குணிகளைக் கண்ட சீனப் பெண்கள் பிக்குணிக் கூட்டத்தில்

வேண்டுகோள் விடுத்தார்கள். அது பின்வருமாறு: 'எட்டுப் பெண் துறவிகள் இலங்கையிலிருந்து சீனத் தலைநகருக்கு வந்து ஆறாண்டுகள் ஆகிவிட்டன. அதற்குமுன் இந்த நாட்டில் (சாங் நாட்டில்) பெண் துறவிகள் யாருமே இருந்ததில்லை. பெண் துறவிகளுக்கான விதிகளில் தடைகளைப் பற்றி எடுத்துரைக்கும் பிரிவு முழுமை பெறவில்லை என்று நாங்கள் கருதுகிறோம். அவற்றை அறிந்துகொள்வதற்காக இரண்டாம் பேரவையை[8] இப்போது கூட்டவேண்டும். அதற்குரிய விதிகளை எப்படித் தெரிந்துகொள்வது?' குணவர்மருடைய மறுமொழியைக் கீழே காண்க. 'பிக்குகளின் கூட்டத்தை மனதிற் கொண்டுதான் முதலில் தடைகளைப் பற்றிய விதிகள் வெளியிடப் பட்டன. முன்பு எண்ணிப் பார்க்காத புதுப் பிரச்சினை யாதேனும் இப்போது தோன்றுமானால் அதற்குத் தீர்வு காண்பதற்கேற்ற விதிகளை அறிந்துகொள்வதை யாரும் தடுக்க மாட்டார்கள். துறவுக்குரிய தடைகளை அறிந்துகொள்ள விரும்புவது சமயப் பற்றினால்தானே?' இந்த மறுமொழி அந்தப் பெண் துறவிகளுக்கு மனநிறைவு தரவில்லை. விதிக்கப்பட்ட வயது அவர்களுக்கு இன்னும் நிரம்பவில்லை. அதனால் தடைகளைப் பற்றிய விதிகளை அறிந்து உடனே கடைப் பிடிப்பதற்கு அவர்கள் விரும்பினார்கள். குணவர்மர் பின் வருமாறு சொன்னார்: 'அப்படியானால் சரி. உங்களுடைய (சமய வாழ்க்கையின்) ஒளியைப் பெருக்கிக்கொள்ளவேண்டு மென்று நீங்கள் மெய்யாகவே விரும்பினால் அது மிகவும் நல்லது தான். அதனால் பெண் துறவிக் கூட்டத்தினுடைய இன்பம் பெருகும் (புண்யானு மோதனா). எனினும், ஒன்றைக் கவனிக்க வேண்டும். மேலை நாட்டுப் பிக்குணிகளும் விதிக்கப்பட்ட வயதை இன்னும் அடையவில்லை. மேலும், அவர்களுடைய எண்ணிக்கையும் பத்துக்குக் குறைவாய் இருக்கிறது'[9]. பின்னர், சாங் (சீனா) நாட்டு மொழியைக் கற்குமாறு குணவர்மர்

**பெண் துறவிகள்**

---

தங்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டதால், மேலும் சில பெண் துறவிகளை அனுப்புமாறு இலங்கைக்கு வேண்டுகோள் விடுக்கப்பட்டது என்று சவானேயும் லெவியும் கருதுகிறார்கள். JA : 11: 8: (1916) pp. 45-6, Cf. also Pelliot BEFEO. iv p. 275 *n*. 1, and p. 356 *n*. 4.

[8] இரண்டாம் பேரவை பெண் துறவிகளுக்காக; முதற் பேரவை ஆண் துறவிகளுக்காக நடைபெற்றது.

[9] எட்டுப் பேரே இருந்தனர். முறையான பிக்குணிக் கூட்டத்தை அமைப்பதற்குப் பத்துப் பேர் வேண்டும்போலும்.

அவர்களைத் தூண்டினார். அன்றியும் பெண் துறவிகளின் தொகையைப் பத்துக்கு உயர்த்துவதற்காக மேலை நாட்டிலிருந்து பிக்குணிகள் சிலரைச் சீனாவுக்கு அனுப்புமாறு குணவர்மர் வேண்டுகோள் விடுத்தார்.[10] அந்த வேண்டுகோள் உரிய இடத்திற் சேர்வதற்கு மேலை நாட்டிலிருந்து வந்திருந்த பெரிய மனிதர் ஒருவருடைய இடையீட்டை அவர் நாடினார்.

'அந்த ஆண்டு வேனிற்காலத்தில் வந்த சமய நோன்புப் பருவத்தை குணவர்மர் டிங்-லின் கீழ்க்கோயிலிற் கழித்தார். துறவிகள் அமர்ந்திருந்த பாய்களின்மீது பரப்புவதற்காக ஏராளமான மலர்களை பக்தர்கள் கொண்டுவந்தார்கள். அவ்வாறு பரப்பிய மலர்களுள் குணவர்மருடைய பாயின்மீது பரப்பிய மலர்கள் மட்டும் வாடாமல் இருந்தன. அவற்றின் புதுமை நாளுக்கு நாள் மிகுந்தது என்று சொல்வது மேலும் பொருத்தமாயிருக்கும். அதனால் அனைவரும் அவரை ஒரு புனிதர் என்று போற்றினர். வேனிற்காலத்தின் முடிவில் அவர் ட்சே-ஹூவன் (ஜெதவன விஹாரம்) கோயிலுக்குத் திரும்பினார். அதே ஆண்டில் ஒன்பதாம் திங்களின் இருபத்தெட்டாம் நாள் நண்பகல் உணவு உண்டுகொண்டிருந்த குணவர்மர் மற்றவர்களுக்கு முன்னால் எழுந்து தம்முடைய அறைக்குச் சென்றார். அவருடைய மாணவர் ஒருவர் சிறிது நேரத்திற்குப்பின் அங்கே போனார். அதற்குள் குணவர்மர் இறந்துபோய்விட்டார். அப்போது அவருக்கு வயது அறுபத்தைந்து.

—Ed. Chavannes—Toung Pao II, 5. pp.(1904), pp. 193-206. Cf. Pelliot, BEFEO, iv, pp. 274-75.

[10] இந்தப் பணி முடிவதற்குள் குணவர்மர் இறந்துபோனார். அதன் பின்னரே பெண் துறவிகள் இலங்கையிலிருந்து வந்துசேர்ந்தார்கள், இந்தியாவிலிருந்து சீனாவுக்குச் சென்ற சங்கவர்மர் அப்போது சீனத் தலைநகரில் இருந்தார். அவர் இந்து மதத்தைச் சேர்ந்தவர். பெண் துறவிகளை முறைப்படி சமயப் பணியில் அமர்த்துவதற்குரிய சடங்குகளை அவரே செய்தார். (கவோ-செங்-ட்சுவன் என்னும் நூலில் குணவர்மருடைய வாழ்க்கை வரலாறு இடம் பெற்றுள்ளது)—சவானே.

# X. சீனுவுக்குச் சென்ற தென்னிந்தியத் தூதுக்குழு – சுமார் கி.பி. 510

பின்னைய வெய் வமிசத்து அரசர் சியூவென்-வூ சீனப் பேரரசராயிருந்தபோது(கி.பி 500—516)தென்னிந்தியாவிலிருந்து ஒரு தூதர் வந்தார். அவர் பேரரசருக்கு உயர்சாதிக் குதிரைகள் சிலவற்றைப் பரிசுகொடுத்தார். தம்முடைய ராஜ்யத்தில் சிங்கம், சிறுத்தைப்புலி, புள்ளிப்புலி, ஒட்டகம், காண்டா மிருகம், யானை ஆகிய விலங்குகளும், ஹோ-ட்சே என்னும் முத்தும் இருக்கின்றன என்று அந்தத் தூதர் சொன்னார். அந்த முத்து காக்காய்ப் பொன்னைப் (யுன்-மூ) போன்றது என்றும், அதனுடைய நிறம் மஞ்சள் கலந்த சிவப்பு (ட்சே, சிவப்புக் கலந்த நீலம்) என்றும், அதனை உடைத்தால் சிள்வண்டின் இறகுகளைப் போலப் பறந்து போய்விடும் என்றும், அந்த முத்துகளை ஒன்ருகக் குவித்து வைத்தால் கெட்டியாய் நெய்யப் பட்ட பட்டு நூலைப் போல நெருக்கமாக இணைந்துவிடும் என்றும் அவர் சொன்னார். செவ்வந்திக் கல்லைப் போலக் காட்சிதரும் வைரமும் அந்த நாட்டில் இருக்கிறதாம். தீயில் நூறு முறை போட்டாலும் உருகாத இந்த வைரம் ஜாஸ்பர்(யூ) என்னும் மணிக் கல்லை வெட்டுவதற்குப் பயன்படுகிறதாம். அன்றியும் அந்த நாட்டில் ஆமையோடு (டே-மீ), தங்கம் (கின்), செம்பு (துங்), இரும்பு (டீ), ஈயம் (யூவென்), வெள்ளீயம் (சீஹ்) முதலிய பொருள்களும் பொன்-வெள்ளிச் சரிகையால் ஒப்பனை செய்த மஸ்லின் துணியும் இருக்கின்றனவாம். மேலும் பலவகைப்பட்ட நறுமணப் பொருள்தரும் செடிகளும் (யூ-கின்), கரும்பும், வேறு பல பொருள்களும் அந்த நாட்டில் விளைகின்றன என்றும் அந்தத் தூதர் சொன்னார்.

—*Chinese account of India.* Translated from the Wan-heen-t'hung-kaou, or Deep Researches into Ancient Monuments; by Ma Twan-lin; book 338 fol. 14 *Journal of the Asitaic Society of Bengal*, vi p.66; cf JRAS, vi. p. 458; IA. ix, p.18.

# XI. மேற்கிந்தியாவிலிருந்து வந்த ஒரு கண்ணுடி

'லியாங் சே குங் ட்சே ஜி' (லியாங் வமிசத்தைச் சேர்ந்த கோமான்மார் நால்வரின் வாழ்க்கை நிகழ்ச்சிக் குறிப்புகள்') (502–556)—எழுதியவர் சாங்யூ (667–730); சாங்யூ ராஜ தந்திரி, கவிஞர், ஓவியர்.

'படிகக் கண்ணுடியைப் பற்றிய இந்தக் கதை வைரப் பள்ளத்தாக்குக் கட்டுக் கதையைத் தழுவி எழுதப்பட்டுள்ளது. ஆனால் இந்தக் கதை திடீரென்று தொடங்கி, சிறு தொலைவு சென்றபின் முடிவு பெறுமல் நின்றுவிட்டது. வைரப் பள்ளத் தாக்கைப் பற்றிய கதை பலரும் அறிந்த ஒன்று. மேலை நாட்டில் அந்தக் கதையை முதன்முதலில் எழுதியவர் எபிபேனியஸ் என்பவர் ஆவார். அவர் சைப்ரஸ் தீவில் சமயப்பணி புரிந்த கான்ஸ்டன்டியாவைச் சேர்ந்த பிஷப் (சுமார். கி.பி. 315—403)' —லாபர்.

முதலில் மேற்கு இந்தியாவிலிருந்து புறப்பட்ட ஒரு ஜன்க் (சீனக் கடல்களில் பயணஞ் செய்வதற்குப் பயன்பட்ட தட்டையான அடிப்பாகமுள்ள மரக்கலம்) புனிலிருந்து சீனுவுக்கு வந்தது. அந்தக் கப்பலில் வந்த வணிகர்கள் முன்னர்க் கண்டு கேட்டறியாத ஒருவகைப் படிகக் கல்லால் செய்த முகம் பார்க்கும் கண்ணுடியொன்றை விற்பனைக்குக் கொண்டுவந்திருந் தார்கள்.[1] அதனுடைய அகலம் 1 அடி 4 அங்குலம். அதனுடைய

[1] இந்தச் சீனக் குறிப்பை முதன்முதலில் வெளிநாட்டார் கவனத்திற்குக் கொண்டு வந்தவர் பாத்தியர் என்பவர் ஆவார். போ-லி என்னும் சொல்லை அவர் 'படிகக்கல்' என்று மொழிபெயர்த்தார். அதுதான் சரியான மொழி பெயர்ப்பு. பெலியோ அந்தச் சொல்லுக்குக் 'கண்ணுடி' என்ற வழக்கமான பொருளைக்கொண்டார். எனினும், அந்தச் சொல்லுக்கும் வடமொழிச்

எடை 40 கட்டி. அதனுடைய மேற்பரப்பும் உட்புறமும் தூய வெள்ளை நிறமாய் இருந்தன. அதனுடைய முகப்புப் பக்கத்தில் பல்வண்ணப் பொருள்களின் சாயல் தெரிந்தது. அதை வெளிச்சத்தில் பிடித்துப் பார்த்தால் அதனுடைய திண்மை தெரியவில்லை.[2] அதனுடைய விலை என்ன என்று விசாரித்தபோது பத்து லட்சம் செப்பு நாணயக் கோவை என்பது தெரிந்தது. அந்தத் தொகையைத் திரட்டுமாறு பேரரசர் ஆணையிட்டார். ஆனால் கருவூலத்தில் அவ்வளவு பணம் இல்லை. அந்தக் கண்ணாடிக்குக் காரணமாய் இருந்தது ரூபதாது தேவராஜாவின் செயல் என்று அதனை விற்பனைக்குக் கொண்டுவந்த வணிகர்கள் சொன்னார்கள். 'மகிழ்ச்சி மீக்கூரும் நல்ல நேரங்களில் தேவர்களுடைய மரங்கள் அசையுமாறு தேவராஜன் செய்கிறான். அந்த அசைவினால் விலை மதிப்புள்ள மணிக்கற்கள் மரத்திலிருந்து உதிர்கின்றன. அவ்வாறு உதிர்கின்ற மணிக்கற்கள் கீழே இருக்கும் மலைகளின்மீது விழுகின்றன. அந்தக் கற்களை மலைகள் பிடித்து மறைத்துவைத்துக்கொள்கின்றன. அதனால்

---

சொல்லான 'ஸ்படிகம்' என்னும் சொல்லுக்கும் உள்ள தொடர்பை அவர் மறுக்கவில்லை (BEFEO iii p. 283). அது கண்ணாடியாய் இருக்கமுடியாது; ஏனெனில் (1) வைரப் பள்ளத்தாக்குக் கதை அதனை ரத்தினங்களோடு தொடர்பு படுத்துகிறது; அதனுடைய விலையும் உயர்ந்தவகை ரத்தினங்களோடுதான் அதனை இணைக்கிறது; (2) மேலை நாடுகளில் அந்தக் காலத்தில் கண்ணாடியால் செய்த முகம் பார்க்கும் கண்ணாடிகளை யாரும் கண்டு பிடிக்கவில்லை. ஆறும் நூற்றாண்டில் அது இந்தியாவிலும் புனானிலும் வழக்கில் இருந்திருக்க இயலாது. ஐரோப்பாவில் அது பதின்மூன்றாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதிக்கு முன்னர் வழக்கிற்கு வரவில்லை. பிற்காலத்தில் போ-லி என்பது கண்ணாடிக்குப் பெயராயிற்று என்பது உண்மையே.—Laufer (abridged).

[2] முழுமை பெறாத ஒரு குறிப்பிலிருந்து ஹார்த் இந்த வாக்கியத்தை மொழிபெயர்த்துள்ளார். அதனால் அதனுடைய பொருள் தெளிவாக இல்லை. லட பிங் யூ லான் என்னும் நூலில் உள்ள குறிப்பும் ஹார்த்துக்கும் ராக்ஹில்லுக்கும் கிடைக்கவில்லை. அதனால் அவர்கள் புனானிலிருந்து சீனாவுக்கு வந்த கப்பல்களில் சென்ற வணிகர்கள் அத்தகைய முகம் பார்க்கும் கண்ணாடிகளை வழக்கமாகச் சீனாவில் விற்றார்கள் என்று நினைத்துக் கொண்டார்கள். ஆனால், ஒரே ஒருமுறைதான் முகம் பார்க்கும் கண்ணாடி விற்பனைக்கு வந்தது என்பதையும், வழக்கத்திற்கு மாறாயிருந்த அந்தக் கண்ணாடி சீனாவிலும் விலை போகவில்லை என்பதையும் இந்தக் கதை நமக்குக் காட்டுகிறது. லியாங்-சேகுங் ட்சேகி பொது விவரங்களைக் கூறுகின்ற வாணிக நிலநூல் அன்று. அது குறிப்பிட்ட நிகழ்ச்சிகளைக் கூறுகின்ற கதைப் புத்தகம். நம்முடைய கவனத்திலிருக்கிற குறிப்பில் நாம் வர்ணனை ஒன்றைக் காணவில்லையென்பதையும் கதை ஒன்றைப் படிக்கிறோம் என்பதையும் அறிந்துகொள்வது பொருத்தமாயிருக்கும்'—லாபர்.

அவற்றைக் கண்டுபிடிப்பது கடினமாய்ப் போகிறது. பெரு விலங்குகளின் இறைச்சித் துண்டங்கள் அந்த மலைகளுக்கிடையில் வீசப்படுகின்றன. அவை மிகவும் அழுகிப்போன பிறகு எரியமாக மாறிச் சுடர்விடுகின்றன. அப்போது அவை மணிக்கற்களைப் போல் காட்சி தருகின்றன. அந்தக் கற்களைப் பறவைகள் எடுத்துக்கொண்டு போகின்றன. அத்தகைய ஒரு கல்லால்தான் இந்தக் கண்ணாடி செய்யப்பட்டுள்ளது.' நாட்டு மக்களுள் யாருக்குமே இது புரியவில்லை. அதனால் யாருமே அந்தக் கண்ணாடியை அவ்வளவு விலைகொடுத்து வாங்கத் துணியவில்லை.[3]

—Chinese text, cited and translated by Berthold Laufer; *Opttical Lenses*, Toung Pao, Vol. xvi (1915), pp. 200—202. cf Ferrand, JA:II. 13, pp. 461—2.

[3] பறவைகள் விழுங்குகின்ற இறைச்சித் துண்டங்களோடு அந்த மணிக்கற்கள் ஒட்டிக்கொண்டிருக்கின்றன என்பதை இந்தக் கதை சொல்லாமல் விட்டுவிட்டது. அதனால், கதை தெளிவாய் இல்லை.—லாபர்,

# XII. காஸ்மாஸ்

## அ. இந்திய விலங்குகளின் வர்ணனை

### 1. காண்டாமிருகம்

இந்த விலங்குக்கு முகறையின்மேல் கொம்புகள் இருப்பதால் இது காண்டாமிருகம் என்று பெயர் பெற்றது. காண்டாமிருகம் தானுகச் சுற்றித் திரிந்து கொண்டிருக்கும்போது அந்தக் கொம்புகள் அசைந்துகொண்டிருக்கின்றன. ஆனுல் அதனுடைய கோபத்தைத் தூண்டிவிடுகிருற் போல யாதேனும் ஒன்று நிகழ்ந்துவிட்டால் அந்தக் கொம்புகள் விறைத்துக் கொள் கின்றன. அப்போது அவை வன்கடுமையாய் இருப்பதால் மரங்களையும் வேரோடு பிடுங்கி யெறிகிற அளவுக்கு வலிமை பெறுகின்றன. சிறப்பாக, முன்கொம்பு மிகவும் வலிமை பொருந்தியது. அதனுடைய கண்கள் தாழ்ந்து தாடைகளிற் பொருந்தியுள்ளன. பொதுவாக, அது மிகுந்த அச்சத்தை ஊட்டுகிற விலங்கு என்றும், யானைக்கு நேர்மாருன இயல்பு உடையது என்றும் சொல்லலாம். ஆனுல், அதனுடைய கால்களும் தோலும் யானையின் கால்களையும் தோலையும் போலவே இருக்கின்றன. காயவைத்த காண்டாமிருகத் தோல் நான்கு விரற்கடையளவு திட்பமுடையது. நிலத்தை உழுவதற்குப் பயன்படும் கலப்பையில் இரும்புக்கு மாருகச் சில சமயங்களில் இந்தத் தோலை உழவர்கள் பயன்படுத்துகிருர்கள். எதியோப்பியர் இந்த விலங்குக்கு 'ஆரு' என்றும், 'ஹரிசி' என்றும் பெயர் வைத்திருக்கின்றனர். இரண்டாம் சொல்லின் அகரத்துக்கு முன்னுல் கரகரப்பான உயிர்ப்புக் குறியைச் சேர்த்து, அவற்றுடன் 'ரிசி' என்பதையும் சேர்த்திருக்கிருர்கள். 'ஆரு' என்னும் சொல் காண்டாமிருகத்தைக் குறிப்பதற்கும் ஹரிசி என்னும் சொல் உழவைக் குறிப்பதற்கும் பயன்படுகின்றன. அந்த விலங்கின் மூக்குத் தொளைகளை ஒட்டிய பகுதியின் வடிவத்தையும் அதனுடைய தோல் பயன்படும் தன்மையையும்

ஒருங்கே மனத்திற் கொண்டுதான் எதியோப்பியர் காண்டா மிருகத்திற்குப் பெயர் வைத்திருக்கின்றனர். எதியோப்பியாவில் நான் உயிருள்ள ஒரு காண்டாமிருகத்தைப் பார்த்தேன், ஆம், சற்றுத் தொலைவிலிருந்துதான் பார்த்தேன். அரசனுடைய மாளிகையில் அதனுடைய உறைதிணி உருவையுங் கண்டேன். நான் வரைந்துள்ள படம் அந்த உறைதிணி உருவத்தை அப்படியே காட்டுகிறது.[1]

**2. தாரலாபோஸ் (காளைமான்?)**

இந்த விலங்கு இந்தியாவிலும் எதியோப்பியாவிலும் வாழ்கிறது. இந்தியத் தாரலாபோஸ் மனிதனோடு வாழப் பழக்கப்பட்டது; முரட்டுத்தனமற்றது. அதனைப் பொதி சுமப்பதற்கு மக்கள் பயன்படுத்துகிறார்கள். அந்தப் பொதிகளில் மிளகு முதலிய பண்டங்களை நிரப்பி வணிகர் ஊரூராய் எடுத்துக் கொண்டு செல்கின்றனர். அந்த விலங்குகளின் பாலையும் அதிலிருந்து கிடைக்கும் வெண்ணெயையும் மக்கள் உண்கிறார்கள். நாம் அவற்றின் இறைச்சியைத் தின்கிறோம். அவற்றை இறைச்சிக்காகக் கொல்லும்போது கிறிஸ்தவர்கள் அவற்றின் கழுத்தை அறுக்கிறார்கள்; மற்றவர்கள் தலையில் அடிக்கிறார்கள். எதியோப்பியாவிலுள்ள காளைமான்கள் பழக்க இயலாத மூர்க்கத்தனம் வாய்ந்தவை.

—McCrindle: *Ancient India as described in Classical Literature*, pp. 156-157.

—Cf. The Christian Topography of Cosmas, ed J. W. McCrindle, Hakluyt Society, (1897), pp. 358—359.

**3. அக்ரியோபஸ் என்னும் காட்டெருது**

அக்ரியோபஸ் இந்தியாவில் காணப்படுகின்ற ஒரு பெரிய விலங்கு.[2] படைத் தலைவர்கள் அதனுடைய மயிரைத் தங்களுடைய குதிரைகளையும் கொடிகளையும் அலங்கரிப்பதற்குப் பயன்படுத்துகிறார்கள்.[3] அதனுடைய வால் மரத்தில் மாட்டிக் கொண்டால் அது குனியாமலும் அசையாமலும் நிமிர்ந்து

[1] தொகுப்பு நூலில் விலங்குகள், தாவரங்கள் ஆகியவற்றின் வர்ணனைக்கு முன் அவற்றின் படங்கள் இருக்கின்றன.—McCrindle.

[2] யாக் என்பது வெளிப்படை.—McCrindle.

[3] முக்கியமான சமயங்களில் அரசனுக்கு வீசப்படும் சவுரி—McCrindle.

நிற்குமாம். குனிந்தாலும் அசைந்தாலும் அது தன்னுடைய வால்மயிரை இழக்க நேரிடும். அப்படி ஒரு மயிர் நீங்குவதையும் அது விரும்பாதாம். அவ்வாறு மாட்டிக்கொண்டு நிற்கின்ற அக்ரியோபஸை மனிதர்கள் கண்டால் அதனுடைய வாலை வெட்டி விடுவார்கள். வாலிழந்த அக்ரியோபஸ் விரைந்தோடிவிடுமாம்.

—*Ancient Ind.* pp. 157—8.

### 4. மாஸ்கஸ் என்னும் கஸ்தூரிமான்

மாஸ்கஸ் என்னும் இந்தச் சிறு விலங்கு[4] இந்திய மொழியில் கஸ்தூரி மான் என்று சொல்லப்படுகிறது. வேடர்கள் அதனை அம்பெய்து கொன்ற பின்னர் அதனுடைய கொப்பூழில் சேர்ந்து நிற்கின்ற குருதியைக் கொப்பூழோடு சேர்த்துக் கயிற்றால் கட்டி, அதனைக் கத்தியால் அறுத்துக்கொள்வார்கள்.[5] அதுவே நறுமணம் வீசும் கஸ்தூரியாகும். கஸ்தூரியை எடுத்துக் கொண்டபின் உடலை எறிந்துவிடுவார்கள்.

—*The Christian Topography*, p. 360.

## ஆ. இந்தியத் தாவரங்கள்

### 1. மிளகு.

இது மிளகு காய்க்கும் (கொடி படர்ந்துள்ள) மரத்தின் படம். இதனுடைய காம்புகள் ஒல்லியாகவும், கொடி முந்திரியின் தளிர்க்கைகளைப் போல எளிதில் வளையக் கூடியவையாகவும் இருக்கின்றன. காய்க்காத மரம் யாதேனும் ஒன்றைச் சுற்றித் தழுவி அவை படர்கின்றன. ஒவ்வொரு கொத்தையும் இரண்டிரண்டு இலைகள் மூடிக்கொண்டிருக்கின்றன. கொடியிலிருக்கும் மிளகு மிகுந்த பச்சை நிறமுடையது.

### 2. ஆர்கெலியா—தென்னை (வடமொழியில் நாரிகேளம்)

இன்னொரு படம் உட்பருப்புடைய பெரிய கொட்டைகளைக் கொடுக்கிற மரத்தைக் காட்டுகிறது. ஆர்கெலியா என்னும்

[4] முன்றடி நீளத்திற்குமேல் இருக்காது.—McCrindle.

[5] ஆண் மானின் வயிற்றிலுள்ள பை. அது கோழி முட்டையளவு இருக்கும். அதில் உறைந்துபோன, வழவழப்பான, எளிதில் தகர்ந்துவிடக் கூடிய பொருள் இருக்கிறது. அதனுடைய நிறம் கரும்பழுப்பு. அதுவே கஸ்தூரியாகும்.

அந்த மரத்திற்கும் பேரீச்ச மரத்திற்கும் அதிக வேறுபாடில்லை. ஆர்கெலியா பேரீச்ச மரத்தைக்காட்டிலும் உயரமாய் வளர்கிறது என்பதும் அதனுடைய மட்டைகள் ஈச்ச மட்டைகளைக் காட்டிலும் பெரியவை என்பதுமே வேறுபாடு. அது இரண்டு மூன்று பாளைகளைத் தள்ளுகிறது. அவற்றில் உட்பருப்புடைய கொட்டைகள் காய்க்கின்றன. அவை தின்பதற்கு மிகவும் நன்ருகவும் இனிமையாகவும் இருக்கின்றன. தொடக்கத்தில் கொட்டையின் உட்பகுதியில் நீர் நிறைந்திருக்கிறது. அது மிகவும் சுவையுடையதாகையால், இந்தியர்கள் அதனை மதுவுக்குப் பதிலாய்க் குடிக்கிருர்கள்[6]. இந்த இனிய பானத்தை 'ராங்கோசுரா' என்று சொல்கிருர்கள். கொட்டை முதிர்ந்த பின்னர் அதனைப் பறித்து வைத்துக்கொள்ளலாம். அதனுடைய பசுமை மாருமல் இருக்கும் வரையிலும் ஓட்டை அடுத்துள்ள நீர் சிறிது சிறிதாகக் கெட்டியாகிறது. ஆனல், நடுவிலுள்ள நீர் தன்னுடைய நீர்மத் தன்மையை மெதுவாகத்தான் இழக்கிறது. நாளடைவில் அது முற்றிலும் வற்றிப் போகிறது. நீண்டகாலம் வைத்திருந்தால் கொட்டை அழுகிப்போய் மனிதர் தின்பதற்குப் பயன்படாமல் போகிறது.

—*Ancient India*, p. 159; (cf. *Christian Top*, p. 362)

## இ. தப்ரபானே என்னும் தீவு (இலங்கை)

இது இந்தியக் கடலில் இருக்கிற ஒரு பெரிய தீவு: இந்தியர்கள் அதனை 'சைலத் தீவு' என்று சொல்கிருர்கள். புறச் சமயிகள் அதனைத் தப்ரபானே என்று சொல்கிருர்கள். அங்கே ஹயாசின்த் என்றும் மணிக்கல் கிடைக்கிறது. அது மிளகு நாட்டிற்கும் அப்பால் இருக்கிறது. அதைச் சுற்றிலும் சிறு தீவுகள் பல இருக்கின்றன.[7] அவை எல்லாவற்றிலுமே நன்னீரும் தென்னையும் இருக்கின்றன. அச் சிறு தீவுகளுள் ஏறக்குறைய எல்லாவற்றின் கரையோரத்திலும் கடல் ஆழமாய் இருக்கிறது.

[6] யூல் பின்வருமாறு எழுதுகிருர்: 'தெங்கிளநீரைக் காஸ்மாஸ் தென்னங்கள் என்று தவருகக்கொண்டார் போலும். மலையாளக் கரையில் தென்னங்கள்ளைச் சுரா என்றுதான் சொல்கிருர்கள். ரான்சோ என்பது அந்தப் பகுதியில் வழங்கும் 'லன்ஹா' வாய் இருக்கக்கூடும். முதிர்ந்தாலும் மென்மையாகவே இருக்கின்ற தேங்காயை அந்தப் பகுதி மக்கள் லன்ஹா என்று சொல்கிருர்கள்.' மலையாளக் கரையில் இளநீரைக் குறிப்பதற்குப் பயன்படுத்துகிற சொல்லான 'இளண்ண' என்பதைத்தான் யூல் லன்ஹா என்று எழுதியிருக்கிருர் என்று கருதலாம்.

[7] லட்சத் தீவுகள்.

பெரிய தீவு 300 காடியா[8] நீளமும் அதே அகலமும் உள்ளது—அதாவது 900 மைல்—என்று அந்தத் தீவில் வாழ்கின்ற மக்கள் சொல்கிறார்கள். அந்தத் தீவில் ஒருவரோடொருவர் பகைத்துக் கொண்டிருக்கிற இரண்டு அரசர்கள் இருக்கிறார்கள். ஹயாசின்த் கிடைக்கிற பகுதி அவர்களுள் ஒருவனுடைய ஆட்சியிலும், துறைமுகமும் வாணிக மையமும் இருக்கிற பகுதி இன்னொருவனுடைய ஆட்சியிலும் இருக்கின்றன. அந்தப்பக்கத்து மக்களுக்கு அந்த வாணிக மையம் மிகவும் முக்கியமானது.[9] அந்தத் தீவில் குடியேறியுள்ள பாரசீகக் கிறிஸ்துவர்களுடைய கோயில் ஒன்று அங்கு இருக்கிறது. அங்கு ப்ரிஸ்பிடர் என்னும் அலுவல் பெயருடைய சமயகுரு ஒருவரும், டீகன் என்னும் அலுவல் பெயருடைய உதவிச் சமயகுரு ஒருவரும் இருக்கின்றனர். திருக்கோயில் வழிபாட்டுக்குரிய சடங்குகள் அனைத்தும் அங்கு நடைபெறுகின்றன.[10] ப்ரிஸ்பிடர் பாரசீகத் தலைமைக் குருவால் நியமிக்கப்பட்டவர். ஆனால், உள்ளூர் மக்களும் அரசனும் கிறிஸ்துவரல்லாதவர்கள். அந்தத்தீவில் கோயில்கள் மிகப்பல உள்ளன. அவற்றுள் ஒன்று ஒரு மேட்டின் மீது கட்டப்பட்டுள்ளது, அந்தக் கோயிலில் ஒரு ஹயாசின்த் இருக்கிறது. அது தேவதாரு மரத்தின் குவிசெதிற் கூடுபோல மிகவும் பெரியதாய் இருக்கிறது. தீ நிறமாயிருக்கின்ற அந்தக் கல்லின் பேரொளி வெகுதொலைவு தெரிகிறது. அதன்மீது பகலவன் கதிர்கள் படுகின்ற நேரத்தில் அதனுடைய ஒளி இன்னும் அதிகமாய் இருக்கிறது. அதுவோர் ஒப்பற்ற காட்சி.[11]

அந்தத் தீவு பல்வேறு நாடுகளுக்கும் மையமாய் அமைந்திருப்பதால், இந்திய நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், பாரசீகம் ஏதியோப்பியா ஆகிய நாடுகளிலிருந்தும் கப்பல்கள் பல அங்கு

[8] 'கா' என்ற சொல்லிலிருந்து காடியா வந்தது. 'கா' என்பது ஒரு மனிதன் ஒரு மணி நேரத்தில் நடக்கக்கூடிய தூரத்தைக் குறிக்கிறது.

[9] திரிகோணமலையே இந்த வாணிக மையம் என்று கிபன் கருதுகிறார். ஆனால், அது 'டி காலே' முனை என்று டெனன்ட் கருதுகிறார்.

[10] இது நெஸ்டாரியச் சமயத்தைச் சேர்ந்த ஒரு பிரிவு.

[11] இந்தக் கல்லை புவான் சுவாங்கும் மார்க்கபோலோவும் குறிப்பிடுகிறார்கள். 'இந்தக் கல் மாணிக்கம் அன்று; செவ்வந்திக் கல்லாய் இருக்கக் கூடும். பெரிய பெரிய செவ்வந்திக்கல் படிகங்கள் இலங்கையில் கிடைக்கின்றன. இந்தக் கல்லையே பண்டைக் காலத்து மக்கள் ஹயாசின்த், என்று சொன்னார்கள் எனக் கனிப்பொருளியல் வல்லுநர்கள் கூறுகிறார்கள் என்று டெனன்ட் கருதுகிறார்'—McCrindle.

வருகின்றன. அதுபோலவே, அந்தத் தீவிலிருந்தும் ஏராளமான கப்பல்கள் வெளிநாடுகளுக்குச் செல்கின்றன. உள்ளேயிருக்கும் நாடுகளிலிருந்து[12], — அதாவது சீனு முதலிய வாணிக மையங்களிலிருந்து—பட்டும், சோற்றுக் கற்ருழையும் கிராம்பும், சந்தனக் கட்டையும், அந்த நாடுகளில் விளைகிற பிறபண்டங்களும் அந்தத் தீவுக்கு வருகின்றன. அந்தத் தீவுக்கு வந்த பண்டங்கள் அங்கிருந்து வெளித் துறைமுகங்கட்குப் போகின்றன. அதாவது அவை மிளகு விளைகிற மலேயிக்கும்[13], தாமிரமும் எள்ளும் துணி வகைகளும் கிடைக்கிற கல்லியாணுவுக்கும்[14], கஸ்தூரியும் ஆமணக்கும் கிடைக்கிற சிந்து நாட்டுக்கும், அதற்கும் அப்பால் உள்ள ஆண்ட்ரோஸ் டாக்கஸ் (?) பாரசீகம் ஹோமரைட் அதுலே[15] ஆகிய நாடுகளுக்கும் போகின்றன. அதுபோலவே, அந்த நாட்டுப் பண்டங்களும் தப்ரபானேத் தீவுக்கு வருகின்றன. அவற்றை அத்தீவு உள் துறைமுகங்களுக்கு அனுப்புகிறது. அன்றியும், அந்தத் தீவிலேயே விளையும் பொருள்களையும் அது உள் துறைமுகங்கள் வெளித் முறைமுகங்கள் ஆகிய இருதிறத் துறைமுகங்களுக்கும் அனுப்புகிறது. சிந்து நாடு இந்தியாவின் எல்லையாய் இருக்கிறது. சிந்துநதி—அதாவது, பைசன்-பாரசீக வளைகுடாவில் கலக்கிறது. அது பாரசீகத்தை இந்தியாவிலிருந்து பிரிக்கிறது. இந்தியாவிலுள்ள வாணிக மையங்களுள் கீழ்க் காண்பவை மிகவும் புகழ் பெற்றவை :— சிந்தஸ், ஓர்ஹோத்தா[16], கல்லியாணு, சிபர்[17], பர்த்தி, மங்கருத்[18], சலோபட்டு, நலோபட்டு, பூதோபட்டு.[19] கடைசியில் சொல்லப்பட்ட ஐந்தும் மலேயில் இருக்கின்றன. அவை மிகுதியான மிளகை ஏற்றுமதி செய்கின்றன. தலைநிலத்திலிருந்து ஐந்து பகலும் ஐந்து இரவும் கடலில் பயணஞ்

**கடல் வாணிகம்**

[12] குமரிமுனைக்கு உள்ளேயிருக்கும் நாடுகள்—அதாவது, அதற்குக் கிழக்கே யிருப்பவை.—McCrindle.

[13] மலையாளக்கரை.—McCrindle.

[14] பம்பாய்க்கருகிலுள்ள கல்யாண். Cf. Periplus, Sect 52.

[15] கிழக்காப்பிரிக்கக் கரையிலுள்ள இன்றைய துல்லா அல்லது ஜுலா.

[16] சோரத் என்பதன் தவருன வடிவம்; சௌராஷ்ட்ரா, குஜராத்,

[17] சால் (?)

[18] மங்களூர்.

[19] இந்த மூன்று பட்டினங்களும் மங்களூருக்கும் கோழிக்கோட்டுக்கும் இடையில் இருந்தன என்று உறுதியாய்க் கருதலாம்.

செய்தபின் சைலத்தீவு என்னும் தப்ரபானேயை அடையலாம். அதற்கப்பால் தலைநிலத்தில் சங்கை ஏற்றுமதி செய்கின்ற மரல்லோ என்னும் வாணிக மையமும், அதற்கும் அப்பால் அலபண்டெனத்தை ஏற்றுமதி செய்கிற கபரும்[20] இருக்கின்றன. இன்னும் சிறிது சென்றால் இலவங்க நாடும், பட்டு உற்பத்தி செய்கின்ற சீனநாடும் உள்ளன. அதற்கப்பால் எந்த நாடும் இல்லை. சீனாவின் கிழக்குப் பக்கத்தைக் கடல் சூழ்ந் திருக்கிறது.

சைலத்தீவு இந்தியாவுக்கருகில் ஒரு மையமான இடத்தில் இருப்பதாலும் அங்கு ஹயாசின்த் கிடைப்பதாலும் வாணிக மையங்கள் அனைத்திலிருந்தும் அங்குப் பண்டங்கள் வருகின்றன, அவற்றை அது உலகத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் அனுப்புகிறது. அதனால் அது ஒரு பெரிய வாணிக மையமாய் வளர்ந்துள்ளது.

**பாரசீகரும் ரோமானியரும்**

முன்னொரு காலத்தில் நம் நாட்டு வணிகர்களுள் ஒருவரான சொபாட்டர் என்பவர் வாணிகத்திற்காகத் தப்ர பானேயிக்குச் சென்றார். (அவர் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் இறந்துபோனார்.) அப்போது பாரசீகத்திலிருந்து வந்த ஒரு கலமும் அங்கு நங்கூரம் பாய்ச்சியது. பாரசீகக் கலமும் அதுலேயிலிருந்து வந்த கலமும் ஒரே சமயத்தில் துறைமுகத்தை அடைந்தன. அதுலேயிலிருந்து வந்தவர்களுள் மிகவும் வயதான ஒரு மனிதர் இருந்தார். தப்ரபானேயின் வழக்கப்படி, குற்ற வியல் நடுவர்களும் சுங்க இலாக்கா அதிகாரிகளும் அவர்களை வரவேற்று அரசனிடம் அழைத்துப்போனார்கள். அரசனுக்கு அவர்கள் மரியாதை செய்தபின் அவர்களை அமருமாறு அவன் பணித்தான். பின்னர் அவன் 'உங்கள் நாட்டில் இப்போதைய நிலைமை எவ்வாறிருக்கிறது? உங்கள் நாட்டு மக்கள் நலமாய் இருக்கிறார்களா?' என்று கேட்டான். 'எங்கள் நாட்டு நிலைமை நன்றாகத்தான் இருக்கிறது' என்று அவர்கள் சொன்னார்கள். இவ்வாறு பல செய்திகளைப் பற்றி அவர்கள் உரையாடிக் கொண்டிருந்தபோது, 'உங்களுடைய அரசர்களுள் யார் பெரியவர்? யார் மிகுந்த வலிமையுடையவர்?' என்று அரசன் கேட்டான். அவசரமாகப் பதிலிறுக்க விரும்பிய பாரசீகர் சொபாட்டரை முந்திக்கொண்டு 'எங்கள் அரசரே மிகவும் வலிமை வாய்ந்தவர், செல்வம் மிக்கவர், பெரியவர்; அவரே அரசர்க்கரசர்; அவர் விரும்பியதைச் செய்யும் ஆற்றல் உடையவர்' என்று சொன்னார். ஆனால் சொபாட்டர் பேசாமலேயிருந்தார்.

[20] காவேரிப்பட்டினம்.

அதைக்கண்ட அரசன் 'ஐயா ரோமானியரே,[21] ஏன் நீர் பேசாமல் இருக்கிறீர்?' என்று கேட்டான். 'அவர் சொன்ன செய்திகளுக்குப் பின்னர் நான் சொல்ல என்ன இருக்கிறது? தாங்கள் உண்மையை அறிய விரும்புகிறீர்களா? அப்படியானால், அந்த இரண்டு அரசர்களும் இங்கேயே இருக்கிறார்கள். அவர்களைப் பார்த்தபின், யார் மிகுந்த வலிமையுடையவர், யார் மிகுந்த புகழ் பெற்றவர் என்பதைத் தாங்களே தெரிந்துகொள்ளுங்கள்' என்று சொபாட்டர் சொன்னார். அதைக் கேட்ட அரசன் 'அந்த இரண்டு அரசர்களும் இங்கேயா இருக்கிறார்கள்?' என்று வியப்புடன் வினவினான். 'அவர்களுடைய பணம் இங்கே இருக்கிறது. இன்று ஒருவர் நாட்டில் வழக்கிலிருக்கும் நாணயமும் இன்னொருவர் நாட்டில் வழக்கில் இருக்கும் ட்ராக்மா—அதாவது, மிலியரிஷன்[22] — என்னும் நாணயமும் இங்கே இருக்கின்றன. அவற்றில் உள்ள உருவங்களைப் பார்த்துத் தாங்களே ஒரு முடிவுக்கு வரலாம்' என்று சொபாட்டர் சொன்னார். அரசன் அதற்கு இசைந்து, சொபாட்டருக்கு நன்றி கூறிவிட்டு, அந்த இரு நாணயங்களையும் கொண்டுவருமாறு கட்டளையிட்டான். ரோமானிய நாணயத்தைச் சுண்டிப் பார்த்தான். அது கணீரென்று ஒலித்தது. அன்றியும், அது நேர்த்தியான உருவமும் சிறந்த ஒளியும் உடையதாய் இருந்தது. (தெரிந்தெடுத்த சிறந்த நாணயங்களை ரோமானியர் அந்தக் காலத்தில் தப்ரபானேயிக்கு ஏற்றுமதி செய்தனர். ஆகவே, அவை பலவகையிலும் சிறப்புடையவையாய் இருந்தன.) ஆனால், மிலியரிஷன் வெள்ளியால் ஆனது. எனவே, அது ரோமானியத் தங்க நாணயத்திற்கு இணையாகாது என்று சுருக்கமாய்ச் சொல்லிவிடலாம். அரசன் இரண்டு நாணயங்களையும் முன்புறம் பின்புறம் பார்த்துக் கவனமாய்ச் சோதனை செய்தபின் ரோமானிய நாணயத்தைப் பலவாறு புகழ்ந்து பேசினான். 'உண்மையில் ரோமானியர்கள் மிகச் சிறந்தவர்கள், வலிமை மிக்கவர்கள், சிறந்த அறிவுடையவர்கள்' என்று கூறி சொபாட்டரைத்

[21] காஸ்மாஸ் எழுதிய குறிப்புகளில் 'ரூமி' என்னும் சொல் ஆளப்பட்டிருக்கிறது. 'கான்ஸ்டான்டிநோபிளில் ஒருவர்பின் ஒருவராக ஆட்சி செலுத்திய ரோமானியர், கிறிஸ்துவர், முகமதியர் ஆகிய அனைவரையும் குறிப்பதற்கு இந்தியர் இந்த ஒரே சொல்லைப் பயன்படுத்தினர்.' வின்சென்ட். —McCrindle.

[22] அது வெள்ளி ட்ராக்மா. மிலியரிஷன் இருபது சேர்ந்தால் ஒரு டாரிக் ஆகும். பொன் தெனாரிகளும் வெள்ளி தெனாரிகளும் பாரிகாஜாவில் ஏனைய பொருள்களோடு இறக்குமதியாயின என்று பெரிப்ளஸ் எடுத்துரைக்கிறது. வெள்ளி தெனாரியின் மதிப்பு ட்ராக்மாவுக்கு ஏறக்குறையச் சமமாய் இருந்தது.—McCrindle.

தன்னுடைய யானைமீது அமர்த்தி, முரசு முழங்க நகர்வலமாய் அழைத்துக் கொண்டுபோய், பலவகையிலும் சிறப்புச் செய்தான். இந்தச் செய்திகள் அனைத்தையும் சொபாட்டரும் அதுலேயிலிருந்து[23] அவருடன் தப்ரபானேயிக்கு வந்திருந்த அவருடைய கூட்டாளிகளும் நமக்குத் தெரிவித்தார்கள். இந்த நிகழ்ச்சி அந்தப் பாரசீகனைப் பெருமானக்கேடு அடையச்செய்தது என்றும் அவர்கள் சொன்னார்கள்.

மேலே சொன்ன புகழ்பெற்ற வாணிக மையங்களையன்றி இன்னும் பல மையங்களும் இருக்கின்றன. அவை கரையோரத்தில் மட்டுமன்றி உள்நாட்டிலும் உள்ளன. அந்த நாடு மிகுந்த பரப்புடையது. மேலேயுள்ள பகுதிகளில் —அதாவது, இந்தியாவுக்கும் வடக்கில் உள்ள பகுதிகளில்—வெள்ளை ஹூணர் வாழ்கின்றனர்.

**கொல்லாஸ்**

அவர்களுடைய அரசன் பெயர் கொல்லாஸ்[24] என்பதாகும். அவன் போருக்குப் போகும்போது இரண்டாயிர யானைகளுடனும் பெரிய குதிரைப் படையுடனும் போவானாம். அவனுடைய பேரரசில் இந்தியாவும் அடங்கியுள்ளது. இந்தியர் அவனுக்குத் திறை செலுத்துகின்றனர். ஒரு சமயம் இந்தியாவின் உட்பகுதியிலிருந்த ஒரு நகரை அவன் கைப்பற்ற விரும்பினான். ஆனால் அந்த நகரைச் சுற்றிலும் நீர் நிறைந்த அகழி ஒன்று இருந்தது. அந்த நகரைப் பகைவர் தாக்குதலினின்றும் அவ்வகழி காத்தது. கொல்லாஸ் தன்னுடைய படையுடன் சென்று அந்த நகரைச் சுற்றிலும் முகாம் அமைத்துக்கொண்டான். அவனுடைய யானை, குதிரை, காலாட்படைகள் அந்த அகழியின் நீரை நாள்தோறும் குடித்துக்கொண்டேயிருந்ததால் அந்த அகழி நீரின்றி வற்றிப்போயிற்று. அதுவரையிலும் பொறுமையாய்க் காத்திருந்த கொல்லாஸ் நீரில்லா அகழியைத் தாண்டிச் சென்று நகரைப் பிடித்துக்கொண்டான். இப்படி ஒரு கதை சொல்லப்படுகிறது. வெள்ளை ஹூணர்கள் மரகதத்தைப் பெரிதும் விரும்புகிறார்கள். அதை முடியிற் பொருத்தித் தலையில் அணிந்துகொள்கிறார்கள். ப்ளெம்மீ[25] இனத்தைச் சேர்ந்த

[23] இது வழக்கமாய்ச் சொல்லப்பட்ட கதை. இலங்கையிலிருந்து பேரரசர் கிளாடியசின் அவைக்குச் சென்ற தூதர்கள் ரோமானிய நாணயமான தெனாரியைப் பெரிதும் மதித்தார்கள் என்று ப்ளினி எழுதிவைத்துள்ளார். —McCrindle.

[24] மிஹிரகுலன். ஸ்மித்தின் பண்டை இந்திய வரலாற்றைப் பார்க்க— பக்கம் 336.

[25] நூபியப் பாலைவனத்தில் வாழ்ந்தவர்கள். மிகவும் மூர்க்கமான கொள்ளைக்கார நாடோடிகள்.—McCrindle.

மக்களோடு வாணிகத் தொடர்புடைய எதியோப்பியர் இந்தக் கல்லை இந்தியாவிற்குக் கொண்டுவந்து மிகவும் உயர்ந்த விலைக்கு விற்கின்றனர். அவ்வாறு கிடைக்கிற பணத்தைக் கொண்டு அவர்கள் மிகவும் நேர்த்தியான பொருள்களை வாங்கிக்கொண்டு போகிறார்கள். இதுவரையில் நான் பல செய்திகளை எழுதியுள்ளேன். அவற்றுள் பல நானே கண்டவை. ஏனையவற்றை நான் சென்ற இடங்களுக்கு அருகில் இருந்த ஊர்களில் வாழ்ந்த மக்கள் வாயிலாய்த் தெரிந்துகொண்டேன். ஆனால், மிகவும் கவனமாய் விசாரித்த பின்னரே நான் அவற்றை ஏற்றுக் கொண்டேன்.

**யானை, குதிரை**

இந்தியாவின் பல்வேறு பகுதிகளையும் ஆள்கின்ற அரசர்கள் ஏராளமான யானைகளை வைத்திருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக, ஒரத்தா, கல்லியானா, சிந்து, சிபர், மலே ஆகிய ராஜ்யங்களின் அரசர்களைச் சொல்லலாம். அவர்கள் ஒவ்வொருவரும் ஏறக்குறைய ஐந்நூறு அறுநூறு யானைகளை வைத்திருந்தனர் என்று சொல்லலாம். ஆனால், சைலத்தீவின் அரசன் யானை மட்டுமன்றிக் குதிரைகளையும் விலைகொடுத்து வாங்குகிறான். யானையின் விலை அது எத்தனை முழ உயரம் இருக்கிறது என்பதைப் பொறுத்தது. யானையின் உயரத்தைத் தெரிந்துகொள்வதற்காக, அதனை ஓரிடத்தில் நிறுத்தி, அதன் உயரத்தைத் தரையிலிருந்து கையால் அளந்து, ஒவ்வொரு முழத்திற்கும் ஐம்பது, நூறு என்று எண்ணிக்கொடுக்கிறார்கள். சில சமயங்களில் முழம் ஒன்று நூறுக்கு மேல் விலைபோவதும் உண்டு. அவனுடைய குதிரைகள் பாரசீகத்திலிருந்து இறக்குமதியாகின்றன. அந்தக் குதிரைகளை விற்பனைக்குக் கொண்டுவரும் வணிகர்களுக்கு இறக்குமதி வரியிலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது. ஆனால், தலைநிலத்தில் இருக்கிற அரசர்கள் காட்டில் திரிந்துகொண்டிருக்கும் யானைகளைப் பிடித்துப் பழக்கி அவற்றைப் போரில் பயன்படுத்துகிறார்கள்.

**யானைச் சண்டை**

அரசன் முன்னிலையில் அடிக்கடி யானைச் சண்டை நடைபெறுகிறது. இரண்டு யானைகள் ஒன்றோடொன்று சண்டையிடுவதை அரசனும் குடிகளும் கண்டு மகிழ்கிறார்கள். மார்பளவு உயரத்தில் இரு கம்பங்களை இடைவெளிவிட்டு நட்டு, அவற்றின்மீது ஒரு குறுக்குக் கம்பத்தை வைத்துக் கட்டுகிறார்கள். அதன் இரு புறத்திலும் யானைகளை நிறுத்திவைக்கிறார்கள். அவை ஒன்றோடொன்று நெருங்கி மோதாமல் பார்த்துக் கொள்வதற்

காக இரண்டு பக்கங்களிலும் ஆட்களை நிறுத்திவைக்கிறார்கள். யானைகள் ஒன்றையொன்று நெருங்கவிடாமல் பார்த்துக் கொள்ளும் அந்த ஆட்களே சண்டையிடுமாறும் அவற்றைத் தூண்டுகிறார்கள். அதனால் சினங்கொண்ட அந்த யானைகள் துதிக்கையால் ஒன்றையொன்று அடித்துக்கொள்கின்றன. அடி பொறுக்க முடியாமல் ஒரு யானை பின்னடையும் வரையில் இந்தச் சண்டை நடக்கிறது. இந்திய யானைகளின் துதிக்கைகள் அவ்வளவு நீளமானவையல்ல. போர் புரியும் யானைக்கு நீளமான துதிக்கையிருந்தால் அதுவே ஒரு தடையாகிவிடும் என்று கருது கின்ற இந்தியர்கள் யானைத் துதிக்கை நீளமாயிருந்தால் அதனை ரம்பத்தால் அறுத்துக் குறைத்துவிடுகிறார்கள். யானையைப் பழக்கும் கலை எதியோப்பியர்க்குத் தெரியாது. ஆனால் காட்சிக் காக இரண்டொரு யானை வேண்டுமென்று அரசன் விரும்பினால், அவனுடைய ஆட்கள் சிறு குட்டிகளைப் பிடித்துப் பழக்கு கிறார்கள். எதியோப்பியாவில் யானைகள் ஏராளமாய் இருக் கின்றன. அவற்றின் தந்தங்கள் மிகப் பெரியவையாய் இருப் பதால், எதியோப்பியர் அவற்றைக் கடல்வழியாய் இந்தியா, பாரசீகம், ஹோமரைட் நாடுகளுக்கும் ரோமானிய ஆட்சிக்குட் பட்ட நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்கிறார்கள். இந்தச் செய்திகள் பிறர்வாயிலாய் நான் கேட்டுத் தெரிந்துகொண்டவை.

பீசன் நதி (சிந்து நதி) இந்தியாவை ஹூணர் நாட்டிலிருந்து பிரிக்கிறது. திருமறையில் இந்தியா இயூலத் (ஹவிலா) என்று சொல்லப்படுகிறது. 'தங்கம் இருக்கும் நாடு; அந்த நாட்டுத் தங்கம் சிறந்தது'.

—*Ancient India as described in Classical Literature*, McCrindle, pp. 160-166 (cf. *The Christian Topography of Cosmas*, pp. 363-373; and Yule, *Cathay and the Way Thither*, i. pp. 222-231).

# XIII. மா ட்வான் லின்
## சுமார் கி.பி. 550-600

மா ட்வான் லின் என்பவர் இடைக்காலத்தில் வாழ்ந்த சீன வரலாற்றாசிரியர். அவர் தமக்குத் தெரிந்த பண்டைய ஆசிரியர் அனைவருடைய குறிப்புகளையும் திரட்டிப் பல்பொருட் களஞ்சியம் ஒன்றை உருவாக்கினார். கீழே காணும் பகுதி தென்னிந்தியாவைப் பற்றியது. பல்பொருட் களஞ்சியத்தின் வைப்பு முறையை நோக்கும்போது இந்தப் பகுதி சுமார் ஆறாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியிலோ அதற்குச் சிறிது முற்பட்ட காலத்திலோ இருந்த நிலைமையை விளக்குகிறது என்று கருதலாம்.

### தென்னிந்தியாவின் நிலைமை

மேற்கிலுள்ள டா-ட்சின் (கிழக்கு ரோமானியப் பேரரசு) ஆன்-சே (ஆசே-சிரியா) ஆகிய நாடுகளுடன் இந்தியா கணிசமான அளவு கடல்வாணிகம் நடத்துகிறது. இந்தியர் சிலர் பு-னன், கியா ஊச்சே (டான்கின்) ஆகிய நாடுகள் வரையிலும் வந்து பவழமாலைகளையும் மட்டரக முத்துகளையும் விற்பனை செய்கின்றனர். (அவற்றை முத்து என்று சொல்வதைக் காட்டிலும் முத்தைப்போல் தோற்றமளிக்கும் மணிகள் என்று சொல்வதே பொருத்தமாய் இருக்கும்.) அவர்கள் தங்களுடைய வாணிகக் கணக்குகளை எழுதிவைப்பதில்லை. பண்டமாற்றுக்கு அவர்கள் பற்களையும் ஓடுகளையும் பயன்படுத்துகிறார்கள். (பற்கள் யானைப் பற்களா? காண்டாமிருகப் பற்களா? ஓடு என்பது சிப்பியைக் குறிக்கும்.) இந்தியர்களுக்குள் மிகவும் திறமையான மந்திரவாதிகள் இருக்கிறார்கள். கணவனுக்கு மனைவி காட்டக்கூடிய மிகவுயர்ந்த மரியாதை அவனுடைய கால்களை முத்தமிடுவதும் அவனுடைய முழங்காலைக் கட்டி-

அணைத்துக்கொள்வதும் ஆகும். பெண்கள் தங்களுடைய உள்ளத்திலிருக்கும் உணர்ச்சிகளை மிகவும் உறுதியாகவும் கவர்ச்சியாகவும் காட்டுவதற்கு இதுவே சிறந்த வழி என்று கருதுகிறார்கள். அவர்களுடைய இல்லங்களில் திறமையாக ஆடவும் பாடவும் தெரிந்த இளம்பெண்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய அரசர்களும் அவர்களைச் சூழ்ந்துள்ள அமைச்சர் களும் ஏராளமான பட்டாடைகளையும் கம்பளியாடைகளையும் வைத்திருக்கிறார்கள். அவை மிகவும் நேர்த்தியானவை. அரசன், சீனப் பெண்களைப் போல, தன்னுடைய தலைமயிரை மேலே தூக்கிக் கட்டிக்கொள்கிறான். அந்தக் குடுமியைச் சுற்றியுள்ள மயிரைக் குறுகக் கத்தரித்துவிட்டுக்கொள்கிறான். மணமான ஆண்களும் தங்களுடைய தலைமுடியை வெட்டிக் கொள்கிறார்கள். அவர்கள் தங்கள் காதுகளில் ஓட்டை செய்து அவற்றில் விலையுயர்ந்த வளையங்களைத் தொங்கவிட்டுக்கொள்கிறார்கள். எங்காவது போகவேண்டுமானால் நடந்துசெல்வதே பொது வழக்கமாய் இருக்கிறது. ஆடவர் அணிந்துகொள்ளும் ஆடைகள் பொதுவாக வெள்ளை நிறமுடையவை. போரென்றால் இந்தியர் எளிதில் மருளுபவராய் இருக்கின்றனர். வில்லும், அம்பும், கேடயமும் அவர்களுடைய ஆயுதங்கள். சீனரைப் போலவே இந்தியப் போர்வீரர்களும் பறக்கிற (இறக்கையுடைய) ஏணி களையும்[1] போரிற் பயன்படுத்துகிறார்கள். நிலத்தின் தன்மைக் கேற்றவாறு அவர்கள் மர எருது உருளும் குதிரை[2] ஆகிய வற்றின் விதிகளைப் பின்பற்றுகிறார்கள். அவர்கள் எழுதத் தெரிந்தவர்கள். அவர்களுடைய மொழியில் பல நூல்கள் இருக் கின்றன. அவர்கள் வானூல், கணிதம், சோதிடம் ஆகியவற்றில் வல்லவர்கள். பீ-டோ என்னும் மரத்தின் ஓலைகளில் எழுதப் பட்டுள்ளவையும் அறிவைப் பெருக்கக்கூடியவையும் ஆகிய செய்த்தன்[3] என்ற துறையைச் சேர்ந்த நூல்களை ஆடவர் அனைவரும் படிக்கின்றனர். முக்கியமான செய்திகளைப் பதிவு செய்து வைப்பதற்கும் பீ-டோ மரத்தின் ஓலைகளைப் பயன் படுத்துகிறார்கள்.

—JASB. vi. pp. 66-7. (JRAS. vi. pp. 457–9 and IA. ix. pp. 14 ff).

[1] சுவர் ஏறப் பயன்படும் ஏணிகள்.

[2] போரிற் பயன்பட்ட பொறிகள். அவை எத்தகையவை என்பது தெரியவில்லை.

[3] சித்தாந்தம். இதனையும் பனையோலையில் எழுதும் பழக்கத்தையும் நோக்கும்போது இந்த வர்ணனை தென்னிந்தியாவைப் பற்றியது என்று கருதலாம்.

# XIV. யுவான் சுவாங்

## தக்காண ராஜ்யங்கள்

### வூ — ட் ஊ (ஓட்டா)

கர்ணசுவர்ணுவிலிருந்து தென்மேற்குத் திசையில் 700 லீ பயணஞ் செய்தபின் அவர் வூ — ட் 'ஊ[1] நாட்டிற்கு வந்து சேர்ந்தார். அந்த ராஜயம் 7000 லீயிக்கும் அதிகமான சுற்றளவு உடையதென்றும் அதனுடைய தலைநகர் 20 லீயிக்கும் அதிகமான சுற்றளவு உடையதென்றும் அவர் சொல்கிருர். அந்த ராஜ்யம் நிலவளமுடையது; அங்கே கிடைக்கின்ற பழங்கள் பிறநாடுகளில் கிடைக்கின்ற பழங்களைக் காட்டிலும் பெரியவை; மேலும், அங்கு வளர்கின்ற அருமையான செடிகொடிகளும் பூக்கின்ற பூக்களும் எண்ணில் அடங்கா. அந்த ராஜ்யம் வெப்பம் மிகுந்தது. அங்கு வாழும் மக்கள் கறுப்பாகவும் உயரமாகவும் இருக்கிருர்கள். அவர்கள் வன்முறையில் விருப்பமுடையவர்கள். அவர்களுடைய பேச்சும் நடத்தையும் 'மைய இந்தியா' மக்களின் பேச்சு நடைமுறை ஆகியவற்றினின்றும் வேறுபட்டவை. அவர்கள் அயராது படிக்கும் இயல்புடையவர்கள். அவர்களுட் பலர் புத்த மதத்தைச் சேர்ந்தோர். அங்கு நூற்றுக்கும் அதிகமான புத்தமடங்கள் இருக்கின்றன. எண்ணற்ற துறவிகள் அங்கு வாழ்கிருர்கள். அவர்கள் அனைவரும் மஹாயானப் பிரிவைச் சேர்ந்தோர். அங்கு 50 தேவர் கோயில்கள் உள. பலவேறு சமயப் பிரிவுகளைச் சேர்ந்தவர்களும் அங்குக் கலந்தே வாழ்ந்தார்கள். அந்த நாட்டில் புத்தர்பிரான் சமயப் பிரசாரம் செய்த இடங்களில் தூபிகள் கட்டப்பட்டுள்ளன. அவற்றின் தொகை பத்துக்கு மேல் இருக்கும். அந்த ராஜ்யத்தின் தென்மேற்குப் பகுதியில்

[1] இன்றைய ஒரிசா. பண்டை ஒத்ராவின் தலைநகர் யாது என்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடு இருக்கிறது. அது ஜெயப்பூர் என்று ஹண்டரும் மிட்னுப்பூர் என்று பெர்குசனும் கருதுகிருர்கள்.

பு-சீ-போ-கி-லி என்னும் மடம் இருக்கின்றது. ('பு-சீ-போ-கி-லி' என்பது புஷ்பகிரி என்னும் சொற்களின் சிதைந்த உருவம் என்று ஜூலியன் சொல்கிருர்.) அந்தமடம் ஒருமலைமீது அமைந்துள்ளது. அங்கிருக்கும் கல்தூபி ஒன்று இயற்கைக்கு மீறிய ஒளியையும் பிற அற்புதங்களையும் உடையது. பக்தர்கள் அந்தத் தூபியின் கவிகை மாடத்திற்கும் ஆமலகத்திற்கும் இடையில் வைக்கின்ற குடைகள் காந்தத்தில் ஒட்டிக்கொள்கிற ஊசிகளைப் போல அங்கேயே நின்று விடுகின்றன. அந்தத் தூபிக்கு வடகிழக்கில் மலையின்மீது அமைந்துள்ள இன்னொரு தூபி இருக்கிறது. மனிதர்கள் அந்தத் தூபிகளை உருவாக்கவில்லை. அவர்களைக் காட்டிலும் ஆற்றல் உடைய இயல்பிலே கடந்தவர்களால் (தெய்வங்கள்?) அவை உருவாக்கப்பட்டவை. அதனாற்றான் அவை அற்புதம் மிகுந்தவையாய் இருக்கின்றன.[2] அந்த ராஜ்யத்தின் தென்கிழக்குப் பகுதியில் கடற்கரையில் சே-லீ-டா-லோ (சரித்ரா?)[3] என்னும் நகரம் இருக்கிறது. கடல் கடந்த வாணிகத்தில் ஈடுபடுபவர்களுக்கும் வெளிநாட்டுக்காரர் களுக்கும் அந்த நகரம் ஒரு முக்கிய மையமாகவும் இளைப்பாறும் இடமாகவும் இருக்கிறது. அந்த நகரம் இயற்கையரண் பெற்றது. அங்கு அருமையான பண்டங்கள் பல கிடைக்கின்றன. நகரத் துக்கு வெளியே ஒன்ருேடொன்று நெருங்கியமைந்த ஐந்து மடங்கள் இருக்கின்றன. அவை வீறுர்ந்த தோற்றமும் கலை யழகும் பெற்றவை. அந்த நகரத்திலிருந்து தெற்கே வெகு தொலைவில்—அதாவது, 10,000 லீயிக்கு அப்பால்—செங்-கா-லோ (சிலான்) நாடு இருக்கிறது. அந்த நாட்டில் புத்தர் திருப் பல்லுக்குமேல் கட்டப்பட்டுள்ள தூபியின் உச்சியில் உள்ள முத்தின் ஒளியை அமைதியான இரவு நேரத்தில் இந்த இடத்தி லிருந்தே காணலாம்.

## குங்-யூ-டோ (குங்-கூ-டோ அல்லது குங்-யா-டோ)

ஒட்டா நாட்டிலிருந்து ஒரு காட்டின் வழியாய்த் தென் மேற்குத் திசையில் 1,200 லீ பயணஞ் செய்தபின் ய்வான் சுவாங்

[2] 'இந்தக் குறிப்பில் சொல்லப்படும் இரண்டு குன்றுகளுள் ஒன்று உதயகிரியாகவும் இன்னொன்று கண்டகிரியாகவும் இருக்கக்கூடும் என்று கன்னிங்ஹாம் கருதுகிருர். அங்கே புத்தக் குடைவரைக் கோயில்களும் பொறிப்புகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.'—பீல்.

[3] இந்த நகரம் தம்லுக் என்று பெர்குசன் சொல்கிருர்.

குங்-யூ-டோ என்னும் நாட்டிற்குப் போய்ச்சேர்ந்தார்.[4] அந்த நாடு 1000 லீயிக்கு மேல் சுற்றளவு உடையது. அதன் தலைநகர் 20 லீயிக்கு மேல் சுற்றளவு உடையது, அந்த நாடு மலைப்பாங்கானது. கடலின் ஒரு விரிகுடாவை ஒட்டியிருந்த அந்த நாடு வெப்பம் மிகுந்தது. அங்கு ஒவ்வொரு பருவத்திற்கும் உரிய பயிர்கள் சரியாக வளர்ந்து பலன்கொடுத்தன. அங்கு வாழ்ந்த மக்கள் உயரமாகவும், கறுப்புநிறம் உடையவர்களாகவும், வீரம் நிறைந்தவர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் தக்கது யாது தகாதது யாது என்று அறிந்துகொள்ளும் உணர்வை ஓரளவு பெற்றவர்கள். ஏமாற்றும் குணம் அவ்வளவாக அவர்களிடத்தில் இல்லை. இந்திய மொழியே அவர்களுடைய எழுத்துமொழியாய் இருந்தது. ஆனால், அவர்களுடைய பேச்சுவழக்கு வேறுபட்டதாய் இருந்தது. அவர்கள் பௌத்தத்தைத் தழுவாதவர்கள். அங்கே நூற்றுக்கு மேற்பட்ட தேவர் கோயில்களும் பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட தீர்த்திகர் கோயில்களும் இருந்தன. அந்த நாட்டில் சில பத்து நகரங்கள் இருந்தன. அவை மலைச்சரிவுகளிலிருந்து கடற்கரை வரையிலும் பரவியிருந்தன. அந்தநாடு இயற்கையரண் பெற்றது. அத்துடன் அங்கு வீரமிக்க போர்வீரர்கள் நிறைந்த ஒரு படையும் இருந்தது. அதனால், அண்டையில் இருந்த ராஜ்யங்களெல்லாம் அந்த நாட்டைக் கண்டு அஞ்சின. எனவே, அந்த நாட்டை எதிர்ப்பதற்கேற்ற வலிமை மிக்க பகைவர் யாரும் இல்லை. அந்த நாடு கடற்கரையில் அமைந்திருந்ததால் அங்கு மதிப்புமிக்க அரிய பண்டங்கள் பல இருந்தன. சோழியும் முத்துமே நாணயங்களாய்ப் பயன்பட்டன. அங்கே நெடுந்தொலைவு பயணஞ் செய்யும் ஆற்றல் வாய்ந்த கரிய பெரிய யானைகள் இருந்தன.

## கா-லெங்-கா (கலிங்கம்)

குங்-யூ-டோவிலிருந்து அவர் பெரிய மரங்கள் அடர்ந்து நின்ற காடுகளின் வழியாய்த் தென்மேற்குத் திசையில் ஆயிரத்து நானூறு ஆயிரத்தைந்நூறு லீ பயணஞ் செய்தபின் கலிங்க நாட்டை அடைந்தார். அந்த ராஜ்யம் 5000 லீயிக்கும் அதிகமான சுற்றளவு உடையது. அதன் தலைநகரம்[5] 20 லீயிக்கு மேல்

[4] இந்த நாடு சில்கா ஏரியைச் சுற்றியுள்ள பகுதி என்று கன்னிங்ஹாம் பெர்குசன் ஆகிய இருவரும் சொல்கின்றனர். யுவான்சுவாங் அங்குச் சென்றபோது அது ஹர்சனுடைய பேரரசில் ஒரு பகுதியாய் இருந்தது என்று கருதலாம்.

[5] இது ராஜமஹேந்திரபுரம் என்று கன்னிங்ஹாம் கருதுகிறார். ஆனால், அது கலிங்கப்பட்டினத்திற்கு அருகில் இருந்த ஒரு நகரம் என்று பெர்குசன் கருதுகிறார்.

சுற்றளவு உடையது. அந்நாட்டு உழவர்கள் உரிய பருவத்தில் விதைத்து உரிய பருவத்தில் அறுவடை செய்தார்கள். அங்கே பூவும் கனியும் ஏராளமாயிருந்தன. பல நூறு லீ வரையிலும் காடுகள் தொடர்ந்து பரந்து கிடந்தன. அங்கே கரிய காட்டு யானைகள் இருந்தன. அவற்றுக்கு அண்டை நாடுகளில் நல்ல கிராக்கியிருந்தது. அது வெப்பம் மிகுந்த நாடு. அங்கு வாழ்ந்த மக்கள் திருந்தா இயல்பும் பிடிவாதமும் உடையவர்கள்; ஆனால் சொன்ன சொல்லைக் காப்பாற்றும் இயல்பும் நேர்மையும் உடையவர்கள். அவர்கள் வேகமாகவும் தெளிவாகவும் பேசும் பழக்கம் உடையவர்கள். அவர்களுடைய பேச்சும் நடையுடை பாவனைகளும் 'மைய இந்தியா' மக்களின் பேச்சு நடையுடை பாவனைகளினின்று ஓரளவு வேறுபட்டவை. அந்த நாட்டில் புத்த மதத்தைச் சேர்ந்தவர்கள் குறைவாகவே யிருந்தார்கள். பெரும்பாலார் வேறு மதங்களைச் சேர்ந்தோர். அங்கே பௌத்த மடங்கள் பத்துக்குமேல் இருந்தன. அங்கு 'மஹாயான ஸ்தவிரக் கோட்பாட்டைப் பின்பற்றிய' 500 துறவிகள் இருந்தார்கள். அந்த நாட்டில் மிகப்பல தேவர்கோயில்கள் இருந்தன. பௌத்தம் அல்லாத பிறசமயப் பிரிவுகளைச் சேர்ந்த மக்கள் அங்கே ஏராளமாய் இருந்தார்கள். அவர்களுட் பெரும்பாலார் நிர்க்ரன்தர்.[6] ஒரு காலத்தில் அந்த நாட்டில் மக்கள் மிகவும் அதிகமாய் வாழ்ந்தார்கள். அப்போது இயற்கை மீறிய ஆற்றல் படைத்த இருடி ஒருவர் அங்குத் தம்முடைய ஆசிரமத்தில் வசித்துவந்தார். அந்த நாட்டு மக்களுள் எவனோ ஒருவன் செய்த பிழையால் சினங்கொண்ட அந்த இருடி அந்த நாட்டையே சபித்துவிட்டார். அதனால் அந்த நாட்டில் மனிதப் பூண்டே அற்றுவிட்டது. இந்த நிலை நெடுங்காலம் நீடித்த பின்னர், சிறிது சிறிதாக அங்கே மக்கள் குடியேறத் தொடங்கினார்கள். எனினும், அந்த நாட்டு மக்கள்தொகை இன்னும் சிறியதாகவே இருந்தது. நகரத்தின் (தலைநகரமாயிருக்கக்கூடும்) தென்புறச் சுவருக்கருகில் அசோகத் தூபி ஒன்று இருந்தது. அதனருகில் துறைபோகிய புத்தர் நால்வர் அமர்வதற்கும் பயிற்சி செய்வதற்கும் ஏற்ற இடங்கள் இருந்தன. அந்த நாட்டின் வடக்கிலுள்ள ஒரு மலையின் சிமையத்தில் நூறடிக்குமேல் உயரமுள்ள கல்தூபி ஒன்று இருந்தது. அந்த இடத்தில்தான் இந்தக் கல்பத்தின் தொடக்கத்தில் பிரத்தியேக புத்தர் ஒருவர் உலக வாழ்வை நீத்தார். (அந்தக் காலத்தில் மனிதர் எண்ணற்ற காலம் வாழ்ந்தனர்.)

[6] திகம்பர சமணர்கள்.

## தென்கோசலம்

கலிங்கத்திலிருந்து அவர் வட மேற்குத் திசையிற் பயணஞ் செய்தார். காடுமலைகள் பலவற்றைக் கடந்து 1800 லீ சென்ற பின் அவர் கோசல நாட்டை[7] அடைந்தார். 6000 லீயுக்கும் அதிகமான சுற்றளவுடைய அந்த நாட்டை மலைகள் சூழ்ந்திருந்தன. அங்கே காடுகளும் சதுப்பு நிலங்களும் ஏராளமாய் இருந்தன. அதனுடைய தலைநகரம் 40 லீயிக்கும் அதிகமான சுற்றளவுடையது. நிலவளம் மிக்க அந்த நாட்டில் நகரங்களும் கிராமங்களும் ஒன்றையொன்று நெருங்கி அமைந்திருந்தன. மக்கள் செழிப்பான வாழ்க்கை நடத்தினார்கள். அவர்கள் உயரமாகவும் கறுப்பாகவும் இருந்தார்கள். அவர்களுடைய அரசன் சத்திரிய வமிசத்தைச் சேர்ந்தவன்; புத்தமதத்தைத் தழுவியவன்; இரக்கம் மிகுந்தவன். அந்த நாட்டில் சுமார் 100 பௌத்த மடங்கள் இருந்தன. அவற்றில் சுமார் 10,000 துறவிகள் வாழ்ந்தார்கள். அவர்கள் அனைவருமே மஹாயானப் பிரிவைச் சேர்ந்தவர்கள். நகரத்தின் (தலைநகர் என்று கருதலாம்) தென்புறத்தில் பழைய பௌத்த மடம் ஒன்றும் அசோகத்தூபி ஒன்றும் இருந்தன. அந்த இடத்தில்தான் புத்தர் தம்முடைய இயற்கை மீறிய ஆற்றலால் தீர்த்திகர்களைத் தோல்வியுறச் செய்தார். அன்றியும், அதே இடத்திற்றான் பிற்காலத்தில் நாகார்ஜுன பூ'சா தங்கியிருந்தார். நாகார்ஜுனர் வாழ்ந்த காலத்திலேயே ஷா-டோ-பா-ஹா என்னும் அரசனும் ஆட்சிசெய்தான். அவன் நாகார் ஜுனரிடத்தில் மிகுந்த மதிப்பு வைத்திருந்தான். அவர் வசித்த இடத்திற்கு அரசுகாவலர்களை நியமித்திருந்தான். ஷா-டோ-பா-ஹா என்றால் 'சரியான வழியில் செல்பவன்' (யின்-செங்)[8] என்பது பொருள்.

நாகார்ஜுனரைக் கண்டுபேசும் நோக்கத்தோடு தேவபூசா என்பவர் செங்கலா என்னும் ஊரிலிருந்து வந்தார்.[9] தேவர் நாகார்ஜுனருடைய மடத்தை அடைந்ததும் அவரைக் காண

[7] இது பெரும்பாலும் சத்திஸ்கர்ப் பகுதியாய் இருக்கக்கூடும். அதனுடைய தலைநகர் வைரகருக்கு அருகில் இருந்தது. வைரகர் சோழப் பொறிப்புகளில் வயிராகரம் என்று சொல்லப்பட்டுள்ளது. (See Fergusson in JRAS, NS. vi p. 260.)

[8] இது சாதவாஹனர் என்றஅரசமரபுப் பெயர்தான் என்பதில் ஐயமில்லை. அதனுடைய சீன மொழிபெயர்ப்பில் ஏதோ தவறு நேர்ந்திருக்கிறது.

[9] நாகார்ஜுனருக்கும் ஆரிய தேவருக்கும் இடையில் நிகழ்ந்த இந்தச் சந்திப்பு நம் கவனத்தை மிகுதியும் கவர்வதாயிருக்கிறது. முக்கியமாக, நாகார்ஜுனகொண்டாவில் நடைபெற்றுள்ள அகழ்வாராய்ச்சிகளுக்குப்

வேண்டுமென்று வாயிற் காவலனைகப் பணியாற்றிய மாண வனிடம் சொன்னர். அந்த மாணவனும் உள்ளே சென்று நாகார்ஜுனருக்குத் தெரிவித்தான். ஆரியதேவரும் நாகார்ஜுனர் தேவருடைய புகழைக் கேள்விப் பட்டிருந்தார். அவர் தம்முடைய கிண்ணத்தில் நீரை ஊற்றி நிறைத்து அதனைத் தேவரிடத்திற் காட்டுமாறு தம்முடைய மாணவரைப் பணித்தார். தேவர் நீர்நிறைந்த அந்தக் கிண்ணத்தில் ஓர் ஊசியைப் போட்டுவிட்டு அந்த மாணவரைப் போகச் சொல்லிவிட்டார். அதனையறிந்த நாகார்ஜுனர் 'அவர் ஒரு ஞானி. மறைந்துநிற்கும் ஊற்றைக் காண்பது தெய்வங்களுக்கே இயல்வதாகும். ஞானிகள் அவ்வூற்றின் நுண்ணிய வளர்ச்சிகளைத் தேடிக் கண்டுபிடிக் கிருர்கள். அத்தகைய உயர்ந்த ஆற்றல் இப்போது இங்கு வந்திருப்பவரிடம் இருக்கின்றது. உடனே அவரை இங்கு அழைத்துவா' என்று சொன்னர். 'ஐயா தங்களுடைய சொல்லும் செயலும் எனக்கு விளங்கவில்லை. பேசாதிருப்பதே பெரும்பேச்சு என்று சொல்வார்களே, அதுதானே இது?' என்று மாணவன் கேட்டான். 'நீர் நிறைந்த கிண்ணம் எல்லாம் அறிந்த என்னுடைய அறிவைக் காட்டுகிறது. தேவர் போட்ட ஊசி அந்த அறிவினைத் துருவி ஆராய்ந்தவர் அவர் என்பதைக் காட்டுகிறது' என்று நாகார்ஜுனர் விளக்கினர். உள்ளே சென்ற தேவர் மிகுந்த அடக்கம் உடையவராய்த் தோன்றினர். ஆனல் தம்முடைய கருத்துகளைத் தெளிவாகவும் விளக்க மாகவும் எடுத்துரைத்தபின் அவர் நாகார்ஜுனரிடம் மாணவ ராக இருக்க விரும்பினர். அப்போது நாகார்ஜுனர் 'இன்றைக்கிருக்கின்ற துறவிகள் அனைவருள்ளும் தாங்களே தலைசிறந்த அறிஞராய் இருக்கின்றீர்கள். தங்களுடைய சிறந்த பேச்சு, தங்களுக்குமுன் இருந்த பெரியவர்களுடைய அறிவுக்கு ஒளியூட்டுகிறது. எனக்கு வயதாகிவிட்டது. உடலும் தளர்ந்துவிட்டது. தங்களைப் போன்ற உயர் ஆற்றல் நிறைந்த ஒருவரைக் கண்டது மிகவும் நல்லதாய்ப் போய்விட்டது. நீர் வேண்டும்போது ஊற்றிக் கொள்ளக்கூடிய

---

பின்னர் அதனுடைய முக்கியத்துவம் இன்னும் அதிகமாகியிருக்கிறது. யுவான் சுவாங்கின் குறிப்புகள் எழுப்பியுள்ள பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு வாட்டர்ஸ் எழுதியுள்ள குறிப்புகள் மட்டுமன்றி வோகல் என்பவர் பொறிப்புகளைப்பற்றி எழுதியுள்ள குறிப்புகளும் துணைபுரியும். —EI. xx.

ஆரிய தேவருடைய எலும்புகளைக்கொண்டது என்று நாம் கருதக்கூடிய மட்பாண்டத்தையும் அதன்மீதுள்ள பொறிப்புகளையும் பற்றிய செய்திகள் JOR. ix pp. 95-99இல் இருக்கின்றன.

சாடி போலத் தாங்கள் எனக்குத் துணைசெய்வீர்கள் என்று நம்புகிறேன். எனவே, என்னிடமுள்ள அணையா விளக்கைப் பெற்று எனக்குப்பின் அதனைக் காக்கும் ஆற்றலுடைய தங்களை நான் வரவேற்கிறேன். பௌத்தத்தைப் பரப்பும் தகுதி தங்களுக்கு இருக்கிறது என்று நான் உறுதியாய் நம்புகிறேன். வருக, நாம் இருவரும் பௌத்தத்தின் மறைபொருளைப் பற்றிப் பேசலாம்' என்று கூறினர். அச் சொற்களைக் கேட்ட தேவர் யாதோ ஒரு பொருள் பற்றிப் பேச முற்பட்டார். ஆனால் நாகார்ஜுனருடைய முகத்தில் தேங்கிநின்ற கம்பீரத்தைக் கண்டபோது அவர் பேச்சற்று நின்றுவிட்டார். பின்னர்த் தாம் நாகார்ஜுனருடைய மாணவராக இருக்கவே விரும்புவதாய்த் தெரியப்படுத்தினர். நாகார்ஜுனர் அவரைச் சீடராக ஏற்றுக்கொண்டு அவருக்குப் புத்தமதத் தத்துவங்களைப் போதித்தார். நாகார்ஜுனர் நீண்ட நாள் வாழும் இரகசியத்தை யறிந்தவர். அதனால் அவர் பல நூற்றாண்டு வாழ்ந்துவிட்டார். ஆனாலும், அவருடைய அறிவாற்றல் என்றும்போல அன்றும் சிறந்து விளங்கியது. அது எவ்வகையிலும் பழுதடையவில்லை. எனினும், அவர் தாமாகவே சாவைத் தழுவிக் கொண்டார். அந்த நிகழ்ச்சியை இப்போது விளக்குவோம். யின்-செங் மன்னனும் பல நூற்றாண்டு வாழ்ந்துவிட்டான். ஆனால், அதற்குக் காரணமாயிருந்தவர் நாகார்ஜுனர். நாகார்ஜுனர் உயிரோடிருக்கும் வரையிலும் யின்செங்கும் உயிரோடிருப்பான், அவர் இறந்தால் அவனும் இறந்துவிடுவான். யின்-செங்கின் கடைசி மகன் அரியணை ஏறவேண்டுமென்று மிகவும் விரும்பினன். யின்செங்கோ இறப்பதாகத் தெரியவில்லை. தன் தாயின் மூலம் யின்செங்கினுடைய ஆயுளின் இரகசியத்தை யறிந்த அரசகுமாரன், அவளுடைய தூண்டுதலின் பேரில், நாகார்ஜுனரைக் கண்டு தனக்காக அவர் உயிர் நீப்பது இன்றி யமையாதது என்று எடுத்துக்கூறினன். அவனுடைய வாதத்தை ஏற்றுக்கொண்ட நாகார்ஜுனர் ஒரு காய்ந்த புல்லால் தம் கழுத்தை அறுத்துக்கொண்டார். அவர் இறந்த உடனே யின்செங்கும் இறந்து போனன்.

அந்த, நாட்டுக்குத் தென்மேற்கில், அதனுடைய தலைநகரி லிருந்து 300 லீ தொலைவில் போ-லோ-மோ-லோ-கீ-லி[10]

[10] இந்தப் பெயர் பிரமரகிரியைக் குறிக்கிறது என்று கருதலாம். ஆனல், அதற்குரிய விளக்கம் போதுமான அளவில் கிடைக்கவில்லை. துர்க்கையின் வேறொரு பெயரான பிரமரி என்னும் சொல்லிலிருந்து இந்தப் பெயர் வந்தது என்று பீல் சொல்லுகின்ற கருத்தை ஏற்றுக்கொள்வது அவ்வளவு எளிதன்று. பாஹியன் கூறியுள்ள போ-லோ-யூ என்னும் பெயரைப் பாராவதா என்று

என்னும் மலையொன்றிருந்தது. அது தனியொரு பாறைபோல உயர்ந்தோங்கி நின்றது. யின்செங் அங்கே பாறையைக் குடைந்து நாகார்ஜுனருக்காக ஒரு மடத்தையமைத்து, அதிலிருந்து 10 லீ தொலைவு ஒரு பாதையையும் வெட்டியிருந்தான். மடத்தில் பெரியபெரிய கூடங்களும், ஒதுங்கியிருப்பதற்கேற்ற தனியறைகளும் இருந்தன. அந்தக் கூடங்கள் ஐந்து நிலைகளை உடையவை. ஒவ்வொரு நிலையிலும் நன்னான்கு முற்றங்களும் கோயில்களும் இருந்தன. அந்தக் கோயில்களில் அற்புதமான கலையழகுடைய புத்தர் சிலைகள் இருந்தன. அவையனைத்துமே பொன்னாலான ஆளுயரச் சிலைகள். மடத்திற்குள் நீர்க்கால்கள் ஓடிக்கொண்டிருந்தன. பாறையில் குடைந்து செய்த சாளரங்கள் அறைகளுக்கு வெளிச்சந் தந்தன. அந்த மடத்தை உருவாக்கி முடிப்பதற்குள் யின்செங்கின் கருவூலம் காலியாகி விட்டது. ஆனால், நாகார்ஜுனர் கல்லைத் தங்கமாக மாற்றி மீண்டும் கருவூலத்தை நிரப்பினார்.[11] மடத்தின் ஐந்தாம் நிலையில் சாக்கிய முனிவருடைய திருமறை நூல்களையும், பூசர்கள் இயற்றிய நூல்களையும் நாகார்ஜுனர் அடுக்கிவைத்தார். அடித்தளத்தில் மடத்திற் பணியாற்றிய ஆட்கள் வசித்தார்கள். அங்கேதான் உணவுப் பொருள்களும் வைக்கப்பட்டிருந்தன. இடையில் இருந்த மூன்று நிலைகளிலும் துறவிகள் வசித்தார்கள். மடத்தை உருவாக்கி முடித்த பின்னர்க் கணக்குப் பார்த்தபோது தொழிலாளிகளைப் பராமறிப்பதற்காகச் செலவான தொகை ஒன்பது கோடி பொன் என்பது தெரியவந்தது. பிற்காலத்தில் துறவிகள் தங்களுக்குள் சச்சரவு செய்துகொண்டு அதனைத் தீர்த்துவைக்குமாறு அரசனை வேண்டினார்கள். அதற்குப்

**ஸ்ரீபர்வத மடம்**

---

எழுதுவது வழக்கம். பாராவதா என்றால் புறா என்று பொருள்படும். பர்வதம் என்ற சொல்லைத் தவறாகப் புரிந்துகொண்ட பாஹியன் அதனைப் பாராவதா என்று எழுதியிருக்கிறார் என்று கருதலாம்; பார்வதி என்ற சொல்லை அவ்வாறு எழுதியுள்ளார் என்று கருதுவது பொருந்தாது. ஆனால் பாஹியன் குறிப்பிட்ட மடத்தையே யுவான் சுவாங்கும் குறிப்பிடுகிறார் என்பதிலும், நாகார்ஜுனரைப்பற்றிய கதைகளில் வருகின்ற ஸ்ரீ பர்வத மடமே அவர்கள் இருவரும் குறிப்பிடுகிற மடம் என்பதிலும் ஐயமில்லை. அந்த மடத்தில்தான் நாகார்ஜுனர் தம்முடைய இறுதி நாட்களைக் கழித்தார் என்று அந்தக் கதைகளின் வாயிலாய் அறிகிறோம். அதைப் பற்றிய குறிப்பு அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட நாகார்ஜுனகொண்டாப் பொறிப்பு ஒன்றில் (F) இருக்கிறது.—Beal, ii, p. 214 *n*. 80. Watters ii, pp. 207-8. Vogel, EI. xx. pp. 9 and 22. Fa-hien *ante* VIII (A).

[11] ரசவாதத்தை விளக்குகின்ற நூல்கள் பல நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றுள் பலவற்றை எழுதியவர் நாகார்ஜுனரே என்று இன்றும் சிலர் கருதுகின்றனர்.

பின்னர், அந்த மடம் சட்டத்தை மீறியவர்களின் கைக்குள் சென்றுவிடக்கூடும் என்று அஞ்சிய பணியாட்கள் துறவிகளை வெளியேற்றிவிட்டு, அவர்கள் மீண்டும் மடத்திற்குள் புகாமல் தடுப்பதற்காகப் புதிய தடையரண்களை அமைத்துவிட்டார்கள். அன்று முதல் அந்த மடத்தில் துறவிகளே இல்லாமல் போய் விட்டார்கள். மடத்தை அடைவதற்குரிய வழியும் யாருக்கும் தெரியாமற் போய்விட்டது.

## ஆன்-டோ-லோ (ஆந்திரம்)

அங்கிருந்து அவர் தென்றிசையில் ஒரு காட்டு வழியாய் 900லீயிக்கு மேல் பயணஞ் செய்தபின் ஆன்-டோ-லோ என்னும் நாட்டை அடைந்தார். அந்த நாடு 3000 லீயிக்குமேல் சுற்றள வுடையது. அதனுடைய தலைநகரம் பிங்-ூ-லோ[12] (பிங்-கீ-லோ) என்னும் பெயருடையது. அதனுடைய சுற்றளவு 20 லீயிக்கு மேல் இருக்கும். அந்த நாடு நிலவள மிக்கது; ஈரப் பசையும் வெப்பமும் உடையது. அந்நாட்டு மக்கள் வன்னடத்தை உடைய வர்கள். அவர்கள் 'மைய இந்தியாவில்' வழக்கிலிருந்த எழுத்து முறையையே பின்பற்றினார்கள். எனினும் அவர்களுடைய பேச்சு வழக்கு வேறுபட்டதாய் இருந்தது. அங்கே இருபதுக்கு மேற் பட்ட மடங்கள் இருந்தன. அவற்றில் மூவாயிரத்திற்கும் அதிகமான துறவிகள் வாழ்ந்தார்கள். தலைநகருக்கு அருகில் உயர்ந்த பல கூடங்களையும், கலையழகு நிரம்பிய பல நிலைகளுடைய முகப்பு மாடங்களையும் கொண்ட பெரிய மடம் ஒன்று இருந்தது. மடத்தில் மிகவும் அழகு வாய்ந்த புத்தர் சிலையொன்று இருந்தது. மடத்துக்கு முன்னால் பலநூறு அடி உயரமுள்ள தூபி ஒன்று இருந்தது. அந்த மடமும் தூபியும் ஆ-சே-லோ என்னும் அர்ஹத்தின் கைவண்ணத்தால் உருவானவை. (ஆ-சே-லோ = ஆச்சாரா. அதனைச் 'செயல் நிறை வேற்றம்' என்றும், 'நடைமுறை விதி' என்றும் சோ-ஹிசிங் மொழிபெயர்த்துள்ளார்.) அந்த மடத்தின் தென்மேற்கில் அசோகத் தூபியொன்று இருந்தது. அங்கே புத்தர் தம்முடைய கொள்கையைப் பிரசாரம் செய்தார் என்றும், அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தினார் என்றும், கணக்கில்லா மக்களைத் தம்முடைய சமயத்தில் சேர்த்துக்கொண்டார் என்றும் சொல்கிறார்கள்.

அந்த மடத்திற்குத் தென்மேற்கில் 20 லீ தொலைவில் தனியாக நின்ற ஒரு குன்றின் சிமையத்தில் கல்தூபி ஒன்று

[12] இது, 'வேங்கி'யாய் இருக்குமோ? See JRAS, NS vi, p. 261.

இருந்தது. அங்கேதான் சென்னு[13] தம்முடைய 'யின்மிங்லுன்' என்னும் நூலை இயற்றினர். (யின்மிங்லுன் என்றால் தர்க்க சாஸ்திரம் என்றும் அனுமான சாஸ்திரம் என்றும் பொருள்படும்.) புத்தர் இவ்வுலக வாழ்வை நீத்த பின்னர் அவருடைய கொள்கைகளில் ஈடுபாடுகொண்ட சென்னு துறவுபூண்டார். அவர் அகநிலையறிவைப் பெறுவதில் பேரார்வம் கொண்டவர். அவருடைய அறிவுத்திறன் ஆழமும் உறுதியும் உடையது. தம் காலத்து மக்களுடைய துன்ப நிலையைக் கண்டு மனமிரங்கிய சென்னு அவர்களைப் புத்த மதத்தில் சேர்ப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டார். அப்போதிருந்த அனுமான சாஸ்திரங்கள் சொற்செறிவும் ஆழமும் மிகுந்தவையாய் இருந்தன. அவற்றைப் படிக்க முயன்ற மாணவர்கள் அம்முயற்சியில் தோல்வியே கண்டார்கள். அவற்றில் கூறப்பட்டிருந்த கருத்துகள் அவர்களுக்கு விளங்கவில்லை. அதுகண்ட சென்னு அந்தச் சாத்திரங்களின் நுட்பங்களையும் அவற்றின் நடையியல்புகளையும் ஆராய்ந்து அறிந்துகொள்ளும் நோக்கத்துடன் அமைதியான ஓர் இடத்திற்குச் சென்று அங்குத் தனியே வாழத்தொடங்கினர். அப்போது அவர்முன் தோன்றிய மலைத்தெய்வம் ஒன்று சென்னுவை ஆகாயத்திற்குத் தூக்கிச் சென்று, ஆதியில் புத்தர் திருவாய் மலர்ந்தருளிய அனுமான சாத்திரத்தின் பொருள் யாருக்கும் விளங்காமல் மறைந்துபோயிற்று என்றும், அதனை அன்று சென்னு அனைவரும் அறியுமாறு மீண்டும் விளக்குவார் என்றும் கூறியது. அதன் பின்னர், சென்னுவின் உடலிலிருந்து ஒரு பேரொளி தோன்றியது. அதனால் இருள் விலகியது. அவ்வொளியைக் கண்ட அரசன், சென்னு அர்ஹத் நிலையை அடைவதற்கேற்ற முயற்சியை உடனே மேற்கொள்ள வேண்டுமென்று விண்ணப்பம் செய்துகொண்டான். சென்னு அந்த வேண்டுகோளைத் தயக்கத்தோடு ஏற்றுக்கொண்டார். ஆனல், அந்த நேரத்தில் மஞ்சுஸ்ரீ சென்னுவின்முன் தோன்றி, மக்களுக்குத் தொண்டு செய்யவேண்டுமென்று சென்னு ஆதியில் கொண்டிருந்த பேரார்வத்தையும் திட்டங்களையும் அவருக்கு நினைவூட்டினர். அன்றியும், ஆதியில் மைத்ரேயி இயற்றிய 'யுக-ஷிஹ்-ஈலுன்' (யோகாச்சார்ய பூமி சாஸ்திரம்) என்னும் நூலை விரிவுபடுத்தி எழுதுமாறும் மஞ்சுஸ்ரீ கேட்டுக்கொண்டார். அதனல் அர்ஹத் நிலையை அடைய வேண்டும் என்னும் எண்ணத்தைச் சென்னு கைவிட்டு அனுமான சாஸ்திரத்தைப் பற்றிய நூல்களை ஆராயத் தொடங்கினர். நாளடைவில்

திந்நாகர்

[13] திந்நு, திந்நாகா. See Watters, ii pp. 212-14.

அந்தப் பணியை முடித்துவிட்டு, யோகத்தைப்பற்றி மக்களுக்கு எடுத்துச்சொல்லும் பணியைச் சென்று மேற்கொண்டார். புகழ்பெற்ற மனிதர் பலர் அப்போது அவருடைய சீடராயினர்.

## டே-நா-சே-கா (தனகடகம்?)[14]

ஆந்திர நாட்டிலிருந்து அவர் காடுகள் பலவற்றைக் கடந்து, 1000 லீயிக்குமேல் பயணஞ்செய்தபின்னர் டே-நா-சே-கா என்னும் நாட்டை அடைந்தார். அந்நாடு 6000 லீயிக்குமேல் சுற்றளவுடையது. அதனுடைய தலைநகர் 40 லீயிக்குமேல் சுற்றளவுடையது.[15] அந்த நாடு நிலவளமிக்கது. அங்குப் பயிர்கள் செழித்து வளர்ந்தன. ஆனால், தரிசுநிலம் அங்கு மிகுதியாய் இருந்தது; நகரங்கள் குறைவாகவே இருந்தன. அந்த நாடு வெப்பமானது. மக்கள் கறுப்பு நிறமும், வன்னடத்தையும், கலையார்வமும் உடையவர்கள். அந்த நாட்டில் புத்த மடங்கள் மிகப் பலவாய் இருந்தன. ஆனால், அவற்றுள் பெரும்பாலானவற்றில் துறவிகளே இல்லை. சுமார் இருபது மடங்களில் மட்டும் துறவிகள் வாழ்ந்தார்கள். அவர்களின் தொகை சுமார் ஆயிரமிருக்கும். அவர்களுட் பெரும்பாலார் மஹாசங்கிகப் பிரிவைச் சேர்ந்தோர். அந்நாட்டில் நூற்றுக்கு மேற்பட்ட தேவர் கோயில்கள் இருந்தன; பௌத்தம் அல்லாத பிற சமயங்களைச் சேர்ந்த மக்களின் எண்ணிக்கை மிகப் பெரிதாய் இருந்தது.

**மடங்கள்**

தலைநகருக்குக் கிழக்கில் இருந்த ஒரு குன்றின்மீது பூ-போ-ஷிஹ்-லோ (பூர்வசிலா) என்னும் மடம் இருந்தது. பூ-போ-ஷிஹ்-லோ என்றால் கிழக்குமலை என்று பொருள்படும். அதுபோலவே தலைநகருக்கு மேற்கில் இருந்த ஒரு குன்றின்மீது ஆ-போ-ஷிஹ்-லோ (அவரசிலா) அல்லது மேற்குமலை என்னும் மடம் இருந்தது. அந்த மடங்களைக் கட்டியவன் அந்த நாட்டின் முன்னாள் அரசர்களுள் ஒருவன். அவன் அங்கிருந்த ஆற்றின் வழியாய் அந்த மடங்களுக்குப் போகும் பாதை ஒன்றை அமைத்து, அந்த மலைகளின் செங்குத்தான சரிவுகளைக் குடைந்து, உயர்ந்த கூடங்களையும்

[14] இது தனகடகந்தான் என்பதை வோகல் ஏற்றுக்கொள்கிறார். (EI. xx p: 9.

[15] இது விஜயவாடா என்று பெர்குசன் கருதுகிறார். அந்தக் கருத்தை ஜூவலும் ஏற்றுக்கொள்கிறார். தரணிக்கோட்டையாகவோ அமராவதியாகவோ இருக்கக்கூடும் என்று கன்னிங்ஹாம் கருதுகிறார்.

அவற்றை இணைக்கும் நீண்டு அகன்ற இடைகழிகளையும் உருவாக்கினான். உள்ளூர்த் தெய்வங்கள் அந்த மடங்களுக்குக் காவலாய் இருந்தன. அந்த மடங்களுக்குப் புனிதர்களும் ஞானிகளும் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தார்கள். புத்தர் சாவை அடுத்துவந்த ஆயிரம் ஆண்டுக் காலத்தில் ஆண்டொன்றுக்கு ஆயிரம் துறவிகள் தங்களுடைய கார்கால நோன்புக்காக அந்த மடங்களுக்கு வந்தார்கள். அங்கு வரும்போது சாதாரணத் துறவிகளாய் இருந்த ஆயிரம்பேரும் அங்கிருந்து போகும்போது அர்ஹத் நிலையடைந்த துறவிகளாய் மாறிவிட்டார்கள். அதனால், அவர்கள் இயற்கை மீறிய ஆற்றலைப் பெற்றார்கள். எனவே, அவர்கள் தரைமீது நடந்து போகாமல் ஆகாய வழியில் சென்றார்கள். பிற்காலத்தில் சாதாரணத் துறவிகளும் அர்ஹத்துகளும் சேர்ந்து அந்த மடங்களுக்கு வந்து தாற்காலிகமாய்த் தங்கினார்கள். ஆனால், நூறாண்டுக் காலத்திற்கு மேலாக அந்த மடங்களுக்கு எந்தத் துறவியும் வரவில்லை. அந்த மடங்களைப் பார்க்க விரும்பிய பொது மக்களைக் காட்டுவிலங்குகளின் உருவத்தில் தோன்றிய மலைத் தெய்வங்கள் வழியிலேயே தடுத்துத் துரத்திவிட்டன.

தலைநகருக்கு அருகில், அதனுடைய தென்றிசையில், அசுர மாளிகை என்னுமிடத்தில், செங்குத்தான பாறையொன்று இருந்தது. புத்தரைக் காண வருகின்ற மைத்ரேயரைப் பார்ப்பதற்காக அந்த இடத்தில் சாஸ்திரத் தலைவர் போ-பீ-கா[16] காத்துக் கொண்டிருக்கிறார். இந்தப் புகழ்பெற்ற வாத வல்லுநரைப் பற்றிய கதையொன்றைக் கீழே தருகிறோம். அவர் வெளிப்பார்வைக்கு சாங்கியக் கோட்பாட்டைப் பின்பற்றியவரைப் போலத் தோன்றினாரெனினும், உண்மையில் அவர் நாகார்ஜுனரைப் பின்பற்றியவர். ஹு-பா (தர்மபாலர்) பூசா ஆயிரக்கணக்கான சீடர்களோடு மகத நாட்டில் புத்தமதப் பிரசாரம் செய்துகொண்டிருக்கிறார் என்று கேள்விப்பட்ட சாஸ்திரத் தலைவர் அவரோடு மதக் கோட்பாடுகளைப்பற்றிப் பேசவேண்டும் என்று பெருவிருப்பங் கொண்டார். அதனால், அவர் ஊன்றுகோலை எடுத்துக்கொண்டு மகதத்திற்குப் புறப்பட்டார். அவர் பாடலிபுத்ரத்தை யடைந்தபோது ஹு-பா போதி மரத்தின்கீழ்த் தங்கியிருக்கிறார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டார். உடனே ஓர் ஆளிடம் பின்வரும் செய்தியை

[16] பாவவிவேகா என்று ஜூலியன் சொல்கிறார். அதனை பீலும் ஏற்றுக் கொள்கிறார். ஆனால், அது பாவிவேகா என்று வாட்டர்ஸ் சொல்கிறார். (Watters, ii, 221-2).

அவருக்குச் சொல்லியனுப்பினர். 'நான் தங்களுடைய சீடனாக வேண்டுமென்றும், புத்தமதத்தைப் பிரசாரம் செய்யவேண்டுமென்றும் நெடுங்காலமாக எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால், தங்களைக் கண்டு என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்வதற்கும், புத்தமதக் கோட்பாடுகளைப்பற்றிப் பேசுவதற்கும், இன்னும் நிறைவேற்றப்படாத என்னுடைய பழைய வேண்டுதல் ஒன்று தடையாய் நிற்கிறது. நான் வறிதே சென்று போதி மரத்தைப் பார்ப்பதில்லை என்று சூளுரைத்துள்ளேன். அங்குச் செல்வதாயிருந்தால் நான் புத்தராக மாறவேண்டும்.' இந்தச் செய்தியைக் கேட்ட பாஹுூ மனித வாழ்க்கை மாயை என்றும் நிலையற்றது என்றும் வாழ்க்கையைப் பற்றிய தம்முடைய கருத்தைக் கூறிவிட்டு, தமக்குள்ள பணிகள் பலவற்றின் இடையில் அவரோடு வாதிப்பதற்கு நேரமில்லையென்று சொல்லியனுப்பிவிட்டார். ஆனால், சாத்திரத் தலைவர் அத்துடன் விட்டுவிடவில்லை. எனவே, இருவர்க்கும் இடையில் தூதர்கள் சென்றுகொண்டிருந்தார்கள்; செய்திகள் பறந்தவண்ணம் இருந்தன. எனினும், சாத்திரத் தலைவரால் பாஹுூவைப் பார்க்க இயலவில்லை. பின்னர், சாத்திரத் தலைவர் இந்த நாட்டிலிருந்த தம் வீட்டுக்குத் திரும்பிச்சென்று அமைதியாகச் சிந்தனை செய்தார். அதன் பயனாக, மைத்ரேய உருவில் உள்ள புத்தரைக் கண்டு பேசினாலன்றித் தம்முடைய ஐயங்கள் நீங்கா என்ற முடிவுக்கு வந்தார். எனவே, அவர் மூன்றாண்டுக் காலம் உணவு கொள்ளாமல், நீரை மட்டும் பருகி, குவான்-ட்சு-ட்சைப்-பூசாவின் சிலையின்முன் அமர்ந்து, 'சுயி-ஹிசின்-தாரணி'யை ஓதிக்கொண்டேயிருந்தார். அவ்வாறு மூன்றாண்டு முடிந்தபின், அந்தப் பூசா தம்முடைய அழகிய உருவத்தில் சாத்திரத் தலைவரின்முன் தோன்றி, அவருடைய விருப்பம் யாதென்று அறிந்துகொண்டபின், சாத்திரத் தலைவர் உயர்ந்த நல்வழியைக் கடைப்பிடித்துப் புண்ணியந் தேடினாரானால் துஷித சொர்க்கத்தில் மறுபிறவியெடுப்பார் என்றும், அப்போது மைத்ரேயரை விரைவில் காண்பதற்கு வழிபிறக்கும் என்றும் கூறினார். ஆனால், சாத்திரத் தலைவர் தம்முடைய முடிவை மாற்றிக்கொள்ளவில்லை. அந்தப் பிறவியிலேயே மைத்ரேயரைக் காண்பது அவருடைய மாற்ற இயலாக் குறிக்கோளாய் இருந்தது. எனவே, அவர் அந்த நாட்டின் தலைநகருக்குத் தெற்கிலுள்ள செங்குத்தான பாறைமீது கட்டப்பட்டிருந்த வஜ்ரபாணி கோயிலுக்குச் சென்று, 'வஜ்ரபாணி தாரணி'யை ஓதினால் அவருடைய விருப்பம் நிறைவேறும் என்று குவான்-ட்சு-ட்சைப் பூசா தெரிவித்தார். சாத்திரத் தலைவர் அந்த அறிவுரையை ஏற்றுக்கொண்டு, வஜ்ரபாணி தாரணியை ஓதிக்

கொண்டேயிருந்தார். மூன்றாண்டு சென்றபின் வஜ்ரபாணிக் கடவுள் சாத்திரத் தலைவர்முன் தோன்றி ரகசிய மந்திரம் ஒன்றை அவருக்குச் சொல்லிக்கொடுத்து, அவர் அந்தச் செங்குத்தான பாறையின்மீது இருந்த அசுர மாளிகைக்குச் சென்று தம்முடைய விண்ணப்பத்தைச் செய்யவேண்டு மென்றும், அவ்வாறு செய்தால் அந்தப் பாறை பிளந்து அவருக்கு வழிவிடும் என்றும், அதன் பின்னர் மைத்ரேயர் எப்போது வருவார் என்பது தெரிவிக்கப்படும் என்றும் சொன்னார். அவ்வாறே சாத்திரத் தலைவர் அசுர மாளிகைக்குச் சென்று தம்முடைய விண்ணப்பத்தைத் தொடங்கினார். மூன்றாண்டு சென்றபின் அவர் அந்தப் பாறையைத் தம்மிட மிருந்த மந்திரக் கடுகால் அடித்தார். உடனே அந்தப் பாறை பிளந்து அவருக்கு வழிவிட்டது. உள்ளே எண்ணிலடங்காத ஏராளமான மனிதர்கள் தங்கள் இல்லங்களை அறவே மறந்து திறந்த கண்ணை மூடாமல் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். சந்தடியின்றி உள்ளே புகுந்த சாத்திரத் தலைவர் தம்மைத் தொடர்ந்து வருமாறு அந்த மனிதர்களை வற்புறுத்தினார். ஆனால், அவரைப் பின்தொடர்வதற்குத் தேவையான மனவலிமை அவர்களுள் ஆறு பேருக்கே இருந்தது. மற்றவர்கள் அச்சத்தால் பிணிக்கப்பட்டு அங்கேயே நின்றுவிட்டார்கள்; அதற்காக அவர்கள் பின்னர் வருந்தினார்கள்.

## செ-லி-யா (சுல்யா?)

தனகடகத்திலிருந்து அவர் தென்மேற்குத் திசையில் 1,000 லீயிக்கு மேல் பயணஞ் செய்தபின் செ-லி-யா[17] என்னும் நாட்டை அடைந்தார். அந்த நாடு சுமார் 2400 லீ சுற்றள வுடையது. அதன் தலைநகரம் 10 லீயிக்கு மேல் சுற்றளவுடையது. அந்த நாட்டில் பெரும்பாலும் காடுகளே இருந்தன. அங்கு நிலையாக வாழ்ந்த மக்களின் தொகை மிகவும் சிறியது. ஆறலை கள்வர்கள் வெளிப்படையாகவே சுற்றிக்கொண்டிருந்தார்கள். அது வெப்பமான நாடு; காற்றில் ஈரப் பசை அதிகமாய் இருந்தது. அங்கு வாழ்ந்த மக்கள் தீயொழுக்கமும் மூர்க்க குணமும் உடையவர்கள். அவர்கள் சமயத் துறையில் தீர்த்தி கர்களைப் பின்பற்றியவர்கள். பௌத்த மடங்கள் இடிந்து

[17] இது கர்நூல் மாவட்டத்தில் இருந்ததென்று கன்னிங்ஹாம் கருதுகிறார். ஆனால், அது நெல்லூராய் இருக்கலாம் என்று பெர்குசன் கருதுகிறார். அது எப்படியிருந்தாலும், இது தெலுங்குச் சோட ராஜ்யத்தைக் குறிக்கிறது என்பது தெளிவு.

பாழாய்க் கிடந்தன. அவற்றுள் சிலவற்றில் மட்டும் துறவிகள் வாழ்ந்தார்கள். அந்நாட்டில் ஏராளமான தேவர் கோயில்கள் இருந்தன. திகம்பரர்கள் ஏராளமாய் இருந்தார்கள். தலைநகரை யடுத்தாற்போல, அதனுடைய தென்கிழக்குத் திசையில் அசோகத் தூபி ஒன்று இருந்தது. அங்கேதான் புத்தர்பிரான் சமயப் பிரசாரம் செய்து, அற்புதங்களை நிகழ்த்தி, தீர்த்திகர்களை வென்று, மக்களையும் தேவர்களையும் தம்முடைய மதத்திற் சேர்த்தார். நகரத்தையடுத்து அதனுடைய மேற்குப் பக்கத்தில் பழைய மடம் ஒன்று இருந்தது. அங்கேதான் உத்தர அர்ஹத்தோடு தேவபூசா சமயச் செய்திகளைப் பற்றிக் கலந்துரையாடினார். அந்த உரையாடல் பின்வருமாறு:[18]

உத்தர அர்ஹத்தின் இயற்கை மீறிய ஆற்றலையும் சாதனைகளையும் பற்றிக் கேள்விப்பட்ட தேவர் அவரைக் காணவும் பிரசாரத்திற்காக அவர் கடைப்பிடித்த முறைகளைத் தெரிந்து கொள்ளவும் நெடுந்தொலைவிலிருந்து வந்துசேர்ந்தார். எளிய வாழ்க்கையைக் கடைப்பிடித்த உத்தரருடைய அறையில் ஒரே சாய்வுக் கட்டில் இருந்தது. எனவே அவர் உதிர்ந்த இலைகளைக் குவித்து அதன்மீது அமருமாறு தேவரைக் கேட்டுக்கொண்டார். பின்னர், தேவர் தம்முடைய ஐயங்களை அர்ஹத்துக்குத் தெரிவித்தார். அவற்றை அர்ஹத் தக்க முறையில் தீர்த்து வைத்தார். பின்னர், தேவர் தம்முடைய கருத்துகளைத் தெரிவித்து மேலும் பல கேள்விகளைக் கேட்டார். அர்ஹத் அவற்றிற்கும் விடையளித்தார். இவ்வாறு ஏழுமுறை நடந்தது. சில வினாக்களுக்கு அர்ஹத்தால் விடை சொல்ல இயலவில்லை. அதனால், அவர் தேவருக்குத் தெரியாமல் துஷித சொர்க்கத்திற்குச் சென்று, அந்த வினாக்களுக்கேற்ற விடைகளை மைத்ரேயரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டார். விடைகளையும் விளக்கங்களையும் சொன்னதோடு மைத்ரேயர் நின்று விடவில்லை. தேவர் இந்தக் கல்பத்திலேயே புத்தர் ஆகப் போகிறவர் என்றும் அவ்விடத்தில் உத்தரர் பயபக்தியோடு நடக்கவேண்டும் என்றும் மைத்ரேயர் சொல்லியனுப்பினார். தாம் கேட்ட கேள்விகளுக்கு உத்தரர் அளித்த விடைகளைக்

[18] "உத்தரரையும் தேவபூசரையும் பற்றிய இந்தக் கதையை, புத்தமதத் திருத்தூதர்களைப்பற்றி யுவான் சுவாங் எழுதிவைத்துள்ள அறிவுக்குப் பொருந்தாத கட்டுக் கதைகளுள் ஒன்று என்று தள்ளிவிடலாம். எனவே, அதனைத் துருவி ஆராயவேண்டிய தேவையில்லை......... உத்தரர் ஹீனயானப் பிரிவைச் சேர்ந்தவர் என்று யுவான் சுவாங் கருதினார். அதனால், மஹாயானப் பிரிவைச் சேர்ந்தவரும் தெய்வத்தின் அருள் பெற்றவரும் ஆன தேவபூசருக்கு அவர் நிகரல்லர் என்று யுவான் சுவாங் எழுதிவைத்துள்ளார்."—Watters.

கேட்ட தேவர் அவை மைத்ரேயர் சொல்லிக் கொடுத்த விடைகள் என்பதை அறிந்துகொண்டார். அதனால் உத்தரர் தேவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, தம்முடைய இருக்கையில் தேவரை அமர்த்தி, அவரிடம் பயபக்தியுடன் நடந்துகொண்டார்.

## திராவிடம்

சுல்ய நாட்டிலிருந்து அவர் தெற்கு நோக்கிக் காடுகளின் வழியாய் ஆயிரத்தைந்நூறு ஆயிரத்தறுநூறு லீ பயணஞ் செய்தபின் இயா-லோ-பீ-டு நாட்டையடைந்தார். அந்த நாடு 6000 லீக்கு மேல் சுற்றளவுடையது. அதனுடைய தலைநகரான கான்-சிஹ்-பு-லோ 30 லீயிக்குமேல் சுற்றளவுடையது.[19] அந்த நாடு நிலவளமிக்கது. அங்குப் பூவும் கனியும் மிகுதியாய்க் கிடைத்தன. அன்றியும், அங்கு விலையுயர்ந்த மணிக்கற்களும் கிடைத்தன. அங்கு வாழ்ந்த மக்கள் வீரமிக்கவர்கள்; நம்பிக்கைக்கு உரியவர்கள்; பொது நலத்திற்கு உழைப்பவர்கள்; கல்விக்கு மதிப்புக் கொடுப்பவர்கள். அவர்களுடைய பேச்சு மொழியும் எழுத்து மொழியும் 'மைய இந்தியப்' பேச்சுமொழி எழுத்து மொழி ஆகியவற்றினின்று வேறுபட்டவை. அங்கு நூற்றுக்கு மேற்பட்ட புத்தமடங்கள் இருந்தன. அவற்றில் பத்தாயிரத்துக்கும் அதிகமான துறவிகள் வாழ்ந்தார்கள். அவர்கள் அனைவருமே ஸ்தவிரப் பிரிவைச் சேர்ந்தவர்கள். தேவர் கோயில்கள் எண்பதுக்குமேல் இருந்தன. அவற்றுள் பெரும்பாலானவை திகம்பரர்களுக்குச் சொந்தமானவை. புத்தர் அடிக்கடி அந்த நாட்டுக்கு வந்திருக்கிறார். அவ்வாறு வந்தபோது அவர் பிரசாரம் செய்து மக்களைத் தம்முடைய சமயத்திற் சேர்த்துக் கொண்ட இடங்களில் எல்லாம் அசோகர் தூபிகளை எழுப்பினார்.

தலைநகரத்தில் உயர்பதவி வகித்த அரசு ஊழியர் ஒருவருடைய புதல்வராக தர்மபாலர் பிறந்தார்.[20] அவர் இள

[19] இது காஞ்சிபுரம் என்பதில் ஐயமில்லை. அது தென்னிந்தியாவிலிருந்து இலங்கைக்குப் போகிறவர்கள் கப்பலேறவேண்டிய துறைமுகம் என்று இன்னோரிடத்தில் யுவான் சுவாங் எழுதியுள்ளார். ஆனால், நாகப்பட்டினம் என்பதற்கு மாறாக அவ்வாறு எழுதிவிட்டார் என்று கருதலாம். See Watters ii, p. 227.

[20] தர்மபால பூசர் பௌத்த நூல்களை மிகுந்த ஆர்வத்துடன் பயின்றவர்; சொல்லாக்க விளக்கம், தர்க்கம், நுண்பொருள் கோட்பாட்டியல் முதலிய துறைகளில் பல நூல்களை எழுதிப் புகழ்பெற்ற ஆசிரியர். (Watters, ii p. 228).

வயதிலேயே சிறந்த இயல்புகளைப் பெற்று விளங்கினர். நாளாக நாளாக அவருடைய அறிவுத் திறனும் ஏனைய நல்லியல்புகளும் வளர்ந்துகொண்டே போயின. அவர் உரிய பருவத்தை எய்தியதும் அரசனுடைய மகள் ஒருத்தியை அவருக்கு மணஞ்செய்து வைப்பதற்கான ஏற்பாடுகள் நடந்தன. ஆனால், தர்மபாலர் மனத்தில் இன்பத்திற்கு மாருகத் துன்பமே நிறைந்தது. அதனுல், திருமணத்திற்கு முன்னைய இரவில் அவர் புத்தர் சிலை யொன்றின் முன் அமர்ந்து முழு மனத்துடன் அவருடைய அருளை வேண்டி முறையிட்டார். அப்போது ஒரு தெய்வம் அவர்முன் தோன்றி, அவரைத் தூக்கிக்கொண்டுபோய், பலநூறு லீ தொலைவில் ஒரு மலையின் மீது இருந்த மடத்தில் விட்டது. அங்கு வாழ்ந்த துறவிகள் அவருடைய கதையைக் கேட்டவுடன், அவருடைய வேண்டுகோளுக்கிணங்கி, அவரைத் தம்முடைய கூட்டத்திற் சேர்த்துக்கொண்டார்கள். அந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட அரசனுக்கு அவர்பால் இருந்த மதிப்பும் மரியாதையும் அதிகமாயின. எனவே அவரைப் பயபக்தியுடன் நடத்தினன். தலைநகருக்கு அருகில், தென் திசையில், மிகவும் புகழ்பெற்ற ஒரு பெரிய மடம் இருந்தது. நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் வாழ்ந்த மிகச் சிறந்த அறிஞர்கள் அடிக்கடி அந்த மடத்தில் கூடினர்கள். அந்த மடத்தில் நூறடிக்கு மேல் உயர்ந்துநின்ற அசோகத் தூபி ஒன்று இருந்தது. அந்த இடத்தில் புத்தர் ஒருமுறை தீர்த்திகர்களோடு வாதிட்டு, அவர்களை வென்று, மக்கள் பலரைத் தம்முடைய மதத்திற் சேர்த்துக்கொண்டார் என்று சொல்கிருர்கள். துறைபோகிய புத்தர் நால்வர் அமர்ந்திருந்த இடங்கள் அவர்கள் உடற்பயிற்சிக்காக நடந்த பாதைகள் ஆகியவற்றின் சின்னங்கள் அந்தத் தூபிக்கு அருகில் இருந்தன.

**தர்மபாலர்**

## மோ-லோ-கூ-டா (மலைக்கூடம்)

காஞ்சி நகரிலிருந்து அவர் தெற்கு நோக்கி 3000லீயிக்கு மேல் பயணஞ் செய்தபின் மலைக்கூட . நாட்டையடைந்தார்.[21] அந்த நாடு 5000 லீயிக்குமேல் சுற்றளவுடையது. அதனுடைய தலைநகரம் 40 லீயிக்குமேல் சுற்றளவுடையது. அது நிலவளமற்ற நாடு. எங்கும் களரும் தரிசுநிலமுமே மிகுந்திருந்தன. ஆனல் கடல்முத்து வாணிகத்திற்கு அந்த நாடு மையமாய் இருந்தது.

[21] யுவான் சுவாங் காலத்தில் இருந்த பாண்டியநாடு. See *Proceedings and Transactions of the Sixth All-India Oriental Conference*, pp. 173-9.

அங்கு வெப்பம் அதிகம்; மக்கள் கறுப்புநிறம் உடையவர்கள்; இனிமையற்ற மூர்க்கர்கள்; மதத் துறையில் கலப்புக் கொள்கைகளைப் பின்பற்றியவர்கள்; ஆனால் வாணிகத்தில் கைதேர்ந்தவர்கள். அங்குப் பாழடைந்த பழைய மடங்கள் பல இருந்தன. மிகச் சிலவே நல்ல நிலையில் இருந்தன. அங்கு வாழ்ந்த துறவிகளும் சிலரே. நூற்றுக்கணக்கான தேவர் கோயில்கள் இருந்தன. பௌத்தமல்லாத பல வேறு மதப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் ஏராளமாய் இருந்தார்கள். அவர்களுள் முக்கியமாக திகம்பரர்களைச் சொல்லலாம். தலைநகருக்குக் கிழக்கில் அசோகருடைய தம்பி (டா-டீ என்னும் மகேந்திரன்) கட்டிய பழைய மடம் ஒன்று இருந்தது. ஆனால், அது இடிந்துபோயிருந்தது. கடைகாலும் ஒரு தூபியுமே எஞ்சியிருந்தன. மடத்திற்குக் கிழக்கே கட்டப்பட்டிருந்த அந்தத் தூபியின் கவிகை மாடம் மட்டும் கண்ணுக்குத் தெரிந்தது. ஏனைய பகுதிகளை மண்மூடி விட்டது. அந்த இடத்தில் புத்தர் தம்முடைய சமயக் கொள்கைகளைப் பிரசாரம் செய்து, அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தி, கணக்கற்ற மக்களைத் தம்முடைய மதத்தில் சேர்த்துக் கொண்டார். அந்த நிகழ்ச்சிகளை நினைவுகூரும் வகையில் அசோகர் அந்தத் தூபியை எழுப்பினார். நாளாகநாளாக அந்தத் தூபியினுடைய பயன்தருமாற்றலும் வளர்ந்துகொண்டே போயிற்று. அதனால் பக்தர்கள் விடுத்த வேண்டுகோள்கள் இப்போதும் நிறைவேற்றப்பட்டன.

அந்த நாட்டின் தென் கடற்கரை யோரத்தில் மோ-லோ-யா மலை (மலைய மலை) என்ற பெயருடைய மலையிருந்தது. அதில் மிக உயர்ந்த சிகரங்களும், சிமையங்களும், ஆழ்ந்த பள்ளத் தாக்குகளும், நீர் அரித்தோடிய மலையிடுக்குகளும் இருந்தன. அங்கெல்லாம் சந்தன மரம், கருப்பூர மரம் முதலிய பலவகை மரங்கள் வளர்ந்தன.[22] அந்த மலைக்குக் கிழக்கில் பு-டா-லோ-கா (பொதலக) மலையிருந்தது. அதனுடைய உயர்ந்த முடிகளில்

[22] மலய மலையைப்பற்றி இன்னும் அதிகமான விவரங்கள் பீலின் மொழி பெயர்ப்பில் இருக்கின்றன. அவற்றைக் கீழே காண்க :

'இங்குச் சந்தன மரமும் சன்-டன்-னி-போ (சந்தனேவ) மரமும் வளர்கின்றன. அவை ஏறக்குறைய ஒன்றுபோலவே தோன்றும். இரண்டாவது சொன்ன மரத்தை அடையாளங் கண்டுகொள்ள வேண்டுமானால், கடுவேனிற் காலத்தில் யாதேனும் ஒரு குன்றின்மேல் ஏறிநின்று பார்க்க வேண்டும். தொலைவில் யாதேனும் ஒரு மரத்தைப் பெரிய பெரிய பாம்புகள் சுற்றிக்கொண்டிருந்தால் அதுவே நாம் காண முயலும் மரம் என்று தெரிந்துகொள்ளலாம். அந்த மரம் இயற்கையாகவே குளிர்ச்சியாய் இருக்கிறது. வெப்பந்தாங்க முடியாத பாம்புகள் அதனைச் சுற்றிக

அருவியரித்த மலைச் சந்துகளும் செங்குத்தான நடை வழிகளும் இருந்தன. அந்த வழிகள் மிகவும் குறுகலானவை. அவை யெல்லாமே ஓர் ஒழுங்கற்ற வகையில் ஒன்றோடொன்று கலந்து பிணைந்து கிடந்தன. அந்த மலையின் உச்சியில் நன்னீர் ஏரி ஒன்று இருந்தது. அதிலிருந்து தோன்றிய ஆறு ஒன்று கடலில் கலப்பதற்கு முன்னர் இருபது முறை அந்த மலையைச் சுற்றிச் சுற்றிச் சென்றது. அந்த ஏரியின் கரையில் கல்லால் கட்டப் பட்ட தேவர் கோயில் ஒன்று இருந்தது. அந்தக் கோயிலுக்குக் குவான்-ட்சு-ட்சைப் பூசா அடிக்கடி வந்து போவது வழக்கமாய் இருந்தது. அவரைக் காண விரும்பிய பக்தர்கள் தங்களுடைய உயிரைப் பணயம் வைத்து ஆற்றையும் மலையையும் கடந்து அங்கே போகிறார்கள். அவர்களுள் ஒரு சிலரே கோயிலுக்குப் போய்ச் சேர்வதில் வெற்றியடைகிறார்கள். அடிவாரத்தில் இருந்துகொண்டே அவரைக் காண விரும்பும் பக்தர்களுக்கு அவர் சில சமயங்களில் பாசுபத தீர்த்திகராகவும் சில சமயங்களில் மகேச்வரராகவும் காட்சி தந்து, அவர்களுடைய விண்ணப்பங்களைச் செவிமடுத்து, அவற்றிற்குரிய விடைகளை அளிக்கிறார். பொதலகத்தின் வடகிழக்கில் கடற்கரையில் ஒரு நகரம் இருக்கிறது. அங்கிருந்து தென்கடலில் இருக்கின்ற செங்-கா-லோ (சிலோன்)வுக்குச் செல்வதற்குத் தென் கிழக்குத் திசையில் சுமார் 3000 லீ பயணஞ் செய்யவேண்டும் என்று உள்ளூர் மக்கள் சொல்கிறார்கள்.

[இலங்கையையும் பிற தீவுகளையும்பற்றி யுவான் சுவாங் எழுதியுள்ள குறிப்புகளில் கட்டுக் கதையும் வம்பளப்பும் நிறைந்துகிடக்கின்றன. அவை நமக்கு இப்போது பயன்படமாட்டா. எனவே, அவற்றை இங்கு

---

கொள்கின்றன. மரத்தைை அடையாளங் கண்டுகொண்டதும் அதன்மீது ஓர் அம்பை எய்துவிட்டுப் போய்விடுவார்கள். குளிர்காலம் வந்தவுடன் பாம்புகள் எல்லாம் மரத்தைவிட்டுப் போய்விடும். அப்போது அம்புக் குறியின் உதவியால் மரத்தைக் கண்டுபிடித்து அதனை வெட்டிக்கொண்டு போய்விடுவார்கள். கீ-பு-லோ (கருப்பூர) மரத்தின் அடிமரம் தேவதாரு மரத்தின் அடிமரத்தைப் போலவேயிருக்கும். ஆனால், அதனுடைய இலையும் மலரும் கனியும் வேறுபட்டவையாய் இருக்கும். வெட்டப்பட்ட பச்சை மரமும் அதில் வடிகின்ற சாறும் வாசனையற்றவை. காயக்காய மரத்தில் தோன்கின்ற வரிகள் அதனைப் பிளந்துவிடும். அப்போது மரத்தின் உள்ளே காக்காய்ப் பொன் போன்றதும் உறை பனியின் நிறமுடையதும் ஆகிய நறுமணப் பொருளைக் காணலாம்; அதுவே கருப்பூரம் எனப்படுவது. அதனைச் சீன மொழியில் லாங்-நவோ-ஹியாங் (ட்ராகனுடைய மூளையின் மணம்) என்று சொல்கிறோம்.'

எழுதாமல் விட்டுவிட்டு, அவரே நேரிற் கண்ட இடங்களைப்பற்றி எழுதியுள்ள செய்திகள் மீண்டும் தொடங்கும் இடத்திலிருந்து இப்போது நாம் மேலே செல்வோம்.]

## குங்-கன்-ஞ-பு-லோ

திராவிட நாட்டிலிருந்து அவர் வடதிசையில்[23] தம் பயணத்தைத் தொடங்கினார். போகும் வழியில் கொலையையும் கொள்ளையையும் தம் தொழிலாகக் கொண்ட ஆறலைகள்வர் நிறைந்த காடுகளும், தனியேயிருந்த ஒரு பெருநகரும், அதற்கப்பால் ஒரு சிறுநகரும் இருந்தன. அவற்றையெல்லாம் அவர் கடந்துசென்றார். திராவிட நாட்டிலிருந்து 2000 லீயிக்கு மேல் பயணஞ் செய்தபின் அவர் குங்-கின்(கன்)-ஞ-பு-லோ என்னும் நாட்டையடைந்தார். அந்த நாடு 5,000 லீயிக்குமேல் சுற்றளவுடையது.[24] அந்த நாட்டில் நூறுக்கு மேற்பட்ட மடங்கள் இருந்தன. அவற்றில் பதினாயிரத்துக்கு மேற்பட்ட துறவிகள் வாழ்ந்தார்கள். அவர்கள் இரண்டு 'ஊர்திகளையும்' சேர்ந்தவர்கள். (அதாவது, மஹாயானம் ஹீனயானம் ஆகிய இரு பிரிவுகளையும் சேர்ந்தவர்கள்.) தலைநகருக்கு அருகிலிருந்த பெரிய மடத்தில் முந்நூறு துறவிகளுக்குமேல் வாழ்ந்தார்கள். அவர்கள் அனைவருமே சிறந்த அறிஞர்கள். அந்த மடத்திலிருந்த கோயிலில் சர்வார்த்த சித்தருடைய மணிமுடிப் பாகையொன்று இருந்தது. (இளவரசர் சர்வார்த்த சித்தரே பின்னர் கௌதம புத்தர் ஆனார்.) அது ஏறக்குறைய இரண்டடி உயரமுள்ளது. அதிற் பதிக்கப்பட்டிருந்த பன்மணிகள் அதற்கு அழகூட்டின. அதனை ஒரு பேழையிலிருந்து எடுத்து அனைவரும் கண்டு வழிபடுவதற்கேற்றவாறு வெளியில் வைப்பது வழக்கம். அப்போது அது ஒளிவிட்டுத் திகழும். தலைநகருக்கு அருகிலிருந்த இன்னொரு மடத்துக் கோயிலில் மைத்ரேயரின் சிலை ஒன்று இருந்தது. சந்தனக் கட்டையால் செய்யப்பட்ட அந்தச் சிலையை உருவாக்கியவர் ச்ரோண விம்சதி கோடி என்னும் அர்ஹத் ஆவார். தலைநகருக்கு வடபுறத்தில் 'தால'மரங்கள் நிறைந்த

[23] 'வாழ்க்கை'யில் வடமேற்கு என்று எழுதப்பட்டுள்ளது.

[24] இது கொங்கணம் என்பது ஏற்புடையதாய்த் தோன்றினாலும், அதனுடைய தலைநகரைப்பற்றிக் கருத்துவேறுபாடு இருக்கிறது. Beal ii p. 253, n 40 and Watters, ii p. 238.

30 லீயிக்குமேல் சுற்றளவுடைய ஒரு வனம் இருந்தது.[25] அந்த வனத்தில், துறைபோகிய புத்தர் நால்வர் அமர்ந்திருந்த இடமும் உடல் நலம் பேணுவதற்காக நடந்த பாதையும் இருந்த பகுதியில் ஒரு தூபி இருந்தது. அதன் அருகிலேயே ச்ரோண விம்சதி கோடியின் திருச்சின்னங்கள் புதைக்கப்பட்ட இடத்தில் கட்டப் பட்ட தூபியும் இருந்தது. தலைநகருக்கு அருகிலேயே, அதனுடைய கிழக்குப் பக்கத்தில், புத்தர் செய்த சமயப் பிரசாரத்தோடு தொடர்புடைய தூபியொன்று இருந்தது. தலைநகருக்குத் தென்மேற்கில், ச்ரோண விம்சதி கோடி அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தி மக்களை பௌத்தத்திற் சேர்த்த இடத்தில் அசோகர் எழுப்பிய ஒரு தூபியும் அதன் அருகில் அந்த அர்ஹத் கட்டிய மடத்தின் இடிபாடுகளும் இருந்தன.

## மோ-ஹா-லா-சா (மஹாராஷ்டிரம்)

அங்கிருந்து அவர் தென்மேற்குத் திசையில் தம்முடைய பயணத்தைத் தொடங்கினார்.வழியெல்லாம் காடுகள் அடர்ந் திருந்தன. அவற்றில் கொடுவிலங்குகள் ஏராளமாய் இருந்தன. அன்றியும், ஆறலைகள்வர் கூட்டங் கூட்டமாகத் திரிந்தனர். அந்த இன்னல்களுக் கிடையில் அவர் இரண்டாயிரத்து நானூறு இரண்டாயிரத்து ஐந்நூறு லீ பயணஞ் செய்தபின் மோ-ஹா-லா-சா- (மோ-ஹா-லா-டா) நாட்டையடைந்தார். அந்த நாடு 6000லீ சுற்றளவுடையது. ஓர் ஆற்றின் கிழக்குப் பக்கத்தில் அமைந்திருந்த தலைநகரம் 30 லீயிக்குமேல் சுற்றளவுடையது. அந்த நாட்டு மக்கள் செருக்கும் வீரமும் மிக்கவர்கள்; நல்லது செய்கின்றவர்களிடத்தில் நன்றியுணர்வுடையவர்கள்; அல்லது செய்தவர்களைப் பழிவாங்காமல் விடமாட்டார்கள்; குறையிரப் பவர்களுக்குத் தங்களுடைய உயிரையும் கொடுப்பார்கள்; இகழ்ந் தவர்களை உயிரோடு விடமாட்டார்கள்.[26]. அவர்களுடைய

[25] இங்கே பீல் மேலும் ஒரு குறிப்பை எழுதியுள்ளார். 'இந்த மரத்தின் இலைகள் நீளமும் அகலமும் மிகுந்தவை. அவை மினுமினுவென்று ஒளிர் கின்றன. இந்தியாவின் பலவேறு பகுதிகளிலும் இந்த ஓலைகள் எழுதுவதற்குப் பயன்படுகின்றன.'

[26] பீலின் மொழிபெயர்ப்பில் இன்னுஞ் சில விவரங்கள் இருக்கின்றன. அவை பின்வருமாறு: 'அவர்கள் பழிதீர்த்துக்கொள்ள விரும்பினால் தங்களுடைய பகைவர்களுக்கு அதைப்பற்றி முன்னறிவிப்புக் கொடுத்து விடுகிறார்கள். பின்னர்ப் பகைவனும் பழிதீர்த்துக்கொள்ள விரும்புபவனும் ஒருவரையொருவர் ஈட்டியால் தாக்கிக்கொள்கின்றனர். ஒருவன் புறமுதுகிட்டு

படைத்தலைவர்கள் முன்னணியில் நின்று போர்புரிவார்கள். அவர்கள் களத்திற் புகுமுன்னர்க் குடித்துவிட்டுச் செல்வார்கள்; அவர்களுடைய போர்யானைகளுக்கும் போதை யூட்டிய பின்னரே அவற்றைக் களத்திற் செலுத்துவார்கள்.

**இரண்டாம் புலிகேசன்**

அந்த நாட்டு அரசன் தன்னுடைய படைத்தலைவர்களின் வீரத்திலும் போர் யானைகளின் வலிமையிலும் மிகுந்த நம்பிக்கை உடையவன். அதனால் அண்டை நாட்டு அரசர்களை அவன் மதிப்பதில்லை. அவன் சத்திரிய வமிசத்தைச் சேர்ந்தவன்; பு-லோ-கி-ஷி[27] என்னும் பெயருடையவன். அவனுடைய நல்லாட்சியின் புகழ் வெகு தொலைவு பரவியிருந்தது. அவனுடைய மேலாண்மையை ஏற்றுககொண்டிருந்த சிற்றரசர்கள் அவனிடத்தில் உண்மையாக நடந்து அவனுடைய ஆணைகளை நிறைவேற்றினார்கள். சிலாதித்தியன் என்ற வலிமை மிக்க அரசன் கிழக்குத் திசையிலும் மேற்குத் திசையிலும் படையெடுத்துப் பல நாடுகளை வென்றான். நெடுந் தொலைவிலிருந்த நாடுகளும் அவனுடைய மேலாண்மையை ஏற்றுக்கொண்டன. ஆனால், மோ-ஹா-லா-சா அவனுக்குப் பணிய மறுத்துவிட்டது.

மக்கள் கல்வியிற் பற்றுடையவர்கள். அவர்கள் ஏற்புடைச் சமயக் கோட்பாடுகள் புறச்சமயக் கோட்பாடுகள் ஆகியவற்றைக் கலந்து பின்பற்றினார்கள். அந்த நாட்டில் நூற்றுக்கு மேற்பட்ட பௌத்த மடங்கள் இருந்தன. அவற்றில் ஐயாயிரத்திற்கு மேற்பட்ட துறவிகள் வாழ்ந்தார்கள். அவர்கள் இரண்டு 'ஊர்திகளையும்' சேர்ந்தவர்கள். தலைநகருக்கு உள்ளேயும் வெளியேயும் 5 அசோகத் தூபிகள் இருந்தன. முன்னைய புத்தர் நால்வர் அமர்ந்திருந்த இடங்கள் அவர்கள் உடல் நலத்திற்காக நடந்த வழிகள் ஆகியவற்றைக் குறிப்பதற்காக அந்தத் தூபிகள் கட்டப்பட்டன. கருங்கல்லாலும் செங்கல்லாலும் கட்டப்பட்ட

---

ஓடினால் மற்றவன் துரத்துகிறான். ஆனால், அவன் பணிந்துபோய்விட்டால் மற்றவன் அவனைக் கொல்லமாட்டான். படைத்தலைவன் ஒருவன் போரில் தோல்வியடைந்தால், அவனை அரசன் தண்டிப்பதில்லை; அவனுக்குப் பெண்கள் அணியும் ஆடைகளைக் கொடுத்துவிடுவான். அதனால் மானக் கேடுற்ற படைத்தலைவன் தற்கொலை செய்துகொள்வான்.'. அந்தப் பழக்கம் குறைந்தது பதினோராம் நூற்றாண்டு வரையிலும் வழக்கிலிருந்தது. cf. SII. v, No. 465 *ll.* 25-26, and *Colas*-i.p. 275.

72 இரண்டாம் புலிகேசன்—சாளுக்கியன்.

இன்னும் எத்தனையோ தூபிகள் நாட்டின் பல்வேறு பாகங்களிலும் இருந்தன. தலைநகருக்குத் தெற்கில் இருந்த பழைய மடம் ஒன்றில் குவான்-ட்சு-ட்சைப் பூசாவின் சிலை ஒன்று இருந்தது. அதனை வழிபட்டவர்களுடைய வேண்டுதல்கள் வியக்கத்தக்க வகையில் கைகூடின. இந்த நாட்டின் கிழக்குப் பகுதியில் ஒன்றன்பின் ஒன்றாக உள்ள சிமையங்களையும் அடுக்கடுக்காக உள்ள சிகரங்களையும் செங்குத்தாய் உயர்ந்து நிற்கின்ற பாறைகளையும் கொண்ட மலைத்தொடர் ஒன்று இருக்கிறது. அங்கே ஒரு மடம் இருந்தது. அதனுடைய பீடம் ஓர் இருண்ட மலைச் சந்தில் இருந்தது. ஆனால், அதனுடைய உயர்ந்த கூடங்களும் அகன்ற அறைகளும் செங்குத்தான பாறையில் குடையப்பட்டிருந்தன. அதனால் அவை மலை முகட்டை ஒட்டிக் கொண்டிருந்தன. பல அடுக்குகளைக் கொண்டிருந்த அந்தக் கூடங்களுக்கும் முகப்பு மண்டபங்களுக்கும் பின்னால் உயர்ந்தோங்கி நின்ற பாறையும் முன்னால் ஆழமான மலையிடுக்கும் இருந்தன. அந்த மடத்தைக் கட்டியவர் மேற்கிந்தியாவைச் சேர்ந்த ஆச்சாரா என்பவர் ஆவார்.[28] (அவர் அந்த மடத்தைக் கட்டுவதற்கான காரணங்கள் யாவை என்பதை இந்த இடத்தில் யுவான் சுவாங் விளக்குகிறார்.[29] அந்த விளக்கத்தை அடிக்

[28] அஜந்தாக்குகைகள்; இங்குள்ள பொறிப்பு ஒன்று 'ஸ்தவிர அசலா' என்று குறிப்பிடுகிறது என்று பர்ஜஸ் கண்டுபிடித்துள்ளார். ASWI. iv. p. 135. ஆனால் 'ஆச்சாரா' என்னும் சொல்லைத்தான் சினமொழிபெயர்ப்புக் குறிக்கிறது என்று சொல்லலாம்.

[29] இதைப்பற்றிய செய்தியை வாட்டர்ஸ் எழுதாமல் விட்டுவிட்டார். ஆனால் பீல் பின்வருமாறு கூறுகிறார் :

'இந்த மடத்தை அர்ஹத் ஆச்சாரா (ஓ-செ-லோ) கட்டினார். அவர் மேற்கு இந்தியாவைச் சேர்ந்தவர். அவருடைய தாயார் இறந்துபோனார். அந்த அம்மையார் எவ்வாறு மறுபிறவி எடுத்திருக்கிறார் என்பதை அறிந்து கொள்ள விரும்பிய அர்ஹத் அந்த அம்மையார் மீண்டும் பெண்ணாகவே பிறந்து இந்த ராஜ்யத்தில் வாழ்கிறார் என்பதை அறிந்தார். அவரை அவருடைய தகுதிக்கு ஏற்ற முறையில் மதமாற்றம் செய்யவிரும்பிய அர்ஹத் இங்கு வந்து சேர்ந்தார். பின்னர், உணவை நாடி ஒரு கிராமத்திற்குச் சென்றவர் அந்த அம்மையார் பிறந்த வீட்டை யடைந்தார். சிறுமியொருத்தி அவருக்கு அன்னமிட வீட்டிற்குள்ளிருந்து வெளியே வந்தாள். அர்ஹத்தைக் கண்டதும் அவளுடைய மார்பிலிருந்து பால்சுரந்து சொட்டுச் சொட்டாக ஒழுகிற்று. அதனைக் கண்ட அவளுடைய தோழிகள் அது ஒரு தீக்குறி என்று கூறினார்கள். ஆனால், அர்ஹத அந்தப் பெண்ணின் முற்பிறவியைப்பற்றிய செய்திகளை எடுத்துரைத்தார். இவ்வாறு அந்தப் பெண் அர்ஹத் நிலையை எய்தினாள். தம்மைப் பெற்று வளர்த்து ஆளாக்கிய அந்த அம்மையார்பால் நன்றியுணர்வுகொண்ட அர்ஹத் அந்த அம்மையாருக்குத் தாம் செய்யக்கூடிய கைம்மாறாகவும் நற்செயல்களால் உண்டாகிற நன்மையைக் கருதியும் இந்தச் சங்காராமத்தைக் கட்டினார்.'

குறிப்பில் காணலாம்) மடத்திற்குள் நூறடிக்குமேல் உயரமான ஒரு கோவிலும் கோவிலுக்குள் எழுபதடிக்குமேல் உயரமான புத்தர் கற்சிலை யொன்றும் இருந்தன. அந்தச் சிலைக்குமேல் ஏழடுக்கு விதானம் ஒன்று இருந்தது. அந்த அடுக்குகள் ஒன்ருெடொன்று ஒட்டாமல் மும்மூன்றடி இடைவெளி விட்டுத் தனித்தனியே நின்றன. அவற்றைத் தாங்கிப் பிடித்துக்கொள் வதற்கேற்ற ஆதாரமும் எதுவும் இல்லை. அந்தக் கோயிலின் சுவர்கள் எல்லாவற்றிலும் போதிசத்வருடைய வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் காட்டும் சிற்பங்கள் செதுக்கப்பட் டிருந்தன. அவர் எவ்வாறு போதம் அடைந்தார் (ஞானம் பெற்ருர்), அவர் பரிநிர்வாணம் எய்தியபோது என்னென்ன சகுனங்கள் தோன்றின என்பவை போன்ற பெரியவை சிறியவை ஆகிய செய்திகள் அனைத்தையும் அந்தச் சிற்பங்கள் எடுத்துக் காட்டின. அந்த மடத்தின் வெளிவாயிலில், தெற்கு வடக்கு ஆகிய இருபுறங்களிலும், பக்கத்துக்கு ஒன்ருக இரண்டு கல் யானைகள் நின்றன. அந்த யானைகள் பிளிறும்போது நிலநடுக்கம் ஏற்படும் என்று யுவான் சுவாங் கேள்விப்பட்டார்.

## போ-லு-கா-சே-போ (பரோச்)

அங்கிருந்து அவர் மேற்குத் திசையில் [30] 1000 லீயிக்கு மேல் (சுமார் 200 மைலுக்குமேல்) பயணஞ் செய்து, நை-மோ-டே நதியைக் கடந்து, போ-லு-கா-சே-போ நாட்டையடைந்தார்.[31] அந்நாடு இரண்டாயிரத்து நானூறு இரண்டாயிரத்து ஐந்நூறு லீ சுற்றளவுடையது. அதனுடைய தலைநகரம் இருபது லீயிக்கு மேல் சுற்றளவுடையது. அந்த நாடு நிலவளமுடையதன்று. களர் மண்ணும் அதில் ஆங்காங்கே வளர்ந்த சில தாவரங்களுமே அங்குக் காணப்பட்டன. மக்கள் கடல்நீரைக் காய்ச்சி உப்பெடுத் தார்கள். கடலே அவர்களுடைய வாழ்க்கையின் ஆதாரமாய் இருந்தது. அவர்கள் இழிந்த குணமுடையவர்கள்; நம்பிக்கைக்கு உரியவர் அல்லர். அவர்கள் அறியாமையில் மூழ்கியிருந் தார்கள்.

[30] 'வாழ்க்கையில்' வடக்குத் திசையென்று சொல்லப்பட்டுள்ளது. அது மேற்கு என்பதைக் காட்டிலும் பொருத்தமாய் இருக்கிறது. Watters, ii, p. 241.

[31] பரோச்; நர்மதை நதியின் முகத்துவாரத்தில் உள்ளது; அஜந்தாவி லிருந்து 200 மைல் தொலைவில் உள்ளது. Watters, ib.

ஏற்புடைச்சமயம் புறச்சமயங்கள் ஆகியவற்றின் கலப்புக் கோட்பாடுகளை அவர்கள் பின்பற்றினார்கள். அந்த நாட்டில் பத்துக்கு மேற்பட்ட மடங்கள் இருந்தன. அவற்றில் வாழ்ந்த துறவிகளின் தொகை மூந்நூறு இருக்கும். அவர்கள் அனைவரும் மஹாயான ஸ்தவிரப் பிரிவைச் சேர்ந்தவர்கள்.

—Watters: *On Yuan Chwang's Travels in India*, ii. pp. 193-241 (cf Beal: *Buddhist Records of the Western World*, ii, pp. 204-206.)

# XV. இட்சிங்

## (அ) பயண விவரங்கள்

### 1. இட்சிங்

| | |
|---|---|
| கான்டனவிருந்து போச்சேயிக்கு = பாலம்பாங் (சுமத்ரா) | — 20 நாள் |
| போச்சேயிலிருந்து மோலோயுவுக்கு = மலயு, ஜம்பிநதியின் கரையில்; (சுமத்ராவின் கிழக்குக் கடற்கரை) | — 15 நாள் |
| மலயுவிலிருந்து கீ - ட்சாவுக்கு = கெடாரம், மலேயாத்தீப கற்பத்தின் மேற்குக்கரை | — 15 நாள் |
| கீ-ட் சாவிலிருந்து, வடக்கில் நிக்கோபார்த் தீவுக்கு (லோ-ஜென்-கூவோ, ஆடையில்லா மனிதர் வாழுமிடம்) | — 10 நாள் |
| லோ-ஜென்-கூவோவிலிருந்து தாம்ரலிப்திக்கு (ஹூக்ளி நதிக்கரையில்) வடமேற்குத் திசையில் | — $1\frac{1}{2}$ மாதம்[1] |

### 2. வூ-ஹிங்,[2] சேஹாங்- (வேறு இரண்டு பயணிகள்)

| | |
|---|---|
| சென்-வானிலிருந்து (டோன்கின்) சே-லி-போ-சேயிக்கு (பாலம்பாங்) | — 1 மாதம் |

[1] Chavannes : *Religieux Eminents*, pp. 11-21.

[2] இனி வரும் பக்கங்களில் உ, 6 என்னும் பகுதியைப் பார்க்க.

| | |
|---|---|
| சே-லி-போ-சே யிலிருந்து மோ-லோ-யு | — 15 நாள் |
| மோ-லோ-யுவிலிருந்து கீட்சாவுக்கு | — 15 நாள் |
| கீட் சாவிலிருந்து, மேற்கே, நா-கியா-போ-டன்-னு (நாகப்பட்டினம்) | — 30 நாள் |
| நாகப்பட்டினத்திலிருந்து இலங்கை | — 2 நாள்[8] |

— *Ferrand*, J.A. 11: 14, p, 51.

**குறிப்பு :** நாகப்பட்டினத்திலிருந்து இலங்கைக்குப் போவதற்கு 20 நாள் ஆகும் என்று தகசுசு எழுதியுள்ளார். (p. xlvi) அது தவறாகத்தான் இருக்கும்.

## ஆ. 1. பௌத்த குருக்கள் எவ்வாறு வரவேற்கப்படுகிறார்கள் அவர்களுக்கு எவ்வாறு விருந்தளிக்கப்படுகிறது என்னும் செய்திகள்

இந்தியாவிலும் தென்கடல் தீவுகளிலும் துறவிகளை எவ்வாறு விருந்துக்கு அழைக்கிறார்கள் என்பதை நான் சுருக்கமாய்ச் சொல்கிறேன். இந்தியாவில் விருந்தளிப்பவர் முன்னதாகவே வந்து, துறவிகளை வணங்கி, அவர்களை விருந்துக்கு அழைக்கிறார். உபவசத நாளன்று விருந்தளிப்பவர் துறவிகளிடம் 'இதுதான் நேரம்' என்று தெரிவிக்கிறார்.

**பாத்திரங்கள்**

துறவிகளுக்குத் தேவையான இருக்கைகளையும் பாத்திரங்களையும் திரட்டுவது விருந்தளிப்பவரின் வசதிக்கு ஏற்றவாறு நடைபெறுகிறது. தேவையான பொருள்களை மடத்திலிருந்தே மடத்துப் பணியாட்கள் எடுத்துக்கொண்டு போவதும் உண்டு; விருந்தளிப்பவரே அவற்றைத் திரட்டி வைப்பதும் உண்டு. செப்புப் பாத்திரங்களே பயன்படுத்தப்படுகின்றன. அவற்றை மென்மையான சாம்பலால் விளக்குகிறார்கள். ஒவ்வொரு துறவியும் ஒவ்வொரு சிறு நாற்காலியின்மீது அமர்ந்துகொள்கிறார். ஒருவர்மீது ஒருவர் படாதவாறு இடைவெளிவிட்டு நாற்காலிகள் போடப்படுகின்றன. அந்த நாற்காலிகளின் வடிவத்தை முன்னரே

[8] Chavannes : *op. cit,* pp. 144-45.

மூன்றாம் அதிகாரத்தில் விவரித்துள்ளோம்[4]. மட்பாண்டங்களைப் பயன்படுத்துவது தவறாகாது. ஆனால், அவற்றை ஒரு முறைக்குமேல் பயன்படுத்தக்கூடாது. அவற்றை ஒரு முறை பயன்படுத்திவிட்டால் உடனே அவற்றை ஒரு குழியில் எறிந்து விடவேண்டும். 'உபயோகப் படுத்திய' மட்பாண்டங்களை வைத்திருக்கக்கூடாது. (சொல்லுக்குச் சொல் நேராக மொழி பெயர்த்தால், 'கையால் தீண்டிய' மட்பாண்டங்கள் என்று மொழிபெயர்க்கவேண்டும்.) அதனால் இந்தியாவில் பிச்சையிடுகின்ற இடங்களுக்கு அருகில் (அன்ன சத்திரங்களுக்கருகில்?) சாலையோரத்தில் குவியல் குவியலாக மட்பாண்டங்கள் கிடப்பதைக் காண்கிறோம். அவற்றை யாரும் மீண்டும் பயன்படுத்துவது கிடையாது. ஆனால், சியாங் யாங்கில் (சீனா) செய்யப்படுபவை போன்ற (உயர்தர) மட்பாண்டங்களை மீண்டும் மீண்டும் பயன்படுத்தலாம். தூக்கியெறிந்து விட்டாலும், மீண்டும் அவற்றைத் தேடியெடுத்து அழுக்கு நீக்கிப் பயன்படுத்தலாம். தொடக்கத்தில் இந்தியாவில் பீங்கான் பாத்திரங்களும், பித்தளை மெருகிட்ட பாத்திரங்களும் இல்லை. இனாமல் பூசிய பீங்கான் பாத்திரங்கள் துப்புரவானவை என்பதில் ஐயமில்லை. இனாமல் பூசிய பொருள்களைச் சில சமயங்களில் வெளிநாட்டு வணிகர்கள் இந்தியாவுக்குக் கொண்டு வருகிறார்கள். தென்கடல் தீவுகளில் வாழ்கின்ற மக்கள் இனாமல் பூசிய பாத்திரங்களை உண்கலங்களாய்ப் பயன்படுத்துவதில்லை. அவற்றில் இட்ட உணவில் எண்ணெய் போன்ற ஒரு வாசனை வீசுகிறது. ஆனால், அவை புதுமை குலையாமல் இருக்கும்போது சுத்தமான சாம்பலால் அவற்றை விளக்கி, எண்ணெய் வாசனையை நீக்கிவிட்டு, அவர்கள் அந்தக் கலங்களைப் பயன்படுத்துகிறார்கள். மரப்பாத்திரங்களை யாரும் இங்கே உண்கலங்களாய்ப் பயன்படுத்துவதில்லை. ஆனால், அவை புதியவையானால், ஒரே ஒருமுறை அவற்றைப் பயன்படுத்தலாம். மீண்டும் ஒருமுறை பயன்படுத்துவது கூடாது என்று 'வினயம்' விதிக்கிறது.

விருந்தளிப்பவருடைய வீட்டிலுள்ள உணவுக் கூடத்தின்மீது சாணம் தெளித்து, சிறு நாற்காலிகளைச் சிறிது சிறிது இடைவெளிவிட்டு வரிசையாகப் போட்டு, சுத்தமான ஜாடி

[4] இந்தியாவில் துறவிகள் உண்பதற்கு முன்னால் கைகால்களைக் கழுவிக் கொண்டு சிறுசிறு தனித்தனி நாற்காலிகளில் அமர்ந்துகொள்கிறார்கள். அந்த நாற்காலிகள் சுமார் 7 அங்குல உயரமுடையவை. ஓரடி நீளமும் ஓரடி அகலமும் உள்ள மேற்பகுதி பிரம்புப் பின்னல் வேலைப்பாடு பெற்றது. நாற்காலியின் கால்கள் உருண்டையானவை. மொத்தத்தில் அந்த நாற்காலிகள் கனமானவையல்ல'. —Chapter iii, p. 22.

(பானை?) ஒன்றில் நீரை நிரப்பிவைக்கிறார்கள். உணவுக் கூடத்தை அடைந்தவுடன் துறவிகள் தங்கள் மேலங்கியை அவிழ்த்துவிடுகிறார்கள். ஒவ்வொருவர் முன்னும் ஒவ்வொரு ஜாடியில் நன்னீர் வைக்கப்படுகிறது. அதனை அவர்கள் சோதனை செய்து, நீரில் பூச்சியெதுவும் இல்லையென்று உறுதி செய்த பின்னர், தங்களுடைய கால்களைக் கழுவிக்கொள்கிறார்கள்; அதற்குப் பிறகு அவர்கள் தங்களுக்கெனப் போடப்பட்ட சிறு நாற்காலிகளில் அமர்கிறார்கள். பின்னர்ச் சிறிது நேரம் அவர்கள் இளைப்பாறுகிறார்கள். பகலவன் ஏறக்குறைய வானத்தின் உச்சிக்கு வந்துவிட்டான் என்பதைத் தெரிந்துகொண்டவுடன், விருந்தளிப்பவர் "இதுதான் நேரம்" என்று சொல்கிறார். உடனே துறவிகள் தங்களுடைய மேலங்கியின் இரு நுனிகளையும் ஒன்றாய்ச் சேர்த்து மடித்து முன்புறம் கட்டிக் கொள்கிறார்கள். அதன்பின் அவர்கள் தங்களுடைய ஆடையின் வலப்புறக் கீழ் விளிம்பைத் தூக்கி இடுப்புக் கச்சையில் இடப்புறம் பொருத்திக் கொள்கிறார்கள். பிறகு அவர்கள் பயற்று மாவாலோ மண்துகளாலோ தங்களுடைய கைகளைத் தேய்த்துக் கழுவுகிறார்கள். கைகழுவுவதற்கு விருந்தளிப்பவர் நீரை வார்ப்பார். இன்றேல் துறவிகளே தங்களுடைய குண்டிகை (ஜாடி)களில் உள்ள நீரைச் சொரிந்து கைகழுவிக் கொள்வார்கள். விருந்தளிப்பவர் நீர் வார்க்கிறாரா அல்லது துறவிகளே நீரை ஊற்றிக் கொள்கிறார்களா என்பது துறவிகளின் விருப்பத்தையும் வசதியையும் பொறுத்தது. பின்னர் அவர்கள் தங்களுடைய இருக்கைகளுக்குத் திரும்புகிறார்கள். அதன்பின் விருந்தினர் ஒவ்வொருவருக்கும் உண்கலங்கள் தரப்படுகின்றன. அவற்றை அவர்கள் சிறிதளவு நீர்விட்டுக் கழுவிக் கொள்கிறார்கள். அதிக நீர்விட்டால் அது கீழே சிந்திவிடுமன்றோ? உண்ணத் தொடங்கு முன் பரம்பொருள் வாழ்த்துச் சொல்லும் வழக்கம் இங்கு இல்லை. இதற்குள் விருந்தளிப்பவர் தம் கைகால்களைக் கழுவிக்கொண்டு வந்து, துறவிகள் அமர்ந்திருக்கும் வரிசைகளுள் முன்வரிசையில் உள்ள புனிதர்களுக்கு (அர்ஹத்துகளின் உருவங்களுக்கு) படையல் போட்டுவிட்டு, துறவிகளுக்கு உணவு படைக்கிறார். கடைசி வரிசையில் இருக்கும் ஹாரித்தித் தாய்க்கும் உணவு படைக்கப்படுகிறது.

கைகால் கழுவுதல்

உணவு படைக்கும் முறை பின்வருமாறு: முதலில் பெருவிரல் அளவுள்ள இஞ்சித் துண்டம் ஒன்றோ இரண்டோ ஒவ்வொருவருக்கும் அளிக்கப்படுகிறது. அத்துடன் ஒரு கரண்டியோ அரைக் கரண்டியோ உப்பும் வைக்கப்படுகிறது.

இவ்விரு பொருள்களையும் ஒரு சிறிய இலையில் இடுகிறார்கள். உப்பு வைப்பவன் கூப்பிய கரங்களுடன் தலைமைத் துறவியின் முன் மண்டியிட்டு, 'சம்பிராகதம்' என்று சொல்கிறான். இதனை 'நல்வரவு, என்று மொழிபெயர்க்கலாம். அதன்பின் தலைமைத் துறவி 'அனைவர்க்கும் சமமாக உணவு படைக்க' என்று சொல்கிறார்.

உணவு படைப்பவர்கள், வரிசையாய்க் கால்களை வைத்துக் கொண்டு அமர்ந்திருக்கும் துறவிகளின் முன்னால் நின்று, தலை தாழ்த்தி அவர்களைப் பணிவுடன் வணங்கிய பின்னர், தங்கள் கையிலுள்ள உணவைப் படைக்கிறார்கள். கையில் தட்டு, மாவடை, பழம் ஆகியவற்றை வைத்திருப்பவர்கள் துறவியின் கைக்குமேல் ஒரு சாண் உயரத்திலிருந்து அவற்றைப் படைக்க வேண்டும். ஏனைய பண்டங்களைப் படைக்கும் போது, துறவியின் கைக்குமேல் இரண்டோரங்குல உயரத்தி லிருந்து படைக்க வேண்டும். வேறு வகையில் படைக்கப்படும் பண்டங்களைத் துறவிகள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். உணவு படைத்தவுடனே, எல்லாருக்கும் சமமாகப் படைத்தாகி விட்டதா என்பதைப் பார்க்காமலே துறவிகள் உண்ணத் தொடங்கிவிடுகிறார்கள்.

அனைவர்க்கும் சமமாக உணவு படைக்கப்பட்டுவிட்டதா என்று தெரிந்துகொள்ளும் வரையில் உண்ணாமல் இருக்க வேண்டும் என்பது சரியான கருத்தன்று; உண்ட பின்னர் ஒருவர் தம்முடைய விருப்பம் போல நடக்கலாம் என்பதும் புத்தருடைய போதனைக்கு உடன்பாடன்று.

அடுத்து, அரிசியும் பருப்பும் கலந்து வேகவைத்த கஞ்சி போன்ற பண்டத்தோடு சுவையூட்டும் வெண்ணெய் கலந்த காரமான சாற்றை ஊற்றுகிறார்கள். அவற்றையெல்லாம் கைவிரல்களால் கலந்து உண்பது வழக்கம். அவ்வாறு கலப் பதற்கும் உண்பதற்கும் வலக்கையையே பயன்படுத்துகிறார்கள். உணவையெடுத்து வாயில் போடும்போது வலக்கையை வயிற்றின் நடுப்பகுதிக்கு மேல் உயர்த்துவதில்லை. இப்போது மாவடையை யும் பழங்களையும் சிறிது நெய்யையும் சர்க்கரையையும் படைக்கிறார்கள். உண்ணும்போது நீர் வேட்கை ஏற்பட்டால் குளிர்ந்த நீரைக் குடிக்கிறார்கள். வேனிற்காலத்தில் மட்டுமன்றிக் குளிர்காலத்திலும் தண்ணீரையே குடிக்கிறார்கள் (வெந்நீரை

யன்று). துறவிகள் விருந்து நாட்களில் மட்டுமன்றிச் சாதாரண நாட்களிலும் உணவருந்தும் முறையை இதுவரையில் விவரித்தேன்.

—Takakusu, *I-tsing* pp. 35–40.

## 2. உணவருந்தப் பயன்படும் குச்சியிணை

மேற்கு நாடுகளில், உண்பதற்கு மக்கள் தங்கள் வலக் கையையே பயன்படுத்துகிறார்கள். ஆனால், நோய்வாய்ப் பட்டாலும் வேறு காரணம் யாதேனும் இருந்தாலும் அவர்கள் கரண்டியைப் பயன்படுத்தலாம். சீனாவில் ஒரு கையால் உண வெடுத்து உண்பதற்குப் பயன்படும் குச்சியிணை இந்தியாவின் ஐந்து பகுதிகளுள் எங்குமே வழக்கில் இல்லை. கோட்பாட்டுக் குழுக்கள் நான்கின் வினயத்திலும் (நிகாயம்) குச்சிகளைப் பற்றிய குறிப்பு இல்லை. சீனாவில் மட்டுமே அவை வழக்கில் இருக் கின்றன. பொது மக்கள் பழைய வழக்கப்படி குச்சிகளைப் பயன் படுத்தி உணவருந்துகிறார்கள். துறவிகளோவெனில், தங் களுடைய விருப்பதிற்கு ஏற்றவாறு நடக்கிறார்கள். சிலர் குச்சிகளைப் பயன்படுத்துகின்றனர்; சிலர் அவற்றைப் பயன் படுத்துவதில்லை. குச்சிகளைப் பயன்படுத்தலாம் என்பதோ கூடாது என்பதோ எங்கும் சொல்லப்படவில்லை. குச்சிகளைத் துறவிகள் பயன்படுத்தினால் அதைப் பற்றிப் பேசுவதும் இல்லை, முணுமுணுப்பதும் இல்லை. எனவே, இந்த விஷயத்திற்கு நாம் முக்கியத்துவம் கொடுக்காமல், 'சுருங்கிய போதனை'யின்படி நடப்பதுதான் சரி.

சீனாவில் துறவிகள் அவற்றைப் பயன்படுத்தலாம். அவ்வாறு செய்யக்கூடாது என்று நாம் கட்டாயப்படுத்தினால், சிலர் நகைப்பர், சிலர் குறை கூறுவர்.

இந்தியாவில் அவற்றைப் பயன்படுத்தக் கூடாது. இதுவே 'சுருங்கிய போதனை'யின் (சம்சிப்த வினயத்தின்) கருத்து.

—*Op. cit.* p. 90.

## இ. பலவேறு நாடுகளில் மக்கள் அணிந்துகொள்ளும் ஆடைகள்

நாம் சீன உடைகளை அணிந்துகொண்டு இந்தியாவுக்கு வந்தால் மக்கள் நம்மைக் கண்டு நகைக்கிறார்கள். அது நமக்குப்

பெரிய மானக்கேடாய் இருக்கிறது. அதனால், நாம் அந்த உடைகளைக் கிழித்து வேறு பல வகைகளில் பயன்படுத்திக் கொள்கிறோம். அந்த உடைகள் இந்தியாவில் சட்டத்திற்கு முரணானவை. இந்த விஷயத்தை நான் விளக்காமற்போனால் உண்மைநிலை யாருக்கும் தெரியாமற்போகும். நான் உண்மையை ஒளிக்காமற் பேசவேண்டும் என்றுதான் நினைக்கிறேன். ஆனால், அதனைக் கேட்பவர்கள் சினமடைவார்களோ என்று அஞ்சுகிறேன். அதனால், தாழ்மையான என் எண்ணங்களை நான் வெளியே சொல்வதில்லை.' ஆனாலும், நான் எங்கே சென்றாலும் எதைச் செய்தாலும் அவ்வெண்ணங்கள் என் மனத்தைவிட்டு அகல்வதில்லை.

மக்கள் அணிந்துகொள்ள வேண்டிய ஆடைகளைப் பற்றிய விதிகளை அறிஞர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இந்தியாவிலுள்ள பொதுமக்களுள் அரசு அலுவலர்களும் உயர்வகுப்பினரும் மென்மையான வெள்ளாடைகள் இரண்டை அணிந்துகொள்கிறார்கள். ஏழை மக்களும் தாழ்ந்த வகுப்பினரும் ஒரே ஒரு துணியை மட்டும் அணிந்துகொள்கிறார்கள். ஆனால், வீடுவாசலற்ற துறவிகளோவெனில், மூன்று ஆடைகளையும் ஆறு இன்றியமையாப் பொருள்களையும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள், இன்னும் அதிகமான பொருள்கள் வேண்டுமென்று விரும்புகின்ற துறவி (இட்சிங்கின் வாசகத்தைச் சொல்லுக்குச் சொல் நேராய் மொழிபெயர்ப்பதாயிருந்தால், சுகபோக வாழ்க்கையை விரும்புகின்ற துறவி என்று மொழி பெயர்க்கவேண்டும்.) பதின்மூன்று தேவைப் பொருள்களையும்[5] வைத்துக்கொள்ளலாம். சீனாவில் துறவிகள் இரண்டு கைகளையோ ஒரு முதுகையோ உடைய அங்கியை

[5] வேறோரிடத்தில் இட்சிங் பின்வருமாறு எழுதுகிறார்:

"இன்றியமையாப் பொருள்கள் ஆறனையும் தேவைப் பொருள்கள் பதின்மூன்றனையும் பற்றிக் கண்டிப்பான விதிகள் இருக்கின்றன. அவற்றை வினயம் நன்றாக விளக்குகிறது. இன்றியமையாப் பொருள்கள் ஆறும் கீழே தரப்படுகின்றன.

(1) சங்காதி (இரட்டையங்கி)

(2) உத்தராசங்கம் (மேலங்கி)

(3) அந்தர்வாசம் (உள்ளங்கி)

மேலே சொன்ன மூன்றையும் சீவரம் என்று சொல்கிறார்கள். வட பகுதிகளில் அவற்றைக் காஷாயம் என்று சொல்கிறார்கள். அவற்றின் வண்ணத்தின் அடிப்படையில் அந்தப் பெயர் வந்தது. ஆனால், அது கலைச் சொல்லன்று. வினயத்தில் அப்பெயர் இல்லை.

அணியக்கூடாது என்பது விதி. ஆனால், சீனாவிலுள்ள துறவிகள் இந்தியப் பழக்கத்தைப் பின்பற்றுவதாகச் சொல்லிக் கொண்டாலும், உண்மையில் தங்கள் நாட்டுப் பழக்கத்தையே பின்பற்றுகிறார்கள். இப்போது ஜம்புத் தீவிலும் அதற்கு அப்பாலுள்ள தீவுகளிலும் வாழ்கின்ற மக்களையும் அவர்கள் அணிகின்ற ஆடைகளையும் ஓரளவு வர்ணிக்கின்றேன். மஹா போதிக்குக் கிழக்கே லின்—ஈ (சம்பா) வரையிலும் இருபது நாடுகள் இருக்கின்றன. அவை குவான்-சூ (அன்னும்) என்னும் நாட்டின் தெற்கெல்லை வரையிலும் பரவியுள்ளன. நாம் தென் மேற்கே சென்றால் கடற்கரையை அடைகிறோம்; வடக்கே காச்மீரா அதனுடைய எல்லையாய் இருக்கிறது. தென்கடலில் பத்துக்கும் அதிகமான நாடுகள் (தீவுகள்) இருக்கின்றன. அவற்றுடன் சிம்ஹளத் தீவையும் (சிலான்) சேர்த்துக்கொள்ள வேண்டும். இந்த நாடுகள் அனைத்திலும் மக்கள் இருதுணிகளை (வடமொழியில் கம்பளம்) அணிந்துகொள்கிறார்கள். அவை போதுமான அகலமும் எட்டடி நீளமும் உடையவை. அவற்றை

---

(4) பாத்திரம் (கிண்ணம்)

(5) நிசீதனம் (இருப்பதற்கும் கிடப்பதற்கும் பயன்படும் பொருள்)

(6) பரிச்ராவணம் (நீரை வடிகட்டிப் பயன்படும் பொருள்)

துறவுபூண விரும்புபவருக்கு மேலே சொன்ன ஆறு இன்றியமையாப் பொருள்களையும் அளிக்கவேண்டும்.

பதின்மூன்று தேவைப் பொருள்கள் பின்வருவன :

(1) சங்காதி (இரட்டையங்கி)

(2) உத்தராசங்கம் (மேலங்கி)

(3) அந்தர்வாசம் (உள்ளங்கி)

(4) நிசீதனம் (அமர்வதற்கும் படுப்பதற்கும் பயன்படும் பொருள்—பாய்).

(5) நிவாசனம் (கீழங்கி)

(6) பிரதி நிவாசனம் (இரண்டாம் கீழங்கி)

(8) பிரதி சங்கட்சிகம் (இரண்டாம் சங்கட்சிகம்)

(9) காயப்ரோஞ்சனம் (மேல் துவட்டிக்கொள்ளப் பயன்படும் துண்டு-துவாலை)

(10) முகப்ரோஞ்சனம் (முகந்துடைக்குந்துண்டு)

(11) கேச ப்ரதிக்ரஹம் (மழித்தலின்போது பயன்படும் துண்டு)

(12) கண்டு ப்ரதிச் சாதனம் (சிரங்கை மூடிக்கொள்ளப் பயன்படும் துண்டு)

(13) பைஷஜபரிஷ்காரச் சீவரம்—(அவசியம் நேரும்போது மருந்து வாங்கப் பயன்படும் துணி.—மருந்தை வடிகட்டப் பயன்படும் துணி என்பது இன்னும் பொருத்தமாயிருக்கும்.)

அவர்கள் வெட்டுவதும் இல்லை, தைப்பதும் இல்லை. எனவே அவற்றிற்குக் கச்சையும் இல்லை. அவற்றை அவர்கள் தங்களுடைய உடலின் கீழ்ப்பாகத்தை மறைப்பதற்காக அப்படியே இடுப்பைச் சுற்றிக் கட்டிக்கொள்கிறார்கள்.

இந்தியாவேயன்றிப் பரசருடைய (பாரசீகருடைய) நாடும் தஜிகருடைய (பொதுவாக அரேபியர் என்று கொள்ளலாம்) நாடும் இருக்கின்றன. அந்த நாடுகளில் வாழ்கின்ற மக்கள் மேல் சட்டையும் (ஷர்ட்) கால்சட்டையும் (ட்ரௌசர்ஸ்) அணிந்து கொள்கிறார்கள். ஆடையில்லா மக்களுடைய நாட்டில் (நிக்கோபார்த் தீவுகளில்) வாழ்கின்றவர்கள் ஆடையே அணிவதில்லை. ஆண்களேயன்றிப் பெண்களும் பிறந்த மேனியாகவே இருக்கிறார்கள். காச்மீராமுதல் சுலிபோன்ற மங்கோலிய நாடுகளிலும், திபெத்திலும், துருக்கிய இன மக்கள் வாழ்கின்ற நாட்டிலும் மக்களுடைய பழக்கவழக்கங்கள் பெரிதும் ஒத்திருக்கின்றன. இந்த நாடுகளைச் சேர்ந்த மக்கள் வட மொழியில் கம்பளம் என்று சொல்லப்படுகின்ற மூடுதுணி எதனையும் அணிவதில்லை. அவர்கள் கம்பளியையும் தோலையும் எவ்வளவு இயலுமோ அவ்வளவு அதிகமாய் அணிகிறார்கள். அங்கெல்லாம் கர்ப்பாசா (பருத்தி) துணி மிகவும் குறைவாய்க் காணப்படுகிறது. பருத்திநூல் துணியை அணிபவர்களை எப்போதோ ஒருமுறை காண்கிறோம். இந்த நாடுகளெல்லாம் குளிர் மிகுந்த நாடுகள். ஆதலால், இங்கு வாழும் மக்கள் கால் சட்டையையும் மேல்சட்டையையும் எப்போதும் அணிந்து கொள்கிறார்கள். மேலே சொன்ன மக்களுள் பரசர்களும், ஆடையில்லா மக்களும், திபேத்தியர்களும்,[6] துருக்கிய இன மக்களும் புத்த மதத்தைச் சேராதவர்கள். ஏனைய நாடுகளில் புத்தமதம் இருந்தது, இன்னும் இருக்கிறது. கால்சட்டையும் மேல்சட்டையும் வழக்கிலுள்ள பகுதிகளில் வாழும் மக்கள் உடல் துப்புரவைப் பற்றிக் கவலை கொள்வதில்லை. அதனால்,

[6] புத்தமதம் எவ்வாறு திபெததில் பரவியது என்பதைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியவில்லை. கி.பி. 632இல் திபெத்தில் ஆட்சி செய்த அரசன் புத்தமத நூல்களைத் திரட்டிக்கொண்டு போவதற்காக இந்தியாவுக்கு ஒரு தூதனை அனுப்பினான். கி.பி. 671ஆம் ஆண்டிற்கும் கி.பி. 695ஆம் ஆண்டிற்கும் இடையில் இந்தியாவில இருந்த இட்சிங் பரசர்களும் திபேத்தியர்களும் புத்தமதத்தைத் தழுவவில்லையென்று சொல்கிறார். ஆனால், யுவான் சுவாங்கின் காலத்திலேயே பரசர்களுட் சிலர் புத்த மதத்திற் சேர்ந்திருந்தார்கள் என்பதையும் (See Hiuen Thsang under Persia) திபெத்திலும் புத்தமதம் பரவியிருந்தது என்பதையும் நாம் அறிவோம். —தகுசு.

இந்தியாவின் ஐந்து பகுதிகளிலும் வாழ்கின்ற மக்கள் தங்களுடைய தூய்மையையும் உயர்வையும் எண்ணிப் பெருமைப் படுகிறார்கள்.

—Takakusu: *I-tsing*, pp. 67-8.

## ஈ. பார்ப்பனர்

இந்தியாவின் ஐந்து பகுதிகளிலும் பார்ப்பனர் மிகுந்த மதிப்பிற்குரிய சாதியினர் என்று கருதப்படுகின்றனர். அவர்கள் ஓர் இடத்தில் கூடும்போது மற்ற மூன்று சாதியினருடன் சேர்ந்து பழகுவதில்லை. கலப்பு வகுப்புகளைச் சேர்ந்த மக்களுடன் அவர்களுக்குள்ள தொடர்பு இன்னும் குறைவானது. நான்கு வேதங்களே அவர்கள் போற்றுகின்ற திருமறை நூல்கள். அவற்றில் ஒரு லட்சம் பாடல்கள் இருக்கின்றன. வேதம் என்னும் சொல்லைச் சீன எழுத்தில் 'வெய்-ட்-ஓ' என்று இது வரையிலும் பிழையாக எழுதிவந்தார்கள். அந்தச் சொல்லுக்கு 'போதம்' என்றோ 'தெளிந்த அறிவு' என்றோ பொருள் கொள்ளலாம். வேதங்கள் ஒருவர் சொல்ல மற்றவர் கேட்கும் வாய்மொழியாகவே இன்றுவரையிலும் இருந்து வந்திருக்கின்றன. அவை காகிதத்திலோ ஓலையிலோ இதுவரையிலும் எழுதப்படவில்லை. லட்சம் பாடல்களையும் மனப்பாடஞ் செய்து ஓதக்கூடிய அறிவாற்றல் பெற்ற பார்ப்பனர் ஒவ்வொரு தலைமுறையிலும் சிலர் இருக்கின்றனர். அறிவுத் திறனை வளர்த்துக் கொள்வதற்கு இந்தியா வழிவழியாகக் கடைப்பிடிக்கும் முறைகள் இரண்டு. மீண்டும் மீண்டும் மனப்பாடம் செய்வதன் மூலம் அறிவுத்திறனை வளர்த்துக்கொள்வது முதலாம் முறை. நெடுங் கணக்கின் மூலம் கருத்துக்களை மனத்தில் ஊன்ற வைப்பது இரண்டாம் முறை. இந்த வழியில் பத்து நாளோ ஒரு திங்களோ முயலும் மாணவன் தன்னுடைய கருத்துகள் நீரூற்றைப்போல மேலோங்கி வருவதை உணர்வான். அதற்குப் பின் அவன் எந்தச் செய்யுளையும் ஒருமுறை கேட்டாற் போதும்; அது அவனுக்கு மனப்பாடமாகிவிடும். இரண்டாம் முறை கேட்க வேண்டிய தேவையேயில்லை. இதனை ஒரு கட்டுக் கதை என்று யாரும் நினைக்கவேண்டா. அத்தகைய மனிதர்களை நானே பார்த்திருக்கிறேன்.

—Takakusu: *I–tsing*, pp. 182-183.

## உ. இட்சிங்கின் காலத்தில் வந்த ஆறு பயணிகள்

1. பின்னர் மிங்-யுவன் சிங்கத்தின் மகனுடைய தீவுக்கு (சிங்களத்துக்கு) வந்தார். அவரை அந்நாட்டு அரசன் மிகுந்த மரியாதையுடன் நடத்தினான். ஒருநாள் அவர் தூபிக்குள் இரகசியமாய் நுழைந்து 'போ'வின் (புத்தரின்) பல்லைத் திருடிக் கொண்டார். அதனைத் தம்முடைய நாட்டுக்கு எடுத்துக் கொண்டு போனால், அங்கு அதனை வழிபடுவதற்குப் பல வாய்ப்புகள் கிடைக்கும் என்று கருதி அவ்வாறே செய்ய முயன்றார். ஆனால், நியாயம் வென்றது; அந்தக் கள்ளச் செயல் கண்டுபிடிக்கப்பட்டது. அந்தப் பல்லை அவர் திருப்பித் தரவேண்டியதாயிற்று. அதனால், அவருக்கு நேர்ந்த மானக்கேடு மிகப்பெரியது.

அதற்கப்புறம் அவர் தென்னிந்தியாவுக்குச் சென்றார். இலங்கையைச் சேர்ந்த மனிதன் ஒருவன் சொன்ன ஆலோசனையைக் கேட்டு, அவர் மஹாபோதி மடம் அமைந்திருக்கும் மைய இடத்திற்குச் சென்று இளைப்பாற விரும்பினார் என்று நான் கேள்விப்பட்டேன். ஆனால், அதற்குப்பின் அவரைப்பற்றிய செய்தியொன்றும் தெரியவில்லை. வழியில் அவர் இறந்து போயிருக்கக்கூடும். அவருடைய வயது என்ன என்பதும் தெரியவில்லை.

புத்தருடைய திருப்பல்லைச் சிங்கள மக்கள் மிகுந்த கவனத்துடன் பாதுகாத்து வருகிறார்கள். அதனை அவர்கள் ஓர் உயர்ந்த தூபிக்குள் வைத்து அந்தத் தூபியின் கதவுகள் பலவற்றுக்கும் எளிதில் திறக்க இயலாத சிக்கலான பூட்டுப் போட்டு வைத்திருக்கிறார்கள். அந்தப் பூட்டுகளின்மீது ஐந்து அரசு அலுவலர்கள் தத்தம் அடையாள முத்திரைகளை வைக்கிறார்கள். கதவுகளுள் யாதேனும் ஒன்றைத் திறந்தால் நகர் முழுவதிலும் அதனையடுத்துள்ள புறநகர்களிலும் கேட்கக்கூடிய பேரொலி ஒன்று எழுந்து முழங்குகின்றது. ஒவ்வொரு நாளும் அவர்கள் அங்கே சென்று அந்தப் பல்லின் மீதும் அதனைச் சுற்றிலும் நறுமலர் தூவி வழிபடுகிறார்கள். யாரேனும் ஒருவர் உண்மையான பக்தியுடனும் நம்பிக்கையுடனும் திருப்பல்லை வழிபட்டுக் குறையிரந்தால், கூடியிருப்பவர் அனைவரும் காணுமாறு மலர்களுக்குமேல் திருப்பல் தோன்றும். இல்லாவிட்டால் அதிலிருந்து இயற்கை மீறிய பேரொளி தோன்றும்.

திருப்பல்லைப்பற்றி இருவேறு வகைப்பட்ட மரபுவழிச் செய்திகள் கூறப்படுகின்றன. ஒன்று, பல் அந்தத் தீவைவிட்டுப்

போய்விட்டால், அந்த நாடு முழுவதையும் அரக்கர் கைப்பற்றிக் கொள்வர்; அதனுற் பல் அவ்வளவு கவனமாய்ப் பாதுகாக்கப் படுகிறது. இரண்டு, திருப்பல் சீனுவுக்குப்போய்ச் சேரவேண்டும். சீனர்களுடைய புனிதப் பிரார்த்தனை தான் எவ்வளவோ தொலைவி லுள்ள சிங்களத் தீவிலிருந்து அந்தப் பல் தானகவே சீனுவுக்குச் செல்லுமாறு செய்யத்தக்க ஆற்றலுடையது. நமக்கு நம்பிக்கை யிருந்தால் அந்தப் பல் நம் நாட்டுக்கு வந்து சேரும். அப்படி யிருக்கும்போது, தான் செய்யக் கடவதல்லாத ஒரு வேலையை வன்முறையில் செய்து முடிக்க விரும்பிய ஒருவனுல் அந்த நோக்கத்தை நிறைவேற்ற முடியுமா?

*Religieux Eminents* par I-tsing, Traudit en Francais par **Edouard Chavannes, pp. 54-6.**

2. வணக்கத்திற்குரிய ஈ-லாங் பலவகைக் கோட்பாடு களையும் அறிந்துகொள்ளவேண்டும் என்னும் நோக்கத்துடன் தம் தம்பியுடன் சிங்களத்திற்குப் புறப்பட்டார். சிங்களத்தில், அவர் புத்தர்பிரான் திருப்பல்லின் முன்னர் விழுந்து வணங்கிய பின்னர்ச் சிறிது சிறிதாக மேற்கு நாடுகளிற் பயணஞ் செய்தார்.

எனக்குக் கிடைத்த செய்திகள் அத்தன்மையவாய் இருந்தன. ஆனல் இப்போது அவர் எங்கிருக்கிறூர் என்பது எனக்குத் தெரியாது. சிங்களத்தில் நான் அவரைக் காணவில்லை. மைய இந்தியாவில் நான் அவரைப்பற்றிக் கேள்விப்படவில்லை. அவரு டைய ஆன்மா வேறு பிறவிகளை எடுத்திருக்கக்கூடும். அவருக்கு நாற்பது வயதுக்கு மேல் இருக்கும்.

*Op. cit.* pp.58-59.

3. டா-ட்செங்-டெங் : அவருடைய பெயர் வடமொழியில் மோ-ஹோ-யே-நா-போ-டி-ஈ-போ (மஹாயான ப்ரதீபர்) என்று எழுதப்படுகிறது. அவர் த்வாரவதியில் பல்லாண்டு தங்கியிருந்து, போவின் (புத்தரின்) சிலைகளையும், சாத்திரங்களையும், சூத்திரங் களையும் எடுத்துக்கொண்டு, தென்கடலைக் கடந்து சிங்கள ராஜ்யத்திற்குச் சென்றூர். அங்கே அவர் போவின் திருப்பல்லை வழிபட்டார். இயற்கை மீறிய வியத்தகு காட்சிகள் எல்லா வற்றையும் அவர் கண்டார். பின்னர், அவர் தென்னிந்தியாவைக் கடந்து கிழக்கிந்தியாவுக்குச் சென்று தன்-மோனே-லீ-டி (தாம்ரலிப்தி) நாட்டில் தங்கினூர்.

*Op. cit.* p. 71

4. டவோ-வின் தென்னிந்தியாவில் சுற்றுப்பயணஞ் செய்து இருண்ட கோட்பாடுகளைப் பற்றிய செய்திகளைத் திரட்டினார்.

*Op. cit.* p. 101.

5. செங்-டெஹோ என்பவருடைய மாணவரான ஹியூன்-யெஹு என்பவர் கவோ-லீ[7] என்னும் இராஜ்யத்தைச் சேர்ந்தவர். அவர் தம்முடைய ஆசிரியரைப் பின்பற்றிச் சிங்கத்தின் மகனுடைய ராஜ்யத்திற்குச் (சிங்களத்திற்கு)சென்றார். அங்கே அவர் துறவு பூண்டார். இப்போது அங்கேயே தங்கியிருக்கிறார்.

*Op. cit.* p. 133.

6. ஸ்ரீவிஜயத்தில் சிறிது காலம் தங்கியிருந்தபின் ஊ-ஹிங், அரசுக்குச் சொந்தமான மரக்கலம் ஒன்றில் ஏறி, 15 நாள் பயணத்திற்குப்பின் மோ லோ வோ-யூ[8] என்னும் தீவை யடைந்தார். இன்னும் 15 நாள் பயணஞ் செய்த பின்னர் அவர் கீ-ட்சா[9] என்னும் நாட்டையடைந்தார். குளிர் காலத்தின் கடைசி மாதத்தில் அவர் மேற்குத் திசையில் திரும்பிப் பயணஞ் செய்தார். 30 நாள் சென்றபின் அவர் நா-கியா-போ-டன்-னா (நாகப்பட்டினம்) என்னும் நாட்டையடைந்தார். பின்னர் அங்கிருந்து புறப்பட்டு இரண்டு நாள் கடற் பயணத்திற்குப்பின் சிங்கத்தின் மகனுடைய தீவை (சிங்களத்தை) அடைந்தார். அங்கே அவர் புத்தருடைய திருப்பல்லைக்கண்டு வழிபட்டார். சிங்களத்திலிருந்து புறப்பட்டு, அவர் வடகிழக்குத் திசையில் பயணஞ் செய்து, ஒரு மாதத்திற்குப் பின்னர் ஹோ-லி-கி-லுவோ(ஹரிகேலா)[10] என்னும் இடத்தை யடைந்தார்.

—*Religieux Eminents*, pp. 144-5.

[7] கொரியாவில்.

[8] சுமத்ராவில் இருந்த மலாயு.

[9] கெட்டா.

[10] தாம்ரலிப்திக்கும் உத்கலத்திற்கும் இடையில் உள்ள நாடு.

# XVI. தென்னிந்தியாவிலிருந்து சீனாவுக்குச் சென்ற தூதுக் குழுக்கள் கி.பி. 692-720

கிழக்கிந்திய ராஜ்யத்தின் அரசனான மோ-லோ-பா-மோ. மேற்கு இந்திய ராஜ்யத்தின் அரசனான செ-லோ-இடோ (சீலாதித்யன்), தென்னிந்திய ராஜ்யத்தின் அரசனான ட்சே-லெலூ-கீ-பா-லோ (சாளுக்கிய வல்லபன்) வட இந்திய ராஜ்யத்தின் அரசனான நாளு, மைய இந்திய ராஜ்யத்தின் அரசனான டி-மோ-சி-ளு, கீயூட்சே (கூட்சா) ராஜ்யத்தின் அரசனான யென்-யவோ-பா ஆகிய அனைவரும் தங்களுடைய பணிவார்ந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளவும் பரிசுகளை வழங்கவும் டீயன் சேயூ மூன்றாம் ஆண்டு (692) மூன்றாம் மாதத்தில் வந்தனர்.

(ஏனைய ராஜ்யங்களைப் போலவே, தென்னிந்திய ராஜ்யமும் தூதுக்குழு ஒன்றை அனுப்பியது. தூதர்கள் திறையையும் தென்னிந்திய ராஜ்யத்தில் உற்பத்தியான பொருள்களையும் எடுத்துக்கொண்டு போனார்கள்.) பேரரசர் ஜீட்சாங் ஆட்சி செய்துகொண்டிருந்த காலத்தில், முதல் ஆண்டு (710) ஒன்பதாம் மாதத்தில், தென்னிந்திய ராஜ்யம், திபெத் ஆகிய நாடுகளும், பத்தாம் மாதத்தில் சீ-யு (ஜபுலிஸ்தானம்) கி-பின் (கிபிசா) ஆகிய ராஜ்யங்களும் தூதுக்குழுக்களை அனுப்பின. அந்தத் தூதர்கள் திறையையும் தங்கள் நாட்டுப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு போனார்கள். 'தோற்ற மாற்றத்தை மதிக்கின்ற' காகன்-டு-கி-சே (துர்காச்) செயூ-ட்சாங் தூதன் ஒருவனை அனுப்பித் தன்னுடைய பணிவார்ந்த வணக்கத்தைத் தெரிவிக்குமாறு ஆணையிட்டான்.

1. கை-யுவன் எட்டாம் ஆண்டில் (720), தென்னிந்திய ராஜ்யத்தின் அரசனை சே-லி-நா-லோ-செங்-கியா(ஸ்ரீ நரசிம்மன்) தன்னுடைய யானைப்படை குதிரைப்படை ஆகியவற்றுடன் சென்று, தா-சே (அரேபியர்) தூ-போ (திபேத்தியர்)[1] முதலிய வர்களோடு போரிட்டு, அவர்களைத் தண்டிக்க விரும்புவதாகச் செய்தியனுப்பினான். அந்தப் படைக்கு ஒரு பெயர் வைக்குமாறும் பேரரசரை அவன் வேண்டிக் கொண்டான். பேரரசர் அதனைப் பாராட்டி மகிழ்ந்து, 'ஒழுக்கம் பேணும் படை' என்று அந்தப் படைக்குப் பெயரிட்டார்.

2. கை-யுவன் எட்டாம் ஆண்டு (720), எட்டாம் மாதம், டிங்-ட்சேவு நாளன்று ட்சாங்-சௌ-மென்-ஹியாவுக்குப் பேரரசர் ஓர் உத்தரவு அனுப்பினார். அதன்படி, தென்னிந்திய அரசன் வெகு தொலைவிலிருந்து ஒரு தூதனை அனுப்பியதாகவும், அந்தத் தூதன் இப்போது திரும்பிப் போகவிருப்பதாகவும், அவன் திரும்பிப்போகும் வரையில் அவனுக்குத் தேவையான வசதிகள் அனைத்தையும் செய்துகொடுத்து, அவனுடைய விருப்பங்கள் நிறைவேறும் வகையில் மிகவும் கவனமாக அவனைப் பார்த்துக் கொள்ள வேண்டுமென்றும் ட்சாங்-சௌ-மென்-ஹியா கேட்டுக்கொள்ளப்பட்டான். அவ்வாறே டசாங்-சௌ-மென்-ஹியா அந்தத் தூதனுக்குப் பூப்போட்ட பட்டாடையொன்றையும் தங்கக் கச்சையொன்றையும், மீன் உருவச் சின்னம் வரையப் பட்ட பணப் பை ஒன்றையும், ஏழு பொருள்களையும் கொடுத்து அவனை வழியனுப்பினான்.

3. பதினோராம் மாதத்தில் தென்னிந்திய ராஜ்யத்தின் அரசனை - சே-லி-நா-லோ-செங்-கியா-பவோ-டோ-பா-மோ (ஸ்ரீ நரசிம்ம போத்தவர்மன்) வுக்குத் தென்னிந்திய ராஜ்யத்தின் அரசன் என்ற கௌரவப் பட்டத்தை வழங்குவதற்காக ஒரு தூதன் அனுப்பப்பட்டான்.

720ஆம் ஆண்டைச் சேர்ந்த 1, 2 என்னும் எண்களையுடைய வாசகங்கள் கியூ டாங் சூ என்னும் நூலிலும் காணப்படுகின்றன. அந்த நூல் மேலும் சில செய்திகளைத் தருகிறது. அவை

[1] இந்தக் காலத்தில் 'திபெத் மேலாண்மை வங்காளத்தில் மிகவும் உறுதியாக நிலைபெற்றிருந்தது. அதன் விளைவாக, வங்காள விரிகுடாவை மக்கள் திபெத்கடல் என்றே 200 ஆண்டுக் காலம் சொல்லிவந்தார்கள்.' BG. I.i, p. 501. See Abulfeda ed. Reinaud ccclviii, Encycl. Br. Tibet. இபன் ஹாகலும் அல்இஷ்டக்ரியும் வங்காள விரிகுடாவைத் திபெத் கடல் என்றே எழுதியுள்ளனர்.

பின்வருவன: "ஒன்பதாம் மாதத்தில் சே-லி-நா-லோ-செங்-கியா பலோ-டோ-பா (ஸ்ரீ நரசிம்ம போத்தவர்மன்) என்ற பெயருடைய தென்னிந்திய அரசன் (சீனப்) பேரரசின் பெயரில் ஒரு கோயிலைக் கட்டினான். அதற்கு ஒரு பெயர் வைத்து ஒரு பொறிப்பு அனுப்புமாறு பேரரசரை வேண்டிக் கொண்டான். அந்த வேண்டுகோளை ஏற்றுக்கொண்ட பேரரசர் அந்தக் கோயிலுக்கு 'கோயிஹோவா' (ஒழுக்கத்திற்குத் திரும்ப உதவுவது) என்னும் பெயரிட்டு அதனை நரசிம்மனுக்கு அளித்தார். அதாவது, சீனப் பேரரசின் பெயரில் 'இந்தியாவில் கட்டப்பட்டிருந்த கோயிலின் முகப்பில் பொருத்துவதற்கு ஏற்ற வகையில் ஒரு பட்டயத்தில் கோயீ ஹோவா சே என்னும் பெயரைப் பொறித்து அனுப்பினர்.' காஞ்சி யரசனான இந்த நரசிம்மனைப்பற்றி நாம் மஹாவம்சத்தின் வாயிலாகவும் இந்தியப் பொறிப்புகள் சிலவற்றின் வாயிலாகவும் சில செய்திகளை அறிகிறோம். கடைசியில் சொன்ன ஆதாரங்களின் அடிப் படையில்—அதாவது, பொறிப்புகளின் அடிப்படையில்—இந்த அரசனுடைய ஆட்சி சுமார் கி பி. 700ஆம் ஆண்டில் தொடங்கி யிருக்கவேண்டும் என்று சில்வெயின்லெவி கருதுகிறார். (J.A. 1900, May-June). கி.பி. 720இல் ஸ்ரீ நரசிம்ம போத்த வர்மனைப்பற்றி இவ்வளவு விரிவாக எடுத்துரைக்கின்ற சீன வாசகங்கள் சில்வெயின் லெவியின் கருத்தை ஆதரிக்கின்றன என்பதை நாம் காண்கிறோம் .(Chavannes, p. 44 n.).

மேலே சொன்ன விவரங்கள் எல்லாம் சுமார் கி.பி. 1013ஆம் ஆண்டில் தொகுக்கப்பட்ட சீனப் பல்கலைக் களஞ்சியமான ட்சோ-பூ-யுவான்-கூயீ என்னும் பெரு நூலிலிருந்து தெரிந் தெடுக்கப்பட்டவை. அவற்றை மா-ட்வான்-லின் எழுதியுள்ள நூலிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டுள்ள கீழே காணும் குறிப்பும் உறுதி செய்கிறது.

கின்புங் ஆண்டுகளுள் மூன்றும் ஆண்டில் (கி.பி. 667) ஐந்து இந்தியாக்களும் (இந்தியாவிலிருந்த ஐந்து ராஜ்யங்களும்) பேரரசரின் அவைக்குத் தூதர்களை அனுப்பின. கேயுவன் ஆண்டுகளில் (கி.பி. 713-742) மைய இந்தியத் தூதன் ஒருவன் மும்முறை தென்னிந்திய எல்லைவரையிலும் சென்றான். ஆனால் அவன் ஒரே ஒரு முறைதான் இங்கு வந்தான். அப்போது அவன் பேசும் ஆற்றலுடைய பஞ்சவர்ணப் பறவைகளைப் பேரரச ருக்குப் பரிசு கொடுத்தான். தாசே (அரேபியர்கள்) தூபான் (திபெத்தியர்கள்) ஆகியவர்களை எதிர்த்துப் போரிடுவதற்காகப் பேரரசின் துணையை அவன் நாடினான். பேரரசின் துணைப்

படைக்குத் தானே தலைமை தாங்கி நடத்தவும் தயாராய் இருப்பதாக அவன் சொன்னான். பேரரசர் ஹூவென்-ட்சுங் தலைமைத் தளபதிப் பதவியை அவனுக்கு வழங்கினார். அவர் கி.பி. 713 முதல் 756 வரையில் ஆட்சி செய்தவர். இந்தியத் தூதன் 'அரசர்க்கரசரே! திபேத்தியர்கள் நாகரிகமற்றவர்கள். ஆடைகளும் தளவாடங்களும் அவர்களை மிகவும் கவர்கின்றன. அதனால், எனக்குப் பூப்போட்ட நீளமான பட்டாடையும், பொன்னால் அணிசெய்யப்பட்ட தோல்கச்சையும், மீன் உருவமுடைய ஒரு பையும் வேண்டும்' என்று பேரரசரிடம் சொன்னான். அந்தப் பொருள்களையெல்லாம் தருமாறு பேரரசர் ஆணையிட்டார்,

—Chavannes : *Notes additionnelles sur les Tou-Kiue (Tures) Occidentaux*. Toung Pao II 5 : pp. 1-110; and JASB vi., p. 71 for Ma-Twan-lin.

# XVII. கான்டனில் இருந்த பார்ப்பனக் கோயில்களையும் வணிகர்களையும் பற்றிக் கான்ஷின் எழுதியுள்ள குறிப்பு சுமார் கி.பி. 750

கின்-ட்சென் என்னும் சீனத் துறவி (742-54) சீனாவிலிருந்து ஜப்பானுக்குச் சென்றார். அந்தப் பயணத்தை அவர் காலத்திலேயே இருந்தவரும் அவருடைய மாணவரும் ஆகிய அவோமி-நோ மபிட்டோ கென்கை என்பர் விவரமாய் எழுதி வைத்துள்ளார். அவருடைய குறிப்பில் ஒரு பகுதியைக் கீழே தருகிறோம்.

'அங்கே போ-லோ-மென் (பார்ப்பனர்) வாழ்ந்த மடங்களும் மூன்று இருந்தன. அந்த மடங்களிலிருந்த குளங்களில் நீலத் தாமரை பூத்திருந்தது. பூக்கள் மிகவும் அழகாய் இருந்தன. தாமரையின் வேர்களும் இலைகளும் மலர்களும் நறுமணம் பெற்றிருந்தன.

'கூவங்-டாங் (கான்டன்) நகரில் ஓடிய ஆற்றில் போலோமென் (இந்தியப் பார்ப்பனர்) போ-சியூ (பாரசீகர்) கூவன்-லூவன் (மலேய நாட்டினர்) முதலியவர்களுக்குச் சொந்தமான வாணிகக் கப்பல்கள் இருந்தன. அவற்றின் எண்ணிக்கையைச் சொல்வது கடினமானது. அவை எல்லாவற்றிலும் சாம்பிராணி, மூலிகை, மணிக்கல் முதலிய விலையுயர்ந்த பொருள்கள் குவியல் குவியலாக வைக்கப்பட்டிருந்தன. அந்தக் கப்பல்கள் அறுபது எழுபதடி ஆழ(உயர)முள்ளவை.

'சிங்கத்தின் நாடு (சிங்களம்) டா-சே நாடு (அரேபியாவில் டாட்ஜிக்) கூட்டாங் நாடு ஆகிய நாடுகளிலிருந்து அந்தக் கப்பல்களில் வந்திருந்த மக்கள் பலர் அங்கிருந்தனர். நாகரிகமற்றவர்

களான அந்த மக்கள் வெள்ளை நிறமாகவும், சிவப்பு நிறமாகவும், வேறு நிறமாகவும் இருந்தார்கள். அவர்களுட் சிலர் வாணிகத்தை முடித்துக்கொண்டு திரும்பிப் போய்விடுகின்றனர். வேறு சிலர் அங்கேயே தங்கிவிடுகின்றனர். அதனால், அங்கே எத்தனையோ இனங்களைச் சேர்ந்த மக்களைக் காண்கிறோம்.'

(கின்-ட்சென் என்னும் சீனச் சொல் கான்ஷின் என்று ஜப்பானிய மொழியில் எழுதப்படுகிறது.)

—Tr. from Takakusu in BEFEO xxviii. pp. 466–67. (cf. Ferrand, *Relotions des voyages;* ii. 640. See also Ferrand. J.A. II : 13, (1919), p. 246).

# XVIII. இபன் குர்தாத்பே-கி.பி. 844-8

## அ. கீழைநாடுகளுக்குச் செல்லும் வழி

பாரசீகத்திற்கும் சிந்து நாட்டிற்கும் இடையில் எல்லையாய் இருக்கிற நர்மச்சீரெஹ்[1] என்னும் இடத்திற்கு (ஆர்மசிலிருந்து) கடல் வழியாய்ச் செல்வதற்கு ஏழு நாள் ஆகும் அங்கிருந்து தைபல் செல்வதற்கு எட்டு நாள் ஆகும். இந்த நகரம் மெஹ்ரன் (சிந்து) கடல்வாயிலிருந்து இரண்டு பரசங்குத் தொலைவில் உள்ளது. சிந்து நாட்டில் காஸ்டகும், பிரம்பும், மூங்கிலும் விளைகின்றன. மெஹ்ரன் ஆற்றிலிருந்து இந்திய நாடு தொடங்குகிற இடத்திற்கு (யெக்சிர்?)[2] செல்வதற்கு நான்கு நாள் ஆகும். அங்கே மலையில் பிரம்பும் சமவெளியில் தானியமும்[3] விளைகின்றன. குக்குலங்களாகப் பிரிந்துள்ள மக்கள் வழிப்பறி செய்வதைத் தம் தொழிலாய்க் கொண்டுள்ளார்கள். அங்கிருந்து இரண்டு பர்சகத்திற்கு அப்பாலுள்ள மெய்த்[4] என்னும் மக்களும் திருட்டுத் தொழிலில் ஈடுபடுபவர்களே. அங்கிருந்து கூலா என்றும் கூவ் என்றும் வழங்குமிடம் இரண்டு பரசங்குத் தொலைவிலுள்ளது. தேக்கும் பிரம்பும் விளையும் செந்தான் என்னுமிடம் அங்கிருந்து பதினெட்டுப் பரசங்குத் தொலைவிலுள்ளது. மிளகும் மூங்கிலும் விளைகிற இடமான மெலி (மலபார்) செந்தானிலிருந்து ஐந்து நாட் பயணத்திலிருக்கிறது. மழை பெய்யும்போது மிளகுக் கொத்து ஒவ்வொன்றையும் ஒவ்வோர் இலை மூடிக்கொள்கிறது என்றும், மழை நின்றதும் இலைகள் திறந்து கொள்கின்றன என்றும்,

[1] நார்மசிரா.

[2] பகர் (Elliot and Dowson)

[3] கோதுமை (E and D.)

[4] மெட்.

மீண்டும் மழை பெய்தால் மிளகின்மீது மழை நீர் படாதவாறு இலைகள் மீண்டும் மூடிக்கொள்கின்றன என்றும் அந்த நாட்டுக்குச் சென்றுவந்த மாலுமிகள் சொல்கிறார்கள். மெலியிலிருந்து பலின்[5] என்னுமிடத்திற்கு இரு பயணங்கள். அங்கிருந்து பெருங்குடாவுக்கு (கடலுக்கு) போக இரண்டு நாள் ஆகும். பலினில் வழி (இரு கிளைகளாகப்) பிரிகிறது. கடற்கரையோரமாகப் போனால் பனெஹ் (பாஸ்) என்னும் இடத்தை இரண்டு நாளில் அடையலாம். அங்கே நெல் விளைகிறது. அதனை செரந்தீபுக்குக் கொண்டு போகிறார்கள். நெல் விளைகின்ற சந்தி, அஸ்கன் ஆகிய இடங்களுக்குச் செல்ல இரண்டு நாள் ஆகும். பல நதிகளின் ஓட்டம் முடிவடைகிற கூரா என்னுமிடம் மூன்று பரசங்கு. கிலக்கான் (கில்கயான்). லூவர், கெண்ட்ஜெ இரண்டு நாள். இந்த நாட்டில் கோதுமையும் நெல்லும் விளைகின்றன. பதினைந்து நாள் பயணத்திற்கு அப்பால் இருக்கிற கமூல் முதலிய இடங்களிலிருந்து நன்னீர்[6] வழியாகச் சோற்றுக் கற்றாழையை அனுப்புகிறார்கள். யானை, குதிரை, எருமை ஆகிய விலங்குகளும் வேறு பல பொருள்களும் மிகுதியாய்க் கிடைக்கிற பெரிய ராஜ்யமான ஊர்த்தசிர்[7] செமந்தரிலிருந்து பன்னிரண்டு பரசங்குத் தொலைவில் இருக்கிறது. ஊர்த்தசிரிலிருந்து ஐனேயிக்குச் செல்ல நான்கு நாள் ஆகும். அங்கும் யானைகள் மிகுதியாய் உள. ஹுபலினிலிருந்து செரந்தீபுக்குச் செல்ல இரண்டு நாள் ஆகும்.

செரந்தீப் (இலங்கை) எண்பது பரசங்கு நீள அகலமுடையது. பூவுலக சொர்க்கத்திலிருந்து துரத்தியடிக்கப்பட்ட ஆதாம் வந்து விழுந்த மலை அங்கேதான் இருக்கிறது. அந்த மலையின் உச்சி மேகத்தில் மறைந்துகிடக்கிறது; மாலுமிகள் அதனை இருபது நாள் பயணத்திற்கு அப்பாலிருந்து காண முடிகிறது (sic). இந்தியாவில் வாழ்கின்ற மக்களுள் பக்தர்களாக விளங்குகிற பார்ப்பனர்கள் அந்த மலையின்மீது பதிந்துள்ள ஆதாமின் காலடியொன்றைக் காட்டுகிறார்கள்; இன்னொரு காலடி இந்தியாவில் இருக்கிறது. அந்த இரண்டு காலடிகளுக்கும் உள்ள தூரம் இரண்டு மூன்று நாள் பயணமாகும். அந்த மலையில் சோற்றுக் கற்றாழை, மிளகு, பலவகை நறுமணப் பொருள்கள் ஆகியவை கிடைக்கின்றன. மலைக்கு அருகில் பலவகைப்பட்ட மாணிக்கக் கற்களும் பிற ரத்தினங்களும்

[5] பல்புன் (E and D.)

[6] கோதாவரி என்று டாக்டர் ஸ்ப்ரெங்கர் கருதுகிறார்.

உரசிர் (E and D.)

கிடைக்கின்றன. பள்ளத்தாக்கில் வைரச் சுரங்கமும் கஸ்தூரி ஆடும் இருக்கின்றன. மலைப்பாறையில் ஆதாம் ஒரேயொரு காலடிதான் வைத்தான் என்றும் மலையுச்சியில் மின்னல் போன்ற தீக் கொழுந்து இடையறாது மேலெழுகிறது என்றும் இந்தியர் சொல்கின்றனர். செரந்தீபில் தென்னையும் உலோகப் பொருள் களுக்கு மெருகேற்ற உதவுகின்ற குருந்தக் கல்லும் கிடைக் கின்றன. அந்தத் தீவிற் பாய்கின்ற ஆறுகளில் படிகப் பாறைகள் இருக்கின்றன. கடலோரத்தில் முத்துச் சலாபம் நடைபெறுகிறது.

—*Le Livre des Routes et des Provinces :* ed. C. Barbier de Meynard, JA. : 6 : v : pp. 283-6. (cf. Elliot and Dowson i, pp. 15-16.)

## ஆ. இந்தியாவிலுள்ள முக்கிய அரசர்கள்

இந்திய மன்னர்களும் மக்களும் மது (ஒயின்) அருந்துவ தில்லை; ஆனால், பிறன்மனை விழைதலை அவர்கள் சட்டப்படி நியாயமான செயலாகக் கருதுகிறார்கள். இதற்குக் கோமர் நாட்டு மன்னன் விதிவிலக்காய் இருக்கிறான். அவன் மதுவையும் அருந்துவதில்லை, பிற மாதர்களையும் விரும்புவதில்லை. ஆனால் செரந்தீப அரசன் அருந்துவதற்கு இராக் மதுவை வாங்குகிறான். அரசர் அனைவருமே யானைகளைப் பெரிதும் விரும்புகின்றனர்; அவற்றை வாங்குவதற்குப் பொன்னின் விலையைத் தருகின்றனர். யானையின் உச்ச உயரம் ஒன்பது முழம்; எனினும், காப்[8] என்னு மிடத்தில் பத்துப் பதினொரு முழ உயரமுடைய யானைகளையும் காணலாம். இந்தியாவிலுள்ள அரசர்களுள் மிகவும் வலிமை வாய்ந்தவன் பல்ஹரா என்பவன் அவனுடைய பெயரே மன்னர் மன்னன் என்று பொருள்படும். 'பேரார்வத்துடன் தொடங் கப்படும் எச்செயலுமே வெற்றி பெறுகிறது' என்னும் பொன் மொழி அவனுடைய மோதிரத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. அவனுக்கடுத்தபடி வலிமை உடையவர்கள் டாபன் அரசனும் ஜாபா (ஜாவா) அரசனும் ஆவார்கள். அவர்களுக்கு அடுத்த படியில், டாத்தரைடு என்னும் பெயருடைய டிர்ஹெம்(நாணயம்) வழக்கிலிருக்கிற ஜோஜர் (குஜராத்து?) அரசனும், ஆனு அரசனும், ரஹ்மா அரசனும் இருக்கிறார்கள். இறுதியிற்

[8] இது இலங்கைக்கு அருகில் உள்ளது என்று மகுதி சொல்கிறார். —Barbier de Meynard.

சொல்லப்பட்ட இரண்டு அரசர்களுடைய ராஜ்யங்களும் வெகு தொலைவில் இருக்கின்றன. அவற்றை அடைவதற்கு ஓராண்டு பயணஞ் செய்யவேண்டும். [9]ரஹ்மாவில் நூல்துணிகளும், சோற்றுக் கற்றாழையும் 50,000 யானைகளும் இருக்கின்றன. ரஹ்மா அரசனுக்கு அடுத்த படியில் இருப்பவன் கமரூன் அரசனுவான். அவனுடைய நாடு சீனவுக்குப் பக்கத்திலுள்ளது. அங்குக் காண்டாமிருகங்கள் ஏராளமாய் இருக்கின்றன. காண்டாமிருகத்தின் கொம்பு ஒரு முழ நீளமும் இரு கைக் கனமும் உள்ளது. அந்தக் கொம்பின் நீளப் பாங்கில் ஒருவகை உருவத்தைக் காண்கிறோம். அதனைப் பிளந்தால் மனிதன், குதிரை, மீன், மயில், பிற பறவைகள் ஆகியவற்றுள் யாதேனும் ஒன்றன் உருவத்தைக் காண்கிறோம். அவ்வுருவம் கரு நிறப் பின்னணியில் வெண்ணிறமாய் அமைந்துள்ளது. காண்டா மிருகக் கொம்புகளைச் சீனர்கள் வாங்கி இடைக்கச்சை செய்து கொள்கிறார்கள். கொம்புகளின் விலை இருநூறு முதல் மூவாயிர நாலாயிர டினர் வரையில் இருக்கிறது.

இப்போது கூறப்பட்ட அரசர் அனைவருமே காது குத்திக் கொண்டிருக்கின்றனர். ஜாபெஜ் அரசன் மகாராஜன் என்று சொல்லப்படுகிறான். அவனுடைய ஆட்சிக்குட்பட்ட நிலப் பகுதியில் தூட்டெயில் என்னும் தீவு ஒன்று இருக்கிறது. அங்கு எப்போதும் ஒருகட்பெருமுரசும் குடமுழவும் முழங்கிக் கொண்டேயிருக்கும். இந்தப் பக்கங்களில் ஒருவகைக் குதிரை இருக்கிறதென்றும், அது நம் நாட்டுக் குதிரையைப் போல இருந்தாலும் அதனுடைய பிடரி மயிர் தரையைத் தொடுகின்ற அளவுக்கு நீண்டிருக்கிறது என்றும் மாலுமிகள் சொல்கிறார்கள். மகாராஜா நாளொன்றுக்கு இருநூறு பொற் காசுகளை வசூல் செய்து, அவற்றை உருக்கி ஒரே கட்டியாக்கிய பின்னர், அந்தக் கட்டியை நீரில் போட்டுவிட்டு, 'இதோ என் கருவூலம்' என்று சொல்கிறான். இந்தக் கடலில் இருக்கின்ற தீவு ஒன்றில் கழுதை வாலைப் போன்ற வாலையுடைய குரங்குகள் இருக்கின்றன.

—J. A. *ibid* pp.289-91.

## இ. சாதிகள்

இந்தியாவில் ஏழு சாதிகள் உள.

1. **சபக்பெர்யா** (B. The Sabiens, ed. Sakrya): அரசனும் பிரபுக்களும் இந்தச் சாதியைச் சேர்ந்தவர்கள். பிற சாதிகளைச்

[9] ரஹ்மாப் பேரரசு குஜராத்துக்கு அருகில் இருந்தது என்று மசூதி சொல்கிறார்—Barbier de Meynard.

சேர்ந்தவர் அனைவரும் அவர்கள்முன் விழுந்து வணங்குகின்றனர். ஆனால், அவர்கள் யாரையும் அவ்வாறு வணங்குவதில்லை.

2. **பார்ப்பனர்** : அவர்கள் ஒயின் முதலிய போதைப் பானங்களை அருந்துவதில்லை.

3. **கெஸ்ரியர்** : (சத்திரியர்): அவர்கள் மூன்று கோப்பை ஒயினுக்குமேல் அருந்துவதில்லை. அவர்கள் பார்ப்பனப் பெண்களை மணந்துகொள்ளக் கூடாது. ஆனால் பார்ப்பனர் அவர்களுடைய பெண்களை மணந்து கொள்கின்றனர்.

4. **சௌதர்யர்** (சூத்திரர்) : இவர்கள் உழவர்கள்.

5. **மெய்செரர்** (வைசியர்) : இவர்கள் கைத்தொழிலும் கூலி வேலையும் செய்பவர்கள்.

6. **சண்டல்யர்** : (சண்டாளர்) : இவர்கள் பணியாட்களாகவும் வழித் துணைவர்களாகவும் தொழில் புரிபவர்கள்.

7. **ஜெஙயர்** : இசை பாடலும் செப்படி வித்தையும் இவர்கள் தொழில்.

இந்து மதத்தில் நாற்பத்திரண்டு கோட்பாட்டுப் பிரிவுகள் இருக்கின்றன. சிலர் கடவுள் (அவருடைய நாமம் புகழ்பெறுவதாக!) உண்டு என்றும் தீர்க்கதரிசிகள் இருந்தார்கள் என்றும் நம்புகின்றனர், சிலர் தீர்க்கதரிசிகள் இருந்தார்கள் என்று நம்புவதில்லை; சிலர் இந்தக் கோட்பாடுகளுள் எதனையும் நம்புவதில்லை.

இந்த நாட்டில் இருக்கும் மந்திரவாதிகள் தங்களுடைய உச்சாடனத்தால் வேண்டியதை வேண்டியாங்கு அடைவதற்கும் எல்லா வகை நோய்களையும் தீர்ப்பதற்கும் தேவையான ஆற்றலைப் பெற்றுள்ளார்கள், அவர்கள் மாயமந்திர சாத்திரங்களையும் முன்னறிந்து சொல்லும் கலையையும் கற்றவர்கள். அதனால் அவர்கள் வரம்பற்ற அதிகாரம் பெற்றவர்களாகவும், நன்மை மட்டுமன்றித் தீமையும் செய்பவர்களாகவும், மக்கள் கண்டு அஞ்சக்கூடிய மாயத் தோற்றங்களையும் பேயுருக்களையும் காட்டும் வல்லமை பெற்றவர்களாகவும், மழையையும் மேகத்தையும் தம் விருப்பப்படி ஆட்டிப் படைப்பவர்களாகவும் இருக்கிறார்கள்.

—J.A. *ibid*:pp. 295-6 (cf. Elliot and Dowson, I, pp. 16-17)

# XIX. இரண்டு அரபு ஆசிரியர்கள்

## 1. பெயர் தெரியாதவர் (சுலைமான்?)

### அ. மாலத்தீவு, இலங்கை, பிற தீவுகள்

ஹர்க்கண்டுக் கடல் (வங்காள விரிகுடா) மூன்றாம் கடலாகும். இந்தக் கடலுக்கும் லார் (குஜராத்து) கடலுக்கும் இடையில் எத்தனையோ தீவுகள் (லட்சத்தீவுகளும் மாலத் தீவுகளும்) இருக்கின்றன. அவற்றின் தொகை 1900 இருக்குமென்று சொல்கின்றனர். இரு கடல்களையும் பிரிப்பவை இந்தத் தீவுகளே. அவற்றை ஆள்பவள் ஒரு பெண். கடலலைகள் அடித்துக்கொண்டு வருகிற பெரிய அம்பர்த் துண்டுகள் சில சமயங்களில் கரையில் வந்து விழுகின்றன. பார்ப்பதற்கு அவை தாவரத்தைப் போல இருக்கின்றன. அம்பர் கடலின் அடித் தளத்தில் தாவரத்தைப் போல வளர்கின்றது. கடல் அதிகமாய்க் கொந்தளிக்கும்போது அம்பர் நீர்மட்டத்திற்கு வருகிறது. அம்பர்த் துண்டுகள் பார்ப்பதற்குக் காளானைப் போலவும் அந்த வகையைச் சேர்ந்த பூங்கிழங்கு போலவும் இருக்கும்.

அரசியின் ஆட்சிக்குட்பட்ட தீவுகளில் தென்னை பயிர் செய்யப்படுகிறது. இந்தத் தீவுகள் ஒன்றுக்கொன்று இரண்டு, மூன்று, நான்கு பரசங்குத்[1] தொலைவிலுள்ளன. அவை அனைத்திலுமே மக்கள் வாழ்கிறார்கள். அவை அனைத்திலுமே தென்னை வளர்கிறது. சோழியே அவர்களுடைய பணமாயிருக்கிறது. அரசிக்குச் சொந்தமான சோழிகள் அரசுக் கிடங்குகளில் ஏராளமாய்க் குவிந்துகிடக்கின்றன. இந்தத் தீவுகளில் வாழ்கின்ற மக்களைப் போன்ற உழைப்பாளிகளை வேறெங்கும் காண்பது இயலாது என்று சொல்கின்றனர். நெய்த துணியை

[1] பரசங்கு என்பது சுமார் 3 மைல் நீளத்தைக் குறிக்கும்.

வெட்டித் தளர்மேலங்கி தைப்பதற்கு மாறாக, அவர்கள் இரு கைகளும், இருவண்ண விளிம்புடைய கழுத்துப் பட்டையும், மார்புத் திறப்பும் உடைய துணியையே நெய்துவிடுகிறார்கள். வீடு கட்டுதல் கப்பல் கட்டுதல் முதலிய வேலைகளைச் செய்வதில் அவர்கள் முழு நிறைவான கலைத்திறன் பெற்றவர்கள்.

சிப்பிகளை அவர்கள் கடல்நீரிலிருந்து எடுக்கிறார்கள். சிப்பிக்குள் உயிருள்ள விலங்கு ஒன்று இருக்கிறது. தென்னை மரத்தின் கிளைகளைக் கடல்நீருக்குள் அமுக்கினால் சிப்பிகள் அவற்றின்மீது ஒட்டிக் கொள்ளும். அதன்பின் அந்தக் கிளைகள் மேலே இழுத்துக்கொள்ளப்படுகின்றன. இதுவே அவர்கள் சிப்பி பிடிக்கும் முறையாகும். சிப்பிகளை (சோழிகளை) அவர்கள் 'கபடஜ்' என்று சொல்கிறார்கள்.

இந்தத் தீவுகளுள் கடைசியில் இருப்பது சிரந்தீப் (இலங்கை) ஆகும். அது ஹர்க்கண்டுக் கடலில் இருக்கிறது. இந்தத் தீவுக் கூட்டத்தில் அதுவே மிக முக்கியமானது.

இந்தத் தீவுகள் எல்லாம் (லட்சத்தீவுகள் மாலத்தீவுகள்) சேர்ந்து திபஜாத் என்னும் பெயர் பெற்றுள்ளன. சிரந்தீபில் முத்துச் சலாபம் நடைபெறுகிறது. இந்தத் தீவு முழுவதையும் கடல் சூழ்ந்திருக்கிறது. இந்தத் தீவிலுள்ள ரஹூன் என்னும், மலையுச்சியின்மீதுதான் பூவுலக சொர்க்கத்திலிருந்து துரத்தியடிக்கப்பட்ட ஆதாம் (அவரை வணங்குவோமாக!) வந்து விழுந்தார். அந்த மலையின்மீது ஆதாமின் காலடி காணப்படுகிறது. அங்கே ஒரு கால் பதிந்த இடமேயுள்ளது. இன்னொரு காலை அவர் கடலில் வைத்தார் என்று சொல்வர். கல்லில் பதிந்துள்ள காலடியின் நீளம் எழுபது முழம் என்றும் சொல்வர்.

இந்த மலையைச் சுற்றியுள்ள இடங்களில் மாணிக்கம், புட்பராகம், நீலம் முதலிய மணிக்கற்கள் ஏராளமாய்க் கிடைக்கின்றன.

சிலான் தீவில் இரண்டு அரசர்கள் இருக்கிறார்கள். தீவு பெரியதாகவும் அதிக பரப்பு உடையதாகவும் இருக்கிறது. அங்குச் சோற்றுக் கற்றாழை, தங்கம், ரத்தினக் கற்கள் முதலியவை கிடைக்கின்றன. அதனைச் சூழ்ந்துள்ள கடலில் முத்தும் சங்கும் கிடைக்கின்றன. சங்கு என்பது எக்காளம் போல ஊதுவதற்குப் பயன்படுகின்ற ஒரு பெரிய ஓடு. அதனை மதிப்புமிக்க பொருளைப் போல மக்கள் போற்றிக் காக்கிறார்கள்.

— Ferrand, Voyage, pp. 31-3.

## ஆ. இந்தியா, சீனு, அவற்றின் அரசர்கள்

வலிமை மிக்க அரசர்கள் உலகில் நான்குபேர் இருக்கின்றனர் என்று இந்தியரும் சீனரும் ஒரு முகமாய்க் கருதுகின்றனர். அந்த நால்வருள்ளும் மிகவும் உயர்ந்தவர் அரபு மக்களின் அரசர்-அதாவது, பாக்தாதுக் கலீபா-ஆவார். அரபு மக்களின் அரசரே மிகவும் பெரியவர், அவரே மிகவும் அதிகமான செல்வம் உடையவர், அவரே மிகவும் வீருர்ந்தவர் என்பது மறுக்க இயலாத உண்மை என்பதைச் சீனரும் இந்தியரும் ஏற்றுக் கொள்கின்றனர். அவர் பெருமை மிக்க இஸ்லாம் மதத்தின் அரசர்; அவருக்குமேல் யாரும் இல்லை. இருக்கவும் முடியாது. சீன அரசர் அவருக்கு அடுத்த படியில் இருக்கும் பெரிய அரசர். அவருக்கு அடுத்த படியில் இருப்பவர் ரும் அரசர் (அதாவது பைஜான்ஸ் அரசர்) ஆவார். நான்காம் படியில் இருப்பவர்—(வளையங்களைத் தொங்கவிடுவதற்காகக்) காதில் ஓட்டை போட்டுக் கொண்டிருக்கிற மக்களின் அரசரான பல்லஹ்ரா அரசர். அவர் இந்தியாவின் அரசர், அவர் மிகவும் உயர்ந்த பிரபுக் குடும்பத்தைச் சேர்ந்தவர். இந்த உயர்வை இந்தியரே ஏற்றுக்கொண்டுள்ளனர். இந்தியாவில் இருக்கிற அரசர் ஒவ்வொருவரும் சுயேச்சையாய் ஆட்சி செய்பவரே. எனினும், அவர்கள் அனைவருமே பல்லஹ்ரா மிகவும் உயர்ந்த குடியிற் பிறந்தவர் என்பதை ஏற்றுக்கொள்கின்றனர். பல்லஹ்ராவின் தூதர்கள் ஏனைய அரசவைகளுக்குப் போகும்போது, அவர்கள் யாருடைய பிரதிநிதிகளாக வந்திருக்கிருர்களோ அவருக்கு மரியாதை காட்டும் முறையில் அந்த அரசர்கள் அந்தத் தூதுவர்களுக்குத் தங்கள் பணிவைத் தெரிவித்துக் கொள்கிருர்கள். அரபு மக்களைப் போலவே பல்லஹ்ராவும் தாராளமான பரிசுகளைக் கொடுக்கிருர். அவரிடம் மிகுந்த செல்வமும் ஏராளமான யானை குதிரைகளும் இருக்கின்றன. அவருடைய நாணயம் டாட்டிரீ என்பதாகும். அது பொன்னுல் செய்யப்பட்டது.

பல்லஹ்ரா தமக்கு முன் ஆட்சிசெய்த அரசர் காலத்திலிருந்து தம்முடைய ஆட்சிச் சகாப்தத்தைக் கணக்கிடுகிருர் (sic). அரபுகள் நபிகள் நாயகத்தின் (அவரை வழிபடுவோமாக!) ஹிஜிராவிலிருந்து தங்கள் சகாப்தத்தைக் கணக்கிடுருர்கள். இந்தியர்களோவெனில், தங்களுடைய அரசர்களின் ஆட்சிக் காலத்திலிருந்து கணக்கிடுகிருர்கள்.[2] அவர்களுடைய அரசர்களும்

[2] இந்திய அரசர்கள் தங்களுடைய வம்சம் அரசோச்சத் தொடங்கிய காலத்திலிருந்து தங்கள் சகாப்தத்தைக் கணக்கிடுருர்கள். (Reinaud, p. 25).

நெடுங்காலம் ஆட்சி செய்கிறார்கள். சிலர் ஐம்பது ஆண்டுக் காலம் ஆட்சி செய்கிறார்கள். தங்களுடைய அரசன் நீண்ட காலம் வாழ்வதற்கும், நீண்ட காலம் ஆட்சி செய்வதற்கும் காரணமாயிருப்பது அரபு மக்களிடம் தங்களுக்கு இருக்கிற அன்புதான் என்று பல்லஹ்ராவின் குடிமக்கள் சொல்கிறார்கள். உண்மையிலேயே, அரபு மக்களிடம் பல்லஹ்ராவைப் போல அன்புடைய அரசர் வேறு யாருமே இல்லை. அவனுடைய குடிகளுக்கும் இக்கூற்றுப் பொருந்தும்.

பாரசீக அரசருக்கு 'கிஸ்ரா' என்னும் பட்டப்பெயரும், ரோமானிய அரசருக்கு 'சீசர்' என்னும் பட்டப்பெயரும் இருப்பது போலவே, இந்த நாட்டு அரசர் அனைவருக்கும் 'பல்லஹ்ரா' என்னும் பட்டப்பெயர் இருக்கிறது. அது ஒரு தனி மனிதருடைய பெயரன்று. பல்லஹ்ர ராஜ்யத்தின் எல்லை மேற்குக் கடற்கரையிலிருந்து தொடங்குகிறது. அங்குள்ள கொங்கண ராஜ்யத்தின் எல்லையிலிருந்து தொடங்குகின்ற பல்லஹ்ர ராஜ்யம் ஆசியாக் கண்டத்தின் ஒரு பகுதியைத் தன்னுள் அடக்கி, சீனு வரையிலும் பரந்து விரிந்து கிடக்கிறது. பல்லஹ்ர ராஜ்யத்தைச் சுற்றிலும் அரசர் பலர் இருக்கின்றனர். அவர்கள் பல்லஹ்ர அரசனுக்குப் பகைவர்கள். ஆனால், ஒவ்வொரு முறை போர் மூளும் போதும் பல்லஹ்ர அரசனே வெல்கிறான். அந்தப் பகையரசர்களுள் குஜ்ரா என்னும் பெயருடைய நாட்டின் அரசனும் ஒருவன். அவனுடைய படை பெரியது. அவனுடைய குதிரைப் படைக்கு ஒப்பான படை பிற இந்திய அரசர் யாரிடத்திலும் இல்லை. குஜ்ர அரசன் அரபு மக்களிடமும் பகைமை பாராட்டுகிறான். எனினும், அரபு அரசனே உலகில் மிகப் பெரிய அரசன் என்பதை அவனும் ஒப்புக்கொள்கிறான். இஸ்லாம் மறத்தை அவன் வெறுக்கிற அளவுக்கு வேறு எந்த இந்திய அரசனும் வெறுப்பதில்லை. அவன் ஒரு நீண்ட துண்டு நிலத்திற்கு அரசனாய் இருக்கிறான். அவனிடம் ஏராளமான செல்வமும் ஒட்டகம் முதலிய விலங்குகளும் இருக்கின்றன. அந்த நாட்டில் பொருள்களை வாங்குவதற்குத் தங்கக் கட்டிகளைப் பயன்படுத்துகிறார்கள். அங்கே தங்கச் சுரங்கம் இருக்கிறது என்று சொல்கிறார்கள். இந்திய ராஜ்யங்கள் எல்லாவற்றுள்ளும் அந்த ராஜ்யத்தில் கள்ளர் பயம் மிகவும் குறைவாயிருக்கிறது[3].

— *Op. cit.* pp. 47-9.

[3] பல்ஹாராவைப் பற்றி மசூதி (கி.பி. 956இல் இறந்தவர்) பின்வருமாறு எழுதியுள்ளார்.

## இ. இலங்கையில் அரசர்க்குச் செய்யும் ஈமக் கடன்

சிரந்தீப் (சிலான்) அரசன் இறந்து விட்டால் அவனுடைய உடல் (தரையினுக்கு அருகில்) ஒரு தேரில் வைக்கப்படுகிறது. கால்கள் தூக்கிக்கொண்டு இருக்குமாறும், முதுகு தேரின் பின் புறத்தில் சாய்ந்துகொண்டு இருக்குமாறும் சடலம் அந்தத் தேரோடு சேர்த்துக் கட்டப்படுகிறது. அதனால், சடலத்தின் தலைமயிர் தரையில் தாழ்ந்து புரள்கிறது. தேருக்கு அருகில்

நம்முடைய காலத்தில் இந்தியாவில் ஆட்சி செய்கின்ற அரசர்களுள் மிகவும் பெரியவன் பல்ஹரா என்பவன் ஆவான்: அவன் மன்கிர் நகரில் ஆட்சி செய்கிறான். இந்திய அரசர்களுட் பலர் பிரார்த்தனை செய்யும்போது தம்முடைய முகத்தை அவனிருக்கும் திசையில் திருப்புகின்றனர். தங்களுடைய ஊருக்கு அவனுடைய தூதுவர்கள் வரும்போது அவர்கள் அந்தத் தூதர்களிடம் தங்களுடைய குறைகளைக்கூறி அவற்றைப் போக்குவதற்கு அவனுடைய துணையை நாடுகிறார்கள். பல்ஹர ராஜ்யத்தைச் சுற்றிப் பல்வேறு ராஜ்யங்கள் இருக்கின்றன. அவற்றுட் பல கடற்கரையிலிருந்து விலகி உள்நாட்டிலுள்ள மலைப்பகுதிகளில் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, டபான் இராஜ்யத்தையும் ராய் என்பவனுடைய ஆட்சியிலுள்ள காச்மீரத்தையும் சொல்லலாம். அத்தகைய ராஜ்யங்கள் இன்னும் சில இருக்கின்றன. உள்நாட்டில் மட்டுமன்றிக் கடற்கரையிலும் பரவியுள்ள ராஜ்யங்களும் சில இருக்கின்றன. பல்ஹர ராஜ்யத்தின் தலைநகரம் கடற்கரையிலிருந்து எண்பது சிந்திப் பரசங்குத் தொலைவில் இருக்கிறது. ஒரு பரசங்கு என்பது எட்டு மைலுக்குச் சமம். பல்ஹர அரசனிடம் எண்ணற்ற படைகளும் யானைகளும் இருக்கின்றன. ஆனால் அவனுடைய படையில் காலாட்களே அதிகமாயிருக்கிறார்கள். அவனுடைய தலைநகரம் மலைப்பாங்கான இடத்தில் இருப்பதே அதற்குக் காரணமாகும். அவனுடைய ராஜ்யத்திற்குப் பக்கத்திலுள்ள ராஜ்யங்களுள் கன்னோசி என்பதும் ஒன்று. அது கடற்கரையிலிருந்து மிகத் தொலைவில் இருக்கிறது. அதனுடைய அரசன் பவுரா என்பவன். பவுரா என்பது பட்டப்பெயர். கன்னோசியைத் தலைநகராய்க் கொண்ட அந்த ராஜ்யத்தின் அரசர் அனைவருக்கும் அந்தப் பட்டப் பெயர் உண்டு. கன்னோசியரசனிடம் பெரியதொரு படையிருக்கிறது. அவனுடைய ராஜ்யத்தைச் சுற்றிலும் உள்ள அரசர்கள் அனைவரும் போரில் பெரு விருப்பம் உடையவர்களாதலால், அவன் தன்னுடைய படைகளைக் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ஆகிய நான்கு திசைகளிலும் உள்ள தன்னுடைய கோட்டைகளில் நிறுத்திவைத்திருக்கிறான். (Elliot 'and Dowson i.p. 21; see also Ferrand: *Relations*, i, p. 94). அரபு ஆசிரியர் அனைவருமே அந்த அரசனுடைய பெயர் பல்ஹரா என்றும் அவனுடைய தலைநகர் மன்கிர் என்றும் எழுதிவைத்துள்ளனர். பல்ஹரா என்பது வல்லபா என்பதிலும் மன்கிர் என்பது மல்கெட் என்பதிலும் சிறிதும் ஐயமில்லை. வல்லபன் என்பது இங்கு ராஷ்டிரகூடன் என்று பொருள்படும். மல்கெட் என்பதைத் தென்னிந்தியப் பொறிப்புகள் மான்யகேடம் என்று குறித்து வைத்துள்ளன. ஒன்பதாம் நூற்றாண்டிலும் பத்தாம் நூற்றாண்டிலும் ராஷ்டிரகூட அரச வம்சமே மேற்கிந்தியாவில் மிகவும் வலிமை பெற்ற வம்சமாய் இருந்தது. (of. Ferrand, *op. cit.* n. 3 at p. 94 citing Masudi himself in support of this view; *contra* the note on Balhara, Elliot and Dowson, i, pp. 354-8, which must now be taken to be antiquated).

நிற்கின்ற ஒரு பெண் துடைப்பத்தால் மண்ணை எடுத்துப் பிணத்தின் தலைமீது வீசிக்கொண்டே, அங்குக் கூடியிருக்கும் மக்களைப் பார்த்து, பின்வருமாறு பேசுகிறாள். 'இதோ இந்தப் பிணத்தைப் பாருங்கள். இந்த உடலுக்குடையவன் நேற்று உங்கள் அரசனாய் இருந்தான். அவன் எல்லையற்ற அதிகாரம் உடையவனாயிருந்தான். அவன் வாக்கே நீங்கள் பின்பற்றிய சட்டமாயிருந்தது. உலகப் பொருள்கள் அனைத்தையும் துறந்து விட்ட நிலையில் இன்று அவன் இருப்பதை நீங்கள் காண்கிறீர்கள். காலதேவன் அவனுடைய உயிரைப் பறித்துக்கொண்டான். உலக வாழ்க்கையின் இன்பங்களில் மனத்தைப் பறிகொடுக்காமல் வாழ்வதற்கு இனியேனும் நீங்கள் கற்றுக்கொள்ளுங்கள்.' இவ்வாறு மூன்று நாள் அந்தப் பெண் தொடர்ந்து பேசிக் கொண்டே இருக்கிறாள் (sic). பின்னர் ஒரு சிதையை உருவாக்கி, அதன்மீது சந்தனக் கட்டை, கருப்பூரம், குங்குமப்பூ ஆகிய வற்றை இடுகிறார்கள். அந்தச் சிதையின்மீது உடலை வைத்துத் தீமூட்டி விடுகிறார்கள். உடல் வெந்தபின் மிஞ்சுகின்ற சாம்பலைக் காற்றில் தூவிவிடுகிறார்கள். இந்திய மக்கள் அனைவரும் பிணத்தைக் கொளுத்திவிடும் பழக்கம் உடையவர்கள்.

இந்தியாவின் ஒரு பகுதியாகிய சிலான் இந்தியத் தீவுகள் அனைத்துள்ளும் தென்கோடியில் இருக்கிறது. அரசனுடைய உடலுக்குத் தீ வைக்கும்போது அவனுடைய மனைவிமார்கள் அவனுடைய சிதையில் ஏறி வெந்து சாம்பலாவதும் உண்டு. ஆனால் அது கட்டாயமாகப் பின்பற்றவேண்டிய வழக்கமன்று.

— *Op. cit.* pp. 64-6.

௪. துறவு.

இந்திய மக்களுள் சிலர் காடுகளிலும் மலைகளிலும் சுற்றித் திரியும் வாழ்க்கையை விரும்பி மேற்கொள்கின்றனர். மக்கள் கூடியிருக்கும் இடங்களில் அவர்களைக் காண்பது அரிது. அவர்கள் காட்டில் கிடைக்கும் காய்கனிகிழங்குகளை உண்டு உயிர் வாழ்கிறார்கள். அந்தத் துறவிகள் பெண்களோடு உடலுறவு வைத்துக்கொள்ள விரும்புவதில்லை. எனவே, அவர்கள், தங்கள் உறுப்புக்கு இரும்பு வளையம் ஒன்றனை மாட்டிக் கொள்கிறார்கள். சிலர் முற்றிலும் நிர்வாணமாய் இருக்கின்றனர். இன்னும் சிலர் புலித்தோலை உடம்பின்மீது போட்டுக்கொண்டு பகலவனை நோக்கி நிற்கின்றனர். அத்தகைய துறவி ஒருவரை நான் என் கண்ணாலேயே கண்டேன். பின்னர் அவ்விடத்தைவிட்டு நான் போய்விட்டேன். பதினாறுண்டுக்குப் பின்னர் நான் மீண்டும்

அந்த இடத்திற்குச் சென்றபோது அதே துறவியை அதே நிலையிற் கண்டேன். பகலவன் ஒளியும் வெப்பமும் அவருடைய கண்களைக் குருடாக்காமல் இருந்ததைக் கண்டு நான் வியப்படைந்தேன்.

—*Op. cit.* p. 66.

**உ. மணவினை.**

இந்தியாவிலும் சீனாவிலும் திருமணம் நடைபெறுவதாய் இருந்தால், பெண் வீட்டாரும் மாப்பிள்ளை வீட்டாரும் ஒருவரையொருவர் பாராட்டிப் பரிசுகளை வழங்கிக் கொள்கின்றனர். அதன் பின்னர் மேளதாளத்தோடு திருமணம் நடைபெறுகிறது. திருமணத்தின்போது அவரவர் சக்திக்கேற்ப இருவீட்டாரும் பரிசு வழங்கிக் கொள்கின்றனர். பரிசு ரொக்கமாகவே தரப்படுகிறது. தகாத முறையில் உடலுறவு கொள்கின்ற ஆணும் பெண்ணும் மரண தண்டனை பெறுகிறார்கள். அதுவே இந்தியா முழுவதிலும் நடைமுறையில் இருக்கின்ற சட்டமாகும். ஆனால், ஒரு பெண்ணுடன் ஓர் ஆண் பலவந்தமாய்ப் புணர்ந்தான் என்பது மெய்ப்பிக்கப்பட்டால், அந்த ஆடவன் மட்டும் மரண தண்டனை அடைகிறான். பெண்ணின் இசைவோடு புணர்ச்சி நிகழ்ந்தால், அந்தக் குற்றத்தைச் செய்த ஆண் பெண் இருவருமே மரண தண்டனை பெறுவர்.

— *Op. cit.* p. 67.

**ஊ. வீடுகள்**

சீனர்களுடைய வீடுகள் மரத்தாற் கட்டப்பட்டவை. இந்தியர் வீடுகளோ வெனில், கல்லாலும், சுட்ட செங்கல்லாலும், களிமண்ணாலும், சாந்தாலும் கட்டப்பட்டவை. சீனருட் சிலரும் இத்தகைய வீடுகளைக் கட்டிக் கொள்கின்றனர்.

— *Op. cit.* p. 67.

**எ. உணவு, வழிபாடு முதலியவை; ஒற்றுமை வேற்றுமைகள்;**

இந்தியர் அரிசிச் சோறு உண்கின்றனர். சீனர் அரிசி கோதுமை ஆகிய இரண்டையும் உணவுப் பொருள்களாகப் பயன்படுத்துகின்றனர். இந்தியர் சீனர் ஆகிய இருதிறத்தாருமே சுன்னத்துச் செய்துகொள்வதில்லை.

சீனர் உருவ வழிபாடு செய்கின்றனர். முஸ்லிம்கள் அல்லாவைத் தொழுவது போலச் சீனர் கடவுளர் சிலைகளின்

முன் நின்று தொழுது வேண்டுகின்றனர். அவர்களிடம் சமய நூல்கள் உள.

•

இந்தியர் தம்முடைய தாடியை நீளமாக வளர்க்கின்றனர். அவர்களுட் சிலர் மூன்று முழ நீளமுள்ள தாடி வளர்த்திருந்ததை நான் பார்த்திருக்கிறேன். (முஸ்லிம்களைப் போல) அவர்கள் தங்களுடைய மீசையைக் கத்தரித்து ஒழுங்குபடுத்துவதில்லை. சீனருட் பெரும்பாலாருக்குத் தாடியில்லை. அவர்களுட் பெரும்பாலாருக்கு இயல்பாகவே தாடி வளர்வதில்லை. இறந்து போன மனிதனுடைய தலை மயிரையும் தாடியையும் மழித்துவிடுவது இந்தியர் வழக்கம்.

*    *    *

கோயில்களிலுள்ள விக்கிரகங்கள் தங்களோடு பேசுகின்றன என்று சீனர்களும் இந்தியர்களும் சொல்கிறார்கள். ஆனால், பேசுபவர்கள் புரோகிதர்கள், சிலைகள் அல்ல. புரோகிதர்கள் பேசிவிட்டு, சிலைகளே பேசின என்று மக்களை நம்பவைக்கிறார்கள்.

இந்தியரும் சீனரும் விலங்குகளைக் கொன்று அவற்றின் இறைச்சியை உண்கின்றனர். ஆனால் முஸ்லிம்கள் செய்வது போல அவர்கள் விலங்குகளின் கழுத்தை அறுத்துக் கொல்வதில்லை (கழுத்தையறுத்துக் கொல்வதால் விலங்குகளின் குருதி வெளியேறுகிறது.) அதற்கு மாறாக, அவர்கள் விலங்குகள் சாகும் வரையில் அவற்றின் தலையில் அடிக்கிறார்கள். முஸ்லிம்கள் கடுந்தீட்டுக்குப்பின் குளிக்கிறார்கள். இந்தியரும், சீனரும் அவ்வாறு செய்வதில்லை. (கடுந்தீட்டு என்பது இங்கு ஆண் பெண் உடலுறவைக் குறிக்கிறது.) வெளிக்குப் போனபின் சீனர்கள் கால் கழுவுவதில்லை; காகிதத்தால் துடைத்துக் கொள்கின்றனர். இந்தியர் ஒவ்வொரு நாளும் நீராடித் தம்மைத் தூய்மைப் படுத்திக் கொள்கின்றனர். அதன் பின்னரே அவர்கள் காலையுணவை உண்கிறார்கள். பெண்களுக்கு மாதவிடாய் வரும் போது இந்தியர்கள் அவர்களோடு உடலுறவு வைத்துக் கொள்வதில்லை. அந்த நாட்களில் தங்களுக்குத் தீட்டுப் படாமல் இருப்பதற்காக அவர்கள் பெண்களை வீட்டுக்கு வெளியில் இருக்குமாறு செய்கிறார்கள். சீனரோ வெனில், மாதவிடாயுற்ற பெண்களோடு உடலுறவு வைத்துக் கொள்ளுகின்றனர்; அவர்களை வீட்டுக்கு வெளியே இருக்குமாறு செய்வதும் இல்லை.

இந்தியர் பல் தேய்ப்பதற்குப் பற்குச்சியைப் பயன்படுத்துகின்றனர். இந்தியர் அனைவரும் பல் துலக்கியும் குளித்தும்

தம்மைத் தூய்மைப் படுத்திக் கொண்ட பின்னரே உணவு கொள்வர். சீனர் அவ்வாறு செய்வதில்லை.

சீனாவைக் காட்டிலும் இந்தியா பெரிய நாடு. இந்தியாவின் பரப்பளவு சீனாவின் பரப்பளவைப்போல இருமடங்கு உள்ளது. இந்திய அரசர்களின் தொகை சீன அரசர்களின் தொகையைக் காட்டிலும் பெரியது. ஆனால் சீனாவில் மக்கள் நெருக்கம் அதிகம்.

சீனா இந்தியா ஆகிய இரு நாடுகளிலும் பேரீச்ச மரம் இல்லை. ஆனால் அங்கு வேறு மரங்கள் இருக்கின்றன. அதனால் நமக்குக் கிடைக்காத கனிகள் பல அவர்களுக்குக் கிடைக்கின்றன. இந்தியாவில் திராட்சை விளைவதில்லை. சீனாவில் அது சிறிது பயிராகிறது. வேறு பழங்கள் சீனாவிலும் இந்தியாவிலும் ஏராளமாய்க் கிடைக்கின்றன. மாதுளை இந்தியாவில் மிக அதிகமாய்க் கிடைக்கிறது.

சீனர்களுக்கெனச் சமய சாத்திரம் எதுவும் இல்லை. அவர்களுடைய மதமான புத்த மதத்தின் வழிபாடு சடங்கு முதலிய அனைத்தும் இந்தியாவிலிருந்து அங்குச் சென்றவை. விக்கிரகங்களைச் சீனாவில் புகுத்தியவர்களும் சமயச் செய்திகளைத் தங்களுக்குக் கற்றுக் கொடுத்தவர்களும் இந்தியர்களே என்று சீனர் நம்புகின்றனர். பிறப்பிறப்புக் கோட்பாடு பற்றிய கொள்கையில் இந்தியா சீனா ஆகிய இரு நாடுகளிலுள்ள மக்களும் நம்பிக்கை உள்ளவர்களாய் இருக்கிறார்கள். ஒரே வகையான சமயக் கொள்கைகளிலிருந்து சீனர்களும் இந்தியர்களும் வெவ்வேறு வகையான முடிவுக்கு வருகிறார்கள்.

இந்தியாவில் மருத்துவம் தத்துவம் ஆகிய சாத்திரங்களைப் பயின்றவர் பலர் இருக்கின்றனர். அதுபோலவே சீனாவிலும் மருத்துவம் பயின்றவர் பலர் இருக்கின்றனர். நோய் நீக்கத்தில் அவர்கள் பின்பற்றும் முக்கியமான முறை சூடு போடுதலே யாகும்.

சீனர்கள் வானூல் கற்றவர்கள். இந்தியர்கள் அந்தத் துறையில் அவர்களைக் காட்டிலும் வல்லவர்கள்.

அரபு மொழி பேசத் தெரியாத இந்திய முசல்மானையும் சீனனையும் நான் கண்டதில்லை.

இந்தியாவில் குதிரைகள் மிகக் குறைவாகவே இருக்கின்றன; சீனாவில் அவை அதிகமாயிருக்கின்றன. சீனாவில் யானைகள்

இல்லை. அவை சீனவுக்குள் புகுவதைச் சீனர்கள் விரும்புவதில்லை. யானை தீ நிமித்த விலங்கு என்பது அவர்களுடைய கருத்து.

இந்திய அரசனுடைய படையில் எண்ணற்ற வீரர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் உணவு சம்பளம் போன்ற எவ்வகை ஊதியமும் பெறுவதில்லை.

புனிதப் போர் செய்யவேண்டிய தேவை நேரும்போதுதான் அரசன் படை திரட்டுகிறான். அப்போது போர்க்களத்திற்குச் செல்லும் வீரர்கள் தங்களுக்குத் தேவையான பொருள்களை வாங்கிக் கொள்வதற்குரிய பணத்தைத் தாங்களாகவே தேடிக்கொள்கிறார்கள். அரசன் எவ்விதப் பொருளுதவியும் செய்வதில்லை. ஆனால், அரபு வீரர்களைப் போலவே சீன வீரர்களும் சம்பளம் பெறுகிறார்கள்.

சீன (இந்தியாவைக் காட்டிலும்) வளமும் செழிப்பும் உடைய நாடு. இந்தியாவின் பெரும் பகுதியில் நகர்களேயில்லை— பாலைவனங்கள் மிகுதியாய் உள்ளன. சீனவிலோவெனில், ஒவ்வோரிடத்திலும் அரண்பெற்ற பெரிய நகரம் ஒவ்வொன்று இருக்கிறது. சீனவின் தட்பவெப்ப நிலை உடல்நலத்திற்கு ஏற்றதாயுள்ளது. அதனால், இந்தியாவைக் காட்டிலும் அங்கு நோயாளிகள் குறைவாய் உள்ளார்கள். அங்கு வீசும் காற்று மிகவும் தூய்மையானது. குருடர்களையும், ஒற்றைக் கண்ணுடையவர்களையும், உறுப்புநலன் இழந்தவர்களையும் அங்கு நாம் காண்பதில்லை. அத்தகைய எண்ணற்றவரை நாம் இந்தியாவில் காணலாம்.

சீனவிலும் இந்தியாவிலும் எங்கே பார்த்தாலும் பெரிய ஆறுகள் ஓடுகின்றன. அவை நம்முடைய நதிகளைக் காட்டிலும் பெரியவை. அந்த நாடுகளில் மழை மிகுதியாய்ப பெய்கிறது.

இந்தியாவில் பாலைவனங்கள் பல இருக்கின்றன. சீனவின் எல்லாப் பகுதிகளிலும் மக்கள் குடியேறிப் பயிர்த் தொழில் செய்கிறார்கள். இந்தியர்களைக் காட்டிலும் சீனர்கள் நல்ல உடலமைப்புப் பெற்றிருக்கிறார்கள். இந்தியர்களுடைய ஆடைகள் பொதி விலங்குகள் ஆகியவற்றைக் காட்டிலும் சீனர்களுடைய ஆடைகளும் பொதி விலங்குகளும் அரபு மக்களின் ஆடைகளையும் பொதி விலங்குகளையும் அதிகமாய் ஒத்திருக்கின்றன. ஆடைகளை அணிவதிலும் நகர்வலம் வருவதிலும் சீனர்கள் அரபு மக்களைப் போலவே இருக்கிறார்கள். அரேபியாவில் 'அபா' என்று

சொல்லப்படும் ஆடையையும் அணியரைப் பட்டிகையையும் சீனர்கள் அணிந்துகொள்கிறார்கள்; இந்தியர்கள் தனித் தனியான இரண்டு துணிகளை அணிந்துகொள்கிறார்கள்; ஆடவரும் மகளிரும் தங்க வளையல்களையும் இரத்தினங்களையும் அணிந்து கொள்கின்றனர்.

—*Op. cit.* pp. 68-72.

## 2. அபு ஜைது—கி.பி. 916

### ஏ. சிறப்புத் தோழமை

இந்திய அரசர் சிலர் தம்முடைய முடிசூட்டு விழாவின் போது அந்த நிகழ்ச்சிக்கென்று சிறப்பாய்ச் சமைத்த அரிசிச் சோற்றை வாழையிலையிற் படைத்து அதில் ஒரு பகுதியை உண்கின்றனர். மீதியுள்ள சோற்றை அந்த விழாவிற்கு வந்திருப்பவர்களுள் தம்முடன் மிகவும் நெருங்கிய நண்பர் முந்நூறு நானூறு பேருக்கு அளிக்கின்றனர். அந்த நண்பர்கள் பிறருடைய வற்புறுத்தலின்றித் தாங்களாகவே மனமுவந்து தோழமை என்னும் கயிற்றினால் தங்களை அரசனோடு பிணைத்துக் கொண்டவர்கள். சோற்றில் ஒரு சிறு பகுதியை அரசன் முதலில் உண்கிறான். பின்னர், அந்தத் தோழர்கள் ஒவ்வொருவராக அரசனருகிற் சென்று, அவன் அளிக்கும் சோற்றைப் பெற்று உண்கிறார்கள். அரசன் இயற்கைக் காரணங்களால் இறந்து போனாலும், கொல்லப்பட்டாலும், முடிசூட்டு விழாவின் போது நடைபெற்ற புனிதச் சடங்கில் அவனுடைய சோற்றைப் பகிர்ந்துகொண்ட நண்பர் அனைவருமே, அரசன் உயிர்துறந்த அன்றே, தாங்களாகவே மனமுவந்து தீக்குளித்து உயிர்விட வேண்டும். அதாவது, அரசன் இறந்தவுடனே அவனுடைய தோழர்களும் மறைந்து விடவேண்டும். அவர்களுடைய உடலின் ஒரு சிறு பகுதியும் எஞ்சியிருத்தல் கூடாது. அத்தகைய கடுமை வாய்ந்தது அந்தக் கடன்!

—Ferrand, *Voyage*, (Abu Zaid), p. 114.[4]

### ஐ. சில்லறைச் செய்திகள்

இந்திய அரசர்கள் கல்லிழைத்த தங்கக் கடுக்கன்களைக் காதில் அணிந்துகொள்கிறார்கள். விலையுயர்ந்த மாணிக்க

[4] ஏறக்குறைய நம் கவனத்தில் இருக்கும் காலத்தைச் சேர்ந்த நிலைமையை விளக்கும் விசித்திரச் செய்தியொன்று *The Book of the Marvels of India* என்னும் நூலில் இருக்கிறது. அதனைக் கீழே தருகிறோம்.

மாலைகளையும் மரகத மாலைகளையும் அவர்கள் கழுத்தில் அணிந்து கொள்கிறார்கள். அவற்றைக் காட்டிலும் விலையுயர்ந்தது முத்து. அதனால், பெரும்பாலும் அவர்கள் முத்து மாலையை அணிந்து கொள்கிறார்கள். உண்மையில், அரசனுடைய கருவூலத்தில் உள்ள பொருள்களுள் அதுவே முதலிடம் வகிக்கிறது. அதுவே அவனுடைய சேம நிதி.

---

இந்தியாவிற் பரவலாய்க் காணப்படும் விசித்திரப் பழக்கவழக்கங்களைப் பற்றிய பின்வரும் செய்தியை அம்ருவின் மகன் ஹாசன் எனக்குச் சொன்னான். அவனுக்கு அந்தச் செய்தியைச் சொன்னவன் ஒரு ஷெயிக். அந்த ஷெயிக் இந்தியாவுக்குச் சென்று வந்தவன்; எத்தனையோ செய்திகளை அறிந்தவன்.

ஒரு பெரிய இந்திய அரசன் கீழே அமர்ந்து உண்டுகொண்டிருந்தான். அவனுக்கெதிரில் வைக்கப்பட்டிருந்த கூட்டிலிருந்த கிளியைப் பார்த்து 'என்னோடு உண்ண வா' என்று அவன் அழைத்தான். 'பூனைக்கு அஞ்சுபவன் நான்' என்று அந்தக் கிளி உரைத்தது, 'அதனாலென்ன? நான் உன்னுடைய பலாவுஜராய் (Balaudjer) இருக்கிறேன்' என்று அரசன் சொன்னான். அதாவது, 'உனக்கு நேர்கின்ற துன்பம் எதுவாயிருந்தாலும், அதே வகையான துன்பத்தை நானும் அடைவதற்கு இசைகிறேன்' என்னும் பொருள்பட அவன் இந்திய மொழியிற் சொன்னான். பலாவுஜர் என்னும் சொல்லை அந்த முதியவன் பின்வருமாறு விளக்கினான். இந்திய அரசர் ஒவ்வொருவரும் சிலபல வீரர் சேர்ந்த ஒரு குழுவினைத் தம்மோடு வைத்துக்கொண்டிருக்கின்றனர். அந்தக் குழு உறுப்பினரின் தொகை அரசனுடைய மேம்பாட்டையும் அவனுடைய ராஜ்யத்தின் வலிமையையும் பொறுத்தது. அந்தக் குழுவினர் 'நாங்கள் தங்களுடைய பலாவுஜர்கள்' என்று அரசனிடம் சொல்கின்றனர். அரசன் அவர்களைத் தன்னோடு சேர்ந்து சோறுண்ணுமாறு செய்து அவர்களுக்குத் தன் கையாலேயே வெற்றிலை மடித்துக் கொடுக்கிறான். அதன்பின் அந்த வீரர் ஒவ்வொருவரும் தம்முடைய சுண்டு விரலை அறுத்து அரசன்முன் வைக்கின்றனர். அந்த கொடியிலிருந்து அவர்கள் அரசனை நீங்காமல் எந்நேரமும் அவனோடு இருக்கிறார்கள். அவன் செல்லுமிடத்திற்கெல்லாம் சென்றும், அவன் உண்பதையே உண்டும், அவன் குடிப்பதையே குடித்தும் அவர்கள் வாழ்கிறார்கள். அரசனுக்காகச் சமைக்கப்படும் உணவையே அவர்கள் மேற்பார்வையிடுகிறார்கள். அன்றியும் அவனோடு தொடர்புடைய ஒவ்வொரு செயலையும் அவர்கள் கண்காணிக்கிறார்கள். அரசனோடு படுத்துக்கொள்ள வருபவர் யாராயிருந்தாலும்—ஆணாயிருந்தாலும் சரி, பெண்ணாயிருந்தாலும் சரி—அவர்களை முழுச்சோதனை செய்த பிறகே வீரர்கள் அவர்களை அரசனிடம் அனுப்புவார்கள். அரசனுடைய காலுக்கு விரிக்கப்படும் கம்பளமும் அவர்களுடைய ஆய்வுக்குட்பட்ட பிறகே அங்கு விரிக்கப்படும். அரசனுக்காக வரும் உண்டியையும் பானத்தையும் அவற்றைக் கொண்டுவருபவர்கள் முதலில் உண்டும் குடித்தும் காட்டவேண்டும். இவ்வாறு அரசனுக்கு வரக் கூடிய ஆபத்து எல்லாவற்றையும் தடுப்பதற்கு அவர்கள் முயல்கிறார்கள். அரசன் இறந்தால் அவர்கள் தற்கொலை செய்துகொள்கிறார்கள். அவன் வெந்தால் அவர்களும் தீக்குளிக்கிறார்கள். அவன் நோயுற்றால் அவர்களும் தங்கள் உடலைத் துன்புறுத்தி அவனோடு துன்புறுகிறார்கள். போர்க் களத்தில்

அரசனையன்றி, படைத் தலைவர்களும் உயர்அலுவலர்களும் முத்துமாலை அணிந்துகொள்கிறார்கள். பிரபுக்கள் சிவிகையிற் செல்கிறார்கள். அவர்கள் வேட்டி கட்டிக் கொள்கிறார்கள்; கையில் சத்ரா என்னும் பொருளைப் பிடித்திருக்கிறார்கள்;

---

அவனை நீங்காமல் சூழ்ந்து நிற்கிறார்கள். உயர்குடிப் பிறப்பும், அழகும், ஆண்மையும், அறிவுமுடையவர்கள் மட்டுமே பலாவுஜர் குழுவில் சேரமுடியும். இதுவே பலாவுஜர் என்னும் சொல்லின் விளக்கமாகும்:

எனவே, 'நான் உன்னுடைய பலாவுஜராய் இருக்கிறேன்' என்று அரசன் கிளியிடம் சொன்னபோது, கிளிக்காக வைக்கப்பட்டிருந்த சோற்றில் அவன் ஒரு பகுதியை எடுத்துத் தன்வாயிற் போட்டுக்கொண்டான். உடனே கிளியும் தன்னுடைய கூண்டிலிருந்து வெளியேறி அரசனோடு அமர்ந்து கொண்டது. அப்போது அங்கு வந்த பூனையொன்று கிளியின் தலையைக் கடித்துத் துண்டாடியது. அரசன் கிளியின் தலையற்ற உடலை ஒரு பீங்கான் குவளையில் வைத்து, அதனுடன் கருப்பூரம், நறுமணப் பொருள்கள், வெற்றிலை, சுண்ணாம்பு, மிளகு ஆகியவற்றையும் வைத்தான். அதன் பின்னர், கிண்ணத்தைக் கையில் ஏந்திக்கொண்டும் முரசு ஒன்றை அடித்துக் கொண்டும் அவன் நகரத்தையும் போர்வீரர் பாசறையையும் சுற்றி வந்தான். அதன் பின்னர் ஒவ்வொரு நாளும் அதே கோலத்தில் அவன் தன்னுடைய ராஜ்யம் முழுவதையும் சுற்றத் தொடங்கினான். இவ்வாறு பல ஆண்டுகள் கழிந்தன. இறுதியில் அவனுடைய பலாவுஜர்களும் முக்கியமான குடிமக்களும் அவனையணுகி 'நீ செய்வது நன்றாயில்லை. உனக்குத் தகுதியற்ற இந்தச் செயலை நீ நீண்ட காலம் செய்துவிட்டாய். உன்னுடைய கடமையை நீ இப்போது செய்தாகவேண்டும். இல்லாவிட்டால் உன்னை நீக்கிவிட்டு நாங்கள் வேறு யாரையேனும் அரியணையேற்றி விடுவோம்' என்று சொன்னார்கள். 'நான் உன்னுடைய பலாவுஜர்' என்று சொல்கின்றவன் அவ்வாறு சொன்னதன் விளைவாகத் தானாகவே ஏற்றுக் கொண்ட கடமையைச் செய்யத் தவறினால், அவன் எத்தகைய பதவியை வகிப்பவன் ஆனாலும், மக்கள் அவனை பஹிந்தன் அல்லது அஹிந்தன் என்று சொல்வார்கள். பஹிந்தன் என்றாலும் அஹிந்தன் என்றாலும் அவர்களுடைய மொழியில் கடமை தவறிய கீழ்மகன் என்று பொருள்படும். ஒருவன் தன்னுடைய கடமையினின்று தவறுவதற்குக் கோழைத்தனமோ, வசதியின்மையோ, கயமையோ காரணமாயிருக்கலாம். காரணம் எதுவாயினும் அவன் பஹிந்தனே. இக்க விதி அரசனுக்கும் பொருந்தும், ஆண்டிக்கும் பொருந்தும். இது இந்துக்கள் கடைப்பிடிக்கும் நெறி.

இவ்வாறு இக்கட்டான நிலையில் மாட்டிக்கொண்ட அரசன் ஒரு குழியை வெட்டி, அதில் சோற்றுக் கற்றாழை, சந்தனக்கட்டை, சவித் முதலியவற்றைப் போட்டு, நெருப்புமூட்டி, அதனுட் பாய்ந்தான். அவன் வெந்து சாம்பலானதும் அவனுடைய பலாவுஜர்களும் தீக்குளித்து மாண்டார்கள். அவர்களின் தொகை சுமார் இரண்டாயிரமிருக்கும். 'நான் உன்னுடைய பலாவுஜராக இருக்கிறேன் என்று அரசன் ஒரு கிளியிடம் சொன்ன ஒரே காரணத்தினால் அத்தனை தீய விளைவுகளும் ஏற்பட்டன. (pp. 99-101) Cf. Velaikkarar (வேளைக்காரர்) of the Tamil states, *Colas*, ii, pp. 225-6; and similar narratives of Marco Polo and Ibn Battuta.

அது மயில்தோகையால் கட்டப்பட்ட கைக்குடை. வெயிலை மறைப்பதற்கு அவர்கள் அந்தக் குடையைப் பிடித்துக்கொள்கிறார்கள். (வெளியே போகும்போது) அவர்களுடைய பணியாட்கள் அவர்களைச் சூழ்ந்து செல்கிறார்கள்.

இந்தியாவிலுள்ள சாதிகளுள் ஒன்றனைச் சேர்ந்தவர்கள் உண்ணும்போது கடைப்பிடிக்கும் பழக்கம் ஒன்றிருக்கிறது. ஒரே கலத்தில் இருவர் உண்ண மாட்டார்கள். ஒரே மேசையில் இருவர் அமர்ந்து உண்பதையும் அவர்களுட் சிலர் ஏற்றுக் கொள்வதில்லை. ஒரே கலத்தில் இருவர் உண்பதைத் தீட்டு என்றும் அருவருப்பூட்டும் செயல் என்றும் அவர்கள் கருதுகிறார்கள். அவர்கள் வாணிகத்திற்காக சிராபுக்குப் போகும்போது அங்கிருக்கும் முன்னணி வணிகர்கள் அவர்களை விருந்துண்ண அழைப்பதுண்டு. விருந்துக்கு நூறு பேர் வந்தாலும், விருந்தளிப்பவர் ஒவ்வொரு விருந்தினருக்கும் ஒவ்வொரு தட்டில் தனித்தனியாக உணவு படைக்கவேண்டும்.

இந்தியாவில் அரசர்களும் உயர்நிலையில் இருப்பவர்களும் உணவருந்துவதற்காக நாள்தோறும் மேசைகள் உருவாக்கப்படுகின்றன. அந்த மேசைகள் தென்னை மரத்தின் இலைகளால் (ஓலைகளால்) மிக நேர்த்தியாய்ப் பின்னப்பட்டவை (முடையப் பட்டவை). தென்னை ஓலைகளாலேயே பலவகைப்பட்ட தட்டுகளும் சிறு சிறு உண்கலங்களும் செய்யப்படுகின்றன. அந்தத் தட்டுகளிலும் கலங்களிலும் உணவையிட்டு அவர்கள் உண்கிறார்கள். உண்டபின் மேசைகளையும் தட்டுகளையும் கலங்களையும் அவற்றுள் மிஞ்சி நிற்கின்ற உணவுப் பொருள்களோடு நீரில் எறிந்துவிடுகிறார்கள். மறு நாளும் இவ்வாறே செய்கிறார்கள்.

இந்திய அரசர்களுள் பெரும்பாலோர் அத்தாணி மண்டபத்தில் அமர்ந்து தங்களைக் காணவருபவர்களுக்குப் பேட்டியளிக்கும்போது, தம்முடைய மகளிரைப் பிற ஆடவர்கள் பார்ப்பதை அனுமதிக்கின்றனர். அந்தப் பெண்கள் மூடாக்குத் திரையிட்டுத் தங்களை மறைத்துக் கொள்வதில்லை.

—*Op. cit.* (Abu Zaid) pp. 138-9.

# XX. அல்பரூனி–சுமார் கி.பி. 1030

இந்தியாவின் தெற்கெல்லையாய் இருப்பது ஒரு மாக்கடல். இந்தியக் கடற்கரை மக்ரான் நாட்டுத் தலைநகரான டிஜ் என்னும் இடத்திலிருந்து தொடங்கி, தென்கிழக்கு முகமாய் நீண்டு, அல்-டைபல் பகுதியை நோக்கி, நாற்பது பர்சக[1] தூரம் செல்கிறது. அந்த இரண்டு இடங்களுக்கும் இடையில் தூரான் வளைகுடா இருக்கிறது. வளைகுடா என்பது ஒரு கோணத்தைப் போன்றது—அதாவது, கடல்நீர் ஒரு திருகுகோடு போல நிலத்தை அறுத்துக்கொண்டு உள்ளே செல்கின்ற இடம். அதனால் அது கப்பற் போக்குவரத்துக்கு ஆபத்து விளைவிக்கக் கூடியது. முக்கியமாக, வேலையேற்றமும் வேலையிறக்கமும் நிகழ்கின்ற சமயங்களில் கப்பல்கள் அந்த வழியாகச் செல்வது ஆபத்தானது. கழிமுகமும் வளைகுடாவைப் போன்றதுதான்; ஆனால், அது கடல்நீர் நிலத்தை அறுத்துக்கொண்டு உள்ளே நுழைவதால் ஏற்பட்டதன்று. ஓடிக்கொண்டிருக்கிற நீர்ப் பரப்பு ஒன்று ஓடாமல் நின்று கடலுடன் இணைவதால் கழிமுகம் உண்டாகிறது. கழிமுகங்களும் கப்பற் போக்குவரவுக்கு ஆபத்தானவையே. அங்குள்ளது நன்னீராதலால், கனமான பொருள்களைத் தாங்கும் ஆற்றல் உவர்நீருக்கு இருக்கின்ற அளவு அதற்கு இல்லை.

மேலே சொன்ன வளைகுடாவுக்கு அப்பால் சிறு முன்ஹாவும்[2] பெரு முன்ஹாவும் இருக்கின்றன. அவற்றுக்கு அப்பால் இருக்கின்ற கச்சிலும் சோமநாதபுரத்திலும் பவாரிஜ் என்னும் கடற்கொள்ளைக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கடலிற் கொள்ளையடிப்பதற்குப் பயன்படுத்தும் கலங்கள் பீரா என்னும் பெயருடையவை. ஆதலால் அவர்களுக்கு

[1] ஒரு பர்சகம் மூன்று மைலுக்குச் சமம்—Alberuni, ii p. 68.

[2] வடமொழியில் முகம் (வாய்) என்னும் சொல்லைக் காண்க.

அந்தப் பெயர் வந்தது. கடற்கரையிலுள்ள இடங்கள் பின் வருபவை: தவலேஷர்-தைபாலிலிருந்து[3] ஐம்பது பர்சகம்; லோஹரானி-பன்னிரண்டு பர்சகம்; பகா-பன்னிரண்டு பர்சகம்; கச்-அங்கு முகுல் மரம் வளர்கிறது; பாராய்[4]-ஆறு பர்சகம்; சோமநாதபுரம்-பதினான்கு பர்சகம்; கன்பாயத்[5]-முப்பதுபர்சகம்; அசவில்-இரண்டு நாள்; பிஹ்ரோஜ்[6]-முப்பது பர்சகம் (?); சந்தான்-ஐம்பது பர்சகம்; சூபாரா[7]-ஆறு பர்சகம்; தானா-ஐந்து பர்சகம்.

அங்கிருந்து கடற்கரை லாரான் நாட்டை அடைகிறது; அங்கேதான் ஜிமூர் நகர் இருக்கிறது. அதற்கப்பால் வல்லபமும் காஞ்சி தர்வதும் இருக்கின்றன. அதற்கப்பால் ஒரு பெரிய விரிகுடா இருக்கிறது. அதில்தான் சிரந்தீப் (சரந்தீப்) இருக்கிறது. (சிரந்தீப் என்பது இலங்கை.) விரிகுடாவைச் சுற்றிப் பஞ்சயாவர்[8] என்னும் நகரம் இருக்கிறது (Sic). அந்த நகரம் அழிந்துபோன பின்னர், ஜவுர் என்னும் பெயருடைய அரசன் மேற்கே கடற்கரையில் பத்னூர் என்னும் புது நகரை உண்டாக்கினான்.

அடுத்தபடியாகக் கடற்கரையில் இருக்கின்ற ஊர் உம்மல் நாரா என்பதாகும், அதற்கப்பால், சரந்தீபுக்கு எதிரில், ராம்ஷர் (ராமேச்வரம் ?) இருக்கிறது. அவற்றுக்கு இடையிலுள்ள கடலின் தூரம் பன்னிரண்டு பர்சகமாகும். பஞ்சயாவரிலிருந்து ராம்ஷர் நாற்பது பர்சக தூரத்திலும் ராம்ஷரிலிருந்து சேதுபந்தம் இரண்டு பர்சக தூரத்திலும் இருக்கின்றன. சேதுபந்தம் என்றால் கடற்பாலம் என்று பொருள்படும். அதுவே தசரதன் மகனான ராமன் தலைநிலத்திலிருந்து இலங்கைக் கோட்டைக்குக் கட்டிய அணையாகும். இன்று அங்கு ஒன்றோடொன்று தொடர்பற்ற மலைகள் இருக்கின்றன. அவற்றுக்கிடையில் கடல்நீர் பாய்ந்து கொண்டிருக்கிறது.

சேதுபந்தத்துக்குக் கிழக்கில் பதினாறு பர்சக தூரத்தில் குரங்குகள் வாழும் மலையான கிஹ்கிந்து[9] இருக்கிறது. ஒவ்வொரு

[3] கராச்சி. Elliot and Dowson, i, p. 375

[4] பரோடா.

[5] காம்பே.

[6] புரோச்.

[7] சொபரா.

[8] தஞ்சாவூர் (?)

[9] கிஷ்கிந்தை.

நாளும் குரக்கினத்தரசனும் அவனுடைய பரிவாரங்களும் காட்டிலிருந்து வெளியே வந்து, தத்தமக்கென்று அமைக்கப்பட்ட இடங்களில் அமர்ந்துகொள்கின்றன. அந்தப்பகுதியில் வாழும் மக்கள் நெல்லஞ் சோற்றை இலையிலிட்டுக் குரங்குகளுக்குமுன் வைக்கிறார்கள். சோற்றைத் தின்றபின் குரங்குகள் மீண்டும் காட்டுக்குள் போய்விடுகின்றன. இவ்வாறு அவற்றுக்குச் சோறிட்டுச் சீராட்டாவிட்டால் அவைகள் அந்த நாட்டையே அழித்துவிடும். அவை வெங்கொடுமை வாய்ந்தவை; அவற்றின் தொகையும் மிகப் பெரியது. அந்தக் குரங்குகள் தொடக்கத்தில் மக்களினத்தின் ஒரு பிரிவைச் சேர்ந்தவையாக இருந்தனவென்றும், அரக்கர்களோடு போர் புரிந்த ராமனுக்குத் துணைநின்றதால் அந்த மக்கள் குரக்குருப் பெற்றார்கள் என்றும் இந்தியர் நம்புகின்றனர். தனக்குச் செய்த உதவிக்குக் கைம்மாறாக, ராமன் அந்தக் கிராமங்களை அந்தக் குரங்குகளுக்கே கொடுத்துவிட்டான் என்றும் அதனால் அந்தக் கிராமங்கள் அவற்றின் பரம்பரை உடைமையாகிவிட்டன என்றும் மக்கள் நம்புகிறார்கள். வழி தவறிய மனிதன் அந்தக் குரங்குக் கூட்டத்தைக் கண்டால், அவன் இராமனுடைய பாடல்களைப் பாட வேண்டும். இராம நாம பஜனை செய்யவேண்டும். அப்படிச் செய்தால் அந்தக் குரங்குகள் அமைதியாயிருந்து பாடல்களையும் பஜனையையும் கேட்குமாம். பின்னர், அவனுக்கு ஊனும் நீரும் அளித்துச் சரியான வழியை அவனுக்குக் காட்டுமாம். இந்தச் செய்தி மெய்யா பொய்யா என்று சொல்வது எளிதன்று. ஆனால், அந்த நம்பிக்கை மக்களிடையில் நிலவுகிறது. அது மெய்யாயிருக்குமானால், பாட்டின் இனிமையால் ஏற்பட்ட விளைவுதான் அது என்று சொல்லவேண்டும். இதைப்போன்ற செய்தியொன்றை மான் வேட்டையைப் பற்றிச் சொல்லியபோது நாம் எழுதி உள்ளோம்.

**கிஷ்கிந்து**

Sachau- *Alberuni's India*, vol. I pp. 208-10.

சரந்தீப் விரிகுடாவில் முன்காலத்தில் முத்துச் சலாபம் நடந்து கொண்டிருந்தது. ஆனால். இப்போது அந்தத் தொழில் அங்கு நடைபெறுவதில்லை. இப்போது சஞ்சு என்னும் நாட்டிலுள்ள சுபாலா என்னுமிடத்தில் முத்துச் சலாபம் நடைபெறுகிறது. சரந்தீப் முத்துச் சிப்பிகள் சுபாலாவுக்குக் குடிபெயர்ந்துவிட்டன என்று மக்கள் சொல்கிறார்கள்.

**முத்து**

—Sachau- *Alberuni's India*, vol. I p. 211.

# XXI. புரோமிலுள்ள மான் பொறிப்பு: க்யான் சித்தா என்னும் அரசனுடைய ஆட்சிக் காலத்தைச் சேர்ந்தது (கி.பி. 1084-1112)

## சோழ அரச குமாரன் ஒருவனுடைய மதமாற்றம்.

பின்னர், அரசர் புத்தரத்தினம், தர்மரத்தினம், சங்கரத்தினம் ஆகியவற்றின் அருட்கனிவை விளக்கி (ஒரு தங்கத் தகட்டின் மீது ரசகந்தகை மையால்) எழுதிச் சோளி அரச குமாரனுக்கு அனுப்பினார். தன்னுடைய பரிவாரங்களோடு வீற்றிருந்த சோளி அரச குமாரன் அரசர் ஸ்ரீ திரிபுவனாதித்ய தர்மராஜருடைய கடிதத்தைப் படித்துப்பார்த்து, புத்தருடைய அருட்கனிவையும் தர்மம் சங்கம் ஆகியவற்றின் உயர்வையும் உணர்ந்து, தவறான மதக் கோட்பாடுகளை உதறித் தள்ளிவிட்டு, உண்மைச் சமயத்தில் உடனே சேர்ந்துவிட்டான், அவன் கண்டான்............ அவன் மகிழ்ந்தான்............ (I. 15............ முத்து?), முத்துப் பந்தல், எழு (வகை) மணிகளால் அழகூட்டப்பட்ட கல்ப விருட்சம்[1] எழு (வகை) மணிகளால் அணி செய்யப்பட்ட மயில்......... ஆகிய பொருள்களுடனும், வெண்

[1] விக்கிரம சோழன் 1128இல் சிதம்பரத்துக் கோயிலுக்குக் கல்பவிருட்சம் ஒன்றனைப் பரிசளித்த செய்தியை K.A.N. எழுதியுள்ள சோழர் என்னும் நூலில் 66ஆம் பக்கத்தில் காண்க. இத்தகைய நிகழ்ச்சியொன்று மிக முற்பட்ட காலத்தில் (சுமார் கி.பி. 400இல்) போர்னியோவில் நடைபெற்றது. வோகல் தொகுத்துள்ள மூலவர்ம ராசனுடைய யூபப் பொறிப்புகள் என்னும் நூலில் 214-15ஆம் பக்கங்களைப் பார்க்க.

குடை மயிற்குடை ஆகியவற்றின் நிழலில் இருந்தவளும் முழு நிறைவான அழகுடையவளும் அணி மணி பூட்டி அலங்கரிக்கப் பட்டவளும் ஆன தன்னுடைய மணமாகா மகளுடனும் ஸ்ரீ திரி புவனதித்ய தர்மராஜரிடம் சென்று, அந்தப் பொருள்களையும் தன் மகளையும் அவருக்கு அளித்துவிட்டான். ஏனைய அரசர் களிடம் அத்தகைய பொருள்கள் இல்லை. (I. 17)

—*Epigraphia Birmanica*, vol. I. Translation by C.O. Blagden.

# XXII. டியூடலா பெஞ்சமின் சுமார் கி.பி. 1170

சுமாராகக் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் பாரசீகத்தோடும் மேலைநாடுகளோடும் வாணிகம் செய்த இந்தியர்கள் மேற்கொண்ட கடற் பயணங்களுக்குக் கிஷ்த்தீவே

கிஷ்

எல்லையாய் இருந்தது (அதற்கப்பால் அவர்கள் செல்லவில்லை) என்று ஸ்பெயினைச் சேர்ந்த யூதப் பயணியான பெஞ்சமின் எழுதிவைத்துள்ளார். 'கிஷ் ஒரு பெரிய வாணிக மையம். அந்த இடத்திற்குத்தான் இந்திய வணிகர்களும் ஏனைய வணிகர்களும் தங்களுடைய சரக்கு களைக் கொண்டுவருகிறார்கள். மெசபடேமியா, யெமன், பார சீகம் ஆகிய நாடுகளைச் சேர்ந்த வணிகர்கள் பட்டு பருத்தி சணல் மென்சணல் முதலிய பலவகைப்பட்ட துணிகளையும், பட்டாணி கோதுமை வாற்கோதுமை தினை புல்லரிசி பருப்பு முதலிய பல வகைப்பட்ட உணவுப் பொருள்களையும் கொண்டு வருகிறார்கள். அந்தப் பொருள்கள் பண்டமாற்றுக்குப் பயன்படுகின்றன. இந்திய வணிகர்கள் ஏராளமான நறுமணப் பொருள்களைக் கொண்டுவருகிறார்கள். அந்தத் தீவில் வாழும் மக்கள் அந்த இருதிறத்து வணிகர்களுக்கும் இடையில் தரகு வேலை செய்து லாபம் அடைகிறார்கள். அங்கே சுமார் ஐந்நூறு யூதர்கள் வசிக்கிறார்கள்.

கிஷ்த்தீவிலிருந்து சுலம் என்னும் துறைமுகத்துக்குச் செல்லப் பதினேழு நாள் ஆகும் என்று பெஞ்சமின் சொல்கிறார். அதனால், சுலம் என்பது கொல்லமாகவோ இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் இன்னும் சற்று வடக்கே தள்ளியிருந்த வேறொரு துறைமுகமாகவோ இருக்க வேண்டும். 'சௌலம் என்பது மார்க்க போலோவும் இபன் பதூதாவும் குறிப்பிடுகின்ற கௌலங் தான் என்பதில் ஐயமில்லை' என்று ரிட்டர் கூறுகிறார். அங்கு

வாழ்ந்த மக்களையும் அவர்களுடைய அரசையும் பழக்க வழக்கங் களையும் பற்றி பெஞ்சமின் பின்வருமாறு எழுதிவைத்துள்ளார்.

'அவர்கள் குஷ் என்பவரின் மரபில் வந்தவர்கள்; சோதிடத்தில் மிகுந்த நம்பிக்கை உடையவர்கள்; கறுப்பு நிறம் உடையவர்கள். வாணிகத் துறையில் அவர்கள் மிகுந்த நாணயத்துடன் நடந்து கொள்கிருர்கள். வெளி நாட்டு வாணிகக் கப்பல் அவர்களுடைய துறை முகத்தை அடைந்தவுடனே, அரசனுடைய செயலாளர் மூவர் அந்தக் கப்பலில் ஏறி, வணிகர்களின் பெயர் களைக் குறித்துக்கொண்டு, அரசனுக்குச் செய்தியனுப்பு கின்றனர். அரசன் அந்த வணிகர்களுடைய சரக்குகளுக்குக் காப்புறுதி அளிக்கிருன். வணிகர்கள் தங்களுடைய சரக்குகளை எங்கு வேண்டுமானாலும் இறக்கிவைத்துக் கொள்ளலாம். அவை திறந்த வெளியிற் கிடந்தாலும் திருடு போகா. வணிகர்கள் அவற்றிற்குக் காவல் ஏற்பாடு எதுவும் செய்யவேண்டியதில்லை.

கொல்லம் ?

'ஆளில்லா இடத்தில் யாதேனும் வாணிகப் பொருள் கிடந்தால், அதனைக் காண்பவர் அதனை எடுத்துக் கொண்டு போய் விடக் கூடாது. எடுத்தால், அதனைக் கொண்டுபோய்ச் சந்தைக் கடையில் அமர்ந்துள்ள அரசு அலுவலனிடத்திற் கொடுத்துவிடவேண்டும். பொருளின் உரிமையாளன் தன் னுடைய பொருளைப் பற்றிய அடையாளங்களை விவரமாகச் சொன்னல், அரசு அலுவலன் அந்தப் பொருளை அவனுக்குக் கொடுத்துவிடுவான். இந்தப் பழக்கம் அந்த அரசனுடைய ராஜயம் முழுவதிலும் பின்பற்றப் படுகிறது.

'ஈஸ்டரிலிருந்து புத்தாண்டு வரையிலும் (ஏப்ரல் முதல் அக்டோபர் வரையிலும்) வேனிற் கால முழுவதுமே வெயில் மிகவும் கடுமையா யிருக்கிறது. நாளின் மூன்ரும் மணியிலிருந்து (காலை 9 மணி) மாலை நேரம் வரையிலும் மக்கள் யாரும் வெளியே போவதில்லை; வீட்டுக்குள்ளேயே அடைந்துகிடக் கிருர்கள். மாலை வந்ததும் எல்லாருமே வீட்டிலிருந்து வெளியே கிளம்பிவிடுகின்றனர். தெருக்களிலும் அங்காடிகளிலும் விளக் கேற்றி வைக்கிருர்கள். பகல்வெப்பத்தால் தடைப்பட்ட வேலைகளையெல்லாம் அவர்கள் இரவு முழுவதும் செய்கிருர்கள்.

'இந்த நாட்டில் மிளகு விளைகிறது. ஊரைச் சுற்றிலும் உள்ள நிலங்களில் மிளகு பயிர் செய்யப் படுகின்றது. ஒவ்வொரு வருக்கும் தம்முடைய மிளகுத் தோட்டம் நன்ருக அடையாளம் தெரியும். மிளகு மரங்கள் சிறியவை. அவற்றில் காய்க்கும்

*மிளகு முதலில் வெண்மையாயிருக்கிறது. மிளகுக் கொத்துகளை அறுத்து, அவற்றை ஒரு தொட்டியில் போட்டு, அவற்றின்மீது வெந்நீரை ஊற்றி, வெயிலில் உலரவைத்துவிடுகிறார்கள். காய்ந்த மிளகு கடினமாகிவிடுகிறது. அதே சமயத்தில் அது கறுப்பு நிறத்தையும் அடைந்துவிடுகிறது.*

*'லவங்கம், இஞ்சி முதலிய இன்னும் பல நறுமணப் பொருள்களும் இந்த நாட்டில் விளைகின்றன.*

**பிணத்தை நறுமண மூட்டிப் பேணுதல்**

*'இந்த நாட்டு மக்கள் இறந்து போனவர்களைப் புதைப்பது இல்லை. சடலத்துடன் சில நறுமணப் பொருள்களைச் சேர்த்து, அதனைத் துணியால் மூடி, ஒரு மணையின்மீது வைத்துவிடுகிறார்கள். ஒவ்வொரு குடும்பத்தினரும் தத்தமக்குரிய இடத்திலேயே அந்தச் சடலங்களை வைத்துக் கொள்கிறார்கள். நாளடைவில் உடலில் உள்ள தசை உலர்ந்து எலும்போடு ஒட்டிக் கொள்கிறது. அப்போது, பார்ப்பதற்கு அந்தச் சடலங்கள் உயிருள்ள மக்களை ஒத்திருக்கும். அதனால் மக்கள் இறந்துபோன தங்களுடைய பெற்றோர் முதலிய உறவினர்களை அந்தச் சடலங்களில் அடையாளங் கண்டு கொள்கிறார்கள். இவ்வாறு அந்தச் சடலங்கள் பல ஆண்டுக் காலம் பேணி வைக்கப்படுகின்றன[1]'*

—R. C. Major—*India in the fifteeth century*, pp. xlvi-xlvii. *The Itinerary of Rabbi Benjamin of Tudela*, ed. A. Asher, i. py. 137—40. (cf. M. N. Adler. *The Itinerary of Benjamin of Tudela;* pp. 63-5)

[1] பெஞ்சமின் மேலும் சில செய்திகளை எழுதி வைத்துள்ளார்:

'இந்த நாட்டு மக்கள் ஞாயிற்றை வழிபடுகிறார்கள்............ இங்கே சுமார் நூறு யூதர்களே இருக்கிறார்கள்......... அவர்கள் கருப்பு நிறமாயிருக்கிறார்கள்......... அவர்கள் நற்குணம் வாய்ந்தவர்கள், அவர்கள் யூதச் சட்டத்தைப் பின்பற்றுகிறார்கள்; அவர்களிடம் விவிலிய நூலின் (பழைய ஏற்பாடு) முதல் ஐந்து ஏடுகளும் தீர்க்க தரிசிகளின் வாசகங்களும் இருக்கின்றன; அவர்கள் தால்மதைப் பற்றியும் அதனுடைய தீர்ப்புகளைப் பற்றியும் ஓரளவு அறிந்துவைத்திருக்கிறார்கள்.'

பெஞ்சமின் கண்டித் தீவைப்பற்றி எழுதிவைத்துள்ள செய்திகள் நமக்குப் பயன்படாதவை. எனவே, அவற்றை இங்கு நாம் பெயர்த்தெழுதவில்லை. அங்கு 23,000 யூதர் இருந்தனர் என்று சொல்கிறார். அதனை நம்புவது எளிதன்று.

# XXIII. சௌ ஜூகுவா
# சுமார் கி.பி. 1225

## அ. சீலன் (சிலான்)

லன்வுலி[1]யிலிருந்து கப்பலிற் புறப்பட்டால், சீலன் தீவை நெருங்கிக் கொண்டிருக்கிறோம் என்பதை அங்கு இடை விடாது அடித்துக்கொண்டிருக்கும் மின்னலைப் பார்த்து நாம் தெரிந்து கொள்ளலாம்.

சீலன் அரசன் பறட்டைத் தலையும் கறுப்பு நிறமும் உடையவன். அவன் தலைப்பாகை அணிந்துகொள்வதில்லை, சட்டையும் அணிந்துகொள்வதில்லை. பல வண்ணம் உடைய பருத்திநூல் துணியொன்றனைத் தன் உடலைச் சுற்றிப் போர்த்துக்கொள்கிறான். காலில் செந்தோலால் ஆன செருப்பை மாட்டி அதனைப் பொற்கயிற்றால் கட்டிக்கொள்கிறான். அவன் வெளியே போகும்போது யானைமீதோ சிவிகையிலோ ஊர்ந்து செல்கிறான். வெற்றிலை பாக்கையும் சிப்பிச் சாம்பலையும் வாயி லிட்டு அவன் நாள் முழுதும் மென்றுகொண்டே இருக்கிறான்.

**மாளிகை**

அவனுடைய மாளிகை வைடூரியத்தாலும் நீலம் மாணிக்கம் ஆகிய மணிக்கற்களாலும் அணி செய்யப்பட்டுள்ளது. அவன் நடந்துபோகிற தரையே அவ்வாறு அணி செய்யப்பட்டுள்ளது. அவனுக்குக் கிழக்கு மாளிகை மேற்கு மாளிகை என இரு மாளிகைகள் இருக்கின்றன; ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு தங்கமரம் இருக்கிறது. அவற்றின் அடிமரமும் கிளைகளும் பொன்னால் ஆனவை. வைடூரியம், நீலம், மாணிக்கம் முதலிய அருமணிகளே அவற்றின் இலை, பூ, காயாய் இருக்கின்றன. ஒவ்வொரு மரத்தின்

[1] சுமத்ராவில் உள்ளது.

அடியிலும் ஒவ்வொரு பொன் அரியணை இருக்கிறது. அரியணைக்குப் பின்புறம் ஒளியை எதிரிட்டுக் காட்டாத் திரை வைக்கப்பட்டுள்ளது. அரசன் முற்பகலில் கிழக்கு மாளிகையிலும் பிற்பகலில் மேற்கு மாளிகையிலும் அமர்ந்து பேட்டி தருகிறான். அவன் கொலுமண்டபத்தில் அமர்ந்திருக்கும்போது அங்குள்ள மணிகளும், கண்ணாடி (திரை) களும், மரத்திற் குலுங்கும் மணிகளும் ஒன்றன்மீது ஒன்று ஒளிர்ந்து உதய சூரியனைப் போலப் பேரொளி வீசித் திகழ்கின்றன

**வெற்றிலை**

அரசன் வெற்றிலை பாக்குப் போட்டு மென்றபின் துப்புகின்ற தம்பலத்தைப் பிடித்துக் கொள்வதற்காகத் தங்க எச்சிற் படிக்கத்தை ஏந்திக் கொண்டிருக்கும் பணியாட்கள் நாள்முழுவதும் அவன் அருகில் நின்றுகொண்டிருக்கின்றார்கள். அரசன் துப்பும் தம்பலத்தில் 'ப்ளம் மலரும்' கருப்பூரமும் இன்னும் பல விலையுயர்ந்த பொருள்களும் இருப்பதால், தம்பலத்தை எடுத்துக்கொள்ளும் உரிமைக்காகப் படிக்கம் பிடிக்கும் பணியாட்கள் மாதம் ஒன்றுக்கு ஒரு 'ஈ'[2] பொன்னை அரசுக் கருவூலத்தில் செலுத்துகின்றார்கள்.

அரசன் தன்னுடைய கையில் 5 அங்குல விட்டமுடைய அருமணி ஒன்றை வைத்துக் கொண்டிருக்கிறான். அது நெருப்பில் இட்டாலும் வேகாது. இரவின் இருளில் அது கைவிளக்குப் போல ஒளி வீசும். அரசன் அந்த மணியால் தன்முகத்தை நாள்தோறும் தேய்த்துக்கொள்கிறான். அவனுடைய வயது தொண்ணூறு ஆண்டைத் தாண்டிவிட்டது. என்றாலும் அவனுடைய தோற்றம் இன்னும் இளமைப் பொலிவுடன் விளங்குகிறது.

**மக்கள்.**

இந்த நாட்டு மக்கள் கறுப்பு நிறமுடையவர்கள். அவர்கள் தங்கள் உடல்மீது ஒரு சராங்கை அணிந்துகொள்கிறார்கள். ஆனால், அவர்கள் தலையில் பாகையோ காலில் செருப்போ அணிந்துகொள்வதில்லை. அவர்கள் உணவை எடுத்து உண்பதற்குத் தங்கள் கைகளையே பயன்படுத்துகிறார்கள். அவர்கள் வீட்டில் பயன்படும் பாத்திரங்கள் தாமிரத்தால் ஆனவை.

இந்த நாட்டில் சிலுன்-டை[3] என்னும் மலை ஒன்றுள்ளது. அதன் முடியின்மீது மனிதக் காலடி யொன்றன் அடையாளம்

[2] ஈ என்பது தாபெல்.

[3] சிலுன்-டை என்பது செரந்தீப். நமக்குத் தெரிந்த வரையில் ஆதாம் முடியைக் குறிப்பதற்கு இந்தப் பெயரைப் பயன்படுத்திய சீன

இருக்கிறது. அதன் நீளம் 7 அடிக்குமேல் இருக்கும். அதைப் போன்ற இன்னொரு காலடியைக் கடலிற் காண்கிறோம். அது மலையி லிருந்து 300 லீ தொலைவில் இருக்கிறது. அந்த மலையில் வளர் கின்ற மரங்கள் (பெரியவை சிறியவை ஆகிய எல்லா மரங்களும்) அந்தக் காலடியை நோக்கி வளைந்து நிற்கின்றன. அந்தக் காலடிக்கு அவை தங்கள் மரியாதையைத் தெரிவிக்கின்றன போலும்!

சிலன் நாட்டில் ஒளியூடுருவு சிவப்புக் கண்ணாடியும், கருப் பூரமும், வைடூரியம் நீலம் மாணிக்கம் முதலிய அருமணிக் கற் களும் கிடைக்கின்றன. அங்கு ஏலம், மு-லன் மரப் பட்டை[4], செப்பமற்ற நறுமணத் தைலம், செப்ப மிகுந்த நறுமணத்தைலம் ஆகியவையும் கிடைக் கின்றன. வெளிநாட்டு வணிகர்கள் மேலே சொன்ன பொருள்களை வாங்கிக் கொண்டு, அவற்றிற்கு மாருக, சந்தனக் கட்டை, கிராம்பு, கருப்பூரம், தங்கம், வெள்ளி, பீங்கான் பாத்திரம், குதிரை, யானை, பட்டு ஆகியவற்றை விற்பனை செய்து விட்டுப் போகிருர்கள்.

**வாணிகப் பொருள்கள் :**

'இந்த நாடு ஆண்டுதோறும் சான்-போ-ட்சிக்குத் திறைப் பொருளை அனுப்பிவைக்கிறது.[5]

—Chau Ju-kua ; (ed. Hirth and Rockhill) I. 13. pp. 72–73.

## ஆ. மலபார் (நான்-பீ)

நான்-பீ[6] நாடு தென்மேற்குக் கோடியில் இருக்கிறது. சான் போட்சியிலிருந்து பருவக் காற்று வாய்ப்பாயிருக்கும்போது புறப்பட்டால் நான்பீ நாட்டை அடைவதற்கு ஒருமாதத்திற்குச் சிறிது அதிக காலம் பிடிக்கும்.

ஆசிரியர் இவர் ஒருவரே.—Hirth & Rockhill. இடைக்கால அரபு ஆசிரியர்கள் இந்தப் பெயரை அதிகமாய்ப் பயன்படுத்துகிருர்கள், —Cf. IbnBattuta *post*.

4 முலன் மரம் : தமிழில் இதன் பெயர் மருதம் என்று ஹர்த்தும் ராக்ஹில்லும் கருதுகிருர்கள். ஆனல், அது ஒரு வகையான லவங்க மரம் என்று பெலியோ கருதுகிருர்.

5 இந்தக் கூற்று அவ்வளவாக நம்பத்தக்கதன்று. 'திறை' என்னும் சொல் சீனர் பயன்படுத்தும் முறையில் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

6 நான்பீ நாடு அல்லது மலபார் நாயர்களின் நாடு—Hirth & Rockhill.

அந்த நாட்டின் தலைநகரம் மீயாமோ என்பதாகும். மீயாமோ என்பது விஸ்ஸி[7] என்னும் சொல் சீன மொழியில் என்ன பொருள் தருமோ அதே பொருளைத் தரும்.

அந்த நாட்டு அரசன் உடலின்மீது ஒரு துணியைப் போர்த்துக் கொண்டிருக்கிறான்; ஆனால் காலில் ஒன்றும் அணிவதில்லை. அவன் பருத்தி நூலால் நெய்யப்பட்ட வெள்ளைத் தலைப்பாகையும் வெள்ளை வேட்டியும் அணிந்து கொள்கிறான். சில சமயங்களில் அவன் ஒடுக்கமான கைகளையுடைய பருத்திநூல் சட்டை போட்டுக் கொள்கிறான். அவன் வெளியே போகும்போது முத்தும் மணியும் பதித்த முடியைத் தலையில் அணிந்துகொண்டு யானைமீது ஏறிச் செல்கிறான். கையில் தங்கக் கடகமும் காலில் தங்கச் சங்கிலியும் அணிந்து கொள்கிறான்.

**அந்நாட்டு அரசன்**

அவனுடைய அரசுச் சின்னங்களுள் செந்நிறத் தண்டில் கட்டிய மயிற்பீலிப் பதாகையும் ஒன்றாகும். அதனைக் காப்பதற்கு வீரர் அமர்த்தப்பட்டுள்ளனர். 500 வெளிநாட்டு மகளிர் அவனுடைய மெய்க்காவலராய்ப் பணிபுரிகின்றனர். அவர்கள் தங்களுடைய உடலழகுக்காகவே தெரிந்தெடுக்கப்பட்டவர்கள். அவர்களுள் சிலர் அரசன்முன் செல்கின்றனர்; சிலர் அவன் பின்னால் செல்கின்றனர். முன்னே செல்லும் மகளிர் தம் உடலின் மீது துணியைப் போர்த்துக்கொண்டிருக்கின்றனர்; இடுப்பில் ஒரு பருத்திநூல் துணியை அணிந்துள்ளனர்; ஆனால், வெறுங் காலுடன் இருக்கின்றனர். அவர்கள் ஆடிக்கொண்டே அரசன் முன்னால் செல்கின்றனர். பின்னால் செல்லும் மகளிர் குதிரை மீது சேணமின்றிச் செல்கின்றனர். அவர்கள் இடுப்பில் ஒரு துணியைக் கட்டிக்கொள்கிறார்கள்; தலை மயிரைத் தூக்கிக் கட்டிக் கொள்கிறார்கள்; கழுத்தில் முத்து மாலையும் காலில் பொற்சிலம்பும் அணிந்து கொள்கிறார்கள்; அவர்கள் உடலில் கருப்பூரம் கஸ்தூரி முதலிய நறுமணப் பொருள்களைப் பூசிக் கொள்கிறார்கள். மயிற்பீலிக் குடைகள் அவர்கள்மீது வெயில் படாமல் மறைக்கின்றன.

**பெண் காவலர்**

ஆடிக்கொண்டு போகும் மகளிர்க்கு முன்னால் அரசனுடைய அலுவலர்கள் சிவிகையிற் செல்கிறார்கள். அந்தச் சிவிகைகள் வெளிநாட்டுப் பருத்தியில் நெய்த வெள்ளைத் துணியால்

[7] விஸ்ஸி: இஃது சரியாக விளக்கப்படவில்லை.

ஆனவை. பார்ப்பதற்கு அவை தூங்கும் மஞ்சம் போல இருக்கும். அந்த மஞ்சங்கள் பொற்றகடும் வெள்ளித் தகடும் போர்த்த கம்புகளோடு கட்டப்பட்டிருக்கும். அவற்றைப் பூ-டை-கியா[8] என்று சொல்கிருர்கள்.

இந்த நாட்டில் மணற்பாங்கான நிலம் அதிகமாக இருக்கிறது. அரசன் வெளியே செல்வதாயிருந்தால், புறப்படுவதற்கு முன்னர் அவன் நூறு வீரர்களை ஓர் அரசு அலுவலனுடைய தலைமையில் அனுப்பி, வழியெல்லாம் நீர் தெளிக்குமாறு செய்கிருன். அவ்வாறு செய்வதால், காற்று வேகமாய் அடித்தாலும் புழுதி கிளம்பாதன்ரு?

மக்கள் அருஞ்சுவை உணவை அருந்துகிருர்கள். நூறு வகையாக உணவு சமைப்பதற்கு அவர்களுக்குத் தெரியும். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வகையாகச் சமைத்து அவர்கள் உண்கிருர்கள்.

அரசனிடத்தில் ஹன்-லின் என்னும் பதவிப் பெயருடைய ஓர் அலுவலன் இருக்கிருன். அவன்ருன் அரசனுக்கு உணவும் பானமும் படைக்கிருன். அரசன் அளவுக்கு மீறி உண்ணுதவாறு அவன் பார்த்துக் கொள்கிருன். அளவுக்கு மீறி உண்டு அரசன் நோய்வாய்ப் பட்டால், அவனுடைய மலத்தை ஹன்-லின் தின்று பார்த்து, அது இனித்தால் அதற்கேற்றவாறும் கசந்தால் அதற்கேற்றவாறும் அரசனுக்கு மருந்து கொடுத்துக் குணப்படுத்த வேண்டும்.

இந்நாட்டு மக்கள் கரும்பழுப்பு நிறமுடைவர்கள். அவர்களுடைய காதுகள் தோள்வரையில் நீண்டு தொங்குகின்றன.

**மக்கள்**

அவர்கள் வில்வித்தையில் திறமை வாய்தவர்கள்; வேலெறிவதிலும் வாள் வீசுவதிலும் வல்லவர்கள். அவர்கள் போரில் விருப்புடையவர்கள்; போர்க்களத்திற்குப் போகும்போது, வண்ணப் பட்டுத் தலைப்பாகை யணிந்து யானைமீது ஊர்ந்து செல்கிருர்கள்.

அவர்கள் பக்தி மிக்க பௌத்தர்கள்.[9].

8 மஞ்சில் : இது தொட்டிலைப் போன்ற ஒருவகைச் சிவிகை.

9 இந்து விக்கிரகங்கள் அவற்றை வழிபடும் முறை ஆகியவற்றுக்கும் பௌத்த விக்கிரகங்கள் அவற்றை வழிபடும் முறை ஆகியவற்றுக்கும் வேறுபாடு தெரியாமல் ஆசிரியர் குழம்புகிருர்.

இந்நாடு வெப்பமானது. இங்கே குளிர்காலம் என்பது கிடையாது. மக்கள் நெல், சணல், பயிறு, கோதுமை, தினை, கிழங்கு, காய்கறி முதலியவற்றை உண்கிறார்கள். அப்பொருள்கள் ஏராளமாகவும், மலிவாகவும் கிடைக்கின்றன,

**நாணயம்** கலப்பு வெள்ளியை வெட்டி, வெட்டப்பட்ட துண்டுகளின் மீது அரசாங்க முத்திரையை வைத்து, அவற்றை நாணயமாய்ப் பயன்படுத்துகிறார்கள். அந்த நாணயங்கள் வாணிகத்திற்கு மிகவும் பயன்படுகின்றன.

இந்த நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களுள் முத்து, வெளிநாட்டுப் பருத்தியில் நெய்த பல்வண்ணச் சீட்டித் துணி, டௌலோமியன்[10] (பருத்திநூல் துணி) ஆகியவை முக்கியமானவை.

இந்த நாட்டில் உவர்நீர் ஆறு ஒன்று இருக்கிறது. அதனுடைய பல்வேறு கால்களும் கூடுகின்ற இடத்தில் அது மிகவும் அகலமாகிவிடுகிறது. அந்த இடத்தில் அதனுடைய கரைகளில் செங்குத்தான பாறைகள் இருக்கின்றன. (அந்தப் பாறைகளே அதனுடைய கரைகளாயிருக்கின்றன.) அவற்றின் மீது சுடர்பொறிகள் (literally விண் மீன்கள்) எப்போதும் ஒளிர்ந்துகொண்டிருக்கின்றன. அந்தப் பொறிகள் தங்களுக்கிருக்கின்ற அடிப்படை உயிராற்றலால் கருவுற்று, தெளிந்த ஒளிமிக்க வைடூரியம் போன்ற சிறு மணிக்கற்களை உற்பத்தி செய்கின்றன. அந்தக் கற்கள் பாறையிலுள்ள ஓட்டைகளில் மறைந்துகிடக்கின்றன. ஆனால் அவை அவ்வப்போது நேர்கின்ற வெள்ளப் பெருக்கில் அகப்பட்டு ஆற்றுப் படுகையில் விழுகின்றன. அப்போது அரசு அலுவர்கள் தங்களுடைய ஆட்களைப் படகுகளில் அனுப்பி அவற்றைப் பொறுக்கியெடுத்து வருமாறு செய்கிறார்கள். உள்ளூர் மக்கள் அந்தக் கற்களைப் பெரிதும் மதித்துச் சேர்த்து வைத்துக்கொள்கிறார்கள்.

நான்பீ நாட்டின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டுள்ள ராஜ்யங்களின் பெயர்களைக் கீழே காண்க:

குலின் (கொல்லம்)
ஹூச்சலா (குஜராத்து)
கன்பாய் (காம்பே)

[10] சிலந்தி வலையைப்போலத் தோன்றும் கஞ்சிபோட்ட துணியாய் இருக்கலாம். இதனை மார்க்கபோலோவும் குறிப்பிடுகிறார்.—Hirth and Rockhill.

பிலிஷா (பரோச் ?)
மாலோ ஹு-வா (மாளவம்)
போங் யாலோ (மங்களூர்)
மலி மியோ (மலபார்?)
டுனுஹோ (தாணு?)
அலிஜோ [எலி? (ஏழில் ?)]
ஆலோ லோலி (கண்ணனூர்?)

இந் நாடு (நான் பீ ? ) மிகவும் தொலைவில் இருப்பதால் வெளிநாட்டுக் கலங்கள் எப்போதேனும் ஒரு முறை வருகின்றன. ஷிலோபா-சிலிகான்[11], தந்தையும் மகனும், இந்த நாட்டைச் சேர்ந்தவர்கள். இப்போது அவர்கள் ட்சுவான் (சூபு) நகரத்திற்குத் தெற்கிலுள்ள புறநகரில் வசிக்கிறார்கள்.

இந்த நாட்டுப் பொருள்கள் கிலோ டானங்[12] என்னும் இடத்துக்கும் சான்போட்சிக்கும் கொண்டு போகப்படுகின்றன.

**வாணிகம்** அங்கே அவற்றை விற்றுவிட்டு அவற்றிற்கு மாறாக ஹோச்சிப்பட்டு, பீங்கான் பொருள்கள், கருப்பூரம் (சங்-னௌ), பேதி மருந்து (ஹு-வாங் லியன்), லவங்கம், கட்டிக் கருப்பூரம், சந்தனக் கட்டை, ஏலம், கருமரம் ஆகியவற்றை வாங்கிக் கொண்டு வருகிறார்கள்[13].

நான் பீயிலிருந்து பருவக் காற்று வாய்ப்பாயிருக்கும்போது புறப்பட்டால் குலினை ஐந்து நாளில் அடைந்துவிடலாம்.

**கொல்லம்** ட்சுவான்-சௌ கப்பல் லன்லியை—அதாவது, லன் வுலியை—அடைவதற்கு 40 நாளுக்குமேல் ஆகும். குளிர் காலத்தை அங்கே கழித்தபின், அடுத்த ஆண்டு அங்கிருந்து புறப்பட்டால், இன்னுமொரு மாதப் பயணத்திற்குப் பின்னர் இந்த நாட்டை அடையலாம்.

பொதுவாக இந்த நாட்டு மக்களின் பழக்க வழக்கங்கள் நான்பீ நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களிலிருந்து மிகவும்

[11] நாயர் இருவர் பெயர்களா? (1) ஷிலோ பா. (2) சிலிகான்.

[12] பெராக் கடற்கரையிலுள்ள க்வாலாடெராங் என்னுமிடம்—ஜெரினி.

[13] மலபார் வாணிகப் பொருள்களுள் மிளகு விடப்பட்டுள்ளது. சீனர்கள் செய்த மிளகு வாணிகம் முழுவதுமே (அல்லது ஏறக்குறைய முழுவதுமே) இந்தியாவை அடுத்த தீவுகளுடன் நடைபெற்றது என்பது இதற்குக் காரணமாயிருக்கலாம்.—Hirth and Rockhill.

வேறுபட்டவை யல்ல என்று கூறலாம். தென்னையும் சம்பங்கி மரமும் இந்நாட்டு விளைபொருள்களுள் முக்கியமானவை. இந் நாட்டு மக்கள் தேங்காயுடன் தேனையும் ஒரு பூவின் சாற்றையும் கலந்து புளிக்கவைத்துத் தங்களுக்குத் தேவையான மது பானத்தைச் செய்து கொள்கிறார்கள்.

'அவர்கள் வில்வித்தையில் மிகவும் ஈடுபாடு கொண்டவர்கள். போருக்குப் போகும்போது அவர்கள் தங்களுடைய தலையில் பட்டுப் பாகையை அணிந்து கொள்கிறார்கள்.'

வாணிகத் துறையில் அவர்கள் பொன் நாணயங்களையும் வெள்ளி நாணயங்களையும் பயன்படுத்துகிறார்கள். பன்னிரண்டு வெள்ளி நாணயங்கள் ஒரு தங்க நாணயத்திற்குச் சமம். இந்த நாடு வெப்பமுடையது; குளிர்காலமே இங்குக் கிடையாது. சான்-போட்சீ, கி யேன்-பீ, கி-டோ[14] ஆகிய நாடுகளிலிருந்து கப்பல்கள் ஒவ்வோராண்டும் இந்த நாட்டுக்கு வருகின்றன. நான்பீ நாட்டு வாணிகப் பண்டங்களே இந்த நாட்டு வாணிகப் பண்டங்களாகவும் இருக்கின்றன.

'பெருவாரியான தலீகள் இந்த நாட்டில் வாழ்கிறார்கள்.'

இந்த நாட்டு மக்கள் குளிக்கும்போதெல்லாம் தங்கள் உடலுக்கு மஞ்சள் பூசிக்கொள்கிறார்கள். புத்தருடைய உடலைப் போலத் தங்கள் உடலும் பொன்னிறம் பெறவேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள்.[15]

—Chau Ju-kua, 1. 16, pp. 87-89.

[14] இந்த ஊர்கள் அனைத்தும் சுமத்ராவில் உள்ளவை.

[15] இந்த அதிகாரத்திலுள்ள செய்திகள் எல்லாம் லிங்-வை-டா-டா என்னும் நூலிலிருந்து திரட்டப்பட்டவை. அதில் பின்வரும் செய்திகளும் இருக்கின்றன. 'இந்த நாட்டின் அரசன் சொர்க்கத்தை வழிபடுகிறான். எருதைக் கொன்றவன் மரண தண்டனை பெறுகிறான். அரேபியர்களுடைய நாட்டுக்குப் போவதற்காகப் பெரிய கப்பல்களில் புறப்பட்டு வருகிற சீன வணிகர்கள் குலினில் இறங்கிச் சிறு கப்பல்களில் ஏறிக்கொள்ள வேண்டும். தென்காற்று வாய்ப்பாய் அடிக்கும்போது குலினிருந்து புறப்பட்டால் அவர்கள் ஒரு மாதத்தில் தாங்கள் போகவேண்டிய இடத்தை அடையக் கூடும். ஆனால், அவர்கள் சீனாவுக்குத் திரும்புவதற்கு இரண்டாண்டு பிடிக்கலாம்............குலின் மக்கள் கறுப்பு நிறமுடையவர்கள். அவர்கள் பருத்தி நூலில் நெய்த வெள்ளைத் துணியை உடல்மீது போர்த்துக் கொள்கிறார்கள். அவர்கள் தாடியையும் தலைமுடியையும் முடிக்கொள்வதில்லை, எடுத்துக்கட்டுவதும் இல்லை. அவர்கள் செந்தோல் செருப்புப் போட்டுக்கொள்கிறார்கள். அதனால், அவர்கள் நடக்கும்போது அவர்களுடைய

## இ. ஹு-ச்சலா (குஜராத்து)

ஹு-ச்சலா[16] ராஜ்யத்தின் அதிகாரத்திற்கு அடங்கிய நகரங்களின் தொகை ஒரு நூறுக்கு மேலிருக்கும். அதனுடைய (முக்கிய) நகரத்தைச் சுற்றி நான்கு சுவர்கள் கட்டப்பட்டுள்ளன.

இந்த நாட்டு மக்கள் வெள்ளை நிறம் உடையவர்களாகவும் துப்புரவான தோற்றம் உடையவர்களாகவும் இருக்கிறார்கள். ஆடவர் மகளிர் ஆகிய இருபாலாருமே தம்முடைய காதுகளில் இரட்டை வளையங்களை மாட்டித் தொங்கவிட்டுக்கொள் கிறார்கள். அவர்கள் உடலைப் பிடிக்கின்ற இறுக்கமான ஆடைகளை அணிந்து, அவற்றுக்குமேல் பருத்திநூல் சராங் ஒன்றைப் போர்த்துக்கொள்கிறார்கள். தலையில் வெள்ளைப் பிடரிக் கவிகையும் காலில் செந்தோல் செருப்பும் அணிந்துகொள்கிறார்கள். ஊன் உண்ணக் கூடாது என்று அவர்களுக்குத் தடை விதிக்கப் பட்டுள்ளது.

இந்த நாட்டில் 4000 பௌத்தக் கோயில்கள் இருக்கின்றன. அவற்றில் 20,000 நடன மாதர் இருக்கின்றனர். புத்தருக்கு (புத்தர் சிலைக்கு) திருவமுது படைக்கும்போதும் மாலை சாத்தும்போதும் (ஒரு நாளுக்கு இருமுறை)பாடுவது அவர்களுடைய பணி. மலர்களை, அவர்கள் நூல்கயிற்றால் மாலைகளாகவும் செண்டுகளாகவும் கட்டி புத்தருக்குச் சாத்துகிறார்கள். அதற்காக அவர்கள் நாளொன்றுக்கு 300 சட்டி நூலைப் பயன் படுத்துகிறார்கள் (சட்டி என்பது சீனக் கல்லெடை அளவு).

இந்த நாட்டில் நானூறுக்கும் அதிகமான போர் யானைகளும் சுமார் ஒரு லட்சம் போர்க் குதிரைகளும் இருக்கின்றன. அரசன் வெளியே போகும்போது யானைமீது ஊர்ந்து செல்கிறான். அப்போது அவன் தலையில் தொப்பி அணிந்து கொள்கிறான். அவனுடைய பணியாட்கள் வாளைக் கையிலேந்திக் குதிரை மீது ஏறிச் செல்கிறார்கள்.

அவுரி, செம்மரப் பிசின் (மருந்துக்கும் தோல் பதனிடுவதற்கும் பயன்படும் துவர்ப்புப் பொருள்), நெல்லிக்காய், வெளி

---

கால்கள் வண்ணம் பூசிய லோஹனின் கால்களைப்போலத் தோன்று கின்றன......... அரசன் தன் உடலைப் பருத்திநூல் துணியால் போர்த்துக் கொள்கிறான். அவன் வெளியே போகும்போது பருத்திநூல் துணியாலான சிவிகையிலோ யானைமீதோ ஊர்ந்து செல்கிறான்.'

[16] குஜராத்தைப்பற்றிச் சீன நூல்களிற் காண்கின்ற குறிப்புகளுள் முதற் குறிப்பு இதுதான்.

நாட்டுப் பருத்தியில் நெய்த பல்வண்ணத்துணி ஆகியவை இந்த நாட்டு வாணிகப் பொருள்களாகும். வணிகர்கள் இந்தச் சரக்குகளைத் தஷீ நாட்டில் விற்பனை செய்வதற்காக ஒவ்வோர் ஆண்டும் எடுத்துச் செல்கிறார்கள்.

—Chau Ju-kua, I. 17, p. 92.

## ஈ. சோழ நாடு (சோழ மண்டலக் கடற்கரை)

### சூலியன்

சூலியன் இராஜ்யம் மேலைநாட்டின் தெற்கு யின்-டுவாய்[17] இருக்கிறது. கிழக்கே அதனுடைய தலைநகரம் கடற்கரையிலிருந்து 5லீ தொலைவில் உள்ளது. மேற்கே 1500 லீயிக்கு அப்பால் மேற்கிந்தியா இருக்கிறது. தெற்கே 2500 லீ சென்றால் லோலனை[18] அடையலாம். வடக்கே 3000லீ சென்றால் டுன் டியன் என்னும் ஊரை அடையலாம்[19].

இந்த நாடு சீனாவோடு பழங்காலத்திலிருந்து வாணிகஞ் செய்யவில்லை. கடல் வழியாகச் சுமார் 411, 400 லீ பயணஞ் செய்த பின் ட்சுவன்-சூ என்னும் ஊரை அடையலாம்.

இந்த நாட்டுக்குப் போக விரும்புபவர்கள் குலினில் இறங்கி வேறு கப்பலில் ஏறவேண்டும்[20]. புகான் இராஜ்யத்தின்

[17] அதாவது, இந்திய நாட்டின் தீபகற்பப் பகுதி.

[18] சீலன் என்பதுதான் லோலன் என்று தவறாய்க் குறிக்கப் பட்டுள்ளதோ?

[19] 'வடக்கே 3,000 லீ சென்றால்' என்பதற்கு மாறாக 'கிழக்கே 3,000 லீ சென்றால்' என்று திருத்தவேண்டும். டுன்சுன் (டுன்டியன்) மலேயாத் தீபகற்பத்தின் தென்கோடிக்கு அருகில் இருந்தது என்று கருதலாம்.

[20] சோழமண்டலக் கடற்கரைக்குச் செல்வதற்குக் கடல்வழியாகக் கொல்லத்துக்கு வந்து, அங்கிருந்து வேறு கப்பலில் ஏறவேண்டும் என்று சௌ-கூ-பீயும் சௌஜு-குவாவும் சொல்வது ஒரு வழி. இன்னொரு வழி பர்மாக் கடற்கரை ஓரமாகவும் இந்தியாவின் கிழக்குக் கடற்கரை ஓரமாகவும் வருவது. எனவே, வங்காள விரிகுடாவைத்தாண்ட இரு வழிகள் இருந்தன. (1) மலாக்காக் கடற்காலிலிருந்து சிலானுக்கும் கொல்லத்துக்கும் வருவது—அதாவது, வங்காள விரிகுடாவை அதனுடைய மிகவும் அகலமான இடத்தில் கிழக்கு மேற்காகத் தாண்டி வருவது. (2) மலாக்காக் கடற்காலில் தொடங்கி, பர்மாக் கடற்கரை இந்தியாவின் கிழக்குக் கடற்கரை ஆகியவற்றின் வழியாக வருவது.

வழியாகவும் இந்த நாட்டுக்குச் செல்லலாம் என்று சிலர் சொல்கின்றனர்.

இந்த நாட்டில் ஏழு சுற்றுமதில்களை உடைய நகரம் ஒன்று இருக்கிறது. அந்த மதில்களின் உயரம் 7 அடியாகும். ஒவ்வொரு சுற்றுக்கும் இடையில் 100 காலடி இடைவெளி இருக்கிறது. வெளிச் சுவர் தெற்கு வடக்காய் 12 லீ நீளமும், கிழக்கு மேற்காய் 7 லீ நீளமும் இருக்கின்றது. நான்கு சுவர்கள் செங்கல்லாலும் இரு சுவர்கள் மண்ணாலும் கட்டப்பட்டவை. மையத்தில் இருக்கும் சுவர் மரத்தால் கட்டப்பட்டது (அவற்றின் மீது?) மலர்தரு மரங்களும் கனிதரு மரங்களும் பிற மரங்களும் வைக்கப்பட்டுள்ளன.

முதற் சுவரும் இரண்டாம் சுவரும் மக்கள் வாழும் வீடுகளைச் சூழ்ந்திருக்கின்றன. அந்தச் சுவர்களைச் சுற்றிலும் அகழிகள் இருக்கின்றன. மூன்றும் சுவரும் நான்காம் சுவரும் அரசு அலுவர்களுடைய வீடுகளைச் சூழ்ந்திருக்கின்றன. ஐந்தாம் சுற்றில் அரசனுடைய நான்கு புதல்வர்கள் வாழ்கிறார்கள். ஆறும் சுற்றில் பௌத்த மடங்கள் இருக்கின்றன. அவற்றில் துறவிகள் (குருமார்கள்) வாழ்கிறார்கள். ஏழாம் சுற்றில் அரசனுடைய மாளிகையைச் சேர்ந்த 400 கட்டடங்கள் இருக்கின்றன.

அங்கே 31 பு-லோக்கள்[21] இருக்கின்றன. அவற்றுள் 12 மேற்கே இருக்கின்றன. அவை பின்வருவன:

சீட்டுனி (சித்தூர்).
ஷியாலுனி.
லோபாலி பீபாயி.
புலின்ப புனி (பிரமபுரி).
குடன் புலின் புடோங் (காவிரிப் பட்டினம்).
குலி (கோயில்).
பொலுன்ட்சான்.



[21] புலோ=புரம் (வடமொழி.) இங்குத் தரப்பட்டுள்ள பட்டியலை சௌஜு-குவாவைத் தவிர வேறு யாரும் குறிப்பிடவில்லை. இந்தப் பட்டியலில் உள்ள பெயர்களுள் ஒவ்வொன்றும் எங்குத் தொடங்குகிறது எங்கு முடிகிறது என்று அறிந்துகொள்ள வழியில்லை. அவை எந்தெந்த இடங்களைக் குறிக்கக்கூடும் என்பதைப்பற்றி ஹர்த், ராக்ஹில் ஆகியவர்களின் கருத்தைப் பிறைக்கோடுகளுக்குள் எழுதியுள்ளோம். மூலநூலிற் காணும் சீன எழுத்துகளை வேறு வகையாய்ப் பிரித்து எழுதினால் வேறு பெயர்கள் கிடைக்கக்கூடும் என்பதும் உண்மையே.

பன்டி இயேட்டி (பண்டல் கண்டு).
யென்லிச் சீலி.
நாபுனி (நாகபுரி).
சோகுலின்.
யாலிச் சோலின் (எல்லிச்பூர்).

தெற்கிலுள்ள 8 பு-லோக்கள் பின்வருவன :

வுயா கியா லிமலன்.
மேய்க் குலிக் கூட்டி (மோட்டுப் பல்லி).
ஷோலினி (ஜலியத்).
மிடோ லோமோ (மதுரை)
கியேலன் புடோங் (கலிங்கப் பட்டினம்).
மோங்கியே லின்கியா லான் (மங்களூர்)
பாலி பாலியூ.
யாலின்சி மோங்கியேலன்
வடக்கிலுள்ள 12 பு-லோக்கள் பின்வருவன :
பலோயே (வல்லபி).
வு மோலி கியாங்.
சுலின்.
கியாலி மோங்கியேலன்.
ட்சிகியேமலன்.
வூ சோ மோங் கி யேலன்.
பீ லின் கி யேலன்.
புலோங் ஹோலன்.
பவு பாலே.
டியேன் சூலி.
லூ சோலோ.
மிமோங் கியேலன்.

குற்றவாளிகளுக்கு அரசனுடைய அமைச்சர்களுள் ஒருவர் தண்டனையளிக்கிறார். குற்றம் சிறியதாயிருந்தால், குற்றவாளியை ஒரு மரத்தில் கட்டித் தடியால் அடிக்கிறார்கள். ஐம்பது, எழுபது, நூறடி வரையிலும் அடிக்கலாம். கொடுங்குற்றங்களுக்குத் தலையை வாங்குதல் யானையின் காலில் நசுக்குதல் ஆகிய தண்டனைகள் தரப்படுகின்றன.

அரசமாளிகையில் அளிக்கப்படும் விருந்துகளின்போது இளவரசனும் அரசனுடைய நான்கு அமைச்சர்களும் அரியணைக்கு அருகில் சென்று அரசனை வணங்குகிறார்கள் (சலாம் செய்

கிறுர்கள்). அதன்பின் விருந்தினர் அனைவரும் ஆடிப்பாடி மகிழ்கின்றனர். அவன் (அரசன்) மது அருந்துவதில்லை; ஆனால், இறைச்சி தின்கிறான். உள்ளூர் வழக்கப்படி அவன் பருத்திநூல் ஆடைகளை அணிந்துகொள்கிறான்; மாவடை தின்கிறான். அவனுக்கு உணவு பரிமாறவும் உடனிருக்கவும் 'எண்ணற்ற கணிகையர் இருக்கின்றனர். அவர்களுள் மூவாயிரம் பேர் நாள் தோறும் முறைபோட்டுக்கொண்டு அவனுக்குப் பணிவிடை செய்கின்றனர்.'

**அரசு விருந்துகள்**

ஒரு குடும்பத்தில் திருமணஞ் செய்ய வேண்டுமானால் மணமகன் வீட்டார் ஒரு பெண்ணிடம் தங்கத்தாலோ வெள்ளியாலோ செய்த மோதிரம் ஒன்றைக் கொடுத்து மணமகள் வீட்டுக்கு அனுப்புகின்றனர். மூன்று நாட்களுக்குப் பிறகு மணமகன் குடும்பத்தினர் கூடி மணமக்களுக்குத் தர விரும்பும் நிலம், பருத்தி, வெற்றிலை, பாக்கு, மது முதலிய சீர்வரிசைகளை முடிவுசெய்கிறார்கள். அதன்பின், மணமகள் வீட்டாரும் வெள்ளி மோதிரமோ தங்க மோதிரமோ ஒன்றையும் மணமகள் அணிந்து கொள்ளும் யூவனேத் துணி[22] ஒன்றையும், பூவேலை செய்த துணி ஒன்றையும் மணமகனுக்கு அனுப்புகின்றனர். இந்தச் சீர்கள் நடந்த பிறகு மணமகன் அந்தப் பெண்ணை மணந்து கொள்ள விரும்பாவிட்டால், மணமகளுக்குக் கொடுத்த பரிசுகளை அவன் திரும்பிக் கேட்க முடியாது; மணமகள் அந்த மாப்பிள்ளையை மணக்க விரும்பவில்லை என்றால், மணமகன் கொடுத்த பரிசைப்போல இருமடங்கு பரிசுகளை அவள் திருப்பித் தர வேண்டும்.

**திருமண முறை**

இந்த ராஜ்யத்தில் விதிக்கப்பட்டுள்ள வரிகள் மிகவும் அதிகமாகவும் அவற்றின் சுமை மிகவும் பெரிதாகவும் இருப்பதால் வணிகர்கள் அருமையாகவே அங்குச் செல்கிறார்கள்,

'இந்த நாடு மேற்கிலுள்ள (இந்தியாவின் மேற்கிலுள்ள?) ராஜ்யங்களோடு போரிட்டுக் கொண்டிருக்கிறது. அரசனிடம் 60,000 போர் யானைகள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஏழெட்டடி உயரம் உடையது. போர்க்களத்திற்குப் போகும்போது

**போர் யானைகள்**

[22] யூவனே: மேற்கிந்தியாவின் பகுதிகளில் நெய்யப்பட்ட ஒருவகை மெல்லிய மஸ்லின் துணியாக இருக்கலாம்.

இந்த யானைகள் தங்கள் முதுகின்மீது வீடுகளைச் சுமந்து செல்கின்றன. அந்த வீடுகளில் போர் வீரர்கள் நிறைய இருக்கிறார்கள். அவர்கள் தொலைவிலிருந்து சண்டையிடும்போது வில்லம்புகளையும் அண்மையிலிருந்து சண்டையிடும்போது வேல்கம்புகளையும் பயன்படுத்துகிறார்கள். போரில் வெற்றி பெறுகின்ற யானைகளுக்கு அவற்றின் சிறப்பைக் காட்டுகின்ற கௌரவப் பெயர்கள் வழங்கப்படுகின்றன.[23]

'இந்த நாட்டு மக்கள் முன்கோபமும் முரட்டுத்தனமும் உடையவர்கள்; உயிரைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாதவர்கள். அரசன் முன்னிலையில் வாட்போர் புரிவதற்கும் அதில் இறந்து படுவதற்கும் தயங்க மாட்டார்கள்.'

'அப்பனும் மகனும், அண்ணனும் தம்பியும் தனித்தனி பாத்திரத்தில் சமையல் செய்து தனித்தனி தட்டுகளில் உண்கிறார்கள், எனினும்; குடும்பக் கடமைகளை நன்றாக உணர்ந்து செயல் படுகிறார்கள்.'

முத்து, யானைத் தந்தம், பவழம், ஒளியூடுருவு கண்ணாடி, வெற்றிலை, பாக்கு, ஏலம், ஒளியூடுருவாக் கண்ணாடி, பருத்தி நூல் துணி, பல்வண்ணப் பட்டுநூல் கலந்த பருத்திநூல் துணி, ஆகியவை இந்த நாட்டில் உற்பத்தியாகும் வாணிகப் பொருள்கள்.

நாற்கால் விலங்குகளுள் ஆடு மாடு முதலியவற்றையும், பறவைகளுள் கிளி நெடுவால் பகட்டு வண்ணக் கோழி ஆகிய வற்றையும் வளர்க்கிறார்கள். பழவகைகளுள் யூகான், டோங்லோ, பாரசீகப் பேரீச்சம்பழம், கான்லோ, குன்லுன் ப்ளம், போலோமி (பலாப்பழம்) ஆகியவற்றைப் பயிர் செய்கிறார்கள்.

[23] சௌ-கூ-பீ மேலும் கூறுவதாவது: சிலர் அவற்றின் (யானைகளின்) முதுகின்மீது பூவேலைப்பாடு பெற்ற வீடுகளைக் கட்டுகின்றனர்; தங்க லாயங்களை அவற்றிற்குக் கட்டித் தருகின்றனர். யானைகள் நாள்தோறும் அரசன்முன் கொண்டுவரப்படுகின்றன. அரசனும், அரசு அலுவலர்களும் ஏனைபோகும் தங்களுடைய தலைமுடியைத் திருகி முடித்துகொள்கிறார்கள். பொன் வெள்ளி நாணயங்கள் இங்குச் செலாவணியில் இருக்கின்றன. இந்த நாட்டில்......... கருப்பூரம், வைடூரியம் முதலிய பொருள்கள் கிடைக்கின்றன. மேலும், முத்து, யானைத் தந்தம், பலவண்ண அம்பர், பலவண்ணப் பட்டுநூல் கலந்த பருத்தித் துணி முதலியவையும் இங்கு உற்பத்தியாகின்றன.

மலர் வகைகளுள் வெள்ளை மல்லிகை, சான்ஸி, ஷோட்சீசாங், லிட்சியூ, நீல மஞ்சள் பச்சைப்போலோ, யுஹூலியேன்சான், சிவப்புக் கானு ஆகியவை இங்கு வளர்கின்றன.[24]

உணவுப் பொருள்களுள் பச்சை கறுப்புப் பயிறுகளும், கோதுமையும், நெல்லும் விளைகின்றன. மூங்கிலும் இந்த நாட்டில் வளர்கிறது.

**தூதுக் குழுக்கள்**

முன்பெல்லாம் அவர்கள் நமது அரனுக்குத் திறை செலுத்துவதில்லை. ஆனால், 'டாச்சுங், சியாங் பூ காலத்தின் எட்டாம் ஆண்டில் (கி.பி. 1015) இந்த நாட்டு அரசன் முத்து முதலிய திறைப் பொருள்களுடன் ஒரு தூதுக் குழுவை அனுப்பினான். தொலைவில் இருந்த ஒரு நாட்டின் மரியாதையைச் சீன நாகரிகத்திற்குத் தெரிவிப்பதற்குத் தூதுக்குழு விரும்பியது.' என்று மொழிபெயர்ப்பாளர்கள் சொன்னார்கள். மாளிகையின் பக்க வாசலில் அவர்கள் தங்கியிருக்கலாமென்றும், அரசவை ஆண்டுப் பதிவாளர் கல்லூரியின் உறுப்பினர்கள் அவர்களுக்கு விருந்தளிக்க வேண்டுமென்றும் பேரரசர் ஆணை பிறப்பித்தார். பேரரசருடைய தயவால் அவர்கள் கியூட்சித் தூதர்களுக்குச் சமமான தகுதியைப் பெற்றார்கள். அன்று பேரரசரின் பிறந்த நாளாய் இருந்ததால் புனித அரங்கில் நடைபெற்ற பாராட்டு விழாவைக் காணும் அரிய வாய்ப்பை அவர்கள் அடைந்தார்கள்.[25]

[24] இந்தப் பெயர்களுள் பெரும்பாலானவை என்ன பூக்களைக் குறிக்கின்றன என்பது தெரியவில்லை. அவை வெளிநாட்டுப் பெயர்கள் என்று கருதலாம்.

[25] முன்னைய ஆசிரியர் இருவருடைய நூல்களிலும் இல்லாத செய்திகள் சில மா என்னும் நூலிலும் சுங்ஷி என்னும் நூலிலும் இருக்கின்றன. சூலியன் நாட்டுத் தூதர்களின் தலைவன் சோலிசான்வோன் என்னும் பெயருடையவன் என்று சுங்ஷீ சொல்கிறது. சோலி என்றால் சோழன் என்று பொருள்படும் என்று கருதலாம். தூதுக் குழுவின் பயணத்தைப்பற்றித் தூதர் தலைவன் பின்வருமாறு சொன்னான்: 'சூலியனைவிட்டபின் 77 பகலும் 77 இரவும் பயணஞ் செய்தோம். வழியில் நா-வூ-டன் என்னும் தீவை (தலைநிலத்தை)யும் சோலிசிலன் தீவையும் (சோழர்களுடைய சிலான்?) கடந்து சான்பின் நாட்டுக்கு வந்தோம், (சான்பின் எந்த நாடு என்று தெரியவில்லை; பெகுவில் இருந்த ஓர் இடமாக இருக்கலாம்.) அதன்பின் 61 பகலும் 61 இரவும் பயணஞ்செய்து, இமாலோலி என்னும் தீவைக் கடந்து, குலோ நாட்டுக்கு வந்தோம். (இமாலோலி எந்த இடமென்று தெரியவில்லை. குலோ என்பது மலேயாத் தீபகற்பத்தின் மேற்குக் கடற்கரையில் அல்லது சுமத்ராவில் இருந்திருக்கலாம்.) குலோவில் குலோ என்னும் பெயருடைய மலையொன்று இருக்கிறது. அதனால்தான் அந்நாட்டுக்கு அப்பெயர் வந்தது.

'சினிங் பத்தாம் ஆண்டில் (கி.பி. 1077) அவர்கள் மீண்டும் தங்களூரில் உற்பத்தியான பொருள்களைத் திறைப்பொருளாய் அனுப்பினுர்கள். பேரரசர் ஷ-ன்ட்சுங் தம் அரண்மனையின் உள்படு கருமத் தலைவன் ஒருவனை அனுப்பி அந்தத்திறை கொண்டு வந்த தூதர்களை வரவேற்கச் செய்தான்.'

(இந்தியாவில் உள்ள) நன்னிஹு-வாலோ முதலிய ஏனைய ராஜ்யங்கள் ஒருநூறுக்குமேல் இருக்கும். அவை யெல்லாமே 'மேற்கு' (lit. மேற்குச் சொர்க்கம்) என்னும் சொல்லில் அடங்கியவை.

---

மீண்டும் 71 பகலும் 71 இரவும் பயணஞ்செய்து, கிபாபா என்னும் தீவையும் (அடையாளந் தெரியவில்லை) சான்புலா அல்லது சாம்புலோ என்னும் தீவையும் (அடையாளந் தெரியவில்லை) கடந்து, சான்போட்சி நாட்டையடைந்தோம்.

மீண்டும் 18 பகலும் 18 இரவும் பயணஞ்செய்து மான்ஷான் ஆற்றின் கடல்வாயையும் (காம்போஜத்தில்?) டீயென் சூத் தீவுகளையும் (புலோ அவோர்?) கடந்து, பின்-டோவுலாங் தலைநிலத்துக்கு (பதரன்முனை) வந்தோம். அங்கிருந்து கிழக்குத் திசையில், கப்பலுக்கு 100லீ தொலைவில் சீ வாங் மூவின் சமாதி இருந்தது.

அதன்பின் 20 பகலும் 20 இரவும் பயணஞ்செய்து, யாங் தீவையும் (புலோ கப்பீர்) கியூசிங் தீவையும் கடந்து, குவாங் டுங் (கான்டன்) துறைமுகத்தைச் சேர்ந்த பீப்பாத் தீவுக்கு வந்தோம்.

எங்கள் நாட்டிலிருந்து குவாங்செளவுக்கு வந்துசேர 1150 நாட்கள் ஆயின.

முன்னரே கூறியபடி, இந்தத் தூதுக்குழுவைப்பற்றி நமக்குக் கிடைத்துள்ள செய்திகளில் அளவுக்கு மீறிய உயர்வு நவிற்சியைக் காண்கிறோம். சூலியன் நாட்டு அரசன் சீனப் பேரரசருக்கு அனுப்பிய பரிசுகளுள் 21,000 அவுன்ஸ் முத்தும் 60 யானைத் தந்தங்களும், 60 சட்டி குங்கிலியமும் இருந்தன என்றும், தூதன் பேரரசருக்குக் கொடுத்த பரிசுகளுள் 6600 அவுன்ஸ் முத்தும் 3300 சட்டி நறுமணப் பொருள்களும் இருந்தன என்றும் மாட்வான்லின் எழுதிய குறிப்புகளிலும் சுங்ஷீயிலும் படிக்கிறோம்.

சூலியன் தூதர்களுக்கு கியூட்சி கூச்சா (சீனப் பேரரசின் மேலாதிக்கத்திலிருந்த கிழக்குத் துருக்கிஸ்தானம்) என்னும் நாட்டுத் தூதர்களுக்குச் சமமான தகுதி அளிக்கப்பட்டது என்பதை நோக்கும்போது சூலியன் நாட்டைச் சீனு எவ்வளவு தாழ்வாக மதித்தது என்பதை அறிகிறோம். சூலியன் நாடு சீனுவின் மேலாதிக்கத்தில் இருந்தது என்பதைக் காரணங் காட்டிச் சீன அரசவையில் தங்களுக்கு மேலும் சில உரிமைகளை வழங்க வேண்டுமென்று பர்மாத் தூதர்கள் 1106ஆம் ஆண்டில் விண்ணப்பஞ் செய்துகொண்டார்கள்.—Hirth and Rockhill.

வாங்ஷோச் சோங்[26] என்னும் நாட்டைப் பற்றிப் பரம்பரையாய் வழங்கும் செய்தி யொன்றுண்டு. அது 'கியாச்சி (டோன்கின்) என்னும் ஊரிலிருந்து வடக்கே சென்றால் தா-லீ (யூனன்) என்னும் ஊரை அடையலாம், அங்கிருந்து மேற்கே சென்றால் நாற்பது நாளுக்குக் குறைந்த பயணத்திலேயே வாங்ஷோச் சோங்கை அடையலாம்' என்பது ஆகும்.

அன்-னன் என்னுமிடத்திலிருந்து டீயென்சூ என்னும் இடத்தை அடைவதற்குத் தரைவழியொன்று இருக்கிறது என்று ஹு-வாங் ஹு-வாசியில் கியாத்தான் சொல்கிறார். எனினும், டாமோ என்பவர் கடல் வழியாகவே பான்யூவுக்கு (கான்டனுக்கு) வந்து சேர்ந்தார். எனவே, 'நீண்ட தரை வழியைக் காட்டிலும் கடல்வழியில் விரைவில் வந்துசேர முடியுமன்றோ?' என்று நாம் கேட்கலாம்.

சானுகி[27] என்பது மேற்கிலுள்ள போங்கீலோ என்னும் நாட்டின் தலைநகரம் ஆகும். அந்த நகரத்து மதிற்சுவரின் சுற்றளவு 120 லீ. பொதுமக்கள் சண்டையில் விருப்பம் உடையவர்கள். கொள்ளையடிப்பதே அவர்களுடைய தொழில். வெண்சங்குத் துண்டுகளைத் தேய்த்து அவற்றை நாணயமாகப் பயன்படுத்துகிறார்கள். கூரிய வாளும், தோவுலோ பருத்தித் துணிகளும்,[28] சாதரணப் பருத்தித் துணிகளும் அங்கு உற்பத்தியாகும் பொருள்கள்.

இந்த நாட்டில்தான் புத்த தர்மம் தோன்றியது என்று சிலர் சொல்கின்றனர். டாங் காலத்தைச் சேர்ந்தவரும் திரிபிடக வல்லுநரும் ஆகிய ஹு-வான் சுவாங் சிறந்த பௌத்த நூலான திரிபிடகத்தைச் சீனவுக்கு எடுத்துச் சென்ற போதே அந்த நூல் மேற்கில் வழக்கில் இருந்தது என்பதை அறிகிறோம்.

நன்னி ஹு-வாலோ நகரத்திற்கு[29] மூன்று மதிற்சுவர்கள் இருக்கின்றன. அங்கு வாழும் மக்கள் காலையிலும் மாலையிலும்

[26] மகதம்.

[27] இந்தப் பெயர் எந்த நகரத்தைக் குறிக்கிறது என்பது தெரியவில்லை. போங்கிலோ என்பது வங்காளமா பல்ஹராவா என்பது ஐயத்திற்குரியது என்று ஹர்த்தும் ராக்ஹில்லும் சொல்கின்றனர்.

[28] துலா-(வடமொழி)=பருத்தி.

[29] இந்த நகரம் சிந்து நாட்டில் இருந்திருக்கக்கூடும்.—Hirth and Rockhill.

நீராடித் தங்கள் உடல் முழுதும் மஞ்சளைப் பூசிக் கொள்கிறார்கள். பொன்னிறம் உடைய புத்தச் சிலைகளைப் போலத் தாங்களும் தோற்றமளிக்கவேண்டும் என்பது அவர்களுடைய நோக்கமாகும். அவர்களுள் பெரும்பாலாலோர் போலோமன் (பிராமண) வகுப்பை சேர்ந்தோர். அவர்கள் போவின்[30] உண்மையான சந்ததியார்கள்.

'அவர்களுடைய வீட்டுச் சுவர்களும் அவர்கள் அமர்வதற்குப் பயன்படும் பாய்களும் சாணம் பூசப்பட்டவை. சாணத்தை அவர்கள் தூய பொருள் என்று கருதுகிறார்கள். அவர்கள் தங்களுடைய வீடுகளில் மூன்று அடி உயரமுடையதும் மூன்று படிகளை உடையதும் ஆகிய பலிபீடம் ஒன்றனை அமைத்து, ஒவ்வொரு நாளும் காலை நேரத்தில் அதன்மீது மலர் தூவி, சாம்பிராணி புகைத்து, போவை வழிபடுகிறார்கள்.'

அரேபியர்களை (தஷீ) இந்த நாட்டு மக்கள் வரவேற்கும் போது, அவர்களைத் தங்கள் வீட்டுக்குள் புக விடுவதில்லை; வீட்டுக்கு வெளியிலேயே அவர்களுக்கு இருக்கை அளித்து உபசரிக்கிறார்கள். அவர்கள் தங்குவதற்குத் தனி வீடுகளை ஏற்பாடு செய்கிறார்கள். அந்த வீடுகளில் அவர்களுக்குத் தேவையான படுக்கை பாத்திரம் முதலியவற்றையும் வைத்து விடுகிறார்கள்.

கணவனன்றிப் பிற ஆடவருடன் புணர்கின்ற மகளிரைக் கொன்று விடுகிறார்கள். அதில் அரசு அலுவலர் தலையிடுவதில்லை.

இந்த நாட்டில் மிக உயர்ந்த புட்சுக்கும் (Putchuek) பூவும் புள்ளியும் போட்ட வெண்துகிலும் உற்பத்தி செய்யப் படுகின்றன. இந்நாட்டு மக்கள் வெண்ணெய், நெல்லஞ் சோறு, பயிறு, காய்கறி ஆகியவற்றை உண்கிறார்கள். எப்போதாவது மீனும் இறைச்சியும் தின்கிறார்கள்.

'இங்கிருந்து மேற்குப் பகுதிகளுக்குச் செல்லும் சாலை ஒன்று இருக்கிறது. அந்தப் பகுதியைச் சேர்ந்த குதிரை வீரர்கள்[31] தாக்கும்போது (நன்னிஹுவாலோவை?), தாக்கப்பட்ட மக்கள் தங்களுடைய மதிற்கதவுகளை மூடி விடுவதைத் தவிர வேறு

[30] "போ" என்னும் சொல் இந்த இடத்திலும் அடுத்து வரும் பத்தியிலும் 'பிரமன்' என்னும் பொருளில் பயன்பட்டுள்ளது என்று கருதவேண்டும்.

[31] சிந்து நாட்டின்மீது படையெடுத்த முன்னைய முஸ்லீம்களா?—Hirth and Rockhill.

எந்த வகையிலும் அந்தத் தாக்குதலை எதிர்ப்பதில்லை. சில நாட்களில் உணவுப் பொருள்கள் தீர்ந்துபோகின்றன. அதன் பின் குதிரை வீரர்கள் தாங்களாகவே பின்வாங்கிப் போய் விடுகிறார்கள்.'

—Chau Ju-kua I, 19, pp. 93—98.

## உ. இந்தியா

### டீயென்-சூ

'டீயென்-சூ என்னும் நாடு டாட்சின் என்னும் நாட்டின் மேலாதிக்கத்தில் இருக்கிறது.' டீயென்-சூவின் ஆட்சியாளர்கள் டாட்சினால் தெரிந்தெடுக்கப் படுகிறார்கள்[32].

மக்கள் தலைமயிரைப் பின்னித் தொங்கவிட்டுக் கொள்கிறார்கள்; ஆனால், தலையின் மேற்பகுதியையும் செவித்தடங்களையும் பட்டுப் பாகை கட்டி மூடிக் கொள்கிறார்கள். அவர்களுடைய வீடுகளுக்கு ஓட்டிற்குப் பதிலாக அரைத்த சாந்தைப் பயன் படுத்துகிறார்கள். மதில் சூழ்ந்த நகரங்கள் இங்கே இருக்கின்றன. அவற்றில் மக்கள் வாழ்கிறார்கள்.

**அரசவை**

அரசன் பூ வேலைப்பாடு செய்த பட்டாடைகளை அணிந்து கொள்கிறான். தன்னுடைய தலைமயிரைத் திருகுசுருள் வட்டமாக மேலே தூக்கிக் கட்டிக்கொள்கிறான். அதனைச் சுற்றியுள்ள மயிர் குட்டையாக வெட்டப்பட்டுள்ளது. காலையில் அவன் அத்தாணி மண்டபத்தில் கொலுவிருக்கும்போது, செம்மெழுகில் தீட்டிய

[32] சௌவின் குறிப்புகளில் காணும் டீயென்சூ என்பது, இந்த அதிகாரத்தின் முதல் மூன்று பத்திகளைப் பொறுத்தவரையிலேனும், சென்னைக் (தமிழகக்) கடற்கரையைக் குறிக்கிறது என்று கொள்ளலாம். இந்த அதிகாரத்தின் பிற பகுதிகளில் இந்தப் பெயர் வரும்போது, அது, பொதுவாக, இந்திய நாட்டைக் குறிக்கிறது என்று கொள்ளவேண்டும். அந்தப் பகுதிகளில் காணும் செய்திகள் மிகப் பெரும்பாலும் டுங்டீ-யென் முதலிய பிற சீன நூல்களிலிருந்து திரட்டப்பட்டவை.

'டாட்சினால் நியமிக்கப்பட்ட அரசன் என்றால் கிறிஸ்துவர்களுடைய தலைமைக் குரு என்பது பொருள். அவரை அந்தப் பதவிக்கு நியமித்தவர் சிரியத் திருச்சபை முதல்வராகவோ சால்டியத் திருச்சபை முதல்வராகவோ இருக்கவேண்டும். எனவே, அவர் தம்முடைய தலைமயிரைத் திருகுசுருள் வட்டமாய் மேலே தூக்கிக் கட்டிக்கொண்டார் என்பது விசித்திரமாய் இருக்கிறது. ஆனால் இந்தியாவிலிருந்த கிறிஸ்துவப் பாதிரிகள் இந்த விஷயத்தில் உள்ளூர்ப் பழக்கத்தைப் பின்பற்றினார்கள் என்பதை அறிகிறோம்.'
—Hirth and Rockhill.

பலவகை உருவங்களால் அழகூட்டப்பட்ட டோங் தோல் மீது அமர்ந்துகொள்கிறான். (டோங் என்பது ஒரு விலங்கின் பெயர்). அப்போது அவனுடைய அலுவலர்கள் அவன்முன் நின்று அஞ்சலி செலுத்தி, அவன் நீடுழி வாழவேண்டுமென்று கடவுளை வேண்டுகிறார்கள். அவன் வெளியே போகும்போது குதிரைமீது ஊர்ந்து செல்கிறான். குதிரைச் சேணமும் கடிவாளமும் பொன்னாலும் வெள்ளியாலும் அணி செய்யப்பட்டவை. வாளும் வேலும் ஏந்திய முந்நூறு வீரர்கள் அவனைச் சூழ்ந்து செல்கிறார்கள்.

அவனுடைய மனைவி பொற்சரிகையால் பூவேலை செய்யப்பட்டதும் பெரிய கைகளை உடையதும் ஆகிய ஒண்சிவப்பு வண்ண ஆடையை அணிந்து கொள்கிறாள்.

ஆண்டுக்கு ஒருமுறை அவள் பொதுமக்களுக்குக் காட்சி அளிக்கிறாள். அப்போது ஏராளமான தான தருமங்கள் செய்யப்படுகின்றன.

'இந்த நாட்டில் புனித நீர் இருக்கிறது. அது காற்றையும் கடலையும் கட்டுப்படுத்தும் ஆற்றலுடையது. வெளிநாட்டு வணிகர்கள் அதனைக் கண்ணாடிப் போத்தலில் ஊற்றித் தங்களுடன் எடுத்துக்கொண்டு போகிறார்கள். அவர்கள் கலத்திற் செல்லும்போது திடீரென்று கடல் கொந்தளிக்கத் தொடங்கினால் போத்தலில் உள்ள புனித நீரைக் கடல்மீது தெளிக்கிறார்கள். கடல் உடனே அமைதியடைகிறது.'

**வாணிகப் பண்டங்கள்**

'பின்னைய வமிசத்தைச் சேர்ந்த சூவன்வூ என்னும் பேரரசர் காலத்தில் (கி.பி. 500—515) டீயென்-சூ நாட்டிலிருந்து ஒரு தூதுக் குழு வந்தது என்றும், அக்குழுவினர் விரைவாய் ஓடும் குதிரைகளைப் பேரரசருக்குப் பரிசு கொடுத்தனர் என்றும் அறிகிறோம். அவர்களுடைய நாட்டில் சிங்கம், கீரி, புள்ளிப் புலி, ஒட்டகம், காண்டாமிருகம், யானை முதலிய விலங்குகள் இருக்கின்றன என்றும், ஆமையோடு, பொன், தாமிரம், இரும்பு, ஈயம், வெள்ளீயம், பொற் சரிகைப் பூ வேலை செய்த கம்பளம், மென்றுகில், சாதாரணக் கம்பளம் முதலிய பொருள்கள் கிடைக்கின்றன என்றும் அறிகிறோம். மேலும், 'அங்குக் கல்லைப் போன்ற அபிரகம் இருக்கிறது. அது செந்நிறமுடையது. அதனைப் பிளந்தால் சிள்வண்டின் இறகுபோல மிக மெல்லியதாய் இருக்கும். பிளந்த துண்டுகளை ஒன்று சேர்த்துப்

பார்த்தால், அது பட்டு நூல் வலையைப்போல இருக்கிறது. அங்கே கிடைக்கிற வைரம் பார்ப்பதற்கு எளிதில் உருகிப் போகக்கூடிய படிகத்தைப் போலத் தோன்றுகிறது. ஆனால், அதனை நூறு முறை தீயிலிட்டாலும் கெட்டியாகவே இருக்கிறது.' அது ஜேட் என்னும் பச்சை மணிக் கல்லை அறுக்கக்கூடியது.

இங்கே சந்தனம் முதலிய பலவகை நறுமண மரங்களும், கரும்பும், பலவகைப்பட்ட பழங்களும் விளைகின்றன. இந்த நாட்டு மக்கள் டாட்சின்னோடும்[33] புனனோடும்[34] ஆண்டுதோறும் வாணிகம் செய்கிறார்கள். அவர்கள் பண்டமாற்றுக்குச் சோழிகளைப் பயன்படுத்துகிறார்கள். செப்படி வித்தையில் அவர்கள் கெட்டிக்காரர்கள். அவர்கள் வில், அம்பு, கவசம், ஈட்டி, பறக்கும் ஏணி ஆகிய போர்க் கருவிகளைப் பயன்படுத்துகிறார்கள்; முற்றுகையிடும்போது மூடு சுரங்கத்தையும் வெட்டுகிறார்கள். மேலும் 'மர எருது' 'சறுக்கு குதிரை' என்னும் பொறிகளையும் அவர்கள் போரில் பயன்படுத்துகிறார்கள். அப்படியிருந்தும், அவர்கள் போருக்கஞ்சும் கோழைகளாகவே இருக்கிறார்கள். வானூலிலும் சோதிடத்திலும் அவர்கள் வல்லவர்கள். அவர்கள் சிதன்சங்ஷு[35] என்னும் நூலைப் பயில்கிறார்கள்.........(குறிப்பு: இந்த இடத்தில் ஏழு எழுத்துகள் காணாமற் போய்விட்டன.) பெயிட்டோவின்[36] இலைகளை அவர்கள் காகிதமாகப் பயன்படுத்துகிறார்கள்.

டாங்கின் சோங் - குவான் காலத்திலும் (கி. பி. 627-650) டீயன் ஷோவு காலத்திலும் (கி. பி. 690-692) இந்த நாடு நமது அரசவைக்கு ஒரு தூதுக் குழுவைத் திறைப்பொருள்களுடன் அனுப்பியது. சுங்கின் யுங்-ஹி காலத்தில் (கி. பி. 948-988) லோஹூனு[37] என்னும் பெயருடைய துறவி ஒருவர் கடல் வழியாக ட்சுவன் சௌவுக்கு வந்து சேர்ந்தார். அவர் டீயென்சூ நாட்டைச் சேர்ந்தவர் என்று தெரிவித்தார். அவர் வெளிநாட்டுக்

[33] பாக்தாது.

[34] கம்போடியா.

[35] சித்தாந்த நூல். (வானூல் ?) Hirth and Rockhill.

[36] பத்ரம் (வடமொழி): டோலோபோலிசா பெயிட்டோ என்பது முழுப்பெயர். அதாவது, தால விருட்ச பத்ரம்.—Hirth and Rockhill.

[37] ராஹூலன் (?)

காரர் என்பதை அறிந்த வெளிநாட்டு வணிகர்கள் அவருக்குத் தங்கம், பட்டுத் துணி, அணி மணிகள் ஆகியவற்றை ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு வழங்கினார்கள். ஆனால், அவற்றையெல்லாம் அவர் விரும்பவில்லை. ட்சூவன் சூவின் தென்பாலிருந்த புறநகரில் ஒரு துண்டு நிலத்தை விலைக்கு வாங்கி அங்கே பௌத்தக் கோயில் ஒன்றைக் கட்டினார். அதுதான் இன்றைக்குப் பௌலின் யூவன் என்று சொல்லப்படுகின்ற கோயில்.

—Chau Ju-kua, ed. Hirth and Rockhill, I, 21, pp. 110-111.

# XXIV. சீனாவிலிருந்து தென்னிந்தியாவுக்கும் தென்னிந்தியாவிலிருந்து சீனாவுக்கும் சென்ற தூதுக் குழுக்கள் கி. பி. 1279-92

1279 ஆம் ஆண்டு ஏழாம் சாந்திர மாதத்தில், மா' பார் அன்னும் (சான்-சியங்) ஆகிய நாடுகளிலிருந்து சென்ற தூதர்கள் மங்கோலிய அரசவையை அடைந்து, உயிருள்ள யானை ஒன்றையும் காண்டாமிருகம் ஒன்றையும் பேரரசருக்குப் பரிசு கொடுத்தார்கள். அதற்குப் பிறகு (அதன் விளைவாக?) சோட்டுவின் திறமை மிக்க துணைவனை யாங்டிங்-பீ என்பவனைப் பேரரசர் குலத்திற்குத் தூதுபோகச் சொன்னார். அந்தச் சமயத்தில் யாங்டிங்-பீ 'தருகா' என்னும் பட்டப் பெயரோடு குவாங்-டுங்கில் படைத்தலைவனாய் இருந்தான். பன்னிரண்டாம் மாதத்தில் (1280 ஆம் ஆண்டின் தொடக்கத்தில்) பேரரசர் அவனையழைத்து, அவனுக்குப் 'பேரரசு ஆணையன்' என்னும் பதவியை வழங்கி, 'நீ குலத்திற்குப்போய் (கொல்லம்) பி-னா-டி[1] அரசனைக் கண்டு பேசி, அவன் நம்முடைய மேலாண்மையை ஏற்றுக்கொள்வதற்கும் நம்முடைய அவைக்கு ஒரு தூதனை அனுப்புவதற்கும் இசையுமாறு செய்வாயாக' என்று பணித்தார். அவனும் அவ்வாறே செய்வதற்கு ஒப்புக்கொண்டான்.

1280 ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தின் முற்பகுதியில் (எட்டாம் சாந்திர மாதத்தில்) அன்னும் நாட்டுத் தூதர்களும் மா' பார் நாட்டுத் தூதர்களும் மங்கோலிய அரசவைக்கு

[1] பினாட்டி : பாண்டி அல்லது பாண்டியன் என்னும் சொல்லாய் இருக்கலாம். அப்போது மா'பாரில் ஆட்சி செய்த அரச வம்சம்.

வந்தார்கள். அவர்கள் தங்கள் அரசர்கள் பேரரசருக்கு எழுதிய கடிதங்களையும் உடன்கொண்டு வந்தார்கள். அந்தக் கடிதங்களில் அந்த அரசர்கள் 'தங்கள் ஊழியர்கள்' என்று பேரரசருக்கு எழுதியிருந்தார்கள். இவ்வாறு அவர்கள் சீனப் பேரரசரின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டார்கள். தூதர்கள் பேரரசருக்கு விலைமதிப்பு மிக்க பரிசுகள் பலவற்றைத் திறைப் பொருளாய்த் தந்தார்கள். மேலும், 1279 ஆம் ஆண்டில் வந்த தூதர்களைப் போலவே, 1280 ஆம் ஆண்டில் வந்த தூதர்களும் பேரரசருக்கு ஒரு யானையையும் ஒரு காண்டாமிருகத்தையும் பரிசு கொடுத்தார்கள்.[2] யாங்டிங்-பீ மா'பாருக்குப் போய்ச் சேர்வதற்கு முன்பே மா'பார் அரசன் அனுப்பிய தூதுக் குழு சீனாவுக்கு வந்துவிட்டது. அவ்வாறு அவன் தானாகவே அந்தத் தூதுக் குழுவை அனுப்புவதற்கு அப்போது அவனுடைய ராஜ்யத்திலேயே அவனுக்கெதிராய்த் தோன்றியிருந்த நெருக்கடியான நிலை காரணமாயிற்று. சட்டப்படி அவன் தான் மா'பார் நாட்டின் அரசன். ஆனால், அவனுடைய பகைவர்கள் அவனுடைய அதிகாரம் அனைத்தையும் பறித்துக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். எனவே, அவன் தன்னுடைய பதவியைக் காத்துக்கொள்வதற்காக மங்கோலியப் பேரரசரின் துணையை நாடினான். அதற்காகத்தான் அவன் ஜமாலுதீன் என்பவனுடைய தலைமையில் சீனாவுக்கு ஒரு தூதுக் குழுவை அனுப்பிச் சீனப் பேரரசரின் மேலாண்மையை ஏற்றுக் கொண்டான்.

குலத்திற்குச் சென்ற யாங்டிங்-பீ சீனாவுக்குத் திரும்பி வந்ததும் வராததுமாக, அவன் மீண்டும் குலத்திற்குச் செல்ல வேண்டியதாயிற்று. அந்தப் பயணத்தின் விவரங்களை யூவன் ஷிஹ் என்னும் நூல் விவரமாக எடுத்துரைக்கிறது.

"பத்தாம் சாந்திர மாதத்தில் (1280 ஆம் ஆண்டு) பேரரசர் ஹாசா-எர்-ஹையா என்பவனைக் குலத்தின் தூதனாக நியமித்து, அவனும் யாங்டிங்-பீயும் உடனே குலத்திற்குச் செல்ல வேண்டும் என்று ஆணையிட்டார். 'நீங்கள் குலத்திற்குச் சென்று, அந்த ராஜ்யத்திற்கு அண்மையிலுள்ள ராஜ்யங்களும் நம்முடைய மேலாண்மையை ஏற்றுக்கொள்வதற்கும் நம்முடைய பேரவைக்

[2] 1281ஆம் ஆண்டின் ஐந்தாம் மாதத்தில் மா'பார் அரசன் யாங்டிங்-பீயிக்கு ஒரு ரகசியச் செய்தியனுப்பினான். அந்தச் செய்தியில், தன்னுடைய தூதன் பெயர் சமாலிடிங் (ஜமாலுதீன்) என்று தெரிவித்தான். இங்குக் கூறப்பட்ட தூதுக் குழுதான் ஜமாலுதீன் தலைமையில் சென்ற தூதுக்குழு என்பது தெளிவு.

குத் தூதர்களை அனுப்புவதற்கும் இசையுமாறு செய்வீர்களாக' என்று சொல்லியனுப்பினர். அவர்கள் சுவான் சூவிலிருந்து பதினெட்டாம் ஆண்டின் முதல் சாந்திர மாதத்தில் (1281 ஆம் ஆண்டு பிப்ரவரி என்று சுமாராய்ச் சொல்லலாம்) தங்களுடைய கடற் பயணத்தைத் தொடங்கினர்கள். மூன்று மாதம் பயணம் செய்தபின் அவர்கள் செங்-கியா-யெஹ் (சிலான்) என்னும் தீவை அடைந்தார்கள். அங்கிருந்து குலத்திற்குச் செல்வது அவர்களுடைய திட்டம். ஆனால், அப்போது காற்று வாய்ப்பா யில்லை; உணவுப்பொருள் கையிருப்பும் குறைவாயிருந்தது. அதனால், அவர்கள் நேரே குலத்திற்குச் செல்வதற்கு மாறாக, மா'பாருக்குச் சென்று, அங்கிருந்து தரைவழியாகக் குலத்திற்குச் செல்வது நல்லது என்று சேங்-சென்னும் பிற மாலுமிகளும் ஆலோசனை கூறினார்கள். மா'பாரிலிருந்து குலத்திற்குச் செல்வதற்கேற்ற தரைவழி ஒன்று இருந்தது என்று அவர்கள் நம்பினார்கள். எனவே, ஊரிலிருந்து புறப்பட்ட நான்காம் மாதத்தில் அவர்கள் (மா'பாரிலிருந்த) ஹிசின்-ட்சுன்[3] என்னும் துறைமுகத்தில் இறங்கினார்கள். அந்த நாட்டின் அமைச்சரான மாயின்டி என்பவர் அந்தச் சீன அலுவலர்களைக் கண்டு,'உங்களுடைய வரவு நல்வரவாகுக. எங்களுடைய கலங்கள் சூவன்-சூவுக்குப் போனபோதெல்லாம், உள்ளூர் அரசு அலுவலர் கள் எங்கள் மாலுமிகளுக்குப் பல வகைகளிலும் உதவி செய்து, துன்பமும் பணச்செலவும் நேர்வதைத் தவிர்த்திருக்கிறார்கள். நீங்கள் இங்கே என்ன வேலையாய் வந்திருக்கிறீர்கள்?' என்று கேட்டார். தாங்கள் சீனவிலிருந்து வந்ததற்கான காரணத்தை யும், மா'பாரிலிருந்து குலத்திற்குத் தரைவழியாகப் போகக் கூடும் என்று அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கையையும் யாங்டிங்-பீ எடுத்துரைத்தான். ஆனால் யாங்டிங்-பீயின் கூற்றுத் தமக்குச் சரியாய் விளங்கவில்லை என்று கூறி, மாயின்டி தம்முடைய செயலாளனை புவாலி (அபு ஆலி) என்பவனிடம் அவர்களை அனுப்பிவைத்தார். அவர்களும் புவாலியிடம் எல்லாச் செய்திகளையும் எடுத்துரைத்தார்கள்.

**பாண்டி நாட்டு அரசியல்**

ஐந்தாம் மாதத்தில், சீனத் தூதர்கள் தங்கியிருந்த விடுதிக்கு இரண்டு மனிதர்கள் இரகசியமாகச் சென்று, தூதர்களைத் தவிர அங்கிருந்த மற்றவர்களை வெளியே அனுப்பிவிட்டு, 'நீங்கள் உண்மையான நண்பர்கள் என்பதை நாங்கள் தெரிந்துகொண்டோம். அதனால், சட்டப்படி இந்த நாட்டின்

[3] காவேரிப்பட்டினமாய் இருக்கலாம்.

அரியணையில் அமர்ந்திருக்கும் எங்கள் அரசர் உங்கள் அரசருக்கு ஒரு செய்தியனுப்ப விரும்புகிறார். அதனை நீங்கள் உங்கள் அரசருக்குத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்' என்று சொன்னார்கள். அவர்கள் தெரிவித்த செய்தி பின்வருமாறு :

'நான் சீனப் பேரரசருடைய மேலாண்மையை ஏற்றுக்கொள்வதற்கு உண்மையாகவே விரும்புகிறேன். என்னுடைய தூதனை சமாலிடிங் (ஜமாலுதீன்) முன்னரே தங்களுடைய அன்புக்குப் பாத்திரமாகித் தங்களுடைய அவையில் இருக்கிறான். என்னுடைய பெரிய பிஷேச்சிஹ் சுவான்டானிடம் சென்று ஒரு மாறுதல் வேண்டுமென்று தெரிவித்திருக்கிறான். (சுவான்டான்=ஒரு ராஜ்யத்தின் மேலாண்மைத் தலைவன்) 'சுவான்டான் தங்கம், வெள்ளி, நிலம் முதலிய என்னுடைய உடைமைகளேயன்றி என்னுடைய மனைவிமாரையும் கைப்பற்றிக் கொண்டான். இப்போது என்னைக் கொல்லவும் அவன் திட்டமிட்டுள்ளான். நான் அவனை ஏமாற்றித்தான் அவன் பிடியிலிருந்து தப்பி வந்திருக்கிறேன். இப்போது அவனும், அவனுடன் பிறந்தவர்களும்—மொத்தம் ஐந்து பேரும்—ஓரிடத்திற் கூடிக் குலத்தின்மீது படையெடுப்பதைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். பேரரசரின் தூதர்கள் இங்கு வந்திருப்பதையும் நான் பேரரசரின் மேலாண்மையை ஏற்றுக்கொள்வதற்கு அவர்கள் துணைபுரிவதையும் கேள்விப்பட்டு, இந்த நாடு வலிமை குறைந்த வறிய நாடு என்று அவர்கள் கூறிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பொய் சொல்கிறார்கள். முஸ்லிம் நாடுகளிலுள்ள பொன் முத்து முதலிய மதிப்பு மிக்க பொருள்கள் எல்லாமே இந்த நாட்டிலிருந்து சென்றவை; இந்த நாட்டுக்குத்தான் முஸ்லிம் வணிகர் அனைவரும் வருகின்றனர். மா'பார் பேரரசருடைய மேலாண்மையை ஏற்றுக்கொண்டது என்று தெரிந்தால், (தென்னிந்தியாவிலுள்ள) ராஜ்யங்கள் எல்லாமே பேரரசருக்குப் பணிந்துவிடும். இந்தச் செய்திகள் அனைத்தையும் மிகவும் பணிவாய் எடுத்துரைக்கின்ற ஒரு கடிதத்தை என்னுடைய தூதன் (ஜமாலுதீன்) முன்னரே தங்களிடம் தந்திருக்கிறான்.'[4]

[4] பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டிய நாட்டின் நிலைமையை விளக்குகின்ற குறிப்புகள் முகமதிய வரலாற்றாசிரியர்களுடைய நூல்களிலும் மார்க்கபோலோவின் நூலிலும் இருக்கின்றன. அந்தக் குறிப்புகளில் இல்லாத செய்திகளை இந்தக் குறிப்பிற் காண்கிறோம். சீனத் தூதர்களுக்கு ரகசியச் செய்தியனுப்பிய அரசன் குலசேகரன் என்பதில் ஐயமில்லை. சுவான்டான் என்னும் தொடர் சுந்தரனைக் குறிக்கிறது என்று கருதலாம்.

காற்று வாய்ப்பாய் இல்லாததால் கடல் வழியாய்க் குலத்திற்குப் போக முடியாமல், ஹா-சா-ஏர்ஹையாவும் யாங்டிங்-பீயும் மா'பாரிலேயே தங்கிவிட்டார்கள் என்பதை முன்னர்க் கூறினோம். சும்மாவிருக்க விரும்பாத ஹா-சா-ஏர் ஹையா நடந்த செய்திகளைப் பேரரசருக்கு விளக்கிக் கூறுவதற்காகச் சீனுவுக்குத் திரும்பிப் போனான். (அதன் விளைவாக), 1281ஆம் ஆண்டின் பதினோராம் மாதத்தில், வடக்குக் காற்றுத் தொடங்கிவிட்டபின், யாங்டிங்-பீ தனியாகவே (குலத்திற்குப்) போகலாம் (தரைவழியாக?) என்று பேரரசர் சொல்லியனுப்பினார்.

'19ஆம் ஆண்டின் (1282) இரண்டாம் மாதத்தில் யாங்டிங்-பீ குலத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அங்கு அரசனும்[5] அவனுடைய அமைச்சன் முகமதும் யாங்டிங்-பீ பேரரசரிடமிருந்து கொண்டுவந்த முத்திரையிட்ட கடிதத்தை மிகவும் தாழ்ந்து வணங்கிப் பெற்றுக்கொண்டார்கள். மூன்றும் மாதத்தில், அரசன் தன்னுடைய அமைச்சன் சுவாலிஷா மாங்லிபதி என்பவனிடம் பேரரசர்க்கேற்ற பரிசுகளைக் கொடுத்துச் சீனுவுக்கு அனுப்பினான். அதே சமயத்தில் யெஹ்லிகோவென்[6] தலைவரான வுட்சா எர்ஹ்-சலிமாவும், முஸ்லிம்களின் தலைவரான முகமதும், இன்னும் பலரும் சீனப் பேரரசரின் தூதன் வந்திருக்கிறான் என்று கேள்விப்பட்டு, அவனைக் கண்டு, பேரரசருக்கு ஆண்டுதோறும் பரிசுகளை அனுப்புவதற்குத் தங்களையும் அனுமதிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அவர்கள் அனைவரும் சேர்ந்து, ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து, சீனப் பேரவைக்கு அனுப்பினார்கள். அது போலவே, சுமுடா[7] ராஜ்யமும் ஒரு பிரதிநிதியை அனுப்பியது. சீனப் பேரரசரின் மேலாண்மையை ஏற்றுக் கொள்வதற்குக் குலத்தின் அரசன் யாங்டிங்-பீயிடம் விண்ணப்பஞ் செய்துகொண்டதை அறிந்த அனைவரும் அவனைப் போலவே சீனப் பேரரசரின் மேலாண்மையை ஏற்றுக் கொண்டனர்.'

[5] பினட்டி.

[6] யெஹ்லிகோவென்: மங்கோலியர் காலத்தில் இந்தத் தொடர் கிறிஸ்துவர்களைக் குறிப்பதற்கே பயன்பட்டது; இங்கு அது புனித தாமஸ் கிறிஸ்துவர்களைக் குறிக்கிறது. குலத்திலிருந்த புனித தாமஸ் மாதா கோயிலுக்குக் 'குலத்தின் அரசன் மிளகின் மூலம் கிடைத்த வருவாயை ஒதுக்கி வைத்தான்' என்றும், 'அந்த ஒதுக்கீடு இன்றைக்கும் நடைமுறையிலுள்ளது' என்றும் டுவார்ட்டே பார்போசா எழுதிவைத்துள்ளார்.

[7] மங்களூராவோ அதற்கு அருகில் இருந்த வேறு ஏதோ ஓர் ஊராகவோ இருக்கும்.—Rockhill.

(1282ஆம் ஆண்டின்) நான்காம் மாதத்தில் யாங்டிங்-பீ தன்னுடைய சீனப் பயணத்தைத் தொடங்கினான். முதலில், அவனும் தூதுக்குழுவின் பிற உறுப்பினர்களும் நாவங்[8] இராஜ்யத்தை அடைந்தார்கள். சீனப் பேரரசனுடைய மேலாண்மையை ஏற்றுக்கொள்ளுமாறு அந்நாட்டு அரசனை மீண்டும் வற்புறுத்திவிட்டு, அவர்கள் சுமுடுலா[9] ராஜ்யத்தை அடைந்தார்கள். அந்நாட்டின் அரசனான டுஹன்பதி தூதுக் குழுவை வரவேற்று உபசரித்தான். தூதுக் குழுவின் நோக்கத்தை யாங்டிங்-பீ எடுத்துரைத்த அன்றே டுஹன்பதி[10] யாங்டிங்-பீயிக்குப் பரிசுகளை அளித்து, பேரரசரின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டு, ஹஸேன் சுலிமான் என்னும் தன்னுடைய அமைச்சர் இருவரைச் சீனாவுக்கு அனுப்பினான்.

குலம், நாவங், சுமுடா, சுமுடுலா ஆகிய நான்கு ராஜ்யங்களின் தூதர்களும் 1282 ஆம் ஆண்டின் இலையுதிர் காலத்தில் குப்ளாகானின் அரசவையை அடைந்தார்கள். அந்தச் செய்தியை யூவன் ஷிஹ் பின் வருமாறு குறிப்பிடுகிறது:

'சீனக் கடலுக்கு அப்பாலிருந்த நாடுகளில், வாழ்ந்த நாகரிக மற்ற மக்களோடு நட்புறவான தொடர்புகளை ஏற்படுத்துவதற்காக யாங்டிங்-பீயின் தலைமையிற் சென்ற தூதுக் குழு ஆற்றிய பணிகளின் விளைவாக, சிஹ்யூவன் 19ஆம் ஆண்டில் (1282இல்), 9ஆம் மாதத்தில், ஹிசிங்-யு நாளன்று, அந்த நாடுகளின் தூதர்கள் திறைப்பொருள்களுடன் பேரரசரைக் காண வந்தார்கள். குலம் அரசன் அனுப்பிய தூதுக்குழு ஒரு விண்ணப்பத்தையும் விலையுயர்ந்த பல பரிசுப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு வந்தது. அந்தப் பொருள்களுள் ஒரு கருங்குரங்கும் இருந்தது. நாவங் நாட்டின் அரசனான மங்-அங் நான்கு தூதர்களை அனுப்பினான். எழுதும் கலையைக் கற்றவர் யாரும் அவனுடைய நாட்டில் இல்லையாதலால், அவன் விண்ணப்பம் எதனையும் சமர்ப்பிக்கவில்லை. சுமுடுலாவின் அரசனான டுஹன்பதியும் இரண்டு தூதர்களை அனுப்பினான்.

'சுமுடா நாட்டின் பிரதம மந்திரியான காலிபஹோலா நான்சிஹ் முக்கியமான வேலையொன்றைக் கவனிப்பதற்காகக்

[8] இது எங்கிருந்தது? அரசன் யார்? என்பன தெரியவில்லை. தென்னிந்தியாவிலோ இலங்கையிலோ இருந்த ராஜ்யம் என்று கருதலாம்.

[9] சுமத்ரா.

[10] டுஹன்பதி: மேலாண்மை அரசன் என்று பொருள்தரும் மலாய் மொழிச் சொல்—Yule, Marco Polo, ii, p. 296.

குலத்திற்குப் போய்விட்டான். அதனால், ஒரு தூதனிடம் ஒரு விண்ணப்பத்தைக் கொடுத்துச் சீனாவுக்கு அனுப்புமாறு தன் தலைவனை டகு எர்ஹா-க்குக் குலத்திலிருந்தபடியே வேண்டு கோள் விடுத்தான். அவ்வாறு அனுப்பப்பட்ட தூதன் முத்திரை மோதிரம் ஒன்றனையும், (அது அரசனுடைய முத்திரை மோதிரமா?) பூப்போட்ட பட்டாடைகள் சிலவற்றையும், பூப்போட்ட படுக்கை விரிப்புகள் இருபதனையும் சீனப் பேரவைக்கு எடுத்துக்கொண்டு போனான். குலம் நாட்டிலிருந்த யெஹ்லிகோவென் (தாமஸ் கிறிஸ்துவர்கள்) தலைவரான வுட்சா எர்ஹ் பியெஹ்லிமா[11] என்பவரும் ஒரு தூதனிடம் ஒரு விண்ணப்பத்தையும், பன்மணி பதித்த அறுவை மருத்துவ எஃகுக் கருவியொன்றையும், இரண்டு குடுவை மருந்தையும் கொடுத்து அனுப்பினார். முஸ்லிம்களின் தலைவரான முகமதும் ஒரு தூதனையும் விண்ணப்பத்தையும் அனுப்பினார்.'

1282ல்—அதாவது, யாங்டிங்-பி சீனாவுக்குத் திரும்பி வந்தபின் என்று கருதலாம்—சான் சேங் நாட்டில் சீனப் பேரரசரின் மேலாண்மையை நிறுவும் பணியில் ஈடுபட்டிருந்த சோட்டுக்குத் துணைபுரிந்து கொண்டிருந்த உயிகுர் - ஈ - ஹெயிமிஷிஹ் என்னும் அரசு அலுவலனைப் பேரரசர் அந்தப் பணியிலிருந்து விடுவித்து, புத்தருடைய பிச்சைப் பாத்தி ரத்தையும் அவருடைய உடலின் திருச்சின்னங்களையும் ஆராய்வதற்காகச் செங்-கியா-லாவுக்கு (சிலானுக்கு) அனுப் பினார். அவன் முன்னரே (1272, 1275 ஆகிய ஆண்டுகளில்) வெளிநாடுகளுக்குச் சென்று வெற்றியுடன் பணியாற்றிய தூதன் ஆவான். அவன் அரசர் ஆணைப்படியே இலங்கைக்குச் சென்று வந்தான். ஆனால், புத்தருடைய உடலின் திருச் சின்னங்களை எடுத்துக்கொண்டு வரவில்லை. எனவே, பேரரசர் அவனை அதே வேலைக்காக மீண்டும் அனுப்பினார். அதைப் பற்றி நாம் பின்னர்ப் பார்ப்போம்.[12]

**புத்தத் திருச் சின்னங்கள்**

யாங்டிங்-பியின் வெளிநாட்டுப் பயணங்கள் இன்னும் முடிந்தபாடில்லை. அவன் தென்னிந்தியாவிலிருந்த திரும்பிய சில மாதங்களுக்குள் (சிஹ்யூவன் 20ஆம் ஆண்டின் முதல் சாந்திர மாதத்தில்—1283 ஜனவரி-பிப்ரவரியில்) பேரரசர்

[11] வுட்சா எர்ஹ் பியெஹ்லிமா என்பதை இதற்குமுன் கண்ட வுட்சா எர்ஹ் சலிமா என்பதோடு ஒப்பிட்டுப் பார்க்க.

[12] Cf. Marco Polo ii, 319.

அவனுக்குப் 'பேரரசு ஆணையன்' என்னும் பதவியையும், வில் அம்புசேணம் கடிவாளம் ஆகிய விருதுகளையும் வழங்கி, மீண்டும் குலத்திற்கும் பிற நாடுகளுக்கும் அனுப்பினர். மேலும், குலத்தின் அரசனை வா-நீயிக்குப் பேரரசர் 'பூமா' என்னும் பட்டத்தை-அதாவது 'பேரரசு மருமகன்' என்னும் பட்டத்தை— வழங்கி, அதற்குரிய தங்க முத்திரைப் பொறிப்பு[13] ஒன்றையும் யாங்டிங்-பீயிடம் கொடுத்தனுப்பினர்.

யாங்டிங்-பீயின் பயணங்களின் பயனுகவும், 1282ஆம் ஆண்டில் சீனவுக்கு வந்த வெளிநாட்டுத் தூதர்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்பின் பயனுகவும், அடுத்த சில ஆண்டுகளில் தென்னிந்தியாவிலிருந்தும் இந்தியாவை அடுத்த தீவுக் கூட்டங்களிலிருந்தும் சீனப் பேரவைக்குச் சென்ற தூதுக் குழுக்களின் எண்ணிக்கை பெருகிக்கொண்டே போகிறது. 1283ஆம் ஆண்டு ஐந்தாம் சாந்திர மாதத்தில் மா'பார் அரசனுடைய தூதனை செங்சோ-யூபான் என்பவன் சீனவுக்குச் சென்முன். 1284ஆம் ஆண்டு முதல் சாந்திர மாதத்தில் அதே ராஜ்யத்திலிருந்து இன்னும் ஒரு தூதன் முத்து, அருமையான அணிகள், பட்டாடைகள் ஆகிய பரிசுகளோடு வந்து பேரரசரைக் கண்டான்.

அதே ஆண்டின் பிற்பகுதியில், பூகியன் இராஜ்யத்தின் ஆளுநனுடைய ஆணையைத் தாங்கி வந்த அரசு அலுவலனை பாகோலுசு என்பவன் செய்த முயற்சிகளின் பயனுக, நன்வுலி, பியஹ்லீலா, லிலுன், தாலி[14] ஆகிய நான்கு ராஜ்யங்களின் அமைச்சர்களும் தங்களுடைய அரசர்கள் எழுதிய கடிதங்களையும் திறைப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு சீனவுக்குச் சென்முர்கள்.

**குப்ளாகானின் நோக்கங்கள்**

இந்தியா, இந்தோசீன, அவற்றை அடுத்துள்ள தீவுக் கூட்டங்கள் ஆகிய நாடுகளிலிருந்து வந்த தூதர்கள் தத்தம் நாட்டில் உற்பத்தியான மதிப்பு மிக்க அரும் பொருள்களைப் பற்றியும், அங்கேயிருந்த மருத்துவர் மந்திரவாதிகள் ஆகியவர்களுடைய அற்புத

[13] 'வா நீ' என்பது ஒரு பட்டப் பெயர். புலி முத்திரைச் சின்னமும், பூமா என்னும் பட்டமும் குலத்தின் அரசனுக்கு 1344இல் வழங்கப்பட்டன.

[14] முதலிலுள்ள பெயர் 'லம்பிரி'யைக் குறிக்கும். லம்பிரி சுமாத்ராவின் வடமேற்குக் கரையில் இருக்கிறது. இரண்டாம் பெயர் பெலிகம்மே என்னும் ஊரைக் குறிக்கிறது. இது இலங்கையில் காலே என்னும் இடத்திலிருந்து 13 மைல் தொலைவில் இருக்கிறது.

மான திறன்களைப் பற்றியும் பல செய்திகளைப் பேரரசருக்குத் தெரிவித்தார்கள். அவற்றை யெல்லாம் கேள்விப்பட்டு உள்ளக் கிளர்ச்சியடைந்த குப்ளாகான் ஏற்கெனவே தம்மிடமிருந்த அரும்பொருட் கருவூலத்தில் இன்னும் பல பொருள்களைச் சேர்ப்பதற்கும் தம்முடைய அரசவையின் சிறப்பை மேலும் பெருக்குவதற்கும் விரும்பினார். அதனால், அந்தத் தொலை தூர நாடுகளுக்கு ஒன்றன்பின் ஒன்றாய்ப் பல தூதுக்குழுக்களை யனுப்பி, அவற்றைப் பற்றிய செய்திகளையும் அங்கே கிடைத்த விசித்திரமான விலங்குகள் பறவைகள் அணிமணிகள் முதலியவற்றையும் திரட்டிக்கொண்டு வருமாறும், அங்கு வாழ்ந்த அறிஞர்களை அழைத்துக்கொண்டு வருமாறும் ஆணையிட்டார். 1285ஆம் ஆண்டின் வேனிற் காலத்தில் அவர் மாசுஹூ என்பவனையும் ஆலீ என்பவனையும் மா'பாருக்கு அனுப்பினார் என்றும் அங்குக் கிடைக்கக் கூடிய விலையுயர்ந்த அரும் பொருள்களை வாங்கிக் கொண்டு வருவதற்குத் தேவையான பணத்தையும் அவர்களிடம் கொடுத்தனுப்பினார் என்றும் நாம் அறிகிறோம்.

1282ஆம் ஆண்டில் இலங்கைக்குச் சென்ற உயிகுர் ஈஹெயிமிஷிஹ் என்ற அலுவலனால் புத்தருடைய பிச்சைப் பாத்திரத்தையும் திருச்சின்னங்களையும் கொண்டுவர இயலவில்லை என்பதை நாம் முன்பு கண்டோம். 1287இல் அந்தப் பொருள்களைக் கொண்டு வருவதற்காக அதே அலுவலன் மா'பாருக்கு அனுப்பப்பட்டான்.[15] அவனும் தன் பயணத்தைத் தொடங்கினான். மா'பார் சுமாத்திரா ஆகிய நாடுகளிலிருந்து சீனாவுக்கு வந்து, அங்கு 1286ஆம் ஆண்டின் பிற்பகுதி வரையிலும் தங்கியிருந்துவிட்டு, தங்கள் நாடுகளுக்குத் திரும்பிப் போன தூதர்களோடு சேர்ந்து உயிகுர் ஈஹெயிமிஷிஹ் பயணஞ் செய்தான் என்று கருத இடமிருக்கிறது.[16]

கடலில் ஏற்பட்ட இடையூறுகளால் அந்தப் பயணம் மிக நீண்டுவிட்டது. அதனால் உயிகுர் ஈஹெயிமிஷிஹ் மா'பாரை அடைவதற்கு ஓராண்டு பிடித்தது. அவ்வளவு முயற்சிக்குப் பின்னரும் புத்தருடைய பிச்சைப் பாத்திரமும் திருச் சின்னங்களும் அவனுக்குக் கிடைக்கவில்லை. எனினும், அவன் திறமை மிக்க மருத்துவன் ஒருவனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டும்

15 'மலபார்'களுடைய ஆதரவைப் பெறுவதற்காய் இருக்கலாம். அந்தச் சமயத்தில் இலங்கையின் ஒரு பகுதி மலபார் ஆட்சியில் இருந்தது.—Rockhill.

16 1286ஆம் ஆண்டு முதல் மாதத்தில் சீனாவில் இருந்த இந்த மா'பார்த் தூதுக்குழு பேரரசருக்கு வெண்கலக் கேடயம் ஒன்றைப் பரிசளித்தது.

அரிய மருந்துகள் பலவற்றை எடுத்துக்கொண்டும் போனான். மேலும், மா'பார் நாட்டைச் சேர்ந்த பலர் பரிசுப் பொருள்கள் பலவற்றை எடுத்துக் கொண்டு அவனுடன் சென்றனர். அவனே தன்னுடைய சொந்தப் பணத்தில் வாங்கிய சிவப்புச் சந்தனக் கட்டை, வீடு கட்டும் பொருள்கள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு போய்ப் பேரரசருக்குப் பரிசளித்தான். அவனுக்கும் அவனுடன் சென்றவர்களுக்கும் 1288ஆம் ஆண்டின் மூன்றும் சாந்திர மாதத்தில் பேரரசர் பேட்டி கொடுத்தார் என்று கருதலாம். உயிகுர் ஈஹெயிமிஷிஹ் ஆற்றிய தொண்டுகளுக்குப் பரிசாகப் பேரரசர் அவனை அரசாங்க அமைச்சர் பதவிக்கு உயர்த்தி பூகியன் ராஜ்யத்தின் கவர்னர் ஜெனரலாக்கினார்.[17]

மங்கோலிய அரசவைக்கு அதுவரையிலும் சென்ற தூதுக் குழுக்களுள் மிகவும் பெரியது 1288ஆம் ஆண்டில் சென்ற குழுவேயாகும். அந்தக் குழுவில் பத்து ராஜ்யங்களின் பிரதிநிதிகள் இருந்தார்கள். அவர்கள் எல்லாருமே அப்போது அந்த நாடுகளில் ஆட்சி செய்துகொண்டிருந்த அரச குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். அதைப் பற்றி எழுதப்பட்டுள்ள குறிப்பைக் கீழே தருகிறோம்.

'சிஹ்யூவன் இருபத்து மூன்றும் ஆண்டு ஒன்பதாம் சாந்திர மாதத்து (1286) முதல் நாளன்று (யீச்சௌ நாளன்று) மாபா-எர்ஹ்[18] ஹ-சுமென்ன[19] சேங்-கி-லி,[20] நன்-வுலி,[21] மா-லான்-டான்,[22] நாவங்,[23] டிங்-கோ-எர்ஹ், லாய்-லாய்

[17] ஆதாம் முடியிலுள்ள காலடியைப் பற்றி இபன்பதூதா பின் வருமாறு எழுதியுள்ளார்: 'சீனர்கள் முன்னொரு சமயம் இங்கே வந்து, பெருவிரலின் முத்திரையையும் அதனையடுத்துள்ள பகுதிகளையும் கல்லிலிருந்து வெட்டி, அந்தத் துண்டுகளை எடுத்துக் கொண்டுபோய், ஜெயிட்டுன் (சூவன் சௌ) நகரில் ஒரு கோயிலில் வைத்துவிட்டார்கள். சீனாவின் மிகத் தொலைவான பகுதிகளிலிருந்தும் மக்கள் அந்தக் கோயிலுக்குச் சென்று அந்தக் கற்றுண்டுகளை வழிபடுகிறார்கள்.' இந்தக் கலையழிவைச் செய்தவன் ஈஹெயிமிஷிஹ்தானோ?—Rookhill. Cf. p. 275 post.

[18] மா'பார்.

[19] மங்களூர் அல்லது அதன் அண்மையிலிருந்த ஓர் ஊர்.

[20] கொடுங்கோளூர் அல்லது காயங்குளம்.

[21] லம்பிரி (சுமாத்ராவில்)

[22] மணிபட்டன்—சோழ மண்டலக் கரையில் இருந்த ஒரு துறைமுகம்.

[23] நெல்லூர் (?) முன்னுள்ள அடிக்குறிப்பு எட்டைக் காண்க.

கிலானி-டை, சுமுடுலா[24] ஆகிய பத்து ராஜ்யங்களிலிருந்தும் தூதர்கள் வந்தார்கள். அவர்கள் அப்போது ஆட்சி செய்து கொண்டிருந்த அரசர்களின் தம்பிகளாகவோ மக்களாகவோ இருந்தார்கள். அவர்களுள் ஒவ்வொருவரும் தத்தம் அரசரிடமிருந்து கடிதங்களையும் திறைப்பொருள்களையும் கொண்டு வந்தனர். அவர்களுக்குப் பேரரசர் பேட்டியளித்தார்.'

மூன்று மாதத்திற்குப்பின் (24ஆம் ஆண்டின் முதல் மாதத்தில்) குலம் நாட்டிலிருந்து வந்தவனும் புலியு வென்னை என்னும் பெயருடையவனும் ஆன தூதனுக்கும் பிற தூதர்களுக்கும் பேரரசர் பேட்டி தந்தார். அதே ஆண்டின் மூன்றும் மாதத்தில் மா'பார்த் தூதன் பேரரசருக்குக் கோவேறு கழுதை போன்ற ஒரு விலங்கைப் பரிசு கொடுத்தான். அது ஒரு விசித்திர விலங்கு. அதன் உடல்மீது கறுப்புப் புள்ளிகளும் வெள்ளைப் புள்ளிகளும் இருந்தன. அதன் பெயர் ஆட்டாப் பீ என்பதாகும். (அந்தத் தூதன் அதற்கு முன்னைய ஆண்டின் இலையுதிர் காலத்தில் வந்தவனாய் இருக்கக்கூடும். ஆனால், அது தெளிவாய்த் தெரியவில்லை.)

1288ஆம் ஆண்டில் மா'பார்த் தூதன் ஒருவன் வந்தான் என்றும், 1289ஆம் ஆண்டில் மா'பார் அரசு ஒரு வரிக் குதிரையைப் பேரரசருக்குப் பரிசளித்தது என்றும், 1290ஆம் ஆண்டின் எட்டாம் மாதத்தில் இன்னொரு தூதன் மா'பாரிலிருந்து வந்து பேரரசருக்கு வெண்மை கருமை நிறமுடைய இரண்டு எருதுகளையும் ஓர் எருமையையும், ஒரு டுப்பியாவோவையும்[25] பரிசளித்தான் என்றும் அறிகிறோம்.

அதே ஆண்டின் (1290) நான்காம் சாந்திர மாதத்தில் சாங்-கி-லா-ஷிஹ் என்பவனையும் இன்னும் சிலரையும் பேரரசர் மா'பாருக்கு அனுப்பினர், திறமைமிக்க செப்படி வித்தைக்காரர்களைக் கண்டுபிடித்து அழைத்து வருவது அவர்களுக்கு இடப்பட்ட பணி. அந்தத் தூதுக் குழுவை அனுப்பியதன் நோக்கம் 'அறிவியல் வல்லுநர்களையும், திறமை மிக்க கைவினைஞர் வீரர் மாலுமிகள் ஆகியவர்களையும், பன்மொழியறிந்தவர்

[24] சுமாத்ரா (சுமாத்ராத் தீவில்)

[25] இந்த விலங்குகளும் வரிக்குதிரைகளும் எருமையும் ஆப்பிரிக்காவிலிருந்து கொண்டுவரப்பட்டவையாய் இருக்கவேண்டும். குப்ளாகான் காலத்தில் சீனர்கள் சாதாரண எருமையை அறிந்திருந்தார்கள். டுப்பியாவோ என்பது சிவிங்கி என்று கருதலாம்.

களையும்' தேடிக் கண்டுபிடித்து அழைத்து வருவதாகும் என்று கௌபில் சொல்கிறார்.

அடுத்த ஆண்டிலும் பேரரசர் மா'பாருக்கும் குலத்திற்கும் தூதர்களை அனுப்பினார் என்று அறிகிறோம். ஆனால் அவர்கள் எதற்காக அனுப்பப்பட்டார்கள் என்பது தெரியவில்லை.

**இறுதித் தூதுக் குழுக்கள்**

முன்பு மா'பாருக்கும் இலங்கைக்கும் சென்றுவந்த தூதனை ஈஹெறயிமிஷிஹ் வடகிழக்கு ஜாவாவில் இருந்த கோ-லாங் என்னும் இராஜ்யத்தைத் தண்டிப்பதற்காகச் சென்ற படையின் தலைவர்களுள் ஒருவனாய் 1292ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்டான். தன்னுடைய கடற்படையோடு சாங்-சேங் (அன்னம்) நாட்டையடைந்த ஈஹெறயிமிஷிஹ் சீனாவுக்கும் நன்-வுலி (லம்பிரி), சுமுடுலா(சுமாத்ரா). புலுபுது, பாலாலா என்னும் நாடுகளுக்கும் இருந்த இன் தொடர்பை வலுப்படுத்தும் நோக்கத்துடன் ஹோ-சேங், லியூ யூவன் ஆகிய இரண்டு அலுவலர்களை அந்தச் சிறு ராஜ்யங்களுக்கு அனுப்பினான். அந்த ராஜ்யங்கள் அனைத்துமே சீனாவுக்குத் தூதுக் குழுக்களை அனுப்பின.

மேலே கண்ட தூதுக் குழுக்களுக்குப் பின்னர் மா'பாருக்கும் சுமாத்ராவுக்கும், அவற்றை அடுத்துள்ள நாடுகளுக்கும் சீனத் தூதுக் குழுக்கள் முன்போல அடிக்கடி செல்லவில்லை; மிகவும் அருமையாகவே சென்றன. 1296 ஆம் ஆண்டில் யோலோ யெஹ்னூ என்பவன் தலைமையில் ஒரு தூதுக் குழு மா'பாருக்குச் சென்றது. அடுத்த ஆண்டில் மா'பாரைச் சேர்ந்த டாஹிசி என்பவன் மருந்துகளைத் திரட்டுவதற்காக வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டான். ஆனால், மா'பாரிலிருந்து 1314ஆம் ஆண்டு வரையிலும் தூதர் யாரும் வரவில்லை. அந்த ஆண்டில், மா'பார் அரசனை ஹிசிலாமுடிங்[26] தன்னுடைய அமைச்சன் ஐசுடிங் என்பவனிடம் பரிசுகளைக் கொடுத்து மங்கோலிய அரசவைக்கு அனுப்பினான்.

அதற்குப் பின் முப்பதாண்டுக் காலம் தென்னிந்தியாவுக்குச் சீனத் தூதர் யாருமே வரவில்லை. 1344ஆம் ஆண்டில் சீனத் தூதன் ஒருவன் குலத்திற்கு வந்தான். 1283இல் வந்த தூதனைப் போலவே, இந்தத் தூதனும் குலத்தின் அரசனுக்கு (வாகியிக்கு) அளிப்பதற்காகப் புலி முத்திரைச் சின்னம் ஒன்றை எடுத்துக்

[26] நிஜாமுதீன் (ஜமாலுதீனுடைய பேரன்)—Yule, RAS, N. S. i., v, 348.

கொண்டு வந்தான். அன்றியும், அந்த அரசனுக்கு 'பூமா' அல்லது 'பேரரசு மருமகன்' என்னும் பட்டத்தைப் பேரரசர் அளித்திருப்ப தாகவும் தூதன் தெரிவித்தான். இந்தத் தூதுக் குழு வந்து போன பின்னர், சீனாவுக்கும் தென்னிந்தியா இலங்கை சுமாத்ரா ஆகிய நாடுகளுக்கும் இடையிலிருந்த அரசுமுறைத் தொடர்புகள் அறுந்துபோயின. ஆனால், வாணிகத் தொடர்புகள் இடையீ டின்றி நீடித்தன. அத் தொடர்புகள் மிகவும் முக்கியமானவை. எனினும், வாணிகத்தின் அளவும் மதிப்பும் முன்னைக் காட்டிலும் மிகவும் குறைந்து போயின.

—Rockhill—*T'ong Pao*, xv, pp. 430–444.

# XXV. மார்க்கபோலோ
## சுமார் கி.பி. 1293

### அ. சீலன் தீவு (இலங்கை)

அங்கமனியன்[1] தீவிலிருந்து புறப்பட்டு, மேற்கு நோக்கி, சிறிது தெற்கு முகமாய், சுமார் 1000 மைல் பயணஞ் செய்தால், சீலன் தீவை அடையலாம். உலகில் அந்த அளவுள்ள தீவுகளுள் அதுவே மிகவும் சிறந்தது. அது 2400 மைல் சுற்றளவுள்ளது. முன்காலத்தில் அது இன்னும் பெரிதாயிருந்தது. அப்போது அதன் சுற்றளவு 3600 மைலாய் இருந்தது. அந்தக் கடல்களில் முன்பு கலஞ்செலுத்திய மாலுமிகள் வரைந்து வைத்துள்ள படங்களைப் பார்த்தால் இவ்வுண்மை விளங்கும். வடக்குக் காற்று அங்கு மிகவும் வேகமாய் வீசுவதால், அந்தத் தீவின் ஒரு பெரும்பகுதி கடலில் முழுகிவிட்டது. அதனால்தான் முன்பு இருந்ததைக் காட்டிலும் அந்தத் தீவு இப்போது சிறியதாகி விட்டது. வடக்குக் காற்று அடிக்கும் திசையில் அந்தத் தீவு மிகவும் தாழ்வாகவும் மேடுபள்ளம் இல்லாமலும் இருப்பதால், பெருங்கடலிலிருந்து பார்த்தால் அங்கு ஒரு தீவு இருப்பதே தெரிவதில்லை. கரைக்கு மிகவும் அருகில் சென்ற பின்னர்தான் தீவு நம் கண்ணுக்குத் தெரிகிறது[2]. இனி, அந்தத் தீவைப் பற்றிய செய்திகளை நான் சொல்லப் போகிறேன்.

தீவில் ஓர் அரசன் இருக்கிறான். அவன் பெயர் சென்த மெயின்[3] என்பதாகும். தீவில் வாழும் மக்கள் விக்கிரங்களை

[1] அந்தமான்.

[2] அதன் உண்மையான சுற்றளவு 700 மைலுக்கும் குறைவு.

[3] இந்தப் பெயர் எதைக் குறிக்கிறதென்பது சரியாய் விளங்கவில்லை. சந்த்ரமஸ் (சந்திரன்) என்னும் சொல்லே இவ்வாறு மருவிற்று? அப்படியானால், இலங்கையரசர்கள் சந்திர வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்று யாரேனும் மார்க்கபோலோவிடம் கூறியிருப்பரோ?

வழிபடுபவர்கள். அவர்கள் இடையை மட்டுமே மூடிக் கொள்கிறார்கள். எனவே, அவர்கள் முழு நிர்வாணமாய் இருக்கிறார்கள் என்று சொல்லலாம். அங்குக் கோதுமை கிடையாது; ஆனால், அரிசியிருக்கிறது. அங்கு விளையும் எள்ளிலிருந்து அவர்கள் எண்ணெய் எடுத்துக் கொள்கிறார்கள். அவர்கள் இறைச்சியும் பாலும் அருந்துகிறார்கள். நான் முன்னர்ச் சொன்னது போன்ற மர மதுவை அவர்கள் குடிக்கிறார்கள். அங்கு வளரும் ப்ரேசில் மரம் உலகிலேயே மிகச் சிறந்தது என்று சொல்லலாம்.

**மணிக் கற்கள்** இந்த விவரங்களை இத்தோடு நிறுத்திவிட்டு, உலகிலேயே மிகவும் மதிப்புமிக்க பொருளைப்பற்றிச் சொல்லப் போகிறேன். இந்த நாட்டில் மாணிக்கம் கிடைக்கிறது. வேறெந்த நாட்டிலும் அது கிடைப்பதில்லை. மேலும், அங்கு நீலமணி, புட்பராகம், செவ்வந்திக்கல் முதலிய விலையுயர்ந்த மணிக் கற்களும் கிடைக்கின்றன. அந்தத் தீவின் அரசனிடம் உள்ள மாணிக்கம் ஒன்று உலகிலேயே மிகவும் பெரியது, மிகவும் சிறந்தது. அதைப் பற்றி இப்போது சொல்லப் போகிறேன். அது மனிதனுடைய முன்கையளவு பருமனும் ஒரு கையளவு நீளமும் உடையது. அதைப் பார்க்கும் போது அதுதான் உலகிலேயே மிகுந்த ஒளியுடைய பொருள் என்று எண்ணத் தோன்றும். எவ்விதக் குறைபாடும் இல்லாத (தோஷமேயில்லாத) அந்தக் கல் தீயைப் போலச் சிவப்பாயிருக்கிறது. அதனுடைய மதிப்பு மிகவும் உயர்ந்ததாய் இருப்பதால், அதற்கு இன்ன விலை கொடுக்கலாம் என்று சொல்வது கடினம். அந்தக் கல்லை அடைய விரும்பிய பேரரசர் குப்ளாகான் அதற்காக ஒரு தூதுக் குழுவையே அனுப்பினார். சிலன் அரசன் அதனை விற்பதாயிருந்தால், பேரரசர் அதற்கு என்ன விலை வேண்டுமானாலும் தருவதற்கு இசைந்தார். ஒரு நகரத்தின் விலை வேண்டுமா? இன்னும் பெரிய விலை வேண்டுமா? எது வேண்டுமானாலும் கொடுப்பதாகக் கான் உறுதி கூறினார். அந்தக் கல் மட்டும் தமக்குக் கிடைத்தால் போதுமென்றார். ஆனால், சிலன் அரசன் அதனை விற்பதற்கு மறுத்துவிட்டான். தன்னுடைய முன்னோர்களிடமிருந்து வந்த அந்தப் பரம்பரை உடைமையை எந்தக் காரணத்தைக் கொண்டும் விற்க முடியாது என்று சொல்லி விட்டான்[4].

[4] ஈழத்தின் தமிழ்த் தலைவனான ஆரியச் சக்கரவர்த்தி என்பவனிடம் இருந்த மாணிக்கக் கிண்ணத்தைப் பற்றி இபன் பதூதா எழுதியுள்ள குறிப்பைக் காண்க.

சிலன் தீவில் வாழும் மக்கள் போர்வீரர்கள் ஆவதற்குத் தகுதியற்றவர்கள்; மிகவும் கோழைகள். போர்வீரர்கள் தேவைப்படும் போது வெளிநாடுகளிலிருந்து சாரசன் வீரர்களை வரவழைத்துக்கொள்கிறார்கள்.

படை

## சகமொனி போர்கன் வரலாறும் உருவ வழிபபாட்டின் தொடக்கமும்

சிலன் தீவில் மிகவும் உயரமான மலையொன்று இருக்கிறது. அது தரையிலிருந்து செங்குத்தாய் மேலே கிளம்பியிருப்பதால் அதன்மீது ஏறுவது யாராலும் இயலாது. அதனால் அங்கு வாழும் மக்கள் மிக உறுதியானவையும் மிகப் பெரியவையும் ஆன இரும்புச் சங்கிலிகளை அந்த மலையின்மீது பொருத்தி வைத்திருக்கிறார்கள். அந்தச் சங்கிலிகளைப் பிடித்துக்கொண்டுதான் அவர்கள் அந்த மலைமீது ஏறுகிறார்கள். அந்த மலையின்மீதுதான் நம்முடைய முதல் தகப்பனான ஆதாமின் கல்லறை இருக்கிறது என்று சொல்கிறார்கள்[5]. மற்றவர்கள் அவ்வாறு சொல்கிறார்களோ இல்லையோ சாரசன் மக்கள் அவ்வாறு சொல்வது உண்மை. ஆனால், அந்தத் தீவில் வாழும் உருவ வழிபாட்டினர் அது சகமொனி போர்கன் சமாதியென்று சொல்கின்றனர். சகமொனிக்கு முன்பு அந்தத் தீவில் உருவ வழிபாடு வழக்கில் இல்லை. அவர் மக்களுட் சிறந்தவர் என்றும் தங்கள் நாட்டு வழக்கப்படி அவர் மிகப் பெரும் புனிதர் என்றும் அவர்கள் நம்புகிறார்கள். அவருடைய பெயரில்தான் முதன் முதலில் விக்கிரங்கள் செய்யப்பட்டன.

ஆதாம் சிகரம்

சகமொனியைப் பற்றி அவர்கள் சொல்லும் கதையைப் பார்ப்போம். அவர் மிகுந்த செல்வமுடைய ஒரு பெரிய அரசருடைய மகனாய்ப் பிறந்தார். அவர் மிகவும் புனிதமான மனமுடையவர். ஆதலால், அவர் உலகியல் செய்திகளைப் பேசவும் கேட்கவும் எப்போதும் விரும்பியதில்லை. அரச பதவியையும் அவர் விரும்பவில்லை. தம்முடைய மகன் அரச பதவியை வெறுப்பதையும் அரசுப் பணிகளில் நாட்டம் கொள்ளாததையும் கண்ட அரசர் மிகுந்த கவலையுற்றார்.

சகமொனி போர்கன் (புத்தர்)

[5] ஆதாமின் காலடிதான் அங்கேயிருக்கிறது என்று ஏனைய பயணிகள் எழுதிவைத்துள்ளார்கள்.

எனவே மகனுடைய மனத்தை மாற்றுவதற்கு அவர் முயன்ருர், முதலில் அவர் பல வகையாக ஆசை காட்டினர். 'உன்னையே அரசனுக்கி, என் அதிகாரம் முழுவதையும் இப்போதே உனக்குக் கொடுத்துவிடுகிறேன்' என்று மகனிடம் சொன்னர். ஆனல் மகன் அதற்கு இசையவில்லை. எனவே, அரசர் பெருங்கவலை அடைந்தார். அவருக்கு வேறு மகனும் இல்லை. இறக்கும்போது தம்முடைய நாட்டை அவர் யார் கையில் விட்டுச் செல்வார்? எனவே, எண்ணி யெண்ணிப் பார்த்து, இறுதியில் அவர் ஒரு முடிவுக்கு வந்தார். ஒரு பெரிய மாளிகையைக் கட்டி அதில் தன் மகனைக் குடியேற்றினர். நாட்டிலேயே மிக அழகிய பெண்கள் பலரைத் தெரிந்தெடுத்து அவர்களைத் தம் மகனுக்குப் பணிப் பெண்களாக நியமித்தார். அவர்கள் இளவரசர் முன்பு இரவு பகலாய் ஆடியும் பாடியும் அவருடைய மனத்தை உலகியல் செய்திகளுக்கு இழுக்க முயலவேண்டுமென்று பணித்தார். ஆனல், அம் முயற்சிகளெல்லாம் வீணுய்ப் போயின. அவரை மயக்குவதற்கு அந்தப் பெண்களால் இயலவில்லை. அவருடைய மன உறுதி மேலும் வலிமை பெற்றது. பெண்ணசை சிறிதும் இன்றி அவர் மிகவும் தூய வாழ்க்கை நடத்தினர். தூய எண்ணங்களே அவருடைய மனத்தை ஆட்கொண்டு விட்டதால் வேறு செயல்களில் ஈடுபடுவதற்கேற்ற உள்ளக் கிளர்ச்சி அவருக்கு ஏற்பட்டதே இல்லை. எனவே, அவர் மாளிகையை விட்டு வெளியே போனதே இல்லை; சாவு என்பதே அவருக்குத் தெரியாது; நோய் நொடியுள்ள மக்களை அவர் கண்டதே இல்லை. மூப்புற்றவரையும் நோய் கொண்டவரையும் அவர்முன் அரசர் அனுமதித்ததே கிடையாது. வழக்கமல்லாத வழக்கமாக ஒருநாள் இளவரசர் குதிரைமீது ஏறி வெளியே சென்ருர். வழியில் ஒரு பிணம் அவர் கண்ணிற் பட்டுவிட்டது. அன்று வரையிலும் அவர் அத்தகைய காட்சியைக் கண்டதே இல்லை. எனவே, தம்முடன் இருந்தவர்களை நோக்கி, 'இது என்ன?' என்று கேட்டார். 'ஒரு மனிதன் இறந்துபோனன்; இது அவனுடைய உடல்' என்று அவர்கள் சொன்னர்கள். 'மனிதர் அனைவருமே இறந்துபோவரா?' என்று இளவரசர் கேட்டார். 'ஆம்' என்று அவர்கள் விடையிறுத்தார்கள். அதைக் கேட்ட இளவரசர் வேருென்றும் பேசாமல் மனக்கவலையோடு சென்று கொண்டிருந்தார். நெடுந்தூரம் சென்றபின் அவர் ஒரு முதியவனைக் கண்டார். அவனுக்கு வயது மிகவும் அதிகமாகி விட்டதால், அவனல் நடக்க முடியவில்லை. அவனுடைய பற்கள் அனைத்தும் விழுந்துவிட்டன. 'இது என்ன கோலம்? ஏன் இவனல் நடக்க முடியவில்லை?' என்று இளவரசர் தம்முடைய ஆட்களிடம் வினவினர். 'முதுமையின் விளைவாக அவன் பற்கள்

விழுந்து விட்டன. அவனால் நடக்க முடியாததற்கும் முதுமையே காரணம்' என்று அவர்கள் சொன்னார்கள். இவ்வாறு மூப்பையும் சாவையும்பற்றித் தெரிந்துகொண்ட இளவரசர் நேராக மாளிகைக்குத் திரும்பிவிட்டார். 'துன்ப மிக்க இந்த உலகில் நான் இருக்கமாட்டேன். சாகாதவனும் என்னைப் படைத்தவனும் ஆன 'அவன்' எங்கே யிருக்கிறானோ அங்கே அவனைத் தேடிச் செல்வேன்' என்று இளவரசர் முடிவு செய்து விட்டார்.

இளவரசர் ஓரிரவு ஒருவருக்கும் தெரியாமல் மாளிகையை விட்டு வெளியேறி மக்கள் நடமாட்டமில்லாத ஒரு மலைக்குப் போய்விட்டார். அங்கே அவர் தம்மைப் பல துன்பங்களுக்கு ஆட்படுத்திக் கொண்டார். உடலுக்குரிய இன்ப நுகர்ச்சி எதுவும் இன்றிக் கடுமையான நோன்பு வாழ்க்கையை மேற் கொண்டார். அப்போது அவர் ஒரு கிறிஸ்துவரைப் போல மிகவும் புனிதமாய் வாழ்ந்தார். அவர் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவராய் இருந்தால் ஏசு கிறிஸ்துவின் அருளுக்குப் பாத்திரமான பெரும் புனிதராகியிருப்பார். அவர் இறந்த பிறகு அவருடைய உடல் அவருடைய தந்தையாரிடம் சேர்க்கப்பட்டது. தம்முடைய உயிரினும் மேலாக நேசித்த தம்முடைய மகன் இறந்துகிடப்பதைக் கண்ட அரசர் அடைந்த துன்பத்திற்கு அளவே யில்லை. ஏறக்குறையப் பைத்தியம் பிடிக்கும் நிலைக்கு அவர் வந்துவிட்டார். பின்னர் ஒருவாறு தேறித் தம்முடைய மகனைப் போன்ற பன்மணி பதித்த பொற்சிலை ஒன்றை உருவாக்கி அதனைக் குடிமக்கள் வழிபடுமாறு செய்தார். மக்கள் அனைவரும் அவரைக் கடவுள் என்றே சொன்னார்கள். இன்றைக்கும் அவ்வாறுதான் அவர்கள் சொல்கிறார்கள்.

**ஜாதகக் கதைகள்**

மேலும், அவர் 84 முறை இறந்தார் என்று மக்கள் சொல் கிறார்கள். முதலில் அவர் ஒரு மனிதராயிருந்து செத்தார். பின்னர் அவர் ஓர் எருதாகப் பிறந்தார். எருது செத்ததும் அவர் ஒரு குதிரையாய்ப் பிறந்தார். இவ்வாறு ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு வகை விலங் காகப் பிறந்து பிறந்து செத்துச் செத்து மீண்டும் பிறந்தார். இறுதியில், அவர் 84ஆம் முறை செத்தபோது தெய்வ மாகிவிட்டார். மக்கள் தங்களுடைய தெய்வங்களுள் எல்லாம் மிகப் பெரிய தெய்வமாக அவரை மதிக்கிறார்கள். முன்னர்ச் சொன்ன சிலையே அந்த மக்கள் வழிபட்ட முதற்சிலை. அதிலிருந்து தான் ஏனைய சிலைகளெல்லாம் தோன்றின. இந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் இந்தியாவில் உள்ள சிலன் தீவில் நடைபெற்றன.[6]

[6] சாக்கிய முனிவரின் வரலாற்று நிகழ்ச்சிகளை இலங்கையோடு தொடர்பு [illegible]

கிறிஸ்துவர்கள் கலீசியாவிலுள்ள சென்ட் ஜேம்ஸ் கோயிலுக்கு யாத்திரை செய்வதைப் போல மிகத் தொலைவிலுள்ள ஊர்களிலிருந்து உருவ வழிபாட்டினர் மிகுந்த பக்தியுடன் இங்கு வந்து சிலையை வழிபடுகின்றனர். மலைமீதுள்ள கல்லறை அந்த அரசகுமாரனுடையதுதான் என்றும், அங்கேயிருக்கின்ற தலைமயிர், பல், பாத்திரம் ஆகியவையும் அவருடையவையே என்றும், அவருடைய பெயர் சகமொனி போர்கன் அல்லது புனிதச் சகமொனி என்றும் மக்கள் சொல்கிறார்கள். ஆனால், சாரசன் மக்களும் இங்கு ஏராளமாக வருகிறார்கள். மலைமீது இருக்கும் கல்லறை நம்முடைய முதல் தந்தையான ஆதாமின் கல்லறை என்றும் அங்கேயிருக்கிற தலைமயிர், பல், பாத்திரம் ஆகியவையும் ஆதாமுடையவையே என்றும் அவர்கள் சொல்கிறார்கள்.[7]

---

*சொல்லியிருக்கக் கூடும். புத்தமதம் பரவியுள்ள நாடுகளில் வாழ்கின்ற பொது மக்கள் புத்தரைப் பற்றிய கதைகள் தங்கள் தங்கள் ஊரிலேயே நிகழ்ந்தவை என்று கூறுவது பொதுவாக நாம் காணும் செய்தியாகும்.*

[7] *எத்தனையோ நூற்றாண்டுகளாக பௌத்தர்களும் இந்துக்களும் முஸ்லீம்களும் ஆதாம் சிகரத்திற்குப் புனிதப் பயணஞ் செய்திருக்கிறார்கள்; இன்றைக்கும் அவ்வாறு செய்கிறார்கள்—யூல்.*

*புஜுர்க் இபன் ஷாரியர் இலங்கையைப் பற்றிப் பின் வருமாறு எழுதி வைத்துள்ளார்—*

*கடலில் உள்ள தீவுகளுள் எல்லாம் செரந்தீவைப் போன்றதொரு தீவைக் காண்பது இயலாது. செரந்தீவை செஹிலன் (சிலான்) என்றும் சொல்கிறார்கள். அதனுடைய நீளம் 100 பரசங்கு; சுற்றளவு 300 பரசங்கு. அங்கு நன்முத்து அதிகமாய்க் கிடைப்பதில்லை. எப்போதேனும் பெரிய முத்துகள் கிடைத்தால் அவை மட்டரகமாயிருக்கின்றன. அங்கே ஹாசின் என்னும் மலையொன்று இருக்கிறது. அது மங்கலான மணிக்கல்லாலும் வைரத்தாலும் ஆனது. அந்த மலைமீதுதான் ஆதாம் இறங்கினார் என்று சொல்கிறார்கள். அங்கே அவருடைய காலடியைக் காணலாம். அது 70 முழ நீளமுள்ளது. ஆதாம் தம்முடைய கால்களுள் ஒன்றை அந்த மலைமீது வைத்தார் என்றும் இன்னொரு காலைக் கடலில் வைத்தார் என்றும் அங்குள்ள மக்கள் சொல்கிறார்கள். அந்தத் தீவில் ஒருவகைச் செம்மண் இருக்கிறது. அது படிகத்தையும் கண்ணாடியையும் மழமழப்பாக்குவதற்குப் பயன்படுகிறது. அந்தத் தீவில் மிகச் சிறந்த லவங்கப் பட்டை கிடைக்கிறது. அதைத்தான் நாம் சிங்கள லவங்கம் என்று பாராட்டுகிறோம். அங்குள்ள புல் சிவப்பு நிறமாயிருக்கிறது. பருத்தி நூலுக்கும் வேறு துணிகளுக்கும் சாயம் போடுவதற்கு அதனைப் பயன்படுத்துகிறார்கள். பக்வம், குங்குமப்பூ, குசும்பம் முதலிய செஞ்சாயங்களைக் காட்டிலும் அது சிறந்தது. அந்தத் தீவில் இன்னும் எத்தனையோ சிறந்த தாவரங்கள் வளர்கின்றன. அவற்றையெல்லாம் சொல்லத் தொடங்கினால் பட்டியல் மிகவும் நீண்டுவிடும். அந்தத் தீவில் சுமார் நூறாயிரம் நகர்கள் இருக்கின்றன என்று சொல்கிறார்கள்.*

— *The Marvels of India*, pp. 154—55.

அவையெல்லாம் யாருடையவை என்பது கடவுளுக்குத்தான் தெரியும். ஆனல், நம்முடைய புனித நூலின்படி ஆதாமின் கல்லறை அங்கில்லை என்பதை மட்டும் நாம் உறுதியாய்ச் சொல்லலாம்.

**குப்ளாகான் அனுப்பிய தூதுக் குழு**

நம்முடைய முதல் தந்தையாகிய ஆதாமின் கல்லறையும், அவருடைய தலைமுடியில் ஒரு பகுதியும், பற்களிற் சிலவும், அவர் உணவு கொள்ளப் பயன்படுத்திய பாத்திரமும் அந்த மலையின்மீது இருக்கின்றன என்றும் அவை அழிந்து போகவில்லை என்றும் கேள்விப்பட்ட குப்ளாகான் அவற்றை எப்படியாவது அடைய வேண்டும் என்று விரும்பினர். அதற்காக, அவர் கி.பி. 1284ஆம் ஆண்டில் ஒரு பெரிய தூதுக் குழுவை அனுப்பினர். அந்தத் தூதர்கள் தங்கள் பரிவாரங் களோடு தரைவழியாகவும் கடல்வழியாகவும் பயணஞ் செய்து, சிலன் தீவையடைந்து, அரசனைக் கண்டு, குப்ளாகானுடைய விருப்பத்தை அவனிடம் மிகவும் வற்புறுத்திச் சொன்னர்கள். அவர்களுடைய ஆர்வத்தைக் கண்ட அரசனும் அவர்களுடைய வேண்டுகோளுக்குச் செவிசாய்த்தான். அதன் பயனுக, அவன் கடைவாய்ப் பல் இரண்டை அவர்களுக்குக் கொடுத்தான். அவை மிகவும் பெரியவையாகவும் மிகவும் திட்பமாகவும் இருந்தன. அன்றியும், தலைமுடியில் ஒரு பகுதியையும், புனிதர் பயன் படுத்திய உண்கலத்தையும் அவர்கள் அரசனிடமிருந்து பெற்ருர்கள். அந்தக் கலம் மிகவும் அழகிய வெண்ணீலப் பாறையால் செய்யப்பட்டது. இவ்வாறு தங்கள் நோக்கம் நிறைவேறியதால் மிகுந்த மகிழ்ச்சியடைந்த தூதர்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்பிப் போனுர்கள். அப்போது குப்ளாகான் காம்பலுக் என்னும் பெரிய நகரத்தில் தங்கியிருந்தான். அந்த நகரத்தின் எல்லையை அடைந்ததும், தூதர்கள் தாங்கள் போன காரியம் வெற்றி பெற்றுவிட்டது என்று குப்ளாகானுக்குச் செய்தியனுப்பினுர்கள். அதைக் கேட்டு அளவிலா மகிழ்ச்சி அடைந்த குப்ளாகான் அந்தத் திருச்சின்னங்களை வரவேற்பதற் காக அங்கிருந்த மத குருக்களையும் ஏனைய மக்களையும் அனுப்பி னுர். அவை ஆதாமின் திருச்சின்னங்களென்றே அவர் நம்பினுர்.

கதையை நான் மேலும் வளர்க்க விரும்பவில்லை. காம்ப லுக்கில் வாழ்ந்த மக்கள் அனைவருமே அந்தத் திருச் சின்னங்களை வரவேற்கச்சென்றனர். அவற்றைத் தூதர்களிடமிருந்து பெற்றுக் கொண்ட குருமார்கள் நேராக அவற்றைக் குப்ளாகானிடம் கொண்டு போனுர்கள். குப்ளாகானும் அவற்றை மிகுந்த பக்தியு டனும் மகிழ்ச்சியுடனும் பெற்றுக்கொண்டார். புனிதருடைய

உண்கலம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஒருவனுக்குப் போதுமான உணவை அதிலிட்டால் அது ஐவர் உண்ணும் அளவுக்குப் பெருகிவிடுமாம். இவ்வாறு அவர்களுடைய திருமறை நூல்களில் எழுதிவைத்திருக்கிறார்கள். அந்தக் கூற்று மெய்யா பொய்யா என்பதைக் குப்ளாகான் சோதனைசெய்து பார்த்ததாகவும் அது மெய்யே என்று கண்டுபிடித்ததாகவும் அவரே சொன்னார்.

அந்தத் திருச்சின்னங்களைக் குப்ளாகான் எவ்வாறு அடைந்தார் என்பதையும் அவற்றை அடைவதற்காக அவர் எவ்வளவு பெரும்பொருள் செலவிட்டார் என்பதையும் இப்போது நீங்கள் தெரிந்துகொண்டீர்கள். அந்தத் திருச் சின்னங்கள் அரசன் மகனுடையவை என்று உருவ வழிபாட்டினர் இன்றும் நம்புகின்றனர்.

—*Travels of Marco Polo*, ed. Yule & Cordier. Book. iii. Ch. xiv-xv.

## ஆ. மா'பார்

(தலைநிலத்தில் இருப்பதும் பெரிய இந்தியா என்று சொல்லப் படுவதும் ஆகிய மா'பார் என்னும் பெருமாகாணத்தைப் பற்றிய செய்திகள்.)

சிலன் தீவிலிருந்து புறப்பட்டு மேற்கு முகமாய்ச் சுமார் 60 மைல் பயணம் செய்தால் மா'பார் என்னும் பெரிய மாகாணத்தை அடையலாம். அதனைப் பெரிய இந்தியா என்று சொல்கிறார்கள். தலைநிலத்திலுள்ள அந்த மாகாணமே[8] இந்தியாக்கள் எல்லாவற்றுள்ளும் மிகவும் சிறந்தது.

[8] மலபாரின் எல்லை முடிந்து மா'பாரின் எல்லை தொடங்கும் இடத்திலுள்ள இடமே குமரிமுனை என்று அபுல்பேடா சொல்கிறார். இன்னும் சிறிது காலத் திற்குப் பின் வசப் எழுதிய குறிப்பை மார்க்கபோலோவின் குறிப்போடு ஒப்பு நோக்குவது பயனுடைய முயற்சியாயிருக்கும். வசப் பின் வருமாறு எழுதியுள்ளார்:

*மா'பார் நாடு குலத்திலிருந்து நிலவர் (நெல்லூர்) வரையிலும் பரவி இருக் கிறது. கடற்கரையை ஒட்டி அது ஏறக்குறைய 300 பரசங்கு நீண்டு கிடக்கிறது. அந்த நாட்டு மொழியில் அரசனை தேவர் என்று சொல்கிறார்கள். தேவர் என்றால் பேரரசின் தலைவன் என்று பொருள்படும். சின், மச்சின் ஆகிய நாடு களிலும் சிந்து, ஹிந்து ஆகிய நாடுகளிலும் கிடைக்கின்ற அரிய பொருள்களை ஏற்றிக் கொண்டு, மலைபோன்ற கப்பல்கள் காற்றில் இறகை விரித்துப் பறந்து வருவதுபோலக் கடல்மீது மிதந்து அந்த நாட்டுக்கு வந்தவண்ணம் இருக்கின்றன. பாரசிக வளைகுடா நாடுகளின் செல்வங்களெல்லாம் மா'பாரிலிருந்தே வருகின்றன. அதுபோலவே, இராக்கு குராசன் முதலிய நாடுகளிலிருந்தும்,*

இந்த மாகாணத்தில் அண்ணன்தம்பிகளாகிய ஐந்து அரசர்கள் இருக்கிறார்கள். அவர்களுள் ஒவ்வொருவரைப் பற்றியும் தனித்தனியே எடுத்துரைக்கப் போகிறேன். இந்த மாகாணம் உலகத்திலேயே மிகவும் சிறந்தது.

**பாண்டியர்**

மாகாணத்தின் இந்தக் கோடியில் மேலே சொன்ன ஐவருள் ஒருவனான சௌந்தர்ப் பாண்டித் தேவர் என்பவன் முடியுடை வேந்தனாய் ஆட்சி செய்கிறான். அவனுடைய நாட்டில் மிக நேர்த்தியான பெரிய முத்துகள் கிடைக்கின்றன. முத்துக் குளிக்கும் முறையைப் பற்றி இப்போது சொல்லப் போகிறேன்.

**முத்துச் சலாபம்**

தலைநிலத்திற்கும் சிலன் தீவுக்கும் இடையிலுள்ள கடல் வளைகுடாவாய் இருக்கிறது. இந்த வளைகுடாவின் ஆழம் பத்துப் பன்னிரண்டு ஆளுயரத்திற்குமேல் போகவில்லை. சில இடங்களில் இரண்டு ஆளுயர ஆழமே இருக்கிறது. முத்துக் குளிப்பவர்கள் சிறியவையும் பெரியவையும் ஆன தங்களுடைய கலங்களை ஓட்டிக் கொண்டு இந்த வளைகுடாவுக்குப் போகிறார்கள். ஏப்ரல் மாதத் தொடக்கத்திலிருந்து மே மாதத்தில் சுமார் பதினைந்தாம் தேதி வரையிலும் அவர்கள் அங்கேயே இருக்கிறார்கள். முதலில் அவர்கள் பெட்டலார்[9] என்னும் இடத்திற்குச் செல்கிறார்கள்.

---

ஐரோப்பா வரையிலும் பரவியுள்ள பல நாடுகளிலும் வாழ்கின்ற மக்களுடைய வாழ்க்கைக்கு அழகூட்டும் பொருள்களுள் பல மா'பாரிலிருந்து செல்கின்றன. மா'பாரின் அமைப்பை நோக்கும்போது, அதுவே ஹிந்து நாட்டின் திறவுகோல் என்று நினைக்கத் தோன்றும்.

சில ஆண்டுகளுக்கு முன்பு சுந்தர்ப்பாண்டி என்னும் அரசன் மா'பாரை ஆண்டுவந்தான். அவனுக்கு மூன்று சகோதரர்கள் இருந்தார்கள். அவர்கள் மூவருமே வெவ்வேறிடங்களில் தங்கள் ஆட்சியை நிறுவிச் சுதந்திரமாய் ஆண்டுகொண்டிருந்தார்கள். முகமது-உட்-டிபியின் மகனான டக்கியுதீன் அக்பர் ரஹமான் தேவருடைய முதலமைச்சனாகவும் ஆலோசகனாகவும் இருந்தான். அவனுடைய நற்குணம் திறமை முதலியவற்றை அந்த அழகிய நாட்டில் வாழ்கின்ற மக்கள் பெரிதும் பாராட்டிப் புகழ்கிறார்கள். எந்த நேரத்தில் எதனைச் செய்வது நல்லது என்று தெரிந்து தெளிவதில் அவன் வல்லவன்; பிதன், மலிபிதன், கபில் ஆகியவை அவனுக்கு உரிமையாக்கப் பட்டன. அவனுடைய பெயரில் குத்பா ஓதும் அளவுக்கு அவன் தகுதி உள்ளவன். இத்தனை பெருமைகளையும் புகழையும் அடைந்த பின்னரும் அவன் தன்னுடைய அரசனுக்கு எதிராய்ச் சூழ்ச்சி செய்யவில்லை. (Elliot and Dowson, pp. 69—70)

[9] சிலான் கரையிலுள்ள புட்லம்—யூல்.

பின்னர் அங்கிருந்து வளைகுடாவில் 60 மைல் தொலைவு செல்கிறார்கள். அந்த இடத்தில் அவர்கள் தங்களுடைய பெருங்கலங்களை நங்கூரம் பாய்ச்சி நிறுத்திவிட்டுச் சிறுகலங்களில் ஏறிக் கொள்கிறார்கள். முத்துச் சலாபத்திற்காகப் போகும் வணிகர்களின் தொகை பெரியதாய் இருக்கிறது. அங்கே போன பின்னர் அவர்கள் பல கூட்டங்களாய்ப் பிரிந்து முத்தெடுக்கும் பணியைத் தொடங்குகிறார்கள். அவ்வாறு பிரிகின்ற குழு ஒவ்வொன்றும் தனித்தனியே கூலியாட்களை நியமித்துக் கொள்கின்றது. ஏப்ரல் மாதத்திற்கும் மே மாதத்தில் பாதி நாட்களுக்கும் அவர்களுக்குக் கூலி தருவதாக வணிகர்கள் ஒப்பந்தம் செய்துகொள்கிறார்கள். கிடைக்கின்ற முத்தில் பத்தில் ஒரு பகுதியை அரசனுக்குக் கொடுத்துவிட வேண்டும். அதுபோலவே, நீரில் மூழ்கி முத்துச் சிப்பிகளைத் தேடியெடுக்கின்ற ஆட்களைப் பெருமீன்கள் கடிக்காதவாறு தங்களுடைய மந்திர சக்தியால் அவற்றைக் கட்டுப்படுத்துகின்ற மந்திரவாதிகளுக்கு இருபதில் ஒரு பகுதியைக் கொடுத்துவிட வேண்டும். அந்த மந்திரவாதிகள் அப்ரைமணர்[10] என்று சொல்லப் படுகிறார்கள். அவர்களுடைய மந்திரசக்தி அன்றைப் பகலுக்கு மட்டுமே பயனளிக்கும். இரவில் மந்திரக் கட்டை அவிழ்த்து விடுவார்கள். அப்போது பெருமீன்கள் தங்கள் விருப்பம் போலத் தீங்கு செய்யலாம். மீன்களை மட்டுமன்றி, பறவைகளையும் பலவகை விலங்குகளையும்—உயிருள்ள பொருள்கள் எல்லாவற்றையுமே—மந்திரத்தால் கட்டுப்படுத்தும் ஆற்றலை அந்த அப்ரைமணர் பெற்றிருந்தனர். முத்துக் குளிப்பவர்கள் தாங்கள் ஏறியிருக்கும் சிறு படகுகளி

10 'தங்களை அப்ரைமணர் (பிராமணர்) என்று சொல்லிக் கொள்வதற்கு இந்தக் காலத்து மகரமீன் மந்திரவாதிகளுக்கு எவ்வித உரிமையும் இல்லை என்று சொல்லலாம். ஆனால், முன்காலத்தில் பிராமணர்கள் மகரமீன் மந்திரவாதிகளாய்ப் பணியாற்றினார்கள் என்று கருதலாம். இன்றைக்கும் வடசர்க்கார் மாவட்டங்களிலுள்ள வைரச் சுரங்கங்களில் பிராமணர்கள் மந்திரவாதிகளாய்ப் பணிபுரிகிறார்கள். சுரங்கத்திலுள்ள வைரத்தைக் காத்துக்கொண்டிருக்கும் பூதங்களின் சினத்தைத் தணிப்பது அவர்களுடைய வேலை. மகரமீன் மந்திரவாதிகளுக்குத் தமிழில் 'கடல்கட்டிகள்' என்பது பெயர்......அந்தப் பகுதி பிரிட்டிசார் ஆட்சியில் இருந்த காலம் முழுவதிலும்—அதாவது, டென்னன்ட் தம்முடைய குறிப்பை எழுதிய காலம் வரையிலும்—அங்கு உறுதியாய் நம்பக்கூடிய மகரமீன் கடி விபத்து ஒன்றே ஒன்றுதான் நிகழ்ந்தது என்பது குறிப்பிடத்தக்க செய்தியாய் இருக்கிறது.'—யூல். செரிராத் துறைமுகத்தில் இருந்த முதலைகள் அனைத்தும் நிரந்தரமாய்க் கட்டுண்ட நிகழ்ச்சி ஒன்றை புஜுர்க் இபன் ஷாரியர் எழுதிவைத்துள்ளார். தன்னுடைய மந்திர சக்தியால் முதலைகளைக் கட்டிய மந்திரவாதி அந்த மந்திரக்கட்டை அவிழ்த்துவிடுவதற்கு முன்பே அரசன் அவனுடைய தலையை வெட்டி விட்டான். (*The Marvels of India*, pp. 135—7)

லிருந்து குதித்து, நீரில் முழுகி, கடலின் அடித்தளத்தை அடைகிறார்கள். அவர்கள் முக்குளிக்கவேண்டிய ஆழம் 4 முதல் 12 ஆளுயரம் வரையில் இருக்கும். அங்கே எவ்வளவு நேரம் இருக்க இயலுமோ அவ்வளவு நேரம் இருந்து, முத்துச் சிப்பிகளைத் தேடியெடுத்து, தங்கள் இடுப்பில் கட்டியுள்ள வலைப்பையில் போட்டுக் கொண்டு மேலே வருகிறார்கள். சிப்பிகளைப் படகில் போட்டுவிட்டு அவர்கள் மீண்டும் முக்குளிக்கிறார்கள். இனிமேல் மூச்சை அடக்க இயலாது என்று தெரிந்தவுடனே அவர்கள் மேலே வருகிறார்கள். சிறிது நேரத்திற்குப் பின் மீண்டும் கடலில் குதிக்கிறார்கள். இவ்வாறு நாள் முழுதும் உழைக்கிறார்கள். அவர்கள் எடுத்துக் கொண்டு வரும் சிப்பிகளில் முத்து இருக்கிறது. அது சிப்பியின் சதையில் ஒட்டிக் கொண்டிருக்கிறது. அவ்வாறு கிடைக்கின்ற முத்துகள் பலவகைப்பட்டவை. சில சிறியவையாயும் சில பெரியவையாயும் இருக்கின்றன.

இங்கு ஏராளமான முத்துகள் கிடைக்கின்றன. இங்கிருந்தே அவை உலகின் பல பகுதிகளுக்கும் போகின்றன. அந்த ராஜ்யத்தின் அரசனுக்கு முத்துச் சலாபத்தால் கிடைக்கின்ற வருவாயும் மிகப்பெரியது.

மே பதினைந்துக்கப்புறம் அங்கே முத்துச் சிப்பி கிடைப்பதில்லை. அங்கிருந்து சுமார் 300 மைல் தொலைவிலுள்ள இன்னோர் இடத்திலும் முத்துச் சிப்பிகள் கிடைக்கின்றன என்பது உண்மையே. ஆனால், அவை செப்டம்பர் முதல் அக்டோபர் பதினைந்து வரையிலுந்தான் அங்கே கிடைக்கின்றன.

மா'பார் மாகாணம் முழுவதும் தேடினாலும் தையல்காரன் ஒருவனையும் காண இயலாது.[11] அங்கேயுள்ள மக்கள் அனைவருமே நிர்வாணமாகக் காட்சியளிக்கின்றனர். மரியாதைக்காக ஒரு சிறு துணியைக் கட்டிக்கொள்கிறார்கள். அவ்வளவுதான். ஆடவர் மகளிர் ஏழை பணக்காரன் ஆகிய அனைவருமே அப்படித்தான். அரசனே அவ்வாறுதான் இருக்கிறான். ஆனால் அவன் விஷயத்தில் ஒரு சிறு வேறுபாடுள்ளது. அதனை இப்போது சொல்கிறேன்.

ஆடை

ஏனைய மக்களைப் போலவே அரசனும் ஆடையின்றித்தான் இருக்கிறான். இடையில் மட்டும் ஒருசிறு துணியைச் சுற்றிக்

[11] பதினொன்றாம நூற்றாண்டைச் சேர்ந்த சோழக் கல்வெட்டொன்று தையல்காரர்கள் இருந்த செய்தியைக் குறிப்பிடுகின்றது.—SII, ii, p. 392, n. 8.

கொள்கிறான். ஆனால், அந்தத் துணி நேர்த்தியானது. கழுத்தில் அவன் ஒரு மாலையைப போட்டுக்கொள்கிறான்.

அரசு அணிகள் அந்த மாலை முழுதுமே மாணிக்கம், நீலம், மரகதம் முதலிய அருங்கற்களால் ஆனது. எனவே அந்த மாலையின் மதிப்பு மிகவும் உயர்வாயிருக்கிறது. மேலும் 104 முத்தும் மாணிக்கமும் கோத்த மிக நேர்த்தியான பட்டுக் கயிறு ஒன்றையும் அவன் கழுத்தில் கட்டிக் கொண்டிருக்கிறான். அது அவனுடைய மார்பில் தொங்குகிறது. அந்தக் கயிற்றிலுள்ள முத்தும் மணியும் மிகவும் விலையுயர்ந்தவை. நாள் தோறும் காலை மாலை ஆகிய இரு வேளையும் அவன் வழிபடுகின்ற தெய்வச் சிலைகளுக்கு 104 முறை பிரார்த்தனை செய்ய வேண்டியிருப்பதால்தான் அவன் மாலையில் 104 முத்தும் மணியும் இருக்கின்றன என்று சொல்கிறார்கள். அவர்களுடைய மதமும் வழிபாட்டு முறையும் அத்தகையவை. அவனுடைய முன்னோர்களும் அவ்வாறே செய்தார்கள். அவனும் அவ்வாறே செய்ய வேண்டும் என்ற காரணத்தால்தான் அந்தப் பரம்பரை மணிமாலை அவன் உடைமையாயிற்று. (அவர்கள் நாள்தோறும் செய்யும் பிரார்த்தனை பசௌத்தா, பசௌத்தா, பசௌத்தா என்பதாகும். இதனை அவர்கள் 104 முறை சொல்ல வேண்டும்.)[12]

மேலே சொன்ன அரசன் விலையுயர்ந்த முத்தைச் செறிவாய்ப் பதித்த தங்கக் கடகங்கள் மும்மூன்றைத் தன்னுடைய கைகளிலும் அந்தக் கடகங்களைப் போலவே பொன்னாலும் முத்தாலும் செய்த கழல்களைத் தன்னுடைய கால்களிலும் அணிந்திருக்கிறான். அன்றியும், அவன் தன் கால்விரல்களிலும் மோதிரங்களை அணிந்திருக்கின்றான். இவ்வாறு அவன் அணிந்துள்ள முத்தும் மணியும் செறிந்த தங்க நகைகளின் மதிப்பு ஒரு நகரத்தின் விலையைக் காட்டிலும் அதிகமாயிருக்கும். ஆனால் இதில் என்ன வியப்பிருக்கிறது? இத்தகைய அணிமணிகள் அவனிடம் ஏராளமாய் இருக்கின்றன. மேலும், அவை அவனுடைய ராஜ்யத்திலேயே கிடைக்கின்றன. அன்றியும் அரை சகியோ[13] எடைக்கு மேற்பட்ட முத்தை யாரும் அந்த

[12] 104 முறை என்பது 108 முறை என்று இருக்கவேண்டும். 108 என்னும் எண் ஆழ்ந்த உட்பொருளுடையது என்று பார்ப்பனர் பௌத்தர் ஆகிய இரு திறத்தாரும் கருதுகின்றனர்.—யூல். பசௌத்தா என்பது பகவதா என்பதன் சிதைந்த உருவம் என்று சொல்கின்றனர். ஆனால், அச்சுதா என்னும் சொல்லே பசௌத்தா என்று மாறிவிட்டது என்று சொல்வது இன்னும் பொருத்தமாயிருக்கும்.

[13] சகியோ என்பது வெனிஸ் நகரில் வழக்கிலிருந்த எடை: 1/6 அவுன்ஸ் —Ricci.

ராஜ்யத்திற்கு வெளியே எடுத்துச் செல்லக்கூடாது என்பது விதி. ஒருவருக்கும் தெரியாமல் திருட்டுத்தனமாய் எடுத்துக் கொண்டு போக முடியாதா என்றால், அது வேறு விஷயம். பெருமுத்துகள் அனைத்தையும் தானே வைத்துக்கொள்ள வேண்டும் என்னும் விருப்பத்தால்தான் அரசன் இந்த விதியை வகுத்தான். எனவே, அவனிடம் உள்ள முத்துகளின் தொகையும் மதிப்பும் நம்புதற்கரியவை. மேலும், தன்னுடைய ராஜ்யத்தில் யாரிடமேனும் பெரிய முத்தோ மணியோ இருந்தால் அதனை அரசவைக்குக் கொண்டுவருமாறும் அவ்வாறு கொண்டு வந்தால் அதற்குரிய விலையைப் போல இருமடங்கு விலை கொடுத்து அதனைத் தானே வாங்கிக்கொள்ள விரும்புவதாகவும் அவன் ஆண்டுதோறும் பலமுறை அறிவிக்கிறான். அதனால், முத்தோ மணியோ வைத்திருப்பவர் அனைவரும் மகிழ்ச்சியாக அரசனிடம் கொண்டு செல்கின்றனர். அரசனுடைய மணிமுத்துக் குவியலும் வளர்ந்து கொண்டே போகிறது.

**அந்தப்புரம்**

அரசனுக்கு ஏறக்குறைய ஐந்நூறு மனைவியர் இருக்கின்றனர். எங்காவது ஓர் அழகிய பெண் இருக்கிறாள் என்று கேள்விப் பட்டால் உடனே அவளை அரசன் தன் மனைவி யாக்கிக் கொள்கிறான். அவனுடைய தம்பியின் மனைவி யொருத்தி மிகவும் அழகாயிருந்தாள். அவளை அவன் வன்முறையில் கைப்பற்றிக் கொண்டான். தம்பியோ தன்னுடைய மானக்கேட்டைப் பறைசாற்ற விரும்பா தவன். எனவே, அவன் அதைப்பற்றிக் கவலைப்படாதவன்போல இருந்துவிட்டான். அரசனுக்குப் பிறந்த மக்கள் பலர் இருக்கின்றனர்.

**மெய்க்காவலர்**

அரசனைச் சுற்றிலும் பிரபுக்கள் பலர் எப்போதும் இருக் கின்றனர். அவன் வெளியே செல்லும்போது அவர்களும் உடன் செல்கிறார்கள். அவர்கள் அரசனுடைய நம்பிக்கைக் குரியவர்கள்; அதனால் அவர்கள் மிகுந்த அதிகாரமும் செல்வாக்கும் பெற்றவர்களாய் இருந்தார்கள். அரசன் இறந்தால் அவன் உடலைச் சிதையிலிட்டுத் தீ வைக்கிறார்கள். அப்போது அவனுடைய நம்பிக்கைக்குரிய பிரபுக்களும் அதே சிதையில் ஏறித் தீக்குளிக்கிறார்கள். இம்மையில் அரசனுடைய துணைவர்களாய் இருந்தவர்கள் மறுமை யிலும் அவனுடைய துணைவர்களாக இருக்க வேண்டும் என்பது அவர்களுடைய கொள்கை.[14]

[14] அவர்கள் வேளைக்காரர்கள். பாண்டியப் பொறிப்புகளில் அவர்கள் தென்னவன் ஆபத்துதவிகள் என்றும் சொல்லப்படுகிறார்கள். see PK. pp.

அரசன் இறந்துபோனால் அவனுடைய கருவூலத்திலுள்ள செல்வங்களை அவனுடைய மக்களுள் யாருமே தொடுவதில்லை.[15] 'எங்களுடைய தந்தையார் இந்தச் செல்வங்களை எல்லாம் தேடிவைத்தார். நாங்களும் அத்தனை செல்வங்களைத் திரட்டிவைக்க வேண்டாமா?' என்று அவர்கள் சொல்கிறார்கள். இவ்வாறு தலைமுறைதோறும் கருவூலத்திலுள்ள செல்வங்கள் பெருகிக்கொண்டே போகின்றன. அதனால், இந்த ராஜ்யத்தில் கணக்கற்ற செல்வங்கள் குவிந்து கிடக்கின்றன.

**கருவூலம்**

இந்த ராஜ்யத்தில் யாரும் குதிரை வளர்ப்பதில்லை. அதனால் அரசன் தனக்கு வேண்டிய குதிரைகளை வெளிநாட்டாரிட மிருந்து வாங்குவது அவசியமாகிறது. அதற்காக இந்த ராஜ்யத்தின் செல்வத்தில் ஒரு பெரும்பகுதி செலவிடப்படுகிறது. அதைப்பற்றி இப்போது நான் சொல்லப்போகிறேன். கிஸ், ஹார்ம்ஸ், டோபர், சோவர், ஏடன் ஆகிய ஊர்களைச் சேர்ந்த வணிகர்கள் போர்க்குதிரைகளையும் பிற குதிரைகளையும் ஏராளமாய்த் திரட்டி, அவற்றை இந்த அரசன் ஆட்சியிலுள்ள

**குதிரை வாணிகம்**

196—97. மலேயா, பாலி முதலிய நாடுகளிலும் இத்தகைய மெய்க்காவலர் இருந்தனர் என்று யூல் சொல்கிறார். முன்னால் XIX. ஏ என்னும் பகுதியைப் பார்க்க.

[15] நாட்டின் செல்வத்திலும் வாணிகத்திலும் அரசனுக்கும் அமைச்சர் களுக்கும் கிடைத்த பங்கைப்பற்றி வசப் எழுதிவைத்துள்ள குறிப்பில் நாம் தெரிந்து கொள்ளவேண்டிய செய்திகள் பல இருக்கின்றன.

'நாம் முன்னர்ச் சொன்ன தேவர் என்னும் பெயருடைய மா'பார் அரசன் ஹிஜிரா 692-ஆம் ஆண்டில் இறந்துபோனான். அவன் விட்டுச்சென்ற செல்வங்கள் ஏராளமாய் இருந்தன. அவனுக்குப்பின் மா'பார் இராஜ்யத்தின் அரியணையேறிய அவனுடைய சகோதரனுடைய பாகத்திற்குக் கிடைத்த ரத்தினங்களையும், பொன்னையும், வெள்ளியையும் அவன் 7000 எருது களின் மீது ஏற்றிக்கொண்டு போனான் என்று மாலிக்-உல்-இஸ்லாம் ஜமாலுதீன் குறித்து வைத்துள்ளான். மாலிக்-ஈ-ஆஜம் தக்கியுதீனே அமைச்சனாய்த் தொடர்ந்து பதவி வகித்தான். அவனே அந்த ராஜ்யத்தில் அரசன் என்று சொல்லத்தக்க வகையில் அவன் அதிகாரம் பெற்றிருந்தான். அப்போது அவன் பேரும் புகழும் ஆயிரம் மடங்கு பெருகின.

'வாணிகத்தில் அவனுக்கு வந்த வருவாய் மிகப்பெரிது. எனவே அவனிடம் ஏராளமான செல்வம் குவிந்து கிடந்தது. அப்படியிருந்தும், சீனாவிலிருந்தும் ஹிந்து நாட்டிலிருந்தும் வணிகர்கள் மா'பாருக்குக் கொண்டுவந்த பண்டங் களைத் தன்னுடைய செயலிகளும் தரகர்களும் சோதனை செய்து தனக்கு வேண்டிய பண்டங்களைத் தெரிந்தெடுத்துக் கொள்ளும் வரையிலும், வேறு யாருக்கும் விற்பனை செய்யக்கூடாது என்று அவன் ஆணை பிறப்பித்தான்.

**ராஜ்யத்திற்கும் இவனுடைய நான்கு சகோதரர்களுடைய ஆட்சியிலிருக்கும் இராஜ்யங்களுக்கும் கொண்டுவருகிறார்கள்.**[16] **(அந்த நால்வரும் அரசர்களே என்று நான் முன்னரே சொல்லியிருக்**

---

*அவ்வாறு அவன விரு ம்பிய பண்டங்கள் தெரிந்தெடுக்கப்பட்டபின் அவற்றை அவன் தன்னுடைய கப்பல்களிலேயே ஏற்றிக் கைஸ் தீவுக்கு அனுப்பினன். சில சமயங்களில் அவற்றை வேறு வணிகர்களிடமும் கப்பல் முதலாளிகளிடமும் கொடுத்து அனுப்புவதும் உண்டு. கைஸ் தீவில் கிடைத்த பொருள்களையும் முதலில் பார்வையிட்டுத் தேவையானவற்றை வாங்கிக் கொள்ளும் முன்னுரிமையும் மாலிக் உல் இஸ்லாமின் தரகர்களுக்கு இருந்தது. அதன் பின்னரே, ஏனைய வணிகர்கள் மா'பாரில் விற்பனையாகக் கூடிய பொருள்களை வாங்கலாம் என்பது விதி. மீதியிருந்த சரக்குகள் கப்பல்களிலும் பொதிமாடுகளின்மீதும் ஏற்றப்பட்டு அண்மையிலிருந்த தீவுகளுக்கும் மேலை நாடுகளுக்கும் கீழை நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. அந்தப் பொருள்களை அந்த நாடுகளில் விற்பனை செய்தபின் கிடைத்த பணத்தைக்கொண்டு உள்ளூர்த் தேவைகளைப் பூர்த்தி செய்யக் கூடிய பொருள்கள் வாங்கப்பட்டன. இந்த வாணிகம் மிகச் சிறந்த முறையில் நடைபெற்றது. அதன் பயனாக மிகவும் கிழக்கேயுள்ள சீனவில் உற்பத்தியான பொருள்களை மிகவும் மேற்கிலுள்ள நாட்டு மக்களும் துய்க்கும் வாய்ப்பைப் பெற்றார்கள். இத்தகையதொரு வாணிக முறையை உலகில் வேறெங்கும் காணமுடியாது என்று சொல்லலாம்.*

*'இன்னலுக்கு அஞ்சாதவர்களுக்குப் பெருமை கிடைக்கிறது. அவர்களே நாலுக்கொன்று என்று லாபம் அடைகிறார்கள். ஆபத்துக்கு அஞ்சுகின்ற வணிகர்களுக்கு லாபமே கிடைக்காது.*

*'மாலிக்-ஈ-ஆஜம் தக்கியுதீன், மாலிக்-உல்-இஸ்லாம் ஜமாலுதீன் ஆகியவர்கள் மா'பாரில் பெற்ற புகழ் மிகப் பெரிது. ஆனல் அதனைக் காட்டிலும் பெரும்புகழை அவர்கள் ஹிந்து நாட்டின் பெரும் பகுதிகளில் அடைந்தார்கள் என்று சொல்லலாம். மிகத் தொலைவிலுள்ள நாடுகளின் அரசர்களும் அவர்களுடைய நட்பை நாடினார்கள். அதனல் அவர்களும் பெருமை அடைந்தார்கள். அந்த அரசர்கள் அடிக்கடி கடிதம் எழுதி அந்த இரு வணிகர்களுடைய நலனையும் விசாரித்துக்கொண்டே இருந்தார்கள்.'*— **Elliot and Dowson, iii, pp. 34—5.**

[16] *வசப் தம் காலத்தில் நடைபெற்ற குதிரை வாணிகத்தைப் பற்றிக் கவர்ச்சி மிக்க முக்கியமான விவரங்கள் பலவற்றை எழுதிவைத்துள்ளார். அவை பின்வருமாறு:*

*''மாலிக்-உல்-இஸ்லாம் ஜமாலுதீனும் பிற வணிகர்களும் சேர்ந்து, ஆண்டு தோறும் கைஸ் தீவிலிருந்து* **1400** *குதிரைகளைக் கலங்களில் ஏற்றிக்கொண்டு வந்து, மா'பாரில் இறக்குவதற்கு ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அந்தக் குதிரைகள் எல்லாம் அவனுடைய ஆட்களால் வளர்க்கப்பட்டவை. அவை மிகவும் உயர்சாதிக் குதிரைகள். ருஸ்துமினுடைய ருக்ஸ் போன்ற பழங்காலத்துக் குதிரைகளும் அவற்றுக்கு இணையாகா. அவற்ரேடு ஒப்பிட்டுப் பார்த்தால் பெயர்பெற்ற அந்தப் பழங்காலக் குதிரைகள் சதுரங்கப் பலகையில் பகடையாகப் பயன்படும் குதிரைகளைப் போன்றவை என்று கருதத் தோன்றும். மேலும், கட்டிப், லாசா, பஹ்ரீன், ஹர்முஸ், குல்ஹது போன்ற பாரசிகத் தீவுகள் பலவற்றிலிருந்து*

கிறேன்.) இங்கு ஒரு குதிரையின் விலை 500 சக்கி[17] பொன்—அதாவது, 100 வெள்ளி மார்க்குகளைக் காட்டிலும் அதிகம். விலை இவ்வளவு அதிகமாயிருந்தாலும் ஆண்டுதோறும் ஏராளமான குதிரைகள் இங்கு விற்பனையாகின்றன. இந்த அரசன்மட்டும் ஆண்டுதோறும் இரண்டாயிரத்திற்கும் அதிகமான குதிரைகளை வாங்க விரும்புகிறான். அவனைப்போலவே அவனுடன் பிறந்தார் நால்வரும் குதிரை வாங்க விரும்புகின்றனர். (அவர்களும் அரசர்களே என்று நான் முன்னரே சொல்லியிருக்கிறேன்.) ஒவ்வொருவரும் எதற்காக இத்தனை குதிரைகளை வாங்குகிறார்கள்? வாங்கிய குதிரைகள் ஓராண்டு முடிவதற்கு முன்னரே இறந்து போகின்றன. அவற்றுள் ஒரு நூறு குதிரைகளேனும் எஞ்சி நிற்குமா என்பது ஐயமே. இந்த நாட்டு மக்களுக்குக் குதிரையை எவ்வாறு பேணவேண்டும் என்பதே தெரியாது. குதிரைக்கு லாடங் கட்டுபவர்களும் இங்கே இல்லை. குதிரை வணிகர்கள் இலாடக்காரர்களை அழைத்துக்கொண்டு வருவதில்லை. லாடக்காரர் யாரேனும் வர முயன்றாலும் அவர்களை வணிகர்கள் தடுத்துவிடுகிறார்கள். அப்படிச் செய்யாவிட்டால் குதிரை வாணிகம் குறைந்துபோகுமென்று அவர்கள் அஞ்சினார்கள். அந்த வாணிகத்தில் அவர்களுக்கு ஆண்டுதோறும் பெரும்

---

*எத்தனை குதிரைகளைக் கொண்டுவர முடியுமோ அத்தனை குதிரைகளையும் ஜமாலுதீன் கொண்டுவரலாம் என்றும் ஒப்பந்தம் செய்யப்பட்டது. ஒரு குதிரையின் விலை 220 செம்பொன் தினார். ஆனால், கடற்பயணத்தின்போது குதிரைகளுக்கு ஊனமோ சாவோ நேர்ந்தால், அத்தகைய குதிரைகளின் விலையை அரசாங்கக் கருவூலத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம் என்பதும் ஒப்பந்த நிபந்தனைகளுள் ஒன்று. அட்டபக் அபுபக்கரின் ஆட்சியில், மேலே சொன்ன இடங்களிலிருந்து ஆண்டுதோறும் 10,000 குதிரைகள் வந்து மா'பாரிலும் அதற்கு அண்மையிலிருந்த கம்பயத் முதலிய துறைமுகங்களிலும் இறங்கின என்றும், அவற்றின் மொத்த விலை 22,00,000 தினார் என்றும், அந்தத் தொகை இந்துக் கோயில்களுக்குச் சொந்தமான மானியங்கள் இதர உடைமைகள் ஆகியவற்றிலிருந்து கிடைத்த பெருவருவாயிலிருந்தும் அந்தக் கோயில்களுக்குப் பொட்டுக் கட்டிவிட்டிருந்த தேவதாசிகள்மீது விதிக்கப்பட்ட வரியாற் கிடைத்த வருவாயிலிருந்தும் எடுத்துக் கட்டப்பட்டது என்றும், அரசாங்கக் கருவூலத்திற்கு அதனால் எவ்வகைச் செலவும் ஏற்படவில்லை என்றும நம்பத் தகுந்த ஆசிரியர்கள் எழுதிவைத்துள்ளார்கள்.'—Elliot and Dowson, iii, p. 33.*

[17] '500 சக்கி என்பது 500 தினார் என்று கொள்ளலாம். அந்தக் காலத்து ஆசியாவில் நிலவிய உலோக விலையின் அடிப்படையில் கணக்குப் போட்டுப் பார்த்தால் 500 சக்கி என்பது சுமார் 100 வெள்ளி மார்க்குக்குச் சமமாயிருக்கும். இந்த விலைக்கும் வசப் சொல்லுகிற விலைக்கும் மிகுந்த வேறுபாடு இருப்பது போலத் தோன்றுகிறது. எனினும், செம்பொன் தினார் என்பது 2 தினாருக்குச் சமம். ஆதலால் 500 சக்கிக்கும் 220 செம்பொன் தினாருக்கும் அவ்வளவாக வேறுபாடு இல்லையென்பதை அறியலாம்'—யூல்.

பொருள் கிடைத்தது. அந்த லாபத்தை இழப்பதற்கு அவர்கள் விரும்பவில்லை. குதிரைகளை அவர்கள் கப்பலில் ஏற்றிக்கொண்டு வந்தார்கள்.[18]

**தம்மைத்தாமே பலிகொடுத்தல்**

இந்த நாட்டிற் காணும் ஒரு பழக்கத்தை இப்போது நான் விவரிக்கப் போகிறேன். யாதேனும் ஒரு குற்றத்திற்காக ஒருவனுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டால், அவன் யாதேனும் ஒரு தெய்வத்திற்குத் தன்னைப் பலிகொடுக்க முன்வரலாம். அவ்வாறு செய்வதற்கு அதிகாரிகள் இசைவு தருகிறார்கள். இசைவுபெற்றபின் அவனுடைய நண்பர்களும் சுற்றத்தார்களும் அவனை ஒரு வண்டியில் ஏற்றி, அவனுக்கு 12 கத்திகளைக் கொடுத்து, அவனை ஊர்வலமாய் அழைத்துச் செல்வார்கள். அவ்வாறு போகும்போது, அவர்கள் 'இந்த வீரன் தன்னை........ தெய்வத்திற்குப் பலி கொடுக்கப் போகிறான்.' என்று சொல்லிக் கொண்டே போவார்கள். குறித்த இடத்திற்குச் சென்றதும், அவன் முதலில் ஒரு கத்தியைத்தன்னுடைய கையில் குத்திக் கொள்கிறான், அவ்வாறு செய்யும்போதே அவன் 'நான்......... தெய்வத்திற்கு என்னைப் பலியிட்டுக் கொள்கிறேன்.' என்று சொல்கிறான். அடுத்து இன்னொரு கத்தியை எடுத்து இன்னொரு கையில் குத்திக்கொள்கிறான். அதற்குப்பிறகு இன்னொரு கத்தியை எடுத்துத் தன் வயிற்றில் குத்திக்கொள்கிறான். இவ்வாறு இறக்கும் வரையில் அவன் செய்கிறான். இறந்து போனபின் அவனுடைய சுற்றத்தார்கள் அவன் உடலை எடுத்துக் கொண்டுபோய் மகிழ்ச்சிக் கொண்டாட்டங்களுடன் கொளுத்தி விடுகிறார்கள். பெண்களுள் பலர் தம் கணவன்மார் இறந்தபின் அவர்களுடைய உடலைச் சிதையில் வைத்து எரிக்கும்போது அந்த எரியில் தாமும் விழுந்து எரிந்து போகின்றனர். அவ்வாறு செய்கின்ற பெண்களைச் சமுதாயம் மிகவும் பாராட்டுகிறது.

**உணவு**

இங்கு வாழும் மக்கள் உருவவழிபாடு செய்பவர்கள். அவர்களுட் பலர் எருதை வழிபடுகிறார்கள். எருது மிகவும் உயர்ந்த விலங்கு என்று அவர்கள் கருதுகிறார்கள். அவர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் மாட்டிறைச்சியை உண்ண மாட்டார்கள். அவர்கள் எருதையும் கொல்லமாட்டார்கள். ஆனால், கோவி

[18] வசபும் ரஷியுதீனும் குதிரை வாணிகத்தைப் பற்றி ஒரே தன்மையான செய்திகளைச் சொல்கிறார்கள். மேலும், அந்தச் செய்திகள் இந்த அதிகாரத்தில் போலோ சொல்லியிருக்கிற செய்திகளை மிகவும் ஒத்திருக்கின்றன. அந்த இருவருமே போலோவின் குறிப்பைப் பார்த்து அப்படியே எழுதிவிட்டனரா?

என்னும் ஒரு வகுப்பினர் இருக்கின்றனர். அவர்கள் மாட்டிறைச்சியை விரும்பி உண்கிறார்கள். ஆனால், அவர்களும் எருதைக் கொல்லமாட்டார்கள். கொல்வதற்கு மற்றவர்கள் விடமாட்டார்கள். ஆனால், எருது இயற்கைக் காரணத்தாலோ வேறு காரணத்தாலோ இறந்து போனால், அதன் இறைச்சியை அவர்கள் உண்கிறார்கள்.

**சிலபழக்கங்கள்**

இந்த நாட்டுமக்கள் தங்களுடைய வீடு முழுவதிலும் மாட்டுச் சாணத்தைப் பூசுகிறார்கள். மேலும், அவர்கள் எல்லாருமே—பெரியவர் சிறியவர், அரசன் பிரபு ஆகிய அனைவருமே — தரையில்தான் அமர்கிறார்கள். அவ்வாறு அமர்வதுதான் மிகவும் நல்லது என்று சொல்கிறார்கள். மக்கள் அனைவரும் நிலத்திலிருந்து தோன்றுகின்றனர், நிலத்திற்கே திரும்புகின்றனர். எனவே, நிலத்தை எவ்வளவு போற்றினாலும் தகும். அதனை யாரும் இழிவாகக் கருதக்கூடாது. இவ்வாறு அவர்கள் சொல்கிறார்கள்.

**கோவியர்**

கோவி என்னும் இனத்தைச் சேர்ந்தவர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் புனித தாமஸ் இருக்கும் இடத்திற்குப் போகமாட்டார்கள் — அதாவது, அவருடைய உடல் இருக்கும் இடத்திற்குப் போக மாட்டார்கள்-என்பதை நான் உங்களுக்குச் சொல்லவேண்டும். புனித தாமசின் கல்லறை மா'பார் மாகாணத்திலுள்ள நகரம் ஒன்றில் இருக்கிறது. இருபது முப்பது பேர் சேர்ந்து ஒரு கோவியைப் பிடித்துக் கட்டாயப்படுத்தினாலும், புனித தாமஸ் இருக்கும் இடத்தில் அவனை நிற்க வைக்க இயலாது. ஏசு கிறிஸ்துவின் மாணவரும் நமது வழிபாட்டிற்குரிய திருத்தூதரும் ஆன புனித தாமசின் செல்வாக்கு அவ்வளவு அதிகமாயிருக்கிறது. இந்த இனத்தைச் சேர்ந்தவர்களே புனித தாமசைக் கொலைசெய்தார்கள் என்பதை நீங்கள் விரைவில் தெரிந்து கொள்ளப் போகிறீர்கள்.

இந்த மாகாணத்தில் கோதுமை விளைவதில்லை; நெல் மட்டும் விளைகிறது.

**குதிரை வளர்ப்பு**

இந்த நாட்டைப் பற்றிய இன்னொரு விசித்திரச் செய்தி என்னவெனில், இங்கே குதிரை வளர்ப்புக்கு வாய்ப்பேயில்லை என்பதாகும். இந்த நாட்டினர் குதிரை வளர்க்கப் பெருமுயற்சி செய்தனர் என்பது உண்மையே. ஆனால், அம்முயற்சி வெற்றிபெறவில்லை. உயர்சாதிப் பெண்குதிரை ஒன்றை

உயர் சாதி ஆண் குதிரை ஒன்ருேடு உறவாட வைத்தாலும் பிறப்பதென்னவோ கோணற்காலுடைய நோஞ்சான்குட்டிதான். ஏறிச் சவாரி செய்வதற்கு அந்த இழி பிறவி பயன்படாது.[19]

இந்நாட்டுப் போர்வீரர்கள்போர்க்களத்திற்குநிர்வாணமாய்ப் போகிருர்கள். ஈட்டியும் கேடயமுமே அவர்களுடைய போர்க் கருவிகள். அவர்கள் மிகவும் மட்ட ரகமான போர்வீரர்கள். அவர்கள் விலங்கையும் பறவையையும் கொல்லமாட்டார்கள்.

[19] 'குதிரை வளர்ப்பில் தென்னிந்தியர் கண்ட தோல்வியை விளக்கும் பகுதி நம்ப முடியாத அளவுக்கு உயர்வு நவிற்சியாய் இருக்கிறது. அன்றியும், தென்னிந்தியத் தோல்வி அனைத்திந்தியத் தோல்வியாகப் பெருக்கிக் காட்டப் பட்டுள்ளது'—யூல்.

மா'பார்க் குதிரைகளைப் பற்றி வசப் சொல்வதைக் கீழே காண்க :—

'அந்தக் குதிரைகள் மா'பாரில் வந்து இறங்கியதும், அவற்றிற்குப் பச்சை வாற்கோதுமையைத் தருவதற்கு மாருக, வறுத்த வாற்கோதுமையை யும் வெண்ணெய் சேர்த்துச் சமைத்த தானியத்தையும் தினியாகப் போட்டுக் காய்ச்சிய ஆவின் பாலைக் குடிப்பதற்குக் கொடுக்கிருர்கள். இது மிகவும் விசித்திரமான செயல்.

கரும்புச் சர்க்கரை காக்கைக் கிடுவரோ?
அருங்கிளிக் கிடுவரோ அழுகிய பிணக்கறி?
காகத் திற்குப் பிணத்தையும் கரும்பு
வெல்லந் தன்னைச் செல்லக் கிளிக்கும்
இடுவது தானே ஏற்புடைத் தாகும்?
வைக்கோல் தின்னும் மாட்டுத் தினியில்
பொரித்த வாதம் பருப்பைக் கலப்பரோ?
கத்தும் கழுதை கழுத்தில் நல்ல
முத்து மாலையை மூடரும் போடார்.

லாயத்தில் முளைகளை அடித்து, குதிரைகளை அவற்ருேடு கயிற்ருல் பிணைத்து, அங்கேயே அவற்றை 40 நாள் விட்டுவிடுகிருர்கள். அதனுல் குதிரைகள் கொழுத்துப் பருத்துப் போகின்றன. பின்னர், அவற்றிற்குப் பயிற்சியளிக்கா மலும், அங்கவடி முதலிய குதிரைச் சாமான்களைப் பூட்டாமலும், அவற்றின் மீது ஏறியுட்கார்ந்து இந்திய வீரர்கள் அவற்றைப் பிசாசைப் போக ஓட்டுகிருர்கள். அவற்றின் வேகம் புரக்கின் வேகத்திற்குச் சமமாயிருக்கிறது. மிகுந்த வலிமையும் வேகமும் சுறுசுறுப்பும் உடைய புதிய குதிரைகளும் வெகு விரைவில் வலிமையற்ற, வேகமற்ற, பயனற்ற, மதிபற்ற குதிரைகளாய் மாறிவிடுகின்றன—அதாவது, அவை எதற்கும் உதவாத இழி நிலையை எய்திவிடுகின்றன. சாட்டையடி வாங்காமலே மிக வேகமாக ஓடக்கூடிய வலிமை மிக்க அந்தக் குதிரைகள் இந்நாட்டுத் தட்ப வெப்ப நிலையைத் தாங்க மாட்டாமல் வலியிழந்து வாடிப் போகின்றன. எனவே, அவை சவாரி செய்வதற்குப் பயனில்லாமல் போகின்றன. அதனுல், ஆண்டுதோறும் புதிய குதிரைகளை வாங்குவது இன்றியமையாததாகி விடுகின்றது. எனவே, ஆண்டுதோறும் முஸ்லிம் நாடுகளைச் சேர்ந்த வணிகர்கள் மா'பாருக்குக் குதிரைகளைக் கொண்டு வருகிருர்கள்.'

—*Elliot and Dowson; iii, pp,* 33—34

உயிருள்ள எதனையுமே கொல்லமாட்டார்கள் என்று சொல்லலாம். தங்கள் மதத்தினர் அல்லாத சாரசன்மாரும் மற்றவர்களும் விலங்கையோ பறவையையோ கொன்றாலன்றி, அவர்கள் தின்பதற்கு இறைச்சி கிடைக்காது.

**அன்றாட வாழ்க்கை**

இந்த நாட்டில் வாழும் ஆண் பெண் அனைவரும் தம்முடைய உடலை ஒவ்வொரு நாளும் இரண்டு முறை கழுவுகின்றனர் (நீராடுகின்றனர்.) அவ்வாறு செய்யாதவர்களை அவர்கள் மிகவும் இழிவாகக் கருதுகிறார்கள்—நாம் பட்டாரியரைக் கருதுவதுபோல. (பட்டாரியர் கடவுள் நம்பிக்கையற்றவர்.)[20] உண்ணும்போது அவர்கள் தங்களுடைய வலக்கையைப் பயன்படுத்துகிறார்கள். எக்காரணத்தைக் கொண்டும் இடக்கையைப் பயன்படுத்துவது இல்லை. சுத்தமான வேலைகளுக்கும் தகுதியுடைய செயல்களுக்கும் அவர்கள் தங்கள் வலக்கையைப் பயன்படுத்துகிறார்கள். துப்புரவற்றவையும் அருவருப்பூட்டுபவையும் ஆகிய செயல்களுக்கே தங்கள் இடக்கையைப் பயன்படுத்துகிறார்கள். எடுத்துக்காட்டாக, உடலின் மறைவிடங்களை அவர்கள் இடக்கையால் தான் கழுவுகிறார்கள், அதுபோலவே, அவர்கள் நீர் பருகப் பயன்படுத்தும் பாத்திரங்களை மற்றவர் பயன்படுத்த விடுவதில்லை ஒவ்வொருவரும் தனித்தனி பாத்திரத்திலேயே நீர் பருகுகின்றனர். மேலும், அவர்கள் பாத்திரத்தில் உதட்டை வைத்துக் குடிப்பதில்லை. நீருள்ள பாத்திரத்தை மேலே தூக்கிச் சாய்த்து. அதிலிருந்து தாரையாய் விழுகின்ற நீரை வாயில் பிடித்துக் கொள்கிறார்கள். யாருமே நீர்ப் பாத்திரத்தை வாயில் வைப்பது கிடையாது, புதியவர் யாரேனும் வந்தால் அவர்களுக்குத் தங்கள் பாத்திரங்களைத் தரமாட்டார்கள். அப்படி வருகிறவர்களிடம் நீர் பருகும் பாத்திரம் இல்லாவிட்டால், அவர்கள் கையில் நீரை ஊற்றிக் குடிக்கச் சொல்வார்கள். அவர்களுடைய கையே நம்முடைய கோப்பையைப் போலப் பயன்படுகிறது.

**நீதி**

குற்றவாளிகளைத் தண்டிப்பதில் அவர்கள் மிகவும் கண்டிப்பாய் இருக்கிறார்கள். அதுபோலவே, மது அருந்துவதில்லை என்னும் விதியையும் கண்டிப்பாகவே கடைப்பிடிக்கிறார்கள். மதுபானஞ் செய்பவர்களையும் மாலுமிகளையும் அவர்கள் பிணையாட்களாக ஏற்றுக் கொள்வதில்லை. மாலுமிகளும், சாவுக்குத் துணிந்து எதையும் செய்யக்

20. பாட்டாரியர் : புறச் சமயத்தினர். 'சத்தரி' என்னும் பெயரும் அவர்களுக்குண்டு.

கூடிய முரடர்களும் ஒரே தன்மையானவர்கள் என்று அவர்கள் கருதினார்கள். மாலுமியின் சொல்லுக்கு அவர்கள் மதிப்புத் தருவதில்லை. ஆனால், அறநெறிக்கும் சட்டத்திற்கும் முரணான உடலுறவை அவர்கள் பாவம் என்று கருதுவதில்லை.

கடன் வாங்குதலையும் திருப்பிக் கொடுத்தலையும் பற்றி அவர்கள் பின்பற்றும் விசித்திரப் பழக்கத்தை இப்போது சொல்லப் போகிறேன். கடன்கொடுத்தவன் பலமுறை கேட்டும் கடன் வாங்கியவன் அதனைத் திருப்பிக் கொடுக்காமல் தவணை சொல்லிக்கொண்டே இருந்தால், கடன் கொடுத்தவன் அவனைத் தெருவில் கண்டால், அவனைச் சுற்றி ஒரு வட்டமான கோடு கிழித்து விடவேண்டும். கடன் வாங்கியவன் தப்பியோட முயல்வான். ஆனால், கோடு கிழிப்பதில் கடன் கொடுத்தவன் வெற்றி கண்டு விட்டானாயின், அத்தக் கடனைத் தீர்க்கும் வரையிலும் அல்லது அதற்கு ஏற்புடைய பிணையங் கொடுக்கும் வரையிலும் கடன் பட்டவன் அந்தக் கோட்டைத் தாண்டக்கூடாது. அப்படித் தாண்டினால், அவன் நியாயத்தையும் நீதியையும் மீறியவன் என்று கருதப்படுவான். அதற்குரியதான மரண தண்டனை அவனுக்கு விதிக்கப்படும். மார்க்க போலோவே இத்தகைய நடவடிக்கை ஒன்றைத் தம் கண்ணாற் கண்டார். அவர் தம்முடைய சொந்த நாட்டுக்குத் திரும்பிப் போகும் வழியில் இந்த ராஜ்யத்தில் இருந்தபோது அந்த நிகழ்ச்சியைக் கண்டார். இந்த நாட்டின் அரசன் வெளிநாட்டு வணிகன் ஒருவனுக்குக் குறிப்பிட்ட ஒரு தொகை கொடுக்க வேண்டியிருந்தது. அந்த வணிகன் கேட்டபோதெல்லாம் அரசன் தவணை சொல்லிக் கொண்டிருந்தான். ஒருநாள் அரசன் குதிரை மீதேறிச் சென்று கொண்டிருந்தபோது, வணிகன் அரசனையும் அவனுடைய குதிரையையும் சேர்த்து வளைத்துக் கோடு கிழித்துவிட்டான். அரசன் அந்த இடத்திலேயே நின்றுவிட்டான். வணிகனுக்குப் பணத்தைத் திருப்பிக் கொடுக்கும் வரையில் அவன் அந்த இடத்தை விட்டு அசையவே இல்லை. அதைக்கண்ட மக்கள் 'ஆஹா! இவன் அரசனாயிருந்தும் சட்டத்தை மீற மறுத்து விட்டானே. இவன் நியாயத்திற்கு எவ்வளவு மதிப்புத் தருகிறான்' என்று வியந்து பாராட்டினார்கள்.

இந்த நாடு மிகவும் வெப்பமானது. சில சமங்களில் வெப்பம் மிகவும் கடுமையாய் இருக்கிறது. 'அடேயப்பா, இது என்ன வெப்பம்!' என்று நாம் மலைக்கிறோம். இங்கு உட்பவெப்ப நிலை ஜூன், ஜூலை, ஆகஸ்ட் ஆகிய மூன்று மாத

மட்டுமே மழை பெய்கிறது.[21] இந்த மழைதான் காற்றுக்குக் குளிர்ச்சியையும் நிலத்திற்குப் புது மலர்ச்சியையும் தருகிறது. இந்த மழை பெய்யாவிட்டால், இங்கு யாரும் உயிர் வாழ இயலாது.

சாமுத்திரிகா லட்சணம் என்னும் சாத்திரத்தில் வல்லுநர் பலர் இந்நாட்டில் இருக்கின்றனர். அவர்கள் ஒரு மனிதனுடைய உடலமைப்பைப் பார்த்து அவனுடைய குணத்தைக் கூறிவிடுகிறார்கள். வெளியே போகும் போது, குறிப்பிட்ட விலங்கையோ பறவையையோ பார்க்க நேர்ந்தால், அதனால் நேரக்கூடிய விளைவுகள் இன்னின்னவை என்பதைச் சொல்லும் ஆற்றல் அவர்களுக்கு இருக்கிறது. இத்தகைய சகுனங்களில் இவர்களுக்குள்ள நம்பிக்கை உலகில் வேறு எந்நாட்டினர்க்கும் இல்லை. எடுத்துக்காட்டாக, ஒருவன் தெருவில் நடந்து கொண்டிருக்கும்போது இன்னொருவன் தும்முகிறான் என்று வைத்துக் கொள்வோம். அந்தத் தும்மல் ஒரு நல்ல சகுனம் என்று அவன் கருதினால், தொடர்ந்து நடப்பான். இல்லாவிட்டால் சிறிது நேரம் அங்கேயே நின்றுவிட்டு மீண்டும் நடப்பான். சில சமயங்களில் மேலே செல்லாமல் அவன் வீட்டுக்கே திரும்பி விடுவான்.

**சோதிடமும் சகுனங்களும்**

குழந்தை பிறந்தவுடனே அவர்கள் அதனுடைய ஜாதகத்தைக் குறித்துவைத்துக் கொள்கிறார்கள். அதாவது, குழந்தை பிறந்த நேரம், நாள், மாதம், ஆண்டு முதலியவற்றை எழுதிவைத்துக் கொள்கிறார்கள். அவர்கள் சோதிடம் பார்க்காமல் எந்த வேலையையும் செய்வதில்லை. எந்த வேலையில் ஈடுபடுவதாய் இருந்தாலும் அவர்கள் மாந்திரிகம், பில்லி, சூனியம், மண்குறி முதலியவற்றில் வல்லவர்களுடைய ஆலோசனையைக் கேட்டபின்னரே அந்த வேலையைத் தொடங்குகிறார்கள்.

**வாணிகஞ் செய்யும் இளைஞர்கள்**

ஆண் மக்களுக்குப் பதின்மூன்று வயதாகி விட்டால் பெற்றோர்கள் அவர்களை வீட்டில் வைத்துக் கொள்வதில்லை. அந்த வயதில் அவர்களே வாணிகஞ் செய்து பொருளீட்டும் ஆற்றலைப் பெற்றுவிடுகிறார்கள் என்றும் அவர்களை வளர்க்கும் பொறுப்பு அதற்கு மேல் தங்களுக்கில்லை என்றும் பெற்றோர்கள் கருதுகிறார்கள். எனவே, அந்தப் பிள்ளைகள் கையில் இருபது அல்லது இருபத்து நான்கு குரோட்டோ

[21]. இந்தக் கூற்றைப் புரிந்து கொள்ள முடியவில்லை. சோழ மண்டலக் கடற்கரையின் எந்தப் பகுதிக்கும் இந்தக் கூற்றுப் பொருந்தாது. ஆனால், மேற்குக் கடற்கரைக்கு இது பொதுவாகப் பொருந்தக் கூடியதே.

அதற்குச் சமமான பணமோ கொடுத்து அவர்களை வெளியில் அனுப்பிவிடுகிறார்கள். அந்தப் பிள்ளைகள் நாள் முழுதும் அங்கும் இங்கும் ஓடி, பொருள்களை வாங்குவதிலும் அவற்றை விற்பனை செய்வதிலும் ஈடுபடுகிறார்கள். முத்துச் சலாபம் நடைபெறும் பருவத்தில் அவர்கள் கடற்கரைக்குச் சென்று, முத்துக் குளிப்பவர்களிடமோ பிறரிடமோ தங்களுடைய சக்திக் கேற்றவாறு ஐந்தாறு முத்துகளை வாங்கிக்கொண்டு, வெயிலுக் கஞ்சி வீட்டிலேயே இருக்கும் முத்து வணிகர்களிடம் அவற்றைக் காட்டி, தாங்கள் அவற்றிற்குக் கொடுத்த விலையைச் சொல்லி, அதற்குமேல் ஏதாவது லாபந் தருமாறு கேட்கிறார்கள். அந்த வணிகர்களும் ஏதோ சிறிது லாபம் கொடுத்து முத்தை வாங்கிக் கொள்கிறார்கள். முத்து மட்டுமன்றி வேறு பொருள்களையும் அந்தப் பிள்ளைகள் வாங்கியும் விற்றும் வாணிகஞ் செய்கிறார்கள். அதனால், நாளடைவில் அவர்கள் வாணிகப் பயிற்சியும் திறமையும் அடைகிறார்கள். நாள்தோறும் அவர்கள் தங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை வாங்கிக் கொண்டுபோய், தங்களுடைய தாய்மார்களிடம் தந்து, அவற்றைச் சமைத்துப் போடச் சொல்லி உண்கிறார்கள். தங்கள் பெற்றோர்களுடைய வருமானத்தில் கிடைக்கும் சோற்றில் ஒரு பருக்கையையும் அவர்கள் தொடுவதில்லை.

இந்த ராஜ்யத்திலும், இந்தியாவின் பிற ராஜ்யங்களிலும் காணப்படுகின்ற விலங்குகளும் பறவைகளும் நம்முடைய நாட்டில் வாழும் விலங்குகள் பறவைகள் ஆகிய வற்றிலிருந்து முற்றிலும் வேறுபட்டவையாய் இருக்கின்றன. ஆனால், ஒரே ஒரு பறவை மட்டும் நம் நாட்டுப் பறவையைப் போலவே இருக்கிறது. அதுதான் கவுதாரி. பிற பறவைகள் விலங்குகள் எல்லாமே வேறுபட்டவையாய் இருக்கின்றன. எடுத்துக் காட்டாக, வெளவாலைக் கூறலாம். இது இரவில் பறக்கிற பறவை என்பதும் சிறகேயில்லாத பறவை என்பதும் நமக்குத் தெரியும். ஆனால். இந்த நாட்டு வெளவால் நம்நாட்டுப் பெரிய வல்லூறைப் போலப் பெரிதாயிருக்கிறது. இந்த நாட்டு வல்லூறுகள் நம் நாட்டு வல்லூறுகளைக் காட்டிலும் பெரியவையாகவும், விரைவாய்ப் பறக்கக் கூடியவையாகவும், பிடிக்க வேண்டிய பறவையை உறுதியாய்ப் பிடிக்கக் கூடியவையாகவும் இருக்கின்றன.

**விலங்குகளும் பறவைகளும்**

இந்த நாட்டில் குதிரைகளுக்கு வெந்த சோறு, வெந்த இறைச்சி முதலிய சமைத்த உணவுகளை ஊட்டுகிறார்கள்.[22] இது

[22]. Cf. *Wassaf in Elliot and Dowson*, iii, pp 33-34 *cited above*, n. 19.

ஒரு விசித்திரமான பழக்கம். இந்த நாட்டில் குதிரைகள் விரைவாய் இறந்து போவதற்கு அதுவே காரணமாகும்.

இந்த நாட்டில் இருக்கும் (மடக்) கோயில்கள் சிலவற்றுக்கு இளம் பெண்களைப் பொட்டுக் கட்டிவிடும் வழக்கம் இருக்கிறது.

**தேவதாசிகள்**

அந்தப் பெண்களின் பெற்றோர்களுக்கு எந்தத் தெய்வத்தின்மீது மிகுந்த பக்தி இருக்கிறதோ அந்தத் தெய்வத்திற்குத் தங்களுடைய பெண்களை ஒப்படைத்துவிடுகிறார்கள். மடத்தில் வாழும் துறவிகள் தங்கள் தெய்வங்களுக்கு விருந்து வைத்து விழா எடுக்க விரும்பினால், அவர்கள் அந்தப் பெண்களை வரவழைத்து மகிழ்ச்சியாக ஆடவும் பாடவும் செய்கிறார்கள். மேலும் தெய்வங்களுக்கு ஊட்டுவதற்காக அவர்கள் இறைச்சி முதலிய பலவகை உணவுப் பண்டங்களையும் கொண்டுவருகிறார்கள்—அதாவது, அந்தப் பெண்கள் அவ்வுணவுப் பொருள்களைச் சமைத்து எடுத்துக்கொண்டுவந்து தெய்வச் சிலைகளின் முன்னர் வைத்து விட்டு ஆடவும் பாடவும் போய் விடுகிறார்கள். ஒரு பெரிய பிரபு விருந்துண்ணுவதற்கு எவ்வளவு நேரம் பிடிக்குமோ அவ்வளவு நேரம் அந்த உணவு அங்கேயே இருக்கிறது. அதற்குள் அந்தச் சிலைகளுள் குடியிருக்கும் தெய்வங்கள் அந்த உணவின் சாரத்தை உறிஞ்சிக் கொள்கின்றன என்று அவர்கள் சொல்கிறார்கள். பின்னர், அவர்கள் அந்த உணவுப் பொருள்களை எடுத்து மிகவும் மகிழ்ச்சியாக உண்கிறார்கள். இத்தகைய நிகழ்ச்சிகள் ஒவ்வோராண்டிலும் பலமுறை நிகழ்கின்றன. அந்தப் பெண்களுக்குத் திருமணமாகும் வரையிலும் அத்தகைய நிகழ்ச்சிகளில் அவர்கள் கலந்துகொள்கிறார்கள்.

இந்த விருந்தும் கூத்தும் எதற்காக நடத்தப்படுகின்றன என்று கேட்டால் துறவிகள் சொல்லும் விடை சுவையாக இருக்கிறது. அவர்களுடைய ஆண் தெய்வம் பெண் தெய்வத்தோடு பிணங்கிக் கொள்வதாகவும், அந்தச் சமயங்களில் பெண் தெய்வத்தோடு உறவு கொள்ளாததால் ஆண் தெய்வம் கோபமாய் இருப்பதாகவும், அந்தக் கோபத்தை மாற்றுவிட்டால் அது வளர்ந்துகொண்டே போகும் என்றும், அதனால் அந்த இரு தெய்வங்களுமே தங்களுக்கு அருள்பாலித்து நன்மை செய்யமாட்டா என்றும் அவர்கள் சொல்கிறார்கள். தெய்வங்களின் ஊடலைத் தணிப்பதற்காகத்தான் துறவிகள் அந்தத் தேவதாசிப் பெண்களை வரவழைத்து ஆடச் சொல்கிறார்களாம் அந்தப் பெண்கள் ஏறக்குறைய நிர்வாணமாக ஆடுகிறார்கள். ஆண் தெய்வம் பெண் தெய்வத்துடன் அடிக்கடி கூடி மகிழ்வதாக அவர்கள் நம்புகிறார்கள்.

இந்த நாட்டு மக்கள் இரவில் படுத்துத் தூங்குவதற்காகச் செய்துகொள்ளும் கட்டில் கனமில்லாத பிரம்பினால் ஆனது. கட்டிலில் படுத்துக்கொண்டபின் அதனோடு பிணைந்திருக்கும் கயிறுகளை இழுத்தால் கட்டில் மேலே ஏறும். ஏறக்குறையக் கூரைக்கு அருகில் கட்டில் வந்துசேர்ந்ததும் கயிறுகளை வேறு பொருள்களோடு சேர்த்துக் கட்டிவிடுகிறார்கள். எனவே, அவர்கள் அந்தரத்தில் தொங்கும் தொட்டிலில் தூங்குகிறார்கள். பெருஞ் சிலந்தியின் கடுமையான கடியிலிருந்தும் தெள்ளுப் பூச்சி முதலிய சிறு பூச்சிகளின் தொல்லையிலிருந்தும் தங்களைக் காத்துக் கொள்வதற்காகவும் கடுவெப்பத்திலிருந்து தப்பிக் காற்றுடப் படுத்துத் தூங்குவதற்காகவும் அவர்கள் அவ்வாறு செய்கிறார்கள் இந்த நாட்டு மக்கள் அனைவருமே அவ்வாறு செய்கிறார்கள். என்று நான் சொல்லவில்லை. பிரபுக்களும் பெரும் பணக்காரர் களுமே அவ்வாறு செய்கிறார்கள். ஏனையோர் தெருவில் படுத்து உறங்குகின்றனர்.

இதுவரையில் மா'பாரின் தென்கோடி ராஜ்யத்தைப் பற்றி உங்களுக்குச் சொன்னேன். இனி, மா'பார் மாகாணத்தின் பிற ராஜ்யங்களைப் பற்றிச் சொல்லப் போகிறேன். அவற்றைப் பற்றிய விசித்திரச் செய்திகள் பலவற்றை நான் தெரிந்து வைத்திருக்கிறேன்.

—*Op. cit.* Bk. iii. ch. xxvi.-xxvii.

## இ. புனித தாமசின் கல்லறையிருக்கும் இடம்: அங்கு நடந்த அற்புதம்

திருத்தூதர் புனித தாமசின் உடல் மா'பாரிலுள்ள ஒரு சிறு நகரத்தில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. அந்த நகரத்தின் மக்கள் தொகை மிகக் குறைவாய் இருக்கிறது. அங்கு வாணிகப் பண்டங்கள் குறைவாயிருப்பதாலும் அந்த நகரை அடைவது அவ்வளவு எளிதாய் இல்லாததாலும் அங்குச் செல்லும் வணிகர் களின் தொகையும் சிறிதாகவே இருக்கிறது. ஆனால், அந்த நகரத்திற்கு யாத்திரை செல்லும் கிறிஸ்துவர்கள் சாரசன்கள் ஆகியவர்களுடைய தொகை பெரியதாயிருக்கிறது. சாரசன் களும் புனித தாமசை மிகவுயர்ந்தவர் என்று கருதுகிறார்கள். அவர் சாரசன் வகுப்பைச் சேர்ந்தவர் என்றும், ஒரு பெரிய தீர்க்க தரிசி என்றும் அவர்கள் நம்புவதால் அவருக்கு 'அவரியன்' என்னும் பட்டப் பெயரைக் கொடுத்திருக்கிறார்கள். அதாவது, அவர் ஒரு புனிதர் என்று அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அங்கே செல்லும் கிறிஸ்துவர்கள் புனித தாமஸ் கொலைசெய்யப்

பட்ட இடத்திலுள்ள மண்ணைச் சிறிது தோண்டியெடுத்துக் கொள்கிறார்கள். யாருக்கேனும் முறைக்காய்ச்சல் (நான்காம் நாள்தோறும் விட்டுவிட்டு வரும் காய்ச்சலும் வேறுவகையான முறை வலிப்புக் காய்ச்சலும்) கண்டால் அந்த மண்ணில் ஒரு சிறிது எடுத்து நோயாளிக்குக் கொடுக்கிறார்கள். அதனைத் தின்ற உடனே, இறைவன் அருளாலும் புனித தாமசின் ஆற்றலாலும் காய்ச்சல் நின்றுவிடுகிறது. அந்த மண் செந்நிறமாய் இருக்கிறது. அந்த இடத்தில் கி. பி. 1288ஆம் ஆண்டில் ஒரு பெரிய அற்புதம் நிகழ்ந்தது. அதனை இப்போது உங்களுக்குச் சொல்கிறேன்.

**அற்புதம்**

அந்தப் பக்கத்தில் பெரும் பணக்காரனாயிருந்த பிரபு ஒருவனிடம் ஏராளமான தானியம் இருந்தது. அந்தத் தானியத்திற்கு நெல் என்பது பெயர். மாதாகோயிலைச் சுற்றிலும் கோயிலுக்குச் சொந்தமான வீடுகள் பல இருந்தன. பிரபு அந்த வீடுகள் அனைத்திலும் தன்னுடைய நெல்லைக் கொட்டி அவற்றை நிரப்பிவிட்டான். கோவிலை நிர்வாகஞ் செய்த கிறிஸ்துவர்கள் மிகவும் வருந்தினார்கள். அங்கு யாத்திரைக்கு வந்த வெளியூர்க்காரர்களும் தங்கும் இடமின்றிப் பெரிதும் துன்புற்றார்கள். அவர்கள் அந்தப் பிரபுவை எவ்வளவு கெஞ்சியும் அவன் நெல்லை அப்புறப்படுத்த மறுத்துவிட்டான். ஓரிரவு புனித தாமசே அந்தப் பிரபுவின் வீட்டுக்குப்போய், தம்முடைய கையில் வைத்திருந்த கவைமுள்ளை அவனுடைய கழுத்தில் வைத்து, 'என்னைக் காணவருகின்ற யாத்திரிகர்கள் தங்குவதற்கு வசதியாக, என்னுடைய வீடுகளில் நீ நிரப்பி வைத்திருக்கிற நெல்லை அப்புறப்படுத்தாவிட்டால், நீ கெட்டதொரு சாவிற்கு ஆளாவாய்' என்று சொல்லி, கவைமுள்ளை மேலும் சிறிது அழுத்தினார். 'ஐயோ செத்தேன்' என்று அந்தப் பிரபு அஞ்சி நடுங்கினான். மறுநாட்காலை கண்விழித்ததும், அவன் கோயிலைச் சேர்ந்த வீடுகளில் கொட்டி வைத்திருந்த நெல் முழுவதையும் அப்புறப்படுத்திவிட்டு, இரவில் நேர்ந்ததை அனைவருக்கும் சொன்னான். அதனைக் கேட்ட கிறிஸ்துவர்கள் பெருமகிழ்ச்சிகொண்டு, இறைவனுக்கும் புனித தாமசுக்கும் தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்கள். அந்தப் பேரற்புதமேயன்றி இன்னும் எத்தனையோ அற்புதங்கள் அங்கு நிகழ்கின்றன. எடுத்துக்காட்டாக, நோய்வாய்ப்பட்டவர்கள் நோய்நீக்கம் பெறுகிறார்கள். ஊனமுற்றவர்கள் உறுப்புநலன் பெறுகிறார்கள். சிறப்பாக, கிறிஸ்துவர்களே இத்தகைய அற்புதங்களால் நன்மையடைகிறார்கள்.

மாதா கோயிலின் நிர்வாகப் பொறுப்பேற்றுள்ள கிறிஸ்துவர்களுக்கு ஏராளமான தென்னை மரங்கள் இருக்கின்றன. அவற்றால் கிடைக்கும் வருவாயே அவர்களுடைய வாழ்க்கையின் ஆதாரமாய் இருக்கிறது. நாம் முன்னர்க் கூறிய நான்கு சகோதரர்களுள் ஒருவன் அங்கே அரசனாயிருக்கிறான். அவனுக்கு அந்தக் கிறிஸ்துவர்கள் தென்னைமரம் ஒன்றுக்கு மாதம் ஒன்றுக்கு (ஆண்டொன்றுக்கு?) ஆறு குரோட் என்ற விகிதத்தில் தீர்வை கட்டுகிறார்கள்.

மாதா கோயிலின் நிர்வாகத்துக்குப் பொறுப்பேற்றுள்ள கிறிஸ்துவர்கள் புனித தாமஸ் கொலையைப்பற்றி என்ன சொல்கிறார்கள் என்பதை இப்போது நான் உங்களுக்குச் சொல்லப்போகிறேன்.[28]

ஒருநாள் புனித தாமஸ் தம்முடைய ஆசிரமத்திற்கு வெளியேயிருந்த காட்டில் அமர்ந்து பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார். அப்போது அவரைச் சுற்றிலும் மயில்கள் பல நின்றுகொண்டிருந்தன. அந்த நாட்டில் மயில்கள் ஏராளமாய் இருக்கின்றன. வேறெந்த நாட்டிலும் அத்தனை மயில்களைக் காணமுடியாது. அப்போது மயில் வேட்டைக்காக அங்கு வந்த கோவி ஒருவன் ஒரு மயிலைக் கொல்வதற்காக ஓர் அம்பை எய்தான். அவன் புனித தாமஸ் அங்கு அமர்ந்திருந்ததைப் பார்க்கவில்லை. அவன் விட்ட அம்பு புனித தாமசின் வலப்பக்க விலாவில் பாய்ந்தது. தாமஸ் இறைவன் பெயரை இனிமையாய்ச் சொல்லிக்கொண்டே இறந்துபோனார். (உருவ வழிபாட்டினர்களான கோவியர்களைப் பற்றி நான் முன்னரே உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன்).

புனித தாமஸ் இந்த நாட்டுக்கு வருவதற்குமுன் நுபியா நாட்டில் இருந்தார். அங்கு அவர் ஏராளமான மக்களைக் கிறிஸ்துவ மதத்திற் சேர்த்தார்.

[28] 'புனிதத் தாமஸ் தென்னிந்தியாவில் இறந்தார் என்று மெய்ப்பிப்பதற்காகக் கூறப்படும் கதைகள் பல இருக்கின்றன. அவற்றுள் மிக முதலில் சொல்லப்பட்ட கதைகளுள் இதுவும் ஒன்று. மயிலாப்பூர் என்னும் பெயரை அடிப்படையாக வைத்து இந்தக் கதையைப் புனைந்திருக்கின்றனர் என்பது தென்னத் தெளிவாகத் தெரிகின்ற செய்தியாயிருக்கிறது. புனித தாமசின் சாவைப் பற்றிச் சொல்லப்படுகின்ற பிற கதைகளுக்கும் இதற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. 'ஆனால் புனித தாமஸ் இந்தியாவுக்கு வந்து கிறிஸ்துவின் நற்செய்தியைப் பரப்பினார் என்னும் மரபுவழிக் கதை பழமையானது, அந்தப் பழமையைக் கருத்திற் கொண்டு பார்க்கும்போது அந்தக் கதை, அதனுடைய எளிய உருவில், உண்மையாயிருக்கும் என்றே கருதலாம்.'

—யூல்

இந்த நாட்டில் பிறக்கும் குழந்தைகள் கறுப்பாய் இருக்கிறார்கள். அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு கறுப்பாய் இருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் உயர்வாய்க் கருதப்படுகிறார்கள். அதனால்தான், அவர்கள் பிறந்த நாளிலிருந்து வாரத்திற்கொருமுறை அவர்களுடைய பெற்றோர்கள் அவர்களுக்கு நல்லெண்ணெய் தேய்க்கிறார்கள். அவ்வாறு செய்யச் செய்ய அந்தக் குழந்தைகள் பிசாசு போலக் கறுப்பு நிறமடைகிறார்கள். இந்த நாட்டு மக்கள் தங்களுடைய கடவுளர் சிலைகளைக் கறுப்பாக்குகிறார்கள். பிசாசுகளின் சிலைகளை வெண்மையாய் வைத்திருக்கிறார்கள். புனிதர்களுடைய சிலைகளுக்கும் அவர்கள் கறுப்பு வண்ணம் பூசுகிறார்கள்.

அவர்கள் எருதை மிகவும் புனிதமாகக் கருதுகிறார்கள். அதன் ஆற்றலில் அவர்கள் மிகுந்த நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அதனால், அவர்கள் போர்க்களத்திற்குப் போகும் போது காட்டெருதின் மயிரை எடுத்துத் தங்கள் குதிரைகளின் கழுத்தில் கட்டிவைக்கிறார்கள். தரையில் நின்று போர் புரியும் காலாட் படையினர் அந்த மயிரைத் தங்களுடைய கேடயங்களில் கட்டிவைக்கின்றனர். சிலர் அதனைத் தம் தலையிலேயே சூடிக் கொள்கின்றனர். அந்த மயிர் இல்லாமல் போருக்குப் போவதற்கு அனைவரும் அஞ்சுகின்றனர். அந்த மயிர் தம்மிடம் இருந்தால் எவ்வித ஊறும் நேராமல் போர்க்களத்திலிருந்து திரும்பலாம் என்று அவர்கள் நம்புகிறார்கள். அதனால் அதனுடைய விலை மிகவும் அதிகமாய் இருக்கிறது.

—OP. *cit* Bk. iii, Ch. xxviii.

## ஈ. மட்பிலி ராஜ்யம்

மா'பாரிலிருந்து சுமார் 1000 மைல் வடக்கே சென்றால் மட்பிலி[24] (மோட்டுப் பல்லி) ராஜ்யத்தை அடையலாம். அந்த ராஜ்யத்தை ஆண்டுவந்த அரசன் சுமார் நாற்பதாண்டுக்கு முன் இறந்துபோனான். அதிலிருந்து அவனுடைய மனைவியே அந்த ராஜ்யத்தை ஆண்டுவருகிறாள். அவள் மிகவும் திறமை வாய்ந்தவள். தன்னுடைய கணவன்மீது அவள் வைத்திருந்த பேரன்பின் காரணமாக அவள் வேறு யாரையும் திருமணஞ்

[24] இது குண்டூர் மாவட்டத்திலுள்ள மோட்டுப்பல்லி என்பது உறுதி. மார்க்க போலோவின் காலத்தில் அது ஒரு புகழ்பெற்ற துறைமுகமாயிருந்தது. காகதிய வம்சத்தைச் சேர்ந்த அரசனான கணபதி அந்தத் துறைமுகத்திற்கு வெளி நாட்டு வணிகர் வருவதற்குப் பெருக்கம் அளித்தான்.

—JOR 1934, pp. 315—20.

செய்துகொள்ளவில்லை.[25] இந்த நாற்பதாண்டுக் காலத்தில் அவள் தன்னுடைய கணவனைப் போலவே சிறந்த முறையில் ஆட்சி செய்து வந்துள்ளாள். உண்மையில் அவனைக் காட்டிலும் சிறந்த முறையில் அவள் ஆட்சி செய்கிறாள் என்று சொன்னால் அது தவறாகாது. அவள் நீதியையும் நியாயத்தையும் அமைதியையும் விரும்புபவள். அதனால், அவளுக்குமுன் இருந்த கோமான்கள் கோமாட்டிகளைக் காட்டிலும் அவளிடத்தில் குடிமக்கள் மிகுந்த அன்புடையவர்களாய் இருக்கிறார்கள். குடிமக்கள் அனைவரும் உருவ வழிபாட்டினர். அவர்களுடைய ராஜ்யம் யாருக்கும் கப்பம் கட்டாத சுதந்திர ராஜ்யமாய் இருக்கிறது. அவர்கள் இறைச்சி, நெல்லஞ் சோறு, பால் ஆகியவற்றை உண்கிறார்கள்.

இந்த ராஜ்யத்தில்தான் வைரங் கிடைக்கிறது. மக்கள் எவ்வாறு வைரம் எடுக்கிறார்கள் என்பதை இப்போது சொல்லப் போகிறேன். அங்கே பெரிய பெரிய மலைகள் பல இருக்கின்றன.

**வைரச் சுரங்கம்**

குளிர்காலத்தில் அங்குக் கடுமையான மழை பெய்கிறது. மலைமீது விழுகின்ற மழைநீர் பேரிரைச்சலோடு கீழே பாய்கிறது. மழைக்காலம் முடிந்தபின் மலைச் சாரலிற் பாய்கின்ற விசை நீரோட்டமும் நின்றுவிடுகிறது. அதன் பின்னர், அந்த ஓடைகளின் படுகைகள் வறண்டு போகின்றன. அப்போது மக்கள் அங்குச் சென்று, படுகைகளை ஆராய்ந்து, வைரங்களைப் பொறுக்கி எடுக்கிறார்கள். வேனிற் காலத்திலும் அந்த மலைகளில் வைரங்கள் இருக்கின்றன. ஆனால், அப்போது அங்குத் தாங்கமுடியாத வெப்பமாய் இருக்கிறது. அன்றியும், அங்கு அப்போது ஒரு பொட்டு நீரும் கிடைக்காது. மேலும், அந்த மலைகளில் அடிக்கும் வெயிலின் காரணமாக அங்கே ஏராளமான பாம்புகளும் கேடுசெய்யும் புழுப் பூச்சிகளும் இருக்கின்றன. அந்தப் பாம்புகள் மிகப் பெரியவை; மிகக் கொடிய நஞ்சுடையவை. எனவே, அந்தப் பக்கம் போகிறவர்கள் உயிரோடு திரும்பி வருதல் இயலாது. துணிந்து சென்றவர் பலர் அங்கேயே இறந்து போயிருக்கின்றனர். எனவே, வேனிற் காலத்தில் வைரத்தைத் தேடிக் கொண்டு மலைக்குப் போகிறவர்கள் யாரும் அங்கில்லை.

அந்த மலைகளுக்கு இடையிலுள்ள பள்ளத் தாக்குகள் அனைத்திலுமே வைரம் இருக்கிறது. அவற்றுள் சில மிகவும் ஆழமானவை. அவற்றின் அடிவாரத்தை அடைவதற்கு வழியே

[25] இந்த அரசி கணபதியின் மனைவி அல்லள். அவனுடைய மகள் உருத்திரம்பாள்.

இல்லை. ஆனாலும், அங்குள்ள வைரங்களை எடுப்பதற்கு மக்கள் விரும்புகிறார்கள். அவர்கள் இறைச்சியைத் துண்டந் துண்டமாக வெட்டியெடுத்துக்கொண்டு மலைக்குச் சென்று, மேலேயிருந்த படியே அந்தத் துண்டங்களைக் கீழேயுள்ள பள்ளத்தாக்கில் வீசி விட்டு, அங்கேயே காத்துக் கொண்டிருக்கிறார்கள். பாம்புகளைத் தின்று உயிர்வாழ்கின்ற வெண் கழுகுகள் பள்ளத்தாக்கில் ஏராளமாய் இருக்கின்றன. கீழே விழுகின்ற இறைச்சித் துண்டங் களைக் கண்டதும் அந்தக் கழுகுகள் அவற்றை எடுத்துக்கொண்டு போய் மேலேயுள்ள பாறைகளின்மீது அமர்ந்து அவற்றைக் கிழித்துத் தின்னத் தொடங்குகின்றன. ஆனால், காத்துக்கொண் டிருக்கின்ற மனிதர்கள் அவைகள் பாறைமீதமர்ந்ததும் பெருங் கூச்சல் போடுகிறார்கள். அதனால் அச்சமடைந்த கழுகுகள் இறைச்சித் துண்டங்களை விட்டுவிட்டுப் பறந்துபோய் விடுகின்றன. உடனே அந்த மனிதர்கள் அந்தத் துண்டங்களை எடுத்து, அவைகள் பள்ளத்தாக்கின் அடியில் விழுந்துகிடந்த போது அவற்றில் ஒட்டிக்கொண்ட வைரங்களைப் பிரித்து எடுத்துக் கொள்கிறார்கள்.[26] பள்ளத்தாக்குகளின் அடியில் எண்ணற்ற வைரக் கற்கள் இருக்கின்றன. ஆனால், யாராலும் அங்குப் போக இயலாது. யாரேனும் துணிந்து சென்றார் களென்றால், அங்கேயிருக்கின்ற பாம்புகள் அவர்களை ஒரு நொடியில் விழுங்கிவிடும்.

அந்த வைரங்களை அடைவதற்கு இன்னொரு வழியும் இருக்கிறது. இறைச்சித் துண்டங்களைப் பள்ளத்தாக்கில் வீசிவிட்டால், அவற்றை வெண் கழுகுகள் எடுத்துத் தின்றுவிட்டு, மேலேயுள்ள பாறைகளில் கட்டியுள்ள கூடுகளில் அடைந்து கொள்கின்றன. கூடுகளில் கழுகுகள் இடுகின்ற எச்சத்தில் அவை இறைச்சியோடு சேர்த்து விழுங்கிய வைரங்களும் இருக்கும். இறைச்சித் துண்டங்களை வீசிய மனிதர்கள் அந்தக் கூடுகளைக் கண்டுபிடித்து, எச்சத்திலுள்ள வைரங்களை எடுத்துக் கொள்கிறார்கள். அன்றியும், பள்ளத்தாக்கில் விழுந்த இறைச் சியைத் தின்ற கழுகுகளை அவர்கள் பிடித்து, அவற்றின் வயிற்றைக் கிழித்து வைரத்தை எடுத்துக்கொள்வதும் உண்டு.

இவ்வாறு மூன்று வகையில் வைரம் எடுக்கிறார்கள் என்பதை உங்களுக்குத் தெரியப்படுத்தினேன். மட்பிலி ராஜ்யந்

[26] அரேபியர்கள் இலவங்கப் பட்டையை எவ்வாறு எடுத்தார்கள் என்பதைப் பற்றி ஹெரோடோட்டஸ் சொல்கின்ற கதைக்கும் இந்தக் கதைக்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன. (III, 111). 'இந்த இரு கதைகளும் ஒரே கட்டுக்கதையிலிருந்து பிரிந்த இருவேறு கிளைக் கதைகள் என்பதில் ஐயமில்லை.'—Yule, cf. xi ante pp .84–85.

தவிர வேறெந்த ராஜ்யத்திலும் வைரம் கிடைப்பதில்லை. அந்த ஒரே ராஜ்யத்தில்தான் வைரம் கிடைக்கிறது. என்றாலும், அங்கு, வைரம் ஏராளமாய் இருக்கிறது என்பதையும் அந்த வைரக் கற்கள் மிகவும் பெரியவையாய் இருக்கின்றன என்பதையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டும். நம்முடைய நாடுகளுக்கு வருகிற வைரம் மட்டரகமானது. நல்ல கற்களையெல்லாம் பொறுக்கி எடுத்துக்கொண்ட பின்னர்க் கழித்துப் போட்டவையே நம் நாட்டிற்கு வருகின்றன என்று சொல்லலாம். மிக உயர்ந்த ரகத்தைச் சேர்ந்த பெரிய வைரங்களையும், பிற மணிக் கற்களுள் உயர்ந்தவற்றையும், முத்துகளையும் குப்ளாகானும் அந்த நாடுகளில் ஆட்சி செய்கின்ற பிற அரசர்களும் வாங்கிக் கொள்கிறார்கள். உண்மையில் உலகத்தின் பெருஞ் செல்வங்கள் எல்லாம் அவர்களிடமே இருக்கின்றன.

**பருத்தித் துணியுற்பத்தி**

இந்த ராஜ்யத்தில்தான் மிகவுயர்ந்த, மிகவும் மென்மையான பருத்திநூல் துணிகள் நெய்யப்படுகின்றன[27]. அவற்றின் விலையும் மிகவும் அதிகமாயிருக்கிறது. அந்தத் துணிகள், சிலந்தி வலையைப் போலவே இருக்கின்றன. அந்தத் துணியால் ஆன அடைகளை அணிந்து மகிழ விரும்பாத அரசனோ அரசியோ உலகிலேயே இல்லை. உலகிலேயே மிகவும் பெரிய ஆடுகள் இந்த ராஜ்யத்தில் இருக்கின்றன. இங்கு வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள் அனைத்தும் குவிந்து கிடக்கின்றன.

இந்த ராஜ்யத்தைப் பற்றிச் சொல்ல வேண்டிய செய்தி வேறொன்றும் இல்லை. எனவே, லார் என்னும் மாகாணத்தைப் பற்றி இனிச் சொல்லப் போகிறேன். அப்ரைமணர்கள் அந்த மாகாணத்தைச் சேர்ந்தவர்களே.

—*Op. cit.* Bk. iii. ch. xix.

## உ. அப்ரைமணர் வாழ்கின்ற லார் மாகாணம்

புனித தாமசின் உடல் அடக்கஞ் செய்யப்பட்டுள்ள இடத்திலிருந்து மேற்கே சென்றால், லார் மாகாணத்தை

[27] 'மசாலியாவில் உற்பத்தியான மிக மென்மையான மஸ்லின் துணியைப் பெரிப்ளஸ் குறிப்பிடுகிறது.'—யூல்.

அடையலாம். உலகிலுள்ள அப்ரைமணர் அனைவருமே அந்த மாகாணத்தைச் சேர்ந்தவர்கள்[28].

அப்ரைமணர்கள் உலகிலேயே மிகச் சிறந்த வணிகர்களாய் இருக்கின்றார்கள். அவர்களைப் போல உண்மையைப் போற்றுகின்றவர்களை வேறெங்குமே காண முடியாது. எந்தக் காரணத்திற்காகவும் அவர்கள் பொய் சொல்லமாட்டார்கள். இந்த நாட்டின் வாணிக முறைகளை அறியாத வெளிநாட்டு வணிகர் யாரேனும் தம்முடைய பண்டங்களை இந்த அப்ரைமணரிடம் ஒப்படைத்து, அவற்றை விற்றுத் தருமாறு வேண்டிக் கொண்டால், இந்த அப்ரைமணர் அந்தச் சரக்குகளுக்குப் பொறுப்பேற்றுக்கொண்டு, அவற்றை விற்பனை செய்யும்போது மிகவும் உண்மையாய் நடந்து, வெளிநாட்டு வணிகருக்கு எவ்வளவு லாபந் தேடித்தர முடியுமோ அவ்வளவு லாபந் தேடித் தருவார்கள். தங்களுக்கு எவ்வளவு தரகு வேண்டும் என்பதை அவர்கள் சொல்லமாட்டார்கள். வெளிநாட்டு வணிகர் விரும்பிக் கொடுப்பதை ஏற்றுக் கொள்வார்கள். அவர்கள் ஊன் உண்பதில்லை. மது அருந்துவதில்லை. அவர்கள் கற்பு நெறியை மிகவும் போற்றி வாழ்கிறார்கள்; தங்களுடைய மனைவிமார்களோடன்றி வேறு எந்தப் பெண்ணுடனும் உடலுறவு வைத்துக் கொள்ள மாட்டார்கள். பிறர் உடைமையை எக்காரணத்துக்காகவும் எடுத்துக்கொள்ள மாட்டார்கள். அவர்கள் கடைப்பிடிக்கும் அறநெறி அத்தகையது. அவர்கள் அணிந்துள்ள நூல் கயிறு அவர்களை மற்ற வகுப்பினரிடமிருந்து பிரித்துக் காட்டுகிறது. அந்தக் கயிற்றை அவர்கள் ஒரு தோளின்மீது வளைத்துப் போட்டு, இன்னொரு கையின் கீழ்ப்பக்கத்தில அதனுடைய இரு நுனிகளையும் ஒன்றுசேர்த்து முடிந்து விடுகிறார்கள். அவ்வாறு செய்வதால், அந்தக் கயிறு அவர்களுடைய மார்பு முதுகு ஆகியவற்றின் குறுக்கே படிந்து காணப்படுகிறது.

[28] 'புனித தாமஸ் உடலிருக்கும் இடத்திற்கு மேற்கேயுள்ள லார் மாகாணம், அங்கு வாழ்ந்த பார்ப்பனர், அவர்களுடைய அரசன் முதலிய செய்திகள் எல்லாமே தெளிவற்றவையாய் இருக்கின்றன. அதற்குக் காரணம் மார்க்கபோலோ தவறாகப் புரிந்துகொண்டதுதான். பனியர்களையும் பார்ப்பனர்களையும் மார்க்கபோலோவால் வேறு பிரித்துக் காண முடியவில்லையென்றும், பனியர்களையே பார்ப்பனர் என்று அவர் தவறாக எண்ணிக் கொண்டார் என்றும் மார்ஸ்டன் கருதுகிறார். லார் என்னும் குஜராத்து ராஜ்யமே பனியர்களுடைய சொந்த நாடு. அதனால் மார்ஸ்டன் கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதாகத் தோன்றுகிறது.'—யூல்.

அவர்களுடைய அரசன் வலிமை மிக்கவன். அவனிடம் ஏராளமான செல்வம் இருக்கிறது. அவன் பெரிய முத்துகளையும் உயர்ந்த ரத்தினங்களையும் வாங்குவதில் மிகுந்த விருப்பம் உடையவன். அதற்காக அவன் அப்ரைமண வணிகர்களைச் சோலி[29] என்னும் பெயருடைய மா'பார் இராஜ்யத்திற்கு அனுப்புகிறான். அது இந்தியாவிலேயே மிகச் சிறந்த மாகாணம். அங்கேதான் மிகச் சிறந்த முத்துக் கிடைக்கிறது. அத்தகைய முத்துகள் எத்தனை கிடைத்தாலும் வாங்கி வருமாறு அந்த வணிகர்களைப் பணிக்கிறான். அவற்றுக்கு அவர்கள் கொடுத்த விலையைப் போல இருமடங்கு விலை கொடுத்து அவன் வாங்கிக் கொள்கிறான். அதனால் அவன் கருவூலத்தில் விலை மதிப்புள்ள இத்தகைய பொருள்கள் ஏராளமாய் இருக்கின்றன.

அப்ரைமணர்கள் உருவ வழிபாடு செய்பவர்கள். நிமித்தங்களுக்கும் சகுனங்களுக்கும் உலகிலேயே அதிகமான மதிப்புக் கொடுப்பவர்கள் அவர்களே. எடுத்துக்காட்டாக, அவர்களுடைய பழக்கங்களுள் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். வாரத்தின் ஏழு நாட்களுள் ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வொரு வகையான நன்னிமித்தத்தை அவர்கள் குறித்துவைத்திருக்கிறார்கள். ஒருவன் ஒரு குறிப்பிட்ட பொருளை வாங்க விரும்புகிறான் என்று வைத்துக்கொள்வோம். அவன் காலையில் எழுந்ததும் வெயிலில் நின்று தன்னுடைய நிழலைக் கவனிக்கிறான். அந்த நாளில் அவனுடைய நிழலின் நீளம் அவன் குறித்துள்ள அளவுக்குச் சமமாயிருந்தால் அவன் வாங்க விரும்பும் பொருளை வாங்குகிறான். இல்லையெனில், அந்தப் பொருளை அன்று வாங்கமாட்டான். எந்த நாளில் தன்னுடைய நிழலின் நீளம் தான் குறித்து வைத்துள்ள அளவுக்குச் சரியாய் இருக்கிறதோ அந்த நாள் வரையிலும் பொறுத்திருந்து அந்தப் பொருளை வாங்குவான். ஞாயிற்றுக் கிழமையன்று தன்னுடைய நிழல் எவ்வளவு நீளம் இருக்க வேண்டும் திங்களன்று அது எவ்வளவு நீளம் இருக்கவேண்டும் என்று குறித்துவைத்திருக்கிறான். இவ்வாறே மற்றநாட்களுக்கும் குறித்து வைத்திருக்கிறான். குறிப்பிட்ட நாளில்அவனுடைய நிழல் குறிப்பிட்ட நீளம் இல்லாவிட்டால், அந்த நாளில் அவன் செய்ய நினைத்த காரியத்தைச் செய்யமாட்டான். மேலும், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு குறிப்பிட்ட நேரம் (ஒரு மணி நேரம்) தீங்கு தரக்கூடியது என்று அவர்கள் கருதுகிறார்கள். அந்த நேரத்தை அவர்கள் சோயியாக்[30] என்று சொல்கிறார்கள்.

29. சோலி—சோழ (மண்டலம்).

30 த்யாஜ்யம் என்னும் சொல்லின் சிதைவு—Caldwell cited by Yule.

எடுத்துக் காட்டாக, திங்கட்கிழமையன்று அரை டியர்ஸ் (ஏழரை) மணியும், செவ்வாய்க் கிழமையன்று டியர்ஸ் (ஒன்பது) மணியும், புதன் கிழமையன்று பிற்பகல் மூன்று மணியும் நல்ல நேரம் அல்ல. அவ்வாறே ஏனைய நாட்களுக்கும் தீய நேரங்கள் உண்டு.

ஏதாவது ஒரு பொருளை வாங்க விரும்புபவன் தன் வீட்டிலமர்ந்து அதனை வாங்கலாமா வேண்டாமா என்று சிந்தித்துக் கொண்டிருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம்.

சகுனங்கள்

அப்போது அந்த நாட்டில் ஏராளமாய்க் காணப் படும் பெருஞ்சிலந்திகளுள் ஒன்று அவனுக்கருகில் இருக்கிற சுவரின் மீது ஊர்ந்து வருவதாக வைத்துக் கொள்வோம். அந்தச் சிலந்தி சுவரின் எந்தப் பக்கத்திலிருந்து வருகிறது என்பதை அவன் கவனித்து, நல்ல பகுதி என்று அவன் கருதுகின்ற பகுதியிலிருந்து அது ஊர்ந்து வந்தால், வாங்க நினைத்த பொருளை உடனே வாங்கி விடுவான். ஆனால், நல்லதல்லாதது என்று அவன் கருதுகின்ற பகுதியி லிருந்து அது முன்னேறினால், அவன் வாங்க நினைத்த பொருளை எக்காரணததை முன்னிட்டும் வாங்க மாட்டான். மேலும், அவன் வெளியே போகும்போது யாரேனும் தும்முகின்றனர் என்று வைத்துக்கொள்வோம். அது நலல தும்மல் என்று அவனுக்குத் தோன்றினால் அவன் வெளியே போவான். இல்லா விட்டால் அந்த இடத்திலேயே அமர்ந்துகொள்வான். போதுமான நேரம் அவ்விடத்தில் இருந்து விட்டதாக அவன் கருதினால், பின்னர் அங்கிருந்து புறப்பட்டுத் தான்போக வேண்டிய இடத்திற்குப் போவான். சாலையில் நடந்து கொண் டிருக்கும் போது ஒரு தூக்கணாங் குருவி அவன்முன் பறந்து போகிறது என்று வைத்துக் கொள்வோம். அது பறந்த திசை நன்மை தரக்கூடியது என்று அவன் கருதினால் தொடர்ந்து நடப்பான்; இல்லாவிட்டால் வந்த வழியே திரும்பி விடுவான். இந்த விஷயங்களில் இந்த நாட்டு மக்கள் பட்டாரியர்களைக் காட்டிலும் மோசமானவர்கள்.

அப்ரைமணர் நாம் வழக்கமாக உண்கின்ற பண்டங்கள் பலவற்றை உண்பதில்லை. நுகர்பொருள் விலக்கும் இந்தப் பழக்கத்தின் பயனாக அவர்கள் நீண்டநாள் வாழ்கிறார்கள், மருத்துவ முறைப்படி குருதி வடித்தலை அவர்கள் ஏற்றுக் கொள்வதேயில்லை. அவர்கள் ஏதோ ஒரு மூலிகையைச் சுவைக் கிறார்கள். அதனால் அவர்களுடைய பற்கள் முதல்தரமாயிருக் கின்றன. மேலும், அந்த மூலிகை பொதுவாக உடம்புக்கும்

நல்லது. அவர்களுடைய தோற்றமும் அதனால் பொலிவு பெறுகிறது.

சுகி[31] என்னும் பெயருடைய இன்னொரு வகுப்பினர் இருக்கின்றனர். அவர்களும் அப்ரைமணர்களே. அவர்களும் தெய்வச் சிலைகளை வழிபடுகின்றவர்களே. எனினும், அவர்கள் தனியொரு சமயப் பணித்துறையைச் சேர்ந்தவர்கள். அவர்கள் அனைவருமே நீண்ட ஆயுள் பெற்றவர்கள், அவர்கள் 150 முதல் 200 ஆண்டு வரையிலும் உயிர் வாழ்கிறார்கள். அவர்கள் மிகவும் குறைவாய் உண்கிறார்கள். ஆனால் மிக நல்ல பண்டங்களையே உண்கிறார்கள். அவர்களுடைய முக்கிய உணவு நெல்லஞ் சோறும் பாலும் ஆகும். அவர்கள் ஒரு விசித்திரமான பானத்தைப் பருகுகிறார்கள். கந்தகத்தையும் பாதரசத்தையும் நீரிற் கலந்து மாதத்திற்கு இரு முறை குடிக்கிறார்கள். அந்தப் பானத்தை அவர்கள் குழந்தைப் பருவத்திலிருந்து பருகிப் பழகியிருக்கிறார்கள். அவர்களுடைய நீண்ட ஆயுளுக்கு அவர்கள் பருகும் அந்தப் பானமே காரணம் என்று அவர்கள் சொல்கிறார்கள்.

யோகிகள்

இந்தத் துறவுக் கூட்டத்தைச் சேர்ந்த சிலர் உடம்பை ஒறுக்கின்ற கடுநோன்பு வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். அவர்கள் முழு நிர்வாணமாய் இருக்கிறார்கள். அவர்கள் எருதை வழிபடுகிறார்கள். அவர்களுட் பலர் பித்தளையாலோ, வெள்ளீயக் காரீயக் கலப்பு உலோகத்தாலோ பொன்னாலோ செய்த எருதின் சிற்றுருவம் ஒன்றனை வைத்திருக்கின்றனர். அதனை அவர்கள் தங்களுடைய நெற்றிமீது கட்டிக்கொள்கிறார்கள்.[32] அன்றியும் அவர்கள் மாட்டுச் சாணத்தைச் சுட்டுப் பொடியாக்கி வைத்துக் கொள்கிறார்கள். பின்னர் அதனை ஒரு மருந்து நெய்போலச் செய்து உடம்பில் பூசிக்கொள்கிறார்கள். கிறிஸ்துவர்கள் எவ்வளவு பக்தியுடன் புனித நீரைப் பயன்படுத்துகிறார்களோ அவ்வளவு பக்தியுடன் அவர்கள் அந்தப் பொடியைப் பூசிக் கொள்கிறார்கள். மேலும், அவர்களிடத்தில் இனிமையாய்ப் பழகுபவர் யாரேனும் வந்தால் அவர்களுடைய நெற்றியிலும் அந்தப் பொடியைச் சிறிது பூசி விடுகிறார்கள்.

[31] சுகி—ஜோகி.

[32] 'தென்னிந்தியாவில் ஜங்கமர் என்னும் ஒரு பிரிவினர் இருக்கின்றனர். அவர்கள் இலிங்கத்தை வழிபடுகிறவர்கள். அதனால் அவர்கள் தாமிரத்தாலோ வெள்ளியாலோ செய்த லிங்கத்தைக் கழுத்திலேனும் நெற்றி மீதேனும் கட்டிக் கொள்கிறார்கள்.'—யூல்.

அவர்கள் உண்கலங்களையும் தட்டுகளையும் பயன்படுத்துவதில்லை; தங்களுடைய உணவை apple of paradise இலையிலோ வேறு பெரிய இலையிலோ இட்டு உண்கிறார்கள். ஆனால் அவ் விலைகளை அவர்கள் உலர்ந்த பின்னரே பயன்படுத்துகிறார்கள். பச்சையாயிருக்கும்போது அவற்றில் உண்பதில்லை. பசுமைமாறாத இலைக்குள் அதனுடைய ஆன்மா இருக்கிறதென்றும், அதனை அறுத்துப் பயன்படுத்துவது பாவம் என்றும் அவர்கள் சொல் கிறார்கள். அவர்களுடைய நெறிப்படி எது பாவச் செயலோ அதனைச் செய்வதைக் காட்டிலும் அவர்கள் உயிரையும் விடுவார் கள். 'ஆடையின்றித் திரிவது வெட்கமாயில்லையா'? என்று அவர்களைக் கேட்டால், 'நாங்கள் இவ்வுலகுக்கு வந்தபோது நிர்வாணமாய் வந்தோம்; அதனால் இவ்வுலகத்தைச் சேர்ந்த பொருள் எதனையும் எங்கள் உடல்மீது போட்டுக்கொள்ள நாங்கள் விரும்பவில்லை. மேலும், நாங்கள் எங்களுடைய உடலால் எவ்வகைப் பாவத்தையும் செய்வதில்லை. ஆதலால் அத்தகைய பாவ உணர்வே எங்களுக்கில்லை. எனவே, எங்களுடைய நிர்வாணம் எங்களுக்கு வெட்கமாயில்லை. உங்களுடைய கையும் முகமும் வெளியே தெரிவதால் நீங்கள் வெட்கப் படுகிறீர்களா? எங்களைப் பொறுத்தவரையில் கைக்கும் பிற உறுப்புகளுக்கும் வேறுபாடில்லை. நீங்கள் உடலாற் செய்கின்ற பாவ உணர்வுடைய வர்கள். நிர்வாணம் உங்களுக்கு வெட்கமாயிருப்பது நியாயமே. அதனால் உங்களுடைய உறுப்புகளை ஆடையால் மறைத்துக் கொள்வதும் நியாயமே' என்று அவர்கள் சொல்கிறார்கள்.

அவர்கள் எக்காரணத்திற்காகவும் எந்த விலங்கையும் கொல்லமாட்டார்கள். ஈ, தெள்ளுப்பூச்சி, பேன் முதலியவற்றை யும் அவர்கள் கொல்வதில்லை—அதாவது, உயிருள்ளபொருள் எதனையும் அவர்கள் கொல்வதில்லை. அவற்றிற்கெல்லாம் ஆன்மா இருக்கிறதென்றும், அதனால் அவற்றைக் கொல்வது பாவமென்றும் அவர்கள் சொல்கிறார்கள். காய்கறிகளையும் அவர்கள் பசுமையாய் இருக்கும்போது உண்பதில்லை; உலர்ந்த காய்கறிகளையே அவர்கள் உண்கிறார்கள். அவர்கள் ஆடையே இல்லாமல் தரையில் படுத்து உறங்குகிறார்கள். உறங்கும்போது உடலின் கீழேயும் துணியை விரித்துக்கொள்வதில்லை; மேலேயும் துணியையும் போர்த்துக் கொள்வதில்லை. அப்படியிருந்தும் அவர்கள் சாவதில்லை; மாறாக, நான் முன்னர்ச் சொன்னவாறு நீண்டநாள் வாழ்கிறார்கள். இதுவோர் அற்புதமன்றோ? நாள் தோறும் அவர்கள் பட்டினியிருக்கிறார்கள்; நீரைத்தவிர வேறு எதனையும் உட்கொள்வதில்லை. புதிதாக யாரேனும் தங்கள் கூட்டத்தில் சேர விரும்பினால், அத்தகையவர்களைத் தங்களோடு

சில நாள் வைத்துச் சோதனை செய்து பார்க்கிறார்கள். அவர்களுக்குத் தங்களுடைய மடத்தில் இடங்கொடுத்து அவர்கள் பின்பற்ற வேண்டிய நெறியையும் சொல்லித் தருகிறார்கள். பின்னர் அவர்களைச் சோதனைசெய்து பார்க்கும் காலம் வந்ததும், நான் முன்போரிடத்திற் சொன்ன தேவதாசிகளை வரவழைத்து, தங்களுடைய ஆடல் பாடல் அழகு ஆகியவற்றால் அவர்களை மயக்குமாறு பணிக்கிறார்கள். தேவதாசிகளின் பசப்பு நயத்தில் அவர்கள் மயங்காமல் இருந்தால் அவர்களைத் தங்களோடு வைத்துக் கொள்கிறார்கள்; இல்லையென்றால் அவர்களைத் துரத்திவிடுகிறார்கள். ஆசையை அடக்க இயலாதவர்களைத் தங்களுடைய கூட்டத்தில் வைத்துக் கொள்வதற்கு அவர்கள் விரும்புவதில்லை.

உருவ வழிபாட்டில் அந்தக் கொடிய வஞ்சகர்களுக்குள்ள ஆர்வத்தைப் பார்த்தால் அவர்களைச் சைத்தான் குட்டிகள் என்றுதான் சொல்லவேண்டும். அவர்கள் பிணங்களைச் சுட்டெரிப்பதற்குக் கூறும் காரணம் என்னவென்று தெரியுமா? பிணத்தைத் தீயிலிட்டுச் சுடாவிட்டால், அதில் புழுக்கள் உற்பத்தியாகும். அந்தப் புழுக்கள் உடலைத் தின்று உயிர்வாழ்பவை. உடல் முழுவதும் தின்ற பிறகு அவற்றிற்கு உணவு இல்லாமற் போகும். அப்போது அவை பட்டினியாற் சாக நேரிடும். அதனால் அந்த உடலில் குடிகொண்டிருந்த ஆன்மா அந்தப் பாவத்தை ஏற்றுக் கொண்டு அதற்குரிய தண்டனையையும் பெறவேண்டியிருக்கும். அதனால் அவர்கள் பிணத்தைக் கொளுத்திவிடுகிறார்கள்.

மா'பார் மாகாணத்து மக்களுள் பெரும்பாலாருடைய வாழ்க்கை முறையையும் பழக்க வழக்கங்களையும் நான் இதுவரையிலும் எடுத்துரைத்தேன். ஆனால், மா'பாரைப் பற்றிச் சொல்ல வேண்டிய செய்திகள் இன்னும் இருக்கின்றன. அங்குள்ள கெயில் என்னும் நகரத்தைப் பற்றி இப்போது சொல்லப் போகிறேன்.

—*Op. cit.* Bk. iii, ch. xx.

## ஊ. கெயில் (காயல்)

கெயில்[33] (காயல்) என்பது ஒரு வீறார்ந்த பெரிய நகரம். அது உடன்பிறந்த அரசர் ஐவருள் மூத்தவனுக்குச் சொந்தமானது.

[33] காயல்: இது திருநெல்வேலி மாவட்டத்தில் தண்பொருநையாறு கடலிற் கலக்கும் இடத்தில் இருக்கிறது. இந்தப் பட்டினம் சோழ மண்டலத்தில் பண்டைக் காலந் தொட்டே மிகவும் புகழ்பெற்ற துறைமுகமாய்

அந்த அரசன் பெயர் ஆஷர்[34] என்பதாகும். ஹார்மஸ், கிஸ், ஏடன் முதலிய அரேபிய நாடுகள் அனைத்திலுமிருந்து—அதாவது மேலை நாடுகளிலிருந்து—குதிரை முதலிய பல்வேறு வாணிகப் பண்டங்களையும் ஏற்றிக்கொண்டு வருகின்ற கலங்கள் எல்லாமே இந்தத் துறைமுகத்திற்கு வருகின்றன. அதனால், அந்த நகரைச் சுற்றிலுமுள்ள ஊர்களிலிருந்து எண்ணற்ற மக்கள் அங்குவந்து கூடுகிறார்கள். எனவே, அந்த நகரில் பெரு வாணிகம் நடைபெறுகிறது.

அரசனுடைய கருவூலத்தில் கணக்கற்ற செல்வங்கள் குவிந்து கிடக்கின்றன. அரசன் விலையுயர்ந்த பலவகை அணிமணிகளைத் தன் உடலில் பூட்டிக்கொண்டிருக்கிறான். அவன் அரசர்க்குரிய ஆடம்பரத்துடன் வாழ்கிறான். நீதிநெறி தவறாது ஆட்சி செய்கிறான். வணிகர்களையும் வெளிநாட்டினரையும் வரவேற்று அவர்களுக்குத் தேவையான உதவிகளெல்லாம் செய்கிறான். அதனால், அந்த நகரத்திற்கு வருவதை அவர்கள் பெரிதும் விரும்புகிறார்கள்.

அரசனுக்கு 300 மனைவிகள் இருக்கிறார்கள். இங்கெல்லாம் ஒருவனுடைய மனைவிகளின் தொகை அதிகமாக அதிகமாகப் பொது மக்களிடையில் அவனுக்கிருக்கிற மதிப்பும் உயர்ந்து கொண்டே போகிறது.

இந்தப் பெருமாகாணமான மா'பாரில் ஐந்து அரசர்கள் இருக்கின்றார்கள் என்றும், அவர்கள் ஐவரும் உடன்பிறந்தவர்கள் —அதாவது, அவர்கள் அனைவரும் ஒரே தகப்பனுக்குப் பிறந்த ஒருதாய் வயிற்று மக்கள்—என்றும் நான்முன்பே கூறியுள்ளேன். இப்போது நம் கவனத்திலிருக்கும் அரசன் அந்த ஐவருள் ஒருவன். அவர்களுடைய அன்னை இன்னும் உயிரோடிருக்கிறாள். அவர்கள் ஒருவரோடொருவர் மாறுபட்டுப் போர் செய்யத் தொடங்கினால், அவர்களுடைய தாய் அவர்களிடையிற் பாய்ந்து அவர்கள் பொருவதைத் தடுத்துவிடுகிறாள். அப்படியும் அவர்கள் அடங்காமல் போர்செய்ய முனைந்தால், அவள் ஒரு கத்தியை

---

இருந்தது என்றும், அங்கே கடல்வழிப் பயணம் பற்றிய நூலாசிரியர். பலர் வாழ்ந்தனர் என்றும் சுலைமான் அல்—மஹரி (பதினைன்காம் நூற்றாண்டின் முதற்பாதி) எழுதிவைத்துள்ளார். JA: Jul-Sep. 1922, pp. 93, n. 2.

[34] ஆஷர் என்னும் சொல் குலசேகரனை—அதாவது, 'எல்லா நாடுகளையும் வென்ற' மாறவர்மன் குலசேகரனைக் குறிக்கிறது என்று கருதலாம். (கி.பி. 1268—1308).

எடுத்து, அதைக்கொண்டு அவர்களுக்குப் பாலூட்டிய தன் மார்பகத்தைக் கொய்தும் அவர்களைச் சுமந்த தன் வயிற்றைக் கிழித்தும் அவர்கள் முன்னிலையிலேயே உயிர்விடப் போவதாய் அச்சுறுத்துவாள். இவ்வாறு எத்தனையோ முறை அவர்கள் ஒருவரோடொருவர் பொருதுகொள்வதை அவள் தடுத்திருக்கிறாள். ஆனால், அவள் செத்துப் போனால், அந்த ஐவரும் ஒருவரோடொருவர் போரிட்டு மடியப்போவது உறுதி.

**வெற்றிலை**

இந்த நகரத்தில் வாழும் மக்கள் மட்டுமன்றி இந்திய நாட்டில் வாழும் மக்கள் அனைவருமே தெம்புல் என்னும் ஒருவகை இலையை எப்போதும் வாயில் வைத்துக் கொண்டே இருக்கிறார்கள். அது அவர்களுக்கு ஏற்படும் ஏதோ ஒரு வேட்கையைத் தணிப்பதற்கு உதவுகிறது. ஆனால் அந்தப் பழக்கம் அவர்களிடம் நிலைத்து நின்றுவிட்டது. அந்த இலையை அவர்கள் இடையறாது மென்றுகொண்டும், அதனால் ஊறுகின்ற எச்சிலை உமிழ்ந்து கொண்டும் இருக்கிறார்கள். அரசரும் பிரபுக்களும் ஏனைய மனிதர்களும் அந்த இலையோடு கருப்பூரம் முதலிய நறுமணப் பொருள்களையும் கிளிஞ்சல் சுண்ணும்பையும் கலந்து வாயிற் போட்டுக் கொள்கிறார்கள். இத்தப் பழக்கம் உடம்புக்கு மிகவும் நல்லதென்று அவர்கள் சொல்கிறார்கள். ஒருவனை மிகவும் இழிவாக நடத்த வேண்டுமென்று இன்னொருவன் விரும்பினால், அவன் முகத்தில் தன் வாயில் இருக்கும் இலையையோ அதனுடைய சாற்றையோ துப்பிவிடுவான். அவ்வாறு அவமானப் படுத்தப் பட்டவன் நேராக அரசனிடம் ஓடி, தனக்கு நேர்ந்த மானக் கேட்டை எடுத்துச் சொல்லி, அவ்வாறு அவமானப்படுதியவனோடு சண்டையிடுவதற்கு அரசனுடைய இசைவைக் கேட்பான். அரசன் தன்னுடைய இசைவைத் தருவதோடு அவர்களுக்குத் தேவையான போர்க்கருவிகளையும் தருகின்றான். ஆதாவது, ஆளுக்கொரு வாளையும் கேடயத்தையும் தருகிறான். சண்டையைக் காண்பதற்கு மக்கள் திரண்டுவிடுகிறார்கள். சண்டை செய்யும் இருவரும் தம்முள் ஒருவன் இறக்கும் வரையில் சண்டையிடுகின்றனர். சண்டையிடும்போது அவர்கள் வாளின் முனையைப் பயன்படுத்தக்கூடாது. அது அரசன் ஆணை.

—*Op. cit* Bk. iii ch, xxxi

## (எ) கொயிலும்

மா'பாரிலிருந்து தென்மேற்கே 500 மைல் பயணஞ் செய்தால் கொயிலும்[35] என்னும் இராஜ்யத்தை அடையலாம். அங்குள்ள

[35] இன்றைய கொல்லம்.

மக்கள் உருவவழிபாடு செய்பவர்கள். ஆனல் கிறிஸ்துவர்களும் யூதர்களும் சிலர் அங்கே இருக்கின்றனர். உள்ளூர் மக்கள் தங்களுக்குச் சொந்தமான ஒரு மொழியைப் பேசுகிருர்கள். அவர்களுக்கு ஓர் அரசன் இருக்கிருன். அந்த ராஜ்யம் வேறெந்த ராஜ்யத்திற்கும் திறை செலுத்தாத சுதந்திர ராஜ்யமாய் இருக்கிறது.

இங்கு பிரேசில் மரம் அதிகமாய் வளர்கிறது. அது விளைகிற ஊரின்பெயரோடு சேர்த்து அதனை பிரேசில் கொயிலுமின் என்று சொல்கிருர்கள். அது மிகவும் உயரமான மரம்.[36] குட்சிங்கரும் (Goodsinger) இங்கே வளர்கிறது. அது வளர்கிற நாட்டின் பெயரையும் சேர்த்து அதனையும் குட்சிங்கர்க் கொயிலுமின் என்று சொல்கிருர்கள். இந்த ராஜ்யம் முழுவதிலுமே மிளகு ஏராளமாய் விளைகிறது. மிளகு மரம் தானகவே வளர்கின்ற மரமன்று. அதனை மக்கள் பயிர்செய்கிருர்கள். அதனை ஒழுங்காக நட்டு நீர் பாய்ச்சி வளர்க்கிருர்கள். மே, ஜூன், ஜூலை மாதங்களில் மிளகை அறுவடை செய்கிருர்கள்.

இங்கு மிக உயர்தரமான அவுரியும் மிகுதியாய் விளைகிறது. அது ஒரு செடி. அதனை நிலத்திலிருந்து பிடுங்கி, வேரைக் களைந்துவிட்டு, ஒரு பெரிய தொட்டியில் போட்டு, அதன்மீது நீரை ஊற்றி, செடி முழுவதும் அழுகிப் போகும்வரையிலும் அப்படியே விட்டு விடுகிருர்கள். பின்னர் அந்தத் திரவத்தை வெயிலில் வைக்கிருர்கள். இங்கு வெயில் மிகவும் கடுமையாய் இருப்பதால்[37] அந்தத் திரவரம் கொதித்துக் கட்டியாகி விடுகிறது. பின்னர் அதனை நன்ருன்கு அவுன்ஸ் எடையுள்ள துண்டுகளாக வெட்டி, நம் நாடு போன்ற வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிருர்கள்.[38] அதுவே நாம் காணும் அவுரி. அந்த ராஜ்யத்தில் அடிக்கின்ற

**அவுரி**

[36] Cf.I bn Battuta on the route from Calicut to Quilon.

[37] திரவம் புளித்தலால் வெப்பம் உண்டாகிறது. ஞாயிற்றுக்கும் இந்த வெப்பத்திற்கும் தொடர்பில்லை.

[38] 'அவுரிச் சாயத்தை உற்பத்தி செய்யும் முறையைப் பற்றி மார்க்கபோலோ கூறியுள்ள செய்தி மொட்டை மரத்தைப்போல விவரமற்றதாயிருக்கிறது. அதனல், அது விசித்திரமாகவும் இருக்கிறது. ஆனல், புளிக்கவைத்து அவுரிச் சாயம் செய்யும் முறையின் முக்கிய இயல்புகள் அவர் குறிப்பில் இருக்கின்றன......இப்போது கொல்லத்தில் அவுரிச் சாயம் செய்வாரும் இல்லை; அது வெளிநாட்டுக்கு ஏற்றுமதியாவதும் இல்லை. ஆனல், இன்றும் சம்பங்கிமரச் சாயமும் இஞ்சியும் மிளகும் அங்கிருந்து மிகச் சிறிய அளவில் ஏற்றுமதியாகின்றன.'—யூல்.

வெயிலின் கடுமையைத் தாங்குவது அரிது. அங்கு ஓடுகின்ற ஆறுகளுள் ஒன்றில் ஒரு முட்டையைப் போட்டுவிட்டுச் சிறு தொலைவு போவதற்குள் அந்த முட்டை வெந்துபோகும். ஞாயிற்றின் வெப்பம் அவ்வளவு அதிகமாயிருக்கிறது.

மன்ஜியிலிருந்தும் அரேபியாவிலிருந்தும் லெவான்டிலிருந்தும் தங்களுடைய பண்டங்களைக் கலத்தில் ஏற்றிக்கொண்டு இங்கு வருகின்ற வணிகர்கள் தங்களுடைய சரக்குகளை இங்கே விற்பனை செய்வதிலும் இங்கிருந்து சரக்குகளை வாங்கிக்கொண்டு போவதிலும் பெருத்த லாபம் அடைகிறார்கள்.

**விலங்குகளும் பறவைகளும்**

இந்த ராஜ்யத்தில் இருக்கின்ற விலங்குகள் பல உலகின் பிற பகுதிகளில் வாழ்கின்ற விலங்குகளிலிருந்து மிகவும் வேறு படுகின்றன. வேறு வண்ணமே கலவாது முழுதும் கறுப்பு நிறமாகவே உள்ள சிங்கம் இந்த நாட்டில் இருக்கின்றது. இங்குள்ள கிளிகளும் பலவகை ஆனவை. சில பனித்திரள் போன்ற வெள்ளை உடலையும் சிவந்த அலகையும் சிவந்த கால்களையும் உடையவை; சில சிவப்பு நிறமுள்ளவை. பச்சை நிறமுடைய கிளிகளும் இங்கே இருக்கின்றன. இங்கே மிகமிகச் சிறிய கிளிகள் சில இருக்கின்றன. அவை மிகவும் அழகானவை. மொத்தத்தில் இந்த நாட்டுக் கிளிகள் பார்ப்பதற்கு மிகவும் அழகாகவும் கவர்ச்சியாகவும் இருக்கின்றன. இங்கே மயில்களும் இருக்கின்றன. அவையும் மிக அழகானவை. நம் நாட்டு மயில்களைக் காட்டிலும் அவை பெரியனவாகவும் அவற்றினின்று ஓரளவு வேறுபட்டவையாகவும் இருக்கின்றன. இங்கே இருக்கின்ற சேவல்களுங் கோழிகளுங்கூட நம் நாட்டுச் சேவல்கள் கோழிகள் ஆகியவற்றிலிருந்து வேறுபட்டனவாய் இருக்கின்றன. இனியும் நான் என்ன சொல்லக் கிடக்கின்றது? சுருக்கமாகச் சொன்னால், இங்கிருக்கின்ற விலங்கு பறவை ஆகிய அனைத்துமே நம் நாட்டிலுள்ள விலங்கு பறவை ஆகியவற்றைக்காட்டிலும் அழகானவை, உயர்ந்தவை, வேறுபட்டவை. இங்கிருக்கிற பறவைகள் விலங்குகள் ஆகியவற்றைப் போலவே இங்கே கிடைக்கின்ற கனிகளும் வேறுபட்டவை. இந்த வேறுபாடுகளுக்கெல்லாம் காரணமாய் இருப்பது இங்கு அடிக்கின்ற மிகக் கடுமையான வெயிலே.

இந்த ராஜ்யத்தில் நெல்லைத் தவிர வேறு தானியம் இல்லை. பனஞ் சர்க்கரையிலிருந்து மதுவைச் செய்கிறார்கள். அது ஒரு நல்ல மது; வெகு விரைவில் போதையூட்டுகிறது. மனித

வாழ்க்கைக்குத் தேவையான வேறு பொருள்கள் எல்லாமே இங்கு ஏராளமாகவும் மலிவாகவும் கிடைக்கின்றன. இங்கே சிறந்த சோதிடர்களும் மருத்துவர்களும் இருக்கிறார்கள். ஆடவர் மகளிர் ஆகிய அனைவருமே இங்கே கறுப்பு நிறமுடையவர்களாய் இருக்கின்றனர். அவர்கள் ஒரு மெல்லிய துணியை இடையிற் கட்டிக் கொள்கிறார்கள். மற்றப்படி அவர்கள் நிர்வாணமாகவே இருக்கிறார்கள். உடலுறவை அவர்கள் பாவம் என்று கருது வதேயில்லை. அவர்கள் இருதிசைப் பெற்றோரையும் பொதுவாகக் கொண்ட உடன் பிறந்தாரின் மக்களை மணந்து கொள்கிறார்கள். அதாவது, ஒருவன் தன்னுடைய அத்தை மகளையோ, தாய் மாமன் மகளையோ பெரியப்பன் மகளையோ சிற்றப்பன் மகளையோ மணந்து கொள்வது தவறன்று. ஒருவன் இறந்து போனால் அவனுடைய மனைவியை அவனுடைய சகோதரன் மணந்து கொள்கிறான். இந்திய மக்கள் எல்லாரிடமும் இந்தப் பழக்கம் காணப்படுகிறது.

இந்த ராஜ்யத்தைப் பற்றிச் சொல்ல வேண்டிய செய்தி வேறொன்றும் இல்லை. எனவே, இனிக் கொமரி நாட்டைப் பற்றி உங்களுக்குச் சொல்லப் போகிறேன்.

—*Op. cit.* Bk. iii, Ch, xxii.

## ஏ. கொமரி

கொமரி[39] இந்தியாவில் உள்ள ஒருநாடு. அங்கே வடமீன் ஓரளவு தெரிகிறது. சிறிய ஜாவாவிலிருந்து இங்கு வந்து சேரும் வரையிலும் அந்த நட்சத்திரம் எங்களுக்குத் தெரியவில்லை. அதனைப் பார்க்க வேண்டுமானால், கடலுக்குள் 30 மைல் செல்ல வேண்டும். அங்கிருந்து பார்த்தால் அது நீருக்கு மேல் சுமார் ஒரு முழ உயரத்தில் தெரிகிறது. கொமரி பயிரிடப்படாத காட்டியல்பான நாடு. அங்கே பலவகைப்பட்ட விலங்குகள் இருக்கின்றன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை குரங்குகளாகும். அவை விசித்திரமான தோற்றமுடையவை; அவற்றைப் பார்த்தால் மனிதர்களோ என்னும் எண்ணம் தோன்றும். அங்கு காட்பால்களும்[40] இருக்கின்றன. அவற்றின் வகைமை நமக்கு வியப்பூட்டுகிறது. கரடி, புள்ளிப்புலி, சிங்கம் ஆகிய விலங்குகளும் அங்கு ஏராளமாய் இருக்கின்றன.

—*Op. cit.* Bk. iii, Ch. xxiii.

39 குமரிமுனை.

40 'ஒருவகை மனிதக் குரங்கு'—Yule, citing Spanish Dictionaries.

## ஐ. எலி ராஜ்யம்

எலி[41] ராஜ்யம் கொமரியிலிருந்து மேற்கே சுமார் 300 மைல் தொலைவில் இருக்கிறது. அந்த ராஜ்யத்து மக்களும் உருவ வழிபாடு செய்பவர்களே. அவர்களுக்கு ஓர் அரசன் இருக்கிறான். அந்த ராஜ்யம் வேறு ஏந்த ராஜ்யத்திற்கும் திறை செலுத்தாத சுதந்திரமான ராஜ்யம். அங்கு வழங்கும் மொழி நாம் இது வரையில் கேட்டறியாத ஒன்று. இப்போது நான் அந்த ராஜ்யத்து மக்களின் பழக்க வழக்கங்கள் விளைபொருள்கள் முதலியவற்றைப் பற்றிச் சொல்லப் போகிறேன். இப்போது நாம் நமது நாட்டிலிருந்து மிகவும் வேறுபட்ட நாடுகளைத் தாண்டி வந்து விட்டோம் எனவே, எலி ராஜ்யத்தை பற்றிய செய்திகளை நீங்கள் ஓரளவு நன்றாகப் புரிந்துகொள்வீர்கள்.

எலி ராஜ்யத்தில் நல்ல துறைமுகம் ஒன்றும் இல்லை. ஆனால், அங்கு ஆழமும் அகலமும் உடைய பெரிய நதிகள் பல இருக்கின்றன, அவற்றின் கழிமுகங்கள் கப்பல் போக்குவரவுக்கு உதவுகின்றன. மிளகும் இஞ்சியும் ஏனைய நறுமணப் பொருள்களும் அங்கே மிகுதியாய் விளைகின்றன. அரசனிடம் செல்வம் அதிகமாயிருக்கிறது. ஆனால் அவனுடைய படை அவ்வளவாக வலிமையுடையதன்று. எனினும், அந்த ராஜ்யம் மிகவும் வலிமையான இயற்கையரண் பெற்றிருப்பதால் அதனைப் பகைவர் தாக்க முடியாது. எனவே, பகைவரால் ஏற்படக்கூடிய அச்சம் அரசனுக்கு இல்லை.

வேறு துறைமுகத்திற்குப் போகவேண்டிய கலம் எலி ராஜ்யத்தின் கழிமுகம் ஒன்றுக்குள் புகுந்து நங்கூரம் பாய்ச்சினால், அங்குள்ளவர்கள் அந்தக் கலத்தைக் கைப்பற்றி அதிலுள்ள பண்டங்களைச் சூறையாடுகிறார்கள். 'வேறெங்கோ போய்க்கொண்டிருந்த இந்தக் கலத்தைக் கடவுள் இங்கே கொண்டுவந்திருக்கிறார். அதனால் கலத்திலுள்ள பண்டங்கள் எல்லாம் எங்களுக்கே உரியவை' என்று அவர்கள் சொல்கிறார்கள். அவ்வாறு கொள்ளையடிப்பது பாவம் என்று அவர்கள் கருதுவதில்லை. இந்தத் தீய பழக்கம் இங்குமட்டும் உள்ளதன்று, இந்திய மாகாணங்கள் அனைத்திலுமே இருக்கிறது. வேறெந்தத் துறைமுகத்துக்கோ போய்க்கொண்டிருக்கும் கலம் வாய்ப்பில்லாத காற்றால் தாக்குண்டு, இன்னொரு துறைமுகத்திற்கு வந்தால், அங்குள்ள மக்கள் அந்தக் கலத்தைக் கொள்ளையடிக்

[41] Mount D'Ely; of Ibn Battuta on Hill. (ஏழில் என்னும் மலை—மொழி பெயர்ப்பாளர்).

காமல் விடமாட்டார்கள்.[42] ஆனால், புறப்படும்போதே இன்ன துறைமுகத்திற்குப் போகவேண்டும் என்னும் நோக்கத்துடன் பயணஞ் செய்கின்ற கலம் அந்தத் துறைமுகத்திற்கு வந்து சேர்ந்ததும், அங்குள்ள மக்கள் அதனை மரியாதையுடன் வரவேற்று, அதற்குத் தேவையான காப்பையும் அளிக்கிறார்கள். மன்ஜி[43] முதலிய நாடுகளிலிருந்து வேனிற் காலத்தில் இங்கு வருகின்ற கப்பல்கள் ஏழெட்டு நாட்களுக்குள் இறக்கவேண்டிய சரக்குகளை இறக்கிவிட்டு, ஏற்ற வேண்டிய சரக்குகளை ஏற்றிக் கொண்டு, எவ்வளவு விரைவில் போகமுடியுமோ அவ்வளவு விரைவில் போய்விடுகின்றன. அதற்குக் காரணம் இங்கு நல்ல துறைமுகம் இல்லாததே. ஆற்றுக் கழிமுகத்தில்தான் கப்பல் நிற்கவேண்டும். அங்கு நீரடி மணல்திடல்கள் இருக்கின்றன. அதனால் அதனைத் தங்குதுறையாகத்தான் பயன்படுத்தலாம். ஆனால், பிற நாடுகளிலிருந்து இங்கு வருகின்ற கப்பல்கள் அஞ்சுகின்ற அளவுக்கு மன்ஜி நாட்டுக் கப்பல்கள் அஞ்சுவதில்லை. மரத்தால் செய்யப்பட்ட அவற்றின் நங்கூரங்கள் மிகவும் பெரியவை. கடுமையான காற்றையும் கடல் கொந்தளிப்பையும் தாங்கிக்கொள்ளும் ஆற்றல் அவற்றிற்கு இருக்கிறது.

எலி ராஜ்யத்தில் சிங்கம் முதலிய காட்டுவிலங்குகளும் பறவைகளும் ஏராளமாய் இருக்கின்றன.

—*Op. cit.* Bk. iii. ch. xxiv.

## ஒ. மெலிபார் (மலபார்)

மேற்கேயிருக்கிற மெலிபார் ஒரு பெரிய ராஜ்யம். அங்கு வாழும் மக்கள் உருவ வழிபாடு செய்பவர்கள். அவர்களுக்கென்று ஒரு தனி மொழி இருக்கிறது. மெலிபார் இராஜ்யத்தின் அரசன் யாருக்கும் திறை செலுத்துவதில்லை.

இந்நாட்டில் வடமீன் இன்னும் சிறிது நன்றாய்த் தெரிகிறது. அது நீருக்குமேல் இரண்டு முழ உயரத்தில் தெரிகிறது. இந்த ராஜ்யத்திலிருந்தும் இதற்கு அண்மையிலுள்ள கடற் கொள்ளை· கொஜூரத் இராஜ்யத்திலிருந்தும் ஆண்டு தோறும் நூறுக்கும் அதிகமான கொள்ளைக் கப்பல்கள் கடல்மீது செல்கின்றன. கடற்கொள்ளைக்காரர்கள்

[42] இந்தப் பழக்கம் கிழக்குக் கடற்கரையில் இருந்தது என்பதை கணபதியினுடைய மோட்டுப் பல்லிப்பொறிப்பு (கி.பி. 1244) எடுத்துரைக்கிறது.

[43] தென் சீனு.

தங்களுடைய மனைவி மக்களையும் தங்களோடு அழைத்துக் கொண்டுபோய் வேனிற்காலம் முழுவதையும் கடலிலேயே கழித்து விடுகிறார்கள். இருபது முப்பது கொள்ளைக் கப்பல்கள் ஒன்று சேர்ந்து கடலின் ஒரு பகுதியை வளைத்துக் கொள்கின்றன. அதாவது, கப்பல்கள் வழக்கமாய் வருகிற வழியில் தடுப்பு வேலி ஒன்றனை அமைத்தது போல, ஐந்தாறு மைலுக்கு ஒரு கப்பல் வீதம் இருபது முப்பது கப்பல்கள் நின்றுகொள்கின்றன. இவ்வாறு கடற் பரப்பில் சுமார் நூறு மைல் சுற்றளவுள்ள இடத்தை அந்தக் கப்பல்கள் வளைத்துக் கொள்கின்றன. அதனால் அந்த வழியாக வருகின்ற வாணிகக் கப்பல் எதுவுமே அந்தக் கொள்ளைக்காரர்களிடமிருந்து தப்பமுடியாது. ஏதாவது ஒரு கப்பல் வருவதைக் கொள்ளைக்கூட்டத்தைச் சேர்ந்த ஒரு கப்பல் பார்த்துவிட்டால், உடனே அது நெருப்பாலோ புகையாலோ சைகை காட்டிவிடுகிறது. உடனே ஏனைய கொள்ளைக் கப்பல்கள் அங்குவந்து சேர்ந்துவிடுகின்றன. எல்லாமாகச் சேர்ந்து அந்த வாணிகக் கப்பலைச் சூழ்ந்து கொள்ளையடிக்கின்றன. அதன் பின், 'உங்களை உயிரோடு விட்டு விடுகிறோம். நீங்கள்போய் இன்னும் அதிகமான பொருளைச் சேர்த்துக் கொண்டு வாருங்கள். அவற்றையும் நாங்கள் பறித்துக் கொள்கிறோம்' என்று பொருளையிழந்த வணிகர்களிடம் கொள்ளைக்காரர் சொல்லியனுப்புகின்றனர். ஆனால் வணிகர்கள் இப்போதெல்லாம் கடற் கொள்ளைக்காரர்களிடத்தில் எளிதில் அகப்பட்டுக் கொள்வதில்லை. அவர்கள் தங்களுடன் நிறைய ஆட்களை அழைத்துக்கொண்டும் போதுமான போர்க் கருவிகளை எடுத்துக்கொண்டும் மிகப்பெரிய கப்பல்களில் வருகிறார்கள். அப்படியிருந்தும் சில சமயங்களில் அவர்கள் கொள்ளைக்காரர்களிடத்தில் சிக்கித் தங்கள் பொருள்களை இழக்கிறார்கள்[44].

இந்த ராஜ்யத்தில் ஏராளமான மிளகும் இஞ்சியும் இலவங்கமும் தென்னையும் குறும்புறுவும் உற்பத்தியாகின்றன. மிகுந்த அழகும் மென்மையும் வாய்ந்த பருத்தி உற்பத்தியாகும் நூல் துணிகளும் இங்கு உற்பத்தியாகின்றன. பொருள்கள் கீழை நாடுகளிலிருந்து இங்கு வரும் கப்பல்கள் தாமிரத்தை அடிச்சுமையாக ஏற்றி வருகின்றன. மேலும், அந்தக் கப்பல்கள் பொற்சரிகை போட்ட பட்டாடைகளையும், பொன் வெள்ளி முதலிய உலோகங்களையும், இங்குள்ள

[44] மலபாரின் வடபகுதியிலும், கனராவிலும், கொங்கணத்திலும் பண்டைக் காலத்திலிருந்து அண்மைக்காலம் வரையிலும் கடற்கொள்ளைக் காரர் மிகுதியாய் இருந்தனர்......இபன் பதூதா அவர்களிடம் மாட்டிக் கொண்டு, தம் ஆடைகள் உட்பட எல்லாப் பொருள்களையும் இழந்தார்—யூல்.

மக்கள் விரும்புகின்ற இலாமிச்சை கிராம்பு முதலிய நறுமணப் பொருள்களையும் ஏற்றிக்கொண்டு வந்து அவற்றை இங்கே கிடைக்கிற பொருள்களுக்கு மாற்றிக்கொள்கின்றன.

இந்த ராஜ்யத்திற்குப் பல்வேறு நாடுகளிலிருந்தும் கப்பல்கள் வருகின்றன. முக்கியமாக, மன்ஜி என்னும் பெரிய மாகாணத்திலிருந்து அவை அதிகமாய் வருகின்றன. மட்டரக நறுமணப் பொருள்கள் இங்கிருந்து மன்ஜிக்கும் மேலைநாடு களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அந்தச் சரக்கை ஏடனுக்கு எடுத்துச்செல்கின்ற வணிகர்கள் அதனை அங்கிருந்து அலக்சாண்டரியாவுக்கு அனுப்புகிறார்கள். ஆனால், இங்கிருந்து மேலைநாடுகளுக்குச் செல்கின்ற கலங்களின் தொகை கீழைநாடு களுக்குச் செல்லும் கலங்களின் தொகையில் பத்தில் ஒரு பங்கும் இருக்காது. இந்தக் குறிப்பிடத்தக்க செய்தியை நான் முன்பே சொல்லியிருக்கிறேன்.

மெலிபாரைப் பற்றி உங்களுக்குச் சொல்லிவிட்டேன். இனி கொஜராத்தைப் பற்றிச் சொல்லப்போகிறேன். இந்த ராஜ்யங் களைப் பற்றி நான் சொல்லும்போது, அவற்றின் தலைநகரங் களைப் பற்றியே சொல்கிறேன். அவற்றிலுள்ள பிற நகரங் களைப் பற்றி நான் சொல்வதேயில்லை. அவற்றைப் பற்றிய செய்திகளையும் சொல்லத் தொடங்கினால் என்னுடைய கதை மிகவும் நீண்டுவிடும்.

—*Travels of Marco Polo*, ed. Yule and Cordier. Book iii . Ch. xxv.

## XXVI. மான்டிகார்விேனோ ஜான் சுமார் கி.பி. 1292-93

மான்டிகார்விேனோவைச் சேர்ந்தவனும், ஜான் என்னும் பெயருடையவனும், சிறுபடித் துறவிக்கூட்டத்துள் ஒருவனும் ஆகிய நான் பாரசீக நாட்டைச் சேர்ந்த டாரிஸ் என்னும் ஊரிலிருந்து கி.பி. 1291ஆம் ஆண்டில் இந்தியாவுக்குப் புறப்பட்டேன். அந்த நாட்டில் நான் 13 மாதம் தங்கியிருந்தேன். அங்கேதான் திருத்தூதர்களுள் ஒருவராகிய புனித தாமசின் கோயில் இருக்கிறது. அந்தப் பகுதியிலுள்ள பல இடங்களுக்குச் சென்று, நான் சுமார் 100 பேரை நம்முடைய மதத்திற் சேர்த்தேன். அப்போது சமய போதகப் பணித்துறையைச் சேர்ந்த நிக்கலஸ் என்னும் துறவி என்னுடன் இருந்தார். அவருடைய சொந்த ஊர் பிஸ்டோயியா என்பதாகும். அவர் என்னுடன் சேர்ந்து சமயப் பணியாற்றிக் கொண்டிருந்த சமயத்தில் இறந்துபோனதால், அவருடைய உடல் நான் மேலே சொன்ன கோயிலில் அடக்கம் செய்யப்பட்டது.

—Yule : *Cathay and the Way Thither*, Vol. iii; First letter of John of Montecorvino, page 45.

### இந்தியாவில் கிறிஸ்துவ மதத்தைப் பரப்புவதற்குள்ள வாய்ப்புகள்

இந்தியாவின் பெரும்பகுதியை நான் சுற்றிப்பார்த்திருக்கிறேன். பிற பகுதிகளைப் பற்றிய செய்திகளைப் பிறர் வாயிலாய்க் கேட்டுத் தெரிந்துவைத்திருக்கிறேன். இங்கு வாழ்கின்ற மக்களுக்குக் கிறிஸ்துவின் நற்செய்தியை எடுத்துச் சொல்வது மிகவும் பயனுடையதாய் இருக்கும் என்பது என் கருத்து. துறவிகள் இங்கு வந்தால் போதும்; மதமாற்றப் பணி

மிகவும் நன்றாக நடைபெறும். ஆனால், இங்கு வருகின்ற துறவிகள் மிகவும் உயர்ந்த குணம் உடையவர்களாய் இருக்க வேண்டும். இந்தப் பகுதிகள் மிகவும் கவர்ச்சியுடையவை. இங்கு நறுமணப் பொருள்களும் விலையுயர்ந்த ரத்தினங்களும் ஏராளமாய்க் கிடைக்கின்றன. ஆனால், நம் நாட்டில் கிடைக்கின்ற கனிகள் இங்குக் கிடைப்பதில்லை. இந்த நாட்டில் குளிர் குறைவாகவும் வெப்பம் மிகுதியாகவும் இருப்பதால், மக்கள் ஏறக்குறைய நிர்வாணமாய் இருக்கிறார்கள். இடையை மட்டும் மூடிக்கொள்கிறார்கள். ஆதலால், தையற் கலையிலும் புதைமிதி (தோலாற் செய்யும் காலணி) செய்யும் தொழிலிலும் வல்லவர்களுடைய பணி இங்கே தேவையில்லை. இங்கே எப்போதுமே வேனிற்காலமாய் இருக்கிறது. குளிர்காலமே இல்லை. இங்கே சுமார் 100 பேரை நான் நம்முடைய மதத்திற் சேர்த்தேன்.

—*Op. cit.* Second letter of John of Montecorvino, p. 57.

சான்தோ கன்கார்டியோவைச் சேர்ந்த பார்த்தலோமியோத் துறவியாரே![1]

தங்கள் உடன்பிறந்தானும் ஸ்போலெடோ மெனன்டிலஸ் என்னும் பெயருடையானும் ஆகிய நான் தங்களுக்கு எழுதுவது யாதெனில்,

தங்களுடைய உடல்நலம் சிறப்பதாக! தங்களுடைய கிறிஸ்துபோதம் வளர்வதாக!

அறிவியல் துறையில் தங்களுக்கு இருக்கின்ற பேரார்வத்தை நான் அறிவேன். தாங்கள் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினாலும் தங்களுடைய அறிவை மேலும் மேலும் பெருக்கிக் கொள்ளவேண்டும் என்பதிலும், முக்கியமாக, புதுப்புதுச் செய்திகளை அறிந்துகொள்ளவேண்டும் என்பதிலும் தங்களுக்குள்ள விருப்பம் எனக்குத் தெரியும். குறிப்பிட்ட துறைகள் சிலவற்றில் மட்டுமன்றி எல்லாத் துறைகளிலும் கிடைக்கக் கூடிய செய்திகளைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்னும் ஆர்வம் தங்களுக்கு உண்டு என்பது நான் அறிந்ததே. அதனால் தான், இந்தக் கடிதத்தை நான் தங்களுக்கு அனுப்புகிறேன். இந்தக் கடிதத்தை எழுதியவர் சிறுபடித் துறவிகளுள் ஒருவர். அவர் இந்தியாவில் இருந்தபோது அதனை எழுதினார். இப்போது நான் அனுப்புவது அதன் பிரதியாகும்.

[1] 'டோமினிக்கத் துறவி; பைசாவில் பிறந்தவர்.'—யூல்.

அவர் பிஸ்டோயியாவைச் சேர்ந்த நிக்கலஸ் என்னும் துறவியோடு இந்தியாவில் சுற்றுப்பயணஞ் செய்துகொண்டிருந்தார். அனைத்திந்திய அரசனைக் கண்டுபேசும் நோக்கத்துடன் பயணஞ்செய்து கொண்டிருந்தபோது, நிக்கலஸ் துறவியார் இறந்துபோனார். அப்போது அவருடன் இருந்த துறவியை நான் நேரிற் கண்டு பேசியிருக்கிறேன். அவர்தான் நான் மேலே சொன்ன சிறுபடித் துறவியின் கடிதத்தை என்னிடம் கொடுத்தார். அந்தக் கடிதத்திலுள்ள செய்திகளை அதில் உள்ளவாறே இப்போது நான் என் கையால் எழுதித் தங்களுக்கு அனுப்புகிறேன்.

**தட்பவெப்ப நிலை** 'இந்தியாவின் தட்பவெப்ப நிலையை இப்போது நான் விவரிக்கப் போகிறேன்.

'இந்தியாவில் எப்போதும் வெப்பமாகவே இருக்கிறது. குளிர்காலம் என்பதே அங்கே கிடையாது. எனினும், வெப்பம் அளவுக்கு மீறிய கடுமையாய் இருக்கிறது என்று சொல்ல முடியாது. எப்போதும் அங்கே காற்று வீசிக்கொண்டிருப்பதால் வெப்பத்தின் கடுமை ஓரளவு குறைந்துபோகிறது. அங்கே குளிர்காலமே இல்லாததற்கும் ஒரு காரணம் இருக்கிறது. அதுதான் கிரகங்கள் செல்லும் வீதியில் இந்தியா வகிக்கும் இடம். பகலவன் கன்னிராசிக்குச் செல்லும்போது—அதாவது, ஆகஸ்டு மாதம் 24ஆம் தேதியன்று—அவனுடைய கிரணங்கள் நிலத்தின்மீது செங்குத்தாய் விழுகின்றன. அதனால், நிலத்தின் மீது இருக்கிற பொருள்களின் நிழல் வலப்பக்கத்திலும் விழுவதில்லை, இடப்பக்கத்திலும் விழுவதில்லை. இதனை நான் என் கண்ணுற் பார்த்துக் குறித்துவைத்துக்கொண்டேன். பகலவன் மேட ராசியிற் புகும்பொழுதும்—அதாவது, மார்ச் மாத இறுதியிலும்—இதே நிலையைக் காண்கிறோம். பகலவன் மேட ராசியைத் தாண்டியதும் அவன் வானத்தில் வடக்கு நோக்கிச் செல்கிறான். அதனால், நிழல் தென்பக்கம் சாய்கிறது. இந்த நிலை வேனிற் கதிர்த்திருப்பம் வரையிலும் தொடர்கிறது. அதன்பின் கதிரவன் கன்னிராசியை நோக்கித் திரும்புகிறான். அந்த ராசியைத் தாண்டிய பிறகு நிழல் வடக்கே சாய்கிறது. எனவே, எந்தக் காலத்திலும் கதிரவன் இந்திய நிலப்பரப்பிலிருந்து வெகு தூரம் விலகிச் சென்றுவிடுவதில்லை. அதனால் இந்திய நிலப்பரப்பில் குளிர் மிகுதியாய் இல்லை. அதனால்தான் இரு பருவங்கள் அங்கே இல்லை—அதாவது, அங்குக் குளிர்காலம் இல்லை. இதனை நான் முன்பே சொல்லியுள்ளேன்.

'இனி நான் கண்ட அறிகுறிகளின் அடிப்படையிலும் மேற்கொண்ட நடவடிக்கைகளின் துணையோடும் பகலின் நீளத்தையும் இரவின் நீளத்தையும் அறிந்துகொள்ள முயன்றேன். நான் முன்பு குறிப்பிட்ட இரண்டு சமயங்களிலும்—அதாவது, பகலவன் கதிர்கள் நிலத்தின்மீது செங்குத்தாக விழுகின்ற நாள்களில்—பகலின் நீளம் 15 மணி நேரமாகவும் இரவின் நீளம் 9 மணி நேரமாகவும் இருக்கின்றன. பகலவன் கடகராசியில் இருக்கும்போது பகலின் நீளம் 14 மணிக்கு ஒரு சிறிது குறைவாகவும் இரவின் நீளம் 10 மணிக்கு ஒரு சிறிது—அதாவது, சுமார் 15 நிமிடம்—அதிகமாகவும் இருக்கின்றன. ஆனால், பகலவன் மகரராசியில் இருக்கும்போது—அதாவது, டிசம்பர் மாதத்தில்—பகலின் நீளம் 11 மணியாகவும் இரவின் நீளம் 13 மணியாகவும் இருக்கின்றன. பகலவன் கடகராசியில் இருக்கும் சமயத்தைக் காட்டிலும் மகரராசியில் இருக்கும் சமயத்தில் இந்திய நிலப் பரப்பிலிருந்து சற்று அதிகமான தூரம் தள்ளி இருக்கிறான்.[2]

'அன்றியும், நாம் துருவநட்சத்திரம் என்று சொல்கிற விண்மீன் இந்தியாவில் மிகவும் கீழே இருக்கிறது. அந்த நாட்டில் அது நம் கண்ணுக்குத் தெரிவதே அரிதாய் இருக்கிறது. யாதேனும் ஓர் உயர்ந்த இடத்தில் நின்றுகொண்டு பார்த்திருந்தால், நம்முடைய துருவநட்சத்திரத்திற்கு எதிர்த்திசையில் உள்ள இன்னொரு துருவநட்சத்திரத்தை நான் பார்த்திருக்க இயலும் என்று கருதினேன். அந்த மீனைப் பார்ப்பதற்காக நான் பல முறை முயன்றேன். அப்போதெல்லாம், அதைச் சுற்றி இயங்கிக் கொண்டிருந்த விண்மீன் குழுக்கள் பலவற்றை நான் பார்த்தேன். அவற்றின் இயக்கத்தைக் கவனித்துப் பார்த்தபின், அவையெல்லாம் அந்தத் துருவநட்சத்திரத்திற்கு மிகவும் அண்மையில்தான் இருக்கவேண்டும் என்னும் முடிவுக்கு வந்தேன். ஆனால், வெப்பத்தாலும் காற்றாலும் வளி மண்டலத்தில் ஏற்பட்ட மங்கல் நிலை ஏறக்குறையத் தொடர்ச்சியாகவே இருந்ததால், அந்தப் பக்கத்துத் தொடுவானம் தெளிவாகத் தெரியவில்லை. அன்றியும், அந்தப் பக்கத்து விண்மீன்கள் மிகவும் தாழ்வாக இருந்தன. அதனால், நான் உறுதியாக எதையும் சொல்ல முடியவில்லை. ஆனால், இந்தியா மிகப்பரந்த நாடு. அதனுடைய மேற்பரப்புச் சில இடங்களில் மிகவும் உயர்ந்தும் வேறு சில இடங்களில் அவ்வளவு உயரமில்லாமலும் இருக்கும் என்று நாம் நம்பலாம். என்றால் இயன்ற வரையில்

[2] 'தவறான இந்தக் கூற்றுகளுக்குத் துறவி ஜானன்றி வேறு யாரையும் பொறுப்பாக்க முடியாது'—யூல்.

நான் இந்த விஷயத்தை ஆராய்ந்து பார்த்துவிட்டேன். மேபார் என்று சொல்லப்படுவதும் புனித தாமசின் கோயிலைத் தன்னகத்தே கொண்டதும் ஆகிய மேல் இந்தியாவின் தட்ப வெப்ப நிலையைப் பற்றி நான் கூற வந்தது இவ்வளவுதான்.

## மேல் இந்தியாவின் இயல்புகள்

'மேலே சொன்ன நாட்டின் நிலைமையை இப்போது விவரிக்கப் போகிறேன். இந்த நாட்டின் மக்கள்தொகை அதனுடைய பரப்புக்கு ஏற்றதாய்த்தான் இருக்கிறது. அங்கே நகர்கள் பல இருக்கின்றன. ஆனால், வீடுகள் மிகவும் மோசமாய் இருக்கின்றன. அவைகள் மணல் கலந்த மண்ணால் ஆன சுவர்களையும் தழைவேய்ந்த கூரையையும் உடையவை. அங்கே மிகச் சில குன்றுகளே இருக்கின்றன. சில பகுதிகளில் ஆறுகள் மிகுதியாய் இருக்கின்றன. பிற பகுதிகளில் சில ஆறுகளே உள. நீர் ஊற்றுகள் இல்லையென்றே சொல்லிவிடலாம். ஆனால், கிணறுகள் ஏராளமாய் இருக்கின்றன. பொதுவாக, நிலத்துக்கடியில் இரண்டு மூன்று நாலடி ஆழத்திலேயே நீர் இருக்கிறது. சில இடங்களில் அதற்கும் குறைந்த ஆழத்தில் நீர் இருக்கிறது. அதனால்தான் அத்தனை கிணறுகள் அங்கு வெட்டப்பட்டுள்ளன. கிணற்று நீர் குடிப் பதற்கு அவ்வளவாக ஏற்றதன்று. அது ஓரளவு மென்மை யானது—அதாவது, கனியுப்புச் சத்தற்றது. அதைப் பருகினால் வயிற்றுப் போக்கு உண்டாகிறது. அதனால், அங்கு வாழும் மக்கள் குளங்களை வெட்டியும் குட்டைகளை அகழ்ந்தும் அவற்றில் தேங்கி நிற்கும் மழை நீரைக் குடிக்கிறார்கள். அவர்கள் அதிக மான விலங்குகளை வளர்ப்பதில்லை. அரசர்கள், பெரும் பிரபுக்கள் ஆகியவர்களைத் தவிர ஏனைய மக்களிடம் குதிரைகள் இல்லை. அங்கே ஈ அதிகமாயில்லை; தெள்ளுப்பூச்சி இல்லவேயில்லை.[3] குறிப்பிட்ட பருவங்களில் மட்டுமன்றி ஆண்டு முழுதுமே கனிதரும் மரங்கள் அங்கே இருக்கின்றன. அதனால், அவற்றுள் சிலவற்றில் பிஞ்சுகளையும் சிலவற்றில் காய்களையும் சிலவற்றில் கனிகளையும் ஒரே சமயத்தில் காண்கிறோம். அதுபோலவே, விதைப்பும் அறுவடையும் ஏறக்குறைய எல்லாப் பருவங்களிலும் நடைபெறுகின்றன. அதற்குக் காரணம் அங்கே குளிரேயில்லை என்பதும் எப்போதும் வெப்பமாகவே இருக்கிறது என்பதும் ஆகும்.

[3] 'அப்படியானால் போர்ச்சுகீசியரே அவற்றைக் கொண்டு வந்தனர் போலும்!'—யூல்.

'நறுமணப் பொருள்கள் இங்கே மலிவாய்க் கிடைக்கின்றன. சில மலிவான விலையிலும் சில மிக மலிவான விலையிலும் கிடைக்கின்றன. விலையின் மலிவு நாம் வாங்கும் நறுமணப் பொருளைப் பொறுத்தது. அங்குள்ள மரங்கள் சிலவற்றிலிருந்து சர்க்கரை கிடைக்கிறது, சிலவற்றிலிருந்து தேன் கிடைக்கிறது, சிலவற்றிலிருந்து ஒயினின் சுவை ஓரளவுடைய மதுக் கிடைக்கிறது. அதுதான் அந்த நாட்டு மக்கள் பயன்படுத்தும் மதுபானம். மேலே சொன்ன மூன்று பொருள்களும் அங்கே மிகவும் மலிவாய்க் கிடைக்கின்றன.

'இங்கு மிளகும் விளைகிறது. அது கொடிமுந்திரியைப் போல ஒல்லியாகவும் முடிச்சுகளை உடையதாகவும் இருக்கிறது.

**மிளகு**

உண்மையில், மிளகுக்கொடி கொடிமுந்திரியை எல்லா வகையிலும் ஒத்திருக்கிறது என்று சொல்லலாம். கொடிமுந்திரியைக் காட்டிலும் அது ஒல்லியாய் இருக்கிறது என்பதும் அதனை ஓரிடத்திலிருந்து பெயர்த்து இன்னொரிடத்தில் நடலாம் என்பதுமே அவற்றுக்குள்ள வேறுபாடாகும்.

இஞ்சி நாணலைப் போன்ற ஒரு தாவரம். பிரம்பின் வேரைப் போல அதனைத் தோண்டியெடுத்து வேறோரிடத்தில் நடலாம்.

**இஞ்சி**

ஆனல், இந்த நாட்டில் வளர்கின்ற பிரம்பு, மரத்தைப் போலப் பருமனய் இருக்கிறது. சில இடங்களில் அது ஒரு முழமோ அதற்கும் அதிகமாகவோ சுற்றளவு உடையதாய் இருக்கிறது. அதன் கிளைகள் ஒல்லியாகவும் முள் நிறைந்தவையாகவும் இருக்கின்றன. அதன் இலைகள் சிறியவை.

'பிரேசில் மரம் ஒல்லியாகவும் உயரமாகவும் முள் நிறைந்ததாகவும் இருக்கிறது. பார்ப்பதற்கு அது முழுச்சிவப்பாய்த் தெரிகிறது. அதனுடைய இலைகள் பெரணியைப் போன்றவை.

**பெர்சி**

இந்தியாவில் வளர்கின்ற உட்பருப்புடைய ஒற்றை விதை மரங்களின் (தென்னை) 'கிளைகளும்' 'இலைகளும்' பேரீச்ச மரத்தின் இலைகளையும் கிளைகளையும் போன்றவை. அவற்றின் காய் சுரைக்காயைப் போலப் பச்சை நிறமாகவும் முலாம்பழத்தைப் போலப் பெரிதாகவும் இருக்கிறது.

'லவங்க மரம் நடுத்தரமான பருமனுடையது. அது அவ்வளவாக உயரமாகவும் வளர்வதில்லை. அதனுடைய அடிமரமும் பட்டையும் இலைகளும் லாரல் மரத்தின் அடி

மரத்தையும் பட்டையையும் இலைகளையும் போன்றவை. (லாரல்=புன்னை வகை.) உண்மையில், அது பார்ப்

**லவங்கம்** பதற்கு லாரல் மரத்தைப் பெரிதும் ஒத்திருக்கிறது. மா'பாரின் அருகிலுள்ள தீவிலிருந்து லவங்கப் பட்டை ஏராளமாய் ஏற்றுமதியாகிறது.[4]

'அற்புதமான மனிதர்களைப் பற்றியும்—அதாவது, நம்மின் வேறான உடலமைப்புடைய மக்களைப் பற்றியும்—நம் நாட்டு விலங்குகளைப் போலல்லாத விலங்குகளைப் பற்றியும் பூவுலக சொர்க்கத்தைப் பற்றியும் தெரிந்துகொள்வதற்கு நான் எவ்வளவோ முயன்றேன்; ஆனால், ஒன்றுமே தெரிந்துகொள்ள இயலவில்லை.

'மாட்டை அவர்கள் புனித விலங்கெனக் கருதி வழிபடுகிறார்கள். அதனால் அவர்கள் மாட்டிறைச்சியைத் தின்பதில்லை. ஆனால், அவர்கள் ஆவின் பாலைப் பருகுகிறார்கள்.

**ஆவும் எருதும்** மற்ற மக்களைப் போலவே அவர்களும் தங்களுடைய கால்நடைகளை உழவு முதலிய வேலைகளுக்குப் பயன்படுத்துகிறார்கள்.

மழை குறிப்பிட்ட பருவங்களில் பெய்கிறது.

'இந்திய நாட்டு மக்களின் நிலைமையை இப்போது எடுத்துரைக்கப் போகிறேன்.

'அவர்கள் உருவ வழிபாடு செய்பவர்கள்.' அறநெறியை வலியுறுத்தும் சட்டமோ ஆவணமோ நூல்களோ அவர்

**மக்கள்** களிடத்தில் இல்லை. கணக்கு எழுதுவதற்கும் தெய்வ உருவங்களை வழிபடுவதற்கு ஏற்ற பிரார்த்தனைகளையும் மந்திரங்களையும் எழுதுவதற்கும் அவர்கள் ஒரு வகை எழுத்து முறையைப் பின்பற்றுகிறார்கள் என்பது உண்மையே. ஆனால் அவர்களிடத்தில் காகிதம் இல்லை. அதனால் அவர்கள் பனையோலையில் எழுதுகிறார்கள். செய்த பாவத்திற்காக வருந்தும் வழக்கம் அவர்களுக்கு இல்லை—அதாவது, அவர்களுக்கு மனச்சாட்சி இல்லை. தெய்வ உருவங்கள் வைக்கப்பட்டுள்ள மனைகளுக்குச் சென்று அவர்கள் வணங்குகிறார்கள். ஆனால், வழிபாட்டுக்கென்று குறிப்பிட்ட நேரமும் இல்லை; பலர் ஒன்றாகச் சேர்ந்து வழிபடும் முறையும் இல்லை;

[4] 'இலங்கை. இலங்கையின் இலவங்கப்பட்டை வாணிகத்தைப் பற்றிய மிகப் பழைய குறிப்புகளுள் இதுவும் ஒன்று'—யூல்.

ஒவ்வொருவனும், பகல் இரவென்று பாராமல், தனக்கு வசதியான நேரத்தில் கோயிலுக்குச் சென்று, தான் வணங்க விரும்பும் சிலை எந்த இடத்தில் இருக்கிறதோ அந்த இடத்தில் நின்று வணங்குகிறுன். அடிக்கடி அவர்கள் விருந்தும் நடத்து கிருர்கள்; உண்ணுநோன்பும் நோற்கிருர்கள். ஆனுல், வாரத்தில் அல்லது மாதத்தில் இன்னின்ன நாள்களில் விருந்து, இன்னின்ன நாள்களில் நோன்பு என்று குறித்துவைத்துக் கடைப்பிடிக்கும் வழக்கம் அவர்களிடத்தில் இல்லை. ஒவ்வோராண்டும் ஒரு குறிப்பிட்ட காலத்தில்தான் அவர்கள் திருமணஞ் செய்து கொள்கிருர்கள். கணவன் இறந்துபோனுல் மனைவி மறுமணம் செய்துகொள்ளக் கூடாது. ஆண் பெண் உடலுறவுத் துறையில் அவர்கள் கட்டுப்பாடு எதுவுமின்றி நடக்கிருர்கள். அவ்வாறு செய்வது பாவம் என்று அவர்கள் கருதுவதில்லை; அது பாவம் அன்று என்று சொல்வதற்கும் அவர்கள் வெட்கப் படுவதில்லை.

'கடற்கரையை ஒட்டிய பகுதிகளில் சாரசன்மார் பலர் வாழ்கின்றனர். அவர்கள் மிகுந்த செல்வாக்குடையவர்களாகவும் இருக்கிருர்கள்.[5] ஆனுல், உள்நாட்டில் அவர்கள் குடியேறவில்லை என்றே சொல்லலாம். கிறிஸ்துவரும் யூதரும் மிகச் சிலரே இருக்கின்றனர். அவர்களுக்கு எவ்விதச் செல்வாக்கும் இல்லை. கிறிஸ்துவர்களையும் கிறிஸ்துவப் பெயர் உடையவர்களையும் இந்திய மக்கள் மிகவும் துன்புறுத்துகிருர்கள். இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கம் இங்கு இல்லை. பிணத்தைச் சுட்டுவிடுவது தான் இந்த நாட்டு வழக்கம். பிணத்தைச் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்லும்போது பாடிக்கொண்டே செல்கிருர்கள். அந்த ஒரு சமயத்தைத் தவிர, மற்ற நேரங்களில், மற்ற மக்களைப் போலவே, அவர்களும் இறந்துபோன சுற்றத்தாருக்காக அழுது புலம்பி வருந்துகிருர்கள்.

'ஆனுல், இந்தியா ஒரு பெரிய நாடு. அதில் பல ராஜ்யங்கள் இருக்கின்றன. பல மொழிகள் பேசப்படுகின்றன. அங்கு வாழும் மக்கள் நடைநயம் உடையவர்களாகவும் இனிமையாகப் பழகுபவர்களாகவும் இருக் கிருர்கள். ஆனுல், அவர்கள் அதிகமாய்ப் பேசுவதில்லை. அவர்களைக் காணும்போது எனக்கு நம் நாட்டுக் குடியானவர்களுடைய நினைவு வருகிறது. அவர்களுடைய நிறத்தைக் கறுப்பு என்று சொல்ல முடியாது. அதனை ஆலிவ் நிறம் (பொன்பழுப்பு நிறம்) என்று சொல்லலாம். அவர்கள்

ஆடை

[5] Elliot and Dowson, . pp. 69-70.

நல்ல உடலமைப்பு உடையவர்கள். ஆடவர் மகளிர் ஆகிய இருபாலாருமே அப்படித்தான் இருக்கின்றனர். அவர்கள் காலில் செருப்பு முதலிய எவ்வகைக் காலணியையும் அணிந்துகொள்வதில்லை. இடுப்பைச் சுற்றிக் கட்டியுள்ள ஒரு துணியைத் தவிர, அவர்கள் நிர்வாணமாகவே இருக்கிறார்கள். சிறுவரும் சிறுமியரும் எட்டு வயது வரையிலும் எவ்வித ஆடையும் அணிவதில்லை; பிறந்த மேனியாகவே இருக்கிறார்கள். ஆடவர் தாடியை மழிப்பதில்லை. மக்கள் ஒவ்வொரு நாளும் பலமுறை குளிக்கிறார்கள். ஒயினையும் ரொட்டியையும் அவர்கள் கண்டதில்லையென்றே சொல்லலாம். நெல்லஞ் சோறும் பாலும் அவர்களுடைய அன்றாட உணவாயிருக்கின்றன. அவர்கள் உண்ணும் விதம் மிகவும் வெறுக்கத்தக்கது; பன்றிகளைப் போலத் தின்கிறார்கள் என்றுதான் சொல்லவேண்டும். சோற்றை எடுத்து வாயில் போடுவதற்கு அவர்கள் கரண்டியைப் பயன்படுத்துவதில்லை; கை முழுவதையும் (கை முட்டியை) சோற்றில் வைத்து எடுத்து வாயில் போட்டுக் கொள்கிறார்கள். உண்மையில், உண்ணும்போது அவர்கள் மனிதர்களைப் போலல்லாமல் பன்றிகளைப் போலவே தோன்றுகிறார்கள்.

'அந்த நாட்டில் உயிருக்கும் உடைமைக்கும் நல்ல பாதுகாப்பு இருக்கிறது. திருடர்களும் ஆறலை கள்வர்களும் மிகக் குறைவாய் இருக்கிறார்கள். ஆனால், குடிமக்கள் செலுத்த வேண்டிய வரியின் சுமை மிகவும் அதிகமாயிருக்கிறது. அங்குள்ள கைவினைஞர்களின் தொகை மிகவும் சிறியது. கைவினைஞர்கள் செய்கின்ற பொருள்களுக்குப் போதுமான கிராக்கியில்லை; அவர்களுக்குக் கிடைக்கும் ஊதியமும் மிகக் குறைவு. நம் நாட்டு மக்களைப் போலவே இந்திய நாட்டு - மக்களும், பொதுவாக, இருகூர் வாளையும் உடைவாளையும் பயன்படுத்துகிறார்கள். உண்மையிலேயே அவர்கள் போருக்குப் போகவேண்டியிருந்தால், படை எவ்வளவு பெரிதாயிருந்தாலும், போர் மிக விரைவில் முடிந்து போகிறது. அவர்கள் வெற்றுடம்புடனும், இருகூர் வாள் உடைவாள் தவிர வேறு படைக்கலம் இல்லாமலும் போர்க்களம் புகுவதே அதற்குக் காரணமாய் இருக்கிறது. வில்லம்புகளை எடுத்துக்கொண்டு போருக்குப் போகும் சாரசன் கூலிப் படையினர் சிலரும் அவர்களுடைய படையில் இருக்கின்றனர்.

இந்தியக் கடலைப் பற்றி இப்போது நான் சொல்லப் போகிறேன். கடலில் மீன் ஏராளமாய் இருக்கிறது. கடற் பகுதிகள் சிலவற்றில் முத்தும் மணியும்
கடல் கிடைக்கின்றன. துறைமுகங்கள் மிகச் சிலவே

இருக்கின்றன. அவை சிறந்த துறைமுகங்களும் அல்ல. இங்கே இருக்கிற கடல் மையக்கடல் அல்லது மாக்கடல் என்பதை நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டும். இந்தக் கடலைக் குறுக்கே கடந்து தெற்கே சென்றால் அங்கே கண்டம் எதனையும் காண முடியாது; தீவுகளே அங்கிருக்கின்றன. ஆனால், அந்தத் தீவுகளின் தொகை மிகப் பெரியது. ஆயிரத்திருநூறுக்கும் அதிகமான தீவுகள் அங்கே இருக்கின்றன. அவற்றுள் சிலவற்றில் மக்கள் வாழ்கிறார்கள்; சிலவற்றில் யாருமே யில்லை.

அந்தக் கடலில் கப்பல் போக்குவரவு நடைபெறுகிறது. அங்குள்ள தீவுகளிலிருந்து ஆர்மசுக்கும் ஆர்மசிலிருந்து மினிபார் என்று சொல்லப்படும் பகுதிகளுக்கும் கப்பல்கள் செல்கின்றன. மினிபார் ஆர்மசிலிருந்து தெற்குத் தென்கிழக்குத் திசையில் 2000 மைல் தொலைவில் உள்ளது. மினிபாரிலிருந்து கிழக்குத் தென்கிழக்குத் திசையில் 300 மைல் போனால் மா'பாரை அடையலாம். ஆனால், மா'பாருக்குச் செல்லும் கலங்கள் சிறிது வடக்கே திரும்பிய பின்னரே அதனை அடைய முடியும். மெனபாரிலிருந்து (மா'பாரிலிருந்து?) வடக்கு வடகிழக்காக 300 மைல் போனால், சியு சிம்மன்கோட்டா[6] என்னும் இடத்தை அடையலாம். அதற்குமேல் எந்த இடத்திற்கும் நான் போனதில்லை. எனவே, அதைப்பற்றி நான் எழுதவில்லை.

**நீர்வழிச் செலவு**

இப்போது நான் சொல்லிக்கொண்டிருக்கிற கடலினுடைய கரையில் பல இடங்களில் நீரடி மணல்திட்டுகள் இருக்கின்றன. அவற்றுள் சிலவற்றின் நீளம் 100 மைலுக்கும் அதிகமாய் இருக்கும். அதனால் அங்கே செல்லும் கலங்கள் தரைதட்டிச் சிதைந்துவிடக் கூடும். மேலும், ஆண்டுக்கு ஒரே முறைதான் கலங்கள் அந்தக் கடலில் செல்ல முடியும். ஏப்ரல் மாதத் தொடக்கத்திலிருந்து அக்டோபர் மாத இறுதி வரையிலும் அங்கு மேல்காற்று

6 இங்குக் கூறப்பட்டுள்ள பயணத்தின் முதற்பகுதி பாரசீக வளைகுடாவில் தொடங்கி மினிபார் என்று சொல்லப்படும் மலபாரின் துறைமுகம் ஒன்றில் முடிந்தது என்றும், இரண்டாம் பகுதி அந்தத் துறைமுகத்தில் தொடங்கி மன்னார் வளைகுடாவிலிருந்த ஏதோ ஒரு நகரில் முடிந்தது என்றும், மூன்றாம் பகுதி மன்னாரில் தொடங்கிச் சோழ மண்டலக் கரையில் முடிந்தது என்றும் நான் கருதுகிறேன். சோழ மண்டலக் கரையில் புனித தாமஸ் கோயில் வரையிலேனும்—அதாவது, சென்னை வரையிலேனும்—அந்தப் பயணம் தொடர்ந்திருக்க வேண்டும். 'மன்னார் வளைகுடாவில் ஏதோ ஒரு நகரில்' என்றுதான் சொல்ல முடியும்; ஏனெனில், இந்தக் கடிதத்தின் ஆசிரியர் மா'பார் என்பது ஒரு நகரம் என்று கூறுகிறார். மார்க்கபோலோ மா'பாரின் முதன்மையான அரசன் இருந்ததாக் கூறுகின்ற நகரமே இந்தக் கடிதத்தின் ஆசிரியர் சொல்கிற நகரமாய் இருக்கக் கூடும். அந்த நகரம்

வீசுகிறது. அதனால் அந்தக் காலத்தில் கலங்கள் மேற்கு நோக்கிச் செல்லுதல் இயலாது. இதற்கு நேர் எதிரான நிலையை அக்டோபர் முதல் மார்ச்சு வரையிலும் காண்கிறோம். மே மாதத்தின் இடையிலிருந்து அக்டோபர் முடியும் வரையிலும் காற்று அங்கே மிகவும் வேகமாய் வீசுகிறது. அந்தக் கடுங் காற்றுத் தொடங்குவதற்குள் கரையை அடையாத கலங்கள் பேராபத்தில் அகப்பட்டுக் கொள்ளும். அவை கவிழ்ந்து போகாமல் தப்பிப் பிழைப்பது அவற்றின் ஆகூழைப் பொறுத்தது. அவ்வாறு அறுபதுக்கும் அதிகமான கலங்கள் சென்ற ஆண்டு முழுகிவிட்டன. இந்த ஆண்டும் நான் தங்கி யிருக்கும் இடத்திற்கு அண்மையிலுள்ள பகுதிகளில் ஏழு கலங்கள் முழுகிவிட்டன. ஏனைய இடங்களில் எத்தனையோ கலங்கள் முழுகியிருக்கக் கூடும். ஆனால், அவற்றைப் பற்றிய செய்தி எனக்குத் தெரியாது. இந்தக் கடற்பகுதிகளில் செல்கின்ற இந்தியக் கலங்கள் மிக எளிதில் சிதைந்துபோகக் கூடியவை; பார்ப்பதற்கு அவை நன்றாயில்லை; அவற்றின் பலகை களின் இடையிலுள்ள சந்துகள் நீர் புகாவண்ணம் அடைக்கப் படவில்லை; கட்டுமானத்தின் எந்தப் பகுதியிலும் இரும்பு இல்லை; ஆடை தைப்பதைப் போல அந்தப் பலகைகள் சரட்டால் ஒன்றோ டொன்று சேர்த்துத் தைக்கப்பட்டுள்ளன. அதனால் யாதேனும் ஓர் இடத்தில் சரடு அறுந்து போனால் கலம் ஓட்டையாகி விடுகிறது. ஒருமுறை கடல்மீது சென்று திரும்பிய கலம் மீண்டும் அவ்வாறு செல்லவேண்டுமானால் தையல்களைப் பழுது பார்க்க வேண்டும். இவ்வாறு பழுதுபார்க்கும் வேலை ஆண்டுக் கொருமுறை மேற்கொள்ளப்படுகிறது. அந்தக் கலங்களிலுள்ள சுக்கானும் எளிதில் ஒடிந்துபோகக் கூடியதாய் இருக்கிறது. அது ஒரு முழ அகலமுள்ள மேசையின் மேற்பலகையளவு

---

இலங்கையிலிருந்து மேற்கே 60 மைல் தொலைவில் இருந்தது என்று மார்க்க போலோ சொல்வதால், அது ராமநாதபுரத்திற்கு அருகில் இருந்தது என்று நான் கருதுகிறேன். அது கெயிலாக (காயல்) இருக்கமுடியாது. கெயிலில் வேறோர் அரசன் ஆட்சி செய்தான் என்று மார்க்கபோலோ தெளிவாகச் சொல்கிறார். மேலும், இலங்கையின் எந்தப் பகுதியிலிருந்து வந்தாலும் கெயில் 60 மைலுக்கு அதிகமான தூரத்தில் இருக்கிறது.

**சோழ மண்டலக் கரையில் அவர் எவ்வளவு தொலைவு வடக்கே சென்றார் என்பதை உறுதியாய்ச் சொல்ல முடியாது. அவ்வாறு அவர் சென்ற இடம் சியு சிம்மன்கோட்டாவாகவோ (குன்ஸ்ட்மன் சொல்கிறபடி) ஸியு ஸிம்மன் கோட்டாவாகவோ இருக்கலாம். ஆனால், சென்னை வரையிலேனும் அவர் வந்தார் என்பது உறுதி. அவருடைய வழித்துணைத் தோழர் மிக்கலின் உடல் புனித தாமஸ் கோயிலில் புதைக்கப்பட்டது என்று அவரே தம்முடைய முதல் கடிதத்தில் சொல்லியுள்ளார்.—யூல்.**

சிறியதாயிருக்கிறது. கலத்தின் பிற்பகுதியின் மையத்தில் அதைப் பொருத்தியிருக்கிறார்கள். பாயைத் திருப்பிக் கலத்தின் நெறியை மாற்றுவது மிகவும் கடினமானது. காற்று வேகமாக வீசும்போது பாயைத் திருப்பவே இயலாது. அந்தக் கலங்களுக்கு ஒரே பாயும் ஒரே பாய்மரமும் இருக்கின்றன. முடையப்பட்ட விரிப்போ மோசமாக நெய்யப்பட்ட துணியோ பாயாகப் பயன்படுகிறது. கயிறும் மரப்பட்டை போன்ற நாரால் ஆனது.

கப்பலோட்டுவதில் பயிற்சியுடைய மாலுமிகளும் இங்குக் குறைவாகவே இருக்கிறார்கள். அவர்கள் திறமையுடையவர்கள் என்றும் சொல்ல முடியாது. அதனால் கடற்பயணம் இங்கு அபாயம் நிறைந்ததாய் இருக்கிறது. எனவே, கப்பல் கவிழாமல் கரைசேர்ந்தால் அது கடவுளருளால் நிகழ்ந்தது என்றும் மனித முயற்சி அதற்குக் காரணமாகாது என்றும் இங்கே கடற்பயணம் செய்பவர்கள் சொல்வது வழக்கம்.

'இந்தக் கடிதம் மேல் இந்தியாவிலுள்ள சிட்டியா[7] என்னும் மாகாணத்தைச் சேர்ந்த மா'பார் என்னும் நகரத்தில் கி.பி. 1210 (102 அல்லது 103)ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 22ஆம் நாள் எழுதப்பட்டது.'

—Yule and Cordier, *Cathay and the Way Thither*, iii; No iii Letter from Friar Menentillus, a Dominican, forwarding copy of a letter from John of Montecorvino; pp. 58-67.

7 சிட்டியா: எனக்குத் தெரிந்த வரையில், வேறு எந்தப் பயணியும் இந்தப் பெயரைக் குறிப்பிடவில்லை. ஆனால், இராமேச்வரத் தீவு அல்லது தீபகற்பத்திற்கு 'சேது' (பாலம்) என்னும் பெயரும் இருந்தது.—யூல்.

# XXVII. ஒடோரிக் துறவி
## சுமார் கி.பி. 1321-2

### அ. ஹார்மசிலிருந்து தாணாவுக்கு

இந்த நாட்டு[1] மக்கள் ஜேஸ்[2] என்னும் ஒருவகைக் கலத்தைப் பயன்படுத்துகிறார்கள். அந்தக் கலத்தின் பலகைகளைச் சரட்டால் தைத்து ஒன்றாக இணைத்திருக்கிறார்கள். அத்தகைய கலம் ஒன்றில் நான் பயணஞ்செய்தேன். அதில் இரும்பே இல்லை என்பதை அப்போது நான் கண்டேன். கலத்தில் ஏறிய இருபத்தெட்டாம் நாள் நான் தாணாவை[3] அடைந்தேன். சிறுபடித் துறவியர் நால்வர் நம்முடைய மதத்திற்காகத் தம்முடைய உயிரைத் தியாகஞ் செய்தது அந்த நகரில்தான். அந்த நகரம் மிகவும் நல்ல நிலையில் இருக்கிறது. ரொட்டியும் ஒயினும் அங்கு ஏராளமாய் இருக்கின்றன. அங்கே எண்ணற்ற மரங்கள் வளர்ந்திருக்கின்றன. பண்டைக் காலத்திலேயே அந்த நகரம் மிகவும் புகழ்பெற்றிருந்தது. அங்கேதான் போரஸ் அலக்சாண்டரோடு போர் செய்தான்.[4] அங்கு வாழும் மக்கள் உருவ வழிபாடு செய்பவர்கள். அவர்கள் நெருப்பையும் பாம்பையும் மரத்தையும் வணங்குகிறார்கள். அந்த நகரமும் அதனைச் சுற்றியுள்ள நிலப் பகுதியும் சாரசன்மார் ஆட்சியில் இருக்கின்றன. அவற்றை

1 ஹார்மஸ். மார்க்கபோலோ, i, பக்கம் 108 பார்க்க.

2 இது பாரசிக மொழிச் சொல் (ஜஹாஜ=கப்பல்.)

3 சால்செட் தீவுக்கு அருகில் உள்நாட்டில் இருக்கிறது.

4 இது ஒரு விசித்திரமான தவறு. அலக்சாண்டர் எலிபெண்டாத் தீவுக்குப் போனார் என்ற மரபுவழிச் செய்தியைக் கேள்விப்பட்டதால் ஓடோரிக் இந்தப் பிழையான செய்தியை எழுதியுள்ளார் என்று யூல் கருதுகிறார்.

அவர்கள் போர்செய்து வென்றார்கள். இப்போது அவர்கள் டில்லிப் பேரரசின் மேலாண்மையில் இருக்கிறார்கள்.[5]

இங்கே பலவகைப்பட்ட விலங்குகள் இருக்கின்றன. அவற்றின் தொகையும் மிகப் பெரிது. விலங்குகளுள், முக்கியமாக, கருஞ் சிங்கங்களையும்[6] குரங்குகளையும் பாபூன் என்னும் பெருங் குரங்குகளையும் கூறலாம். இங்கே காணப்படும் வௌவால்கள் புறாக்களைப் போலப் பெரியவையாய் இருக்கின்றன. இந்த நாட்டு எலிகள் நம் நாட்டில் ஷெர்ப்பி என்று சொல்லப்படும் நாய்களைப்போலப் பெரியவையாய் இருக்கின்றன. அதனால் தான் இந்த நாட்டில் எலிகளைப் பிடிப்பதற்கு நாய்களைப் பயன் படுத்துகிறார்கள்.[7] பூனைகளால் அந்த எலிகளைப் பிடிக்க இயலாது. ஒவ்வொரு வீட்டின் முன்னாலும் மிலாறுகளையுடைய ஒரு வகைச் செடியை வளர்க்கிறார்கள். அது நம் நாட்டில் உள்ள தூணளவு பருமனாயிருக்கிறது. அதற்கு எவ்வளவு காலத்துக்கு நீர் ஊற்றுகிறோமோ அவ்வளவு காலத்திற்கு அது வாடுவதில்லை.[8] இந்த நாட்டைப்பற்றி இன்னும் எத்தனையோ விசித்திரச் செய்திகளைச் சொல்லலாம். அவையெல்லாம் கேட்பதற்குச் சுவையாய் இருக்கும்.

[9] [இந்த நாட்டுப் பெண்கள் நிர்வாணமாய் இருக்கிறார்கள். திருமணத்தின்போது மணமகள் குதிரைமேல் அமர்த்தப் படுகிறாள். மணமகன் பின்புறம் ஏறி உட்கார்ந்துகொண்டு மணமகளின் கழுத்திற்கு நேராக ஒரு கத்தியைப் பிடித்துக் கொள்கிறான். தலையில் ஒரு தொப்பியைத் தவிர வேறு ஆடை எதனையும் அவர்கள் அணிந்துகொள்வதில்லை. அந்தத் தொப்பி சமய முதல்வரின் தொப்பியைப் போல உயரமாய் இருக்கிறது. அதனை வெண்மலர்கள் அணிசெய்கின்றன. ஊரில் உள்ள கன்னிப் பெண்கள் அனைவரும் பாடிக்கொண்டே வரிசையாக முன்னே செல்கின்றனர். இந்த ஊர்வலம் மணமக்களின் இல்லத்தை அடைந்தவுடன், அவர்களைத் தனியே விட்டு விட்டு

5 டில்லி சுல்தான் யாதவ ராஜ்யமாகிய தேவகிரியை வென்று டில்லி சுல்தானியத்தோடு சேர்த்துக் கொண்ட சிறிது காலத்திற்கெல்லாம் ஒடோரிக் இங்கு வந்தார்.

6 புலிகளா?

7 ஜார்டனசும் பெரிய எலிகளையும் வௌவால்களையும் குறிப்பிடுகிறார்.

8 இது துளசிச் செடியாய் இருக்கும் என்று அறிஞர், பொதுவாக, கருதுகின்றனர்.

9 ஐயத்திற்குரியவையும் வழக்கத்திற்கு மாறானவையும் ஆகிய செய்திகளை இவ்வாறு அடைப்புக் கோடுகளுள் எழுதியுள்ளோம்.

மற்றவர்கள் போய்விடுகிறார்கள். மறுநாள் காலையில் அவர்கள் எழுந்த பிறகும் முன்போல நிர்வாணமாகவே காணப்படு கிறார்கள்.]

[இந்த நாட்டில் ஒயின் தரும் மரங்கள் வளர்கின்றன. அந்த ஒயினை லோஹக் என்று சொல்கின்றனர். அது எளிதில் போதையூட்டக் கூடியது. இங்கே இறந்தவர்களைப் புதைப்ப தில்லை. பிணத்தை மிக ஆடம்பரமாய்த் தூக்கிக்கொண்டு போய் விலங்குகளும் பறவைகளும் தின்பதற்கு ஏற்றவாறு திறந்த வெளியில் எறிந்துவிடுகிறார்கள். இங்குச் சிறந்த எருதுகள் இருக்கின்றன. அவற்றின் கொம்புகளின் உயரம் பாதிக் காலடிக்குக் குறையாமல் இருக்கும். (உயரமா பருமனா?) அவற்றின் முதுகில் ஒட்டகத்திற்கு இருப்பது போன்ற திமில் இருக்கிறது. இந்த நகரத்திலிருந்து பன்சே (பரோச்?) செல்வதற்குப் பதினான்கு நாள் பிடிக்கும்.]

—Yule and Cordier, ii, pp. 113-117.

## ஆ. மினிபார் இராஜ்யம்; மிளகுப் பயிர்

மிளகு எவ்வாறு கிடைக்கிறது என்பதை இப்போது நான் உங்களுக்குச் சொல்லப் போகிறேன். அது மினிபார்[10] என்னும் ஒரு ராஜ்யத்தில் விளைகிறது. அங்கு நான் போயிருக்கிறேன். அந்த ராஜ்யத்தைத் தவிர அது உலகின் வேறெந்த நாட்டிலும் விளைவதில்லை. மிளகுப்பயிர் விளைகின்ற காடு 18 நாள் பயணத்திற்கு நீண்டு பரந்து கிடக்கிறது. அந்தக் காட்டில் இரண்டு நகரங்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்றுக்கு ப்ளாண்ட்ரினா என்பது பெயர். இன்னொன்றின்பெயர் சிங்கிலின்[11] என்பதாகும். ப்ளாண்ட்ரினா நகரத்தில் வாழ்கின்ற மக்களுள் சிலர் கிறிஸ்துவர்களாகவும் சிலர் யூதர்களாகவும் இருக்கிறார்கள். அந்த இரு நகரங்களுக்கும் இடையில் எப்போதும் உள்நாட்டுப் போர் நடந்து கொண்டேயிருக்கிறது. சண்டையில் கிறிஸ்து

[10] மினிபார் என்பது மலபார். முன்னைய அரேபியர்கள் மலபாரை அவ்வாறு குறிப்பிட்டார்கள் என்று கருதலாம்.

[11] ப்ளாண்ட்ரினா என்பது கோழிக்கோட்டுக்கு 16 மைல் வடக்கிலுள்ள பந்தலனி என்னும் ஊர்; சிங்கிலின் எங்கிருந்தது என்பது தெரியவில்லை என்று யூல் சொல்கிறார். அது கொல்லத்துக்குச் சுமார் 18 மைல் வடக்கே உள்ள காயங்குளமாய் இருக்கலாம் என்று ஹெபிது கருதுகிறார். பொலும்பும் (கொல்லம்) மிளகுக் 'காட்டின்' தென்கோடியில் இருந்தது என்று ஓடோரிக் கூறியிருப்பதால் ஹெபிதின் கருத்தை நாம் ஏற்றுக் கொள்ளலாம்.

வர்களே எப்போதும் வெற்றி பெறுகிறார்கள்; யூதர்கள் எப்போதுமே தோல்வியடைகிறார்கள்.

இந்த நாட்டில் மிளகு கிடைக்கும் விதத்தை இப்போது சொல்லப் போகிறேன். ஐவி இலைகளைப் போன்ற இலைகளை உடைய ஒரு கொடியில் மிளகு காய்க்கிறது. நம் நாட்டில் கொடி முந்திரியை மரத்தின் அருகில் நடுவதைப் போலவே இங்கே மிளகுக் கொடியை உயர்ந்த மரங்களின் அருகில் நடுகிறார்கள். திராட்சையைப் போலவே மிளகும் குலைகுலையாய்க் காய்க்கிறது. மிளகுக் குலைகள் மிகவும் அதிகமாய் இருப்பதால் கொடியே அறுந்து விழுந்துவிடுமோ என்னும் அச்சம் நமக்குத் தோன்றுகிறது. முற்றிய மிளகு பச்சை நிறமாய் இருக்கிறது. கொடிமுந்திரிப் பருவத்தில் திராட்சைப் பழத்தை அறுவடை செய்வது போலவே முற்றிய மிளகை இங்கு அறுவடை செய்கிறார்கள். பின்னர் அதனை வெயிலில் காயவைக்கிறார்கள். காய்ந்த மிளகை ஜாடிகளிற் போட்டுவைக்கிறார்கள். [புது மிளகில் ஒரு தின்பண்டம் செய்கிறார்கள். அதனை நான் தின்ன வேண்டியதாயிற்று. ஏராளமாய்த் தின்றேன்.] இந்தக் காட்டில் ஓடும் ஆறுகளில் முதலைகள்—அதாவது, பெரிய பாம்புகள்—இருக்கின்றன. [காட்டில் இன்னும் பலவேறு வகையான பாம்புகளும் இருக்கின்றன. மிளகு அறுவடை செய் வதற்காக அங்கே செல்லும் மனிதர்கள் குப்பை கூளங்களையும் காய்ந்த புல்லையும் சேர்த்துத் தீ வைத்து அந்தப் பாம்புகளைக் கொளுத்திவிடுகிறார்கள்.] [இங்கே சிங்கங்கள் ஏராளமாய் இருக்கின்றன. பிரான்க் மக்கள் வாழ்கின்ற நாடுகளில் இல்லாத பல வகை விலங்குகளை இங்கே காணலாம். இங்கே பிரேசில் மரத்தை அடுப்பெரிக்கப் பயன்படுத்துகிறார்கள். காடுகளில் மயில்கள் மிகுதியாய் வாழ்கின்றன.[12]]

காட்டின் தென்கோடியில் பொலும்பும் என்னும் பெயருடைய நகரம் ஒன்று இருக்கிறது. அங்கேதான் உலகத்திலேயே மிகச் சிறந்த இஞ்சி விளைகிறது. அந்த நகரத்தில் விற்பனைக்கு வருகின்ற வாணிகப் பொருளின் தொகையும் வகையும் மிகப் பெரியவை. அவற்றையெல்லாம் விவரமாகச் சொன்னால் மக்கள் நம்புவார்களா என்பதே ஐயத்திற்கிடமானது.

12 'மிளகுக் காட்டைப் பற்றி ஓடோரிக் எழுதியுள்ள குறிப்பைக் கண்டு மாரிக்னொல்லி ஏளனம் செய்கிறார். ஓடோரிக் மலபாரில் தங்கவேயில்லை என்று நாம் கருதலாம். துறைமுகத்தில் தம் காதில் விழுந்த வம்பளப்பை ஆதாரமாய் வைத்துக் கொண்டு அவர் இந்தக் குறிப்பை எழுதினார் போலும்.' —யூல்.

## இ. பொலும்பும் நகரத்து உருவ வழிபாட்டினருடைய பழக்கவழக்கங்கள்

[பொலும்பும் (கொல்லம்) நகரத்து மக்கள் நிர்வாணமாய் இருக்கிறார்கள். ஆனால், இடுப்பில் ஒரு சிறு துணியைக் கட்டி அதனைப் பின்பக்கத்தில் முடிந்துகொள்கிறார்கள். அதைத் தவிர வேறு ஆடை எதனையும் அவர்கள் அணிந்துகொள்வதில்லை.] இந்த நாட்டு மக்கள் அனைவரும் மாட்டைத் தங்கள் கடவுளாக எண்ணி வழிபடுகிறார்கள். [அவர்கள் மாட்டிறைச்சி தின்பதில்லை.] மாடு ஒரு புனித விலங்கு என்று அவர்கள் சொல்கிறார்கள். எருதினிடத்தில் ஆறாண்டு வேலை வாங்கிய பிறகு ஏழாம் ஆண்டிலிருந்து அதற்கு முழு ஓய்வு தந்து விடுகிறார்கள். ஏழாம் ஆண்டு தொடங்கியதும், அவர்கள் எருதைக் குறிப்பிட்ட பொது இடம் ஒன்றுக்கு ஓட்டிக்கொண்டு போய், அன்றையிலிருந்து அது தெய்வத்திற்கு நேர்ந்து விடப்பட்ட மாடு என்று அறிவித்து, அதனைக் கட்டவிழ்த்து விட்டு விடுகிறார்கள். கீழே சொல்லப்படுகிற அருவருக்கத்தக்க மூட நம்பிக்கையும் அவர்களிடம் இருக்கிறது. காலையில் எழுந்ததும் அவர்கள் தொழுவத்திலிருந்து மாட்டை ஓட்டிக்கொண்டு வந்து, வீட்டின் முன்னால் நிறுத்தி, அதனுடைய சிறுநீரை ஒரு பாத்திரத்திலும் சாணியை இன்னொரு பாத்திரத்திலும் பிடித்துக் கொள்கிறார்கள். அந்தப் பாத்திரங்கள் பொன்னாலோ வெள்ளியாலோ செய்யப்பட்டவை! பின்னர், சிறுநீரால் முகத்தைக் கழுவிக் கொள்கிறார்கள். சாணியை எடுத்து முதலில் நெற்றியின் மையத்திலும், இரண்டாவது கன்னக் கதுப்பிலும், மூன்றாவது மார்பின் மையத்திலும் பூசிக்கொள்கிறார்கள். இந்தப் பூச்சால் ஏற்பட்ட தூய்மை நாள் முழுதும் நிலைத்திருக்கும் என்று அவர்கள் நம்புகிறார்கள். இவ்வாறு பொது மக்கள் செய்கிறார்கள்; இவ்வாறே அரசனும் அரசியும் செய்கிறார்கள்.

அவர்கள் இன்னொரு சிலையையும் வணங்குகிறார்கள். அது பாதி மனித உருவமும் பாதி மாட்டுருவமும் கொண்டது. அந்தச் சிலை அவர்களுடைய வேண்டுதலுக்குச் செவிசாய்த்துத் தன் வாயால் விடையும் அளிக்கிறது. அடிக்கடி அது நாற்பது கன்னிப் பெண்களைத் தனக்குக் காவு கொடுக்கவேண்டுமென்று கேட்கிறது. நம் நாட்டுப் பெற்றோர் தம்முடைய மக்களை யாதேனும் ஒரு சமயப் பணித்துறைப் பிரிவில் சேர்ப்பதற்கு நேர்ந்து கொள்வதைப்போல, இந்த நாட்டுப் பெற்றோர் அந்தச் சிலைக்குத் தம் மக்களைக் காவுகொடுப்பதாக நேர்ந்து கொள்கின்றனர். இவ்வாறு பலர் உயிரிழக்கின்றனர்.

இந்த நாட்டு மக்கள் இன்னும் பல வகைகளிலும் முட்டாள் தனமாக நடக்கிறார்கள். அந்தச் செய்திகளை எழுதுவதும் கேட்பதுமே மிகுந்த அருவருப்பாக இருக்கும். அது போலவே, இன்னும் எத்தனையோ பொருள்கள் அங்கு உற்பத்தியாகின்றன. ஆனால், அவற்றைப் பற்றிய செய்திகளை எடுத்துரைப்பதால் எவ்விதப் பயனும் இருக்காது. எனினும், இந்த நாட்டு உருவ வழிபாட்டினரிடம் காணப்படும் மிகவும் அருவருக்கத்தக்க பழக்கம் ஒன்றைச் சொல்லியே தீரவேண்டும். இறந்து போனவர்களை இங்கு எரித்துவிடுகிறார்கள். கணவன் இறந்து போனால் மனைவியையும் அவன் சிதையிலேயே வைத்து உயிரோடு கொளுத்திவிடுகிறார்கள் இம்மையில் கணவனுக்குத் துணையாய் இருந்த மனைவி மறுமையிலும் அவனுக்குத் துணையாயிருப் பதற்காக அப்படிச் செய்கிறார்களாம். ஆனால், அவளுக்கு ஆண் மக்கள் இருந்தால், கணவனுடைய சிதையிலேறி உயிர்விடாமல், அவர்களோடு அவள் வாழலாம். அது அவளுடைய விருப் பத்தைப் பொறுத்தது. மனைவி இறந்துபோனால் கணவன் உடன்கட்டை ஏற வேண்டும் என்று வற்புறுத்துகின்ற சட்டம் எதுவும் இல்லை. அதற்கு மாறாக, அவன் விரும்பினால் இன்னொருத்தியை மணந்துகொள்ளலாம். இந்த நாட்டில் பெண்கள் மது அருந்துகிறார்கள். ஆனால், ஆடவர்க்கு அந்தப் பழக்கம் இல்லை. இங்குள்ள மகளிரும் தங்களுடைய முன் தலையை மழித்துக் கொள்கின்றனர். ஆனால், ஆடவர் தம் தாடியை மழித்துக் கொள்வதில்லை. இன்னும் எத்தனையோ விசித்திரமான பழக்கங்களை இங்கே காண்கிறோம். அந்தக் காட்டுமிராண்டித்தனத்தைப் பற்றி எழுதாமல் இருப்பதே நல்லது.

—*Op. cit.* pp. 137—40.

## (ஈ) மோபார் இராஜ்யமும் உருவ வழிபாட்டினர் பழக்க வழக்கங்களும்

இந்த ராஜ்யத்திலிருந்து[13] பத்து நாள் பயணத்திற்கு அப்பால் மோபார்[14] என்னும் இன்னொரு ராஜ்யம் இருக்கிறது. அது மிகவும் பெரிய ராஜ்யம். அதில் மாநகர்களும் நகர்களும் பல இருக்கின்றன. அந்த ராஜ்யத்தில்தான்[15] நம்முடைய

[13] கொல்லம்.

[14] சோழ மண்டலம்—யூல்.

[15] 'புனித தாமஸின் கோயில் இருந்த இடத்தைப்பற்றி ஓடோரிக் எழுதிவைத்துள்ள குறிப்பு மார்க்கபோலோவின் குறிப்பைப் போலவே தெளிவற்றதாய் இருக்கிறது.'—கார்டியர்.

வணக்கத்திற்குரிய புனித தாமசின் உடல் புதைக்கப்பட்டுள்ளது. அவ்வுடல் புதைக்கப்பட்டுள்ள மாதா கோயிலில் தெய்வச் சிலைகள் பல இருக்கின்றன.[16] கோயிலுக்குப் பக்கத்தில் நெஸ்டாரியர்—அதாவது, கிறிஸ்துவர்—வசிக்கும் வீடுகள் சுமார் பதினைந்து இருக்கின்றன. ஆனால், அவர்கள் கிறிஸ்து மதத்தின் உண்மையான கோட்பாடுகளில் பற்றில்லாத இழிந்த குணமுடையவர்கள். இந்த ராஜ்யத்தில் அற்புதமான தெய்வச் சிலை ஒன்று இருக்கிறது. இந்திய நாட்டிலுள்ள எல்லா மாகாணங்களிலும் வாழ்கின்ற மக்கள் அனைவரும் அந்தச் சிலையை மிகவும் புனிதமாகக் கருதுகின்றனர். ஓவியர்கள் புனித கிறிஸ்டபரின் உருவத்தை, பொதுவாக, எவ்வளவு பெரியதாக வரைகிறார்களோ அவ்வளவு பெரியதாயிருக்கிறது அந்தச் சிலை. சிலை முழுதும் பொன்னால் ஆனது. அதனை ஒரு பொற்சிம்மாசனத்தில் வைத்திருக்கிறார்கள். அந்த அரியணையும் பொன்னால் செய்யப்பட்டதே. சிலையின் கழுத்தில் மிகவும் விலையுயர்ந்த மணிகளால் ஆன மாலை ஒன்றிருக்கிறது. இந்தச் சிலை வைக்கப்பட்டிருக்கிற கோயிலும் பொன்னாலானது—கூரை, சுவர் நடைவழி எல்லாமே. கிறிஸ்துவர்கள் மிகத் தொலைவிலிருந்து புனித பீட்டர் கோயிலுக்கு யாத்திரை செய்வதைப் போல இந்திய நாட்டு மக்களும் இந்தச் சிலையை வழிபடுவதற்காக நெடுந் தொலைவிலிருந்து வருகிறார்கள். அந்தப் புனிதப் பயணிகள் வருகின்ற முறைகளை இப்போது உங்களுக்குச் சொல்லப் போகிறேன். சிலர் சுருக்குக் கயிற்றைக் கழுத்தில் மாட்டிக் கொண்டு வருகின்றனர்; சிலர் கழுத்தில் ஒரு பலகையைக் கட்டித் தொங்கவிட்டு அதன் மீது தம் கைகளை வைத்துக் கொண்டு வருகின்றனர்; சிலர் முன் கையில் கத்தியைச் செருகிக் கொண்டு வருகின்றனர். (வீட்டில் புறப்படும்போது குத்திய கத்தியைக் கோயிலைச் சென்றடையும் வரையிலும் அவர்கள் வெளியே எடுப்பதில்லை. அதனால், கோயிலை அடையும்போது கை சீழ் வழியும் புண்ணாகக் காட்சியளிக்கிறது.) இன்னும் சிலர் ஒரு விசித்திரமான வழியைக் கடைப்பிடிக்கின்றனர். வீட்டிலிருந்து புறப்பட்டு மூன்றடி நடந்ததும், நான்காம் முறை அடியெடுத்து வைக்கும்போது, அவர்கள் நெடுஞ்சாண்கிடையாகத் தரையில் விழுந்து வணங்குகிறார்கள். பின்னர் எழுந்து ஒரு தூபக்

16 இதைப் பற்றி பார்த் பின்வருமாறு எழுதுகிறார். 'இது ஓர் இந்துக் கோயில் என்பது தெளிவு. மயிலாப்பூரில் உள்ள மாதாகோயிலுக்கு அருகில் இன்றைக்கும் மயிலாதேவியின் கோயில் இருக்கிறது. அது நெடுங்காலத்திற்கு முன்னரே தோன்றிய கோயில். அந்தக் கோயிலைத்தான் இங்கே ஓடோரிக் குறிப்பிடுகிறார் என்று நாம் கருதலாம்.'—கார்டியர்.

கலத்தைக் கையிலெடுத்து, விழுந்த இடத்திற்குச் சாம்பிராணிப் புகையைக் காட்டுகிறார்கள். இவ்வாறே கோயிலை அடையும் வரையிலும் தொடர்ந்து செய்கிறார்கள். அவ்வாறு செய்வதால், வீட்டிலிருந்து புறப்பட்டுக் கோயிலில் உள்ள சிலையை அடைவதற்கு நெடுங்காலம் பிடிக்கிறது. வழியில் யாதேனும் ஒரு காரணத்திற்காகச் சற்றுத் திரும்பிச் செல்ல வேண்டியிருந்தால், விழுந்து எழுந்த இடத்தில் அடையாளம் வைத்துவிட்டுப் போகிறார்கள். வேலை முடிந்து திரும்பி வந்தவுடன் விட்ட இடத்திலிருந்து மீண்டும் யாத்திரையைத் தொடங்குகிறார்கள்.

இந்தக் கோயிலுக்கு மிகவும் அண்மையில் ஒரு குளம் இருக்கிறது. அது மனிதர்களால் வெட்டப்பட்டது; இயற்கை நீர் நிலையன்று. கோயிலுக்கு வருகிற பக்தர்கள் அந்தச் சிலைக்குக் காணிக்கை செலுத்தும் வகையில் பொன்னையும் வெள்ளியையும் மணியையும் அந்தக் குளத்தில் போடுகிறார்கள். அந்தப் பொருள்கள் கோயிலைப் பராமறிப்பதற்குப் பயன்படும். இவ்வாறு போடப்பட்ட பொருள்கள் அந்தக் குளத்தில் ஏராளமாய்க் கிடக்கின்றன. கோயிலைப் பழுதுபார்க்கவோ வேறு யாதேனும் கோயிற்பணி செய்யவோ அவசியம் நேரும்போது, குளத்தில் இறங்கித் துழாவிப் பார்த்து, அங்கே கிடக்கும் பொருள்களை எடுத்துக் கொள்கிறார்கள்.[17]

**தேரோட்டம்**

ஆண்டுதோறும், அந்தச் சிலை செய்து முடிக்கப்பட்ட நாளன்று பக்தர்கள் வந்து, அந்தச் சிலையை எடுத்து, அழகிய தேர் ஒன்றில் வைக்கிறார்கள். பின்னர் அரசன், அரசி, யாத்திரிகர், ஏனைய மக்கள் ஆகிய அனைவரும் சேர்ந்து தேரை இழுத்துக்கொண்டு போகின்றனர். அப்போது பலவகைப்பட்ட இன்னிசைக் கருவிகள் முழங்குகின்றன; பாடகர்கள் உரத்த குரலில் பாடுகிறார்கள். கன்னிப் பெண்கள் பலர் இரண்டிரண்டு பேராகச் சேர்ந்து, அற்புதமான முறையில் பாடிக்கொண்டு முன்னே செல்கின்றனர். யாத்திரிகர்களுட் பலர் தேரின் முன்னால் விழுகின்றனர். தங்களுடைய

17 இந்தக் கதைக்கு மசலக்-எல்-அப்சார் என்னும் நூலிலும் ஆதாரம் இருக்கிறது. ஓடோரிக் இங்கு வந்துபோன சில ஆண்டுகளுக்குப் பிறகு இந்த நகரை முகமது துக்ளக் பிடித்துக்கொண்டான். அப்போது அவன் அந்தக் குளத்திலிருந்த நீரையெல்லாம் எடுத்து வெளியே கொட்டிவிட்டு அடியிலிருந்த செல்வங்களை எடுத்துக்கொண்டான். அவற்றை 'இருநூறு யானைமீதும் பல்லாயிரம் எருதுகளின்மீதும் ஏற்றிக்கொண்டு போனான்' —யூல்.

தெய்வத்திற்குத் தங்கள் உயிரைக் கொடுக்க விரும்புவதாக அவர்கள் சொல்கிருர்கள். தேர் அவர்கள்மீது ஏறிச் செல்வதால் அவர்களுடைய உடல்கள் கால் வேறு கை வேருக வெட்டுண்டு நசுங்கிப் போகின்றன. விழுந்த இடத்திலேயே அவர்கள் இறந்து போகிருர்கள். இவ்வாறு குறிப்பிட்ட ஓர் இடம் வரும் வரையிலும் தேர் ஓடுகிறது. பின்னர் அங்கிருந்து அதனை மீண்டும் கோயிலுக்கு இழுத்துக்கொண்டு வருகிருர்கள். அப்போதும் ஆடலும் பாடலும் நிகழ்கின்றன. ஆண்டுதோறும் தேரோட்டத்தின்போது நசுங்கிச் சாகிறவர்களுடைய தொகை ஐந்நூறுக்கும் அதிகமாயிருக்கும். அவ்வாறு இறந்தவர்களின் உடல்களை எடுத்து எரித்துவிடுகிருர்கள். கடவுளுக்காக உயிரைக் கொடுத்த புனிதர்கள் என்று அவர்களை மக்கள் போற்றுகிருர்கள்.[18]

இதைப்போன்ற இன்னொரு பழக்கமும் அவர்களிடத்தில் இருக்கிறது. 'நான் விரும்பி வணங்கும் கடவுளுக்கு என்னைப் பலிகொடுக்க விரும்புகிறேன்' என்று ஒருவன் சொல்வான். அதைக் கேட்டதும் அவனுடைய நண்பர்களும் சுற்றத்தார்களும் அவனைச் சூழ்ந்துகொண்டு அவனுக்கு விருந்தளிப்பார்கள். அதற்குப் பிறகு அவனுடைய கழுத்தில் ஐந்து கூரிய கத்திகளைக் கட்டித் தொங்கவிட்டு, அவனை அழைத்துக்கொண்டு அவன் வணங்கும் தெய்வச்சிலை இருக்கும் இடத்திற்குப் போவார்கள். போகும் வழியெல்லாம் உரத்த குரலில் பாடிக்கொண்டே போவார்கள். பிறகு அவன் சிலைக்கு முன்னுல் நின்று, ஐந்து கத்திகளுள் ஒன்றை எடுத்து, 'என் தெய்வத்திற்காக இதோ என்னுடைய தசையை வெட்டுகிறேன்' என்று உரத்த குரலில் கூறிக்கொண்டே தன்னுடைய உடம்பில் ஏதாவது ஓரிடத்திலுள்ள தசையை வெட்டிச் சிலையின் முகத்தில் வீசுவான். பின்னர், 'இதோ நான் வணங்கும் கடவுளுக்கு என் உயிரைத் தருகிறேன்' என்று சொல்லிக்கொண்டே தன்னை மாய்த்துக் கொள்வான். உடனே அவனுடைய சுற்றத்தார்களும் நண்பர்களும் அவனுடைய உடலை எடுத்துக்கொண்டுபோய்க் கொளுத்திவிடுவார்கள். தெய்வத்திற்குத் தம்மைப் பலியிட்டுக்கொண்ட மனிதரை அவர்கள் புனிதராகக் கருதுகிருர்கள். இன்னும் எத்தனையோ வியப்பூட்டும் விசித்திரச் செயல்களை இந்நாட்டு மக்கள் செய்கிருர்கள். அவற்றையெல்லாம் நான் எழுதப் போவதில்லை.

[18] 'ஓடோரிக் ஜெகந்நாதர் கோயிலுக்குப் போய்விட்டாரோ என்னும் எண்ணம் தோன்றுகிறது. ஆனல், இந்தப் பழக்கம் ஒரிசாவின் தனி இடமாய் இருந்தது என்று சொல்ல முடியாது'.—யூல்.

இந்தத் தீவின்[19] அல்லது மாகாணத்தின் அரசனிடம் எண்ணற்ற ரத்தினங்களும் ஏராளமான பொன் வெள்ளி முதலிய செல்வங்களும் இருக்கின்றன. இந்தத் தீவில் முத்து ஏராளமாய்க் கிடைக்கிறது. உலகில் வேறெங்கும் இதைவிட மிகுதியாய் முத்துக் கிடைக்கின்றது என்று சொல்ல முடியாது. அதைப்போலவே இன்னும் எத்தனையோ பொருள்கள் இந்தத் தீவில் கிடைக்கின்றன. அவற்றைப் பற்றிய செய்திகளை எல்லாம் எழுதுவதற்கு நேரமில்லை.

—Yule and Cordier : *Cathy and the way Thither*, ii, pp. 141-46.

ஜ.[19] இந்த வகையில் ஓடோரிக் செய்துள்ள தவறு இது ஒன்றுதான். ஏனையோர் இமை நாடுகளுள் ஏறக்குறைய எல்லாவற்றையுமே தீவுகளாக்கி விடுகிறார்கள்.—யூல்.

# XXVIII. ஜார்டனஸ் துறவி
# கி.பி. 1323-30

## அ. மதமாற்றத்திற்கு இந்தியாவில் உள்ள வாய்ப்பு

லத்தீன் மக்களாகிய நம்முடைய புகழ் இந்தியாவில் அதிகமாய்ப் பரவியிருக்கிறது. நம்மை நாமே மதிப்பதைக் காட்டிலும் இந்திய மக்கள் நம்மை மிகவும் உயர்வாக மதிக்கிறார்கள். நாம் இந்தியாவுக்குப் போவோம் என்பது அவர்களுடைய சாத்திரங்களில் மிகவும் தெளிவாய் முன்பே எழுதிவைக்கப்பட்டுள்ளது என்று அவர்கள் சொல்கிறார்கள்.[1] அதனால், இங்கே நாம் வருவதை அவர்கள் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்துக்கொண்டே இருக்கிறார்கள். அன்றியும், அவர்கள் எதிர்பார்க்கின்ற நம்முடைய வருகை விரைவில் நிகழவேண்டும் என்பதற்காக அவர்கள் தங்களுடைய கடவுளைத் தங்களுடைய முறைப்படி ஒவ்வொரு நாளும் வேண்டிக் கொள்கிறார்கள். நம்முடைய போப்பாண்டவர் இரண்டு கப்பல்களை இந்தக்கடலில் நிறுத்தினால் போதும்; நமக்குப் பெருலாபம் ஏற்படும். அதே சமயத்தில் அலக்சாண்டிரிய சோல்டானுக்கு எவ்வளவு பெரிய அழிவு நேரிடும்! யாரே போப்பாண்டவருக்கு இதனைச் சொல்லவல்லார்? என்னைப் பொறுத்தவரையில் அது இயலாத செயல். நான் ஒரு சாதாரண வழிப்போக்கன். அதனால், அந்தப் பொறுப்பைப் புனிதத் துறவிகளாகிய உங்கள் கையில் விட்டுவிடுகிறேன். நீங்கள் பிரார்த்தனை செய்யும்போது இந்த வழிப்போக்கனையும் நினைவில் கொள்ளுங்கள். நம்முடைய மதத்தைத் தழுவும் இந்தியர்களுடைய உடல் கறுப்பாயிருந்தாலும் ஏசுநாதரின் அருளால் அவர்களுடைய ஆன்மா வெள்ளையாகிவிடும். அதற்காக

[1] சீனாவிலும் பர்மாவிலுங்கூட இத்தகைய செய்திகள் வழக்கிலிருந்தன. மெக்சிகோவிலும் இத்தகைய கதைகளை மக்கள் சொல்லிக்கொண்டிருந்தார்கள். —யூல்.

உழைக்கின்ற இந்தக் கிறிஸ்துவ வழிப்போக்கனுடைய முயற்சி வெற்றியடைய வேண்டுமென்று நீங்கள் பிரார்த்தனை செய்யுங்கள். 'இந்தப் புனிதப்பணி விரைவில் முடியுமா? வெற்றி கிட்டுமா?' என்று எண்ணி ஏங்கி நெட்டுயிர்க்கிறேன். அந்த நெட்டுயிர்ப்போடு இந்தக் கடிதத்தை முடிக்கிறேன். புனிதத் துறவிகளே, நான் விடைபெற்றுக் கொள்கிறேன்.

இந்தியாவிலுள்ள தாஞ நகரத்தில் கி. பி. 1323ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் [2] இதை எழுதினேன். இந்த நகரத்தில்தான் என்னுடைய புனிதத் தோழர்கள் சமயத் தொண்டில் உயிரிழந்தார்கள். இந்தக் கடிதம் எழுதப்பட்ட இந்நாள் சமயத் தொண்டில் உயிரிழந்த பேபியன், செபாஸ்டியன் ஆகிய புனிதர்களுடைய திருநாள்.

—Yule and Cordier: *Cathay*, Iii, pp. 79-80.

## ஆ. சிறிய இந்தியா[3]

சிறிய இந்தியாவின் தலைவாயிலில் மிகவும் இனிய பழங்களை ஏராளமாய்த் தருகின்ற பேரீச்ச மரங்கள் இருக்கின்றன. ஆனால், உள்ளே போகப் போகப் பேரீச்ச மரங்களே இல்லாமற் போகின்றன. [4]

இந்தச் சிறிய இந்தியாவில் நம் கவனத்தைக் கவர்கின்ற பல காட்சிகளைக் காண்கிறோம்; கண்டு வியக்கிறோம். இங்கே ஆறு, ஊற்று, குட்டை முதலிய நீர்நிலை எதுவும் இல்லை. மழையும் இங்கே அதிகமாய்ப் பெய்வதில்லை. மே மாத இடையிலிருந்து

[2] இங்கே குறிக்கப்பட்டுள்ள 1323 ஜனவரி என்னும் தேதி நம்முடைய கணக்குப்படி 1324 ஜனவரி என்று இருக்கவேண்டும் என்பது என் கருத்து. —யூல்.

[3] பின்னல் வருகின்ற செய்திகளின் அடிப்படையில் பார்க்கும்போது சிறிய இந்தியா என்பது சிந்து, மேற்கடற்கரையில் மலபாருக்கு வடக்கிலுள்ள பகுதிகள் ஆகியவை சேர்ந்த நாடு என்று கருதலாம். அதில் மெக்ரானும் சேர்ந்திருக்கக்கூடும். பெரிய இந்தியா என்பது மலபாரில் தொடங்கிக் கிழக்கில் உறுதியாகச் சொல்ல முடியாத ஓர் இடம் வரையிலும் பரவியிருந்த நாடு. பெரிய இந்தியாவில் ஜார்டனஸ் சம்பாவையும் (கம்போடியாவையும்) சேர்த்துப் பேசுகிருர். மூன்ரும் இந்தியா என்பது ஆப்பிரிக்காவின் கிழக்குப் பகுதி—யூல்.

[4] இது பெரும்பாலும் உண்மை என்று ஏற்றுக் கொள்ளலாம். சிந்து நாட்டில்தான் தின்பதற்கேற்ற பேரீச்சம் பழம் விளைகிறது. ஒரு வகைப் பேரீச்ச மரம் இந்தியா முழுவதிலும் வளர்கிறது. ஆனால், அதன் பழம் பயனற்றது—யூல்.

ஆகஸ்டு மாத இடைவரையிலும்—அதாவது, மூன்றே மாதம்—இங்கு மழை பெய்கிறது. அப்படியிருந்தும், இந்த நாட்டின் மண் மிகவும் வளமுடையதாய் இருக்கிறது. இது வியத்தகு செய்தி யன்றோ? மழை பெய்யாத ஒன்பது மாதத்திலும் பனி மிகவும் அதிகமாய்ப் பெய்கிறது. அதனால் நிலத்தின்மீது படியும் பனித்திவலைகள் ஞாயிறு தோன்றிய பின்னரும் அப்படியே இருக்கின்றன. பொழுது புலர்ந்து இரண்டு மூன்று மணிநேரம் வரையிலும் நிலத்தின்மீதுள்ள ஈரம் காய்வதில்லை.

இங்கே எண்ணற்ற அதிசயங்கள் காணக்கிடக்கின்றன. இங்கே—இந்த முதல் இந்தியாவில்—புதியதோர் உலகமே தொடங்குகிறது என்று சொல்லலாம். இங்கு வாழ்கின்ற மக்கள்—ஆடவர் மகளிர் அனைவருமே—கறுப்பு நிறம் உடையவர்கள்; அவர்கள் இடையிற் கட்டியுள்ள பருத்திநூல் துணி ஒன்றைத் தவிர வேறு ஆடை எதனையும் அணிவதில்லை. அந்தத் துணியின் ஒரு முனையை அவர்கள் தங்கள் கழுத்தின்மீது போட்டுக் கொள்கிறார்கள். இங்கே கோதுமை ஏராளமாய் இருக்கிறது; எனினும் உள்ளூர் வாசிகள் கோதுமை ரொட்டி சாப்பிடுவ தில்லை. அரிசியை அதற்குரிய மசாலையுடன் சேர்த்து நீரில் வேகவைத்து உண்கிறார்கள். இங்கே பாலும் வெண்ணெயும் எண்ணெயும் கிடைக்கின்றன. ஆனால், அவற்றைச் சமைக்காமல் அப்படியே சாப்பிடுகிறார்கள். இந்த இந்தியாவில் குதிரை, கோவேறு கழுதை, ஒட்டகம், யானை ஆகிய விலங்குகள் இல்லை. இங்கே மாடுகள் (பசுக்கள்) இருக்கின்றன. அவற்றையே இங்கு வாழும் மக்கள் தங்களுடைய வேலைகள் அனைத்திற்கும் பயன்படுத்துகிறார்கள். ஊர்ந்து செல்வதற்கும், பொதி சுமப்ப தற்கும், விளைநிலத்தில் வேலை செய்வதற்கும் மாடுகளே பயன்படு கின்றன. இங்குக் கழுதைகள் அதிகமாயில்லை; இருக்கின்ற சில கழுதைகளும் மிகச் சிறியவை; அவை மக்களுக்கு அவ்வளவாகப் பயன்படுவதில்லை.[5]

இங்கே பகலும் இரவும் ஏறக்குறைய ஒரே நீளமுள்ளவை. இரண்டுமணி நேரத்திற்கு மேல் அவை வேறுபடுவதில்லை.

இங்கே பூக்களும் கனிகளும் எப்போதும் கிடைக்கின்றன. மரங்கள் பலவகைப்பட்டவையாய் இருக்கின்றன. அதனால், பழங்களும் பலவகைப்பட்டவையாய் இருக்கின்றன. எடுத்துக் காட்டாக, சக்கி என்னும் பெயருடைய மிகப் பெரிய

[5] சிறிய இந்தியா என்று ஜார்டனஸ் குறிக்கிற பகுதியில் குதிரையும் ஒட்டகமும் இல்லையென்பது பிழையான செய்தியாகும்.

**பலாப்பழம்** பழத்தைத் தருகின்ற மரம் ஒன்று இங்கே இருக்கிறது. அந்தப் பழம் ஐந்துபேர் தின்னக் கூடிய அளவு பெரியதாயிருக்கிறது.[6]

மேலே சொன்ன பழத்தைப் போன்ற பழத்தைத் தருகிற இன்னொரு மரமும் இருக்கிறது. அதன் பெயர் 'ப்லோக்கி' என்பதாகும். அதனுடைய பழமும் மேலே சொன்ன பழத்தைப் போலவே பெரிதாகவும் தித்திப்பாகவும் இருக்கிறது. ஆனால் அது வேறு வகையைச் சேர்ந்த பழம், இது வேறு வகையைச் சேர்ந்த பழம். இந்தப் பழம் மரத்தினுடைய சிறு கிளைகளில் காய்ப்பதில்லை. பழத்தின் பளுவை அந்தச் சிறு கிளைகள் தாங்கா. எனவே, அவை பெருங்கிளைகளிலும் அடிமரத்திலும் காய்க்கின்றன. வேர் வரையிலுங் கூட இந்தப் பழங்களைக் காண்கிறோம்.

ப்ளம் போன்ற கனிதருகின்ற இன்னொரு மரம் இங்கே இருக்கிறது. ஆனால், அந்தப் பழம் ப்ளம்மைக் காட்டிலும் மிகவும் பெரியது. அதன் பெயர் அனிபா என்பதாகும். அது சுவையாயிருக்கிறது. அந்தச் சுவையின் உயர்வை வர்ணிக்கச் சொற்களே யில்லை.[7]

[6] 'ஜாக்' என்னும் சொல் இந்தியாவிலுள்ள ஒரு வகைப் பழத்தைக் குறிக்கிறது. ஆனால், அது ஆங்கிலச் சொல்லுமன்று, ஹிந்துஸ்தானிச் சொல்லுமன்று. அது ஆங்கிலோ இந்தியர் உண்டாக்கிய சொல். இத்தகைய சொற்களின் வேரைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். அந்தப் பழம் மலையாள மொழியில் பிலாவு என்று சொல்லப்படுகின்றது என்று ட்ருரி சொல்கிறார். ஆனால், ரீட் என்பவர் ஜக்கா என்னும் சொல்லே அந்தப் பழத்தைக் குறிக்கும் மலையாளச் சொல் என்கிறார். ஜாக் என்னும் சொல் மலையாளத்தில் இயக்கா என்று வழங்குகிறது என்று விஸ்சோட்டனும் சொல்கிறார். இந்தச் சொல்லிலிருந்தே ஜாக் என்னும் சொல் தோன்றியது என்பதில் ஐயமில்லை—யூல்.

ரீட் சொலகின்ற ஜக்கா என்னும் சொல் மலையாளத்துச் சக்கா என்னும் சொல்லே என்பது தெளிவு.

[7] 'அம்பா' (பாரசீகம்)—மாம்பழம். இபன் பதூதா 'அன்பா' என்று சொல்கிறார். அதனை லீ என்பவர் திராட்சை என்று மொழி பெயர்த்திருக்கிறார். அரபு மொழியில் 'அன்பா' என்பது திராட்சைதான் என்று நான் நம்புகிறேன். மாம்பழத்தின் சுவையைப் பற்றி ஜார்டனஸ் கூறும் செய்தி உயர்வகை மாம்பழங்களுக்கே பொருந்தும். அதனால், 'பம்பாய் மாம்பழம்' பதின்மூன்றும் நூற்றாண்டிலேயே இருந்தது என்று நாம் கருதலாம். மாம்பழம் தினால் கொப்புளம் வரும் என்று ஆங்கிலோ இந்தியர் கருதினர். விஸ்சோட்டன் காலத்திலும் அந்தக் கருத்து நிலவியது. மாங்காய் பழுக்கின்ற காலத்தையும் அப்போது அடிக்கின்ற கடுமையான வெயிலையும் நோக்கும்போது, 'அந்தப் பழத்தைத் தின்னுதவர்களும் மேலே சொன்ன நோய்களுக்கு இரையாகிறார்கள்' என்று உரையாசிரியர் சொலவதை நான் ஏற்றுக்கொள்கிறேன்—யூல்.

பழம் முதலிய பொருள்களைப் பொறுத்தவரையில், இந்த இந்தியா கிறிஸ்துவ உலகினின்று முழுதும் வேறுபட்டதாய் இருக்கிறது. ஆனால், ஒருசில ஒற்றுமைகளும் இல்லையென்று சொல்ல முடியாது. இங்கேயும் எலுமிச்சையினப் பழங்கள் விளைகின்றன. சில இடங்களில் விளையும் எலுமிச்சை சர்க்கரையைப் போல இனிக்கிறது. ஏனைய இடங்களில் விளையும் எலுமிச்சை நம் நாட்டு எலுமிச்சையைப் போலவே புளிப்பாய் இருக்கிறது. இங்கே மாதுளையும் விளைகிறது. ஆனால், அது மிகவும் சிறியது; அவ்வளவாகச் சுவையாகவும் இல்லை. இங்கே திராட்சை மிகக் குறைவாகவே விளைகிறது. ஒயின் செய்வதற்கு இந்நாட்டு மக்கள் அதனைப் பயன்படுத்துவதில்லை. பழத்தை அப்படியே தின்றுவிடுவார்கள். ஆனால், இங்கே வளர்கின்ற மரங்கள் சிலவற்றின் சாற்றை எடுத்து அதனை ஒயினுக்குப் பதிலாய்க் குடிக்கிறார்கள்.

**தென்னை**

அத்தகைய மரங்களுள் முதன்மையானது 'நார்கில்' என்பது. அதில் மாதந்தோறும் ஒரு புதிய ஓலை தோன்றுகிறது. பார்ப்பதற்கு அது பேரீச்ச மரத்தின் அழகிய ஓலையைப் போல இருக்கிறது. அந்த ஓலை அல்லது கிளையில் மனிதனுடைய தலையளவுள்ள பெரிய காய் காய்க்கிறது. ஒரே மரத்தில் முப்பது காயைக் காணலாம். பூவும் காயும் ஒரே சமயத்தில் தோன்றுகின்றன. ஆண்டின் ஒவ்வொரு மாதமும் புதுப் பூவும் காயும் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. அதனால், ஒரே சமயத்தில் பதினொரு வகை முதிர்ச்சி உடைய பூவையும் காயையும் நாம் காண்கிறோம். இது விந்தையன்றோ? இந்த விந்தையை நேரிற் பார்த்தாலன்றிப் புரிந்துகொள்வது கடினம். இந்தக் கிளைகளிலும் காய்களிலுமிருந்து மிகவும் இனிக்கின்ற ஒருவகை நீரை எடுக்கிறார்கள். காயின் உள்ளே இருக்கின்ற பருப்பு முதலில் மிகவும் மென்மையாய் இருக்கிறது. தின்பதற்கு அது மிகவும் நன்றாயிருக்கிறது. நாளாக நாளாக, அது கெட்டியாகி விடுகிறது. அதிலிருந்து மருந்துக்குப் பெரிதும் உதவுகின்ற ஒருவகை எண்ணெய் கிடைக்கிறது.

காய் தேவையில்லை என்று கருதுபவர்கள், காய்க்கின்ற தண்டு (பாளை) தோன்றிய ஒரு மாதம் அல்லது இரண்டு மாதத்திற்குள் அதனைச் சிறிது வெட்டி, அதனுடன் ஒரு கலயத்தைக் கட்டி வைத்து விடுகிறார்கள். வெட்டிய இடத்திலிருந்து வடிகிற சாறு அந்தக் கலயத்தில் விழுகிறது. (வெட்டாமல் விட்டால் அந்தச் சாறு காயாக மாறுகிறது.) அந்தச் சாறு பாலைப்போல வெண்மையாயிருக்கிறது. முழுப் புளிப்பேறாத திராட்சைச் சாறு போல இனிப்பாயிருக்கிறது. குடித்தால் ஒயினைப் போலப்

போதை தருகிறது. இந்நாட்டு மக்கள் ஒயினுக்குப் பதிலாய் அதனைக் குடிக்கிறார்கள். குடிக்க விரும்பாதவர்கள், அது மூன்றில் ஒரு பாகமாய்ச் சுண்டிப் போகும்வரையில் காய்ச்சுகிறார்கள். அவ்வாறு காய்ச்சப்பட்ட சாறு தேனைப் போலக் கெட்டியாய் விடுகிறது. தேனைப் போலவே அது இனிப்பாகவும் இருக்கிறது. தேனைப் போலவும் தேனிறாலைப் போலவும் அது பழங்களைப் பதனஞ் செய்வதற்கும் பயன்படுகிறது. ஒரு கிளையிலிருந்து சராசரியாக, ஓராண்டு முழுதும், பகலில் ஒரு கலயஞ் சாறும் இரவில் ஒரு கலயஞ்சாறும் கிடைக்கும். இத்தகைய ஒரு மரத்தில் ஐந்தாறு கலயங்கள் ஒரே சமயத்தில் தொங்கிக் கொண்டிருப்பதைக் காணலாம். அந்த மரத்தின் இலை (ஓலை) கூரை வேய்வதற்குப் பயன்படுகிறது. அதனுடைய காயைத்தான் நம் நாட்டில் 'இந்தியக் கொட்டை' என்று சொல்கிறோம். அதனுடைய புறத்தோலியை (மட்டையை) சரடு திரிக்கப் பயன்படுத்துகிறார்கள்.[8] அந்தச் சரட்டால்தான் இந்தப் பக்கத்து மக்கள் தங்களுடைய படகுகளைத் தைத்து இணைக்கிறார்கள்.

பனை

மேலே சொன்ன மரத்தைப்போலவே, குடிப்பதற்கு நன்றாய் இருக்கிற ஒரு வகை வெள்ளைத் தேறலை ஆண்டு முழுதும் தருகின்ற இன்னொரு மரம் இருக்கிறது. அந்த மரத்திற்குத் 'தாரி'[9] என்பது பெயர். பெல்லூரி[10] என்னும் இன்னொரு மரமும் ஒரு வகைத் தேறலைத் தருகிறது. அந்தத் தேறல் தாரித் தேறலைப் போலவே இருந்தாலும் குடிப்பதற்கு இன்னும் நன்றாயிருக்கிறது. இன்னும் எத்தனையோ வகை மரங்கள் இங்கு வளர்கின்றன. அவை பார்ப்பதற்கு மிகவும் விந்தையாக இருக்கின்றன. அவற்றுள் ஒன்றன் வேர்கள் மேலிருந்து வளர்ந்து கீழே இறங்குகின்றன. அவை சிறிது சிறிதாய்க் கீழிறங்கி, இறுதியில் நிலத்தில் புகுந்துவிடுகின்றன. நாளடைவில் அவை மரத்தின் முதன்மையான அடிமரத்தைப் போல அடிமரங்களாகவே மாறிவிடுகின்றன. அவை வளைவுகளைப் போலத் (கவான்களைப் போல) தோன்றுகின்றன. இவ்வாறு ஒரே மரத்தில் இருபது முப்பது அடிமரங்கள் ஒன்றோடொன்று இணைந்து நிற்கும் விந்தையை இங்கே நாம் காண்கிறோம். இந்த அற்புதத்தை நான் என் கண்ணாலேயே கண்டேன். அதனைச்

[8] கயிறு—யூல்

[9] தாடி (தெலுங்கு), பனை.

[10] மலபார்ப் பார்ப்பனர் பிரலா என்று சொல்லும் மரந்தான் பெல்லூரி என்று கருதுகிறேன்—யூல்.

சொற்களில் வர்ணிப்பது எளிதன்று.[11] இந்த மரத்தின் பழம் தின்பதற்குப் பயன்படாது. அது நச்சுப்பழமாய் இருப்பதால் அதைத் தின்பவர் இறந்துபோவர். மற்ற மரங்களைக் காட்டிலும் மிகவும் கெட்டியான இன்னொரு மரம் இருக்கிறது. மிக வலிமை வாய்ந்த அம்பும் அதில் தைக்காது.

இந்த இந்தியாவிலும் பெரிய இந்தியாவிலும் உள்ள மரங்களில் புதிய இலைகள் வளரும் வரையிலும் பழைய இலைகள் உதிர்வதில்லை.

இங்கே வளர்கின்ற மற்ற மரங்கள் எல்லாவற்றையும் வர்ணிக்கத் தொடங்கினால் இந்தக் குறிப்பு மிகவும் நீண்டு விடும். படிப்பவர்களுக்கும் சலிப்புத் தட்டிவிடும். இங்கு எண்ணற்ற வகையான மரங்கள் ஏராளமாய் இருக்கின்றன. அவற்றைப் பற்றிய செய்திகள் அனைத்தையும் புரிந்துகொள்வதே கடினம்.

**காட்டு விலங்குகள்**

காட்டு விலங்குகளைப்பற்றி இப்போது நான் சொல்லப் போகிறேன். இங்கே சிங்கம், புள்ளிப் புலி, காட்டுப் பூனை முதலிய விலங்குகள் இருக்கின்றன. க்ரே ஹவுண்டு (நீண்ட மெல்லிய கால்களும் கூரிய பார்வையும் வீரைவோட்டமும் உடைய முயல் வேட்டை நாய்) போன்ற ஒரு விலங்கும் இங்கே இருக்கிறது. அதன் காதுகள் மட்டும் கறுப்பாய் இருக்கின்றன. உடலின் ஏனைய பகுதிகள் எல்லாம் தூய வெண்மையாய் இருக்கின்றன. இந்தப் பக்கத்து மக்கள் அந்த விலங்கை சியகோயிஸ்[12] என்று சொல்கிறார்கள். அந்த விலங்கு யாதேனும் ஒன்றைப் பற்றிக் கொண்டால் அதனை விடவே விடாது, உயிர் போனாலும் விடாது. காண்டாமிருகம் என்னும் இன்னும் ஒரு விலங்கும் இங்கே இருக்கிறது. அது குதிரையைப் போலப் பெரிய விலங்கு. அதற்கு நீண்ட திருகுகொம்பு ஒன்று இருக்கிறது. ஆனால் அது வியன்சினைமா (unicorn) அன்று.

நச்சுப் பல்லை உடைய கொடிய விலங்குகளும் இங்கே இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, இங்குள்ள பாம்புகளைக் கூறலாம். பலவகைப்பட்ட மிகப் பெரிய பாம்புகள் இங்கே இருக்கின்றன. அவற்றின் நிறமும் பலவகையாய் இருக்கிறது. கரும் பாம்புகளும், செம் பாம்புகளும், வெண் பாம்புகளும், பசும் பாம்புகளும் இங்கே இருக்கின்றன. இருநிற இடைக் கலப்புப்

[11] ஆலமரம்.

[12] சியாகோஷ் (கரிய காது); லின்க்ஸின் பாரசீகப் பெயராகும்,

பாம்புகளையும் இங்கே பார்க்கலாம். அன்றியும், இருதலை, முத்தலை, ஐந்தலைப் பாம்புகளும் இங்கே இருக்கின்றன. அடடா, என்ன விந்தை! இது விந்தையிலும் விந்தையன்றோ?[18]

இங்கே முதலைகளும் இருக்கின்றன. அவற்றுட் சில மிகவும் பெரியவையாய் இருக்கின்றன. மிகப் பெரிய குதிரையைக் காட்டிலும் அவை பெரியவை. அவை பல்லியைப் போன்ற உருவம் உடையவை. பல்லியைப் போலவே அவற்றிற்கு வாலும் இருக்கிறது. அவற்றின் தலை பன்றியின் தலையைப் போல இருக்கிறது. மிகவும் வலிமை வாய்ந்தவையும் பார்ப்பதற்கு அச்சந்தரக்கூடியவையும் ஆகிய இரு வரிசைப் பற்கள் இருக்கின்றன. அவற்றின் பிடியிலிருந்து தப்புவதற்கு எந்த விலங்காலும் இயலாது. முதலை நீரில் இருக்கும்போது அதனுடைய பிடி மிகவும் வலிமையுடையதாய் இருக்கிறது. அதனுடைய தோலை இரும்புக் கவசம் என்று சொல்லலாம். அதில் அம்பு, வாள், ஈட்டி போன்ற எத்தகைய ஆயுதமும் பாயாது. தோலின் செதிள்கள் அவ்வளவு கெட்டியாய் இருக்கின்றன. அதுவொரு விந்தையான விலங்கு. நீரில் இருக்கும்போது அதைப்போல வலிமையுடைய கொடிய விலங்கு எதுவுமே இல்லை. ஊர்ந்து செல்லும் விலங்குகள் இன்னும் எத்தனையோ இருக்கின்றன. ஆனால், அவற்றின் பெயர்கள் எனக்குத் தெரியா.

**பறவைகள்**

பறவைகளைப் பொறுத்தவரையில், காக்கை, சிட்டுக்குருவி ஆகியவற்றைத் தவிர, ஏனையவை எல்லாம் நம்நாட்டுப் பறவைகளிலிருந்து முழுவதும் வேறுபட்டவை என்று சொல்லிவிடலாம். இங்கே கிளிகளும் ஏராளமாய் இருக்கின்றன. அவை கூட்டங் கூட்டமாய் வாழ்கின்றன. ஒரு கூட்டத்தில் ஆயிரத்திற்கும் அதிகமான பறவைகளைக் காணலாம். இந்தப் பறவைகளைப் பிடித்துக் கூட்டிலடைத்துப் பேசுவதற்குப் பயிற்சி அளிக்கிறார்கள். அவை பேசுவதைக் கேட்டால் அவை பகுத்தறிவுடைய உயிரனங்களோ என்னும் ஐயம் நமக்குத் தோன்றும். உண்மையிலேயே பருந்துகளைப் போலப் பெரிய வௌவால்கள் இங்கே இருக்கின்றன. அவை பகலில் எங்கும் செல்வதில்லை. பகல் முழுவதும் மரக்கிளைகளில் தங்கள் காலை மாட்டிக்கொண்டு தலைகீழாய்த் தொங்கிக்

[18] நல்ல பாம்பின் விரித்த படத்தையும் அதிலுள்ள மூக்குக் கண்ணாடி போன்ற உருவத்தையும் பார்த்தால மிகுந்த அச்சம் உண்டாகும். அந்த அச்சத்தில் நல்ல பாம்புக்கு இரண்டு தலையோ மூன்று தலையோ இருக்கின்றன என்று ஒருவர் எண்ணினால், அந்த மனப்பிரமையை நாம் புரிந்து கொள்ளலாம். ஆனால் ஐந்தலை என்பது எவ்வகையிலும் பொருந்தாது—யூல்.

கொண்டிருக்கின்றன. அப்போது பார்த்தால் அவை மரத்தில் காய்த்துத் தொங்கும் பெரிய கனிகளைப் போலத் தோன்றும். ஆனால் பொழுது விழுந்ததும் அவை அங்குமிங்கும் பறக்கத் தொடங்குகின்றன. என்னே விந்தை!

மயில், கவுதாரி, கோழி போன்ற இன்னும் எத்தனையோ வகைப்பட்ட பறவைகள் இங்கே இருக்கின்றன. அவற்றின் நிறமும் பல்வேறு வகைப்பட்டது. சில வெள்ளை வெளேரென்றும், சில பச்சைப் பசேலென்றும், சில இருவண்ண இடைக்கலப்பு நிறமாகவும் இருக்கின்றன. அவற்றின் வண்ண அழகை வர்ணிப் பதற்கேற்ற சொற்களேயில்லை.

இந்த இந்தியாவில் மக்கள் போருக்குப் போகும்போதும் தங்களுடைய தலைவர்களுக்கு மெய்க்காப்பாளராய்ப் பணி யாற்றும்போதும் நிர்வாணமாகவே செல்கிறார்கள். கையில் ஒரு கேடயத்தையும் இன்னொரு கருவியையும் வைத்திருக்கிறார்கள். கேடயம், வலிமையற்றது, மிக எளிதில் அழிந்து போகக்கூடியது. இன்னொரு ஆயுதமும் போரில் அவ்வளவாகப் பயன்படக்கூடியது என்று சொல்ல முடியாது. இறைச்சியைத் தீயில் வாட்டுவதற்கு நாம் பயன்படுத்தும் இரும்பு முள்ளைப் போன்றது அது. எனவே, அவர்கள் செய்வதைப் போர் என்று சொல்வதற்கு மாறாகக் குழந்தை விளையாட்டு என்று சொல்வதே பொருத்தமாயிருக்கும்.

இந்த இந்தியாவில் பலவகைப்பட்ட ரத்தினங்கள் கிடைக் கின்றன. அவற்றுள் வைரம் மிகவும் முக்கியமானது. இங்குக் கிடைக்கும் வைரம் உலகத்திலேயே தலைசிறந்தது.

**மணிக்கற்கள்**

இந்தக் கற்களைச் சாணை பிடித்துப் புத்துருவம் தருவதற்கு எந்தக் கலைஞனாலும் இயலாது. இயற்கையாய் அவை பெற்றுள்ள உருவமே மிகச் சிறந்ததாய் இருக்கிறது. அவற்றின் இயல்புகளை எடுத்துரைத்தால் இந்தக் குறிப்பு மிகவும் நீண்டுவிடும். அதனால் இத்துடன் அமைகிறேன்.

இந்த இந்தியாவில் இன்னும் எத்தனையோ வகைப்பட்ட மணிக்கற்கள் கிடைக்கின்றன, அவை மிகவும் உயர்ந்த இயல்பு களைப் பெற்றவை. அவற்றை யார் வேண்டுமானாலும் தோண்டி எடுத்துக் கொள்ளலாம். அவர்களை யாரும் தடுப்பதில்லை.

இந்த இந்தியாவில் பிரபுக்களோ வேறு உயர்ந்த மனிதர்களோ இறந்துபோனால், அவர்களுடைய உடலைத் தீயிலிட்டுக் கொளுத்தி விடுகிறார்கள். அவர்களுடைய

மனைவிமாரும் சிதையிலேறி உயிரோடு வெந்து சாம்பலாகி விடுகிருர்கள். தங்கள் கணவன்மார்மீது வைத்துள்ள அன்பிற்காகவும், இம்மையில் தங்கள் புகழை நிலைநாட்டுவதற்காகவும், மறுமையில் நிலைத்த இன்பத்தைப் பெறுவதற் காகவும் அவர்கள் உடன்கட்டை ஏறுகிருர்கள். அவர்கள் நெருப்பில் பாயும்போது, திருமணஞ் செய்துகொள்ள மணவறைக்குப் போகும் பெண்களைப் போல, மிகவும் மகிழ்ச்சியாய்த் தோன்றுகிருர்கள். அவ்வாறு செய்பவர்களைச் சிறந்த இயல்புகளையுடைய பெண்கள் என்று மற்றவர்கள் பாராட்டுகிருர்கள். இது வியத்தகு செய்தியன்ருே? ஒருவன் இறந்துபோனல் ஐந்து பெண்கள் உடன்கட்டை ஏறுவதையும் நான் என் கண்ணுல் கண்டிருக்கிறேன்.

சதி (உடன்கட்டை ஏறும் பழக்கம்)

இந்த இந்தியாவில் புறச்சமயிகள் இன்னும் சிலர் இருக் கின்றனர். அவர்கள் தீயை வழிபடுபவர்கள். அவர்கள் பிணத்தைப் புதைப்பதும் இல்லை, சுடுவதும் இல்லை; கூரையில்லாத ஒரு தூபிக்குப் பிணத்தை எடுத்துக் கொண்டுபோய், அதன்மீதுள்ள ஆடைகளை அகற்றிவிட்டு, உடலை அங்கேயே போட்டு விடுகிருர்கள். நாற்றத்தையறிந்து அங்கே வரும் பறவைகள் பிணத்தின் தசையை எல்லாம் தின்று விடுகின்றன. அவர்கள் இரண்டு அடிப்படைக் கொள்கைகளில் நம்பிக்கையுடையவர் களாய் இருக்கிருர்கள். அவை நல்லது கெட்டது, ஒளி இருள் என்பவையாகும். அவற்றைப் பற்றிய ஆராய்ச்சியில் நான் இப்போது இறங்கவில்லை.[14]

பாரசீகர்

'தும்பிரி'[15] என்று சொல்லப்படும் இன்னெரு வகுப்பு மக்களும் இங்கே இருக்கிருர்கள். அவர்கள் அழுகிப்போன இறைச்சியையும் செத்த விலங்குகளின் இறைச்சியையும் உண்பவர்கள். அவர்கள் வழிபடுகின்ற தெய்வம் என்று எதுவுமே இல்லை. சமுதாயத்திலுள்ள ஏனைய வகுப்பினருக்கு ஊழியஞ் செய்வதும் மூட்டை தூக்குவதும் அவர்களுடைய வேலை.

இந்த இந்தியாவில் பச்சை இஞ்சி ஏராளமாய் விளைகிறது. கரும்பும் இங்கு அதிகமாய் விளைகிறது.

[14] இந்தக் குறிப்புச் சுருக்கமாகவும் துல்லியமாகவும் இருக்கிறது. இந்தியாவிலிருந்த பாரசீகரைப் பற்றிய முதற்குறிப்பு இதுவாகத்தான் இருக்கவேண்டும்—யூல்.

[15] தோம்ரா அல்லது தோம்.

இங்கே காரப் என்னும் மரமும் வளர்கிறது. (காரப் என்பது கழற்சி-மயிற்கொன்றை ஆகியவற்றை உள்ளடக்கிய மத்திய தரைக் கடல் சார்ந்த மர இனவகை.) அந்த மரம் இங்கு மிகவும் பெரியதாகவும் உயரமாகவும் வளர்கிறது. அதைப் பார்த்தால் நீங்கள் மருட்சி அடைவீர்கள். இந்த இந்தியாவைப் பற்றி இன்னும் எத்தனையோ வியத்தகு செய்திகளைச் சொல்ல முடியும் ஆனால், அதற்கு இப்போது நேரமில்லை. இந்த இந்தியாவின் சில பகுதிகளில் நிலவாகை மரம் அதிகமாய் வளர்கிறது.

இந்த இந்தியாவில் வாழும் மக்கள் துப்புரவான உணவை உண்கிறார்கள்; உண்மை பேசுகிறார்கள்; நீதியை மிகவும் மதிக்கிறார்கள்; பண்டைக் காலத்திலிருந்து ஒவ்வொருவனும் சமுதாயத்தில் தன்னுடைய தகுதிக்கும் நிலைக்கும் ஏற்றபடி அனுபவித்து வந்த உரிமைகளுக்குப் பங்கம் ஏற்படாமல் பார்த்துக் கொள்வதில் மிகவும் எச்சரிக்கையாய் இருக்கிறார்கள்.

இங்கே வெப்பம் மிகமிகக் கடுமையாய் இருக்கிறது. வெளியூர்க்காரர்கள் இந்த வெப்பத்தால் எவ்வளவு துன்புறுவார்கள் என்பதை எடுத்துரைக்கச் சொற்களே யில்லை.

இந்த இந்தியாவில் பொன், இரும்பு, இயல்பான பொன் வெள்ளிக் கலவை ஆகிய உலோகங்களைத் தவிர வேறு உலோகங்கள் கிடைப்பதில்லை. ஏனைய உலோகங்கள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. இங்கே மிளகும் விளைவதில்லை. உணவுக்குச் சுவையூட்டும் நறுமணப் பொருள்களுள் இஞ்சியைத் தவிர வேறு ஒன்றும் இங்கே விளைவதில்லை.

இந்த இந்தியாவில் பெரும்பாலான மக்கள் உருவ வழிபாடு செய்பவர்கள். ஆனால், இந்த நாட்டின் பெரும்பகுதி துருக்கி சாரசன்மார் ஆட்சியில் இருக்கிறது. சாரசன்மார் மூல்டானிலிருந்து வந்து இந்த நாட்டை வென்று தம்முடைய ஆட்சியை நிறுவிக்கொண்டனர்.

**மதங்கள்**

அவர்கள் எண்ணற்ற கோயில்களை அழித்து அவற்றிலிருந்த தெய்வச் சிலைகளைத் தகர்த்தெறிந்து விட்டார்கள். அது போலவே கிறிஸ்துவக் கோயில்களையும் அவர்கள் தகர்த்து விட்டார்கள். அத்துடன் நில்லாமல் கோயில்களின் மானியங்களையும் உடைமைகளையும் கைப்பற்றிக் கொண்டார்கள். அன்றியும், அந்தக் கோயில்கள் இருந்த இடத்தில் தங்களுடைய பள்ளிவாசல்களைக் கட்டிக் கொண்டார்கள். அந்தோ, அந்த அழிவுகளைக் காண்பதும் கொடுமைகளைக் கேட்பதும் எவ்வளவு துன்பம் தருகின்றன!

அண்மைக் காலத்தில்தான் அந்தக் கொடுமைகள் நிகழ்ந்தன. அப்படியிருந்தும் பெரும்பாலான மக்கள் இன்னும் உருவ வழிபாடு செய்பவர்களாகவே இருக்கிறார்கள்!

இந்த இந்தியாவில் வாழ்கின்ற புறச்சமயிகள் (உருவ வழி பாட்டினர்) இலத்தீன் மக்களாகிய நாம் இந்த உலகம் முழுவதையும் கட்டி ஆளப் போகிறோம் என்று நம்புகிறார்கள். வருவதுரைக்கும் ஆற்றல் வாய்ந்த அவர்களுடைய தீர்க்க தரிசிகள் அவ்வாறு சொல்லி வைத்திருக்கிறார்களாம்.

இந்த இந்தியாவில் அங்கும் இங்குமாகச் சிதறிக் கிடக்கின்ற சில மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்களைக் கிறிஸ்துவர்கள் என்று சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால், உண்மையில், அவர்கள் கிறிஸ்துவரல்லர்; ஞான ஸ்நானம் பெற்றவரும் அல்லர்; அவர்கள் கிறிஸ்து மதக்கோட்பாடுகளை அறியாதவர்கள், புனித தாமசே ஏசுகிறிஸ்து என்று அவர்கள் நம்புகிறார்கள்!

நான் இப்போது எந்த இந்தியாவைப் பற்றிப் பேசுகிறேனோ அந்த இந்தியாவில் சுமார் மூந்நூறு மக்களை நான் கிறிஸ்து மதத்தில் சேர்த்திருக்கிறேன். அவர்களுட் பெரும்பாலார் உருவ வழிபாட்டினரும் சாரசன்மாரும் ஆவர்.

உருவ வழிபாட்டினருக்குக் கிறிஸ்துவின் நற்செய்தியை எடுத்துரைப்பவர்கள் எவ்வித அபாயத்திற்கும் உள்ளாவதில்லை என்பதை நான் இப்போது சொல்லிவிட வேண்டும். உருவ வழி பாட்டினருள் யாரேனும் ஞானஸ்நானம் பெற விரும்பினால் அவர்களை யாருமே இங்குத் தடை செய்வதில்லை. கீழை நாடுகள் அனைத்திலுமே இந்த நிலையை நாம் காண்கிறோம். இந்தியர்கள், டார்ட்டார்கள் முதலிய அனைவர்க்குமே இந்தக் கூற்றுப் பொருந்தும்.

உருவ வழிபாட்டினர் தம் கடவுளர்கட்குப் பின்வருமாறு பூசை செய்கின்றனர். தெய்வச் சிலைக்குப் பூசை செய்வதற் கென்று ஒரு பூசாரி இருக்கிறான். அவன் நீளச் சட்டை ஒன்றை அணிந்துகொள்கிறான். அந்தச் சட்டை தரையைத் தொடுகின்ற அளவுக்கு நீளமாயிருகிறது. அதற்கு மேல் அவன் வெண்ணிறத் தளர் மேலாடை அங்கி ஒன்றை அணிந்துகொள்கிறான். அது நமது குருமார் அணிந்துகொள்ளும் அங்கியைப் போல இருக்கிறது. அவனுக்கு உதவியாளன் ஒருவன் இருக்கிறான். அவனும் சட்டை அணிந்திருக்கிறான். அவன் ஒரு திண்டை எடுத்துக்கொண்டு வந்து பூசாரியின் முன்னால் வைக்கிறான்,

பூசாரி தன்னுடைய முழங்கால்களைத் திண்டின்மேல் ஊன்றிக் கொண்டும், கையில் பலவகைப்பட்ட உணவுப் பண்டங்கள் வைக்கப்பட்ட இரண்டு முழ நீளமுள்ள தட்டு ஒன்றை ஏந்திக் கொண்டும், அந்த நிலையிலேயே தெய்வச்சிலை வைக்கப்பட்டுள்ள பீடத்தை நோக்கி முன்னேறுகிறான். (உணவுப் பண்டங்களின் மேல் மெழுகு திரிபோல எரிகின்ற திரிகள் வைக்கப்பட்டுள்ளன.) பூசாரி பீடத்தை அடைந்ததும் சிலையின் முன்னால் தட்டை வைக்கிறான். அதன்பின் ஒரு வகைப் பானத்தை அந்த உணவின் மீது ஊற்றி, அதில் ஒரு பகுதியை எடுத்துச் சிலையின் கையில் வைக்கிறான். மீதியிருக்கின்ற உணவைக் கூறு போட்டு, ஒரு கூறை அவனே உண்கிறான்.

உயிரினங்களுள் ஏறக்குறைய எல்லாவற்றையும் போன்ற சிலைகளை அவர்கள் செய்துவைத்து வழிபடுகிறார்கள். மேலும் அவர்களுடைய கடவுள் எப்படி இருப்பார் என்று அவர்கள் கருதுகிறார்களோ அப்படியும் ஒரு சிலையைச் செய்து கோயிலில் வைத்துக் கும்பிடுகிறார்கள். அவர்கள் வழிபடுகின்ற கடவுளர் அனைவர்க்கும் மேலான ஒரு கடவுள்—எல்லாம் வல்ல இறைவன், ஏனைக் கடவுளர் அனைவரையும் படைத்தவன்—ஒருவன் இருக்கிறான் என்று அவர்கள் நம்புகிறார்கள் என்பது உண்மையே. அன்றியும், இந்த உலகம் தோன்றி 28,000 ஆண்டுகள் ஆயின என்றும் அவர்கள் நம்புகிறார்கள்[16].

இந்தியர்—இந்த இந்தியாவில் மட்டுமன்றி ஏனை இந்தியாக் களிலும் வாழ்பவர்கள்—எருதைக் கொல்வது கிடையாது. அதனைத் தங்களுடையத் தந்தையைப்போல மதித்துப் பெருமைப்படுத்துகிறார்கள். சிலர்—பெரும்பாலானவர் என்றே சொல்லலாம்—எருதை மதித்துப் பாராட்டுவது மட்டுமன்றி அதற்கு வழிபாடும் செய்கின்றனர். ஐந்து மனிதர்களைக் கொலை செய்தவர்களை அவர்கள் மன்னித்தாலும், ஓர் எருதைக் கொன்றவனை மன்னிக்கவே மாட்டார்கள். தந்தையைக் கொல்வது எவ்வளவு பெரிய குற்றமோ அவ்வளவு பெரிய குற்றம் எருதைக் கொல்வதும் என்பது அவர்கள் கருத்து. அவர்களுக்குத் தேவையான பணிகள் அனைத்தையும் செய்பவை மாடுகளே என்பதுதான் அதற்குக் காரணம். அன்றியும், மாடு அவர்களுக்குப் பாலும் வெண்ணெயும் மட்டுமன்றி வேறு பல நல்ல பொருள்களையும் தருகிறது. உருவ வழிபாட்டினர் சமுதாயத்தில் இருக்கின்ற பிரபுக்களும் பிற பெரிய மனிதர்களும்

[16] எனக்குத் தெரிந்தவரையில், இந்தக் கூற்று இந்துப் புராணக் கூற்றுகளோடு எவ்வகையிலும் பொருந்தவில்லை—யூல்.

காலையில் எழுந்ததும், தங்களிடமுள்ள பசுக்களுள் மிகவும் கொழுத்த பசுவைப் பிடித்து வரச்சொல்லி, அதன்மீது தங்கள் கையை வைத்து, பின்னர் அதே கையால் தங்கள் முகத்தைத் துடைத்துக்கொள்ளும் வழக்கத்தைப் பின்பற்றுகிறார்கள். அவ்வாறு செய்தால் நோயே வாராது என்று அவர்கள் நம்புகிறார்கள்.

சிறிய இந்தியாவைப் பற்றிய என் குறிப்பை இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன். புழுப் பூச்சி முதல் அங்குள்ள எல்லாவற்றைப் பற்றியும் எழுதுவதென்றால், ஓராண்டானாலும் அந்த வேலை முடிவுறாது.

ஆனால், இறுதியாக ஒன்று மட்டும் சொல்லவேண்டும். சிறிய இந்தியாவில் வாழ்கின்ற மக்கள்—ஆடவர் மகளிர் இரு பாலாரும்—கறுப்பாய் இருக்கிறார்கள்; எவ்வளவுக் கெவ்வளவு கறுப்பாய் இருக்கிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு அவர்கள் அழகுடையவர்கள் என்று நினைக்கிறார்கள்.

—Yule, *Friar Jordauns* : pp, 11–25.

## இ. பெரிய இந்தியா

பெரிய இந்தியாவைப் பற்றிய செய்திகளைச் சுருக்கமாய்ச் சொல்வதாய் இருந்தால், அங்குள்ள மக்கள் சிறிய இந்தியாவிலுள்ள மக்களைப் போலவே கறுப்பாய் இருக்கிறார்கள் என்றும், அங்குள்ள விலங்குகளும் சிறிய இந்திய விலங்குகளைப் போலவே இருக்கின்றன என்றும் சொல்லிவிடலாம். விலங்குகளின் தொகையும் ஒன்றாகவே இருக்கின்றது. ஆனால், யானைகள் மட்டும் பெரிய இந்தியாவில் அதிகமாய் இருக்கின்றன. அவை அற்புதமான விலங்குகள். உருவத்திலும் பருமனிலும் உடல் வலிமையிலும் அறிவுத்திறத்திலும் உலகத்திலுள்ள ஏனைய விலங்குகளைக் காட்டிலும் அவை மிகவும் சிறந்தவை. யானையின் தலை பெரியது. ஆனால் கண்கள் சிறியவை—குதிரையின் கண்களைக் காட்டிலும் சிறியவை. அதனுடைய காதுகள் ஆந்தை வெளவால் ஆகியவற்றின் இறகுகளைப்போல இருக்கின்றன. அதனுடைய மூக்கு அதனுடைய தலையின் உச்சியில் தொடங்கித் தரையைத் தொடுகிற அளவுக்கு நீளமாய் இருக்கிறது. அதற்கு இரண்டு கொம்புகள் இருக்கின்றன. பருமனிலும் நீளத்திலும் அவை குறிப்பிடத்தக்க அளவு பெரியவையாய் இருக்கின்றன. உண்மையில் அவை யானையின் மேல்தாடையில் முளைத்துள்ள பற்களேயாகும்.

யானை எல்லா வேலையையும் பாகன் சொற்படியே செய்கிறது. 'இதைச் செய்' 'அதைச் செய்' என்று சொல்வதைத் தவிரப் பாகனுக்கு வேறு வேலை ஒன்றும் இல்லை. அன்றியும் அதனை வெறும் விலங்கென்று சொல்லிவிட முடியாது. எத்தனையோ வகைகளில் அஃதொரு பகுத்தறிவுள்ள உயிரி

**பழகிய யானைகள்** நம் போல நடந்துகொள்கிறது. யானையின் கால்கள் மிகப் பெரியவை. ஒவ்வொரு காலிலும் அவ்வாறு குளம்புகள் இருக்கின்றன. அவை எருதின் குளம்புகளை ஒத்திருக்கின்றன என்பதைக் காட்டிலும் ஒட்டகத்தின் குளம்புகளை ஒத்திருக்கின்றன என்று சொல்வது பொருத்தமாய் இருக்கும். யானையின் முதுகில் மரத்தால் ஆன ஓர் அமைப்பைக் கட்டி அதில் முப்பதுக்கும் அதிகமான பேர் ஏறிக்கொண்டு செல்கின்றனர். யானை ஓர் அமைதியான விலங்கு. ஆனால், அதற்குப் போர்ப்பயிற்சி அளித்தால், களத்தில் அது 1500 வீரர்களுக்குச் சமமாகப் போர்புரிகிறது. அதனுடைய கொம்புகளில் கத்திகளையோ இரும்புத் தண்டாயுதங்களையோ கட்டிப் போர்க்களத்தில் விட்டால் அது எதிர்ப்பட்டவர்களையெல்லாம் அடித்து வீழ்த்துகின்றது. இந்த விலங்கின் வலிமை மிகவும் பயங்கரமானது. முக்கியமாக, போர்க்களத்தில் அதனுடைய வலிமைமிக்க தாக்குதலால் நேர்கின்ற சேதம் கொடுமையானது.

போர்க் கருவிகளால் சமாளிக்க முடியாத தாக்குதல்கள் இரண்டு இருக்கின்றன. ஒன்று, விண்ணிலிருந்து வீழ்கின்ற இடி; இரண்டு, பெரிய கல்லைத்தூக்கி எறிகிற போர்ப்பொறி. மூன்றாவது யானையைச் சொல்லலாம். யானையின் தாக்குதலை எதிர்த்து நிற்கக்கூடிய ஆற்றலோ தைரியமோ யாருக்கும் எதற்கும் இல்லை. அது ஓர் அற்புதமான விலங்கு. பாகன் படு என்றால் படுக்கிறது; மண்டியிடு என்றால் மண்டியிடுகிறது; உட்கார் என்றால் உட்கார்கிறது; போ என்றால் போகிறது; வா என்றால் வருகிறது. இந்த விலங்கின் சிறப்பியல்புகளை எடுத்துரைப்பதற்குச் சொற்களேயில்லை.

இந்த இந்தியாவில் மிளகும் இஞ்சியும் இலவங்கமும் பிரேசில் மரமும் [17] வளர்கின்றன. பிற நறுமணப் பொருள்களும் இங்கே விளைகின்றன. இஞ்சியென்பது நாணலைப் போன்ற

[17] பிரேசில்: சம்பங்கி மரம். இதிலிருந்து ஒருவகைச் சிவப்புச் சாயம் எடுக்கப்படுகிறது. இது சீசல்பைனு என்னும் மர வகையுள் ஒன்றைச் சேர்ந்தது. மலபாரிலிருந்து கிழக்கேயுள்ள வெப்ப மண்டல ஆசிய நாடுகள் அனைத்திலும் இது வளர்கிறது. சீசல்பைனுவின் இன்னொரு வகையைச் சேர்ந்ததும் பிரேசிலில் வளர்கின்றதும் ஆகிய ஒரு மரத்திற்குத்தான் பிரேசில்

இலைகளையுடைய ஒரு செடியின் வேர் ஆகும். மிளகு ஐவியைப் போன்ற ஒரு கொடியிற் காய்க்கிறது. ஐவியைப் போலவே அதுவும் மரத்தின்மீது ஏறிப் படர்கிறது. அதனுடைய காய் தானே வளரும் கொடிமுந்திரியின் பழத்தைப்போலக் குலை குலையாய்க் காய்க்கிறது. மிளகு முதலில் பச்சை நிறமாயிருக்கிறது. முதிர்ந்த பின்னர் அது கறுப்பாகவும் திரைதிரையான மேற்பாகத்தை உடையதாகவும் மாறிவிடுகிறது. இவ்வாறுதான் நீள மிளகு (வால் மிளகு) உற்பத்தி செய்யப்படுகிறது. மிளகின் கீழ்க் கணப்புப் போடப்படுகின்றது என்றோ அது வறுக்கப் படுகின்றது என்றோ சிலர் சொல்கின்றனர் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அது முழுப்பொய்.[18] லவங்கம் என்பது கிராம்பு போன்ற பூவும் காயும் விடுகின்ற ஒரு பெரிய மரத்தின் பட்டை.

---

என்னும் பெயர் இப்போது வழங்குகிறது. இந்த மரம் ஏனைய மரங்கள் கொடுக்கும் சிவப்புச் சாயத்தைப் போல இரு மடங்கு சாயம் தருகிறது என்று மக்குல்லோக் சொல்கிறார். இந்தப் பெயர்களின் வரலாறு நம் கவனத்தைக் கவர்வதாயிருக்கிறது. இந்திய மரம் ஒன்றுக்கு வணிகர்கள் பிரேசில் என்னும் பெயரை முதலில் வழங்கினார்கள். பின்னர், அந்த மரத்தை ஓரளவு ஒத்த மரம் அதிகமாய் வளர்கின்ற பெரியதொரு நாட்டுக்கு அந்தப் பெயர் வைக்கப்பட்டது. இப்போது பிரேசில் என்ற முதலில் பெயர் பெற்ற இந்திய மரம் அந்தப் பெயரை இழந்துவிட்டது. புதிய உலகத்திலுள்ள ஒரு மரத்திற்கே அந்தப் பெயர் உரியதாகிவிட்டது. அதுவுமன்றி, பிரேசில் என்னும் நாட்டின் பெயரே மரத்திற்கும் வழங்குகிறது என்னும் கருத்தும் நிலைபெற்று விட்டது. பிரேசில் என்னும் பெயரின் வேர் எதுவென்று எனக்குத் தெரியவில்லை. சப்பான் (சம்பங்கி) என்னும் சொல் சப்பாங் என்னும் மலாய்ச் சொல்லிலிருந்து பிறந்தது.—யூல்.

[18] நீள மிளகைப் பற்றி ஜார்டனஸ் எழுதியுள்ள குறிப்பில் யாதோ திரிபு நேர்ந்திருக்கிறது. அவர் சொன்னதை எழுதிய எழுத்தரோ அவர் எழுத்தைப் படியெடுத்தவரோ அதற்குக் காரணமாயிருக்கக்கூடும். நீள மிளகு வேறொரு வகையான தாவரத்தில் காய்க்கிறது. அதனுடைய பொதுப் பெயர் சவிக்கா என்பதாகும். அது கொடியன்று. அதுவொரு குத்துச்செடி. ஆண்டுக்கொரு முறை அது காம்பு விடுகிறது. இந்த மிளகின் இரசாயன இயல்புகள் ஏறக்குறையக் கறுப்பு மிளகின் இரசாயன இயல்புகளையே ஒத்திருக்கின்றன. ரோமானியர்கள் கறுப்பு மிளகுக்குக் கொடுத்த விலையைப் போல நான்கு மடங்கு விலையை இந்த மிளகுக்குக் கொடுத்தார்கள் என்று ப்ளினி சொல்கிறார் (Drry in voc-Crawford's Dict). நீள மிளகு இப்போது மலபாரில் விளைகிறது என்றாலும் பதினாறும் நூற்றாண்டில் அது அங்கே விளைந்தது என்று சொல்ல முடியாது. அப்படியே விளைந்திருந்தாலும் அது வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாகவில்லை என்பது உறுதி. 'பெங்கலாவிலும் ஜாவாவிலுமே நீள மிளகு விளைந்தது' என்று வின்ஸ்சோட்டன் தெளிவாக எடுத்துரைக்கிறார். (P. III.) அதனால், அதற்கு ரோமானியர் கொடுத்த விலை விருப்பார்வ விலை என்று கருதலாம்—அஃதோர் அரும்பொருளாதலால். மிளகு விதைப் பையிலிருந்து வெடித்து வெளிவருகிறது என்று ப்ளினி கருதியது விசித்திரமாய் இருக்கிறது. நீள மிளகு முதிராத விதைப் பையில் இருந்தது என்றும், அதை

இந்த இந்தியாவில் எண்ணற்ற தீவுகள் இருக்கின்றன. அவற்றுள் பதினாயிரத்துக்கும் அதிகமானவற்றில் மக்கள் வாழ்கிறார்கள் என்று நான் கேள்விப்பட்டேன். அந்தத் தீவுகளில் உலகத்தின் அற்புதங்கள் பலவற்றைக் காணலாம். எடுத்துக் காட்டாக, சிலம் என்னும் தீவில் உலகத்திலேயே தலை சிறந்த ரத்தினங்கள் கிடைக்கின்றன. அந்தக் கற்கள் பலவகைப் பட்டவையாய் இருப்பது மட்டுமன்றி ஏராளமாயும் கிடைக் கின்றன. அந்தத் தீவிற்கும் தலைநிலத்திற்கும் இடையிலுள்ள கடலில் முத்தும் மார்குரைட்டும் வியக்கத்தக்க பேரளவில் கிடைக் கின்றன. அதனால், சில சமயங்களில் எண்ணாயிரத்துக்கும் அதிகமான கலங்கள் முத்துச் சலாபப் பணியில் ஈடுபடுவதைக் காணலாம். முத்துச் சலாபம் மூன்று மாதம் தொடர்ச்சியாய் நடைபெறுகிறது. இங்குக் கிடைக்கும் முத்துகளின் தொகையை எடுத்துச் சொன்னால், இங்கு நடைபெறும் முத்துச் சலாபத்தை நேரில் பார்க்காதவர்கள் வியப்படைவார்கள். சிலர் நம்பவே மறுப்பர்.

இப்போது பறவைகளைப்பற்றிச் சில சொற்கள் சொல்ல விரும்புகிறேன். சிறிய இந்தியாவிலுள்ள பறவைகளினின்றும் வேறுபட்ட பறவைகள் பல இங்கே இருக்கின்றன. அவற்றின் நிறங்களும் வேறுபட்டவையாய் இருக்கின்றன. சில பறவைகள் உறைபனியைப்போல வெள்ளையாய் இருக்கின்றன. சில செக்கச் செவேலென்று இருக்கின்றன. சில புல்லைப் போலப் பச்சையாய் இருக்கின்றன. சில இருவண்ண இடைக்கலப்பு நிறமாய் இருக் கின்றன. அவற்றின் தொகையும் அழகும் சொல்லுந் தரமல்ல. அவற்றைப் பார்ப்பதே மகிழ்ச்சி தருவதாயிருக்கிறது.

கிளிகளும் இங்கே மிகுதியாய் இருக்கின்றன. அவற்றின் வண்ணங்களும் பலவகைப்பட்டவையாய் இருக்கின்றன. ஆனால், கறுப்புக் கிளிகள் மட்டும் இல்லை. கறுப்பு வண்ணமுள்ள கிளிகள்

---

எடுத்து விற்பனைக்குத் தயார் செய்தார்கள் என்றும் ப்ளினி கருதினர். மிளகு மரத்தின் வேர்தான் இஞ்சியென்று பொதுவாக நிலவிய கருத்துத் தவறு என்பதை அவர் எடுத்துக்காட்டினார் (BK. xii). 'காய வைப்பதற்காக அதனை வெந்நீரில் கொதிக்க வைக்கிறார்கள்' என்று சிலர் கருதுவது தவறு என்று ஜார்டனஸ் சொல்வதைப் போலவே இபன் பதூதாவும் சொல்கிறார். ஆனால், அவர்களுக்கு முன்னால் இந்தியாவுக்கு வந்த பெஞ்சமின் 'மிளகு முதலில் வெள்ளையாயிருக்கிறது. அதனை அறுவடை செய்பவர்கள் அதனைத் தொட்டியிற் போட்டு, அதன் மீது வெந்நீரை ஊற்றுகிறார்கள். பின்னர் அந்தத் தொட்டி வெயிலில் வைக்கப்படுகிறது' என்று சொல்கிறார்:—யூல்.

**கிளிகள்** எங்குமேயில்லை. வெள்ளைக் கிளிகளும், பச்சைக் கிளிகளும், சிவப்புக் கிளிகளும், பல வண்ணக் கிளிகளும் இங்கே இருக்கின்றன. இந்த இந்தியப் பறவைகள் சொர்க்கத்திலுள்ள பறவைகளைப் போன்றவை என்று சொல்லலாம்.

மேலே சொன்ன தீவுகள் அற்புதமானவை என்று சொல்கிறார்கள். ஒரு தீவின் மையத்தில் அற்புதமான நீர்நிலை ஒன்றும் அற்புதமான மரம் ஒன்றும் இருக்கின்றனவாம். அந்த நீர்நிலையில் எந்த உலோகத்தை அமுக்கி எடுத்தாலும் அது பொன்னாக மாறிவிடுகிறதாம். அந்த மரத்தின் இலையைக் கசக்கி எத்தகைய புண்ணின்மீது தடவினாலும் அது உடனே ஆறிவிடுகிறதாம்.

இந்த இந்தியாவிலுள்ள கொலம்பும் என்னும் ஊரில் நான் தங்கியிருந்தபோது வௌவாலின் சிறகுகளைப் போன்ற சிறகுகளை உடைய இரண்டு பூனைகளைக் கண்டேன்.[19] சிறிய இந்தியாவில் குள்ள நரியளவு பெரியவையாய் இருந்த எலிகள் சிலவற்றைக் கண்டேன். அவை மிகுந்த நஞ்சுடையவை. [20]

இந்த இந்தியாவிலுள்ள மரங்கள் சிலவற்றின் இலைகள் மிகவும் பெரியவையாய் இருக்கின்றன. அத்தகைய இலை ஒன்றன் நிழலில் ஐந்தாறு பேர் நிற்கலாம்.[21]

மேலே சொன்ன சைலன் தீவின் அரசன் மிகவும் வலிமை வாய்ந்தவன். உலகத்தில் உள்ள எல்லா வகையான ரத்தினங்களும் அவனிடம் இருக்கின்றன. அவற்றின் தொகையைக் கேட்டால் அதனை நம்புவதே கடினம். அவற்றுள் இரண்டு மாணிக்கக் கற்கள் இருக்கின்றன. ஒன்றை அவன் தன்னுடைய கழுத்தில் கட்டித் தொங்கவிட்டிருக்கிறான்; இன்னொன்றைக் கையில் கட்டிக்கொண்டிருக்கிறான். கையிலுள்ள மாணிக்கத்தால் அவன் தன்னுடைய வாயையும் தாடியையும் துடைத்துக் கொள்கிறான். அந்த மாணிக்கம் ஒவ்வொன்றும் நான்கு விரற்கடை அளவுக்குமேல் நீளமாய் இருக்கிறது; கையிற் பிடித்தால் அது இரு பக்கத்திலும் ஒவ்வொரு விரற்கடை அளவு நீட்டிக்கொண்டிருக்கிறது. உலகத்திலேயே இத்தகைய கற்கள் வேறு இருக்கக் கூடுமென்று

19 மலபாரில் காணப்படும் பறக்கும் அணில்.—யூல்.

20 பெருச்சாளி.

21 தாளிப்பனை-விசிறி வடிவமுடைய இலைகளையுடைய பனை. அந்த இலைகளுள் சில 200 சதுர அடிப் பரப்புள்ளவை—யூல்.

என்றால் நம்ப முடியவில்லை.[22] இவ்வளவு உயர்ந்த மதிப்புடைய இவ்வகைக் கற்களை வேறு எங்கும் காண முடியாது என்றே நான் கருதுகிறேன்.

இன்னொரு தீவில் வாழ்கின்ற மக்கள்—ஆடவர் மகளிர் ஆகிய அனைவரும்—முழு நிர்வாணமாய் இருக்கிறார்கள். பணத்திற்குப் பதிலாய் அவர்கள் மென்மணல் போன்ற நுண் துகள் பொன்னைப் பயன்படுத்துகிறார்கள். அவர்கள் துணி வாங்குகிறார்கள். ஆனால், அதனை மறைப்புச் சுவர் போலப் பயன்படுத்துகிறார்களேயன்றி உடுத்துவதற்குப் பயன்படுத்துவது இல்லை. அவர்கள் ஒரு சிறு துணியைக்கூட உடலிற் கட்டிக் கொள்வதில்லை.

ஜாவா[23] என்னும் இன்னும் ஒரு மிகப் பெரிய தீவு இருக்கிறது. அதன் சுற்றளவு 7000 மைலுக்கும் அதிகமாய் இருக்கும் என்று சொல்கிறார்கள். அங்கே உலக அற்புதங்கள் பலவற்றைக் காணலாம் என்றும் சொல்கிறார்கள். மிகவும் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்த நறுமணப் பொருள்கள் அங்குக் கிடைக்கின்றன. ஆனால், மிக வியப்பூட்டும் இன்னொரு செய்தி என்னவென்றால் அங்கு பிக்மிகள் (குள்ளர்கள்) இருப்பதாகும். அவர்கள் மூன்று நான்கு வயதுப் பிள்ளைகளைப் போலக் குள்ளமாயிருக்கிறார்கள். அவர்கள் உடல் முழுதும் மயிர் மூடிக் கொண்டிருக்கிறது—ஆட்டுக் கடாவின் உடலைப் போல. அவர்கள் காட்டுக்குள் வாழ்கிறார்கள். அவர்கள் நம் கண்ணிற் படுவதே அரிது.

இந்தத் தீவில் இருக்கும் வெள்ளை எலிகள் மிகவும் அழகானவை. அங்குள்ள கிராம்பு மரங்கள் பூத்திருக்கும்போது அவற்றிலிருந்து வீசும் வாசனை மூக்கைத் துளைக்கும் அளவு மிகவும் உறைப்பாயிருக்கும். அங்கே செல்பவர்கள் வாயையும் மூக்கையும் மூடிக் கொண்டு செல்ல வேண்டும். இல்லாவிட்டால் அந்தக் கடுமையான வாசனையைத் தாங்க முடியாமல் இறந்து போவார்கள்.[24].

22 மார்க்கபோலோ, இபன் பதூதா ஆகியோர்களும் இவ்வாறு கூறுவதைக் கவனிக்க.

23 'ஜாவா' என்று இவர் சொல்லும் நிலப்பகுதி இன்னதுதான் என்று வரையறுத்துக் கூற முடியாது பொதுவாக, அது மலேயாத் தீவுக் கூட்டத்தையும், ஓரளவு சிறப்பாக, சுமாத்ராவையும் குறிக்கிறது என்று கருதலாம்.

24 நறுமணப் பொருள்கள் விளையும் தோட்டங்களையும் மலைப் நாட்டிற் காணப்படும் ஒருவகை நச்சு மரத்தையும் பற்றிய கட்டுக்கதைகளின் கதம்பமாய் இருக்கிறது.

அங்கே சாதிபத்திரி, சாதிக்காய், (உணவுக்கும் மருந்துக்கும் பயன்படும்) க்யூபப் என்னும் காய் முதலிய உயர்தர நறுமணப் பொருள்கள் எல்லாம் விளைகின்றன. ஆனால், மிளகு அங்கு விளைவதில்லை.

அந்தத் தீவின் ஒரு பகுதியில் வாழ்கின்ற மக்கள் நன்றாகக் கொழுத்த வெள்ளையர் கிடைத்தால் அவர்களைக் கொன்று அவர்களுடைய இறைச்சியை மிகவும் விரும்பித் தின்கிறார்கள்.[25]

பெரிய இந்தியாவிலும் அதையொட்டிய தீவுகளிலும் வாழும் மக்கள் அனைவரும் கறுப்பாய் இருக்கிறார்கள். அவர்கள் அணியும் ஆடை இடுப்புக்குக் கீழும் முழங்காலுக்கு மேலும் நின்று விடுகிறது; உடலின் பிற பகுதிகளை மறைப்பதில்லை. அவர்கள் காலணி எதுவும் போட்டுக் கொள்வதில்லை.

ஆனால், அரசர் மட்டும் கையில் மோதிரங்களும் கழுத்தில் கல்லிழைத்த தங்கச் சங்கிலியும் அணிந்து கொள்கின்றனர். அவ்வாறு அவர்கள் அணிந்துகொள்ளும் அணிமணிகள் அவர்களைப் பொதுமக்களிடமிருந்து வேறுபிரித்துக் காட்டு கின்றன.

இந்த இந்தியாவில் ஒருவனுடைய செல்வம் அவன் இறந்த பின் அவனுடைய மகனுக்குச் சேர வேண்டும் என்னும் சட்டம் இல்லை—அதாவது, தந்தையின் செல்வத்தை அடைவதற்கு மகனுக்கு உரிமையில்லை. அவன் வைப்பாட்டி மகனாயிருந்தாலும் சரி, சட்டப்படி திருமணஞ் செய்துகொண்ட மனைவியின் மகனாயிருந்தாலும் சரி, இந்த விதிக்குக் கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்டும். மேலும், அது பொதுமக்களுக்கு மட்டுமன்றி அரசர் பிரபுக்கள் போன்ற மிக உயர்வகுப்பினருக்கும் பொருந்தும். ஒருவனுடைய செல்வம் அவனுக்குப் பின் அவனுடைய சகோதரியின் மக்களுக்குச் சேரவேண்டும் என்பதுதான் இந்த நாட்டு வழக்கம். ஒருவனுடைய மனைவிக்கோ வைப்பாட்டிக்கோ பிறக்கும் குழந்தைகளுக்கு அவன்தான் தந்தை என்பதை எப்படி உறுதியாய்ச் சொல்ல முடியும்? ஒருவனுடைய மனைவியோ வைப்பாட்டியோ வேறோர் ஆடவனுடன் கூடிக் கருவுற்றிருக்கக் கூடாதா? ஆனால், ஒருவனுடைய தங்கை சட்டப்படி தன்னை மணந்து கொண்ட கணவனன்றி வேறு யாருடன் கூடிப் பிள்ளை பெற்றாலும் அந்தப் பிள்ளை அவளுடைய கருவில் தோன்றிய

25 பதக் நரவூனுண்ணிகளைப் பற்றியது.

பிள்ளை. அதனால் அவனுடைய குடும்பத்தின் குருதி அந்தப் பிள்ளையின் உடலிலும் ஓடுவது உறுதி. எனவே, ஒருவனுடைய செல்வத்தை அவனுடைய சகோதரிகளின் பிள்ளைகள் அடைவதுதான் முறை. இது அவர்களுடைய வாதம்.

**தம்மைத் தாமே காவு கொடுத்தல்**

தெய்வச் சிலைகளுக்குத் தம்மைத் தாமே காவு கொடுத்துக் கொள்ளும் வழக்கம் இந்த இந்தியாவில் இருக்கிறது. ஒருவன் நோய்வாய்ப்பட்டதாலோ வேறு யாதேனும் இடையூறு நேர்ந்ததாலோ துன்பம் அடைகின்றபோது, அந்தத் துன்பம் நீங்கிவிட்டால் தன்னைக் கடவுளுக்குப் பலி கொடுத்து விடுவதாக நேர்ந்து கொள்கிறான். அந்தத் துன்பம் நீங்கிவிட்டால் அவன் இரண்டோராண்டுக்காலம் நல்ல சத்துள்ளதும் கொழுப்பு நிறைந்ததும் ஆகிய உணவையும் பானத்தையும் அருந்தித் தன்னுடைய உடலை நன்றாய்க் கொழுக்க வைக்கிறான். பின்னர், அடுத்த திருவிழாவின் போது, அவன் மலர் மாலைகளை அணிந்து கொண்டும், நறுமணப் பொருள்களை உடலிற் பூசிக் கொண்டும், ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும் தெய்வச் சிலையின் முன் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் செல்கிறான். (நம் ஊரில் ஏசுநாதரின் வான்செலவு விழாவின்போது அன்னை மரியின் சிலையை ஊர்வலமாக எடுத்துச் செல்கிறார்களே அது போல இங்கும் தெய்வச் சிலைகளை ஊர்வலமாக எடுத்துச் செல்கிறார்கள். கடவுளுக்குத் தன்னைப் பலி கொடுப்பதாக நேர்ந்து கொண்டவன் இரண்டு கைப்பிடியுடைய வாளைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறான். அந்த வாள் தோலைச் சீவித் தேய்ப்பதற்கு நாம் பயன் படுத்தும் கத்தியை ஒத்திருக்கிறது. நெடுநேரம் ஆடியும் பாடியும் மக்களுடைய கவனத்தைக் கவர்ந்த பிறகு, தன்னைப் பலிகொடுக்க நேர்ந்துகொண்டவன் வாளைத் தன் கழுத்தின் பின்புறம் வைத்து, இரு கைகளாலும் பலமாக அழுத்தி, தன் தலையைத் தானே கொய்துவிடுகிறான்.[26]

இந்தப் பெரிய இந்தியாவில் நான் தங்கியிருந்தபோது பகல் இரவுகளின் நீளத்தைக் கவனித்துப் பார்த்தேன். பகலும் இரவும் இங்கு ஏறக்குறைய ஒரே அளவாய் இருக்கின்றன. எந்தப் பருவத்திலும் ஒன்றையொன்று ஒரு மணி நேரங்கூட விஞ்சுவதில்லை.

[26] Cf. Vogel's paper on *The Head-offering to the Goddess in Pallava Sculpture*—BSOS, vi. pp. 539.43, and the citations in Yule and Cordier, *Marco Polo*, ii. p. 349, *n*. 8.

இந்த இந்தியாவில் ஞாயிறு வானத்தின் வடக்கில் ஆறுமாத காலமும் தெற்கில் ஆறுமாத காலமும் இருக்கிறது. அது வடக்கில் இருக்கும்போது நிழல் தெற்கே விழுகிறது. தெற்கில் இருக்கும் போது நிழல் வடக்கே விழுகிறது.[27]

இந்த இந்தியாவில் துருவ நட்சத்திரம் வானத்தில் மிகவும் கீழே தெரிகிறது. நான் ஓரிடத்தில் தங்கியிருந்தபோது வட மீனைக் கவனித்துப் பார்த்தேன். அப்போது அது நிலத்திற்கு மேலும் கடலுக்கு மேலும் இரண்டு விரற்கடை உயரத்திற்கு மேல் இல்லை.

இந்த இந்தியாவில், வானம் மேகமூட்டம் அற்றதாய் இருந்தால், நிலா இல்லாவிட்டாலும் இரவு அவ்வளவு இருட்டாய்த் தெரிவதில்லை. அத்தகைய இரவுகளில் நம் ஊரில் எவ்வளவு வெளிச்சம் இருக்குமோ அதைப் போல நான்கு மடங்கு வெளிச்சம் இங்கே காணப்படுகிறது.

அதுபோலவே, இந்த இந்தியாவில் பெரும்பாலான நாட்களில் மாலையிலிருந்து மறுநாட் காலை வரையிலும் வான வீதியில் கோள்கள் அனைத்தையும் பார்க்க முடியும். அவற்றுக்கு இருக்கும் தொடர்பை நேருக்குநேர் பார்ப்பதுபோலத் தோன்றும். அதனுல், இரவில் இங்கு வானத்தைப் பார்த்துக்கொண்டிருப்பது மிகுந்த இன்பம் பயப்பதாய் இருக்கிறது.

மேலே சொன்ன இடத்திலிருந்து பார்த்தால், வானத்தின் கிழக்குப் பகுதிக்கும் தென்பகுதிக்கும் இடையில் செவ்வொளி வீசும் பெரியதொரு விண்மீன் ஏறக்குறைய இடையருது நம் கண்ணுக்குத் தெரியும். அதன் பெயர் அகத்திய நட்சத்திரம் என்பதாகும். உலகின் இந்தப் பகுதிகளில் அது தெரிவதில்லை.

மேலே சொன்ன விண்மீன்களின் இயக்கத்தில் சிறந்த வானூல் வல்லுநரின் மனத்தைக் கவரத்தக்க பல அற்புதங்கள் இருக்கின்றன.

இந்த இந்தியாவிலும் சிறிய இந்தியாவிலும் கடற்கரையி லிருந்து தள்ளியிருக்கும் உள்நாட்டுப் பகுதிகளில் மரமடர்ந்த காடுகளிலும் நிலத்துக்கடியிலும் வாழ்கின்ற மக்கள் பலர் இருக் கின்றனர். அவர்கள் நரகவாசிகளைப்போல, வெறுக்கத்தக்க

27 கொல்லம் வட அட்சரேகை 8°க்கும் 9°க்கும் இடையில் இருக்கிறது எனவே, இது சிறிது உயர்வு நவிற்சியாய் இருக்கிறது.

நிலையில் இருக்கிறார்கள்.[28] உண்ணல், குடித்தல், உடுத்தல் முதலிய விஷயங்களில் இவர்கள் கடற்கரையில் வாழ்கின்ற மக்களினின்றும் பெரிதும் வேறுபடுகிறார்கள்.

இங்கே எண்ணற்ற பாம்புகள் இருக்கின்றன. அவை மிகப் பலவகைப்பட்ட நிறங்களை உடையவையாகவும், மிகப் பெரியவையாகவும் இருக்கின்றன. அவற்றை மக்கள் தாக்கினால் அன்றி அவை யாரையும் கடிப்பதில்லை. இது விந்தையிலும் விந்தையன்றோ?

இங்கே ஒரு வகைக் குளவிகள் இருக்கின்றன. அவை பெரிய சிலந்திப் பூச்சிகளைக் கண்டால், உடனே அவற்றைக் கொன்று, மணலில் புதைத்துவிடுகின்றன. புதைகுழி மிகவும் ஆழமாய் இருக்கிறது. மேலும், குளவிகள் அந்தக் குழிகளை நன்றாக மூடி விடுகின்றன. அதனால், சிலந்திகள் புதைக்கப்பட்ட இடத்தைக் கண்டுபிடிப்பது யாராலும் இயலாது.

**கறையான்**

இங்கே ஒருவகைச் சிற்றெறும்புகள் இருக்கின்றன. அவை ஆட்டு ரோமம் போல வெள்ளையாய் இருக்கின்றன. அவற்றின் பற்கள் மிகவும் கெட்டியானவை. மரம் கல்லிணைப்பு முதலிய மிகக் கடினமான பொருள்களையும் அவை தம் பற்களால் கறித்து அழித்து விடும். சுருக்கமாகச் சொன்னால், உலகிலுள்ள வறண்ட பொருள் எதுவுமே அவற்றின் பற்களிலிருந்து தப்புவதில்லை. பருத்தி நூல் துணிகளையும் கம்பளித் துணிகளையும் அவை எளிதில் கறித்து அழித்து விடுகின்றன. அவை குடியிருக்கும் இடத்திற்கு மேலே மென்மணலால் சுவர் போன்ற ஒரு மேட்டைக் கட்டிக் கொள்கின்றன. அதனால் ஞாயிற்றின் வெப்பம் அவையிருக்கும் இடத்தை அடைவதில்லை. ஆனால், அந்த மேடு தகர்ந்துபோனால் கதிரவன் வெப்பம் அவற்றின் இருப்பிடத்தின் மீது விழும். அதனைத் தாங்க முடியாமல் அவை உடனே இறந்து போகும்.[29]

இந்த இந்தியாவில் எத்தனையோ வகைப் பூச்சிகள் இருக்கின்றன. அவற்றின் தொகையும் மிகமிகப் பெரியது.

[28] இந்த மக்கள் மற்றவர்களைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள் என்றுதான் ஜார்டனஸ் சொல்ல விரும்புகிறார் என்று நாம் கருதலாம். ஆனால், ஆதிவாசிகளை ராட்சசர் என்று கூறும் மரபு இந்த நாட்டில் இருந்துவருகிறது என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

[29] பகலவன் ஒளியில் வந்து தன் வேலையைச் செய்வது கறையானுக்கு ஒரளவு பிடிக்காமல் இருக்கலாம்; ஆனால், உடனே இறந்துவிடுகிறது என்று சொல்வது தவறு.

அவற்றுள் மிகப்பெரிய பூச்சிகளும் இருக்கின்றன. அந்த அற்புதங்களைச் சொல்லில் வடிப்பதென்பது என்றால் இயலாத செயல்.

இந்த இந்தியாவில் பருந்தைப் போலப் பெரிய பறவை ஒன்று இருக்கிறது. அதனுடைய கழுத்தும் வயிறும் வெள்ளை நிறமாகவும் உடலின் பிற பகுதிகளெல்லாம் சிவப்பு நிறமாகவும் இருக்கின்றன. செம்படவர்கள் கையிலுள்ள மீனை அவை அச்சம் சிறிதுமின்றிப் பறித்துக்கொண்டு போய் விடுகின்றன. உண்மையில் அவை நாயைப் போன்றவை என்று சொல்லலாம்.

இன்னும் ஒரு பெரிய பறவையும் இருக்கிறது. ஆனால், அது பருந்தைப் போன்றதன்று. அது இரவில் மட்டும் வெளியே வந்து பறக்கிறது. அது போடுகிற சத்தம் வெகு தொலைவிலிருந்து ஒரு மனிதனுடைய அழுகுரல் வந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது.

நான் இன்னும் என்ன சொல்லமுடியும்? சைத்தானே அடிக்கடி வந்து இங்கிருக்கிற மக்களுடன் இரவில் பேசுகிறான் என்று சொல்கிறார்கள். அது உண்மைதான் போலும்![30]

இந்த இந்தியாவில் நாம் காண்பது கேட்பது அனைத்துமே விந்தையாய் இருக்கின்றன. உண்மையில் இதுவொரு தனியுலகம்.

இந்தியாவில் சம்பா என்னும் இன்னொரு பகுதி இருக்கிறது. அங்கே குதிரை, கழுதை, கோவேறு கழுதை, ஒட்டகம் முதலிய விலங்குகள் செய்கின்ற வேலை அனைத்துக்கும் யானையையே பயன்படுத்துகிறார்கள்.[31]

யானையைப் பற்றிய செய்திகள் மிகவும் சுவையானவை. யானைகள் காட்டில் வாழும்போது ஒன்றோடொன்று சண்டை இடுகின்றன. அதற்காகவே அவை கூட்டங் கூட்டமாக வாழ்கின்றன. சில சமயங்களில் நூறு யானைகள் சேர்ந்து ஒரே கூட்டமாய் வாழ்வதும் உண்டு. தமக்குள் மிகப் பெரியதாயும், மிக வலிமை உடையதாயும், மிகத் தைரியம் உடையதாயும் இருக்கின்ற யானைக்கு அவை தலைமைப் பதவியை அளிக்கின்றன. ஒரு கூட்டம் இன்னொரு கூட்டத்தோடு மோதும்போது, வெகு

30 சிலர் இது பழுப்பு வண்ண ஆந்தை என்கின்றனர். ஆனால், இது இரவில் வேட்டையாடும் பருந்து என்று மிட்போர்டு கருதுகிறார்;

31 ஒடோரிக் துறவியிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட செய்தியாய் இருக்கலாம். ஒடோரிக் சம்பாவுக்குச் சென்றிருந்தார்.

விரைவில் நாற்பது ஐம்பது யானைகள் காயமடைந்தோ கொல்லப்பட்டோ வீழ்ந்துகிடப்பதைக் காணலாம். தோல்வியடைந்த யானைகள் மீண்டும் போர் புரிவதில்லை என்று சொல்கிறார்கள். அது மிகவும் குறிப்பிடத்தக்க செய்தியாய்இருக்கிறது.

யானையின் தந்தம் மிகவும் விலையுயர்ந்த பொருளாய் இருப்பதால், யானை உயிரோடு இருக்கும்போது எவ்வளவு மதிப்புடையதாய் இருக்கிறதோ அவ்வளவு மதிப்புடையதாய் இருக்கிறது அது செத்த பின்னரும். யானை இளங்கன்றாய் இருக்கும்போது, மக்கள் அதனைப் பிடிப்பதில்லை. வளர்ந்த பின்னரே அதனைப் பிடித்துப் பழக்குகிறார்கள்.

யானையைப் பிடிக்கும் முறை வியப்பூட்டுந் தன்மையுடையது. யானை பிடிப்பதற்கு ஏற்ற இடத்தைத் தெரிந்தெடுத்து, அதனைச் சுற்றிலும் பெரிய பெரிய மரக்கட்டைகளை வைத்து வேலி கட்டிவிடுவார்கள். அந்த வேலியில் நுழைவாயில்களும் அந்த வாயில்களில் உயர்ந்த கதவுகளும் இருக்கும். வாயில்களையும் கதவுகளையும் மிகவும் உறுதி வாய்ந்த பெரிய மரக்கட்டைகளால் கட்டுகிறார்கள். அதன்பின் யானைகள் மேய்வதற்கு வருகின்ற இடத்துக்குப் பழகிய பெண் யானை ஒன்றை ஓட்டிக்கொண்டுபோய், யானைக் கூட்டத்தில் எந்த யானையைப் பிடிக்க விரும்புகிறார்களோ அந்த யானையை அந்தப் பெண் யானைக்குக் காட்டி, அதனை எப்படியாவது அழைத்துக் கொண்டு வரவேண்டுமென்று சொல்லி, அதனை யானைக் கூட்டத்திற்குள் அனுப்பிவிடுகிறார்கள். அந்தப் பிடியும் அவர்கள் காட்டிய களிற்றைச் சுற்றிச் சுற்றி வந்து, அதனை நக்கியும் தும்பிக்கையால் தட்டிக் கொடுத்தும், தன் பின்னாலேயே வருமாறு செய்துவிடுகிறது. வேலி சூழ்ந்த அடைப்பின் வெளிவாயில் வழியாகப் பிடி உள்ளே நுழையும் போது களிறும் அதனைத் தொடர்ந்து செல்கிறது. அப்போது அங்கே மறைந்துகொண்டிருக்கும் ஆட்கள் மேலே தூக்கி இருக்கின்ற கதவை விரைந்து கீழே தள்ளிவிடுகிறார்கள். கதவு விழுகின்ற ஒலியைக் கேட்ட களிறு திரும்பிப் பார்க்கும்போது, பழகிய பிடி இரண்டாம் வாயிலில் புகுந்துவிடுகிறது. அங்கு மறைந்து நிற்கும் ஆட்கள் அந்தக் கதவையும் கீழே விட்டு விடுகிறார்கள். அதனால், அந்த இரு வாயில்களுக்கும் இடையில் களிறு மாட்டிக் கொள்கிறது. அப்போது கறுப்புத் துணியோ சிவப்புத் துணியோ உடுத்திக் கொண்டும் முகத்தை மூடிக் கொண்டும் இருக்கிற மனிதன் ஒருவன் மேலே நின்றபடியே அந்தக் களிற்றைக் கொடுமையாக அடிக்கிறான்; மீண்டும் மீண்டும் அடிக்கிறான். அடித்துக் கொண்டே, ஒரு திருடனைக்

கெட்ட வார்த்தைகளால் திட்டுவது போல அந்தக் களிற்றைத் திட்டுகிறான். இந்தக் கொடுமை ஐந்தாறு நாள் நிகழ்கிறது. அந்த ஐந்தாறு நாளும் களிற்றுக்குத் தீனியும் போடுவதில்லை, நீரும் வைப்பதில்லை. அதற்குப் பிறகு வேறொரு நிறத்தில் ஆடை அணிந்துகொண்டிருக்கும் இன்னொரு மனிதன் வருகிறான். அவனுடைய முகமும் மூடப்படாமல் இருக்கிறது. அவன் முதல் மனிதனை அடிப்பது போலவும் பிடித்துத் தள்ளுவது போலவும் நடிக்கிறான். பின்னர் அவன் இறங்கிவந்து களிற்றினிடம் பேசுகிறான். பேசிக்கொண்டே நீளமான ஓர் ஈட்டியில் அதனைச் சொறிந்து கொடுக்கிறான். பின்னர் அதற்குத் தீனி போட்டு அதனை முத்தமிடுகிறான். இவ்வாறு பத்துப் பதினைந்து நாள் சென்றபின், சிறுகச் சிறுக அதனை அணுகி, அதனை வேறொரு யானையோடு பிணைத்துவிடுகிறான். இவ்வாறு சுமார் இருபது நாள் சென்றதும், அதனை வெளியே கொண்டுவந்து பணிய வைத்துப் பழக்குகிறார்கள்.[32]

இந்தப் பெரிய இந்தியாவில் பன்னிரண்டுக்கும் அதிகமான அரசர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அனைவருமே உருவ வழிபாடு செய்பவர்கள். மிளகு விளையும் நாட்டில் வலிமை மிக்க அரசன் ஒருவன் இருக்கிறான். அவனுடைய ராஜ்யத்தை மோல்பார் என்று சொல்கிறார்கள். சிங்குய்லீ என்னும் இராஜ்யமும் ஒன்றிருக்கிறது. அதற்கும் ஓர் அரசன் இருக்கிறான். அது போலவே கொலும்பும் என்னும் இராஜ்யமும் இருக்கிறது. அதன் அரசனை லிங்குவா என்று சொல்கின்றனர். ஆனால், அவனுடைய ராஜ்யத்தை மொஹபார் என்று சொல்கிறார்கள். மோலபட்டம் என்னும் ஊரிலும் ஓர் அரசன் இருக்கிறான். அவனுடைய ராஜ்யம் மோலப்பூர் என்று சொல்லப்படுகிறது. அங்கே முத்து ஏராளமாய்க் கிடைக்கிறது. சைலன் தீவிலும் ஓர் அரசன் இருக்கிறான். அங்கு ரத்தினங்களும் சிறந்த யானைகளும் கிடைக்கின்றன. ஜாவாத் தீவில் மூன்று நான்கு அரசர் இருக்கின்றனர். அங்கே உயர்தர நறுமணப் பொருள்கள் விளைகின்றன. இன்னும் பல அரசர்களும் இருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக, டெலென்க் அரசனைச் சொல்லலாம். அவன் மிகவும் வலிமை வாய்ந்த பெரிய அரசன். டெலென்க் இராஜ்யத்தில் மக்காச்சோளம், நெல், கரும்பு, தேன், தேன் மெழுகு, தேனிறால், பருப்பு, முட்டை, ஆடு, எருமை, எருது, பால், வெண்ணெய், பலவகைப்பட்ட எண்ணெய், பல உயர்தரப் பழங்கள் ஆகியவை ஏராளமாய் இருக்கின்றன. இந்தியாவின்

[32] இது உண்மையாய்த்தான் இருக்கும். Mission to Ava in 1855 என்னும் நூலில் 103-5 பக்கங்களைப் பார்க்க. பர்மாவில் யானையைப் பழக்கும் முறை அங்கு விவரிக்கப்பட்டுள்ளது.—யூல்.

பிற பகுதிகளில் இத்தனை பொருள்கள் இந்த அளவில் விளைகின்றன என்று சொல்லமுடியாது. மிகவும் பெரிய மராத்தா என்னும் இராஜ்யமும் இருக்கிறது. அதுபோலவே பட்டிகலா என்னும் இராஜ்யம் ஒன்றும் இருக்கிறது. ஆனால் அதனுடைய அரசன் சாரசன் வகுப்பைச் சேர்ந்தவன். சோப்பாவிலும் அரசர் பலர் இருக்கின்றனர்.[33]

இனி நான் என்ன சொல்வது? இந்த இந்தியாவின் பெருமையை வர்ணிப்பதற்குச் சொற்கள் கிடைக்கவில்லை. எனவே பெரிய இந்தியா சிறிய இந்தியா ஆகியவற்றைப் பற்றிய செய்திகளை இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

—*The Wonders of the East (Mirabilia Descrepta)* by Friar Jordanus : Yule, pp. 26-41.

[33] இது சம்பாவாய் இருக்கக்கூடும். ஆனால் இந்தப் பத்தியிற் காணப்படும் தொடர்பற்ற கூற்றுகள் பலவற்றையும் மன நிறைவு தரும் முறையில் விளக்குவது மிகவும் கடினம். 'பன்னிரண்டு' அரசர் என்று கூறுவது ஒரு மரபு.

# XXIX. அபுல்பேடா

## தோற்றம்[1] கி. பி. 1273
## மறைவு[2] கி. பி. 26-10-1331

### அ. தென்னிந்தியா

வழிப்போக்கர் ஒருவர் பின்வருமாறு சொல்கிருர்: தீவ் என்னும் தீவு கன்பாயீத் (Cambay) என்னும் இடத்திற்குத் தென்புறம் இருக்கிறது. அதில் வாழும் மக்கள் கடற்கொள்ளைக் காரர்கள். அவர்கள் நாணல் வேய்ந்த வீடுகளில் வசிக்கிருர்கள்; மழைநீரைக் குடிக்கிருர்கள்.

வழிப்போக்கர் ஒருவர் பின்வருமாறு சொல்கிருர்: சிந்தாப் பூரிலிருந்து கிழக்கே ஹன்ருவுர் (ஹொனவர்) வரையிலும் பரவியிருக்கிற நாட்டின் வழியாகப் போனுல் மலபாரை அடையலாம். ஹன்ருவுர் ஓர் அழகிய சிறுநகர். அங்குப் பழத் தோட்டங்கள் ஏராளமாய் இருக்கின்றன. மலபார் நீர்வளம் உடையது. அதனுல், உயர்ந்து வளர்ந்து ஒன்ருெடொன்று பின்னிக்கொண்டிருக்கிற மரமடர்ந்த காடுகள் அங்கு அதிகமாய் இருக்கின்றன. ஹன்ருவுரிலிருந்து பசரூருக்குப் (பர்சலூர்) போகலாம். அது ஒரு சிறிய ஊர். அதற்கப்பால் மஞ்சரூர் (மங்களூர்) இருக்கிறது. மலபாரிலுள்ள பெரு நகர்களுள் அதுவும் ஒன்று. மத நம்பிக்கையில்லாதவன் (முசல் மானல்லா தவன்) அங்கு அரசனுயிருக்கிருன். மஞ்சரூர் நாம் முன்னர்ச் சொன்ன இடங்களுக்குக் கிழக்கேயிருக்கிறது. மஞ்சரூரிலிருந்து மூன்றுநாள் பயணத்தில் ஒரு பெரிய மலை குறுக்கிடுகிறது. அது கடலுக்குள் நீண்டு செல்கிறது. மாலுமிகள் அதனை நெடுந்தொலை விலிருந்தே பார்க்கமுடியும். அதன் பெயர் ராஸ் ஹயீலி (இல்லி

[1] Reinaud, I p. ii.

[2] Reinaud, I, p. xxvii.

நிலக்கூம்பு) என்பதாகும். ராஸ் ஹயீலிக்குக் கிழக்கே, மலபார் நாட்டின் எல்லையில் தந்தியூர் என்னும் சிறிய நகர் இருக்கிறது. அங்குத் தோட்டங்கள் பல இருக்கின்றன. ஷாலியாத் (ஜலியத்) ஷின்கிலீ என்பவை மலபாரிலுள்ள பிற ஊர்கள். அவற்றுள் ஓர் ஊரில் யூதர்கள் வாழ்கிருர்கள். அது எந்த ஊர் என்று வழிப் போக்கர் சொல்லவில்லை.[8] மிளகு நாடாகிய மலபாரில் கொல்லமே கடைசி நகர்.

மலபாரை அடுத்துள்ள சோழமண்டலத்தில் முதலில் இருப்பது ராஸ் கொம்ஹாரி (கன்னியாகுமரி)—மலையும் நகரும்—ஆகும். கடற்கரையில் அமைந்துள்ள மனிபட்டனிஸ் என்பது சோழமண்டலத்திலுள்ள இன்ெறாரு நகர். சோழ மண்டலத்தின் தலைநகரம் பிய்யர்தாவல் என்பதாகும். அங்கேதான் சோழ மண்டலத்தின் சுல்தான் வசிக்கிருன். அவனுக்குத் தேவையான குதிரைகள் பிற நாடுகளிலிருந்து வருகின்றன.

—*Geographie D' Aboulfeda,* II ii. ed M. Stanislas Guyard, pp. 115-6.

## ஆ. சோழமண்டலம் (மா'பார்)

இபன் சாயித் சொல்வது, 142° நீர்க்கரேகை–17°25 அட்ச ரேகை; மூன்றும் தட்பவெப்ப நிலை; இந்தியாவின் இறுதிப் பகுதி. மா'பார் ஒரு நாட்டின் பெயர் என்பது மேலே சொல்லப்பட்டிருக்கிறது. அதனல், இங்குக் குறிக்கப்பட்டுள்ள இடம் மேலே சொன்ன தலைநகரமாகிய பிய்யர்தாவலாய் இருக்கக்கூடும்.

சோழமண்டலத்திற்குச் சென்ற பயணிகள் எழுதிவைத்துள்ள குறிப்புகளால் அந்தநாடு பலரும் அறிந்த நாடாக விளங்குகிறது. மென்மைக்கு எடுத்துக்காட்டாய் மக்கள் நாவில் வழங்குகின்ற மஸ்லின்துணி இந்த நாட்டிலிருந்துதான் ஏற்றுமதி ஆகிறது. இந்திய அரசர்களுள் ஒருவனை பல்ஹாரனுடைய ராஜ்யத்தின் எல்லையிலுள்ள மலை சோழமண்டலத்திற்கு வடக்கேயிருக்கிறது. சோழமண்டலத்திற்கு மேற்கில் சுலியன் ஆறு கடலில் கலக்கும் இடம் இருக்கிறது. சோழமண்டலம் கவுலத்திலிருந்து கிழக்கே மூன்று நான்கு நாள் பயணத்தில் இருக்கிறது. நேர் கிழக்கே இருக்கிறது என்பதற்குப் பதிலாக

[8] அது ஷின்கிலீ என்னும் ஊர்—cf. Dimashki tr. Mehren. p. 234.—S. Guyard.

சிறிது தென்கிழக்கே இருக்கிறது என்று சொல்வது பொருத்தமாய் இருக்கும்.

—*Geographie D' Aboulfeda*—M. Stanislas Guyard. II. ii (1883) p. 121.

## இ. 12° கவூலம் (கௌலம்)

இபன் சாயீத் சொல்வது, 132° நீர்க்கரேகை, 12° அட்சரேகை. அட்வால் சொல்வது, 110° நீர்க்கரேகை, 13°30 அட்சரேகை. முதல் தட்பவெப்ப நிலை. மிளகு நாட்டின் கோடியில் இருப்பது (மிளகுநாடு-மலபார்).

கவூலம் மிளகு நாட்டின் கிழக்குப் பகுதியில் இருக்கும் கடைசி நகரம் என்று இபன்சாயித் சொல்கிறார். ஏடனுக்குப் போக விரும்புபவர்கள் இந்த நகரத்தில் கப்பலேற வேண்டும். கவூலம் என்னும் நகர் மிளகு நாட்டின் கடைக் கோடியில் ஒரு வளைகுடாவில் அமைந்துள்ளது என்றும், அங்கே முசல்மான்கள் வசிப்பதற்கென்று ஒரு தனிப்பகுதி உள்ளதென்றும், அந்தப் பகுதியில் ஒரு பள்ளிவாசல் இருக்கிறதென்றும் வழிப்போக்கர் ஒருவர் என்னிடம் சொன்னார். அந்த நகர் மணற்பாங்கான ஒரு சமவெளியில் அமைந்திருக்கிறது. பூத்துக் காய்த்துக் குலுங்கும் பழத்தோட்டங்கள் அங்கே ஏராளமாயிருக்கின்றன. அங்கே பொக்கமரம் (பிரேசில்மரம்) வளர்கிறது. பார்ப்பதற்கு அது மாதுளைமரம் போல இருக்கிறது. அதன் இலைகள் ஜுஜுப் மரத்தின் இலைகளைப்போல இருக்கின்றன.

—*Geographie D' Aboulfeda* : M. Stanislas Guyard II ii p. 121.

# XXX. இபன் பதூதா. கி.பி. 1333–45

## அ. பஹாவுதீன் குஷ்டாஸ்ப் செய்த கலகம்

(சுல்தானுடைய அத்தை மகன் சுல்தானுக்கு எதிராகச் செய்த படைக் கிளர்ச்சி).

சுல்தான் துக்ளக் தன் உடன்பிறந்தாள் மகனை பஹாவுதீன் குஷ்டாஸ்ப் (ஹைஸ்டாஸ்பே) என்பவனை ஒரு மாகாணத்தின் ஆளுநனாய் நியமித்திருந்தான். சுல்தான் இறந்த பின் அவனுடைய மகன் பட்டத்திற்கு வந்தபோது, அவனுக்குக் கீழ்ப்படிந்து உண்மையாய் நடப்பதாக வாக்குறுதி அளிப்பதற்கு (விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்வதற்கு) குஷ்டாஸ்ப் மறுத்து விட்டான். குஷ்டாஸ்ப் சிறந்த வீரன்; களம்பல கண்டவன். அவனை அடக்குவதற்காக மாலிக் மஜீர் போன்ற சிறந்த அமீர்களின் தலைமையில் புதிய சுல்தான் ஒரு வலிமை மிக்க படையை அனுப்பினான். அந்தப் படைக்கு வாஜீர் க்வாஜா ஜஹான் தலைமைத் தளபதியாய் இருந்தான். இரு திறத்துக் குதிரைப் படைகளும் ஒன்றோடொன்று மோதின. இருதிறத்து வீரர்களும் வீரத்தோடு பொருததால் சண்டை மிகவும் கடுமையாய் இருந்தது. இறுதியில் சுல்தானுடைய படைகள் வெற்றி பெற்றன. கன்பிலா ராய் (ராயா அல்லது ராஜா) என்னும் இந்து அரசனிடம் பஹாவுதீன் அடைக்கலம் புகுந்தான். கிறிஸ்துவர்கள் அரசனை ராய் என்று சொல்வதைப் போலவே[1] இந்துக்களும் தங்களுடைய அரசனை ராய் என்று சொல்கிறார்கள். கன்பிலா என்பது அந்த அரசன் ஆண்ட நாடு. அவனுடைய ராஜ்யம் பகைவர் அடைதற்கரிய மலைப்பாங்கான இடத்தில் இருந்தது. முஸ்லிம் அல்லாத மக்களுடைய அரசர்களுள் கன்பிலா ராய் ஒரு சிறந்த இடத்தை வகித்தான்.

[1] இங்கு இபன்பதூதா ஸ்பெயின் நாட்டினரையும் அவர்களுடைய சொல்லான 'ரே' என்பதையும் குறிப்பிடுகிறார் என்பதில் ஐயமில்லை.

இந்தியப் பேரரசனின் படைகள் பஹாவுதீனைத் துரத்திக் கொண்டுபோய்க் கன்பிலாவை முற்றுகையிட்டன. முற்றுகை நீடித்ததால் கன்பிலாவில் சேமித்து வைக்கப் பட்டிருந்த உணவுப் பொருள்கள் தீர்ந்துபோய் விட்டன. பகைவர் தன்னை வன்முறையில் கைப்பற்றிக் கொள்வர் என்பதை உணர்ந்த இந்து அரசன் பஹாவுதீனை அழைத்து, 'நம்முடைய நிலைமை மோசமாகி விட்டது. நான் இறந்துபோகத் துணிந்துவிட்டேன். என்னுடைய குடும்பத்தினரும் என்னைப் பின்பற்ற விரும்புகிற ஏனையோரும் என்னுடன் இறந்துபடுவர். (இந்து அரசன் ஒருவனுடைய பெயரைச் சொல்லி) நீ அந்த அரசனிடம் சென்று விடு. அவன் உனக்குப் புகலிடம் தந்து காப்பாற்றுவான்' என்று சொல்லி, அவனுக்குத் துணையாக ஓர் ஆளையும் அனுப்பினான். பின்னர் அவன் நெருப்பு வளர்க்குமாறு தன்னுடைய பணியாட்களுக்கு ஆணையிட்டான். அவ்வாறே நெருப்பு வளர்க்கப்பட்டது. அப்போது அரசன் தன்னுடைய பொருள்களைத் தீயிலிட்டுக் கொளுத்திவிட்டுத் தன்னுடைய மனைவிமாரையும் பெண் மக்களையும் அழைத்து, 'நான் போர் புரிந்து சாகப் போகிறேன். என்னோடு சாக விரும்புவர்கள் சாவதற்கு முன்வரலாம்' என்று சொன்னான். அதைக் கேட்டதும் அவனுடைய மனைவிமார் ஒவ்வொருவரும் நீராடி, முகசரி என்னும் சந்தனத்தை உடலிற் பூசிக் கொண்டு, அரசனுக்குமுன் சென்று, தரையை முத்தமிட்டு விட்டு, தீயில் பாய்ந்து உயிர் விட்டனர். அதுபோலவே, அந்த ராஜ்யத்து அமீர்கள், வாஜீர்கள், பிரபுக்கள் ஆகியவர்களுடைய மனைவிமாரும் தீயில் பாய்ந்து மாய்ந்தனர். ஏனைய மகளிரும் அவ்வாறே செய்தனர்.

**கன்பிலா முற்றுகை**

அரசனும் நீராடி, சந்தனம் பூசிக்கொண்டு, தன்னுடைய படைக்கலங்களைக் கையில் எடுத்துக்கொண்டான். ஆனால் அவன் மார்புக் கவசம் அணிந்துகொள்ளவில்லை. அவனுடன் சாக விரும்பிய அலுவலர்களும் அவன் என்னென்ன செய்தானோ அவை அனைத்தையும் அவன் செய்தவாறே செய்தார்கள். பின்னர் அவர்களும் கன்பிலா ராயும் சுல்தானுடைய படைவீரருடன் பொருது மாண்டார்கள்; ஒருவரும் மீதமில்லாமல் அனைவருமே மாண்டுபோயினர். அதன்பின் சுல்தானுடைய வீரர்கள் நகரத்திற்குள் புகுந்து அங்கு வாழ்ந்த மக்களைச் சிறை பிடித்தார்கள். அவ்வாறு பிடிபட்டவர்களுள் ராயினுடைய பதினொரு மைந்தரும் இருந்தனர். படை வீரர்கள் அவர்களைச் சுல்தானிடம் அனுப்பினார்கள். சுல்தான் அவர்களை இஸ்லாம்

**கன்பிலாவின் வீழ்ச்சி**

மதத்திற் சேர்த்து அவர்களுக்கு அமீர்ப்பதவி அளித்துப் பெருமைப் படுத்தினான். அவர்களுடைய உயர்குடிப் பிறப்புக்காக மட்டுமன்றி அவர்களுடைய தந்தையின் வீரத்திற்காகவும் சுல்தான் அவர்களை உயர்வாக நடத்தினான். அவர்களுள் நாசர், பக்தியார், அல்முஹர்தார் ஆகிய மூவரை நான் சுல்தானுடைய மாளிகையிற் கண்டேன். அல்முகஹர்தார் 'முத்திரைக் காவலன்' பதவியை வகித்தான். சுல்தான் குடிக்கும் நீரை (கங்கை நீர் என்பதில் ஐயமில்லை) அதற்குரிய பாத்திரத்தில் ஊற்றி முத்திரை வைப்பதற்கான மோதிரம் அவனிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. அவனுடைய சிறப்புப் பெயர் அபு முஸ்லிம் என்பதாகும். அவனும் நானும் நண்பர்கள்.

**குஷ்டாஸ்ப் சிறைப்படல்**

கன்பிலா ராய் இறந்துபோனபின் சுல்தானுடைய படைகள் பஹாவுதீன் அடைக்கலம் புகுந்திருந்த இந்து ராஜ்யத்தின் மேற் சென்று அதனை வளைத்துக் கொண்டன. அந்த நாட்டுஅரசன், 'கன்பிலா ராயைப் போல நான் சாகமாட்டேன்' என்று சொல்லி, பஹாவுதீனைப் புடித்து சுல்தானுடைய படை வீரர்களிடம் கொடுத்துவிட்டான். வீரர்கள் அவனுடைய காலில் தளை பூட்டி, கைகளைக் கழுத்தோடு சேர்த்துக் கட்டி, சுல்தான் முன் கொண்டுபோனார்கள். சுல்தான் தன்னுடைய மனைவி மாரும் பிற பெண்டிரும் இருந்த இடத்திற்கு அவனை இழுத்துச் கொண்டு போகுமாறு ஆணையிட்டான். அவர்கள் அவனை ஏசி, அவன் முகத்தில் துப்பினார்கள். அதன்பின் அவனை உயிரோடு தோலுரிக்குமாறு சுல்தான் ஆணையிட்டான். அவ்வாறு தோலை உரித்த பின்னர், அவனுடைய தசையை அறுத்து, அதனை அரிசியோடு சேர்த்துச் சமைத்து, அதில் ஒரு பகுதியை அவனுடைய மனைவிக்கும் மக்களுக்கும் அனுப்பினார்கள். மீதியை ஒரு பெரிய தட்டில் இட்டு யானைகள் தின்னுமாறு வைத்தார்கள். ஆனால் யானைகள் அதனைத் தின்ன மறுத்துவிட்டன. பஹாவுதீனுடைய தோலில் வைக்கோலைத் திணித்து, அந்த உறைதிணி உருவையும் பஹாதூர் பூராவின் உறைதிணி உருவையும் சுல்தானுடைய ஆட்சிக்குட்பட்ட மாகாணங்கள் அனைத்திலும் ஊர்வலமாய் எடுத்துச் சென்றார்கள்.

—*Vayages D'Ibn Batoutah*, ed.Defremery and Sanguinettie, iii, pp. 318-21, (*cf*. Elliot and Dowson, iii 614-6).

## ஆ. மா'பாரில் கலகம்

மா'பார் மாகாணத்தில் ஷரீப் ஜலாலுதீன் செய்த படைக் கிளர்ச்சியும் வாஜீரின் உடன்பிறந்தாள் மகன் சாவும்;

ஷரீப் ஜலாலுதீன் அஹசன் ஷா என்பவனை இந்தியாவின் தென்கிழக்குப் பகுதியாகிய மா'பார் இராஜ்யத்தின் ஆளுநராக டில்லி சுல்தான் நியமித்திருந்தான். மா'பார் டில்லியிலிருந்து ஆறுமாதப் பயணத்தில் இருக்கிறது. ஜலாலுதீன் சுல்தானுக்கு எதிராய்க் கிளர்ச்சி செய்து, சுல்தான் சார்பில் அந்த மாகாணத்திலிருந்த அலுவலர்களையும் செயல்முதலிகளையும் கொன்றுவிட்டு, ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டு, தன்னுடைய பெயர் பொறித்த பொன் வெள்ளி நாணயங்களை வெளியிட்டான். தினுர் என்று சொல்லப்பட்ட நாணயங்களின் ஒருபக்கத்தில் 'டாஹா, யாசீன் ஆகியவர்களுடைய சந்ததியில் வந்தவன்: பக்கிரிகள் ஏழைகள் ஆகியவர்களுடைய தந்தை; உலகம் மதம் ஆகியவற்றின் சீர்த்தி' என்னும் சொற்களைப் பொறித்தான். இன்னொரு பக்கத்தில் 'அருளாளனின் துணையை நம்பும் அஹசன் ஷா சுல்தான்' என்னும் சொற்களைப் பொறித்தான். (டாஹா, யாசீன் என்னும் சொற்கள் குரான் அதிகாரங்கள் இருபது முப்பத்தாறு ஆகியவற்றின் தலைப்புகளாயிருக்கின்றன. அவை வழக்கமாக, முகமது நபியின் பெயரோடு சேர்ந்து வழங்கும் அடை மொழிகள்).

கிளர்ச்சியைப் பற்றிக் கேள்விப்பட்ட சுல்தான் அதனை அடக்குவதற்கான நடவடிக்கைகளைத் தொடங்கினுன். முதலில், 'பொற்கோட்டை' என்று பொருள்படும் குஷக்-ஈஜார் என்னும் இடத்திற்குச் சென்று, எட்டுநாள் தங்கி, அங்கிருந்த குடிமக்களுடைய நலனுக்கான பணிகளில் ஈடுபட்டான். சுல்தான் அங்கேயிருந்த சமயத்தில்தான் வாஜீர் க்வாஜா ஜஹானுடைய சகோதரி மகனையும் மூன்று நான்கு அமீர்களையும், அவர்களுடைய காலில் தளை பூட்டிக் கைகளைக் கழுத்துடன் சேர்த்துப் பிணித்து, சுல்தான்முன் கொண்டுவந்து நிறுத்தினுர்கள். சுல்தான் மா'பார்க் கலகத்தை அடக்குவதற்காக வாஜீர் க்வாஜா ஜஹானை ஒரு முன்னேடிப் படையுடன் அனுப்பியிருந்தான். வாஜீர் தன் படையுடன் டில்லியிலிருந்து இருபத்துநான்கு நாள் பயணத்திலிருந்த ஜார் (தார்) என்னும் நகரை அடைந்து அங்கே சில நாள் தங்கியிருந்தான். வாஜீரின் சகோதரி மகன் துணிவும் தைரியமும் உடையவன்; வீரமிக்க போர் வீரன். அவனும் வேறு மூவரும் சேர்ந்து வாஜீரைக் கொன்று விட்டு, அந்த நகரிலிருந்த செல்வங்களையும் உணவுப் பொருள்களையும் கைப்பற்றிக் கொண்டு, மா'பாருக்கு ஓடி, ஜலாலுதீன் அஹசன் ஷாவுடன் சேர்ந்து கொள்வது என்ற சதித்திட்டம் ஒன்றனை வகுத்தனர். வாஜீர் வெள்ளிக்கிழமைத் தொழுகைக்காக வெளியே வருகின்ற சமயத்தில் அவனைக் கொன்று விடுவது என்பது அவர்களுடைய முடிவு. ஆனல் அவர்களுடைய சதித்திட்டத்தை அறிந்திருந்த

ஒருவன் அதனை வாஜீருக்குத் தெரிவித்துவிட்டான். மாலிக் நசரத் என்பது அவனுடைய பெயர். அவன் மாளிகை உள்படு கருமத் தலைவனாயிருந்தான். அவர்கள் தங்களுடைய அங்கி களுக்கடியில் கவசம் அணிந்திருப்பார்கள் என்றும் அதுவே அவர்கள் சதிகாரர்கள் என்பதற்குச் சான்றாகும் என்றும் அவன் வாஜீரிடம் சொன்னான். உடனே வாஜீர் அவர்களைத் தன்னிடம் அழைத்து வருமாறு பணித்து அவர்களைச் சோதனை செய்தான். நசரத் சொன்னவாறே அவர்கள் கவசம் அணிந்திருந்தார்கள். எனவே, வாஜீர் அவர்களை சுல்தானிடம் அனுப்பினான்.

சதிகாரர்கள் வந்தபோது நான் சுல்தானுடன் இருந்தேன். அவர்களுள் ஒருவன் உயரமாகவும் தாடிவளர்த்துக் கொண்டும் இருந்தான். சுல்தானைக் கண்டதுமே அவன் அஞ்சி நடுங்கினான். நடுங்கிக்கொண்டே அவன் குரானில் யாசீன் என்னும் தலைப் புள்ள முப்பத்தாறும் அதிகாரத்தை வாசித்தான். அது இறக்குந் தறுவாயில் உள்ளவர்கள் ஓதுகின்ற பிரார்த்தனை. அமீர்களை யானைக் கொட்டிலில் எறிந்துவிடுமாறு சுல்தான் ஆணையிட்டான். அந்த யானைகள் மனிதரைக் கொல்வதற்குப் பயிற்சி பெற்றவை. வாஜீரின் சகோதரி மகனை வாஜீரிடமே அனுப்பிவிடுமாறு சுல்தான் உத்தரவிட்டான். வாஜீர் அவனைக் கொன்று விட்டான்.

—*Op. cit.* iii, pp. 328-30. (Elliot and Dowson, iii, p. 618.)

## சுல்தான் படையில் கொள்ளை நோய்

ஷரீபின் கலகத்தை அடக்குவதற்காகக் குஷாக் ஈஜாரிலிருந்து மீண்டும் மா'பாருக்குத் தன் பயணத்தைத் தொடங்கிய சுல்தான் வழியில் டைலிங் மாகாணத்தின் தலைநகரான பத்ரக் கோட்டில் தங்கினான். அங்கிருந்து மா'பாருக்குப் போக மூன்று மாதம் பிடிக்கும். பத்ரக்கோட்டில் தங்கியிருந்தபோது சுல்தா னுடைய படைவீரர்கள் கடுமையான கொள்ளை நோய்க்கு ஆளானார்கள். அவர்களுள் ஒரு பெருந்தொகையினர் மாண்டு போயினர். அடிமைகள் மட்டுமன்றி, 'மாமா' என்று சுல்தான் அன்புடன் அழைக்கும் மாலிக் தௌலத்ஷா, அப்துல்லா அல்ஹரவி போன்ற பெரிய அமீர்களும் அந்த நோய்க்கு இரை ஆனார்கள்.

தன்னுடைய படைவீரர்களுக்கு நேர்ந்த பேரிடரைக் கண்ட சுல்தான் எஞ்சியிருந்தவர்களோடு தௌலதாபாதுக்குத் திரும்பி

விட்டான். அப்போது மாகாணங்கள் அவனுக்கு எதிராகக் கிளம்பின; நாட்டில் குழப்பம் தலைவிரித்தாடியது.

—*Op. cit*, iii, p. 333-334. (Elliot and Dowson iii, p. 618-9.)

## ஆஆ. டைலிங் மாகாணத்தில் கலகம்

### டைலிங் மாகாணத்தில் சுல்தானுடைய அணுக்க அலுவலன் செய்த படைக் கிளர்ச்சி

சுல்தான் டைலிங்கிலிருந்து திரும்புவதற்குமுன் தாஜுல் மூல்க் நசரத்கான் என்னும் பிரபுவைத் தன்னுடைய அணுக்க அலுவலனாக அங்கே விட்டுவிட்டு வந்தான். சில நாட்களுக்குப் பிறகு, சுல்தான் இறந்து போனான் என்ற பொய்ச் செய்தி ஒன்று வந்தது. உடனே நசரத்கான் சுல்தானுக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்துவிட்டு, டைலிங் மாகாணத்தில் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றி, தலைநகரான பத்ரக்கோட்டுக்[1a] குடிமக்களின் விசுவாசப் பிரமாணத்தை ஏற்றுக்கொண்டு ஆட்சி செய்யலானான். அந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட சுல்தான் நசரத்கானை அடக்குவதற்காகத் தன்னுடைய ஆசிரியரான குட்லுக்கானை ஒரு பெருஞ்சேனையுடன் அனுப்பினான். நசரத்கான் படைகளுக்கும் குட்லுக்கான் படைகளுக்கும் மிகக் கொடூரமான சண்டை நடந்தது. அந்தச் சண்டையில் போர்வீரர்கள் கூட்டங் கூட்டமாய் இறந்தார்கள். அடுத்து, குட்லுக்கான் பத்ரக்கோட்டை முற்றுகையிட்டான். நகரம் வலிய அரண் உடையதாயிருந்தது. ஆனால், அதற்குள் இருந்த மக்கள் முற்றுகையால் பெருஞ்சேதமடைந்தார்கள். அதற்கிடையில் குட்லுக்கானின் வீரர்கள் கோட்டைச் சுவரை ஓரிடத்திற் பிளந்துகொண்டு உள்ளே நுழையத் தொடங்கினார்கள். அதனால், நசரத்கான் சரணடைந்தான். குட்லுக்கான் அவனுடைய உயிருக்கு உத்தரவாதமளித்து, அவனை சுல்தானிடம் அனுப்பிவிட்டு, அவனோடு சேர்ந்து பொருத படைவீரர்களுக்கும் நகரத்துக் குடிமக்களுக்குக்கும் மன்னிப்பளித்தான்.

—*Op.* cit. iii, pp. 340—41.

## இ1. இபன் பதூதாவின் தென்னிந்தியப் பயண விவரங்களின் சுருக்கம்: யூல்

இபன் பதூதாவும் அவருடைய தோழர்களும் கன்னோசியிலிருந்து தெற்கு நோக்கிச் சென்று குவாலியர்க் கோட்டையை

1a தெலுங்கில் பெடதக்கோட், பீடார்.

அடைந்தார்கள். பதூதா முன்பொரு முறை குவாலியருக்குப் போயிருந்தார். அப்போது அதைப் பற்றிய ஓரளவு துல்லியமான குறிப்பை அவர் எழுதியிருந்தார். அவரும் அவருடைய தோழர் களும் குவாலியரிலிருந்து கிளம்பித் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். வழியில் பர்வன் என்னும் ஊரை அவர்கள் கடந்து சென்றார்கள். அந்த ஊருக்குள் சிங்கங்கள் அடிக்கடி புகுந்து அங்கு வாழ்ந்த மக்களுக்குப் பெருந்துன்பம் கொடுத்தன. அவை உண்மையிலேயே விலங்குகள் அல்லவென்றும் தீய குண முடைய கொடிய யோகியர் சிலர் அந்த விலங்குகளின் உருவத்தில் வந்தனர் என்றும் பதூதா கேள்விப் பட்டார். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்ட பதூதா யோகியருள் ஒரு பிரிவினரைப் பற்றிய சுவையான செய்தியொன்றைச் சொல்கிறார். அந்த யோகிகள் தங்களை உயிரோடு புதைக்கச் சொல்லி, அந்தப் புதை குழிக்குள் பல மாதம் இருந்தபின்னர், மீண்டும் உயிரோடு குழியிலிருந்து வெளியில் வருவார்கள் என்றும் சில யோகிகள் ஓராண்டு முழுவதுமே அவ்வாறு குழியிலிருந்துவிட்டு வெளியே வருவார்கள் என்றும் சொல்கிறார். பின்னர் அவர் மங்களூருக்குச் சென்றபோது, யோகிகளிடமிருந்து அந்தக் கலையைக் கற்று வைத்திருந்த முஸ்லீம் ஒருவருடைய நட்பைப் பெற்றார். அவருடைய பயணம் பண்டல்கண்டு மாளவம் ஆகிய ஊர்களின் வழியாக மேலும் தொடர்ந்தது. அவர் தௌலதாபாதுக்கு (புகழ் பெற்ற தேவகிரிக் கோட்டைக்கு) சென்று, அங்கிருந்து தபதிநதிப் பள்ளத்தாக்கு வழியாகக் கின்பயத் (காம்பே) போய்ச் சேர்ந்தார்.

காம்பேயிலிருந்து புறப்பட்ட பாதூதாவும் அவருடைய தோழர்களும் புறச்சமய அரசன் ஜலன்சி என்பவனுக்குச் சொந்தமான கவே என்ற வளைகுடாவை அடைந்தார்கள். அந்த வளைகுடா வேலையேற்ற இறக்கங்களுக்கு உட்பட்ட ஒரு கழிமுக மாகும். அங்கிருந்து இன்னொரு கழிமுகத்திலிருந்த காண்டஹார் என்ற பெரிய நகருக்குப் போனார்கள். அந்த நகரும் ஜலன்சி அரசனுக்குச் சொந்தமானதுதான். அந்த அரசன் டில்லி சுல்தா னிடம் விசுவாசம் உள்ளவன். ஆதலால், பாதூதாவையும் அவருடைய தோழர்களையும் அவன் நல்ல முறையில் நடத்தினான். அங்கிருந்து அவர்கள் கப்பலேறி மீண்டும் பயணத்தைத் தொடங்கினார்கள். அவர்களுடைய வசதிக்காக மூன்று கப்பல்கள் அவர்களிடம் விடப்பட்டன. இரண்டு நாள் பயணத்திற்குப் பின் அவர்கள் பைராம் என்ற தீவில் இறங்கினார்கள். அது தலை நிலத்திலிருந்து நான்கு மைல் தொலைவிலிருந்தது. அந்தத் தீவில் முன்பு மக்கள் வாழ்ந்தார்கள். முகமதியர் அதனைக் கைப்பற்றிய பின் அவர்கள் அதைவிட்டு வெளியே போய்விட்டார்கள். ஆனால்,

அரசனுடைய அலுவலர்கள் அந்தத் தீவில் மக்களை மீண்டும் குடியேற்றுவதற்கு முயன்றார்கள். அதற்காக அவர்கள் அங்கே ஒரு காவற் படையை நிறுத்தியதுடன் கவண்பொறிகளையும் நிறுவினார்கள். அடுத்த நாள் பதூதாவும் அவருடைய தோழர்களும் குக்கா என்னும் பெயருடைய நகரை அடைந்தார்கள். அது பரந்த கடைத்தெருக்கள் நிறைந்த பெரிய நகரம். அங்கு வேலையிறக்கம் மிகுதியாய் இருந்ததால் கலங்கள் நகரத்திலிருந்து நான்கு மைல் தள்ளி நிறுத்தப்பட்டன. குக்கா நகரத்தின் அரசனும் புறச்சமயிதான். அவன் பெயர் துன்குல் என்பது. அவன் டில்லி சுல்தானிடம் உண்மையான விசுவாமுடையவன் என்று சொல்லமுடியாது. அங்கிருந்து புறப்பட்டு மூன்று நாள் பயணஞ் செய்தபின் பதூதாவும் தோழர்களும் சிந்தாபூர் என்னும் தீவையடைந்தார்கள். ஆனால், அவர்கள் அங்கு நிற்காமல் மேலே சென்று தலைநிலத்திற்கு அருகிலிருந்த ஒரு சிறிய தீவில் நங்கூரம் பாய்ச்சினார்கள். அந்தத் தீவில் ஒரு கோயிலும் சோலையும் நீர் நிலையும் இருந்தன. தீவில் இறங்கிய பதூதா கோயிலுக்கு அருகில் நின்றுகொண்டிருந்த யோகி ஒருவரைக் கண்டார். அது அவருக்கு ஒரு விசித்திரமான அனுபவமாயிருந்தது. அடுத்த நாள் பாதூதாவும் தோழர்களும் ஹானவுர் (அல்லது ஓனோர்) என்னும் நகரை அடைந்தார்கள். அந்த நகரின் அரசன் ஒரு முசல்மான். அவனிடம் வலிமைமிக்க கடற்படையொன்று இருந்தது. பிற்காலத்தில் அந்த நகரத்தை ஆட்சி செய்த அரசர்களைப் போலவே அவனும் ஒரு கடற்கொள்ளைக்காரன்தான் என்று நாம் கருதலாம். ஆனாலும் அவன் கல்வி கேள்விகளிற் சிறந்த அரசனாயிருந்தான் என்பதற்கு அவன் அந்த நகரில் நடத்திய பள்ளிக்கூடங்கள் சான்று தருகின்றன. அங்கே ஆண்களுக்காக இருபத்துமூன்று பள்ளிக்கூடங்களும் பெண்களுக்காகப் பதின்மூன்று பள்ளிக்கூடங்களும் இருந்தன. இபன்பதூதா தாம் சுற்றிப் பார்த்த வேறு எந்த இடத்திலும் பெண்கள் பள்ளிக்கூடத்தைக் கண்டதேயில்லை.

அந்தக் காலத்து மலபாரில் வாணிகச் செழிப்பு மிக்க துறைமுகங்கள் பல இருந்தன. அவற்றுள் வடபகுதியிலிருந்த பல துறைமுகங்களுக்குச் சென்றபின் பதூதாவும் தோழர்களும் கோழிக்கோட்டை அடைந்தார்கள். அது உலகின் மிகப்பெரிய துறைமுகங்களுள் ஒன்று என்றும், அங்குச் சீனா, இந்தியத் தீவுக் கூட்டம், இலங்கை, மாலத் தீவுகள், யெமன், பாரசீக வளைகுடா நாடுகள் ஆகிய பலவேறு இடங்களிலிருந்தும் வணிகர் அடிக்கடி வந்து போயினர் என்றும் பதூதா சொல்கிறார். கோழிக்கோட்டு அரசன் பதூதாவையும் தோழர்களையும் ஆடம்பரமாக வரவேற்றான். ஆனால், விரைவிலேயே பாதூதாவும் தோழர்களும்

பெருந்துன்பத்திற்கு ஆளானார்கள். அதைப் பற்றி அப்போது அவர்களுக்கு எப்படித் தெரியும்?

(கோழிக்கோட்டு அரசன் சமரி என்னும் பட்டப் பெயர் உடையவனாய் இருந்தான். போர்ச்சுகீசியர்கள் அந்தப் பெயரைத் தான் ஜாமரின் என்று சொன்னார்கள்.)

கோழிக்கோட்டிலிருந்து பதூதா சீனாவுக்குப் போகத் திட்டமிட்டிருந்தார். அதற்காக இளவேனிற்காலம் வரையிலும்—அதாவது, மூன்று மாதம்—அங்கேயே தங்கியிருந்தார். சீனாவிற்கும் கோழிக்கோட்டிற்கும் இடையில் நடைபெற்ற போக்குவரவு செய்தித் தொடர்பு எல்லாம் சீனக் கப்பல்களின் மூலமாகவே நடைபெற்றது என்று பதூதா சொல்கிறார். (இந்தக் கூற்றுச் சரியானதுதானா என்பதே ஐயத்திற்கு இடமானது.) சீனக் கப்பல்கள் மூன்று வகைப் பட்டவை, மிகப் பெரிய கப்பல் ஜன்க் என்றும், நடுத்தரக் கப்பல் ஜவாவோ என்றும், மூன்றாந்தரக் கப்பல் ககம் என்றும் சொல்லப்பட்டன. பெரிய கப்பல்களில் மூன்று முதல் பன்னிரண்டு வரையிலும் பாய்மரங்கள் இருந்தன. பாய்கள் மூங்கிற் சிம்புகளால் முடையப்பட்டவை. அத்தகைய கப்பல் ஒவ்வொன்றிலும் 1000 பணியாட்கள் இருந்தார்கள். அவர்களுள் 600 பேர் மாலுமிகள், 400 பேர் போர்வீரர்கள். ஒவ்வொரு பெரிய கப்பலுக்கும் துணையாக மும்மூன்று உய்ப்புதவிக்கலங்கள் இருந்தன. அவை அரை, மூன்றிலொன்று, கால் என்னும் பெயர் உடையவை. அந்தப் பெயர்கள் அவற்றின் பருமன் விகிதத்தைக் குறிப்பவை என்று கருதலாம். இந்திய வாணிகத்திற் பயன் பட்ட கப்பல்களெல்லாம் ஜைட்டுன் என்னும் துறைமுகத்திலும், சின்கலன் என்னும் துறைமுகத்திலும் கட்டப்பட்டன; வேறெங்கும் அந்தக் கப்பல்களைக் கட்டும் வழக்கமில்லை. அவை முப்பக்கங்களைக் கொண்டவை. பக்கங்களை ஒன்றோடொன்று இணைப்பதற்காக மும்மூன்று முழ நீளமுள்ள மிகப்பெரிய ஆணிகளைப் பயன்படுத்தினார்கள். ஒவ்வொரு கப்பலிலும் நான்கு தளங்களும் ஏராளமான அறைகளும் இருந்தன. அறைகளுள் பொது அறைகளும் தனியறைகளும் இருந்தன. அவற்றில் கழிவிடங்களும் பலவகைப்பட்ட பிற வசதிகளும் இருந்தன. கப்பலில் வைக்கப்பட்டிருந்த மரத்தொட்டிகளில் மாலுமிகள் காய்கறிகளையும் இஞ்சி முதலியவற்றையும் வளர்த்தார்கள். கப்பல் தலைவன் மிகப்பெரிய அலுவலன் என்று மதிக்கப்பட்டான். ஆதலால், அவன் கரையிறங்கினால் அவன் கப்பலில் இருந்த போர் வீரர்கள் அனைவரும் வாள் வேல் ஆகிய ஆயுதங்களை ஏந்திக்கொண்டும் போர்ப் பாடல்களைப் பாடிக் கொண்டும் அவன்முன்னால் செல்வது வழக்கம்.

ஜன்க் வகைக் கப்பலில் பயன்பட்ட துடுப்பு அல்லது நீள் வீச்சுத் துடுப்பு மிகப்பெரியது. அதனைத் துடுப்பு என்று சொல்வதைக்காட்டிலும் பாய்மரம் என்று சொல்வது பொருத்தமாய் இருக்கும். ஒவ்வொரு துடுப்பையும் வலிப்பதற்குப் பத்து முதல் முப்பது ஆட்கள்வரையில் தேவைப்பட்டார்கள். அவர்கள் இருவரிசையில் எதிரெதிராய் நின்று கம்பி வடத்தைக் கையில் பிடித்து இழுத்தார்கள். அந்த வடங்களோ கைக்கடங்காத அளவு பெரியவையாய் இருந்தன. வலிப்புக்கேற்றவாறு அவர்கள் லா லா லா லா என்று பாடினார்கள்.

மலபார்த் துறைமுகங்களுள் கவுலம், கோழிக்கோடு, ஹிலி ஆகிய துறைமுகங்களுக்கே சீன வாணிகக் கப்பல்கள் அடிக்கடி வந்தன. ஆனால், பருவமழைக் காலத்தை மலபாரிலேயே கழிக்க விரும்பிய கலங்கள் பண்டரைனு என்னும் துறைமுகத்துட் சென்று தங்கின. இபன் பதூதாவும் அவருடைய தோழர்களும் அந்தத் துறைமுகத்திற்குச் சென்றபோது மேலே சொன்னவாறு பதின்மூன்று கப்பல்கள் அங்கே நின்றிருந்தன. அவை பெரியவையும் சிறியவையும் ஆகப் பலவகைப் பட்டவையாய் இருந்தன.

இபன் பதூதாவும் அவருடைய தோழர்களும் பயணஞ் செய்வதற்காக ஜன்க் ஒன்றில் ஜாமரின் இடவசதி ஏற்பாடு செய்திருந்தான். பதூததாவுடன் வந்திருந்தவர்களுள் பெண்களும் இருந்தார்கள். அவர்கள் தங்குவதற்குத் தனியறை ஒன்று தேவைப்பட்டது. அதற்காகச் சீனக் கப்பல்களுக்கு ஏஜன்டாய் இருந்த சுலைமான் உல்—சபதி—உல்—ஷமி என்னும் முசல்மானை இபன் பதூதா கண்டு பேசினார். இத்தகைய விஷயங்களில் பதூதா எப்போதுமே சுறுசுறுப்பாய்ச் செயலாற்றமாட்டார். அதனால் 'இன்று போகலாம் நாளை போகலாம்' என்று தள்ளிப் போட்டுக் கொண்டே வந்து, கடைசி நிமிடத்தில் ஏஜன்டிடம் போனபோது, அறைகள் அனைத்தையும் சீன வணிகர் எடுத்துக் கொண்டனர் என்று அவன் சொன்னான். சீன வணிகர் செலவு மீள்வுச் சீட்டு வாங்கியிருந்தனர் போலும். ஆனால், தன்னுடைய மருமகனுக்கென்று ஒதுக்கிவைக்கப்பட்ட அறை ஒன்று மட்டும் இருக்கிறது என்றும் அதில் போதுமான வசதிகள் இல்லை என்றும், அப்போதைக்கு அதனை இபன் பதூதா எடுத்துக் கொண்டால், போகப் போக வசதி செய்து கொள்ளலாம் என்றும் ஏஜன்ட் சொன்னான். (இந்தக் காலத்துக் கப்பல் பயண ஏஜன்டுகள் சிலரைப் போல அந்தக் காலத்திலும் சிலர் இருந்திருக்கின்றனர்.!) அவ்வாறே செய்ய ஒப்புக்கொண்ட இபன் பதூதா ஒரு வியாழக் கிழமை பிற்பகலில் தம்முடைய மூட்டை

முடிச்சுகளையும் ஆண் பெண் ஆகிய இருபால் அடிமைகளையும் கப்பலில் ஏற்றிவிட்டு, வெள்ளிக் கிழமைத் தொழுகையை முடித்தபின்னர்த் தாம் ஏறிக்கொள்ளும் எண்ணத்துடன் கரையில் தங்கியிருந்தார். இபன்பதூதாவின் தோழர்களும் சீனவுக்கு எடுத்துக்கொண்டு போவதற்காக வாங்கி வைத்திருந்த பரிசுப் பொருள்களுடன் முன்னரே கப்பலில் ஏறியிருந்தார்கள். ஆனால், அடுத்த நாள் காலையில் இபன் பதூதாவின் வேலைக்காரனான ஹிலால் என்னும் அலி இபன் பதூதாவிடம் வந்து அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த அறை 'மிகவும் மோசமாயிருக்கிறது; அதிற் பயணஞ் செய்வது இயலாது' என்று சொன்னான். உடனே இபன்பதூதா கப்பல் தலைவனிடம் முறையிட்டார். ஆனால், அவன் தன்னால் ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லிவிட்டான். எனினும் அப்போது துறைமுகத்தில் நின்று கொண்டிருந்த ககம் ஒன்றில் பயணஞ் செய்வதாயிருந்தால் அவர்களுக்கு விருப்பமான அறையைத் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம் என்று கப்பல் தலைவன் சொன்னான். அதற்கிசைந்த இபன் பதூதாவும் தம்முடைய பொருள்களையும் பெண்டிரையும் தொழுகை நேரத்திற்கு முன்னர் அந்தக் ககத்திற்கு மாற்றிவிட்டார். பிற்பகலில் கடல் பொங்கி எழுந்ததால் இபன் பதூதாவால் ககத்தில் ஏற இயலவில்லை. (ஒவ்வொரு நாளும் பிற்பகலில் வேலையேற்றம் நிகழ்வது வழக்கம் என்று இபன் பதூதாவே சொல்கிறார்.) அதற்குள் மூன்று கலங்களைத் தவிர ஏனைய சீனக் கப்பல்கள் அனைத்துமே புறப்பட்டுப் போய்விட்டன. அந்த மூன்று கலங்களுள் ஒன்றில் இபன் பதூதாவின் தோழர்கள் பரிசுப் பொருள்களுடன் இருந்தார்கள். இன்னொன்று பண்டரைனவில் மழைக் காலத்தைக் கழிப்பதற்காக அங்கே போவதற்குக் காத்துக் கொண்டிருந்தது. மூன்றாம் கலமாகிய ககத்திற்றான் பதூதாவின் உடைமைகளெல்லாம் ஏற்றப்பட்டிருந்தன. சனிக் கிழமை காலையில் பதூதா எழுந்திருப்பதற்குள் அவருடைய தோழர்கள் ஏறியிருந்த ஜன்கும் அவருடைய பெண்டிரும் உடைமைகளும் இருந்த ககமும் துறைமுகத்தை விட்டுக் கிளம்பிப் போய்விட்டன. பண்டரைனவுக்குப் போவதற்காகக் காத்துக் கொண்டிருந்த ஜன்க் துறைமுகத்திற்குள்ளேயே கவிழ்ந்துவிட்டது. அந்த ஜன்கில் ஒரு வணிகனுடைய பேரன்புக்கு உரியவளாயிருந்த இளம் பெண் ஒருத்தி இருந்தாள். அவளைக் காப்பாற்றுபவர்களுக்குப் பத்துத் தங்க நாணயம் பரிசளிப்பதாக அக்த வணிகன் சொன்னான். ஹார்மசிலிருந்து வந்திருந்த மாலுமி ஒருவன் தன்னுடைய உயிரைப் பணயம் வைத்து அந்தப் பெண்ணைக் காப்பாற்றினான். ஆனால், அவன் பரிசு வேண்டாம் என்று சொல்லிவிட்டான். 'கடவுள் பக்தியின் காரணமாகவே

நான் அந்தப் பெண்ணைக் காப்பாற்றினேன்' என்று அந்த உத்தமன் சொல்லிவிட்டான். பரிசுப் பொருள்களுடனிருந்த ஜன்கும் துறைமுகத்திற்கு வெளியிலிருந்த நீரடித் திடல்களின் மீது மோதி நொறுங்கிப் போயிற்று. அதிலிருந்த மனிதர் அனைவருமே இறந்து போயினர். அவர்களுடைய உடல்களுட் பலவற்றை அலைக்கரங்கள் கொண்டு வந்து கரையில் தள்ளின. அவற்றுள் அரசுத் தூதர் ஜஹீருதீன் உடலும் மாலிக் சுன்புல் என்னும் அலியின் உடலும் இருந்தன. ஜஹீருதீனுடைய மண்டை உடைந்து போயிருந்தது. அலியின் செவித் தடத்தில் பெரியதோர் ஆணி ஏறியிருந்தது. அந்த அவலக் காட்சியைக் காண்பதற்காக மக்கள் கரையில் திரண்டுவிட்டார்கள். அவர்களுள் ஜாமரினும் இருந்தான். அப்போது அவன் இடையில் ஒரு வெள்ளை வேட்டியும் தலையில் முண்டாசும் கட்டியிருந்தான். வேறு ஆடை எதுவுமே அவன் அணிந்துகொள்ளவில்லை. அவனுக்குக் குடை பிடித்துக்கொண்டிருந்த பையன் ஒருவனைத் தவிர அவனோடு வேறு யாருமேயில்லை. ஜன்குக்கு நேர்ந்த கதியைக் கண்ட ககமும் துறைமுகத்தை விட்டு ஒரே ஓட்டமாகக் கடலை நோக்கிச் சென்றுவிட்டது. அந்தக் கலத்தில்தான் இவன் பதூதாவின் உடைமைகள் மட்டுமன்றி அவருடைய பெண்டிரும் அடிமைகளும் இருந்தார்கள். அதனைக் கண்ட பதூதா செய்வதறியாது கோழிக்கோட்டுக் கடற்கரையில் திகைத்து நின்றுவிட்டார். அப்போது அவரிடம் தொழுகைச் சமுக்காளமும் பத்துத் தங்க நாணயங்களும் இருந்தன. அவற்றைத் தவிர அவரிடம் வேறே உடைமை எதுவும் இல்லை. விடுதலை பெற்ற அடிமை ஒருவனும் இருந்தான். ஆனால், அவன் பதூதாவின் நிலைமையைக் கண்டு, அதுவே தருணம் என்று சொல்லாமல் ஓடிவிட்டான்.

தம்முடைய உடைமைகளோடு சென்ற ககம் கவுலத்தில் நிற்கும் என்று கேள்விப்பட்ட பதூதா அங்கே போவது என்று தீர்மானித்தார். (கவுலத்தைத்தான் கொல்லம்பும் என்று மான்டிகார்வினோ ஜான், ஜார்டனல் ஆகிய துறவிகள் குறிப்பிடுகிறார்கள்.) கோழிக்கோட்டிலிருந்து நீர்வழியாய்ப் போனாலும் தரைவழியாய்ப் போனாலும் கவுலத்தை அடையப் பத்து நாள் பிடிக்கும் என்று சொன்னார்கள். எனவே, பதூதா கழிகளின் வழியாகப் படகில் போனார். தமக்குக் குற்றேவல் புரிய ஒரு முசல்மானையும் உடனழைத்துக் கொண்டார். ஆனால், அவன் எப்போதும் குடித்துக்கொண்டேயிருந்தான். அதனால், ஏற்கெனவே துயருற்றிருந்த பதூதா மேலும் துன்பமடைந்தார். பத்தாம் நாள் அவர் கவுலத்தை அடைந்தார். மலபாரிலிருந்த மிகச் சிறந்த நகரங்களுள் கவுலமும் ஒன்று என்றும், அங்கே

பெரிய கடைகளும் செல்வமிக்க வணிகர்களும் இருந்தார்களென்றும், அந்த வணிகர் சுலி என்று சொல்லப்பட்டனர் என்றும், அவர்களுட் சிலர் முகமதிய மதத்தைச் சேர்ந்தோர் என்றும் பதூதா தெரிவிக்கிறுர். மேலும் அங்கே முஸ்லீம் காஜி ஒருவரும், ஷபந்தர் என்ற சமய அலுவலர் ஒருவரும், சமயப் பணியாற்றிய வேறு சிலரும் இருந்தனர். சீனக் கலங்கள் இந்தியாவை அடைந்ததும் முதலிற் சென்ற துறைமுகம் கவுலமே. அதனுல், சீனவணிகர் அங்கே அடிக்கடி வந்து தங்கினர். அங்கு ஆட்சி செய்த அரசன் முஸ்லிம் அல்லாதவன். அவன் திரவரி என்னும் பெயருடையவன். நீதியை நிலைநிறுத்துவதற்கு மிகக் கடுமையான நடவடிக்கை எடுப்பது அவனுடைய வழக்கம். அதை மெய்ப்பிக்கின்ற நிகழ்ச்சி ஒன்றை பதூதா குறிப்பிடுகிறுர். ஒரு நாள் அரசனும் அவனுடைய மருமகனும் குதிரை மீதேறிச் சென்றுகொண்டிருந்தார்கள். அப்போது தோட்டச் சுவரைத் தாண்டி வெளியே விழுந்திருந்த மாம்பழம் ஒன்றைக் கண்ட மருமகன் அதனை எடுத்துக்கொண்டான். மருமகன் செயல் மாமனுர் கண்ணிற் பட்டுவிட்டது. அவன் உடனே தன் ஏவலாளரை அழைத்து, மருமகன் உடலை இரண்டாகப் பிளந்துவிடுமாறு ஆணையிட்டான். பின்னர் மாம்பழத்தையும் இரண்டாகப் பிளக்கச் சொல்லி, உடலின் ஒரு பகுதியையும் மாம்பழத்தின் ஒரு பகுதியையும் சாலையின் ஒரு மருங்கிலும், உடலின் மறு பகுதியையும் மாம்பழத்தின் மறு பகுதியையும் சாலையின் இன்னொரு மருங்கிலும் போட்டுவிடுமாறு ஆணையிட்டான்.

கவுலத்திலும் தம்முடைய ககத்தைப் பற்றிய செய்தி ஒன்றும் பதூதாவுக்குக் கிடைக்கவில்லை. ஆனுல், இன்னொரு ஜன்க் முழுகிவிட்டதால் அதிலிருந்து தப்பிப் பிழைத்த சீனத் தூதர்களை பதூதா அங்கே கண்டார். கவுலத்திலிருந்த சீன வணிகர்கள் தங்கள் நாட்டுத் தூதர்கள் சீனுவுக்குச் செல்வதற்குத் தேவையான ஏற்பாடுகள் அனைத்தையும் செய்து கொடுத்தார்கள். எனவே சீனத் தூதர்கள் சீனுவுக்குப் போய் விட்டார்கள். பிற்காலத்தில் சீனுவுக்குப் போன பதூதா அந்தத் தூதர்களை அங்கே சந்தித்தார்.

டில்லிக்குத் திரும்பிச்சென்று தம்முடைய அவலக் கதையைச் சொல்வதற்கு பதூதா விரும்பவில்லை. தம்மைப் போன்ற ஒரு காக்கையின் இறகுகளைப் பிடுங்குவதற்கு சுல்தான் முகமது பெரிதும் விரும்புவான் என்பது பதூதாவுக்கு நன்ருய்த் தெரியும். எனவே, ஹனுவுருக்குச் சென்று தம்முடைய நண்பனுன சுல்தான் ஜமாலுதீனேடு தங்குவது நல்லது என்று பதூதா

தீர்மானித்தார். தம்முடைய சுகத்தைப் பற்றிய செய்தி ஏதாவது தெரிகின்ற வரையிலும் அங்கே தங்கலாம் என்று அவர் கருதினர். பதூதாவை ஜமாலுதீன் வரவேற்ருன் என்பது உண்மையே. ஆனல், வரவேற்பு அவ்வளவு அன்பானதாய் இல்லை. பதூதா வுக்குப் பணியாள் ஒருவனும் கொடுக்கப்படவில்லை. ஏறக்குறைய எல்லா நேரமும் அவர் பள்ளிவாசலிலேயே இருந்தார். பள்ளி வாசலே கதியென்று கிடப்பது அவருடைய நிலைமை நன்ருயில்லை என்பதைக் காட்டும் அறிகுறி என்பதை அவர் அனுபவத்தில் உணர்ந்திருந்தார். ஆனல், குரானை ஓதுவதற்கு அது ஒரு நல்ல வாய்ப்பாய் இருந்தது. தொடக்கத்தில் அவர் குரானை நாள் தோறும் ஒருமுறை ஓதினர். போகப் போக, ஒரு நாளைக்கு இருமுறை ஓதினர். அவ்வாறு மூன்று மாதத்தை அவர் அங்குக் கழித்தார்.

ஹனுவுர் சுல்தான் சிந்தாபூர் என்னும் தீவின்மீது படை எடுப்பதற்குரிய திட்டத்தை வகுத்துக் கொண்டிருந்தான். இபன் பதூதாவும் அந்தப் படையெடுப்பில் கலந்துகொள்ள விரும்பினர். எனவே, திருவுளக் குறிப்பினை அறிவதற்காகத் திருக்குரானை எடுத்து ஒரு பக்கத்தைத் திருப்பினர். அந்தப் பக்கத்திலிருந்த நாற்பத்தொன்ரும் வாசகம் அவருக்குப் பெரு மகிழ்ச்சியையும் நம்பிக்கையையும் அளித்தது. இறைவனுக்கு உதவுபவர்களுக்கு இறைவன் உற்றுழியுதவுவான் என்பது அந்த வாசகம். எனவே பதூதா அந்தப் படையெடுப்பிற் கலந்து கொண்டார். சிந்தாபூரைப் பிடித்தபின் மூன்று மாதம் இபன் பதூதா ஹனுவுரில் தங்கியிருந்தார். ஆனல், ஓரேயிடத்தில் இருப்பது அவருக்குப் பிடிக்கவில்லை. அதனல், அவர் மீண்டும் தம்முடைய பயணத்தைத் தொடங்கி, கரையோரமாகவே சென்று, கோழிக்கோட்டை அடைந்தார். காணமற்போன தம்முடைய அடிமைகளுள் இருவரை இபன் பதூதா அங்கே கண்டார். அவருடைய தனிப் பற்றுக்குரிய பெண் இறந்து போனள் என்றும், ஏனைய பெண்களை ஜாவா அரசன் (சுமத்ரா வின் அரசனயிருக்கக்கூடும்) கைப்பற்றிக் கொண்டான் என்றும், அவருடைய பரிவாரத்திலிருந்த மற்ற ஆட்களுள் சிலர் ஜாவா விலும், சிலர் சீனவிலும், சிலர் வங்காளத்திலும் தங்கி விட்டார்கள் என்றும் அவர்கள் சொன்னர்கள். காணமற்போன சுகத்தின் கதை இவ்வாறு முடிந்தது.

இபன் பதூதா மீண்டும் ஹனுவுருக்கும் சிந்தாபூருக்கும் திரும்பிச் சென்ருர், சிந்தாபூரிலிருந்து துரத்தியடிக்கப்பட்ட இந்து அரசன் மீண்டும் ஒரு படையுடன் வந்து அங்கிருந்த முஸ்லிம் படைகளை வளைத்துக்கொண்டான். இபன் பதூதா

ஹனுவுருக்குத் திரும்பிச் சென்றபோது அந்த முற்றுகை நடந்து கொண்டிருந்தது. தாம் அங்கேயிருப்பது நல்லதன்று என்று கருதிய இபன்பதூதா இரண்டு மாதத்திற்குப்பின் அங்கிருந்து தப்பி மீண்டும் கோழிக்கோட்டுக்கே சென்றார். அப்போது திபத்-உல்-மஹல் (மாலத்தீவு) என்னும் இடத்திற்குப் போக வேண்டுமென்ற ஆசை அவருள்ளத்தை ஆட்கொண்டது. மாலத்தீவைப்பற்றி வியக்கத்தக்க செய்திகள் பலவற்றை அவர் கேள்விப்பட்டிருந்தார்.

அத்தகைய செய்திகளுள் ஒன்று அந்தத் தீவுகளை அப்போது ஒரு பெண்மணி ஆண்டுகொண்டிருந்தாள் என்பதாகும். அவள் பெயர் கதீஜா. முன்னர் அந்தத் தீவுகளுக்கு அரசனாயிருந்த சுல்தான் ஜலால் உதீன் ஓமார் இறந்த பிறகு அவனுடைய மகன் அரியணையேறினன். ஆனல், அவனுடைய தீய நடத்தையின் காரணமாக அவனைத் தள்ளிவிட்டு அவனுடன் பிறந்தாளான கதீஜாவை மக்கள் அரசியாக்கினார்கள். அவளுடைய கணவன் ஒரு சமயப் பிரசாரகன். ஜமாலுதீன் என்பது அவன் பெயர். உண்மையில் ஆட்சியை நடத்தியவன் அவன்தான் என்றாலும் அரசு ஆணைகள் அனைத்தும் கதீஜாவின் கையொப்பத்தோடு வெளியிடப்பட்டன. அன்றியும், வெள்ளிக்கிழமைத் தொழுகையின்போது மக்கள் அவளுடைய பெயரைச் சொல்லித் தங்களுடைய பிரார்த்தனையை ஆண்டவனுக்குத் தெரிவித்தார்கள்.

அந்தத் தீவுகளில் இறங்கிய பதூதாவுக்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. அவர் அந்த ராஜ்யத்தின் காஜியாக நியமிக்கப்பட்டார். அன்றியும் வாஜீர்களுள் ஒருவனுடைய மகளையும் வேறு மூன்று பெண்களையும் அவர் மணந்துகொண்டார். சமய நெறியைப் பின்பற்றுவதில் மக்கள் கண்டிப்பற்றவர்களாய் இருந்தார்கள். பெண்களுடைய உடையும் நாகரிகமற்றதாய் இருந்தது. அதனல் கடவுள்பக்தி மிகுந்த பதூதாவின் மனம் மிகவும் நொந்தது. பெண்களின் உடையைச் சீர்திருத்துவதற்கு பதூதா எவ்வளவோ முயன்றார். ஆனல் அதில் வெற்றியடையவில்லை. அதுபோலவே ஆடவரும் வெள்ளிக்கிழமைதோறும் தவறாது பள்ளிவாசலுக்குச் செல்லவேண்டுமென்று வற்புறுத்தினர். ஊர்காவலன் ஆடவர்களைத் திரட்டி, தன்னுடைய கைத்தடியால் அவர்களை அச்சுறுத்தி, பள்ளிவாசலுக்குத் தள்ளிக்கொண்டுபோகும் முறை ஊர்கஞ்சு என்னும் இடத்தில் வழக்கத்தில் இருந்தது. அந்த முறையை இங்கும் கையாள்வதற்கு பதூதா முயன்று அம்முயற்சியிலும் தோல்வியுற்றார். அதனல் மனக்குறையடைந்த பதூதா மாலத்தீவின் அரசியல் சூழ்ச்சிகளிலும்

சச்சரவுகளிலும் அகப்பட்டுக்கொண்டார். ஆதலால் 1344ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் அவர் அங்கிருந்து இலங்கைக்குக் கிளம்பிவிட்டார்.

இபன் பதூதா பயணஞ் செய்த கலம் இலங்கையை அணுகியபோது, செரந்தீபமலை புகையைப்போல மேலெழுந்து நிற்பதை அவர் கண்டார். (மாரிக்னொல்லி குறிப்பிடுகிற மானேஸ் செய்லனியை இத்துடன் ஒப்பு நோக்குக.) பத்தலா (பட்லம்) என்னும் இடத்தில் பதூதா கரையிறங்கினார். அங்கே முஸ்லிம் அல்லாத ஒருவன் அரசனாய் இருந்தான். அவன் பெயர் ஐரி ஷக்கர்வதி என்பது. அவன் கடற்கொள்ளையில் ஈடுபட்டவன். ஆனால், அவன் பதூதாவை அன்புடன் வரவேற்று ஆதாம் சிகரத்திற்குப் போய்வருவதற்கான வசதிகளைச் செய்துகொடுத்தான். கப்பல் தலைவனும் பதூதா திரும்பிவரும் வரையிலும் காத்துக்கொண்டிருப்பதாக அன்புடன் வாக்களித்தான்.

ஆதாம் சிகரத்திற்குப் போகும் வழியில் பதூதா மனர் மண்டலி என்னும் இடத்தையும் சலவத் என்னும் துறைமுகத்தையும் கடந்துசென்று, யானைகள் ஏராளமாய் வசித்த பரந்த சமவெளியை அடைந்தார். ஆனால், அந்த யானைகள் வெளி நாட்டினருக்கும் புனிதப் பயணிகளுக்கும் எவ்விதத் தீங்கும் செய்யமாட்டா. அதற்குக் காரணம் ஆதாம் சிகரத்தை அடைவதற்கான வழியை முதன் முதலிற் கண்டுபிடித்த அபு அப்துல்லா என்னும் ஷேக்கின் அருளேயாகும். அதற்குப் பிறகு பதூதா இலங்கைத்தீவுக்குச் சட்டப்படி அரசனாயிருந்த 'குனர்' என்னும் அரசன் வாழ்ந்த நகரான 'குனகர்' என்னும் இடத்தை அடைந்தார். அவனிடத்தில் வெள்ளையானை ஒன்றிருந்தது. அந்த நகரத்தின் அருகில் மணிக்கற்குளம் என்னும் நீர்நிலை இருந்தது. விலையுயர்ந்த எண்ணற்ற ரத்தினங்களை அந்த நீர்நிலையிலிருந்து மக்கள் எடுத்தார்கள். மலையேற்றத்தைப் பற்றி பதூதா எழுதியுள்ள குறிப்பு மிகவும் தெளிவாகவும் பல விவரங்களை உடையதாகவும் இருக்கிறது. அவர் விவரிக்கின்ற இடங்களுள் பல இப்போது நமக்குத் தெரியவில்லை. ஆனால் முஸ்லிம் யாத்திரிகர்களுக்கு வழிகாட்டும் பணியில் அந்தக் காலத்தில் ஈடுபட்டவர்களைப் போன்ற வழிகாட்டிகள் இப்போதும் இருந்தால், இபன் பதூதா குறிப்பிடுகின்ற இடங்கள் பலவற்றை அவர்கள் நமக்கு அடையாளங் காட்டக்கூடும். மலையின்மீது ஏறி ஆதாமின் திருவடியை வழிபட்ட பின், மலையின் அடுத்த பக்கத்தில்—அதாவது, ரத்தினபுரம் இருந்த திசையில்—பதூதா இறங்கினார். அடிவாரத்திலிருந்து புறப்பட்டு, அவர் கடற்கரையிலிருந்த பெரிய ஊரான

தின்வர் என்னும் நகரை அடைந்தார். அந்த நகரில் தெவினெவரா அல்லது தொந்தரா என்று சொல்லப்பட்ட வாணிகர் பலர் வாழ்ந்தனர். அந்தக் காலத்தில் உருவ வழிபாட்டுப் பெரிய கோயில் ஒன்று அந்த நகரில் இருந்தது. பின்னர், அவர் காலே நகரையும் (அவர் அதனைக் கலியென்று குறிப்பிடுகிறார்.) கலன்பு (கொழும்பு) நகரையும் தாண்டிக் கடற்கரை வழியாகவே பட்லத்தை அடைந்தார். இபன் பதூதாவின் கூற்றுப்படி, கொழும்பு அந்தக் காலத்திலே இலங்கைத்தீவின் தலைசிறந்த நகரங்களுள் ஒன்றாயிருந்தது, அங்கேதான் வாஜீர்ப்பதவியும் கடற்படைத் தலைமைப் பதவியும் ஒருங்கே வகித்த ஜலஸ்தி என்னும் அலுவலனுடைய மாளிகை இருந்தது. அபிசீனிய மெய்க்காவலர் 500 பேர் அவனைச் சூழ்ந்திருந்தனர். இனிமை யாகப் பேசிக்கொண்டே மரிக்னொல்லி ஜானின் உடைமைகளைப் பற்றிக்கொண்ட க்வாஜா ஐஹான் இவனாகத்தான் இருப்பானோ? அவன் யாருடைய வாஜீர் யாருடைய படைத்தலைவன் என்பன சொல்லப்படவில்லை.

பட்டலத்தை அடைந்தபின் இபன் பதூதா மா'பாருக்குக் கப்பலேறினார். ஆனால், மா'பாரை அடையவிருந்த சமயத்தில் மீண்டும் அவர் இடருற்றார். கரைக்கு ஏழெட்டு மைல் தொலைவில் இருந்தபோதே கப்பல் தரைதட்டி நின்றுவிட்டது. அதிலிருந்த மாலுமிகள் அதைக் கைவிட்டுச் சென்றுவிட்டார்கள். ஆனால் பதூதா மட்டும் அதிலேயே தங்கிவிட்டார். அந்தப்பக்கத் தலை நிலத்தில் வாழ்ந்த முஸ்லிம் அல்லாத சிலர் அவரைக் காப்பாற்றிக் கரைசேர்த்தனர்.

கரையை அடைந்ததும் இபன் பதூதா சுல்தான் கைசு தீனுக்குத் தம்முடைய வருகையை அறிவித்தார். சட்டப்படி அவன் மா'பார் இராஜ்யத்தின் அரசன் அல்லன் எனினும், நடைமுறையில் அவன்தான் அரசனாயிருந்தான். அவன் அண்மையில்தான் அந்தப் பதவியைப் பெற்றிருந்தான். அந்த அரச வம்சத்தை நிறுவியவன் அவனுடைய மாமனான ஷெரீப் ஜலாலுதீன் என்பவன் ஆவான். தொடக்கத்தில் அவனை முகமது துக்ளக் மா'பார் மாகாணத்துப் படைத்தலைவனாக நியமித்தான். ஆனால், சுமார் 1338—39இல் அவன் தன்னைச் சுயேச்சை பெற்ற அரசனாக விளம்பரப்படுத்திக்கொண்டு, அஹசன்ஷா சுல்தான் என்னும் பட்டப் பெயரையும் வைத்துக் கொண்டு, தன்னுடைய பெயர் பொறித்த நாணயங்களையும் வெளியிட்டான். இபன் பதூதா டில்லியில் தங்கியிருந்தபோது ஷெரீப் ஜலாலுதீனுடைய மக்களுள் ஒருத்தியாகிய ஹூர்னசாப் என்பவளை மணந்துகொண்டார். 'அவள் மிகவும் பக்தி

உள்ளவள். பிரார்த்தனை செய்வதிலும் என்னைக் கவனித்துக் கொள்வதிலும் இரவு நேரத்தைக் கழிப்பது அவளுடைய வழக்கம். அவளுக்குப் படிக்கத் தெரியும்; ஆனால் எழுதுவதற்கு அவள் கற்றுக்கொள்ளவில்லை. என் மூலம் அவள் ஒரு குழந்தையைப் பெற்றாள். ஆனால் குழந்தையும் அவளும் எப்படி இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது' என்று இபன் பதூதா எழுதிவைத்துள்ளார். எனவே, அவர் அப்போது மா'பாரில் ஆட்சி செய்துகொண்டிருந்த சுல்தானுக்குச் சகலை என்ற உறவுடையவராய் இருந்தார். பதூதாவின் வரவையறிந்த சுல்தான் தன்னுடைய முகாமுக்கு வருமாறு பதூதாவுக்குச் சொல்லியனுப்பினான். இரண்டுநாள் பயணத்திலிருந்த அந்த முகாமுக்கு பதூதா போய்ச்சேர்ந்தார். சுல்தான் கைசுதீன் மிகவும் கொடியவன். பெண்களையும் குழந்தைகளையும் கொடூரமாய்க் கொலைசெய்வதற்கு அஞ்சாதவன். அவனுடைய கொடுஞ்செயல்களால் மிகவும் அருவருப்படைந்த பதூதா அந்தச் செயல்கள் தமக்குப்பிடிக்கவில்லை என்பதையும் அவற்றைத்தாம் எதிர்ப்பதையும் வாய்விட்டுச் சொல்லாவிட்டாலும் சுல்தான் அவற்றை உணருமாறு செய்தார். மேலும் சுல்தானுடைய கவனத்தை வேறு விஷயங்களுக்குத் திருப்பும் நோக்கத்துடன் மாலத்தீவுகளின் மீது படையெடுப்பதற்கான ஒரு திட்டத்தை வகுத்து, அதை நிறைவேற்றுவதற்கு என்னென்ன ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்னும் சிந்தனையில் சுல்தானை ஈடுபடச் செய்தார். அந்தத் திட்டத்தைப்பற்றி எந்த முடிவும் செய்வதற்கு முன்பே சுல்தான் கொள்ளை நோயில் இறந்தான். அவனுக்குப் பின் ஆட்சிக்கு வந்த சுல்தான் நாசிருதீன் அந்தத்திட்டத்தை மேற்கொள்ள விரும்பினான். ஆனால் அதற்குள் இபன் பதூதா நோய்வாய்ப்பட்டார். அப்போது அவர் தலைநகரான மத்ராவில் (மதுரையில்) இருந்தார். உடனே அவர் படன் என்னும் நகரத்திற்குச் சென்றுவிட்டார். அது கடற்கரையில் இருந்த ஒரு சிறந்த பெரிய நகரம். அங்கே சிறந்த துறைமுகம் ஒன்றும் இருந்தது. யெமனுக்குப் போவதற்காகக் காத்துக்கொண்டிருந்த கப்பல்கள் சிலவற்றை பதூதா அங்குக் கண்டார். அவற்றுள் ஒன்றில் ஏறி அவர் கவுலத்திற்குச் சென்றுவிட்டார். கவுலத்தில் அவர் மூன்று மாதம் தங்கியிருந்த பின்னர்த் தம்முடைய நண்பனான ஹனவுர் சுல்தானைக் காண்பதற்காக நான்காம் முறை அவர் ஹனவுருக்குச் சென்றார். ஆனால், வழியில் கடற் கொள்ளைக்காரர் அவர் சென்ற கப்பலைத்தாக்கி அதிலிருந்த பொருள்களையெல்லாம் கைப்பற்றிக் கொண்டனர். பகனூருக்கும் ஹனவுருக்கும் இடையில் இருந்த ஒரு சிறு தீவின் அருகில் அந்தத் தாக்குதல் நடந்தது. இபன் பதூதாவின்

உடைமைகளையெல்லாம் பறித்துக் கொண்ட கடற்கொள்ளைக் காரர்கள் அவரை அந்தச் சிறுதீவின் கரையில் விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். அவர் அணிந்திருந்த அரைக்கால் சட்டையைத் தவிர அவருடைய ஆடைகளையும் கொள்ளைக்காரர் பறித்துக்கொண்டனர். அன்றியும் அவர் தம்மிடத்திலிருந்த கையெழுத்துப் பிரதிகள் அனைத்தையும் இழந்துவிட்டார். இந்தச் செய்தியை அவருடைய நூலின் பிறிதோரிடத்தில் கூறியிருக்கிறார். அந்தப் பிரதிகளுள் அவர் பொக்காராவில் இருந்தபோது படியெடுத்து வைத்த பெரிய மனிதர் பலருடைய கல்லறை வாசகங்களும் இருந்தன. மேலும், அவருடைய முன்னைய பயணங்களைப் பற்றி அவர் எழுதிவைத்திருந்த குறிப்புகளும் அவற்றுள் இருந்திருக்கக்கூடும். அவர் கோழிக் கோட்டுக்குத் திரும்பியபோது அங்கு வாழ்ந்த முஸ்லிம் பக்தர்கள் அவருக்குத் தேவையான ஆடைகளை அளித்து உதவி னார்கள். அங்கிருந்தபோது அவர் மாலத்தீவுகளைப் பற்றிய செய்திகளையும் கேள்விப்பட்டார். சமயப் பிரசாரகன் ஜமாலுதீன் இறந்து போனதால் அரசி வேறொருவனை மணந்து கொண்டாள். பதூதா மாலத்தீவிலேயே விட்டுவிட்டு வந்த மனைவிகளுள் ஒருத்திக்கு ஆண் குழந்தை பிறந்திருந்தது. மாலத் தீவுக்குப் போகலாமா வேண்டாமா என்று சிறிது தயங்கிய பின்னர் அவர் அங்குப் போகக் கப்பலேறினார். மாலத்தீவின் மீது படையெடுப்பதற்கான திட்டங்களை அவர் மதுரையில் தீட்டினார் என்பதை நாம் அறிவோம். அதனால்தான் அங்கே மீண்டும் போவதற்கு அவர் தயங்கினார். ஆனால், திருக்குரானைத் திருப்பித் திருவுளக் குறிப்பறிந்தபின் அவர் தைரியமாய் அங்கே போனார். அங்கு அவருக்கு இனிய வரவேற்புக் கிடைத்தது. ஆனால், அவர் எதிர்பார்த்தது நடவாததாலோ அவருடைய பச்சோந்தி மனத்தின் தூண்டுதலாலோ அவர் அங்கே ஐந்தே நாள் தங்கியபின் வங்காளத்திற்குப் போய்விட்டார்.

—Yule: '*Cothay and the Way Thither*' Vol. iv. Introductory Notice pp. 20-36.

## இ 2. தென்னிந்தியச் சுற்றுப்பயணம்

நாங்கள் உஜ்ஜைனியிலிருந்து தௌலதாபாதுக்குப் போனோம். அது பரப்பிலும் முக்கியத்துவத்திலும் டில்லியோடு போட்டியிடத் தகுதி வாய்ந்த புகழ்பெற்ற பெரிய நகரம். அந்த நகரம் மூன்று பகுதிகளைக் கொண்டது. முதற்பகுதி சுல்தானும் அவனுடைய வீரர்களும் தங்குவதற்காக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள இடம்.

**தௌலதாபாத்**

நியாயமாக அதைத்தான் தௌலதாபாத் என்று சொல்ல வேண்டும். இரண்டாம் பகுதியைக் கட்கா (வடமொழியில் கடகம்—அதாவது, முகாம்) என்று சொல்கின்றனர். மூன்றும் பகுதியில் கோட்டை இருக்கிறது. வலிமையில் அதற்கிணையான கோட்டை வேறொன்றும் இல்லை. அதனைத் தவைக்கிர் (தேவகிரி) என்று சொல்கின்றனர்.

சுல்தானுடைய ஆசிரியரான வலிமைமிக்க குட்லுக்கான் (பெருங்கான்) தௌலதாபாத்தில் வசிக்கிறார். அவரே நகரக் காவலராகவும், சாகர், டைலிங் ஆகிய மாகாணங்களுக்கும் அவற்றைச் சார்ந்த சிறு மாகாணங்களுக்கும் சுல்தானுடைய பிரதிநிதியாகவும் இருக்கிறார். அந்த மாகாணங்கள் மூன்று நாள் பயணம் வரையிலும் பரவியிருந்தன. அவற்றில் ஏராளமான மக்கள் வசித்தார்கள். அந்தப் பரந்த பகுதிகள் அனைத்துமே குட்லுக்கான், அவருடைய துணைவர்கள் ஆகியவர்களின் அதிகாரத்திற்கு உட்பட்டவை. தேவகிரிக் கோட்டை சமவெளி ஒன்றில் உயர்ந்து நிற்கின்ற குன்றின்மேல் அமைந்துள்ளது. குன்றின் பக்கங்களைச் செங்குத்தாக வெட்டி அந்தக் கோட்டை கட்டப்பட்டுள்ளது. அதனை அடைவதற்கு ஒரு தோலேணியைப் பயன்படுத்துகிறார்கள். தோலேணி இரவில் மேலே இழுத்துக் கொள்ளப்படுகிறது.

கோட்டையில் மூப்ரீத் அல்லது ஜிமாமி என்று சொல்லப்படுபவர்கள்—அதாவது, படைப் பட்டியலில் பெயர் பதிவு செய்யப்பட்டுள்ள போர்வீரர்கள்—வசிக்கின்றார்கள்.

**சிறைக் கிடங்குகள்**

கடுமையான குற்றங்களுக்காகத் தண்டனை அடைந்த கைதிகள் கோட்டையிலுள்ள இருட் சிறைக்கிடங்குகளில் அடைக்கப்பட்டுள்ளார்கள். அந்த இருட்டறைகளில் பூனைகளைக் காட்டிலும் பெரிய எலிகள் இருக்கின்றன. உண்மையில் அவற்றின் தாக்குதலை எதிர்த்து நிற்க இயலாமல் பூனைகள் அஞ்சி ஓடுகின்றன. எனவே, அவற்றைத் தந்திரத்தாலன்றி வேறு வழியிற் பிடிக்க முடியாது. அவற்றை நான் தேவகிரியில் பார்த்தபோது மிகவும் மலைத்துப் போனேன்.

மாலிக் கட்டாப் என்னும் ஆப்கானியன் தேவகிரிக் கோட்டையிலுள்ள எலிக்கிடங்கு என்னும் இருட்டறையில் ஒரு முறை சிறை வைக்கப்படிருந்ததாய் என்னிடம் சொன்னான்: 'அந்த விலங்குகள் என்னை விழுங்குவதற்காக இரவில் என்னைச் சூழ்ந்து கொள்ளும். அவற்றினின்று என்னைக் காத்துக்கொள்வதற்குள் எனக்கு உண்டு இல்லை என்று ஆகிவிடும். ஓரிரவு

ஒருவர் என் கனவில் தோன்றி, 'திருக்குரானில் உண்மையான பக்தி என்னும் தலைப்புடைய அதிகாரத்தை (குரான் அதிகாரம் 112) நூறாயிர முறை படித்தால் இறைவன் உன்னை அந்தத் துன்பத்திலிருந்து விடுவிப்பான்' என்று சொன்னார். நானும் அவ்வாறே செய்தேன். நூறாயிரமுறை படித்து முடித்ததும் எனக்கு விடுதலை கிடைத்தது. என்னுடைய விடுதலைக்குக் காரணமாயிருந்த நிகழ்ச்சியை இப்போது சொல்கிறேன். என்னுடைய அறைக்குப் பக்கத்திலிருந்த அறையொன்றில் மாலிக் மாலைச் சிறைவைத்திருந்தார்கள். அவன் நோய்வாய்ப்பட்ட போது அவனுடைய விரல்களையும் கண்களையும் எலிகள் தின்று விட்டன. அதனால் அவன் இறந்து போனான். அதனைக் கேள்விப் பட்ட சுல்தான் 'கட்டாபை விடுதலை செய்து விடுங்கள். இல்லா விட்டால் அவனும் இறந்து போவான்' என்று ஆணையிட்டான். நானும் விடுதலை அடைந்தேன்.

அதே மாலிக் மாலின் மகனை நாசிருதீனும் காஜி ஜலாலுதீனும் சுல்தானிடம் தோல்வியுண்ட பிறகு ஓடி ஒளிந்து கொண்டது தேவகிரிக் கோட்டையில்தான்.

**குடிமக்கள்**

தௌலதாபாத் பகுதியில் வாழ்ந்த மக்கள் மராத்தியர் என்ற வகுப்பைச் சேர்ந்தவர்கள். மராத்தியப் பெண்களுக்கு இறைவன் ஒரு தனிப்பட்ட அழகை அளித்துள்ளான். சிறப்பாக, அவர்களுடைய மூக்கு புருவம் ஆகியவை மிகவும் அழகாய் இருக்கின்றன. ஆண்களுக்கு இன்பம் தருவதில் அந்தப் பெண்கள் பிற பெண்களிடம் இல்லாத திறன்களைப் பெற்றுள்ளார்கள். ஆண் பெண் உடலுறவைப் பற்றிய செய்திகளுள் அவர்கள் அறியாதது எதுவும் இல்லை. தௌலதாபாத்தில் வாழும் உருவ வழிபாட்டினர் வாணிகத்தில் மிகுந்த கவனஞ் செலுத்துகின்றனர். அவர்களுடைய வாணிகப் பொருள்களுள் முக்கியமானது முத்து. அவர்கள் மிகுந்த செல்வம் உடையவர்கள். அவர்கள் சாஹா (வடமொழியில் சார்த்தவாஹர்) என்று சொல்லப்படுகிறார்கள். பார்ப்பதற்கு அவர்கள் எகிப்து நாட்டு அகாரி மக்களைப் போல இருக்கிறார்கள்.

**பொருளாதார நிலை**

தௌலாதபாதில் ஆண்டுக்கு இரு போகம் விளையும் கொடி முந்திரியும் மாதுளையும் பயிராகின்றன. இந்தப் பரந்த மாகாணத்தில் ஏராளமான மக்கள் வாழ்கிறார்கள். அதில் முக்கியமான பெரிய நகரங்கள் பல இருக்கின்றன. அதனால் அந்த மாகாணம் அரசுக்கு மிகுந்த வருவாய் தருவதாய் இருக்கிறது. அந்த

மாகாணத்தின் வரி வசூல் செய்யும் உரிமையை இந்து ஒருவன் 17 கோடி தினருக்குக் குத்தகைக்கு எடுத்திருந்தான் என்று நான் கேள்விப்பட்டேன். நான் முன்பே சொன்னவாறு அந்த மாகாணம் மூன்று மாதப் பயணத்திற்குப் பரந்திருந்தது. ஒரு கோடி என்பது நூறு லட்சம்; ஒரு லட்சம் என்பது நூறாயிரம். ஆனால் அந்த இந்து ஒப்பந்தப்படி நடக்கவில்லை. அவன் கட்டவேண்டிய தொகையில் பாக்கி நின்று விட்டது. அதனால், அவனுடைய செல்வங்கள் பறிமுதல் செய்யப்பட்டது மன்றி அவனும் உயிரோடு தோல் உரிக்கப் பட்டான்.

**இன்னிசைக் கடைத் தெரு**

தௌலதாபாத்தில் இசைக்கும் இசை பாடும் பெண்களுக்கும் என்று தனிப்பட்ட கடைத் தெரு ஒன்று இருக்கிறது. அது மிகவும் பெரியது, மிகவும் அழகியது. அந்தத் தெருவில் பல கடைகள் இருக்கின்றன. ஒவ்வொரு கடையிலும் அதன் உரிமையாளனுடைய வீட்டிற்குப் போவதற்கான வழி ஒன்று இருக்கிறது. அது தவிர அந்த வீட்டிற்குக் கடையோடு தொடர் பில்லாத தனி வாயிலும் ஒன்று இருக்கிறது. கடையில் அழகிய சமுக்காளம் விரிக்கப்பட்டுள்ளது. மையத்தில் பொருத்தப் பட்டுள்ள ஊஞ்சலில் இசைபாடும் பெண் அமர்ந்தோ சாய்ந்தோ காட்சி தருகிறாள். அவள் பலவகைப்பட்ட நகைகளை அணிந்திருக் கிறாள். தாதிகள் அவள் அமர்ந்துள்ள ஊஞ்சலை ஆட்டிக் கொண்டிருக்கிறார்கள். கடைத் தெருவின் மையத்தில் விதான மண்டபம் ஒன்று இருக்கிறது. பொன்மயமாய் அலங்கரிக்கப் பட்டுள்ள அந்த மண்டபத்தில் அழகிய சமுக்காளங்கள் விரிக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு வியாழக் கிழமையும் மாலைத் தொழுகை முடிந்தபின், தலைமைப் பாடகன் தன்னுடைய பணியாட்களும் அடிமைகளும் புடைசூழ அங்குச் சென்று அமர்ந்து கொள்கிறான். அப்போது இசை பாடும் மாதரெல்லாம் அங்கே சென்று பொழுது சாயும் வரையிலும் அவன் முன்னிலையில் ஆடலும் பாடலும் நிகழ்த்துகின்றனர். பொழுது விழுந்ததும் அவன் எழுந்து போய் விடுகிறான்.

அந்தக் கடைத் தெரு இன்ப நிலையம் என்று பொருள்படும் தர்ப் ஆபாத் என்று சொல்லப்படுகிறது.

அதே கடைத் தெருவில் பள்ளிவாசல்களும் இருக்கின்றன. அதிலுள்ள குருமார்கள் ரம்ஜான் மாதத்தில் தராவிஹ் என்னும் பிரார்த்தனையை மீண்டும் மீண்டும் ஓதுகிறார்கள். இந்து அரசர் களுள் ஒருவன் அந்தக் கடைத் தெருவைத் தாண்டிச் செல்ல வேண்டிய தேவை நேர்ந்தபோதெல்லாம் விதான மண்டபத்தில்

தங்கிப் பெண்களுடைய பாடலைக் கேட்டு மகிழ்வது வழக்கம். முகமதிய சுல்தான் ஒருவனும் அவ்வாறே செய்வது வழக்கமாய் இருந்தது.

**நசர்பார்**

தௌலதாபாதிலிருந்து நாங்கள் நசர்பார் என்ற சிறு நகருக்குப் போனோம். நகரில் வாழ்ந்த மராத்தியர் பல் தொழில் திறமை மிக்கவர்கள். அவர்களுடைய மருத்துவர், சோதிடர், பிரபுக்கள் ஆகியவர்களைப் பிராமணர் என்றும் சத்திரியர் என்றும் சொல்கிறார்கள். அவர்கள் நெல்லஞ் சோறு, காய்கறி, நல்லெண்ணெய் ஆகிய வற்றை உண்கிறார்கள். விலங்குகளைக் கொல்வதையும் அவற்றுக்குத் துன்பம் தருவதையும் அவர்கள் விரும்புவதில்லை. நம்மைப் போலவே அவர்களும் உண்ணுமுன் தீட்டுப் போவதற்காக முகம் கால் கைகளைக் கழுவிக் கொள்கிறார்கள். தாய் தந்தையர் வழியில் நெருங்கிய உறவினர்களை அவர்கள் திருமணம் செய்து கொள்வதில்லை. அத்தகைய உறவு முறையில் குறைந்த பட்சம் ஏழு படி தாண்டிய பின்னரே அவர்கள் திருமண உறவை ஏற்படுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் மதுவும் அருந்துவதில்லை. மதுபானம் மிகப் பெரிய பாவம் என்பது அவர்கள் கருத்து. இந்தியா முழுவதிலுமே அந்தக் கருத்து நிலவுகிறது. முஸ்லிம் மக்களும் அவ்வாறே கருதுகிறார்கள். அந்தக் குற்றஞ் செய்தவர்களுக்கு எண்பது சாட்டையடி கொடுத்து அவர்களைச் சிறையில் தள்ளி விடுகிறார்கள். சாப்பாட்டு நேரத்திலன்றி மற்ற நேரங்களில் சிறைக்கதவு திறக்கப்படுவதில்லை. குற்றவாளிகள் மூன்று மாதம் இத்தகைய சிறைவாசம் செய்ய வேண்டும்.

**சாகர்**

நசர்பாரிலிருந்து நாங்கள் சாகர் என்னும் பெரிய நகரத்திற்குச் சென்றோம். அந்த நகரம் அதே பெயருடைய பெரிய நதி[2] ஒன்றன் கரையில் அமைந்துள்ளது. அந்த நதியின் கரைகளில் நீர்ச் சக்கரங்கள்[3] இருக்கின்றன. ஆற்றின் இரு கரைகளிலும் உள்ள தோட்டங்களில் மாவும் வாழையும் கரும்பும் விளைகின்றன. அந்த நகரத்து மக்கள் அமைதியை விரும்புபவர்கள், கடவுள் நம்பிக்கை உடையவர்கள், நேர்மையாக நடப்பவர்கள். அவர்களுடைய செயல்கள் அனைத்துமே பாராட்டுக்குரியவை. வழிப் போக்கர் தங்குவதற்காக ஆங்காங்குத் தோட்டங்களும் அவற்றில் சத்திரங்களும் இருக்கின்றன. வசதியும் மனமும் உடைய மனிதன் ஒரு சத்திரத்தைக் கட்டி, அதற்காக ஒரு தோட்டத்தை

[2] தபதி நதி—கிப்.

[3] நீர் இறைப்பதற்குரிய கருவி.

மானியமாய்க் கொடுத்து, அதனுடைய மேற்பார்வைப் பணியைத் தன் மக்களிடம் ஒப்படைக்கிறான். அந்தப் பணியை ஆற்று வதற்குரிய பரம்பரையாட்கள் இல்லாதபோது அதனை நீதித் துறை ஏற்றுக் கொள்கிறது. சாகரின் மக்கள்தொகை மிகவும் பெரியது. அந்த நகர மக்களோடு கலந்து வாழ்வதற்காக வெளி யூர்க்காரர் அங்குச் செல்கின்றனர். அன்றியும், அந்த நகரத்தில் வரியும் தீர்வையும் விதிக்கப்படுவது இல்லை. அந்த வசதியை எண்ணியும் பலர் அங்குச் செல்கின்றனர்.

சாகரிலிருந்து நாங்கள் கின்பாயாவுக்குச் (காம்பேயிக்கு) சென்றோம். அது ஆற்றைப் போன்ற கடற்கழி யொன்றன் கரையில் அமைந்துள்ளது. அந்தக் கழியில் கப்பல்கள் செல்லக் கூடும். ஆனால், அங்கு வேலையிறக்கமும் வேலை யேற்றமும் நிகழ்கின்றன. வேலையிறக்கத்தின் போது மணலில் நின்றுகொண்டிருந்த கலங்கள் வேலையேற்றத்தின்போது நீரில் மிதப்பதை நான் கவனித்தேன். கின்பாயாவில் அழகிய பள்ளிவாசல்களும் நன்கு கட்டப்பட்ட வீடுகளும் இருக்கின்றன. அதனால், அது மிக அழகிய நகரங்களுள் ஒன்றாக விளங்குகிறது. அதற்குக் காரணம் அங்கு வசிக்கின்ற மக்களுள் பெரும்பாலார் வெளிநாட்டு வணிகராய் இருப்பதுதான். அவர்கள் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக் கொண்டு அழகிய வீடுகளையும் எழில் மிக்க கோயில் களையும் கட்டிக்கொண்டே இருக்கிறார்கள்.

**காம்பே**

அந்த நகரத்திலுள்ள பெரிய மாளிகைகளுள் ஷரீபுல் சாமரி என்பவருடைய மாளிகையும் ஒன்றாகும். அவருடைய வீட்டில் தான் நான் மாட்டிக் கொண்ட மாப்பண்டப் பண்ணிய நிகழ்ச்சி நடைபெற்றது.[4] அந்த மாளிகையில் இருப் பதைப் போன்ற திண்ணிய மரவேலைப்பாட்டை நான் வேறெந்த மாளிகையிலும் கண்டதில்லை. அந்த மாளிகையின் கதவு நகரவாயில் ஒன்றனைப் போல இருந்தது. மாளிகையின் அருகில் சாமரி என்னும் பெயர் கொண்ட மசூதியும் இருந்தது. அடுத்தபடி, மாலிக் உல் துஜார்[5] என்னும் பிரபுவின் மாளிகையைச் சொல்லலாம். அதற்குப் பக்கத் திலும் ஒரு பள்ளிவாசல் இருக்கிறது. இன்னொரு சிறந்த மாளிகை ஷம்சுதீன் குலாஹ்தூஜ் என்பவருடையதாகும். (குலாஹ் தூஜ் என்னும் தொடர் பாரசீக மொழியில் குல்லாய் செய்பவர்

**மாளிகைகள்**

4 Vol. iii, p. 425.

5 மாலிக் உல் துஜார் என்பது வணிக அரசன் என்று பொருள்படும். பிரபுக்களுக்கு முஸ்லிம் அரசர்கள் இந்தப் பட்டத்தை வழங்கினார்கள்.

என்று பொருள்படும்.) காஜி ஜலால் என்னும் ஆப்கானியன், முன்னர்ச் சொன்னவாறு, கலகஞ் செய்தபோது, ஷம்சுதீன் குலாஹ்தூஜ், கப்பல் தலைவன் எலியாஸ் (இவன் கின்பாயாவில் முக்கியமான ஒரு பெரும்புள்ளி), மருத்துவர் தலைவன் ஆகிய மூவருஞ் சேர்ந்து ஜலாலை எதிர்த்துநின்று கின்பாயாவைக் காக்க விரும்பினர். அந்த நகரத்திற்குச் சுற்றுச் சுவர் இல்லை. அதனால், அதைச் சுற்றிலும் ஓர் அகழியை வெட்டுவதற்கு அவர்கள் முயன்றார்கள். ஆனால், ஜலால் அவர்களை முறியடித்து விட்டு நகருக்குள் புகுந்தான். மேலே சொன்ன மூவரும் ஒரு வீட்டிற்குள் ஒளிந்து கொண்டார்கள். அப்படியிருந்தும், ஜலால் தாங்கள் மறைந்திருந்த இடத்தைக் கண்டுபிடித்துவிடுவான் என்று அவர்கள் அஞ்சினார்கள். எனவே அவர்கள் இறந்து விடுவதென்று முடிவு செய்தார்கள். அவர்களுள் ஒவ்வொருவரும் மற்றொருவரைக் கட்டாராவால்[6] குத்திவிடுவது என்று தீர்மானித்து அவ்வாறே செய்தனர். ஆனால் இருவரே மாண்டனர்; மருத்துவர் தலைவன் இறக்கவில்லை.

கின்பாயா நகரத்தில் இருந்த இன்னுமொரு முக்கியமான வணிகர் நஜ்முதீன் என்பவர் ஆவார். அவர் தோற்றப் பொலிவும் பெருஞ் செல்வமும் உடையவர். அவரும் ஒரு பெரிய மாளிகையையும் பள்ளிவாசலையும் கட்டினார். சிறிது காலத்திற்குப்பின் சுல்தான் அவரைத் தம்முடைய அவைக்கு அழைத்து அவருக்குக் கின்பாயாவின் ஆளுநர் பதவியையும் பல விருதுகளையும் அளித்தார். ஆனால், அவர் தம்முடைய செல்வங்களை மட்டு மன்றி உயிரையும் இழப்பதற்கும் அதுவே காரணமாயிற்று.

**வணிகர்**

நாங்கள் கின்பாயாவுக்குப் போய்ச் சேர்ந்த சமயத்தில் சுல்தானுடைய பற்றுக்கும் மதிப்புக்கும் உரிய டிலிங்கி முக்பில்[7] அந்த நகரத்தின் தலைமைக் காவலனாய் இருந்தான். இஸ்பஹானி லிருந்து வந்து கின்பாயாவில் குடியேறியிருந்த ஷெயிக் ஜாதா என்பவன் முக்பிலுக்கு நிர்வாகத் துணைவனாய் இருந்தான். அவன் பெருஞ்செல்வம் உடையவனாகவும் அரசாங்க—நிர்வாக அலுவல்களில் சிறந்த திறமை உடையவனாகவும் இருந்தான்.

ஆனால், அவன் அடிக்கடி தன்னுடைய நாட்டிற்குப் பணம் அனுப்பிக் கொண்டும் அங்குத் தப்பியோடுவதற்குத் திட்டம்

[6] கட்டாரா என்பது ஒருவகை உடைவாள்.

[7] See E. D. III, pp. 367 f.

இட்டுக்கொண்டும் இருந்தான். அதனையறிந்த சுல்தான் அவனைத் தன்னிடம் அனுப்புமாறு முக்பிலுக்குச் செய்தி அனுப்பினான். முக்பிலும் உடனே அவனை சுல்தானிடம் அனுப்பினான். சுல்தான் அவனைக் காவலில் வைத்துவிட்டான். அவ்வாறு காவலில் வைக்கப்பட்டவர்கள் தப்பியோடுவது என்பது அரிதினும் அரிது. ஆனால், ஷெய்க் தந்திரசாலி. தன்னுடைய காவலனுக்குப் பணங் கொடுப்பதாக வாக்களித்து அவனையும் அழைத்துக் கொண்டு ஓடிவிட்டான். ஒரு பள்ளி வாசலின் மூலையொன்றில் அவனைக் கண்டதாகவும், சிறிது காலத்திற்குப்பின் அவன் தன்னுடைய நாட்டுக்குத் திரும்பிப் போய் அங்குத் தனக்குச் சொந்தமாயிருந்த செல்வங்கள் அனைத்தையும் திரட்டிக் கொண்டு சிறப்புடன் வாழ்ந்ததாகவும் நம்பிக்கைக்குரிய நபர் ஒருவர் எனக்குச் சொன்னார்.

மாலிக் முக்புல் தம்முடைய மாளிகையில் எங்களுக்கொரு விருந்தளித்தார். அப்போது ஒரு விசித்திரமான நிகழ்ச்சி நடைபெற்றது. விருந்துக்கு வந்திருந்த அந்த நகரத்துக் காஜிக்கு வலக்கண் குருடாய் இருந்தது. அவருக்கு எதிரில் பாக்தாது ஷரீப் அமர்ந்திருந்தார். தோற்றத்தில் அவர் காஜியைப் போல இருந்தது மட்டுமன்றி, அவருக்கும் ஒரு கண் குருடாய் இருந்தது. ஆனால், ஒரே ஒரு வேறுபாடு—அவருடைய இடக்கண் குருடாய் இருந்தது. காஜியைப் பார்த்த ஷெரீப் சிரித்தார். காஜி அவரைக் கண்டித்தார். 'என் தோற்றம் உம் தோற்றத்தைக் காட்டிலும் நன்றாய் இருக்கிறது. எனவே, என்னைக் கண்டிப்பது தவறு' என்று ஷெரீப் சொன்னார். 'அது எப்படி?' என்று காஜி கேட்டார். 'எனக்கு இடக்கண்தான் குருடாய் இருக்கிறது. உமக்கோ வலக்கண் குருடாய் இருக்கிறது.' என்று ஷெரீப் விடை அளித்தார். ஆளுநரும் அவருடைய துணைவர்களும் சிரித்து விட்டார்கள். காஜியின் முகம் தொங்கிவிட்டது. அவர் என்ன பதில் சொல்ல முடியும்? இந்தியாவில் ஷெரீப்களுக்கு நல்ல மதிப்பு இருக்கிறது.

அந்த நகரத்தின் (காம்பே நகரத்தின்) சான்றோர்களுள் நாசிர் என்னும் புனிதப் பயணியை முதலிற் கூறலாம். பக்கரி லிருந்து வந்த அந்தப் பெரியார் நகரின் முக்கிய பள்ளிவாசலைச் சேர்ந்த விதான மண்டபம் ஒன்றில் தங்கியிருந்தார். அவரை நாங்கள் கண்டுபேசி அவரோடு விருந்தும் உண்டோம். சுல்தானுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்துகொண்டிருந்த காஜி ஜலால் கின்பாயா நகருக்கு வந்தபோது, நாசிர் அவனைக் கண்டு பேசினார். அந்தக் கலகக்காரனுக்காக அவர் பிரார்த்தனை செய்தார் என்று சுல்தானுக்கு யாரோ சொல்லிவிட்டனர்.

அதனைக் கேள்விப்பட்டு, அல்ஹைதாரியைக் கொன்றது போலவே சுல்தான் தம்மையும் கொன்றுவிடக்கூடும் என்று அஞ்சிய நாசிர் ஊரைவிட்டு ஓடிவிட்டார். க்வாஜா ஈஷாக் என்பவர் அந்த நகரத்தில் வாழ்ந்த இன்னொரு நல்ல மனிதர் ஆவார். அவர் ஒரு சத்திரத்தைக் கட்டி அங்கு வருகிற அனைவருக்கும் உணவளிக்கிறார். பக்கிரிகளுக்கும் வறியவர்களுக்கும் உதவி செய்வதற்காக அவர் பெரும்பொருள் செலவிடுகிறார். அப்படியிருந்தும் அவருடைய செல்வம் குறைவதில்லை; பெருகிக் கொண்டே போகிறது.

கின்பாயாவிலிருந்து நாங்கள் காவி[8] என்னும் நகருக்குப் போனோம். அது ஒரு விரிகுடாவின் கரையில் அமைந்துள்ளது.

அந்த விரிகுடாவில் வேலையேற்றமும் வேலையிறக்கமும் நிகழ்கின்றன. அந்நகரம் முஸ்லிம் அல்லாதவனும் ஜலன்சி என்னும் பெயருடையவனும் ஆகிய அரசனுக்குச் சொந்தமான ராஜ்யத்தில் இருக்கிறது. அந்த அரசனைப் பற்றிய செய்திகளை விரைவில் சொல்லவிருக்கிறேன். காவியிலிருந்து நாங்கள் காந்தார்[9] என்னும் பெரிய நகரத்திற்குப் போனோம். அதுவொரு வளைகுடாவின் கரையில் அமைந்துள்ளது. அதுவும் முஸ்லிம் அல்லாதார் ஆட்சியில்தான் இருக்கிறது.

கவா

காந்தார் மேலே சொன்ன ஜலன்சி என்னும் அரசனுடைய ஆட்சியில் இருக்கிறது. ஆனால், அவன் முஸ்லிம்களின் மேலாதிக்கத்தில் இருப்பவன். அதனால் அவன் இந்திய அரசனுக்கு ஆண்டுதோறும் பரிசு தருகிறான். நாங்கள் காந்தாருக்குப் போய்ச் சேர்ந்ததும், அவன் மாளிகையிலிருந்து வெளியே வந்து, எங்களை வரவேற்று, எங்களிடம் மிகவும் அன்பாய் நடந்துகொண்டான். தன்னுடைய மாளிகையையே காலி செய்து அதில் நாங்கள் தங்குவதற்கு வசதி செய்து கொடுத்தான். அரசவையிலிருந்த முக்கியமான முசல்மான்கள் எங்களைக் காண வந்தார்கள். அவர்களுள் க்வாஜா புஹ்ராவின் மக்களும் இருந்தார்கள். அவர்களுள் ஒருவன் ஆறு கப்பல்களை வைத்திருந்த இப்ராஹிம் மாலுமியின் புரவலனாய் இருந்தான். காந்தாரில் நாங்கள் கப்பலேறி எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம்.

[8] காவா காம்போயிக்கு எதிரில் விரிகுடாவின் எதிர்க்கரையில் உள்ள ஒரு சிறிய இடம்-கிப்;—Yule, *Cathay*, iv, pp. 63.

[9] கந்தர் அல்லது கண்டர்; காவாவுக்குச் சிறிது தெற்கில்.

நாங்கள் ஏறிய கப்பலின் பெயர் ஜாக்கிர் என்பதாகும். அது இப்ராஹிமுக்குச் சொந்தமானது. இந்திய அரசன் சீன அரசனுக்குப் பரிசாக அனுப்பிய குதிரைகளுள் ஏழுபதனை நாங்கள் எங்கள் கப்பலிலேயே ஏற்றிக் கொண்டோம். மீதியிருந்த குதிரைகளை எங்கள் தோழர்களுடைய குதிரைகளோடு சேர்த்து இப்ராஹிமின் உடன்பிறந்தான் ஒருவனுடைய கப்பலில் ஏற்றினோம். அந்தக் கப்பலின் பெயர் மனுவர்த் என்பதாகும். ஜலன்சியும் எங்களுக்கு ஒரு கப்பலைக் கொடுத்தான். அதில், ஜாஹீருதீன், சன்பல் ஆகியவர் களுக்கும் அவர்களுடைய தோழர்களுக்கும் சொந்தமான குதிரைகளை ஏற்றிக் கொண்டோம். எங்களுக்கு ஜலன்சி கொடுத்த உணவுப் பொருள்கள், குடிநீர், குதிரைத்தீனி முதலியவற்றையும் அந்தக் கப்பலிலேயே ஏற்றிக் கொண்டோம். மேலும், ஜலன்சி தன்னுடைய மகனையும் அகைரி என்னும் பெயருடைய ஒரு கப்பலில் ஏற்றி எங்களுடன் அனுப்பினான். அந்தக் கப்பல் பண்டை ரோமானியருடைய போர்க்கப்பல் போன்றது; ஆனால், அதைவிடப் பெரியது. அதில் அறுபது துடுப்புகள் இருக்கின்றன. சண்டை நடக்கும்போது அதன்மீது ஒரு கூரையைப் பொருத்திவிடுகிறார்கள். அதனால் பகை வர்களுடைய அம்பும் கல்லும் துடுப்பு வலிப்பவர்கள்மீது விழுவதில்லை. அதில் ஐம்பது வில் வீரர்களும் அதே தொகை யினரான அபிசீனிய வீரர்களும் இருக்கிறார்கள். இந்த மாக்கடலில் அவர்களுடைய போர்த்திறமையைக் கண்டு அஞ்சாதவர் இல்லை. ஒரு கப்பலில் ஒரேயொரு அபிசீனியப் போர் வீரன் இருந்தாலும் போதும், அதனைக் கடற் கொள்ளைக் காரரும் இந்து உருவ வழிபாட்டினரும் தாக்கமாட்டார்கள்.

இரண்டு நாள் பயணத்திற்குப்பின் நாங்கள் பைராம் (பெரிம்)[10] தீவை அடைந்தோம். தலைநிலத்திலிருந்து நான்கு மைல் தொலைவிலுள்ள அந்தத் தீவில் மனிதர் யாரும் இப்போது வாழ்வதில்லை. நாங்கள் அந்தத் தீவில் இறங்கி அதிலுள்ள நீர்த்தேக்கம் ஒன்றிலிருந்து எங்களுக்கு வேண்டிய நீரை எடுத்துக் கொண்டோம். அந்தத் தீவை முஸ்லிம்கள் தாக்கியபோது அங்கு வாழ்ந்த இந்துக்கள் ஓடிவிட்டார்கள். அதில் மீண்டும் மக்களைக் குடியேற்ற வேண்டும் என்னும் நோக்கத்துடன், நாம் முன்னர்க் குறிப்பிட்ட மாலிக் உல்துஜார் என்பவன் அங்கே ஒரு கோட்டையைக் கட்டி, கவண்பொறிகளை அமைத்து, சில முசல்மான்களையும் அங்குக் குடியேற்றியுள்ளான்.

பெரிம்

[10] Yule *Cathay*, iv, p. 64.

பைராம் தீவிலிருந்து புறப்பட்ட மறுநாள் நாங்கள் பெரிய கடைத்தெருக்களை உடைய கூக்கா[11] என்னும் பெரிய நகரத்தை அடைந்தோம். நாங்கள் சென்ற சமயத்தில் வேலையிறக்கம் நிகழ்ந்துகொண்டிருந்ததால் கரையிலிருந்து நான்கு மைல் தொலைவில் நாங்கள் நங்கூரம் பாய்ச்சி நின்றோம். நானும் என்னுடைய தோழர் சிலரும் ஒரு படகில் ஏறிக் கரைக்குச் சென்றோம். படகு மணலிற் புதைந்துவிட்டதால் நாங்கள் நகரிலிருந்து ஒரு மைல் தொலைவி லேயே படகிலிருந்து இறங்க வேண்டியதாயிற்று. படகிலிருந்து இறங்கியதும் நான் என் தோழர்களின் தோளைப் பற்றிக் கொண்டேன். எனக்கு நன்றாய் நீந்தத் தெரியாது. கரை சேர்வதற்குள் வேலையேற்றம் நிகழ்ந்து, கடல் நீர் என்னைச் சூழ்ந்துகொள்ளும் என்று என்னுடைய தோழர்கள் அச்சுறுத்தினார்கள். ஆனால், அபாயம் எதுவுமின்றி நாங்கள் கரையை அடைந்துவிட்டோம். நகரத்தையும் கடைத்தெருவை யும் சுற்றிப் பார்த்தபோது கிஜர் என்பவனும் எலியாஸ் என்பவனும் கட்டியதென்று சொல்லப்பட்ட பள்ளிவாசல் ஒன்றைக் கண்டோம். அங்கே சென்று என்னுடைய மாலைத் தொழுகையைச் செய்தேன். அப்போது ஹைதாரிப் பக்கிரிகள் சிலரையும் அவர்களுடைய தலைவரையும் அங்கே கண்டேன். பின்னர் நான் என்னுடைய கப்பலுக்குத் திரும்பினேன்.

**கூக்கா**

கூக்காவின் அரசன் முஸ்லிம் அல்லாதவன். அவனுடைய பெயர் துன்கூல் என்பதாகும். அவன் டில்லி சுல்தானுடைய மேலாண்மையை ஏற்றுக் கொண்டதாகச் சொல்லிக் கொண்டான். என்றாலும், உண்மையில் அவன் சுல்தானுக்கு எதிரியாகவே இருந்தான். கூக்காவி லிருந்து புறப்பட்டு மூன்று நாள் பயணம் செய்த பின் நாங்கள் சந்தாபூர்[12] என்னும் தீவை அடைந்தோம். அந்தத் தீவில் 36 கிராமங்கள் இருக்கின்றன. அது ஒரு வளைகுடாவில் இருக்கிறது. வேலையிறக்கத்தின்போது அந்த வளைகுடாநீர் குடிப்பதற்கு ஏற்றதாயிருக்கிறது. ஆனால் வேலையேற்றத்தின் போது அது உப்புக் கரிக்கிறது. தீவின் உள் பகுதியில் இரு நகர்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று முஸ்லிமல்லாதார் கட்டிய பழைய நகர், மற்றது முஸ்லிம்கள் அதனை முதலில் வென்றபோது கட்டப்பட்ட புதுநகர். புது நகரில் பாக்தாது

**சந்தாபூர்**

[11] காம்பே வளைகுடாவுக்கு மேற்குப பக்கத்தில் இன்னும் ஓரளவு செழிப்புடனிருக்கிற துறைமுகமான கோகோ—Yule. *ibid.*

[12] கோவா—கிம். cf. Yuie, *ibid*, pp. 64-6.

நகரிலுள்ள பள்ளிவாசல்களோடு ஒப்பிடத்தக்க பெரியதொரு பள்ளிவாசல் இருக்கிறது. அதனைக் கட்டியவன் ஹாசன் என்னும் படைத் தலைவன். அவன் ஹாஞவுரில் ஆட்சி செய்த சுல்தான் ஜமாலுதீனுடைய தகப்பன். சுல்தான் ஜமாலுதீன் முகமதைப் பற்றியும், அவனுடன் நான் தங்கியிருந்ததைப் பற்றியும், அப்போது இரண்டாம் முறையாக அந்தத் தீவு வெல்லப்பட்டதைப் பற்றியும் நான் பின்னர் எடுத்துச் சொல்வேன். நாங்கள் அந்தத் தீவைத் தாண்டித் தலைநிலத்திற்கு அருகிலிருந்த சிறு தீவு ஒன்றன் கரைக்குப் பக்கத்தில் நங்கூரம் பாய்ச்சினோம். அந்தச் சிறு தீவில் ஒரு கோயிலும், குளமும், பழத் தோட்டமும் இருந்தன.

**யோகி ஒருவரைக் காணல்**

அந்தத் தீவில் நாங்கள் இறங்கியபோது ஒரு புத்கானாவின் (உருவ வழிபாட்டுக் கோயிலின்) சுவர்மீது சாய்ந்து நின்று கொண்டிருந்த ஜோகி ஒருவரைக் கண்டோம். அவர் இரண்டு தெய்வச் சிலைகளுக்கு இடையில் நின்றுகொண்டிருந்தார். அவரைப் பார்த்ததுமே அவர் தம்முடைய உடலை மிகவும் வருத்துபவர் என்பது தெரிந்தது. நாங்கள் அவருடன் பேசினோம்; ஆனால், அவர் பேசவில்லை. அவர் பக்கத்தில் யாதேனும் உணவுப் பொருள் இருக்கிறதா என்று பார்த்தோம். அங்கே ஒன்றுமே இல்லை. இதற்கிடையில் அவர் உரத்த கூச்சல் ஒன்று போட்டார். உடனே ஒரு தேங்காய் அவர் முன் விழுந்தது. அதையெடுத்து எங்களிடம் கொடுத்தார். அதைக் கண்டு வியப்படைந்த நாங்கள் அவருக்குப் பொன் வெள்ளி நாணயங்கள் சிலவற்றைக் கொடுத்தோம். ஆனால் அவர் அவற்றை ஏற்றுக்கொள்ளவில்லை. பின்னர் நாங்கள் உணவுப் பொருள் சிலவற்றை அவருக்குக் கொடுத்தோம். அவற்றையும் அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. ஒட்டக மயிர்ப் போர்வை ஒன்று அவர்முன் கிடந்தது. அதனை நான் கையில் தொட்டபோது அதனை அவர் என்னிடம் தந்தார். என்னுடைய கையில் சோழியாற் செய்த தொழுகை மாலை ஒன்றிருந்தது. அதனை அவர் தொட்டுப் பார்த்தார். உடனே நான் அதை அவருக்குக் கொடுத்துவிட்டேன். அவர் அதை வாங்கித் தம்முடைய விரல்களால் துடைத்து, மோந்து பார்த்து, அதற்கு முத்தமிட்டார். அதே சமயத்தில் அவர் வானத்தைக் சுட்டிக் காட்டினார். அந்தச் சைகைகளுக்கு என்ன பொருள் என்பது என் தோழர்களுக்குத் தெரியவில்லை. ஆனால், எனக்கு நன்றாக விளங்கிவிட்டது. தாம் ஒரு முஸ்லிம் என்றும் அந்தத் தீவில் வாழ்ந்த மக்களுக்கு அந்த உண்மை தெரியக்கூடாதென்று தாம் அதனை மறைத்து வைத்திருப்பதாகவும் தம்முடைய சைகைகளின்

வாயிலாய் அவர் எனக்குத் தெரிவித்தார். அவர் தேங்காயைத் தின்றும் இளநீரைக் குடித்துமே உயிர் வாழ்ந்தார். அவரிடமிருந்து விடைபெற்றபோது நான் அவருடைய கையை முத்தமிட்டேன். ஆனால் என் தோழர்கள் நான் செய்ததை விரும்பவில்லை. அவரும் அதனை உணர்ந்தார். பின்னர், அவர் என் கையைப் பிடித்து, புன்முறுவல் பூத்துக்கொண்டே, அதனை முத்தமிட்டு, நாங்கள் எங்கள் வழியே போகலாம் என்று சைகை காட்டினார். நாங்கள் புறப்பட்டுவிட்டோம். நான்தான் கடைசியில் புறப்பட்டவன். அப்போது ஜோகி என்னுடைய ஆடையைப் பிடித்து இழுத்து, என்னை நிறுத்தி, என் கையில் பத்துப் பொன் நாணயங்களை வைத்தார். நாங்கள் சிறு தொலைவு நடந்ததும் 'உன்னை ஏன் இழுத்து நிறுத்தினார்?' என்று என் தோழர்கள் கேட்டார்கள். 'இந்தப் பொன் நாணயங்களைத் தருவதற்காக' என்று நான் விடையிறுத்தேன். நாணயங்களுள் மூன்றை ஐஹீருதீனுக்கும் மூன்றை சன்பலுக்கும் கொடுத்து, 'இந்த ஜோகி ஒரு முசல்மான். எல்லாம் வல்ல இறைவன் மேலே இருக்கிறான் என்பதை ஒப்புக்கொள்ளும் வகையில் அவர் மேலே கைகாட்டவில்லையா? அதுபோலவே நபிகள் நாயகத்தின் சமயத் தொண்டை ஏற்றுக்கொள்ளும் வகையில் மெக்காவின் பக்கம் கை காட்டவில்லையா? மேலும், நான் சொல்வதை மெய்ப்பிக்கும் வகையில் அவர் நான் கொடுத்த தொழுகை மாலையை ஏற்றுக் கொண்டார்' என்று நான் சொன்னேன். உடனே அவர்கள் ஜோகி நின்ற திசையில் திரும்பிப் பார்த்தார்கள். அதற்குள் அவர் மறைந்து விட்டார்.

மறுநாள் நாங்கள் ஹூனுவுரை (ஹொனவரை) அடைந்தோம். அந்த நகரம் பெரிய கப்பல்கள் போய்வரக்கூடிய பெரிய வளைகுடா ஒன்றன் கரையில் அமைந்திருக்கிறது. அது கடலிலிருந்து ஒன்றரை மைல் தொலைவில் இருக்கிறது.

ஹூனுவுர்

மழைக் காலத்தில் கடலின் கொந்தளிப்பு மிகவும் அதிகமாய் இருப்பதால் தொடர்ச்சியாக நான்கு மாதக் காலத்திற்கு மீன் பிடிக்கும் படகுகள் அன்றி வேறு கலங்கள் அங்கே போக முடியாது.

ஹூனுவுருக்கு நாங்கள் போய்ச் சேர்ந்த அன்று இந்து ஜோகி ஒருவர் என்னை ரகசியமாய்ச் சந்தித்து, ஆறு பொன் நாணயங்களை எனக்குக் கொடுத்து, 'அந்தப் பார்ப்பனன் இந்தப் பணத்தை உன்னிடம் கொடுக்கச் சொன்னான்' என்று சொன்னார். (என்னுடைய தொழுகை மாலையைப் பெற்றுக் கொண்டு எனக்கு 10 தினார் கொடுத்த ஜோகியைத்தான் 'அந்தப் பார்ப்பனன்' என்று இந்த ஜோகி சொன்னார்.) நான்

ஆறு தினாரையும் பெற்றுக் கொண்டு, அவற்றுள் ஒன்றை அந்த ஜோகிக்குக் கொடுத்தேன். ஆனால், அதை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. நடந்ததையெல்லாம் நான் என் தோழர்களுக்குத் தெரிவித்து 'வேண்டுமானால் நீங்கள் உங்களுக்குரிய பங்கை எடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னேன். அவர்கள் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், அவர்கள் நடந்த செய்தி கேட்டுப் பெருவியப்படைந்தார்கள். 'நீ எங்களுக்குக் கொடுத்த ஆறு தினாரோடு ஆறு தினார் சேர்த்து மொத்தத் தொகையை அந்த ஜோகி நின்றுகொண்டிருந்த இடத்திலிருந்த இரண்டு சிலைகளுக்கிடையில் வைத்துவிட்டு வந்தோம்' என்று அவர்கள் சொன்னார்கள். அந்த ஜோகியைப் பற்றிய செய்திகளை நினைத்துப் பார்த்து நான் மிகவும் வியப்புற்றேன். அவர் கொடுத்த பணத்தை நான் வைத்துக் கொண்டேன்.

ஹனாவுர் மக்கள் ஷாபிக் கோட்பாட்டைப் பின்பற்றுகிறார்கள். அவர்கள் பக்தி உடையவர்களாகவும் சமயக் கோட்பாடுகளைத் தவறாமல் பின்பற்றுபவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்கள் முஸ்லிம் அல்லாதவர்களுடன் அடிக்கடி கடற்சண்டை செய்து புகழ்பெற்றவர்கள். ஆனால், அவர்கள் சந்தாபூரை வென்றபின் அவர்களுடைய நல்ல காலம் முடிந்து வீழ்ச்சியடைந்தார்கள். அதைப் பற்றிப் பிறகு சொல்வோம்.

நான் ஹனாவுரில் கண்ட பெரியவர்களுள் ஷெயிக் முகமது உல் நாகூரி என்பவரும் ஒருவர். அவர் என்னைத் தம்முடைய சத்திரத்திற்கு அழைத்து விருந்தளித்தார். அவர் தமக்கு வேண்டிய உணவைத் தம் கையாலேயே சமைத்துக் கொள்கிறார். அடிமைகள்—அவர்கள் ஆடவராயினும் சரி, மகளிராயினும் சரி—சமைத்த உணவு தூய்மையற்றது என்பது அவர் கருத்து. சட்ட வல்லுநர் இஸ்மாயிலையும் சந்தித்தேன். திருக்குரானைக் கற்பிப்பது அவருடைய முக்கியமான வேலை. அடிக்கடி பட்டினி கிடப்பது அவருடைய வழக்கம். பார்ப்பதற்குச் செருக்கு மிக்கவர்போலத் தோன்றினாலும் அவர் தாராள மனமுடையவர். நகரத்தின் காஜியையும் நான் கண்டுபேசினேன். அவருடைய பெயர் நூருதின் அலி என்பதாகும். சமயப் பிரசாரகர் ஒருவரையும் நான் பார்த்தேன். ஆனால் அவருடைய பெயரை நான் மறந்துவிட்டேன்.

ஹனாவுர்ப் பெண்களும்—கடற்கரை நகரங்களில் வாழ்ந்த பிற பெண்களைப் போலவே—தைக்காத ஆடைகளையே அணிந்து கொள்கிறார்கள். துணியின் ஒரு பாதியை

மகளிர் அவர்கள் இடையில் கட்டிக்கொண்டு மறு

பாதியால் மார்பையும் தலையையும் மூடிக்கொள்கிறார்கள். அவர்கள் அழகாகவும் கற்பு உடையவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்கள் மூக்கில் ஒரு தங்க வளையத்தை மாட்டிக்கொள்கிறார்கள். அவர்கள் அனைவருமே திருக்குரானை மனப்பாடம் செய்து வைத்திருக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

**பள்ளிக் கூடங்கள்**

ஹனாவுரில் ஆண்களுக்காக இருபத்து மூன்று பள்ளிக் கூடங்களும் பெண்களுக்காகப் பதின்மூன்று பள்ளிக்கூடங்களும் இருக்கின்றன. இத்தகைய கல்வி வசதியை நான் வேறெங்கும் கண்டதில்லை.

**சுல்தான்**

ஹனாவுரில் வாழும் மக்களுடைய ஒரே தொழில் கடல் வாணிகமாகும். அங்கே விளைநிலம் எதுவுமில்லை. மலபாரில் வாழ்கின்ற மக்கள் ஆண்டுதோறும் ஹனாவுர் சுல்தானான ஜமாலுதீனுக்குக் குறிப்பிட்ட ஒரு தொகையைச் செலுத்துகிறார்கள். ஜமாலுதீன் சுல்தானுடைய கடற்படையின் வலிமையைக் கண்டு அவர்கள் அஞ்சுவதே அதற்குக் காரணம். அவனுடைய படையில் காலாட்களும் குதிரை வீரர்களும் சேர்ந்து ஆறாயிரம் பேர் இருக்கின்றனர். ஹாசனுடைய மகனான இந்த சுல்தான் ஜமாலுதீன் முகமது மிகவும் சிறந்த, வலிமைமிக்க, அரசர்களுள் ஒருவனாய் இருக்கிறான். அவன் முஸ்லிமல்லாதவனும் ஹரியப்[13] என்னும் பெயருடையவனும் ஆன அரசன் ஒருவனுடைய மேலாண்மையில் ஆட்சி செய்கிறான். ஹரியபைப் பற்றிப் பின்னர்ப் பேசுவோம். பிற முசல்மான்களுடன் சேர்ந்து தொழுவதை ஜமாலுதீன் மிகவும் விரும்புகிறான். அவன் பொழுது புலர்வதற்கு முன்னரே பள்ளிவாசலுக்குச் சென்று பொழுது புலரும் வரையிலும் திருக்குரானை ஓதுகிறான். அதற்குப் பிறகு காலைத் தொழுகையை நடத்திவிட்டுக் குதிரை மீதேறி நகருக்கு வெளியில் உலாவப் போகிறான். சுமார் ஒன்பது மணிக்கு அவன் பள்ளிவாசலுக்குத் திரும்பி வந்து, மீண்டும் தொழுது விட்டுத் தன் மாளிகைக்குச் செல்கிறான். முழு நிலா நாளன்று அவன் பட்டினி இருக்கிறான். நான் அவனுடன் தங்கியிருந்த காலத்தில் ஒருமுறை அவன் உண்ணா நோன்பை முடிப்பதற்கான சடங்குகளில் கலந்துகொண்டேன். என்னோடு சட்ட வல்லுநர்கள் அலியும் இஸ்மாயிலும் இருந்தார்கள். பணியாட்கள் தரையின் மீது போட்ட நான்கு இருக்கைகளுள் ஒன்றில் சுல்தான் அமர்ந்து

13 விஜயநகர அரசன் ஹரிஹரன். ஆனால் இபன் பதூதா மீண்டும் அந்த அரசனைப்பற்றி எழுதவில்லை.

கொண்டான். மற்றைய மூன்றில் நாங்கள் மூவரும் அமர்ந்து கொண்டோம்.

சுல்தான் உண்ணும் முறையை இப்போது சொல்லப் போகிறேன். தாமிரத்திற் செய்த மேசை ஒன்றைத் தரையின் மீது வைத்து, அதன்மீது அதே உலோகத்திற் செய்த தாலம் என்னும் தட்டை வைக்கிறார்கள். (மேசையைப் பாரசீக மொழியில் க்வான்சா என்று சொல்கின்றனர்). அதற்குப் பிறகு பட்டாடை அணிந்துள்ள அழகிய அடிமைப்பெண் ஒருத்தி அங்கு வந்து, உணவுப் பண்டங்களைக்கொண்ட கைப்பிடியுடைய பாத்திரங்களை அரசன் முன்னிலையில் வைக்குமாறு பணிக்கிறாள். பின்னர், அவள் ஒரு பெரிய தாமிரக் கரண்டியால் ஒரு கரண்டி (அரிசிச்) சோற்றை எடுத்துத் தாலத்தில் வைத்து, அதன்மீது நெய்யை ஊற்றி, ஊறவைத்த மிளகுக் கொத்துகளையும், பச்சை இஞ்சித் துண்டங்களையும், எலுமிச்சை மாங்காய் ஊறுகாயையும் வைக்கிறாள். விருந்தினர் ஒருவாய் சோறு ஒருவாய் ஊறுகாய் என்று மாற்றி மாற்றி உண்கின்றனர். தட்டில் வைத்த சோறு தீர்ந்துபோனால், அடிமைப்பெண் இன்னொரு கரண்டி சோற்றை எடுத்து அதில் வைக்கிறாள். அதற்குப் பிறகு, வறுத்த கோழிக் கறியை ஒரு கிண்ணத்தில் வைக்கிறாள். விருந்தினர் கறியோடு சேர்த்து இன்னுஞ் சிறிது சோற்றை உண்கின்றனர். அதற்குப் பிறகு இன்னொரு வகைப் பறவைக் கறியை அந்த அடிமைப் பெண் இன்னொரு கிண்ணத்தில் வட்டிக்கிறாள். அதையும் சோற்றோடு சேர்த்துச் சாப்பிடவேண்டும். இவ்வாறு பலவகைப் பறவைக் கறியை உண்டபின் பலவகைப்பட்ட மீன்கறியும் சோறும் வட்டிக்கப்படுகின்றன. அவற்றையும் உண்டபின் நெய்யில் சமைத்த காய்கறிகளும் பாலுணவும் வட்டிக்கப்படு கின்றன. இத்தனைக்கும் பிறகு மோர் கொண்டுவரப்படுகிறது. அத்துடன் உணவு முடிந்துவிடுகிறது. மோர் வந்துவிட்டால், அதற்குப் பிறகு சாப்பிடுவதற்கு வேறு உணவுப் பண்டம் இல்லை என்று தெரிந்துகொள்ள வேண்டும். இறுதியாக அவர்கள் வெந்நீர் குடிக்கிறார்கள். மழைக்காலத்தில் தண்ணீர் குடிப்பது உடம்புக்கு ஆகாது.

இன்னொரு முறை நான் ஹனௌவூருக்குப் போயிருந்தபோது பதினொரு மாதம் அங்கே தங்கியிருந்தேன். அப்போது நான் ஒரு முறைகூட ரொட்டி சாப்பிடவில்லை. இவ்வூர் மக்கள் அரிசியன்றி வேறு தானியத்தை உண்பதில்லை. அதுபோலவே, நான் மாலத் தீவிலும், சீலானிலும் (சிலான்), மா'பாரிலும், மலபாரிலும் மூன்றாண்டுக்காலம் இருந்தேன். அப்போதும் நான் அரிசிச்

சோற்றையே உண்டேன். மற்றவரைப்போல அதனை என்னால் உண்ண முடியாததால், சோற்றை வாயிற் போட்டு, அதன்மீது சிறிது நீரையும் ஊற்றிய பின்னரே அதனை விழுங்க முடிந்தது.

**சுல்தான் ஆடை**

சுல்தான் மென்மையான பட்டும் லினனும் (நார்மடியும்) உடுத்துகிறான். அவன் இடுப்பில் ஒரு துணியைக் கட்டிக்கொண்ட பின் ஒன்றன்மேல் ஒன்றாக இரு துணிகளை அணிந்துகொள்கிறான். தலைமுடியைப் பின்னால் போட்டு அதைச் சுற்றித் தலைப்பாகை கட்டிக் கொள்கிறான். குதிரையேற்றத்தின்போது அவன் தளர் மெய்யங்கி ஒன்றை அணிந்து, அதன்மீது இரு துணிகளை அணிந்து கொள்கிறான். அவன் வெளியே போகும் போது அவனுக்கு முன்னால் குடமுழாவை அடித்துக்கொண்டும் எக்காளத்தை ஊதிக்கொண்டும் செல்கின்றனர்.

**மலபார்**

இந்த முறை நாங்கள் அவனுடைய அவையில் மூன்று நாள் இருந்தோம். அதற்குப் பிறகு அவன் எங்கள் பயணத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களைக் கொடுத்து எங்களுக்கு விடை கொடுத்தான். அங்கிருந்து மூன்று நாள் பயணத்திற்குப்பின் நாங்கள் மிளகு நாடாகிய மலபாரை அடைந்தோம். அது கடற்கரையில் சந்தாபூரி லிருந்து (கோவா) கூலம் (கொல்லம்) வரையிலும் இரண்டு மாதப் பயணத்திற்கு நீண்டுகிடக்கிறது. வழி முழுவதுமே நிழல் தரு மரங்கள் இருக்கின்றன. ஒவ்வோர் அரை மைலுக்கும் மேடைகளோடு கூடிய மரத்தாற் கட்டப்பட்ட இளைப்பாறும் இடங்கள் இருக்கின்றன. அவற்றில் முஸ்லிம் அல்லாத வழிப் போக்கரும் முஸ்லிம் வழிப்போக்கரும் அமர்ந்து களைப்பாறலாம். அவற்றின் அருகில் கிணறுகள் வெட்டப்பட்டுள்ளன. ஒவ்வொரு கிணறும் ஒவ்வொரு முஸ்லிம் அல்லாத மனிதனுடைய பொறுப்பில் இருக்கிறது. வழிப்போக்கருக்குக் குடிநீர் கொடுப்பது அவன் பணி. முஸ்லிம் அல்லாதவர்களுக்கு அவன் ஒரு பாத்திரத்தில் நீர் தருகிறான். அந்தப் பாத்திரத்தை முஸ்லிம்கள் கையில் கொடுப்பதில்லை. அவர்கள் குடித்து முடியும் வரையிலும் அவர்களுடைய கையில் நீரை ஊற்றிக்கொண்டே இருக்கிறான். மலபாரிலுள்ள உருவ வழிபாட்டினர் முசல்மான் களைத் தம்முடைய வீட்டுக்குள் விடுவதில்லை. தம்முடைய உண்கலங்களில் உண்பதற்கு முஸ்லிம்களை அனுமதிப்பதில்லை. முஸ்லிம் ஒருவன் அவர்களுடைய உண்கலத்தில் உண்டுவிட்டால் அதனை உடைத்துப் போட்டுவிடுகிறார்கள், அல்லது அதனை அவனுக்கே கொடுத்துவிடுகிறார்கள். முஸ்லிம் ஒருவன் தன்னுடைய மதத்தைச் சேர்ந்தவர் யாரும் இல்லாத இடத்

திற்குப் போக நேர்ந்தால், முஸ்லிம் அல்லாதவர்கள் அவனுக்கு வேண்டிய உணவைச் சமைத்து, அதனை வாழை இலையில் இட்டு, அவனை உண்ணச் சொல்கிறார்கள். அவன் உண்டு மிஞ்சிய உணவை நாய்களும் பறவைகளும் தின்கின்றன. மலபார் வழியாகச் செல்லும் சாலையில் உள்ள ஊர்கள் அனைத்திலும் முஸ்லிம் வீடுகள் இருக்கின்றன. மூஸ்லிம் வழிப்போக்கர்கள் தங்களுக்கு வேண்டிய பொருள்களை எல்லாம் அங்கு வாங்கிக் கொள்ளலாம். அந்த வசதி இல்லாமற் போனால் எந்த முசல்மானும் அந்த நாட்டில் பயணஞ்செய்ய முடியாது.

இந்தச் சாலை இரண்டு மாதப் பயணத்திற்கு நீண்டு செல்கிறது என்று முன்பே சொல்லியிருக்கிறேன். அங்குப் பயிர் செய்யப்படாத ஒரு கையகல நிலத்தையும் காண முடியாது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒவ்வொரு தோட்டம் இருக்கிறது. தோட்டத்தைச் சுற்றிலும் மரவேலி ஒன்றும் மையத்தில் வீடும் இருக்கின்றன. சாலையே இந்தத் தோட்டங்களின் வழியாகத்தான் செல்கிறது. சாலை ஒரு தோட்டத்தின் வேலியை அடைந்ததும் அந்த இடத்தில் அமைக்கப்பட்டிருக்கும் மரப்படிகளில் ஏறி அடுத்த தோட்டத்துக்குள் இறங்குகிறது, சாலை முழுதுமே இவ்வாறுதான் அமைந்திருக்கிறது.

**தோட்டங்கள்**

இந்த நாட்டில் யாருமே எந்த விலங்கின்மீதும் ஏறிக்கொண்டு பயணஞ் செய்வதில்லை. சுல்தானைத் தவிர வேறு யாரிடத்திலும் குதிரை கிடையாது. சிவிகையே முதன்மையான ஊர்தியாய் இருக்கிறது. அதனைத் தூக்கிச் செல்வதற்கு அடிமைகளையேனும் கூலிக்கு வேலை செய்பவர்களையேனும் பயன்படுத்துகின்றனர். சிவிகையில் ஏறாதவர்கள் யாராயிருந்தாலும்—பிரபுக்களாயிருந்தாலும் சாதாரண மக்களாயிருந்தாலும்—நடந்துதான் செல்ல வேண்டும். வாணிகப் பொருள்களையோ வேறு பொருள்களையோ இடம்பெயர்க்க விரும்புபவர்கள் கூலியாட்களை அமர்த்திக்கொள்கிறார்கள். அந்தக் கூலியாட்கள் அவற்றைத் தங்கள் முதுகில் தூக்கிக்கொண்டு போகிறார்கள். ஒரு வணிகன் பின்னால் நூறு பேர் மூட்டை தூக்கிக்கொண்டு போவதையும் நாம் காணலாம். மூட்டை தூக்குபவன் ஒவ்வொருவனும் ஒரு கெட்டியான தடியைக் கையில் வைத்திருக்கிறான். அந்தத் தடியின் கீழ் நுனியில் கூர்மையான இரும்புத்துண்டு ஒன்றும் மேல் நுனியில் இரும்புக் கொக்கி ஒன்றும் பொருத்தப்பட்டுள்ளன. மூட்டை தூக்குபவன் களைத்துப் போனால், தன்னுடைய சுமையை யாதேனும் ஓரிடத்தில் வைத்து

**சிவிகை**

**வணிகர்**

விட்டு இளைப்பாற விரும்புவான். மூட்டையை வைப்பதற்கு ஏற்ற இடம் எதுவும் இல்லையென்றால், தன்னுடைய கைத்தடியின் கூர்முனையைக் கீழே ஊன்றி, மேல்முனையிலுள்ள கொக்கியில் மூட்டையை மாட்டித் தொங்கவிட்டுக்கொண்டு, சற்று நேரம் நின்று இளைப்பாறிய பிறகு, யாருடைய துணையும் இல்லாமல் தானே தன்னுடைய மூட்டையை மீண்டும் தலைமேல் வைத்துக் கொண்டு தன் பயணத்தைத் தொடர்வான்.

இந்தச் சாலையைக் காட்டிலும் கள்ளர் பயமற்ற சாலையை நான் கண்டதில்லை. ஒருவன் ஒரே ஒரு தேங்காயைத் திருடிவிட்டாலும், அவனை இங்கு வாழும் இந்துக்கள் கொன்று

நீதி விடுகிறார்கள். மரத்திலிருந்து கீழே விழுகின்ற பழத்தை மரத்திற்குடையவன் வரும் வரையிலும் யாரும் தொடுவதில்லை. திருட்டைத் தடுப்பதில் இந்த நாட்டு மக்கள் எவ்வளவு கடுமையாய் இருக்கிறார்கள் என்பதற்கு நான் கேள்விப்பட்ட செய்தி ஒன்றைச் சான்றாய்க் கூறலாம். ஒரு சமயம் இந்துக்கள் பலர் இந்தச் சாலையில் பயணஞ் செய்து கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவன் ஒரு தேங்காயை உடையவனுக்குத் தெரியாமல் எடுத்துக்கொண்டான். அதைக் கேள்விப் பட்ட ஆளுநன் அவனுக்களித்த தண்டனை பயங்கரமானது. ஆளுநனுடைய ஆட்கள் மரமுளை ஒன்றைத் தரையில் நட்டு, அதன்மீது ஒரு பலகையைப் பொருத்தி, அந்தப் பலகைக்குமேல் அந்த முளை ஓரளவு நீட்டிக் கொண்டிருக்குமாறு செய்து, பலகையின்மீது அவனை நீட்டிப் படுக்கவைத்தார்கள். அந்த மர முளை அவனுடைய வயிற்றில் ஏறி முதுகுப் பக்கம் பொத்துக் கொண்டு வந்தது. அந்த நிலையிலேயே அவனைப் பலரும் பார்க்கு மாறு விட்டுவிட்டார்கள். இத்தகைய கழுமரங்கள் பலவற்றை அந்தச் சாலையில் கண்டேன்.

நாங்கள் இந்தச் சாலையில் இரவு நேரத்திற் பயணஞ் செய்து கொண்டிருந்தபோது இந்துக்களைச் சந்திக்க நேரிட்ட சமயங் களில் எல்லாம் அவர்கள் சாலையோரத்தில் ஒதுங்கிநின்று எங்களுக்கு வழிவிட்டார்கள். இந்த நாட்டு மக்கள் நான் முன்னரே சொன்னவாறு, முசல்மான்களைத் தங்கள் வீட்டுக்குள் விடுவதுமில்லை, அவர்களோடு சேர்ந்து உண்பதுமில்லை என்பதைத் தவிர. அவர்கள் முசல்மான்களை மிகவும் உயர்வாக மதிக்கிறார்கள்.

மலபாரில் முஸ்லிமல்லாத சுல்தான்கள் பன்னிருவர் இருக் கின்றனர். அவர்களுள் வலிமை மிக்கவர்கள் 50,000 வீரர்களைக் கொண்ட படையை வைத்திருக்கிறார்கள்; வலிமை குறைந்த

வர்கள் 3,000 வீரர்களை வைத்திருக்கிறார்கள். ஆனால், அவர்களுள் பகைமை இல்லை. வலி மிகுந்தவர் வலி குறைந்த வர்களுடைய உடைமைகளைக் கவர்வதில்லை. ஒவ்வொரு ராஜ்யத்தின் எல்லையிலும் மரக்கதவு களைக் கொண்ட வாயில் ஒவ்வொன்று இருக்கிறது. அதன்மீது அந்த ராஜ்யத்தின் அரசனுடைய பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. அதனைப் 'பாதுகாப்பு வாயில்' என்று சொல்கின்றனர். ஒரு ராஜ்யத்தைச் சேர்ந்த மனிதன் யாதேனும் குற்றஞ் செய்துவிட்டு அந்த ராஜ்யத்திலிருந்து தப்பியோடி, இன்னொரு ராஜ்யத்தின் பாதுகாப்பு வாயிலை அடைந்து விட்டால், குற்றத்திற்குரிய தண்டனையிலிருந்து அவன் தப்பிவிடுகிறான். அவன் விட்டு வந்த ராஜ்யத்தின் அரசன் எவ்வளவு வலிமை உடையவனாய் இருந்தாலும் அவனுடைய படை எவ்வளவு பெரியதாய் இருந் தாலும் அவன் இந்த விதியை மீறமாட்டான். இந்தச் சலுகை முஸ்லிமானவர் முஸ்லிமல்லாதவர் முதலிய அனைவருக்கும் உண்டு.

அரசர்

இந்த நாட்டில் அரசுரிமை அரசனுடைய மக்களுக்குச் சேராமல் அவனுடைய சகோதரியின் மக்களுக்கே சேர்கிறது. லிஷாம் அணியும் மெசூபா என்னும் வகுப்பினரைத் தவிர வேற்று நாட்டு மக்களுள் யாரும் இந்த விதியைப் பின்பற்றுவது இல்லை. லிஷாம் என்பது முகத்தின் கீழ்ப்பகுதியை மறைக்கின்ற முகமூடி. அவர்களைப் பற்றிப் பின்னர் எழுதுவேன்.[18a]. மலபார் அரசர்கள் தங்களுடைய 'ஆட்சிக்குட்பட்ட பகுதியில் தாற் காலிகமான வாணிகத்தடை விதிக்க விரும்பினால், தங்களுடைய ஆட்களைக் கடைத் தெருவுக்கு அனுப்பி, இலைகளுடன் கூடிய மரக்கிளை ஒன்றைக் கடையின் முகப்பில் கட்டித் தொங்க விடுமாறு செய்வார்கள். அரசனுடைய ஆட்களே மீண்டும் சென்று அந்தக் கிளைகளைத் தூக்கி எறியும் வரையிலும் கடைக்காரர்கள் விற்றல் வாங்கல் ஆகிய பணிகளில் ஈடுபடமாட்டார்கள்.

மிளகுச் செடி திராட்சைக் கொடியினைப் போல இருக்கிறது. அதனைத் தென்னை மரத்தின் அருகில் வளர்ப்பதால், அது திராட்சைக் கொடியைப் போலவே மரத்தைச் சுற்றிப் படர்ந்து மேலேறுகின்றது. ஆனால் திராட்சைக் கொடிக்கும் மிளகுக் கொடிக்கும் ஒரு வேறுபாடு இருக்கிறது. மிளகுக் கொடியில் தளிர்க்கை கிடையாது. மிளகுப்பூ ருவின் பூவைப் போன்றது. அது ஓரளவு ப்ராம்பில் என்ற முட்செடியின் இலையைப் போலவும் இருக்கிறது.

மிளகு

[18a] S. and D. index, S. V. Messoufa.

மிளகு கொத்துக் கொத்தாய்க் காய்க்கிறது. பச்சையாய் இருக்கும்போது பார்ப்பதற்கு அபு க்வின்னியைப் போலத் தோன்றுகிறது; இலையுதிர் காலத்தில் மிளகு அறுவடை செய்யப் படுகிறது. அறுத்த மிளகைப் பாயின்மீது போட்டு வெயிலில் காயவைக்கிறார்கள்; திராட்சையை உலர்த்த விரும்பினால் நாம் அப்படித்தானே செய்கிறோம்? காயப்போட்ட மிளகு நன்றாய் உலர்ந்து கறுப்பு நிறம் பெற்றபின் அதனை விற்பனை செய்கிறார்கள். காய்ந்த மிளகின்மீது சுருக்கங்கள் இருப்பதற்கு அதனை வறுப்பதே காரணம் என்று நம் நாட்டினர் சொல்கின்றனர், அது தவறு; வெயிலில் காய்வதாலேயே மிளகின் மேற்பகுதி சுருக்கங்களைப் பெறுகிறது. அதை நான் கோழிக்கோட்டில் பார்த்தேன். நாம் தினைவகைத் தானியங்களை புஷலில் அளப்பது போலவே, கோழிக்கோட்டில் மிளகையும் அளந்து கணக்கிடுகிறார்கள்.

மலபாரில் நாங்கள் கண்ட முதல் நகர் அபுசரூர் (பரசலூர்) என்பதாகும். அது ஒரு சிறுநகர். அது பெரிய விரிகுடா ஒன்றன் கரையில் அமைந்துள்ளது. அங்கே தென்னை ஏராளமாய் வளர்கிறது. அந்த நகரிலுள்ள முசல்மான்களுள் முதன்மையானவர் ஷெயிக் ஜுமா என்பவர். அவரை அபுசித்தா (அறுவரின் தந்தை) என்று மக்கள் சொல்கிறார்கள். தாராளமான உள்ளம் படைத்த ஷெயிக் ஜுமா தம்முடைய செல்வத்தை எல்லாம் பக்கிரிகளுக்கும் வறியவர்களுக்கும் வழங்கி விட்டார். அந்த நகரத்தை விட்டுப் புறப்பட்ட இரண்டாம் நாள் நாங்கள் பகனூர்[14] என்னும் நகரை அடைந்தோம். அந்தப் பெரிய நகரம் ஒரு விரிகுடாவின் கரையில் இருக்கிறது. அங்கே கரும்பு ஏராளமாய் விளைகிறது. இந்த நாட்டின் வேறெந்தப் பகுதியிலும் அவ்வளவு உயர்தரக் கரும்பு விளைவதில்லை. அங்கே முகமதியர் சிலர் வாழ்கின்றனர். ஹுசேன் உல்சலாத் என்பவர் அவர்களுடைய தலைவராய் இருக்கிறார். அவர் வெள்ளிக்கிழமைத் தொழுகைக்காக ஒரு பள்ளிவாசலைக் கட்டியுள்ளார். அங்கே ஒரு காஜியும் சமயப் பிரசாரகரும் இருக்கின்றனர்.

பகனூர்

பகனூரின் சுல்தான் முஸ்லிமல்லாதவன். அவனுடைய பெயர் பாசதவ் (வாசுதேவன்) என்பதாகும். அவனிடம் முப்பது கப்பல்களைக் கொண்ட கடற்படை ஒன்றிருக்கிறது. அந்தப் படையின் தலைவன் லூலா என்னும் முசல்மான். அவன் தீய குணம் நிறைந்த கடற் கொள்ளைக்காரன். வணிகரைத் தாக்கிக்

[14] Yule, Cathay, iv, p. 73.

கொள்ளையடிப்பதில் அவன் ஆர்வமிக்கவன். பகனூரில் நாங்கள் நங்கூரம் பாய்ச்சியதும், சுல்தான் தன்னுடைய மகனைப் பிணையாளாக எங்கள் கப்பலுக்கு அனுப்பி, அவனை எங்களோடு தங்குமாறு பணித்தான். நாங்கள் அவனைக் காணச் சென்றபோது எங்களை அவன் அன்புடன் வரவேற்று, இந்தியப் பேரரசனுக்கு மரியாதை தெரிவிக்கும் முறையிலும் எங்களுடைய ஆட்களோடு வாணிகம் செய்யவேண்டுமென்ற விருப்பத்தாலும் எங்களை மூன்று நாள் வைத்து உபசரித்தான். கரையிலிருக்கிற நகரைத் தாண்டிச் செல்கின்ற கப்பல்கள் அனைத்தும் அந்த நகரத்தின் துறைமுகத்திற்குப் போகவேண்டும் என்பதும், அதனுடைய அரனுக்குப் பரிசு தரவேண்டும் என்பதும் இந்த நாட்டு வழக்கம். அவ்வாறு செய்யத் தவறிய கலங்களை அரசனுடைய ஆட்கள் துரத்திப் பிடித்து, அவற்றைத் துறைமுகத்திற்குக் கொண்டு வந்து, ஒன்றுக்கு இரண்டு என்ற விகிதத்தில் அவற்றின்மீது வரி விதித்து, தாங்கள் விரும்புகின்ற வரையிலும் அவற்றை அங்கேயே நிறுத்தி வைத்துக்கொள்வார்கள்.

**மங்களூர்**

பகனூரை விட்டுப் புறப்பட்ட மூன்றும் நாள் நாங்கள் மஞ்சரூரை (மங்களூரை)[15] அடைந்தோம். அந்தப் பெரிய நகரம் துன்ப் என்னும் கடற்கழியின் கரையில் அமைந்துள்ளது. மலபாரிலுள்ள நீள்குடாக்களுள் அதுவே மிகவும் பெரியது. பார்ஸ், யெமன் ஆகிய நாடுகளிலிருந்து வருகின்ற வணிகர்கள் இந்தத் துறைமுகத்திற்றான் இறங்குகிறார்கள். இங்கே மிளகும் இஞ்சியும் ஏராளமாய் இருக்கின்றன.

மஞ்சரூர் சுல்தான் இந்த நாட்டின் முக்கியமான அரசர்களுள் ஒருவன். அவனுடைய பெயர் இராம்தவ் (இராமதேவன்) என்பதாகும். மஞ்சரூரின் புறநகர் ஒன்றில் சுமார் 4000 முசல்மான்கள் வசிக்கிறார்கள். அவர்களுக்கும் நகரத்தில் வாழ்கின்ற மக்களுக்கும் சச்சரவு நேரும்போதெல்லாம் சுல்தான் முன்னின்று சமாதானம் செய்துவைக்கிறான். அவன் அவ்வாறு சமாதனம் செய்துவைப்பதற்குக் காரணம் வணிகர்களுடைய துணை அவனுக்குத் தேவையாய் இருப்பதாகும். மா'பார் பத்ருதீன் என்னும் பெயருடைய காஜியை அங்கே நாங்கள் கண்டு பேசினோம். தாராள மனமுடைய அந்தப் பெரிய மனிதர் ஷாபீப் பிரிவைச் சேர்ந்தவர். அவர் அறிவியல் கற்பிக்கிறார். அவரே எங்களுடைய கப்பலுக்கு வந்து நகரத்திற்கு வறுமாறு எங்களை அழைத்தார். 'இந்த நகரின் சுல்தான் தன்னுடைய மகனை

15 Yule, *ibid*, pp. 73-74.

இங்கே அனுப்பிக் கப்பலில் தங்குமாறு பணித்தாலன்றி நாங்கள் கப்பலை விட்டு இறங்கமாட்டோம்' என்று சொன்னோம். 'பகனூர் சுல்தான் அவ்வாறு செய்ததற்குக் காரணம் அந்த நகரத்து முசல்மான்கள் வலிமை யற்றவர்கள் என்பதேயாகும். இங்கே சுல்தானே முசல்மான்களைக் கண்டு அஞ்சுகிறான்' என்று அவர் சொன்னார். ஆனால், நாங்கள் ஒப்புக்கொள்ளவில்லை. இறுதியில் சுல்தான் தன்னுடைய மகனை எங்களுடைய கப்பலுக்கு அனுப்பி அவன் அங்கேயே தங்கவேண்டுமென்று பணித்தான். அதன் பின்னர் நாங்கள் இறங்கிச் சென்றோம். சுல்தான் எங்களை மிகவும் அன்பாக நடத்தினார். அங்கே நாங்கள் மூன்று நாள் இருந்தோம்.

அதன் பிறகு நாங்கள் இரண்டு நாள் பயணஞ்செய்து ஹிலியை[16] அடைந்தோம். அது நன்றாகக் கட்டப்பட்ட ஒரு பெரிய நகரம். பெரிய கலங்கள் சென்றுவருதற்கு ஏற்ற பெரிய விரிகுடா ஒன்றின்மீது அது அமைந்திருக்கிறது. சீனக் கப்பல்கள் இங்கே வருகின்றன. அவை ஹிலி, கோழிக்கோடு, குலம் ஆகிய துறைமுகங்களில் மட்டும் உள்ளே சென்று தங்குகின்றன. ஹிலி நகரத்தை முசல்மான்கள் உருவவழிபாட்டினர் ஆகிய இரு திறத்தாருமே உயர்வாக மதிக்கிறார்கள். அதற்குக் காரணமாய் இருப்பது அங்குள்ள பெரிய பள்ளிவாசலே ஆகும். அது ஒளியும் உயர்வும் பொருந்திய நல்லதொரு மையமாக விளங்குகிறது. மாலுமிகள் பெருந்தொகைகளை அந்தப் பள்ளிவாசலுக்கு நேர்த்திக் கடனாகச் செலுத்துகிறார்கள். அதனால் அது செல்வச் சிறப்புடையதாய் இருக்கிறது. அந்தச் செல்வங்களை எல்லாம் மேற்பார்வை செய்பவர்கள் அங்குள்ள முஸ்லிம்களின் தலைவரான ஹசன் உல் வசான் என்பவரும் சமயப் பிரசாரகரான ஹுசேனும் ஆவார்கள். அந்தப் பள்ளிவாசலில் அறிவியல் பயிலும் மாணவர் பலர் இருக்கின்றனர். அவர்கள் பள்ளிவாசல் நிதியிலிருந்து உதவித் தொகை பெறுகிறார்கள். பள்ளிவாசல் சமையற் கூடத்தில் வழிபோக்கர்களுக்கும் நகரத்திலுள்ள ஏழை முசல்மான்களுக்கும் உணவு தரப்படுகிறது. அந்தப் பள்ளிவாசலில் தான் மத்ஷாவிற் பிறந்த இறைமையியல் வல்லுநரான சாயீத் என்பவரைக் கண்டேன். அவர் மிகவும் உயர்ந்த குணம் படைத்தவர். அவர் மெக்காவில் பதினான்கு ஆண்டும் மதீனாவிற் பதினான்கு ஆண்டும் வாழ்ந்ததாகவும், இந்தியா சீனா ஆகிய நாடுகளில் சுற்றுப்பயணஞ் செய்ததாகவும், மெக்காவிலிருந்த

ஹிலி

[16] 'எலி' மலை. இந்தஇடைக்காலத் துறைமுகம் நீலேச்வருக்கு அருகில் இருந்தது என்று கிப் கருதுகிறார். Cf. Yule, *ibid*, pp. 74–5.

போது அதனுடைய அமீரான அபு நெமியையும், மதீனுவிலிருந்த போது அதனுடைய அமீரான மன்சூரையும் (மன்சூர், ஜமாஜ என்பவரின் மகன்) கண்டு பேசியதாகவும் அவர் என்னிடம் சொன்னுர்.

ஹிலியிலிருந்து நாங்கள் ஜர்பட்டன்[17] என்னும் ஊருக்குப் போனேம். அந்த ஊர் ஹிலியிலிருந்து மூன்று பரசங் தொலைவில் இருக்கிறது. அங்கே நான் பாக்தாதிலிருந்து வந்திருந்த இறைமையியல் வல்லுநரான சர்சரி என்னும் பெரியவரைக் கண்டேன். பாக்தாதிலிருந்து கூபாவுக்குப்போகும் வழியில் 10 மைல் தொலைவில் சர்சரி என்னும் ஊர் இருக்கிறது. அந்த ஊரின் பெயரே அந்தப் பெரியவரின் பெயராயிருந்தது. அவருடைய சகோதரர் ஒருவர் ஜர்பட்டனில் வாழ்ந்து வந்தார். அவர் பெருஞ்செல்வம் உடைய வராய் இருந்தார். அவர் இறப்பதற்குமுன் தம்முடைய குழந்தை களைத் தம்முடைய சகோதரர் கவனித்துக் கொள்ள வேண்டும் என்று கூறிவிட்டு இறந்துபோனுர். சர்சரி அந்தக் குழந்தைகளை பாக்தாதுக்கு அழைத்துக் கொண்டுபோவதற்கு உரிய ஏற்பாடு களைச் செய்துகொண்டிருந்தபோது நான் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு வந்தேன். வெளிநாட்டிலிருந்து இங்கே வந்து குடியேறி வாணிகஞ் செய்து பொருளீட்டுபவர்கள் இறந்து போனுல், அவர்களுடைய செல்வம் எத்துணைப் பெரியதாய் இருந்தாலும், அது யாருக்குச் சேரவேண்டும் என்னும் விஷயத்தில் அரசு தலையிடுவதில்லை. இந்திய நாட்டிலன்றி சுடானிலும் இந்த வழக்கத்தைக் காண்கிறேம். இறந்து போனவர்களுடைய செல்வங்கள் முசல்மான்களின் தலைவரிடத் தில் ஒப்படைக்கப்படுகின்றன. அவற்றிற்குச் சட்டப்படி உரிமை உடையவர்கள் வந்துகேட்டால் அவர் கொடுத்துவிடுகிறுர்.

**கண்ணனூர்**

ஜர்பட்டன் சுல்தானுடைய பெயர் கோயல் என்பதாகும். மலபாரிலுள்ள வலிமை மிக்க அரசர்களுள் அவனும் ஒருவன். அவனிடம் பல கப்பல்கள் இருக்கின்றன. அவை அமான் (ஓமான்), பார்ஸ், யெமன் ஆகிய நாடுகளுக்குப் போய் வருகின்றன. தஹ்பட்டன் புத்பட்டன் ஆகிய நகர்களும் அவனுடைய ராஜ்யத்தில் சேர்ந்தவை. நாங்கள் ஜர்பட்டனிலிருந்து புறப்பட்டு தஹ்பட்டன்[17a] என்னும் நகருக்குப் போனேம். ஒரு விரிகுடாவில் அமைந்துள்ள அந்தப்

**தர்மபட்டம்**

17 கண்ணனூர் என்று யூல் கருதுகிறுர்—*Cathay*, iv, p. 76.

17a தர்மபட்டம்—யூல்.

பெரிய நகரத்தில் பழத்தோட்டங்கள் பல இருக்கின்றன. அங்கே தென்னை, மிளகு, வெற்றிலை, கமுகு முதலியவை வளர்கின்றன. மேலும், அங்குக் குவல்குவாஸ் (கோலோகாசியா) ஏராளமாய் விளைகிறது. இந்துக்கள் உணவு சமைப்பதற்கு அதனைப் பயன் படுத்துகிறார்கள். வாழையைப் பொறுத்த வரையில், வேறெங்கும் காணமுடியாத பேரளவில் அது அங்கு விளைகிறது. அன்றியும், பிற இடங்களைக் காட்டிலும் அங்கு அது மிக மலிவாகவும் இருக்கிறது. தஹ்பட்டனில் ஒரு பெரிய குளம் இருக்கிறது. அதன் நீளம் 500 அடி, அகலம் 300 அடி. அதனுடைய சுவர்முகப்புகள் சிவப்புநிறக் கல்லால் ஆனவை. அதனுடைய நான்கு பக்கத்திலும் கல்லிற் கட்டப்பட்ட 28 கவிகை மாடங்கள் இருக்கின்றன. அந்த மாடம் ஒவ்வொன்றிலும் நன்னான்கு இருக்கைகள் இருக்கின்றன. அவையும் கல்லிற் கட்டப்பட்டவையே. அந்த மாடங்களுக்குப் போவதற்குக் கற்படிகள் கட்டப்பட்டுள்ளன. குளத்தின் மையத்தில் மூன்று மாடியுடைய ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. ஒவ்வொரு மாடியிலும் நன்னான்கு இருக்கைகள் இருக்கின்றன. கோயலின் தந்தைதான் அந்தக் குளத்தை வெட்டி மண்டபங்களையும் கட்டினான் என்று நான் கேள்விப்பட்டேன். குளத்திற்கு எதிரில் பெரிய பள்ளிவாசல் ஒன்றிருக்கிறது. பள்ளி வாசலி லிருந்து குளத்திற்குள் இறங்கிக் கை கால் முகங்கழுவிக் கொள்வதற்கு ஏற்றவாறு படிகள் கட்டப்பட்டுள்ளன. அந்தப் பள்ளி வாசலையும் கோயிலையும் கட்டியவன் கோயலின் முன்னோர் களுள் ஒருவன் என்றும் அவன் முஸ்லிம் மதத்தைத் தழுவினான் என்றும் இறைமையியல் வல்லுநரான ஹுசேன் தெரிவித்தார். அவன் இஸ்லாத்தைத் தழுவிய அற்புத நிகழ்ச்சியை இப்போது சொல்லப்போகிறேன்.

பள்ளிவாசலுக்குப் பக்கத்தில் நான் ஒரு மரத்தைக் கண்டேன். அதனுடைய பசிய இலைகள் அத்தி மரத்தின் இலைகளைப் போல இருந்தன. ஆனால், அவை, மென்மையாய் இருந்தன. அந்த மரத்தைச் சுற்றிலும் கட்டப்பட்டுள்ள சுவரில் திருக்கோட்டம் ஒன்று இருக்கிறது. அந்தச் சிறு கோட்டத்தில் நான் இருமுறை மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்தேன். அந்த மரத்தை திரக்தீ ஷஹாதத் (சான்று மரம்) என்று சொல்கின் றனர். ஒவ்வோராண்டும் இலையுதிர்காலம் வரும்போது அந்த மரத்தின் பசிய இலைகளுள் ஒன்று முதலில் மஞ்சள் நிறம் பெற்றுப் பின்னர்ச் சிவப்பாக மாறிக் கீழே விழுமாம். அந்த இலையின் மீது 'கடவுளைத் தவிர வேறு கடவுளில்லை. முகமது கடவுளின் தீர்க்கதரிசி' என்று தெய்வப் பேனாவால் எழுதப் பட்டிருக்குமாம். ஹுசேன் மட்டுமன்றி நம்புதற்குரிய பெரிய

மனிதர் வேறு சிலரும் அந்த இலையையும் அதிலிருந்த வாசகத்தையும் தாமே கண்டதாக என்னிடம் தெரிவித்தனர். அந்த இலை உதிர்கின்ற காலம் வரும்போது, முஸ்லிம் முஸ்லிமல்லாதவர் ஆகிய இரு திறத்தாருள்ளும் நம்பிக்கைக்குரிய பெரிய மனிதர் பலர் மரத்துக்கடியில் அமர்ந்து காத்துக் கொண்டிருப்பர் என்றும், அது கீழே விழுந்ததும், அதனையெடுத்து இரு கூறுக்கி, ஒன்றனை முஸ்லிம்கள் வைத்துக் கொள்வார்கள் என்றும், மற்றதை முஸ்லிமல்லாத அரசனுடைய கருவூலத்தில் வைத்து விடுவார்கள் என்றும் ஹுசேன் சொன்னார். அந்த இலையை மக்கள் நோய் நீக்கத்திற்குப் பயன்படுத்தினார்கள் என்றும் நான் கேள்விப்பட்டேன்[17b].

அந்த மரந்தான் கோயலின் பாட்டன் இஸ்லாத்தைத் தழுவுவதற்குக் காரணமாயிருந்தது. அவனுக்கு அரபு மொழி தெரியும். எனவே, இலையின்மீது எழுதப்பட்டிருந்த வாசகத்தைப் படித்து, அதன் பொருளை உணர்ந்தவுடன அவன் இஸ்லாத்தைத் தழுவினான். அதன் பின்னர் அவன் அந்த மதத்தின் கோட்பாடுகளையும் தொழுகை முறைகளையும் இம்மியும் பிசகாது பின் பற்றினான். அவனுடைய கதை இந்துக்களுடைய பரம்பரை மரபுக் கதைகளுள் ஒன்றாய் இருக்கிறது. ஹுசேன் சொன்ன பிற செய்திகள் மேலும் வியப்பூட்டுபவையாய் இருக்கின்றன. அந்த அரசன் இறந்தபின் அவனுடைய மக்களுள் ஒருவன் உருவ வழிபாட்டு மதத்திற்குத் திரும்பிவிட்டான். அவன் அவ்வளவு நல்லவன் அல்லன். எனவே, அந்த அதிசய மரத்தை வெட்டி விடுமாறு உத்தரவிட்டான், ஆணை நிறைவேற்றப்பட்டது. மரம் வேரோடு பிடுங்கி எறியப்பட்டது. அது இருந்த அடையாளமே தெரியவில்லை. ஆனால், மரம் மீண்டும் உயிர் பெற்று வளர்ந்து பழைய நிலையை எய்தியது. மரத்தை வீழ்த்திய அரசன் விரைவில் மாண்டு போனான்.

தஹ்பட்டனிலிருந்து நாங்கள் புத்பட்டனுக்குப்[18] போனோம். அதுவும் ஒரு விரிகுடாவின் கரையில் அமைந்துள்ளது. அதுவும்

[17b] *Marvels of India* என்னும் நூலில் பின்வரும் பகுதியுள்ளது.

இந்தியாவைச் சுற்றிப் பார்த்த ஒருவர் பின்வருமாறு சொன்னார். மான்கிருக்கு அருகில் அயக்கியா என்னும் இடத்தில் ஒரு மரத்தைக் கண்டேன். அதன் அடிமரம் கெட்டியாயிருந்தது. பார்ப்பதற்கு அது வாதுமை மரம்போல இருந்தது. அதில் பூத்த சிவப்பு ரோஜாப் பூக்களில் (அதனுடைய இலைகளில்) 'கடவுளைத்தவிர வேறு கடவுளில்லை; முகமது அவருடைய தீர்க்கதரிசி' என்று வெள்ளைநிற எழுத்தில் எழுதப்பட்டிருந்தது. (p. 146).

[18] இந்தப் பெயர் இன்றைய தேசப்படங்களில் இல்லை. அது வடகரைக்குப் பக்கத்தில் இருந்திருக்கக்கூடும்.—Yule, *Cathay*, iv, p. 77.

ஒரு பெரிய நகரமே. புத்பட்டனில் முசல்மான்களே இல்லை. அந்த நகரில் வாழ்ந்த மக்களுள் பெரும்பாலார் பார்ப்பனர். அவர்கள் முசல்மான்களை வெறுப்பவர்கள். ஆனால், நகருக்கு வெளியில், கடலின் அருகில், ஒரு பள்ளிவாசல் இருக்கிறது. அந்த நகரத்திற்குச் செல்கின்ற வெளிநாட்டு முசல்மான்கள் அந்தப் பள்ளிவாசலில் தான் தங்கள் தொழுகையை நடத்துகிறார்கள். அந்த நகரத்தின் துறைமுகம் மிகவும் அழகியது. அங்கே கமுகு மிக நன்றாய் வளர்கிறது. அதனால் பாக்கு அங்கிருந்து இந்தியாவுக்கும்[19] சீனாவுக்கும் ஏற்றுமதியாகிறது.

**புத்பட்டன்**

பிராமணர் அந்தப் பள்ளிவாசலை அழிக்காமல் விட்டு வைத்திருப்பதற்கும் ஒரு காரணம் இருக்கிறது, ஒரு பார்ப்பனன் அந்தப் பள்ளிவாசலின் கூரையைப் பிரித்து எடுத்துக்கொண்டு போய்த் தன்னுடைய வீட்டுக்குக் கூரை போட்டுக்கொண்டானாம். ஆனால், அந்த வீடு தீப்பிடித்து எரிந்துபோயிற்று. அவனும் அவனுடைய பிள்ளைகளும் வீட்டிலிருந்த பொருள்களுடன் சேர்ந்து எரிந்துபோனார்கள். அதிலிருந்து இந்துக்கள் அந்தக் கோயிலின் மீது பக்தியுடையவர்களாய் இருக்கிறார்கள். அதற்கு ஒரு தீங்கும் செய்வதில்லை. அந்தக் கோயிலின்முன் வழிப் போக்கர் குடிப்பதற்காகக் குடிநீர் வைத்திருக்கிறார்கள். கோயிலுக்குள் பறவைகள் புகாவண்ணம் வாயிலில் பின்னல் தட்டி ஒன்று வைத்திருக்கிறார்கள்.

பிறகு நாங்கள் பண்டரைனா என்னும் நகரத்திற்குச் சென்றோம் அது ஓர் அழகிய பெரிய நகரம். அங்கே கடைத் தெருக்களும் தோட்டங்களும் இருக்கின்றன. அந்த நகரத்தின் மூன்று பகுதிகளில் முசல்மான்கள் வசிக்கிறார்கள். ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு பள்ளிவாசல் இருக்கிறது. கடற்கரையிலுள்ள முதன்மையான கோயில் மிகவும் அழகியது. அதில் கடலை நோக்கி அமைந்துள்ள நிலா மேடைகளும் கூடங்களும் இருக்கின்றன. பண்டரைனாவில் இருக்கின்ற காஜி அமானிலிருந்து வந்தவர். அவருடைய சகோதரர் ஒருவரும் அந்த நகரத்தில் வாழ்கிறார். காஜியே சமயப் பிரசாரகராகவும் பணியாற்றுகிறார். சீனாவிலிருந்து வரும் கப்பல்கள் குளிர்காலத்தை இங்கே கழிக்கின்றன.

**பண்டரைனா**

பண்டரைனாவிலிருந்து நாங்கள் மலபாரின் பெரிய துறை முகங்களுள் ஒன்றான கோழிக்கோட்டுக்குச் சென்றோம், அத்

[19] கிழக்கிந்தியத் தீவுகளும் இந்தோச் சீனாவும்.

துறைமுகம் உலகத்திலுள்ள பெரிய துறைமுகங்களுள் ஒன்றாய் இருக்கிறது. அங்குச் சீனு, ஜாவா, இலங்கை, மாலத்தீவு, யெமன், பார்ஸ் முதலிய இடங்களிலிருந்தும் உலகின் வேறு பகுதிகளிலிருந்தும் வணிகர் வருகின்றனர்.

**கோழிக்கோடு**

கோழிக்கோட்டின் சுல்தான் உருவ வழிபாட்டுச் சமயத்தைச் சேர்ந்தவன், அவனை 'சாமுரி' (ஜாமரின்) என்று சொல்கின்றனர். அவனுக்கு வயதாகி விட்டது. கிரேக்கர் சிலரைப்போல, அவன் தாடியை மழித்துக் கொள்கிறான். கடவுள் அருளால் அரசனைக் கண்டு பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அந்த நகரத்து வணிகர்களின் தலைவர் இப்ராஹிம் என்பவர். அவரே துறை முகத்தின் தலைவராகவும் இருந்தார். அவர் பஹ்ரேயினிலிருந்து வந்தவர். அவர் தாராள மனதுடைய பெரிய மனிதர். வணிகர் அவர் வீட்டில் அடிக்கடி கூடி விருந்துண்கின்றனர். நகரத்தின் காஜி பக்ருதீன் உஸ்மான் என்பவர். அவரும் தாராள மனதுடைய பெரிய மனிதர். நகரத்திலுள்ள முஸ்லிம் சத்திரத்தின் தலைவர் ஷெய்க் ஷஹாபுதீன் என்பவர். இந்தியாவிலும் சீனுவிலும் உள்ள மக்கள் தங்கள் நேர்த்திக் கடன்களை அவருக்கு அனுப்புகிறார்கள். (அவருடைய நற்குணத்தின் பயனை நாமெல்லாம் பெறுவதற்கு இறைவன் அருள்வானாக!) அந்த நகரத்தில்தான் புகழ் பெற்ற மிஸ்கால் என்னும் கப்பல் வணிகர் இருக்கிறார், அவரிடம் ஏராளமான கப்பல்கள் இருக்கின்றன. அவை அவருடைய வாணிகப் பொருள்களை ஏற்றிக்கொண்டு இந்தியா,[20] சீனு, யெமன், பார்ஸ் முதலிய நாடுகளுக்குப் போய் வருகின்றன.

நாங்கள் துறைமுகத்தை அடைந்ததும் துறைமுகத் தலைவர் இப்ராஹிம், காஜி ஷெய்க் ஷஹாபுதீன், இந்து அரசனுடைய துணை நாயிபான குலாஜ், முக்கியமான வணிகர் முதலிய பலரும் வந்து எங்களை வரவேற்றனர். துறைமுகத்தில் இருந்த கப்பல்களில் கொடிகள் அசைந்தாடின; முரசு முழங்கியது; எக்காளம் ஒலித்தது. இவ்வாறு மிகுந்த ஆடம்பரத்துடன் நாங்கள் துறைமுகத்திற்குள் புகுந்தோம். அத்தகைய ஆடம்பரமான வரவேற்பை நாங்கள் இந்த நாட்டின் வேறெந்தப் பகுதியிலும் பெறவில்லை. (ஆனால் இத்தகைய மகிழ்ச்சிக்குப் பின் எங்களுக்குத் துன்பம் நேர்ந்தது.) அப்போது சீனக்கலங்கள் பதின்மூன்று அந்த துறைமுகத்தில் இருந்தன. துறைமுகத்திலிருந்து நாங்கள் நகரத்துக்குப் போனேம். அங்கே எங்களுள் ஒவ்வொரு

[20] அடிக்குறிப்பு 19ஐப் பார்க்க.

வருக்கும் ஒவ்வொரு வீடு ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. நாங்கள் அங்கிருந்து சீனுவுக்குப் போகத் திட்டமிட்டிருந்தோம். சீனுவுக்குப் புறப்படும் நாளை எதிர்பார்த்து நாங்கள் மூன்று மாதம் கோழிக்கோட்டில் தங்கியிருந்தோம். உருவ வழிபாட்டு அரசன் எங்களுக்குத் தேவையான வசதிகள் அனைத்தையும் செய்து கொடுத்தான். சீனுவுக்குப் போக வேண்டுமானுல், சீனக் கலங்களில்தான் செல்லவேண்டும். அந்தப் பயணத்திற்குரிய ஏற்பாடுகளை இப்போது நான் விவரிக்கப் போகிறேன்.

**சீனக் கலங்களின் வகைகள்**

சீனக்கலங்கள் மூன்று வகைப்பட்டவை. 1. ஜன்க் என்னும் பெயருடைய பெரிய கப்பல்; 2. ஜவாவோ என்னும் பெயருடைய நடுத்தரக் கப்பல்; 3. ககம் என்னும் பெயருடைய சிறு கப்பல், பெரிய கப்பல்களில் பல பாய்கள் இருக்கின்றன. அவற்றின் தொகை மூன்றுக்குக் குறையாமலும் பன்னிரண்டை மிகாமலும் இருக்கிறது. பாய்கள் பிரப்பஞ் சிம்புகளால் முடையப்பட்டவை. அவற்றைக் கீழே இறக்குவது கிடையாது. காற்றடிக்குந் திசையைக் கருத்திற் கொண்டு, அவை திருப்பி விடப்படுகின்றன. கப்பல் நங்கூரம் பாய்ச்சி நிற்கும்போது பாய்கள் காற்றில் மிதந்துகொண்டிருக்கின்றன, பெரிய கப்பல் ஒவ்வொன்றிலும் 1,000 பணியாட்கள் இருக்கிறுர்கள். அவர்களுள் 600 பேர் மாலுமிகள், 400 பேர் போர்வீரர்கள். போர் வீரர்களுள் கேடயந் தாங்கிய வில் வீரர்களும் இரச கருப்பூரத் தைலம் வீசுபவர்களும் இருக்கிறுர்கள். ஒவ்வொரு பெரிய கப்பலுக்கும் பின்னுல் மும்மூன்று சிறு கப்பல்கள் செல்கின்றன. அவை நடுத்தரம், மூன்றில் ஒன்று, நான்கில் ஒன்று என்னும் அளவுள்ளவை. இந்தக் கப்பல்கள் சீனுவிலுள்ள ஜைட்டுன், சைன்கலான் (கான்டன்) என்னும் துறைமுகங்களில் மட்டும் கட்டப்படுகின்றன. கப்பல்கள் பின்வருமாறு கட்டப்படுகின்றன. முதலில் இரண்டு மரச்சுவர்களை எழுப்புகிறுர்கள். பின்னர், அவற்றுக்கு இடையிலுள்ள வெற்றிடத்தில் குறுக்கும் நெடுக்குமாக மிகக் கெட்டியான பலகைகளை வைத்து, மும்மூன்று முழ நீளம் உள்ள ஆணியை அந்தப் பலகைகளில் அடித்து, அவற்றையெல்லாம் இணைத்துவிடுகிறுர்கள். இவ்வாறு இரண்டு சுவர்களும் பலகைகளால் இணைக்கப்பட்ட பிறகு, அவற்றின்மீது கப்பலின் அடிப்பாகத்தைக் கட்டுகிறுர்கள். அதன் பிறகு மொத்தக் கட்டுமானத்தையும் நீருக்குள் தள்ளி மீதியுள்ள வேலைகளைச் செய்துமுடிக்கிறுர்கள். நீரைத் தொட்டுக்கொண்டிருக்கின்ற சுவர்களும் பலகைகளும் சேர்ந்து கப்பற் பணியாட்கள் குளித்தல் முதலிய அன்றுடக் கடன்களைச் செய்து கொள்வதற்குப் பயன்படுகின்றன. துடுப்புகள் அந்தப் பலகை

களோடு பொருத்தப்பட்டுள்ளன. அவை பாய்மரங்களைப் போல மிகப் பெரியவையாய் இருக்கின்றன. ஒவ்வொரு துடுப்பையும் பத்துப் பதினைந்து பேர் நின்றுகொண்டே வலிக்கின்றனர். ஒரு கப்பலில் நான்கு தளங்களைக் கட்டுகிறார்கள். அவற்றில் பேரறைகளும், சிற்றறைகளும், கழிப்பிடங்களும் இருக்கின்றன. அறைகளுக்குப் பூட்டுப் போடப்பட்டுள்ளன. அறைகளை எடுத்துக் கொள்ளும் வணிகர்கள் அவற்றைப் பூட்டிச் சாவியைத் தங்களிடம் வைத்துக் கொள்ளலாம். அவர்கள் தங்கள் மனைவிமார்களையும் வைப்பாட்டிகளையும் கூடவே அழைத்துக்கொண்டு போகிறார்கள். தனியறையில் வசிக்கின்றவர்கள் கப்பலில் பயணஞ்செய்யும் மற்ற மனிதர்களைப் பார்க்காமலே புறப்பட்ட இடத்திலிருந்து இறங்கும் துறைமுகம் வரையிலும் பயணஞ் செய்யக்கூடும்.

மாலுமிகளுடைய மக்களும் கப்பலின் அறைகளில் வசிக்கிறார்கள். அவர்கள் காய்கறிகளையும், இஞ்சியையும், பிற செடிகளையும் மரத்தொட்டிகளில் வளர்க்கிறார்கள். கப்பல் தலைவன் ஒரு பெரிய அமீர் போன்றவன். அவன் கப்பலை விட்டு இறங்கி ஊருக்குள் செல்லும்போது, வில்வீரர்களும் அபிசீனியர்களும் ஈட்டி வாள் முதலிய கருவிகளை ஏந்திக்கொண்டும், முரசை முழக்கிக் கொண்டும், எக்காளம் கொம்பு முதலியவற்றை ஊதிக் கொண்டும் அவனுக்கு முன்னால் அணிவகுத்துச் செல்கிறார்கள். அவன் தங்குவதற்காக ஒதுக்கப்பட்டுள்ள விடுதியை அடைந்ததும் அந்த விடுதிவாயிலின் இருபுறமும் ஈட்டிகளை நிறுத்தி வைக்கிறார்கள். அவன் அந்த விடுதியில் தங்கியிருக்கும் காலம் முழுவதிலும் அந்த ஈட்டிகள் அங்கேயே இருக்கின்றன. சீனர்களுள் பலர் பல கப்பல்களுக்குச் சொந்தக்காரர்களாய் இருக்கிறார்கள். அவர்கள் அந்தக் கப்பல்களில் பண்டங்களை ஏற்றி, அவற்றுடன் தங்கள் பிரதிநிதிகளையும் வெளிநாடுகளுக்கு அனுப்புகிறார்கள். சீனர்களைப் போன்ற பணக்காரர்களை உலகத்தில் வேறெங்கும் காண்பது அரிது.

**சீனாவுக்குச் செல்லக் கப்பலில் இடம் பிடித்தல்**

சீனாவுக்குப் போகவேண்டிய சமயம் வந்ததும் துறைமுகத்தில் இருந்த பதின்மூன்று ஜன்குகளுள் ஒன்றில் எங்களுக்கு சுல்தான் இடம் ஒதுக்கி, அதில் எங்களுக்குத் தேவையான வசதிகளையும் செய்து வைத்தான். அந்தக் கப்பலின் தலைவனான சுலைமான் உல் சப்தி என்பவன் எனக்குத் தெரிந்தவன். அவனுடைய சொந்த ஊர் ஷாம்[21] என்பது. 'நான்

[21] ஷாம் என்பது சிரியா அல்லது அதன் தலைநகரம் டமாஸ்கஸ் என்று கருதலாம்.

என்னுடைய அடிமைப் பெண்களையும் உடனழைத்துச் செல்ல வேண்டும். அவர்களில்லாமல் நான் பயணஞ்செய்வது இல்லை. எனவே கப்பலில் எனக்கென்று ஒரு தனியறை வேண்டும்' என்று தலைவனிடம் சொன்னேன். 'அறைகள் அனைத்தையும் சீன வணிகர் எடுத்துக்கொண்டனர். அவர்கள் செலவுமீள்வுப் பயணச்சீட்டு வாங்கியவர்கள். என் மருமகனுக்காக ஓர் அறை ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. ஆனால், அதில் கழிப்பிடம் இல்லை. இப்போதைக்கு அதை எடுத்துக்கொண்டால், பிறகு வேறு யாதேனும் அறைக்கு மாற்றிக் கொள்ளலாம்' என்று தலைவன் சொன்னான். நானும் அதற்கு இணங்கி, என்னுடைய பொருள்களையும் ஆண் பெண் அடிமைகளையும் கப்பலில் ஏற்றிவிடுமாறு என் துணைவர்களைக் கேட்டுக்கொண்டேன்; அவர்களும் அவ்வாறே செய்தார்கள். இது நடந்தது ஒரு வியாழக்கிழமையன்று. வெள்ளிக் கிழமைத் தொழுகையை முடித்துவிட்டுக் கப்பலில் ஏறிக்கொள்ளலாம் என்று நான் கரையில் நின்றுவிட்டேன். மாலிக் சன்பல், ஜஹீருதின் ஆகியவர்களும் பரிசுப்பொருள்களை எடுத்துக்கொண்டு மற்றவர்களுடன் கப்பலுக்குச் சென்றுவிட்டார்கள். இதற்கிடையில் என்னுடைய அடிமைகளுள் ஒருவனான ஹிலால் என்னும் அலீ வெள்ளிக் கிழமை காலையில் என்னிடம் வந்து 'நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள அறை மிகச் சிறியதாகவும் வசதியற்றதாகவும் இருக்கிறது' என்று சொன்னான். உடனே இந்தச் செய்தியை நான் கப்பல் தலைவனிடம் சொன்னேன். அவன் 'இப்போது ஒன்றும் செய்ய இயலாது. ககம் ஒன்றில் நீங்கள் பயணஞ் செய்வதாயிருந்தால் நீங்கள் விரும்புகின்ற அறைகளை எடுத்துக் கொள்ளலாம்' என்று சொன்னான். அந்த யோசனையை நான் ஏற்றுக்கொண்டு என்னுடைய தோழர்களுக்குச் சொல்லியனுப்பினேன். அவர்களும் உடனே என்னுடைய பொருள்களோடும் அடிமைகளோடும் ககத்தில் ஏறிக்கொண்டார்கள். இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் வெள்ளிக்கிழமைத் தொழுகை நேரத்திற்குமுன் நடந்து முடிந்து விட்டன. பிற்பகல் நான்கு மணிக்குப்பின் கடலில் கொந்தளிப்பு ஏற்படுவதால் அதற்கப்புறம் யாரும் கப்பலில் ஏற முடியாது. அதற்குள் மூன்று கலங்கள் தவிரத் துறைமுகத்தில் இருந்த ஏனைய கலங்கள் அனைத்தும் புறப்பட்டுப்போய் விட்டன. அந்த மூன்றனுள் ஒன்று பரிசுப் பொருள்கள் ஏற்றப் பட்டிருந்த ஜன்க். இன்னொரு ஜன்கின் உரிமையாளர்கள் குளிர் காலத்தை பண்டரைனாவில் கழிக்க முடிவுசெய்திருந்தார்கள். அதனால் அதுவும் துறைமுகத்தில் இருந்தது.

**புயல்** மூன்றாவது கலந்தான் என்னுடைய அடிமைகளும் தோழர்களும் ஏறியிருந்த ககம். நான் கரையில் இருந்தேன்; அவர்கள் ககத்தில் இருந்தார்கள். கடற் கொந்தளிப்

பின் விளைவாக நான் ககத்திற்குப் போவதோ அவர்கள் கரைக்கு வருவதோ இயலாது போயிற்று. என்னிடம் விரித்துப்படுப் பதற்கான சமுக்காளம் ஒன்று தவிர வேறு பொருள் எதுவும் இல்லை. சனிக்கிழமை காலையில் பார்த்தபோது சீனாவுக்குப் போகவேண்டிய ஜன்க், ககம் ஆகிய இரண்டுமே கடற் கொந் தளிப்பின் விளைவாகத் துறைமுகத்திலிருந்து வெகு தொலைவு தள்ளிப்போய்விட்டன. பண்டரைனாவிற்குப் போகத் திட்ட மிட்டிருந்த ஜன்க் பாறையில் மோதிச் சிதறிப் போயிற்று. அதிலிருந்தவர்களுள் சிலர் தப்பிப் பிழைத்துக் கரைசேர்ந்தனர். சிலர் மாண்டுபோயினர். அந்தக் கப்பலில் அடிமைப் பெண் ஒருத்தி இருந்தாள். அவள்மீது மிகுந்த பற்றுக் கொண்டிருந்த அவளுடைய தலைவனான வணிகன் அவளைக் காப்பாற்றிக் கரை சேர்ப்பவருக்குப் பத்துப் பொன் கொடுப்பதாக விளம்பரப் படுத்தினான். அவள் ஜன்கின் பின்புறத்தில் ஒரு பலகையைப் பற்றிக்கொண்டு உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்தாள். ஹார்மசிலிருந்து வந்திருந்த மாலுமிகளுள் ஒருவன் அவளைக் காப்பாற்றிக் கரைசேர்த்தான். ஆனால், அவன் பத்துப் பொன்னைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டான். 'இறைவன் பாலுள்ள பக்தியால்தான் நான் அவளைக் காப்பாற்றினேன். பணத்திற்கன்று' என்று சொல்லிவிட்டான். இரவு வந்ததும் பரிசுப் பொருளிருந்த ஜன்கும் பாறையில் மோதிச் சிதைந்து போயிற்று. அதிலிருந்த மக்கள் அனைவரும் இறந்துபோயினர். மறுநாள் காலையில் அவர்களுடைய உடல்கள் கிடந்த இடத்தைச் சோதித்துப் பார்த்தோம். அங்கே ஜஹீருதீனுடைய மண்டை உடைந்து போயிருந்தது. சன்பலின் செவித்தடத்தில் ஆணி ஒன்று ஏறி மறுபக்கம் வந்திருந்தது. நாங்கள் இறைவனை வணங்கிவிட்டு அவர்களுடைய உடல்களைப் புதைத்துவிட்டோம். இந்து சுல்தானும் மற்றவர்களோடு கடற்கரையில் நின்று கொண்டிருந்தான். அவன் இடுப்பில் ஒரு வெள்ளைத் துணியைக் கட்டிக்கொண்டிருந்தான். அது முழங்கால் வரையில் தொங்கிக் கொண்டிருந்தது. தலையில் ஒரு சிறு தலைப்பாகையை அணிந் திருந்தான். காலில் எவ்விதக் காலணியும் இல்லை. அடிமைப் பையன் ஒருவன் அவனுக்குக் குடை பிடித்துக்கொண்டிருந்தான். அவனுக்கு முன்னால் அவனுடைய ஆட்கள் நெருப்பு வளர்த்திருந் தார்கள். உடைந்த கலத்திலிருந்து கரைசேர்ந்த பொருள்களை யாரும் திருடாமல் தடுப்பதற்காக அவனுடைய ஆட்கள் அங்கு வந்த மக்களை அடித்துத் துரத்திக் கொண்டிருந்தார்கள். உடைந்த கலத்திலிருந்து மீட்கப்படும் பொருள்களை அரசாங்கக் கருவூலத்திற் சேர்த்து விடுவது மலபாரில் நிலவுகின்ற பொது வழக்கம். ஆனால், இந்தத் துறைமுகத்தில் மட்டும் அந்த வழக்கம் இல்லை. மீட்கப்படும் பொருள்கள் உரியவர்களுக்கே கொடுத்து

விடப்படுகின்றன. அதனால்தான் இந்த நகரத்திற்கு வெளி நாட்டு வணிகர் ஏராளமாய் வருகின்றனர்; நகரத்தின் செல்வமும் பெருகுகிறது.

ஜன்கிற்கு நேர்ந்த கதியைக் கண்டதும், ககத்திலிருந்த மாலுமிகள் அதனை வேகமாய்ச் செலுத்திக்கொண்டு போய் விட்டார்கள். அத்தோடு என்னுடைய பொருள்கள் மட்டுமன்றி என்னுடைய அடிமைகளும்—ஆடவர் மகளிர் ஆகிய இருபால் அடிமைகளும்—போய்விட்டார்கள். என்னோடு ஒரே ஓர் அடிமை மட்டும் கரையில் நின்றுகொண்டிருந்தான். அவனுக்கு நான் முன்னரே விடுதலை அளித்திருந்தேன். என்னுடைய நிலைமையைக் கண்டதும் அவனும் என்னைவிட்டு ஓடிவிட்டான். என்னிடம் ஜோகி கொடுத்த பத்துத் தங்க நாணயங்களும் நான் கீழே விரித்திருந்த சமுக்காளமுமே எஞ்சி நின்றன. அந்தக் ககம் கூலத்தின் துறைமுகத்தில் (கொல்லம்) கட்டாயமாய் நிற்கும் என்று அங்குக் கூடியிருந்த மக்கள் சொன்னார்கள். எனவே நான் கூலத்திற்குப் போவதென்று முடிவுசெய்தேன். கூலம் கோழிக்கோட்டிலிருந்து – தரை வழியாய்ப் போனாலும் ஆற்று வழியாய்ப் போனாலும்—[22] பத்து நாள் பயணத்தில் இருக்கிறது. நான் ஆற்று வழியாய்ப் போக முடிவுசெய்தேன். என்னுடைய சமுக்காளத்தைத் தூக்கிக் கொள்வதற்காக நான் ஒரு முசல்மானை உடனழைத்துக் கொண்டேன். இந்த ஆற்று வழியாய்ப் பயணஞ் செய்யும் இந்துக்கள் மாலையில் கரைக்குச் சென்று தங்கிவிட்டு மறுநாள் காலையில் மீண்டும் படகில் ஏறிக்கொள்வது வழக்கம். நாங்களும் அவ்வாறே செய்தோம். என்னோடு பயணஞ் செய்தவர்களுள் என்னுடைய பணியாளன்றி வேறு முசல்மானியர் யாரும் இல்லை. ஒவ்வொரு நாள் மாலையிலும் கரைக்குச் சென்றதும், அவன் முசல்மானியரல்லாதவர்களுடன் சேர்ந்து நன்றாய்க் குடித்துவிட்டு, என்னிடம் தாறுமாறாக நடக்கத் தொடங்கினான். அதனால் நான் மிகவும் வருத்தப்பட்டேன்.

பயணஞ் தொடங்கி ஐந்து நாளுக்குப் பின் 'நாங்கள் ஒரு மலையுச்சியில் இருந்த கஞ்சிக்கரி என்னும் இடத்தை அடைந்தோம். அங்கு யூதர் வாழ்ந்தனர். அவர்களுக்குள் ஒருவன் அவர்களுடைய தலைவனாய் இருந்தான். அவர்கள் கூலத்து சுல்தானுக்குத் தலைவரி செலுத்தினார்கள்.

இந்த ஆற்றின் கரையில் இலவங்கம், பிரேசில் ஆகியவை யன்றி வேறு மரங்கள் இல்லை. அவை இங்கே அடுப்பெரிக்கப்

[22] கோழிக்கோட்டிலிருந்து கொல்லத்திற்குப் போவதற்கு உள்நாட்டு நீர்வழி எதுவும் இல்லை என்பதை கிப் சுட்டிக்காட்டுகிறார்.

பயன்படுகின்றன. அவற்றை எரித்துத் தான்நாங்கள் இந்தப் பயணத்தின்போது உணவு சமைத்துக் கொண்டோம். பத்தாம் நாள் நாங்கள்கூலத்தை அடைந்தோம். மலபாரிலுள்ள மிக அழகிய நகரங்களுள் கூலமும் ஒன்று. அங்குள்ள கடைத் தெருக்கள் மிகவும் அழகியவை. வணிகர் அங்கே சோலியர்[23] என்று சொல்லப்படுகின்றனர். அவர்கள் மிகுந்த செல்வம் உடையவர்கள். அவர்களுள் யார் வேண்டுமானாலும் ஒரு கப்பலேயே விலைக்கு வாங்கி, அதில் தம்முடைய சொந்தச் சரக்குகளேயே ஏற்றி, வெளி நாட்டுக்கு அனுப்பக்கூடிய அளவு அவர்களிடத்தில் செல்வம் நிறைந்து கிடந்தது. கூலத்தில் முகமதிய வணிகரும் பலர் இருக்கின்றனர். அவர்களுடைய தலைவன் அலாவுதீன் அலாவ்ஜி என்னும் பெயருடையவன். அவன் ஈராக் நாட்டிலுள்ள ஆவா என்னும் ஊரைச் சேர்ந்தவன். அவன் ஒரு ராபிஜி—அதாவது, ஆலியின் கட்சியைச் சேர்ந்தவன். ஆலியின் கோட்பாடுகளை வெளிப்படையாய்ப் பின்பற்றுகின்ற நண்பர் பலர் அவனுக்கு இருக்கின்றனர். கூலத்துக் காஜி க்வாஜ்வின் என்னும் ஊரைச் சேர்ந்த பெரிய மனிதர். இந்த ஊரில் வாழ்கின்ற முசல்மானியர் அனைவர்க்கும் தலைவராய் இருப்பவர் முகமதுஷா பந்தர் என்பவர். அவரே துறைமுகத்தின் தலைவராகவும் இருக்கிறார். அவருடைய சகோதரர் தக்கியுதீன் என்பவரும் தாராள மனதுடைய பெரிய மனிதர். இந்த நகரிலுள்ள முதன்மையான பள்ளிவாசல் மிகவும் அழகியது. க்வாஜா முகஜப் என்னும் வணிகர் அதனைக் கட்டினார். மலபாரிலுள்ள நகரங்கள் அனைத்திலும் கூலமே சீனாவுக்கு மிகவும் அண்மையில் இருக்கும் நகரம். அதனால் சீன வணிகருட் பெரும்பாலார் அங்கு வருகின்றனர். அந்த நகரில் முசல்மானியர் மிகுந்த மதிப்பிற்கும் பெருமைக்கும் உரியவராய் இருக்கின்றனர்.

கூலத்தின் சுல்தான் உருவ வழிபாட்டுச் சமயத்தைச் சேர்ந்தவன். தீர்வரி (திருவடி) என்பது அவன் பெயர். அவன் முசல்மானியரை நன்கு மதித்துப் பெருமையுடன் நடத்துகிறான். திருடர்களையும் தீயவர்களையும் மிகவும் கடுமையாய்த் தண்டிக்கிறான். நான் கூலத்தில் இருந்தபோது என் கண்ணுற் கண்ட காட்சிகளுள் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். ஈரா க்கிலிருந்து வந்திருந்த வில் வீரர்களுள் ஒருவன் தன்னுடைய தோழன் ஒருவனைக் கொலை செய்துவிட்டு அலாவ்ஜியின்

[23] மேற்குத்தொடர்ச்சி மலையின் கிழக்குப்பக்கத்திலிருந்த தமிழர்கள் இலாபமிகுந்த இந்த வாணிகத்திற் பங்குகொள்வதற்கு அப்போதே தொடங்கி விட்டார்கள் என்பதை இது காட்டுகிறது.

வீட்டிற்கு ஓடிப்போய் ஒளிந்துகொண்டான். கொலைகாரனுக்குப் பெருஞ் செல்வம் இருந்தது. கொலையுண்டவனைப் புதைத்து விடுவதென்று முசல்மானியர் முடிவு செய்தனர். ஆனால், அரசனுடைய அலுவலர்கள் 'கொலையாளியை எங்களிடம் ஒப்படைக்கும் வரையிலும் கொலையுண்டவனைப் புதைக்கக் கூடாது. கொலைக் குற்றம் செய்தவனை நாங்கள் கொன்றே தீருவோம்' என்று சொல்லி, கொலையுண்டவனுடைய உடல் வைக்கப்பட்டிருந்த சவப்பெட்டியை அலாவ்ஜியின் வீட்டின் முன்னால் வைத்துவிட்டுப் போய்விட்டார்கள். பிணம் அழுகி நாற்றமெடுக்கத் தொடங்கியது. வேறு வழியில்லாத அலாவ்ஜி கொலையாளியை அரசு அலுவலர்களிடம் ஒப்படைத்துவிட்டார். ஆனால், அவனை அவ்வலுவலர்கள் கொல்லாமல் விட்டுவிட்டால், தம்முடைய செல்வம் அனைத்தையும் அவர்களுக்குக் கொடுத்து விடுவதாக அலாவ்ஜி வாக்களித்தார். ஆனாலும், அலுவலர்கள் அவனைக் கொன்றுவிட்டு, அதன் பின்னர்க் கொலை யுண்டவனைப் புதைத்தார்கள்.

**கடுமையான தண்டனைகள்**

ஒருநாள் கூலத்தின் அரசன் ஊருக்கு வெளியில் குதிரைச் சவாரி செய்துகொண்டிருந்தான். அப்போது அவனுடைய மருமகனும் அவனுடன் சவாரி செய்துகொண்டிருந்தான். வழியில் பழத்தோட்டங்கள் பல இருந்தன. ஒரு தோட்டத்தில் இருந்த மரம் ஒன்றிலிருந்து உதிர்ந்த மாம்பழம் ஒன்று சாலையில் கிடந்தது. அதனை அவன் மருமகனான அரசகுமாரன் எடுத்துக் கொண்டான். அதனை அரசன் பார்த்து விட்டான். உடனே அவன் தன்னுடைய ஆட்களை அழைத்து, அரசகுமாரனுடைய உடலை இரண்டாகக் கிழித்து, சாலையின் இரு மருங்கிலும் சிலுவை போன்ற இரண்டு மரக்கட்டைகளை நாட்டி, அந்தக் கட்டை ஒவ்வொன்றிலும் உடலின் ஒவ்வொரு பகுதியை மாட்டச் சொன்னான். அதன் பிறகு அந்த மாம்பழத்தையும் இரு துண்டாக வெட்டச் சொல்லி, அவற்றையும் வெட்டப்பட்ட உடற் பகுதிகளின் பக்கத்தில் போட்டுவிடச் சொன்னான். திருடர்கள் கடுமையான தண்டனை அடைவார்கள் என்று எச்சரிப்பதற்காக அரசன் அவ்வாறு செய்தான்.

இதைப் போன்ற ஒரு நிகழ்ச்சி கோழிக் கோட்டிலும் நடந்தது. அரசனுடைய படைத்தலைவர்களுள் ஒருவனுடைய சகோதரியின் மகன் முஸ்லிம் வணிகன் ஒருவனுக்குச் சொந்தமான வாளை அவனிடமிருந்து பறித்துக் கொண்டான். அந்த வணிகன் அவனுடைய மாமனிடம் முறையிட்டான். அவனும் அந்த முறையீட்டை விசாரிப்பதாக வாக்களித்தான். அதன்

பிறகு அவன் தன்னுடைய வீட்டு வாயிலுக்கருகில் அமர்ந்திருந்த போது தன்னுடைய சகோதரி மகன் வாளை இடையில் மாட்டிக் கொண்டு செல்வதைக் கண்டான். உடனே அவன் தன் சகோதரியின் மகனை அழைத்து 'இந்த வாள் அந்த முசல் மானுடையதா?' என்று கேட்டான். அவன் 'ஆம்' என்று சொன்னான். 'நீ அதனை விலை கொடுத்து வாங்கினாயா?' என்று மாமன் கேட்டான். 'இல்லை' என்று அந்த இளைஞன் சொன்னான். உடனே அவனுடைய மாமன் தன்னுடைய ஆட்களை அழைத்து, அந்த இளைஞனிடம் இருந்த வாளாலேயே அவன் கழுத்தை வெட்டி விடுமாறு பணித்தான்.

கூலத்தில் ஷெயிக் பக்ருதீனுடைய மேற்பார்வையில் நடந்துகொண்டிருந்த சத்திரத்தில் சில நாள் நான் தங்கி இருந்தேன். பக்ருதீன் கோழிக்கோட்டில் இருந்த சத்திரத்தின் தலைவரான ஷெயிக் ஷஹாபுதீன் அல்கா ஜருனி என்பவரின் புதல்வர். சுகத்தைப் பற்றிய செய்தி எதுவும் எனக்குக் கிடைக்கவில்லை. ஆனால், எங்களோடிருந்த சீனத்தூதர்கள் கூலத்திற்கு வந்தார்கள். கோழிக்கோட்டிலிருந்து புறப்பட்ட அவர்களுடைய ஜன்கும் கடலில் முழுகிவிட்டது. சீன வணிகர்கள் அவர்களுக்குத் தேவையான உதவி அனைத்தையும் செய்ததால் அவர்கள் கூலத்திலிருந்து சீனாவுக்குப் புறப்பட்டார்கள். பின்னர் நான் சீனாவுக்குச் சென்றபோது அவர்களை அங்கே கண்டேன்.

நான் கூலத்திலிருந்து டில்லிக்குச் சென்று, எனக்கு நேர்ந்த இடர்களை சுல்தானிடம் சொல்லலாம் என்று நினைத்தேன். ஆனால், அவன் நான் நடந்துகொண்ட முறைக்காகவும் பரிசுப் பொருளை இழந்தமைக்காகவும் என்மீது கோபங் கொள்ளக் கூடும் என்று அஞ்சினேன். அதனால், நான் ஹனெவுருக்குச் சென்று, என்னுடைய சுகத்தைப் பற்றிய செய்திதெரிகிற வரையிலும் சுல்தான் ஜமாலுதீனுடன் தங்குவது நல்லது என்று முடிவு செய்தேன். உடனே நான் கோழிக்கோட்டுக்குத் திரும்பிச் சென்று விட்டேன். அங்கே இந்திய சுல்தானுடைய கலங்கள் சிலவற்றைக் கண்டேன். அவற்றை சையத் அபுல் ஹசன் என்னும் அரபு அமீரின்[24] தலைமையில் சுல்தான் அனுப்பியிருந்தான். அவன் பர்தீதாரிகளுள் (பாரசீக மொழியில் பர்தாதார்) ஒருவன்—அதாவது, தலைமை வாயிற்காவலர்களுள் ஒருவன். ஹார்மஸ், க்வாட்டிப் ஆகிய இடங்களிலிருந்து எத்தனை

மீண்டும் கோழிக் கோட்டில்

[24] அமீர் என்றால் படைத்தலைவன் என்று பொருள்படும். M. V. B.

அரபுப் போர்வீரர்களைத் திரட்ட முடியுமோ அத்தனை பேரையும் திரட்டிக்கொண்டு வருவதற்காக சையத் அபுல் ஹசனிடம் சுல்தான் பெரும் பொருள் கொடுத்து அனுப்பி யிருந்தான். டில்லி சுல்தானுக்கு அரபு வீரர்கள் என்றால் மிகவும் பிடிக்கும். நான் அந்த அமீரைக் கண்டு பேசியபோது, அவன் குளிர்காலத்தைக் கோழிக்கோட்டில் கழித்த பின்னர் அரபு நாட்டுக்குப் போக எண்ணி யிருந்தான் என்பது தெரிந்தது. நான் டில்லிக்குத் திரும்பிப் போகலாமா என்பதை அவனிடம் கேட்டேன். அவன் அது செய்யத் தக்கது அன்று என்று சொல்லி விட்டான். எனவே, ஹானூவுருக்குப் போகும் நோக்கத்துடன் நான் அவனோடு கப்பலில் ஏறிக்கொண்டேன். இத்தகைய பயணங் களை மேற்கொள்ளும் பருவம் அப்போது முடியும் தருணத்தில் இருந்தது. நாங்கள் கோழிக்கோட்டிலிருந்து காலையில் புறப்பட்டு நண்பகல் வரையிலும் பயணஞ் செய்தோம். அதன்பின் நங்கூரம் பாய்ச்சி மறுநாள் காலை வரையிலும்தங்கினோம். வழியில் நான்கு போர்க்கப்பல்களைக் கண்டு என்ன நேருமோ என்று நாங்கள் அஞ்சினோம். ஆனால், அவை எங்களுக்குத் தீங்கு செய்யவில்லை.

நாங்கள் ஹானூவுரைஅடைந்ததும், நான் சுல்தானைக் கண்டு என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்வதற்காக அவனிடம் போனேன். நான் தங்குவதற்காக அவன் ஒரு வீட்டை ஒதுக்கி வைத்தான். ஆனால், அதில் பணியாட்கள் யாரும் இல்லை. சுல்தான் தன்னோடு அமர்ந்து பிரார்த்தனை செய்யுமாறு என்னை அழைத்தான். நான் என்னு டைய நேரத்தில் பெரும்பகுதியைப் பள்ளிவாசலில் கழித்தேன். திருக்குரானை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு முறை ஓதினேன். சில நாட்களுக்குப் பின்னர்த் திருக்குரானை நாள்தோறும் இருமுறை ஓதினேன். காலைத் தொழுகை முடிந்ததும் திருக்குரானைப் படிக்கத் தொடங்கிப் பகல் ஒரு மணிக்குள் முடித்து விடுவேன். பிறகு உடலைத் துப்புரவு செய்துகொண்டு, மீண்டும் முதலி லிருந்து குரானைப் படிக்கத் தொடங்கிப் பொழுது விழும் நேரத்தில் முடித்து விடுவேன். இவ்வாறு மூன்று மாதக் காலம் சென்றது. அந்த மூன்று மாதத்தில் நாற்பது நாளைச் சமயப் பயிற்சியில் கழித்தேன்.

**அதோன்வர்**

சந்தாபூரை (கோவாவை) தன்னுடைய அதிகாரத்தின் கீழ்க் கொண்டுவரும் நோக்கத்துடன் அதன்மீது படையெடுப்ப தற்காக ஐம்பத்திரண்டு கப்பல்களை சுல்தான் ஜமாலுதீன் தயார் செய்தான். அந்தத் தீவின் அரசன் தன் மகனோடு சச்சரவு செய்துகொண்டான். அதனால், அவனுடைய மகன், கோவாமீது படையெடுத்து

**கோவாப் போர்**

அதனைக் கைப்பற்றிக் கொள்ளுமாறு ஜமாலுதீனை அழைத்தான். ஜமாலுதீன் அவ்வாறு செய்தால், தான் இஸ்லாத்தைத் தழுவுவதாகவும் சுல்தானுடைய சகோதரியை மணந்துகொள்வதாகவும் அரசகுமாரன் வாக்களித்தான். அந்தப் புனிதப்போரில் நானும் கலந்துகொள்ள விரும்பினேன். எனவே திருவுளக் குறிப்பறிவதற்காகத் திருக்குரானை எடுத்துப் புரட்டினேன். 'மாதாகோயில், பள்ளிவாசல் முதலியவற்றில் இறைவனுடைய பெயர் அடிக்கடி பேசப்படுகிறது. இறைவனுக்கு உதவுபவர்களுக்கு இறைவன் உதவுவது உறுதி'[25] என்னும் சொற்கள் என் கண்ணிற் பட்டன. நான் மிகவும் மகிழ்ந்தேன். பிற்பகல் நான்கு மணிக்கு சுல்தான் தொழுகைக்கு வந்தபோது 'நானும் வர விரும்புகிறேன்' என்று அவனிடம் சொன்னேன். உடனே அவன் 'அப்படியானால், நீங்களே இந்தப் படையெடுப்புக்குத் தலைவராய் இருக்கலாம்' என்று சொன்னான். பிறகு திருக்குரானில் நான் படித்த வாசகத்தை அவனுக்குச்சொன்னேன் அதைக் கேட்டு அவன் மிகவும் மகிழ்ந்து போனான். கோவாப் படையெடுப்பில் தானும் கலந்துகொள்ள வேண்டும் என்று அது வரையிலும் அவன் நினைக்கவில்லை. ஆனால், நான் திருக்குரானில் கண்ட வாசகத்தைச் சொன்னதும் அவனும் கோவாவிற்குப் போகத் தீர்மானித்தான். நாங்கள் இருவரும் ஒரே கப்பலில் ஏறிக்கொண்டோம். அது நிகழ்ந்தது ஒரு சனிக்கிழமையன்று, நாங்கள் திங்கட்கிழமை மாலை சந்தாபூரை அடைந்து அதனுடைய விரிகுடாவிற் புகுந்தோம். அந்த ஊர் மக்களும் போருக்குத் தயாராய் இருந்தார்கள். கல்லெறிகவண் பொறிகளை அவர்கள் முன்னரே பொருத்தி வைத்திருந்தார்கள். நகரத்திற்கு அருகில் நங்கூரம் பாய்ச்சி நாங்கள் இரவைக் கழித்தோம். பொழுது விடிந்ததும் போர்முரசும் கொம்பும் எக்காளமும் முழங்க எங்களுடைய கப்பல்கள் முன்னேறின. நகரத்தைக் காத்து நின்ற வீரர்கள் கவண்கற்களை எங்கள்மீது வீசினார்கள். அவற்றுள் ஒன்று சுல்தான் அருகில் நின்றுகொண்டிருந்த வீரன் ஒருவன்மீது விழுந்தது. உடனே கப்பல்களிலிருந்த வீரர்கள் வாளும் கேடயமும் ஏந்திக்கொண்டு நீரிற் குதித்தார்கள். சுல்தான் அகைரி என்னும் ஒருவகைப் படகில் ஏறிக்கொண்டான், நானும் மற்றவர்களோடு சேர்ந்து நீரிற் குதித்தேன். எங்களுக்கருகில் டார்ட்டன்[26] என்று சொல்லப்படும் சிறு கலங்கள் இரண்டு நின்றுகொண்டிருந்தன. அவற்றின் பின்பகுதியில் குதிரைகளும் இருந்தன. குதிரை வீரர்கள் தங்களுடைய கவசங்களைப் பூண்டுகொண்டு குதிரைமீது ஏறி வெளியே வரும்

[25] திருக்குரான், xxii, 41.

[26] கரையோரமாகச் செல்லும் சிறு கப்பல்.

வரையில் எதிரிகள் கண்ணிற்படாமல் இருப்பதற்கு ஏற்றவாறு அந்தக் கலங்கள் கட்டப்பட்டிருந்தன. இவ்வாறுதான் அந்த இரு கலங்களிலும் குதிரை வீரர்கள் போருக்குத் தயாராய் நின்று கொண்டிருந்தார்கள்.

இறைவன் அருளால் முசல்மானியர் வெற்றிபெற்றனர். சந்தாபூர் வீழ்ந்தது. நாங்கள் நகருக்குள் புகுந்தோம். முஸ்லிமல்லாத குடிமக்கள் அனைவரும் தம் அரசனுடைய மாளிகையில் ஒளிந்துகொண்டனர். நாங்கள் மாளிகையை முற்றுகையிட்டோம். முற்றுகையைச் சமாளிக்க முடியாமல் அவர்கள் வெளியே வந்ததும் நாங்கள் அவர்களைப் பிடித்துக்கொண்டோம். ஆனால் எங்கள் சுல்தான் அவர்களைக் கொல்லாமல் விட்டது மட்டுமன்றி அவர்களுடைய மனைவி மக்களையும் அவர்களிடமே திருப்பி அனுப்பிவிட்டான். அவர்கள் மொத்தம் பதினாயிரம் பேர் இருந்தனர். நகரத்தின் அண்மையில் இருந்த புறநகர் ஒன்றில் சுல்தான் அவர்களைக் குடியேற்றினான். அரச மாளிகையில் சுல்தான் குடியேறினான். அதன் அருகிலிருந்த வீடுகளைத் தன்னுடைய பரிவாரத்தினருக்குக் கொடுத்துவிட்டான். போரில் கைப்பற்றிய இளம்பெண் ஒருத்தியை சுல்தான் எனக்குக் கொடுத்தான். அவள் பெயர் லெம்கி என்பதாகும். ஆனால். நான் அவளுக்கு முபாராக் என்னும் பெயரைக் கொடுத்தேன். அவளுடைய கணவன் உரிய பொருளைக் கொடுத்து அவளை மீட்டுக்கொள்ள விரும்பினான். ஆனால், நான் அவளைத் திருப்பித்தர மறுத்து விட்டேன். தோற்றுப்போன அரசனுடைய கருவூலத்திலிருந்து கைப்பற்றப்பட்ட விலையுயர்ந்த எகிப்திய ஆடைகளுள் ஒன்றை சுல்தான் எனக்குப் பரிசளித்தான். சந்தாபூரை நாங்கள் முதல் ஜுமாதி பதின்மூன்றாம் நாள் கைப்பற்றினோம். அன்று முதல் ஷாபான் மாதத்தின் இடைப்பகுதி வரையிலும்[27] நான் சுல்தானுடன் சந்தாபூரிலேயே இருந்தேன். அதற்குப் பிறகு நான் சுல்தானிடம் விடைபெற்றுக்கொண்டேன். ஆனால். நான் புறப்படுவதற்குமுன் மீண்டும் வருவதாக என்னிடம் சுல்தான் வாக்குறுதி பெற்றுக் கொண்டான்.

நான் கடல் வழியாக முதலில் ஹானுவுருக்குச் சென்றேன். பிறகு, பகனூர், மஞ்சரூர், ஹிலி, ஜர்பட்டன், புத்பட்டன், பண்டரைனா, கோழிக்கோடு ஆகிய ஊர்களுக்குச் சென்றேன். இந்த ஊர்கள் எல்லாவற்றையும் நான் முன்பே கூறியிருக்கிறேன். அதற்குப் பிறகு நான்

[27] தோராயமாய் மூன்று மாதம் என்று சொல்லலாம்.

ஷால்யாத்[28] என்னும் ஊருக்குப் போனேன். அது மிகவும் அழகிய நகரம். அந்த நகரத்தில் ஷால்யாத் என்னும் உயர்தரத் துணி உற்பத்தியாகிறது. அங்கே நெடுநாள் தங்கியிருந்தபின் நான் கோழிக்கோட்டுக்கு மீண்டேன். தொடக்கத்தில் என்னோடு இருந்தவர்களும் கோழிக்கோட்டிலிருந்து சுகத்தில் ஏறிப் பயணஞ் செய்தவர்களும் ஆகிய என்னுடைய அடிமைகளுள் இருவர் அங்கே என்னைக் கண்டு பின்வரும் செய்திகளைச் சொல்லினர்: கருவுற்றிருந்த என் அடிமைப் பெண் இறந்துபோனாள்; (சுகம் காணாமற் போனதிலிருந்து நான் அவளைப் பற்றி மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்ததேன்.) ஜாவா[29] அரசன் என்னுடைய ஏனைய அடிமைப்பெண்களைக் கைப்பற்றிக் கொண்டான்; என்னுடைய உடைமைகள் எல்லாம் சூறையாடப்பட்டு விட்டன; என்னுடைய தோழர்கள் சீனா, ஜாவா, வங்காளம்[30] ஆகிய நாடுகளிற் சிதறிப்போனார்கள்.

இந்தச் செய்திகளைக் கேள்விப்பட்டதும் நான் ஹனூவுருக்கும் பின்னர் சந்தாபூருக்கும் திரும்பிச் சென்றேன். நான் முகரத்தின் இறுதியில் சந்தாபூரை அடைந்து ரபீமாதத்தின் இறுதிவரையிலும் அங்கே இருந்தேன். எந்த முஸ்லிமல்லாத அரசனிடமிருந்து நாங்கள் சந்தாபூரைக் கைப்பற்றினோமோ அதே அரசன் அந்த ஊரை மீட்பதற்காகப் படையெடுத்து வந்தான். முஸ்லிமல்லாதார் அனைவரும் ஓடிப்போய் அவனோடு சேர்ந்துகொண்டனர். சுல்தானுடைய போர் வீரர்கள் ஆங்காங்கே இருந்த கிராமங்களில் சிதறிக் கிடந்தார்கள். அவர்கள் எங்களுடைய துணைக்கு வரவில்லை. முஸ்லிமல்லாதார் நகரை முற்றுகையிட்டு எங்களை மிகவும் நெருக்கினர். நிலைமை மோசமாகிக் கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் நான் வெளியே வந்து கோழிக்கோட்டுக்குப் போய் விட்டேன். அங்கிருந்து நான் ஜீபத் உல் மஹலுக்குப் (மாலத்தீவுக்கு) போக விரும்பினேன். அந்தத்தீவுகளைப் பற்றி நான் பல கதைகளைக் கேள்விப்பட்டிருந்தேன். கோழிக்கோட்டிலிருந்து புறப்பட்டுப் பத்து நாள் பயணஞ்செய்தபின் நாங்கள்

**மாலத்தீவு***

* இது வொரு தீவுக்கூட்டம்.

28 இப்போது கோழிக்கோட்டிற்குத் தெற்கில் 6½ மைல் தொலைவிலுள்ள பெய்ப்பூர் என்று கிப் கருதுகிறார். சால்வை என்னும் சொல் தொடக்கத்தில் ஷால்யாத் என்னும் பெயரிலிருந்து தோன்றியிருக்கக்கூடும் என்றும் அவர் கருதுகிறார்.—*Cf*, Yule, *ibid*, pp. 77–8.

29 சுமத்ரா—கிப்.

30 மூலத்தில் 'பஞ்சாலா' என்று எழுதப்பட்டுள்ளது. N. V. R.

ஜீபத் உல் மஹலுக்குப் போய்ச்சேர்ந்தோம். (ஜீப் என்றால் அரபு மொழியில் ஓநாய் என்று பொருள்படும்; ஜீபத் என்பது பெண்பால். வடமொழியில் த்வீப என்னும் சொல் ஜீபத் என்று திரிந்திருக்கிறது.) அந்தத் தீவுகள் உலகிலேயே மிகவும் அற்புதமானவை. மாலத்தீவுகள் என்னும் கூட்டத்தில் சுமார் இரண்டாயிரம் தீவுகள் இருக்கின்றன. அவற்றுள் சுமார் நூறு தீவுகள் மோதிரம்போல வட்டமாய் அமைந்துள்ளன. அந்த வட்டத்திற்குள் புகுவதற்கு ஏற்ற வழியொன்று இருக்கிறது. அந்த வழியாகத்தான் கப்பல்கள் அந்தத் தீவுக் கூட்டத்திற்குள் நுழைகின்றன. அந்தத் தீவுகளுள் யாதேனும் ஒன்றுக்கு ஒரு கப்பல் போய்ச் சேர்ந்தால், பிற தீவுகளுக்குப் போக வழி காட்டுவதற்காக அந்தத் தீவைச் சேர்ந்த ஆள் ஒருவனைக் கப்பலில் ஏற்றிக்கொள்ள வேண்டும். அந்தத்தீவுகள் ஒன்றையொன்று மிகவும் நெருங்கி அமைந்திருப்பதால், ஒரு தீவை விட்டுப் புறப்பட்ட உடனே இன்னொரு தீவிலுள்ள தென்னை மரங்களின் உச்சியைக் காண்கிறோம். வழி தவறிப்போன கப்பல் மாலத் தீவுகளை அடைதல் இயலாது. காற்று அதனை அடித்துக் கொண்டு போய் சிலன் (இலங்கை) தீவிலோ மா'பார்க் கரையிலோ (சோழ மண்டலக் கரை) சேர்த்துவிடும்.

இந்தத் தீவுகளில் வாழும் மக்கள் அனைவரும் முசல்மானியர். அவர்கள் கடவுள்பக்தியும் நேர்மையும் உடையவர்கள். அந்தத் தீவுகள் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பகுதிக்கும் ஓவ்வோர் ஆளுநன் இருக்கிறான். ஆளுநனை அங்குக் கர்தூயி என்று சொல்கின்றனர். நீர்வாகப் பகுதிகள் பின் வருபவை;

**உணவு**

1. பல்பூர்; 2. கன்னலூஸ்; 3. மஹல்; (இந்தப் பெயரே தீவுக் கூட்டத்தின் பெயராயிற்று; அரசன் வசிப்பதும் இங்கேதான்.) 4. தலாதிப்; 5. கராயிதூவ்; 6. தயிம்; 7. தல்தும்தி; 8. ஹல்தும்தி; 9. பரீது; 10. கண்டகல்; 11. மலூக்; 12. சவீத் (சவீதே மிகவும் தொலைவிலுள்ள பிரிவு.) மாலத் தீவுகளில் தானியங்களே விளைவதில்லை. ஆனால், சவீதில் மட்டும் தினை போன்ற ஒரு தானியம் விளைகிறது. அங்கிருந்து அதனை மஹலுக்கு எடுத்துச் செல்கிறார்கள். மக்கள் மீனையே தங்களுடைய உணவாய்ப் பயன்படுத்துகிறார்கள். அந்த மீன் லைருனைப் போன்றது. மாலத் தீவு மக்கள் அதனைக் குல்புல் மாஸ்[31] என்று சொல்கிறார்கள். அதனுடைய சதை சிவப்பாயிருக்கிறது. ஆனால் அந்த மீனில் கொழுப்பேயில்லை. அதனுடைய வாசனை இறைச்சியின்

[31] Pyrard calls it *Cobolly masse*, black fish—S and D.

வாசனையைப் போல இருக்கிறது. மீனைப் பிடித்தவுடன் அதனை நான்கு கூறாக வெட்டி, அரை வேக்காடாக வேக வைத்து, அதன் பின் அந்தத் துண்டுகளைத் தென்னையோலையில் இட்டுப் புகையூட்டிப் பதப்படுத்துகிறார்கள். மீன் துண்டு நன்றாகக் காய்ந்தபின் அதனை உண்கிறார்கள். இங்கிருந்து அது இந்தியா, சீனா, யெமன் ஆகிய நாடுகளுக்கும் ஏற்றுமதியாகிறது.

இந்தத் தீவுகளில் வளர்கின்ற மரங்களுள் மிகப் பெரும்பாலானவை தென்னை மரங்களே. தென்னையையும் மீனையும் நம்பியே மக்கள் இங்கே வாழ்கிறார்கள். தென்னை ஓர் அற்புதமான மரம். ஒவ்வொரு மரமும் மாதத்திற்கு ஒன்று என்ற கணக்கில் ஆண்டுக்குப் பன்னிரண்டு குலைகளைத் தள்ளுகின்றது. ஒரு மரத்திலிருக்கும் தென்னங் குலைகளைப் பார்த்தால், சில சிறியவைகளாகவும், சில பெரியவைகளாகவும், சில பசுமையாகவும், சில காய்ந்தும் இருப்பதைக் காணலாம். தென்னை மரம் ஆண்டு முழுதும் தொடர்ந்து குலை தள்ளிக் கொண்டிருக்கிறது. தேங்காயிலிருந்து பாலும், தேனும், எண்ணெயும் செய்கிறார்கள். அந்தத் தேனில் அவர்கள் இனிப்புப் பண்டங்களும் பண்ணியமும் செய்து காய்ந்த தேங்காயுடன் சேர்த்துத் தின்கிறார்கள். இவ்வாறு தேங்காய்ப் பண்டங்களையும் மீனையும் தின்பதால் இந்தத் தீவுகளில் வாழும் மக்கள் உடலுறவு வெறி மிகுந்தவர்களாய் இருக்கிறார்கள். நான் இந்தத் தீவுகளில் ஒன்றரை ஆண்டு வாழ்ந்தேன். அப்போது எனக்கு நான்கு மனைவிகளும் வைப்பாட்டிகள் சிலரும் இருந்தார்கள். ஒவ்வோர் இரவை ஒவ்வொருத்தி வீட்டில் கழிப்பது என்று முறை வைத்துக்கொண்டேன். பகல் நேரத்தில் ஒருவர்பின் ஒருவராக அவர்கள் அனைவருடனும் இருந்தேன்.

தாவரங்களுள் இங்கே ஜாமுன், நாரத்தை, எலுமிச்சை, கோலோக்காசியா ஆகியவை வளர்கின்றன. கோலோக்காசியா வேரிலிருந்து இங்குள்ள மக்கள் ஒரு மாவைத் தயார் செய்கிறார்கள். அந்த மாவிலிருந்து சேமியாச் செய்கிறார்கள். அத்துடன் தேங்காய்ப் பாலைக் கலந்து சமைக்கின்ற பண்டம் மிகவும் சிறந்த உணவாய் இருக்கிறது. அதனை நான் மிகவும் விரும்பி உண்டேன்.

மாலத் தீவு மக்கள் கடவுள்பக்தி மிக்கவர்கள்; சமயக்கோட்பாடுகளில் உண்மையான நம்பிக்கை உடையவர்கள்; நேர்மையும் மன உறுதியும் உடையவர்கள். அவர்கள்சட்டப்படி என்ன உணவு உண்ணலாமோ அதனைத்தான் உண்கிறார்கள். இறைவனுக்கு

அவர்கள் விடுக்கும் வேண்டுகோள்கள் நிறைவேறுகின்றன. அவர்களுள் ஒருவன் மற்றொருவனைக் காணும் போது 'இறைவன் என்னுடைய தலைவன்;முகமது என்னுடைய தீர்க்கதரிசி; நான் அறிவற்றவன்' என்று சொல்கிறான். அவர்கள் உடல் வலிமை அற்றவர்கள். அதனால், அவர்கள் ஒருவரோடொருவர் சண்டையிடுவதில்லை; போருக்கும் போவதில்லை. ஒரு நாள் திருடன் ஒருவனுடைய வலக் கையைத் துண்டிக்குமாறு நான் பணித்தேன். அப்போது நீதி மன்றத்தில் இருந்தவர்களுள் பலர் மயங்கி விழுந்துவிட்டனர். இந்தியக் கடற் கொள்ளைக்காரர்கள் மாலத் தீவுகளைத் தாக்குவ தில்லை. அங்கு வாழும் மக்களையும் அச்சுறுத்துவதில்லை. அவர் களுடைய பொருள்களுள் எதையேனும் வன்முறையில் பறித்துக் கொள்பவர்கள் விரைவில் துன்பத்திற்கு உள்ளாகிறார்கள் என்பதை அவர்கள் அனுபவத்தில் கண்டிருக்கிறார்கள். பகைவர் கப்பல் இந்தத் தீவுகளுக்கு வந்தால், அதிலுள்ளவர்கள் இந்தத் தீவுகளின் சொந்தக் குடிமக்களுக்கு எவ்விதத் தீங்கும் செய்வதில்லை. ஆனால், அங்கே வெளியூர்க்காரர்கள் யாரேனும் இருந்தால் அவர்களை மட்டும் பிடித்துக்கொண்டு போய் விடுகிறார்கள். முஸ்லிமல்லாதவன் ஒருவன் யாதேனும் ஒரு பொருளைத் திருடிவிட்டால்—அது ஒரே ஓர் எலுமிச்சம் பழம் போன்ற மிகச் சிறிய பொருளாயிருந்தாலும்—முஸ்லிமல்லா மக்களின் தலைவன் அவனுக்குக் கடுமையான தண்டனை அளிக்கிறான். திருடனுக்குக் கொடுக்கப்படும் அடியின் கொடுமையை நினைத்துப் பார்த்தாலே யாரும் திருட மாட்டார்கள். இந்தத் தீவுகளில் வாழும் மக்கள் நேர்மையாக நடப்பதற்கும் ஒருவரோடொருவர் சண்டை போடாமல் இருப் பதற்கும் பழகிக்கொண்டவர்கள். அப்படி இல்லாவிட்டால், அவர்களுடைய உடல் வலிமையின்மையைக் காணும் அவர்களுடைய பகைவர்கள் அவர்களை மிகவும் தாழ்வாக மதிப்பார்கள். இந்தத் தீவுக் கூட்டத்தில் ஒவ்வொரு தீவிலும் அழகிய பள்ளிவாசல்கள் இருக்கின்றன. பெரும்பாலான கட்டடங்கள் மரத்தால் ஆனவை.

மக்கள்

மாலத்தீவு மக்கள் மிகவும் துப்புரவு உடையவர்கள். அழுக் கென்றால் அவர்களுக்குப் பிடிக்காது. அங்கே அடிக்கின்ற வெயிலையும் அதனால் உண்டாகிற வியர்வையையும் நோக்கி, அவர்களுள் பெரும்பாலார் ஒவ்வொரு நாளும் இருவேளை குளிக்கின்றனர். அவர்கள் சந்தனம் போன்ற நறுமணத் தைலங்களை மிகுதியாய்ப் பயன்படுத்துகிறார்கள். அன்றியும்,

மக்தஷுவிலிருந்து[31a] வருகின்ற கஸ்தூரியையும் அவர்கள் பூசிக்கொள்கிறார்கள். காலைத் தொழுகை முடிந்தவுடன், ஒவ்வொரு பெண்ணும் தன்னுடைய மகனையோ கணவனையோ கண்டு, அவனுக்குக் கண்மை, பன்னீர், கஸ்தூரி முதலிய வற்றைக் கொடுப்பது வழக்கம். அந்தப் பொருள்களைப் பெற்றுக் கொள்ளும் ஆடவன் மையைக் கண்ணுக்கு இட்டுக் கொண்டு, பன்னீரையும் கஸ்தூரியையும் உடலிற் பூசிக் கொள்கிறான். அதனால் அவனுடைய உடல் பளபளப் படைகிறது. முகத்திலுள்ள சோர்வு நீங்கிவிடுகிறது.

இங்கு வாழும் மக்கள் எளிய ஆடைகளையே அணிந்து கொள்கிறார்கள். உட் கால்சட்டைக்குப் பதிலாக அவர்கள் இடையைச் சுற்றி ஒரு துணியைக் கட்டிக் கொள்கிறார்கள். முஸ்லிம் யாத்திரிகர்கள் இஹ்ராம் என்னும் துணியை அணிந்து கொள்வதைப்போல இந்தத் தீவு மக்கள் சியாபுல் வலியான்[32] என்னும் ஒரு வகைத் துணியால் முதுகை மறைத்துக் கொள் கிறார்கள். சிலர் தலையில் ஒரு தலைப்பாகையை அணிந்துகொள் கின்றனர். சிலர் தலைப்பாகைக்குப் பதிலாக ஒரு குட்டையைக் கட்டிக் கொள்கின்றனர். காஜியையோ சமயப் பிரசாரகரையோ காணும்போது இந்தத் தீவு மக்கள் தோளிலுள்ள துணியை அகற்றி, முதுகைத் திறந்து விட்டுக்கொண்டு, அவர்களுடன் அவர்களுடைய வீட்டுக்குச் செல்கிறார்கள்.

**திருமணத்தைச் சார்ந்த பழக்கங்கள்**

ஒருவன் திருமணஞ் செய்துகொண்டு தன் மனைவியின் வீட்டுக்குச் சென்றால், மணமகள் தன்னுடைய கணவனுக்கு மரியாதை செய்யும் வகையில், தன் வீட்டு வாயிற் படியிலிருந்து உள்ளறை வரையிலும் ஒரு துணியை விரித்துப் போட்டு, அதன் இரு மருங்கிலும் கைப்பிடி யளவு சோழிகளைக் குவியல் குவியலாக வைத்து, உள்ளறையின் முகப்பில் அவனுக்காகக் காத்து நிற்கிறாள். அவன் அறை வாயிலை அடைந்தவுடன் அவள் ஒரு துணியை அவனுடைய காலருகில் போடுகிறாள். அதனை அவனுடைய பணியாட்கள் எடுத்துக் கொள்கிறார்கள். மணமகள் கணவன் வீட்டுக்குப் போனால், கணவனும் தன்னுடைய புது மனைவிக்கு இத்தகைய மரியாதை செய்கிறான். குடிமக்கள் அரசனைக் காணும்போதும் இது போன்ற மரியாதை செய்கிறார்கள். அந்தச் சமயங்களில்

[31a] கிழக்காப்பிரிக்காவில்

[32] உடலை மறைக்கும் துணியென்று பொருள் கூறலாம். N. V. R.

அரசனுடைய காலின்கீழ் துணியைப் போடுவது இன்றியமையாத சடங்கு.

இந்தத் தீவிலுள்ள வீடுகளெல்லாம் மரத்தாலனவை. இங்கு மண் ஈரமாயிருப்பதால், வீடுகள் தரையைத் தொடாதவாறு உயர்த்திக் கட்டப்படுகின்றன. அதற்காகக் கருங்கல்லை அவர்கள் பயன்படுத்துகிறார்கள். கற்களை இரண்டு மூன்று முழ நீளமுள்ள துண்டுகளாக உடைத்து, அவற்றைப் பல வரிசைகளில் நிறுத்தி, அவற்றின்மீது தென்னைமரச் சட்டங்களை வைத்து வீட்டுக்குத் தளம் போட்டுக் கொள்கிறார்கள். அதற்குப் பிறகு நான்கு பக்கமும் மரச்சுவர் எழுப்புகிறார்கள். அந்த வேலையில் அவர்கள் மிகவும் திறமையுடையவர்களாய் இருக்கிறார்கள். வீட்டின் முகப்பில் அவர்கள் மாலம் என்னும் கூடத்தைக் கட்டுகிறார்கள், அங்கேதான் வீட்டுத் தலைவன் அமர்ந்து தன்னுடைய நண்பர்களோடு உரையாடுகின்றான். அந்தக் கூடத்திற்கு இரு வாயில்கள் இருக்கின்றன. வீட்டுக்கு வருகின்ற அன்னியர் முன் வாயில் வழியாகப் புகுகின்றனர். பின்வாயில் உள் வீட்டோடு தொடர்புடையது. அதன் வழியாக வீட்டுத் தலைவன் கூடத்திற்கு வருகின்றான். அந்தக் கூடத்தின் அருகில் நீர் நிறைந்த பாத்திரம் ஒன்று வைக்கப்படுகின்றது. அதன் அருகில் கொட்டாங்கச்சியிற் செய்த வலஞ்சு என்னும் சிறு பாத்திரத்தையும் வைக்கிறார்கள். அதற்கு இருமுழ நீளமுள்ள கைப்பிடி போடப்பட்டுள்ளது. இங்குள்ள கிணறுகள் ஆழமற்றவை. ஆதலால், அவற்றிலிருந்து நீர் எடுப்பதற்கு இந்தச் சிறு பாத்திரமே போதுமானதாய் இருக்கிறது.

உறையுள்

மாலத்தீவு மக்கள் அனைவருமே, உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றி, வெறுங் காலிலேயே நடக்கின்றனர். தெருக்களெல்லாம் குப்பை கூளமின்றி நன்றாகப் பெருக்கப் பட்டுள்ளன. இருமருங்கிலும் நிழல் தரும் மரங்கள் இருப்பதால் தெருவில் நடப்பது நல்ல தோட்டம் ஒன்றில் நடப்பதைப்போல இனிமையாய் இருக்கிறது. அப்படியிருந்தும், யாரும் வீட்டிற்குள் புகுவதற்கு முன்னர், முன் கூடத்தின் அருகில் வைக்கப்பட்டுள்ள பாத்திரத்திலுள்ள நீரால் காலைக் கழுவி, அதனருகில் இருக்கின்ற தென்னைநார்ப் பாயில் காலை நன்றாகத் துடைத்துக் கொள்ளவேண்டும். பள்ளி வாசலுக்குள் புகுவதற்கு முன்பும் அவ்வாறே செய்ய வேண்டும்.

வாணிகக் கப்பல் வந்தால், அருகிலுள்ள தீவைச் சேர்ந்த மக்கள் தங்களுடைய சிறு படகுகளில் ஏறிக்கொண்டு

கப்பலுக்குச் சென்று, கப்பலில் வந்திருக்கிற வணிகர்களுள் தங்களுக்குப் பிடித்தவர்களை வெற்றிலையும்

**விருந்தோம்பல்**

தேங்காயும் கொடுத்து வரவேற்று, அவர்களுடைய சரக்குகளைத் தங்கள் படகில் ஏற்றிக் கொண்டு, அவர்களையும் அழைத்துக்கொண்டு, தங்கள் வீட்டிற்குச் செல்கிறார்கள். அந்த வணிகர்களைத் தங்களுடைய உறவினர்களைப் போல நடத்துகிறார்கள். அந்த வெளியூர்க் காரர்களுள் யாரேனும் திருமணம் செய்துகொள்ள விரும்பினால் அவ்வாறே செய்துகொள்ளலாம். ஆனால் போகும்போது விவாகரத்துச் செய்துவிட்டுப் போக வேண்டும் என்பது நிபந்தனை. மாலத்தீவு மக்கள் தங்கள் ஊரை விட்டுப் போக விரும்புவதில்லை என்பதுதான் அந்த நிபந்தனைக்குக் காரணம். திருமணஞ் செய்துகொள்ள விரும்பாதவர்களுக்கு அவர்கள் விருந்தினர்களாய்த் தங்கியிருக்கிற வீட்டுத் தலைவியர் உணவு சமைத்துப் போடுகின்றனர். மேலும், அவர்கள் திரும்பிப் போகும்போது, அவர்களுடைய பயணத்திற்குத் தேவையான உணவுப் பொருள்களையும் கொடுத்தனுப்புகின்றனர். இவ்வளவு உபசாரத்திற்கும் கைம்மாறாக அந்த வணிகர் எவ்வளவு சிறு பரிசு கொடுத்தாலும் அதனை அவ்வில்லத் தலைவியர் மன நிறைவுடன் ஏற்றுக்கொள்கின்றனர். ஆனால், பந்தர் என்று சொல்லப்படுகின்ற அரசுக் கருவூலத்திற்கு இந்த வணிகர் வருகையால் இலாபமில்லாமல் போகவில்லை. கப்பலில் வந்துள்ள சரக்குகளுள் ஒரு குறிப்பிட்ட பகுதியை ஒரு குறிப்பிட்ட விலைக்கு வாங்கிக்கொள்ளும் உரிமை பந்தருக்கு உண்டு. விலை உயர்ந்ததாய் இருந்தாலும் குறைந்ததாய் இருந்தாலும், அந்தப் பொருள்களைக் குறிப்பிட்ட அந்த விலைக்கே வணிகர் விற்றாக வேண்டும். அதுதான் பந்தர்ச்சட்டம். ஒவ்வொரு தீவிலும் பந்தரின் மண்டி ஒவ்வொன்று இருக்கிறது. அந்தப் பகுதியின் ஆளுநன் (கர்தூரி) கப்பலில் வந்த சரக்குகளை அந்த மண்டியில் திரட்டி, விலைக்கு வாங்க வேண்டியவற்றை விலைக்கு வாங்கிக் கொண்டு, பண்டமாற்றுச் செய்யவேண்டியவற்றைப் பண்ட மாற்றுச் செய்கிறான், அந்தத் தீவின் மக்கள் கோழிகளைக் கொடுத்து மட்பாண்டங்களை வாங்கிக் கொள்கிறார்கள். ஒரு மட்பாண்டத்திற்கு ஐந்தாறு கோழிகளைக் கொடுக்கவேண்டும்.

நாம் முன்னரே கண்டவாறு இந்தத் தீவுகளிலிருந்து மீன் ஏற்றுமதி செய்யப்படுகிறது. அன்றியும், தேங்

**ஏற்றுமதி**

காய், துணி, வலியான், தலைப்பாகை ஆகியவையும், பித்தளைப் பாத்திரங்களும், சோழியும், க்வன்பார் என்னும் தென்னை நாரும் இங்கிருந்து ஏற்றுமதியாகின்றன.

கடற்கரையில் குழி தோண்டி, தேங்காய் மட்டையை அதில் ஊறவைத்து, மென்பதமானபின் அதனை எடுத்து, கொட்டாப் புளியால் அடித்துப் பதப்படுத்துகிறார்கள். அதன்பின் பெண்கள் அதனை நார் நாராகப் பிரித்தெடுத்து, சணற்கயிறு திரிப்பதைப் போலக் கயிறு திரிக்கிறார்கள். அந்தக் கயிறு கப்பலின் பலகைகளை ஒன்றோடொன்று இணைத்துத் தைப்பதற்குப் பயன்படுகின்றது. க்வன்பார் சணற்கயிற்றைக் காட்டிலும் நன்றாய் இருக்கிறது. இந்தியா யெமன் ஆகிய நாட்டுக் கப்பல்களின் பலகைகளைத் தைத்து இணைப்பதற்கு இந்தக் கயிற்றைத்தான் பயன்படுத்து கிறார்கள். இந்துமாக்கடலில் பாறைகள் அதிகமாய் இருக்கின்றன. இரும்பு ஆணிகளால் இணைக்கப்பட்ட பலகைகளைக் கொண்ட கப்பல் பாறையில் மோதினால் உடைந்து சிதறிப் போவது உறுதி. ஆனால் கயிற்றால் தைத்து இணைக்கப்பட்ட பலகைகளைக் கொண்ட கப்பல் அவ்வாறு எளிதில் உடைந்து போகாது. கப்பலின் கட்டுமானத்திற்குக் கயிறு ஓரளவு நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையைத் தருகிறது. எனவே, இந்தக் கயிற்றுக்கு நல்ல கிராக்கி இருக்கிறது. அதனால் அது சீனா, இந்தியா, யெமன் ஆகிய நாடுகளுக்கு ஏற்றுமதி ஆகிறது.

**சோழி**

மாலத்தீவு மக்கள் சோழியைத்தான் நாணயமாய்ப் பயன் படுத்துகிறார்கள். கடலில் வாழ்கின்ற ஒருவகை நத்தையைப் பிடித்துக் கடற்கரையில் குழி தோண்டி அதிற் போட்டு விடுகிறார்கள். சில நாட்களில் நத்தையிலுள்ள சதை அழுகிப்போவதால், அதனுடைய வெண் சிப்பி மட்டும் எஞ்சி நிற்கிறது. இந்தச் சிப்பி அல்லது சோழி நூறு சேர்ந்தால் ஒரு சியாஹ் ஆகும். எழுநூறு சிப்பி சேர்ந்தால் ஒரு பால் ஆகும். 1,200 சோழி கொண்டது ஒரு குத்தாயி; 1,00,000 சோழி கொண்டது ஒரு புஸ்து. கடைத் தெருவில் ஒரு பொன் தினாருக்கு நான்கு புஸ்து என்னும் விகிதத்தில் நாணயமாற்று நடைபெறுகிறது. ஆனால், பல சமயங்களில் சோழியின் மதிப்புக் குறைந்து போகிறது. அதனால் ஒரு பொன் தினாருக்குப் பன்னிரண்டு புஸ்துக் கொடுக்க வேண்டியதாய் இருக்கும். மாலத்தீவு மக்கள் சோழியைக் கொடுத்து வங்காளத்து மக்களிடமிருந்து அரிசி வாங்கிக் கொள்கிறார்கள். வங்காளத்திலும் சோழி நாணயமாய்ப் பயன் படுகிறது.[38] சோழியை யெமன் வணிகர்களும் வாங்கிக் கொள்கிறார்கள். அதனை அவர்கள் மணலுக்குப் பதிலாகக் கப்பலின் அடிச் சுமையாய்ப் பயன்படுத்துகிறார்கள். நீக்ரோக்

[38] அடிக்குறிப்பு 30ஐக் காண்க.

களின் நாட்டிலும் சோழியே நாணயமாய்ப் பயன்படுகிறது. மாலியிலும் ஜுஜுவிலும் ஒரு பொன் தினருக்கு 1,150 என்ற விகிதத்தில் அது விற்பனை செய்யப்பட்டதை நான் கண்டேன்.

மாலத்தீவு மகளிர் தம் தலையை மூடுவதில்லை. அவர்களுடைய அரசியும் அப்படித்தான் இருக்கிருள், அவர்கள் தங்கள் தலை முடியை வாரி ஒரு பக்கம் விட்டுக் கொள்கிருர்கள். அவர்களுள் பெரும்பாலார் ஒரே ஒரு துணியை மட்டும் கட்டிக் கொள்கின்றனர். அது அவர்கள் இடையிலிருந்து கால் வரையில் மூடிக் கொள்கிறது. உடலின் பிற பகுதிகள் திறந்தபடியே இருக்கின்றன. இந்த உடையில்தான் அவர்கள் கடைத் தெருவுக்கும் பிற இடங்களுக்கும் போகிருர்கள். நான் காஜியாய் இருந்த போது மகளிர் தம் உடல் முழுதும் ஆடையால் மூடிக்கொள்ள வேண்டும் என்று சொல்லி, அதற்குரிய நடவடிக்கைகளை எடுத்தேன். ஆனுல் என் முயற்சி வெற்றி பெறவில்லை. நான் விசாரித்த வழக்குகளில் என்னுடைய நீதி மன்றத்திற்கு வந்த பெண்கள் உடலை மூடிக்கொண்டு வர வேண்டுமென்று கட்டாயப் படுத்தினேன். அதற்குமேல் எதுவும் செய்ய என்னுல் இயல வில்லை. சில பெண்கள் நீளங்குறைந்த, அகலமான, கைகளை உடைய சட்டையையும் அணிந்துகொள்கிருர்கள். என்னிடம் இருந்த அடிமைப்பெண்கள் சிலர் டில்லிப் பெண்களைப் போல உடை தரித்துக்கொண்டார்கள். அவர்கள் தங்கள் தலையையும் மூடிக்கொண்டார்கள். ஆனுல், அவ்வாறு செய்வதில் அவர்களுக்குப் பயிற்சி இல்லை. எனவே, அவர்கள் முக்காடு போட்டுக் கொண்டது அவர்களுடைய அழகை அதிகப் படுத்துவதற்கு மாருக அதனைக் குறைப்பதற்குத்தான் உதவியது.

மாலத்தீவுப் பெண்கள் கைந்நிறைய வளையல் போட்டுக் கொள்கிருர்கள். அவை மணிக்கட்டு முதல் முழங்கை வரையிலும் உள்ள முன்கை முழுவதையும் மறைத்துக் கொள்கின்றன. அவை வெள்ளியாற் செய்யப்பட்டவை. சுல்தானுடைய மனைவிமார் அவனுடைய உறவினர் ஆகியோர் மட்டுமே பொன்வளை அணிந்து கொள்கின்றனர். மேலும், அவர்கள் காலிற் பொற்சிலம்பும் கழுத்தில் பொன்வடமும் அணிந்து கொள்கிருர்கள். மாலத்தீவுப் பெண்கள் பிறருடைய வீடுகளில் பணியாட்களாக வேலை செய்வதற்குத் தயங்குவதில்லை. அதை அவர்கள் தாழ்வாகக் கருதுவதில்லை. அவர்களுடைய சம்பளம் ஐந்து தினர். அதில் ஏற்றமும் இல்லை, இறக்கமும் இல்லை. ஆனுல் அவர்கள் வேலை செய்யும் வீட்டிலேயே அவர்களுக்குச்

சாப்பாடும் போடவேண்டும். பணக்காரன் ஒருவனுடைய வீட்டில் இத்தகைய பத்திருபது வேலைக்காரிகளைப் பார்க்கலாம். வேலைக்காரிகள் பாத்திரம் எதையேனும் உடைத்து விட்டால் அதனுடைய விலையைக் கொடுத்துவிடவேண்டும். எவளேனும் ஒருத்தி ஒரு வீட்டிலிருந்து இன்னொரு வீட்டிற்கு மாற விரும்பினால், அவள் பழைய தலைவனுக்குத் தரவேண்டிய பணத்தை அவளுடைய புதிய தலைவன் அவளுக்குக் கடனாகத் தருகிறான். க்வன்பாரை ஆய்ந்து கயிறு திரிப்பதே இந்த வேலைக்காரிகளின் முக்கியமான பணியாகும்.

**தாற்காலிகத் திருமணம்**

இந்தத் தீவில் திருமணஞ் செய்துகொள்வது எளிது. பெண்களுக்குத் தரவேண்டிய பரிசம் மிகக் குறைவு. ஆண் பெண் உடலுறவைச் சமுதாயம் தவறென்று கருதாமல் ஏற்றுக்கொள்கிறது. அதனால்தான் திருமணஞ் செய்துகொள்வது இங்கு எளிதாய் இருக்கிறது. மக்கள் இங்குப் பரிசத்தைப்பற்றி முன்கூட்டியே ஒன்றும் சொல்வதில்லை என்று பொதுவாகக் கூறலாம். இஸ்லாம் மதத்தை ஏற்றுக்கொண்டு, அந்த மதத்தின் சட்டப்படி யாதேனும் பரிசு தந்தால் போதும். வெளிநாட்டுக் கப்பல்களில் வருகின்ற மாலுமிகள் மாலத்தீவுப் பெண்களை மணந்துகொண்டு, திரும்பிப் போகும்போது விவாகரத்துச் செய்துவிடுகிறார்கள். இது ஒரு வகைத் தாற்காலிகக் கல்யாணம். மாலத்தீவுப் பெண்கள் தங்கள் நாட்டைவிட்டுப் போவதே இல்லை. இந்த நாட்டுப் பெண்களுடன் பழகுவது வேறெந்த நாட்டிலும் காணமுடியாத அளவுக்கு மகிழ்ச்சியாய் இருக்கிறது. கணவனுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளை இந்த நாட்டில் மனைவியே செய்கிறாள். அவற்றை வேறு யாரும் செய்வதற்கு அவள் விடுவதில்லை. அவனுக்கு உணவு படைத்தல், உண்டபின் துப்புரவு செய்தல், அவனுடைய கைகளைக் கழுவிவிடுதல், அவன் தன்னைத் துப்புரவு செய்துகொள்ளும்போது அவன் பக்கத்திலிருந்து நீர் வார்த்தல், அவன் உறங்கும்போது அவனுடைய கால்களைத் துணியால் மூடுதல் முதலிய பணிகள் அனைத்தையும் மனைவியே செய்கிறாள். மனைவி கணவனுடன் அமர்ந்து உண்ணும் பழக்கம் இங்கே இல்லை. மனைவி என்ன உண்கிறாள் என்பது கணவனுக்குத் தெரியவே தெரியாது. நான் இங்கிருந்த போது பல பெண்களை மணந்துகொண்டேன். நான் கேட்டுக்கொண்டதற்கு இணங்க, அவர்களுள் சிலர் என்னுடன் அமர்ந்து உண்டனர். ஆனால் மற்றவர்கள் மறுத்து விட்டார்கள். அவர்களை வற்புறுத்த இயலவில்லை.

**மாலத்தீவு மக்கள் இஸ்லாத்தைத் தழுவியதற்குக் காரணம்; மாதந்தோறும் அவர்களுக்குத் துன்பந் தந்த பேய் பிசாசுகள்:**

மாலத்தீவு மக்கள் தொடக்கத்தில் உருவ வழிபாட்டினராய் இருந்தார்கள் என்று இறைமையியல் வல்லுநரும் யெமனிலிருந்து வந்தவருமாகிய ஈசாவும், இறைமையியல் வல்லுநரும் காஜிப் பதவி வகித்தவருமாகிய பேராசிரியர் ஆலியும், அப்துல்லாவும் போன்ற நம்பத்தக்க பெரிய மனிதர்கள் வாயிலாய் நான் கேள்விப் பட்டேன். அவ்வாறு அவர்கள் உருவ வழிபாட்டு மதத்தைப் பின்பற்றி வந்த காலத்தில் மாதந்தோறும், கடற் பிசாசுகளுள் ஒன்று அவர்கள்முன் தோன்றுவது வழக்கம். அந்தப் பிசாசினால் விளையக்கூடிய துன்பத்தினின்று தப்புவதற்காக, மாலத்தீவு மக்கள் கன்னி கழியாத இளம் பெண் ஒருத்திக்கு அணிமணி பூட்டி அழகு செய்து, அவளை புத்-கானாவுக்கு[34] அழைத்துக் கொண்டுபோய், அங்கேயே இராத் தங்குமாறு விட்டுவிடுவார்கள். (புத்கானா என்றால் உருவ வழிபாட்டுக் கோயில் என்பது பொருள்.) அந்தக் கோயில் கடற்கரையில் கட்டப்பட்டிருந்தது. அதிலிருந்த பலகணி வழியாக வெளியிலிருப்பவர்கள் அவளைக் காணமுடியும். மறுநாட் காலையில் சென்று பார்த்தால் அந்தப் பெண்ணின் கன்னிமை அழிக்கப்பட்டது மட்டுமன்றி அவள் இறந்தும் கிடப்பாள். இவ்வாறு மாதந்தோறும் ஓர் இளம்பெண் காவு கொடுக்கப்பட்டாள். எந்தப் பெண்ணை அனுப்புவது என்று தீர்மானம் செய்வதற்காக மக்கள் திருவுளச்சீட்டுப் போட்டுப் பார்ப்பார்கள். சீட்டில் எவனுடைய பெயர் வருகிறதோ அவன் தன்னுடைய மகளை அனுப்பவேண்டும். இப்படி இருக்கின்ற காலத்தில் ஒருநாள் பார்பரியைச் சேர்ந்த அபுல் பர்காத் என்னும் மக்ரிபி அங்கு வந்தான். அவன் திருக்குரானை மனப் பாடம் பண்ணியிருந்தான். அவன் மஹலில் வாழ்ந்த கிழவி ஒருத்தியின் வீட்டில் தங்கி இருந்தான். ஒருநாள் அந்தக் கிழவி தன்னுடைய உறவினர்களான மகளிர் பலரை அழைத்து வைத்து அவர்களுடன் சேர்ந்து அழுதுகொண்டிருந்தாள். அதனைக் கண்ட அபுல் பர்காத் அவர்களெல்லாம் ஏதோ இழவுக்குப் போய்விட்டு வந்திருப்பார்கள் போலும் என்று எண்ணி அவர் களுடைய துன்பத்திற்குக் காரணம் யாதென வினவினான். ஆனால், அவர்கள் காரணம் கூற மறுத்துவிட்டார்கள். அப்போது அங்கே மொழிபெயர்ப்பாளன் ஒருவன் வந்தான். அந்தக் கிழவியின் பெயரில் திருவுளச் சீட்டு விழுந்திருந்ததாகவும், அவளுக்கு ஒரே மகள் இருந்ததாகவும், அவளைக் காவு கொடுக்க

[34] புத் = தெய்வச்சிலை; கானா = வீடு

நேர்ந்துவிட்டதே என்று கிழவியும் அவளுடைய சுற்றத்தாரும் வருந்தியதாகவும் அவன் அபுல். பர்க்காத்துக்குத் தெரியப் படுத்தினான். உடனே அபுல் பர்க்காத் 'நானே இன்றிரவு உன்னுடைய மகளுக்குப் பதிலாகப் போகிறேன்' என்று கிழவியிடம் சொன்னான். அவனுக்குத் தாடியே இல்லை என்பது குறிப்பிடத் தக்கது. அவன் தன்னுடைய மாலைக் கடன்களை முடித்தபின் அவர்கள் அவனை அழைத்துக் கொண்டுபோய்க் கோயிலில் விட்டுவிட்டார்கள். அவனும் திருக்குரானை ஓதத் தொடங்கினான். கடலிலிருந்து புறப்பட்ட பிசாசு திருக்குரான் ஓதும் ஒலி காதில் விழுந்தவுடனே மீண்டும் கடலுக்கு ஓடி அதில் விழுந்து மறைந்தது. மறுநாள் காலையில் ஊர் மக்கள், வழக்கம் போல, கன்னிப் பெண்ணின் உடலை எடுத்து எரிப்பதற்காகக் கோயிலுக்குச் சென்றார்கள். அங்கே வெளியூர்க்காரனான அபுல் பர்க்காத் திருக்குரானை ஓதிக்கொண்டிருப்பதைக் கண்டு, அவனைத் தங்களுடைய அரசனான ஷினூராஜா[35] விடம் அழைத்துக் கொண்டுபோய், முன்னாள் இரவு நிகழ்ந்ததை எடுத்துரைத்தார்கள். அதனைக் கேட்ட அரசன் மிகவும் வியப்படைந்தான். அவன் இஸ்லாம் மதத்தைத் தழுவுவது நல்லது என்று அபுல் பர்க்காத் எடுத்துரைத்தான். அரசனுடைய உள்ளத்திலும் அந்த எண்ணம் தோன்றியது. ஆனால், 'என்னுடன் ஒரு மாதம் இரு. அடுத்த மாதமும் நீ பிசாசிட மிருந்து தப்ப முடிந்தால் நான் மதம் மாறிவிடுகிறேன்' என்று சொன்னான். அவ்வாறே அபுல் பர்க்காத்தும் உருவ வழிபாட் டினருடன் இன்னும் ஒரு மாதம் தங்கியிருந்தான். அந்த நாட்டு அரசன் இஸ்லாம் மதத்தைத் தழுவவேண்டும் என்பது இறைவன் திருவுள்ளமாய் இருந்ததால், அந்த மாதம் முடிவதற்குள் ளாகவே, அவன் உண்மையை உணர்ந்து, இஸ்லாத்தைத் தழுவினான். அவனுடன் அவனுடைய மனைவிமாரும், மக்களும், உயர் அரசு அலுவலர்களும் இஸ்லாத்தில் சேர்ந்தார்கள். மாதக் கடைசியில் அபுல் பர்க்காத் கோயிலுக்குச் சென்று இரவு முழுதும் திருக்குரானை ஓதிக்கொண்டிருந்தான். அந்த மாதமும் பிசாசு வரவில்லை. மறுநாள் காலையில் அங்கே சென்ற அரசனும் குடிகளும் அபுல் பர்க்காத் குரானை ஓதிக்கொண்டிருந்ததைக் கண்டார்கள். உடனே அவர்கள் கோயிலைத் தகர்த்துச் சிலைகளை யும் உடைத்தெறிந்து, இஸ்லாம் மதத்தைத் தழுவினார்கள். பின்னர் அவர்கள் பிற தீவுகளுக்கும் ஆட்களை அனுப்பி அங்கு வாழ்ந்த மக்களும் இஸ்லாத்தைத் தழுவுமாறு செய்தார்கள். அபுல் பர்க்காத் மாலத்தீவிலேயே தங்கிவிட்டான். அவனை அந்தத்

[35] 'சின்னராஜா' என்னும் பெயராய் இருக்கக்கூடும்.

தீவு மக்கள் மிகவும் உயர்வாய் மதித்தார்கள். அவன் இமாம் மாலிக்கின் கோட்பாடுகளைப் பின்பற்றியவன். எனவே, மாலத்தீவு மக்களும் அந்தக் கோட்பாடுகளையே பின்பற்றினார்கள். இன்றைக்கும் அவர்கள் மக்ரீபியரை உயர்வாய் மதித்துப் போற்று கிறார்கள். அதற்குக் காரணமாய் இருந்தவன் அபுல் பர்க்காத் என்னும் மக்ரீபியே. அவன் அங்கே கட்டிய பள்ளிவாசலுக்கு அவன் பெயரே வழங்குகிறது. அந்தப் பெரிய பள்ளிவாசலின் திருவீற்றிருக்கை மாடத்தை அழகு செய்கின்ற பின்னல் வலைத் தட்டியிலுள்ள மரப்பலகை ஒன்றில் 'சுல்தான் அஹமது ஷினுராஜா இஸ்லாம் மதத்தைத் தழுவினார். அதற்குக் காரணமாய் இருந்தவர் பார்பாரியிலிருந்து வந்த அபுல் பர்க்காத் என்னும் மக்ரீபி ஆவார்' என்னும் வாசகம் செதுக்கப் பட்டுள்ளது. மாலத்தீவு மக்கள் செலுத்திய வரிகளுள் மூன்றில் ஒரு பகுதியை வெளிநாட்டுப் பயணிகளுக்குத் தானஞ் செய்வதற் காக சுல்தான் ஒதுக்கி வைத்துவிட்டான். வெளிநாட்டிலிருந்து வந்த ஒருவனுடைய தூண்டுதலால்தானே சுல்தான் இஸ்லாத் தைத் தழுவினான்! அவ்வாறு ஒதுக்கப்பட்ட வரிகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பெயர் அந்த மதமாற்றத்தை நினைவூட்டு வதாய் இருக்கிறது.

மாலத்தீவுகளில் இஸ்லாம் மதம் பரவுவதற்கு முன்னர் அங்கே பிசாசுப்பயம் நிலைபெற்றிருந்தது என்பதை முன்னர்க் கண்டோம். அதனால் அந்தத் தீவுகள் பலவற்றில் வாழ்ந்த மக்கள் அவற்றை விட்டுவிட்டு ஓடத் தொடங்கினார்கள். ஆனால், அங்கு இஸ்லாம் மதம் பரவிய பின்னர்ப் பிசாசைப்பற்றி மக்களுக்கிருந்த அச்சம் அகன்றது. நான் அந்தத் தீவுகளுக்குப் போனபோது பிசாசைப்பற்றிய செய்தியொன்றும் எனக்குத் தெரியாது. ஆனால், ஓரிரவு மக்கள் திடீரென்று 'கடவுளைத்தவிர வேறு கடவுளில்லை; கடவுள் எல்லா வல்லமையும் படைத்தவர்' என்னும் திருமந்திரத்தை உரத்த குரலில் ஓதிக்கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. உடனே தெருவில் இறங்கிப் பார்த்த போது, குழந்தைகள் தங்களுடைய தலைமீது திருக்குரானை வைத்துக்கொண்டிருந்ததையும் மகளிர் செப்புப் பாத்திரங் களைத் தட்டி ஒலியெழுப்பிக் கொண்டிருந்ததையும் கண்டேன். அதைக் கண்டு நான் வியப்படைந்து 'உங்களுக்கெல்லாம் என்ன நேர்ந்துவிட்டது?' என்று வினவினேன். 'நீ கடலைப் பார்க்க வில்லையா?' என்று அவர்கள் என்னைக் கேட்டார்கள். அப்போது தான் நான் கடலைப் பார்த்தேன். அங்கே பெரிய கப்பல் ஒன்று நின்றுகொண்டிருந்தது. அதில் நிறைய விளக்குகளும் எரியும் அடுப்புகளும் இருப்பது போன்ற காட்சியை நான் கண்டேன்.

'அதுதான் பிசாசு; அது மாதத்திற்கு ஒரு முறை வருகிறது. ஆனால், நாங்கள் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறோமோ அதனைச் செய்தால் அது எங்களுக்கு எவ்விதத் தீங்கும் செய்யாமல் ஓடிப்போகிறது' என்று அவர்கள் சொன்னார்கள்.

இந்தத் தீவுகளில் இப்போது நமக்கு வியப்பூட்டும் செய்தியாய் இருப்பது இவற்றை ஒரு பெண்மணி ஆள்கிறாள் என்பதாகும். அவள் பெயர் கதீஜா. அவள் தகப்பன் பெயர் சுல்தான் ஜலாலுதீன் உமர் என்பது. அவன் சுல்தான் சலாஹுத்தீன் சாலி ஹுல் பங்காலி[36] என்பவனுடைய மகன். இந்தத் தீவுகளின் அரசுரிமை முதலில் சலாஹுத்தீன் சாலி ஹுல் பங்காலியின் கையில் இருந்தது. அவனுக்குப்பின் அவனுடைய மகன் சுல்தான் ஜலாலுதீன் உமர் அரசனானான். அவன் இறந்ததும் அரசுரிமை அவனுடைய மகன் ஷஹாபுதீனுக்குச் சென்றது. அப்போது அவன் சிறுவனாய் இருந்தான். அவனுடைய தாயை முஹமதுல் ஹஜ்ரமி[37] என்பவனுடைய மகனும் வாஜீர்ப் பதவி வகித்தவனும் ஆன அப்துல்லா என்பவன் மணந்துகொண்டான். அதனால் சிறுவனாயிருந்த ஷஹாபுதீன் அவன் கைக்குள் அடங்கிவிட்டான். அதே அப்துல்லா கதீஜா சுல்தானாவின் முதற் கணவனான வாஜீர் ஜமாலுதீன் இறந்த பிறகு அவளையும் மணந்துகொண்டான் என்பதைப் பின்பு காண்போம். ஷஹாபுதீனுக்கு அரசுரிமை ஏற்கும் வயது வந்ததும், அவன் தன்னுடைய தாயின் கணவனான வாஜிர் அப்துல்லாவை நாடு கடத்திவிட்டான். அதனால் அப்துல்லா சுவைதுத் தீவில் வசிக்கலானான். அதற்குப் பிறகு அரசு அதிகாரம் முழுதும் சுல்தான் ஷஹாபுதீன் கைக்கு வந்துவிட்டது. அரசியலில் தனக்குத் துணை செய்வதற்காக அவன் விடுதலை பெற்ற அடிமையான ஆலி கல்கி என்பவனை வாஜீராக நியமித்தான். ஆனால், மூன்றாண்டுக்குப் பிறகு அவனையும் சுவைதுத் தீவுக்குத் துரத்திவிட்டான். சுல்தான் ஷஹாபுதீன் பெண்ணாசை மிக்கவன். அதனால், அரசாங்க உயர் அலுவலர்களுடைய மனைவிமாரைத் தேடிக் கொண்டு ஒவ்வோர் இரவும் அவன் வெளியே செல்வது வழக்கம் ஆகிவிட்டது. அதனால் அவன் அரச பதவியிலிருந்து இறக்கப்பட்டது மட்டுமன்றி நாட்டிலிருந்தும் கடத்தப்பட்டான். அவ்வாறு வெளியேற்றப் பட்டவன் ஹல்தத்தனி என்னும் பகுதியில்

அரசி

[36] சலாஹுத்தீன் சாலி வங்கத்திலிருந்து வந்தவன் போலும்—N. V. R.

[37] அரேபியாவில் யெமனிலுள்ள ஹஸ்ரமவுத் என்னும் குக்குலத்தையோ மாகாணத்தையோ நகரத்தையோ சேர்ந்தவனாய் இருக்கலாம்.—N. V. R.

வசித்துக்கொண்டிருந்தபோது அவனுடைய பகைவர்கள் அவனைக் கொன்றுவிட்டார்கள்.

அதற்குப் பிறகு அரச வம்சத்தைக் சேர்ந்தவர்களுள் ஷஹாபுதீனுடைய சகோதரிமார் மூவர் மட்டும் உயிரோடு இருந்தனர். அவர்களுள் மூத்தவள் கதீஜா, அடுத்தவள் மிரியம், அவளுக்கு அடுத்தவள் பாத்திமா. அந்த நிலையில் குடிமக்கள் கதீஜாவை அரசியாக்கினுர்கள். அவளைச் சமயப் பிரசாரகன் ஜமாலுதீன் மணஞ் செய்துகொண்டிருந்தான். கதீஜா அரசியானதும் அவன் வாஜீரானுன். அரசு அதிகாரம் அனைத்தும் அவன் கையிலேயே இருந்தது. எனினும், அரசாணைகள் அனைத்தும் கதீஜாவின் பெயரிலேயே பிறப்பிக்கப்பட்டன, ஜமாலுதீன் தான் வகித்து வந்த சமயப் பிரசாரகப் பதவிக்குத் தன்னுடைய மகன் முஹமதை நியமித்தான். அரசாணைகள் எல்லாம் பனையோலையில் கத்தி போன்ற ஒரு வளைந்த இரும்புக் கருவியால் எழுதப்படுகின்றன. திருக்குரானையும் அறிவியல் நூல்களையும் மட்டுமே காகிதத்தில் எழுதுகிருர்கள். வெள்ளிக் கிழமையிலும் பிற கிழமைகளிலும் நடைபெறுகின்ற தொழுகையின்போது 'ஆண்டவனே, உன்னுடைய தூய அறிவால் பிற மானிடரைக் காட்டிலும் உயர்வாக மதித்து, உன்னுடைய கருணையின் கருவியாக நீ தெரிந்தெடுத்துக் கையாளுகின்ற உன்னுடைய அடிமைக்கு—அதாவது, சுல்தான் சலாஹுதீன் மகளுன சுல்தான் ஜலாலுதீனுடைய மகள் கதீஜாவுக்கு—நீ துணை புரிவாயாக!' என்று வாஜீர் ஜமாலுதீன் வேண்டிக் கொள்கிருன்.

வெளி நாட்டிலிருந்து வருகிறவர்கள் 'தர்' என்று சொல்லப் படும் அத்தாணி மண்டபத்திற்குப் போனுல், கையில் இரண்டு துணிகளை எடுத்துக் கொண்டு போக வேண்டும் என்பது இந்த நாட்டு வழக்கம்; முதலில் ஒரு துணியைக் கீழே போட்டு விட்டு சுல்தானுவை வணங்கவேண்டும். அதன் பிறகு இன்னொரு துணியைக், போட்டுவிட்டு (அவளுடைய கணவனை) வாஜீரை வணங்கவேண்டும். இந்த அரசியின் படையில் உள்ளூர் வாசிகள் சிலர் இருந்தாலும், பெரும்பாலான போர் வீரர்கள் வெளிநாட்டிலிருந்து வந்தவர்கள். அவர்களுடைய தொகை ஆயிரத்துக்குக் குறையாது. போர் வீரர்கள் ஒவ்வொரு நாளும் அத்தாணி மண்டபத்துக்கு வந்து அரசியை வணங்கிவிட்டுத் திரும்பிப் போகிருர்கள். அவர்கள் அரிசியைத்தான் ஊதியமாய்ப பெறுகிருர்கள், அந்த அரிசியை

**அத்தாணி மண்டபம்**

அவர்கள் பந்தரிலிருந்து பெற்றுக் கொள்கிருர்கள். ஒவ்வொரு மாதத்தின் இறுதியிலும் அவர்கள் அத்தாணி மண்டபத்திற்குச் சென்று, வாஜீரை வணங்கி, 'அரசியாருக்கு எங்களுடைய வணக்கத்தைத் தெரிவிக்குமாறும் சம்பளம் கேட்பதற்காக நாங்கள் வந்திருக்கிருேம் என்னும் செய்தியை அவர்களுக்குச் சொல்லுமாறும் தங்களைக் கேட்டுக்கொள்கிருேம்' என்று விண்ணப்பஞ் செய்வார்கள். உடனே அவர்களுக்குச் சம்பளம் தருவதற்குரிய ஆணை பிறப்பிக்கப்படுகிறது. காஜியும் வாஜீர் என்னும் பதவிப் பெயர் உடையவர்களும், போர் வீரர்களைப் போலவே, ஒவ்வொரு நாளும் அத்தாணி மண்டபத்துக்குச் செல்கிருர்கள். அவர்கள் மண்டபத்தில் நின்று தாழ்ந்து வணங்கு கிருர்கள். அவர்கள் அவ்வாறு செய்ததை அலிகள் சென்று அரசியிடம் தெரிவித்த பின்னர் அவர்கள் திரும்பிப் போகிருர்கள்.

**அரசு அலுவலர்கள்**

தலைமை வாஜீருக்கு மாலத்தீவில் கல்கி என்பது பெயர். சுல்தானுவுக்குத் துணை புரிபவர்களுள் முதல்வன் என்று பொருள் படுவது அந்தச் சொல். மாலத்தீவு மக்கள் காஜியை பண்டயார்க்வால்வா என்று சொல் கிருர்கள். யாருக்கு எவ்விதத் தண்டனை அளிப் பதாய் இருந்தாலும் அத்தகைய தண்டனை அளிக்கலாம் என்று தீர்ப்புக் கூறும் அதிகாரம் காஜியின் கையில் தான் இருக்கிறது. ஏனைய அரசு அலுவலர்களைக் காட்டிலும் காஜியைத்தான் மாலத்தீவு மக்கள் அதிகமாய் மதிக்கிருர்கள். அவனுடைய ஆணைகள் சுல்தானுடைய ஆணைகளைப் போலவே—சுல்தானுடைய ஆணைகளுக்கும் மேலாகவே—நிறைவேற்றப் படுகின்றன. அவன் நீதிமன்றத்தில் ஒரு சமுக்காளத்தின்மீது அமர்ந்துகொள்கிருன். மூன்று தீவுகளிலிருந்து அரசுக்குக் கிடைக்கின்ற வருமானம் அவனுடைய சொந்தச் செலவுக்கென ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. இந்த வழக்கம் பழைய சுல்தான் அஹமது ஷினுராஜாவின் காலத்திலிருந்து நடைமுறையில் உள்ளது. மாலத்தீவு மக்கள் சமயப் பிரசாரகனை ஹந்திஜரி என்றும், கருவூலத் தலைவனை பாமல்தாரி என்றும், காவல் துறை நடுவனை பாத்நாயக் என்றும், கப்பல்படைத் தலைவனை மாநாயகன் என்றும் சொல்கிருர்கள். இந்த அலுவலர் அனை வருக்குமே வாஜீர் என்னும் பட்டம் உண்டு. இந்தத் தீவுகளில் சிறைக்கூடம் எதுவும் இல்லை. குற்றவாளிகள் எல்லாம் வாணிகப் பொருள்களைச் சேர்த்து வைக்கும் மண்டிகளில் அடைத்து வைக்கப்படுகிருர்கள். மொராக்கோவில் கிறிஸ்துவக் கைதிகளை அடைத்து வைப்பதைப்போல மாலத் தீவிலும் குற்றவாளிகளைத் தனித்தனிச் சிற்றறைகளில் பூட்டி வைக்கிருர்கள்.

நான் இந்த நாட்டுக்கு வந்தபோது கன்னலூஸ் என்னும் அழகிய தீவில் இறங்கினேன். அங்கே பல பள்ளிவாசல்கள் இருக்கின்றன. அந்தத் தீவில் வாழ்ந்த மிகுந்த பக்திமான் ஒருவருடைய வீட்டில் தங்கினேன். இறைமையியல் வல்லுநரான ஆலி எனக்கொரு விருந்தளித்தார். அவர் ஒரு பெரிய மனிதர். அவருடைய பிள்ளைகள் தங்கள் நேரம் முழுவதையும் கல்வி கற்பதில் கழித்தார்கள். ஜபார் உல் ஹுமுஜ் என்னும் ஊரிலிருந்து வந்து மாலத்தீவில் வாழ்ந்த முஹமது என்பவரை நான் கண்டு பேசினேன். அவரும் எனக்கு விருந்தளித்து 'இப்போது காஜிப் பதவியை வகிப்பதற்கு மஹல்தீவில் ஆளில்லை. ஆதலால் நீர் இப்போது அங்குச் சென்றால் வாஜீர் உம்மை அங்கேயே இருக்குமாறு கட்டாயப் படுத்துவார்' என்று சொன்னார். மாலத் தீவிலிருந்து மா'பாருக்கும் செரந்தீவுக்கும் வங்காளத்துக்கும் அதற்குப் பிறகு சின்னுக்கும் (சீனாவுக்கும்) போவதற்கு நான் திட்டமிட்டிருந்தேன். நான் புண்ணியப் பயணிகளுள் ஒருவராகிய உமருல் ஹனவுரி என்பவருடைய கப்பலில் வந்திருந்தேன். நாங்கள் கன்னலூஸ் தீவில் ஆறுநாள் இருந்தோம். அதன் பிறகு உமருல் ஹனவுரி ஒரு சிறு படகை வாடகைக்கு எடுத்துக் கொண்டு, அரசிக்கும் அவளுடைய கணவனுக்கும் கொடுப்பதற்கான பரிசுப் பொருள்களுடன் மஹலுக்குப் புறப்பட்டார். நானும் அவருடன் போக விரும்பினேன். 'இந்தப் படகு சிறியது. எனவே, உம்மையும் உம்முடைய தோழர்களையும் எங்களுடன் ஏற்றிச் செல்வதற்குப் படகில் இடமில்லை. நீர் மட்டும் வருவதாயிருந்தால் நான் உம்மை அழைத்துக்கொண்டு போகிறேன்' என்று அவர் சொன்னார். ஆனால், நான் அவ்வாறு செய்ய இசையவில்லை. உமர் போய் விட்டார். ஆனால், காற்று அவர் போன திசைக்கு எதிராய் வீசியதால் அவர் மிகுந்த துன்பத்திற்குள்ளானார். எனவே நான்கு நாள் கழித்துக் கன்னலூசுக்கே திருப்பி விட்டார். பின்னர், அவர் என்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, நானும் என்னுடைய தோழர்களும் அவருடன் மஹல் தீவுக்குப் பயணஞ் செய்ய வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொண்டார்.

கன்னலூஸ்

நாங்கள் காலையிற் புறப்பட்டு நண்பகலில் ஏதோ ஒரு தீவை அடைந்தோம். அங்கிருந்து புறப்பட்டு இரவில் இன்னொரு தீவில் தங்கினோம். இவ்வாறு நான்கு நாள் பயணஞ் செய்தபிறகு தைம் பகுதிக்குப் போய்ச்சேர்ந் தோம். அங்கு ஹிலால் ஆளுநராய் இருந்தான். அவன் எனக்கு மரியாதை செய்து விருந்தளித்தான். அதன்பின்

தைம்

அவன் நான்கு ஆட்களை உடன் அழைத்துக் கொண்டு என்னைக் காண வந்தான். அந்த ஆட்களுள் இருவர் தோளில் வைத்துக் கொண்டிருந்த கழியில் நான்கு கோழிகள் தொங்கிக்கொண் டிருந்தன. இன்னும் இருவர் சுமந்து வந்த கழியில் சுமார் பத்துத் தேங்காய்கள் தொங்கிக் கொண்டிருந்தன. அந்த அற்பப் பொருள்களுக்கு அவர்கள் கொடுத்த மதிப்பைக் கண்டு நான் வியப்படைந்தேன். ஆனால் அவர்கள், என்பால் தங்களுக் கிருந்த மதிப்பைக் காட்டுவதற்காக அவ்வாறு செய்தார்கள் என்று கேள்விப்பட்டேன்.

அந்தத் தீவிலிருந்து நாங்கள் மீண்டும் எங்கள் பயணத்தைத் தொடங்கினோம். ஆறும் நாள் நாங்கள் நற்குணம் வாய்ந்த பெரிய மனிதரான உஸ்மான் வசித்த தீவை அடைந்தோம். அவர் எங்களை மதிப்புடன் வரவேற்றுத் தக்கபடி உபசரித்தார். எட்டாம் நாள் நாங்கள் வாஜீர் தல்மதிக்குச் சொந்தமான தீவை அடைந்தோம். இறுதியில், பத்து நாள் பயணத்திற்குப்பின் நாங்கள் சுல்தானுவும் அவளுடைய கணவனும் வசித்த தீவான மஹலை அடைந்தோம். அந்தத் தீவில் வாழும் மக்கள் இசைவு தந்தாலன்றி யாரும் கரையிறங்கக் கூடாது என்பது விதி. எனவே அவர்களுடைய இசைவு பெற்ற பின் நாங்கள் துறைமுகத்திலிருந்து கரைக்குச் சென்றோம். உடனே நான் ஏதாவதொரு பள்ளிவாசலுக்குப் போகவேண்டும் என்று சொன்னேன், ஆனால், கரையிற் காத்துக் கொண்டு இருந்த அடிமைகள் நான் முதலில் வாஜீரைக் காண்பது இன்றி யமையாதது என்று சொன்னார்கள். வாஜீர் என்னை அந்தத் தீவிலேயே தங்குமாறு கட்டாயப்படுத்தக் கூடும் என்று நான் எண்ணியதால், என்னைப்பற்றி விசாரித்தால் தனக்கு ஒன்றும் தெரியாது என்று சொல்லிவிடுமாறு கப்பல் தலைவனுக்குச் சொல்லியிருந்தேன். ஆனால், டில்லியில் நான் காஜியாய் இருந்த செய்தியை எவனோ ஒருவன் மாலத்தீவு மக்களுக்கு கடித மூலம் தெரியப்படுத்தி இருந்தான் என்பது எனக்குத் தெரியாது. நாங்கள் நீதிமன்றத்தின் கூடத்தை அடைந்ததும், மூன் வாயிலி லிருந்து மூன்றும் கதவின் அருகில் போடப்பட்டிருந்த நாற்காலி களில் அமர்ந்துகொண்டோம். சிறிது நேரத்தில் காஜி ஈசாவுல் யெமனி அங்கு வந்து எனக்கு வணக்கம் தெரிவித்தார். நான் அப்போது அங்கு வந்துசேர்ந்த வாஜீருக்கு என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டேன். அதன் பிறகு கப்பல் தலைவனை இப்ராஹிம் (உமர் என்று முன்னர்க் குறிப்பிடப்பட்டவன்) பத்துத் துணிகளைக் கையில் எடுத்துக்கொண்டு முன்னே சென்று அரசியை வணங்கி ஒரு துணியைக் கீழே போட்டான். பிறகு

முழங்காலை வளைத்து வாஜீரை வணங்கி, இன்னொரு துணியைக் கீழே போட்டான். இவ்வாறே அதிகாரிகள் அனைவரையும் வணங்கினான். அவர்கள் என்னைப்பற்றி விசாரித்தபோது தனக்கு ஒன்றும் தெரியாது என்றும் சொல்லிவிட்டான்.

அவர்கள் எங்களுக்குத் தங்கள் ஊர் வழக்கப்படி வெற்றிலை கொடுத்துப் பன்னீர் தெளித்து வரவேற்றார்கள்.

**வரவேற்பு** பின்னர் வாஜீர் எங்களுக்கென ஒரு வீட்டை ஒதுக்கிவைத்து உணவுப் பொருள்களையும் அனுப்பினான். அவற்றுள் ஒரு பெரிய பாத்திரம் நிறைய அரிசியும், உப்பிட்டுக் காயவைத்த இறைச்சியும், கோழியும், மீனும், நெய்யும் இருந்தன. அடுத்த நாள் நானும் கப்பல் தலைவனும் காஜி ஈசாவுல் யெமனியுடன் சேர்ந்து தீவின் ஒரு கோடியில் இருந்த சத்திரத்திற்குப் போனோம். அந்தச் சத்திரத்தை நிறுவியவர் உயர்குணம் வாய்ந்த ஷேக் நஜீப் என்பவர் ஆவார். அங்கிருந்து நாங்கள் திருபிவந்து இரவில் எங்கள் விடுதியை அடைந்தோம். அடுத்த நாள் வாஜீர் எனக்கு ஓர் ஆடையையும் முன்னாள் அனுப்பியவை போன்ற உணவுப் பொருள்களையும் அனுப்பினான், அன்றியும். அன்று தேங்காயும், தேங்காயிலிருந்து எடுக்கப்பட்ட தேனும் எங்களுக்கு அனுப்பப்பட்டன. அந்தத் தேனை அவ்வூர் மக்கள் குர்பானி (சர்க்கரை நீர்) என்ற சொல்கிறார்கள். மேலும், என்னுடைய செலவுக்காக வாஜீரின் ஆட்கள் 1,00,000 சோழியும் கொண்டுவந்தார்கள். பத்து நாளுக்குப் பிறகு இலங்கையிலிருந்து வந்த கப்பல் ஒன்று மஹல் தீவை அடைந்தது. அந்தக் கப்பலில் எனக்குத் தெரிந்தவர்களான பாரசீகப் பக்கிரிகளும் அரபுப் பக்கிரிகளும் பலர் இருந்தனர். அவர்கள் என்னைப்பற்றிய செய்திகளை வாஜீரின் ஆட்களுக்குத் தெரியப்படுத்திவிட்டார்கள். தன்னுடைய ஆட்களின் வாயிலாய் அந்தச் செய்திகளை அறிந்த வாஜீர் என்னுடைய வருகைக்காக மேலும் மகிழ்ந்தான். ரம்ஜான் தொடக்கத்தில் வாஜீர் என்னைத் தன்னிடம் வருமாறு சொல்லியனுப்பினான். நான் போய்ச் சேர்வதற்கு முன்னரே வாஜீரும் பிற தலைவர்களும் மண்டபத்தில் கூடியிருந்தார்கள். அவர்கள் மேசைகளுக்கு முன் அமர்ந்திருந்தார்கள். அந்த மேசைகளின் மீது பணியாட்கள் உணவு படைத்துக் கொண்டிருந்தார்கள். வாஜீரோடு காஜி ஈசாவும் வாஜீர் பாமல்தாரியும் (கருவூலத் தலைவன்) வாஜீர் உமர் தஹர்தும் (படைத் தலைவன்) அமர்ந்திருந்தார்கள். தலைமை வாஜீர் என்னைத் தன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டான். அரிசிச் சோறு, கோழிக் கறி, நெய், மீன், உப்பிட்டுக் காயவைத்த மீன், வேகவைத்த வாழைப்பழம் ஆகியவை மாலத் தீவு மக்கள்

உண்ணும் பொருள்கள். அந்தப் பண்டங்களை உண்ட பிறகு அவர்கள் நறுமணப் பொருள்கள் கலந்த தென்னந் தேறலைக் குடிக்கிறார்கள். அதனால் உணவு எளிதில் செரிக்கும் என்று அவர்கள் சொல்கிறார்கள்.

**பக்கிரிகளுக்கு விருந்தளித்தல்**

ரம்ஜான் பத்தாம் நாளன்று அந்த வாஜீரின் மருமகன் இறந்து போனான். அவனுடைய மனைவி (அதாவது, அந்த வாஜீரின் மகள்) முன்னர் சுல்தான் ஷஹாப் புதீனை மணந்திருந்தாள். ஆனால், அவள் மிகவும் இளவயதினள். ஆதலால், முதற் கணவனும் அவளோடு வாழ்ந்ததில்லை. இரண்டாம் கணவனும் (ரம்ஜான் பத்தாம் நாள் செத்தவன்) அவளோடு வாழ்ந்ததில்லை. எனவே வாஜீர் தன் மகளைத் தன் வீட்டுக்கே அழைத்துக்கொண்டு, அவள் அது வரையிலும் வசித்த வீட்டை எனக்குக் கொடுத்துவிட்டான். அந்த வீடு அந்தத் தீவிலிருந்த மிகச் சிறந்த வீடுகளுள் ஒன்று. ஆதாமின் திருவடியைப் பார்ப்பதற்காக இலங்கைத் தீவுக்கு யாத்திரை போய்விட்டுத் திரும்பி வந்திருந்த பக்கிரிகளுக்கு விருந்து கொடுப்பதற்கு வாஜீரின் இசைவு கேட்டான். வாஜீர் இசைவு தந்தது மட்டுமன்றி, ஐந்து ஆடுகளையும் அனுப்பினான். மாலத்தீவில் ஆடு வளர்ப்பவர் யாரும் இல்லை. அவை மா'பார், மலபார், மக்தஷ ஆகிய இடங்களிலிருந்து மாலத் தீவுகளில் இறக்குமதி ஆயின. மேலும், அரிசி கோழி, நெய், நறுமணப் பொருள்கள் ஆகியவற்றையும் வாஜீர் அனுப்பினான். அவற்றை எல்லாம் மாநாயகனான வாஜீர் சுலைமான் வீட்டுக்கு நான் அனுப்பினேன். அவன் அவற்றுடன் இன்னும் சில பொருள்களையும் சேர்த்து அவனுடைய வீட்டிலேயே அவற்றைச் சமைப்பதற்கு ஏற்பாடு செய்தான். சமையல் மிகவும் நன்றாயிருந்தது. சமைத்த உணவு மட்டுமன்றிப் பாத்திரங்கள். சமுக்காளங்கள் ஆகியவற்றையும் மாநாயகன் என் வீட்டுக்கு அனுப்பிவைத்தான். அந்த நாட்டு வழக்கப்படி நாங்கள் சுல்தானாவின் மாளிகையில் தலைமை வாஜீருடனும் பிற வாஜீர்களுடனும் சேர்ந்து பட்டினியை முறித்துக்கொண்டோம். என் வீட்டில் நடைபெறவிருந்த விருந்தில் எனக்கு உதவி செய்வதற்காக வாஜீர்கள் சிலரை என் வீட்டிற்கு அனுப்புமாறு நான் தலைமை வாஜீரை வேண்டினேன். தானே வருவதாக அவன் சொன்னான். எனவே, நான் வீட்டிற்குத் திரும்பினேன். ஆனால் நான் என் வீட்டை அடையு முன்னரே, பிற வாஜீர்கள் ஏனைய பெரிய மனிதர்கள் ஆகியவர்களுடன் தலைமை வாஜீர் என் வீட்டிற்கு வந்துவிட்டான். மரத்தாலான உயர்ந்த விதான மண்டபம் ஒன்றில் அவன் அமர்ந்திருந்தான். விருந்துக்கு வந்த

பிற வாஜீர்கள் தலைவர்கள் ஆகிய அனைவரும் தலைமை வாஜீரை வணங்கி அவன்முன் ஒவ்வொரு துணியைப் போட்டார்கள். அவ்வாறு விழுந்த துணிகளின் தொகை சுமார் நூறு இருக்கும். அவற்றையெல்லாம் பக்கிரிகள் எடுத்துக் கொண்டார்கள். அதற்குப் பிறகு உணவு படைக்கப்பட்டது. அனைவரும் உண்டு முடிந்தபின் திருக்குரானை ஓதத் தெரிந்தவர்கள் அதனை இனிய குரலெடுத்து ஓதினார்கள். பின்னர் ஆடலும் பாடலும் நிகழ்ந்தன. அதற்குப் பிறகு தீ வளர்ப்பதற்கு நான் ஏற்பாடு செய்தேன். பக்கிரிகள் அந்தத் தீயின்மீது வெறுங்காலுடன் நடந்தார்கள். அவர்களுட் சிலர், மிட்டாய் தின்பதைப் போல, எரிகின்ற கரித்துண்டுகளைத் தம் வாயில் போட்டு விழுங்கினார்கள்.

விருந்தும் அதனையொட்டிய நிகழ்ச்சிகளும் முடிவதற்கு இரவு நெடுநேரம் ஆகிவிட்டது. அதன்பின் வாஜீர் வீட்டுக்குப் போகப் புறப்பட்டான். நானும் அவனுடன் சென்றேன். வழியில் அரசுக்குச் சொந்தமான தோட்டம் ஒன்றைக் கண்டோம். 'இந்தத் தோட்டத்தை உமக்குக் கொடுத்துவிடுகிறேன். அதில் உமது வசதிக்காக ஒரு வீடும் கட்டிக் கொடுக்கிறேன்' என்று வாஜீர் சொன்னான். நான் அவனைப் பாராட்டி அவனுக்கு நன்மையெல்லாம் அருளுமாறு ஆண்டவனை வேண்டினேன்.

**அடிமைப் பெண்**

அடுத்த நாள் வாஜீர் எனக்காக அடிமைப் பெண் ஒருத்தியை அனுப்பினான். அவளை அழைத்துக்கொண்டு வந்த பணியாள் 'இந்தப் பெண்ணைத் தங்களுக்குப் பிடித்தால் வைத்துக் கொள்ளுமாறும், பிடிக்காவிட்டால் மராத்திய மங்கை ஒருத்தியை அனுப்புவதாகவும் வாஜீர் சொல்லியனுப்பினார்' என்று சொன்னான். 'மராத்தியப் பெண்ணே எனக்கு வேண்டும்' என்று நான் சொன்னேன். எனவே வாஜீர் மராத்தியப் பெண் ஒருத்தியை அனுப்பினான். அவள் பெயர் குலிஸ்தான் என்பது. 'தோட்டப்பூ' என்பது அந்தப் பெயரின் பொருள். இன்னும் சரியாய்ச் சொல்ல வேண்டுமானால், 'பூந் தோட்டம்' என்று சொல்ல வேண்டும். அவளுக்குப் பாரசீக மொழி தெரியும். நான் அவளை மிகவும் விரும்பினேன். மாலத் தீவு மக்கள் பேசும் மொழி எனக்குத் தெரியாது.

அடுத்த நாள் சோழ மண்டலக் கரையைச் சேர்ந்த அடிமைப் பெண் ஒருத்தியை வாஜீர் அனுப்பினான். அவள் பெயர் அன்பரி என்பதாகும். அதாவது, அம்பரைப் போன்ற (கறுப்பு) நிறமுடையவள் என்று அந்தப் பெயர் பொருள்படும். அடுத்த நாள் இரவில், தொழுகைக்குப் பின்னர், வாஜீர்

தன்னுடைய பணியாட்கள் சிலருடன் வந்தான். பிற பணியாட்களை வெளியே நிறுத்திவிட்டு இரு சிறு அடிமைகளுடன் வீட்டிற்குள் வந்தான். நான் அவனை வணங்கினேன். அவன் என்னுடைய நலன் பற்றி விசாரித்தான். அவனுக்கு நான் என் நன்றியைத் தெரிவித்துவிட்டு, அவனுக்கு எல்லா நலன்களையும் அருளுமாறு ஆண்டவனை வேண்டினேன். அவனுடைய அடிமைகளுள் ஒருவன் தோல் பை ஒன்றனை அவன்முன் வைத்தான். அதிலிருந்து பட்டாடைகள் சிலவற்றையும் முத்தும் அணிமணியும் நிறைந்த பேழை ஒன்றையும் எடுத்து வாஜீர் எனக்குக் கொடுத்தான். பின்னர், 'இவற்றையெல்லாம் அடிமைப் பெண்ணோடு சேர்த்து நேற்றே அனுப்பியிருந்தால் அவள் 'இவையெல்லாம் என் உடைமைகள்; இவற்றை நான் என்னுடைய எஜமானர் வீட்டிலிருந்து கொண்டு வந்தேன்' என்று இந்தப் பொருள்களுக்கெல்லாம் உரிமை கொண்டாடுவாள், ஆனால், இப்போது இவை உம்முடைய உடைமைகள். நீர் அவளுக்கு இவற்றை வழங்கலாம்' என்று வாஜீர் சொன்னான். நான் வாஜீருடைய நலனுக்காக இறைவனை வழுத்திவிட்டு அவனுக்கு என் நன்றியைத் தெரிவித்தேன்.

மாநாயகனுன வாஜீர் சுலைமான் தன் மகளை எனக்கு மணஞ் செய்து கொடுக்க விரும்புவதாய்ச் சொல்லியனுப்பினான். அந்தத் திருமணத்திற்கு இசைவு தருமாறு நான் தலைமை வாஜீர் ஜமாலுதீனை வேண்டிக் கொண்டேன். இந்த வேண்டுகோளை ஜமாலுதீனுக்குத் தெரிவிப்பதற்காகச் சென்ற என்னுடைய பணியாள் திரும்பி வந்து, 'இந்தத் திருமணம் நடப்பதைத் தலைமை வாஜீர் விரும்பவில்லை. தம்முடைய மகள் சட்டப்படி கைம்மை காக்க வேண்டிய காலம் முடிந்ததும் அவளையே தங்களுக்குத் திருமணஞ் செய்து வைக்க அவர் விரும்புகின்றார்' என்று என்னிடம் சொன்னான். ஆனால், நான் அந்தத் திருமணத்தை விரும்பவில்லை. அவள் முன்னர் மணந்து கொண்ட கணவர் இருவரும் அவளோடு உடலுறவு கொள்வதற்கு முன்னரே இறந்து போயினர். அதைப் போலவே எனக்கும் தீங்கு நேரக்கூடும் என்று நான் அஞ்சினேன். இதற்கிடையில் நான் காய்ச்சலில் படுத்துவிட்டேன். மாலத் தீவுக்கு வருகிறவர் அனைவர்க்கும் இத்தகைய நோய் வருவது வழக்கம். நான் மாலத் தீவை விட்டுப் போய்விடுவது என்று முடிவு செய்து, என்னிடமிருந்த அணிமணிகளுள் சிலவற்றை விற்று, அவற்றிற்குக் கிடைக்கக்கூடிய சோழிகளைப் பெற்று வங்காளத்திற்குப் போவதற்காக ஒரு கலத்தையும் வாடகைக்கு எடுத்துக் கொண்டேன். அதற்குப் பிறகு நான் வாஜீரிடம் விடைபெற்றுக்

கொள்ளப் போனேன். அப்போது வாஜீரிடம் பேசிவிட்டு வந்த காஜி, 'நீர் இங்கிருந்து போவதானால் நாங்கள் உமக்குக் கொடுத்த பொருள்களைத் திருப்பிக் கொடுத்துவிட்டுப் போகலாம்' என்று வாஜீரின் பெயரால் என்னிடம் சொன்னார். 'எனக்கு வாஜீர் கொடுத்த அணிமணிகளுள் சிலவற்றை விற்றுச் சோழிகளை வாங்கியுள்ளேன். அவற்றை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்' என்று நான் சொன்னேன். வாஜீரிடம் மீண்டும் பேசிவிட்டு வந்த காஜி 'உமக்கு நாங்கள் பொன்னைக் கொடுத்தோம், சோழியையல்ல, என்று வாஜீர் சொல்கிறார்' என்று சொன்னார். 'அப்படியானால், சோழிகளை விற்றுவிட்டுப் பொன்னைத் திருப்பித் தருகிறேன்' என்று சொல்லிவிட்டுச் சோழிகளை விற்பனை செய்வதற்காக நான் வணிகரைத் தேடிச் சென்றேன். ஆனால், நான் மாலத் தீவை விட்டுப் போவதைத் தடுக்க விரும்பிய வாஜீர் என்னுடைய சோழிகளை யாரும் வாங்கக்கூடாது என்று வணிகரிடம் சொல்லிவிட்டான். பின்னர் வாஜீருடைய நண்பன் ஒருவன் என்னைக் கண்டு, 'நீர் இங்கேயே இருப்பதற்கு இசைந்தால் உமக்கு வேண்டிய அனைத்தையும் தருவதாக வாஜீர் சொல்கிறார்.' என்று கூறினான். அங்கே இருப்பதற்கு நானே மனமுவந்து இசையாவிட்டால் அவ்வாறு செய்வதற்கு அவர்கள் என்னைக் கட்டாயப்படுத்துவார்கள். நான் அப்போது அவர்களுடைய கையில் மாட்டிக் கொண்டிருந்தேன். எனவே, 'பிறர் கட்டாயத்திற்காக இருப்பதைக் காட்டிலும் நாமாகவே இருந்துவிடுவது சிறந்தது' என்று நான் எண்ணி, 'நான் இங்கேயே இருக்கிறேன்' என்று சொல்லியனுப்பினேன். அந்தச் செய்தியைக் கேட்ட வாஜீர் மிகவும் மகிழ்ந்து போனான். உடனே என்னைத் தன்னிடம் அழைத்து வருமாறு ஓர் ஆளை அனுப்பினான். நான் சென்று அவனைக் கண்டவுடன் அவன் எழுந்து வந்து என்னைத் தழுவி 'நீர் எங்களருகில் இருக்க வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம், ஆனால், நீர் எங்களை விட்டுப் போக விரும்புகிறீரே' என்று சொன்னான். நான் அவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். பிறகு, 'நான் இங்கே இருக்க வேண்டுமென்றால் நீங்கள் சில நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்று நான் சொன்னேன். நிபந்தனைகளைச் சொன்னால் அவை ஏற்றுக் கொள்ளப்படும் என்று வாஜீர் சொன்னான். 'நான் இந்த ஊரில் நடந்து செல்ல விரும்பவில்லை' என்றேன். உடனே வாஜீர் எனக்கு ஒரு குதிரையைக் கொடுத்தான். இந்த ஊரில் வாஜீர்களைத் தவிர வேறு யாரும் குதிரைமீது செல்வதில்லை. எனவே, நான் குதிரையேறிச் செல்லத் தொடங்கியதும் பெரியவர் சிறியவர் என்ற பாகுபாடின்றி, அனைவருமே என்பின் வரத்தொடங்கினர்,

அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பு அவ்வளவு பெரியதாயிருந்தது. அதனால் நேர்ந்த தொல்லையைத் தாங்க முடியாமல் நான் வாஜீரிடம் முறையிட்டேன். உடனே யாரும் என்னைப் பின் தொடரக்கூடாதென்று வாஜீர் 'தன்குரா' அடித்துத் தெரியப் படுத்தினான். 'தன்குரா' என்பது பித்தளையால் ஆன தட்டுப் போன்றது. அதன்மீது இரும்புக் கம்பியால் அடித்தால் அதனால் உண்டாகிற ஒலி நெடுந்தூரம் கேட்கிறது. அதனை அடித்து ஒலி உண்டாக்கிய பின்னர், அரசு அலுவலர் என்ன செய்தியை மக்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகின்றனரோ, அந்தச் செய்தியைத் தெரியப்படுத்துகின்றனர்.

'நீர் சிவிகையில் செல்வது நல்லது என்பது எம் கருத்து. அதில் செல்ல விருப்பமில்லாவிட்டால், குதிரை மீது செல்லலாம். இப்போது நம்மிடம் ஆண் குதிரை ஒன்றும் பெண் குதிரை ஒன்றும் இருக்கின்றன. நீர் எதை வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ளலாம்' என்று வாஜீர் என்னிடம் தெரியப் படுத்தினான். நான் பெண் குதிரையை வாங்கிக் கொண்டேன். 'என்னிடமுள்ள சோழிகளை என்ன செய்வது?' என்று கேட்டேன்.' 'உம்முடைய தோழர்களுள் யாரிடமேனும் அவற்றைக் கொடுத்து வங்காளத்தில் விற்பனை செய்துவிட்டு வருமாறு சொல்லலாமே' என்று வாஜீர் சொன்னான்.' 'நான் அனுப்பும் ஆளுடன் உம்முடைய ஆள் ஒருவனையும் துணைக்கு அனுப்பினால் நன்றாயிருக்கும்' என்று நான் சொன்னேன். வாஜீர் அவ்வாறு செய்வதற்கு இசைவு தந்தான். ஆகவே, என்னுடைய தோழனும் பர்ஹானுடைய மகனும் ஆகிய அபு முஹமது என்பவனிடம் என்னுடைய சோழிகளைக் கொடுத் தனுப்பினேன். வாஜீரும் புனிதப் பயணி ஆலியை[88] அபு முஹமதுடன் அனுப்பினான். ஆனால், கடற் கொந்தளிப்பு மிகுதியாய் இருந்ததால் மாலுமிகள் கப்பலில் இருந்த சரக்குகள் மட்டுமன்றிப் பாய் மரம், உணவு, குடிநீர் ஆகிய அனைத்தையும் கடலில் எறிந்துவிட்டார்கள். பதினாறு நாள் அவர்களுடைய கப்பல் பாயும் பாய்மரமும் இன்றிக் கடலில் தத்தளித்த பின்னர் இலங்கைத் தீவை அடைந்தது. அதற்குள் சோறும் நீரும் இன்றிக் கப்பல் பயணிகளும் மாலுமிகளும் மிகுந்த துன்பமும் சோர்வும் அடைந்துவிட்டார்கள். ஓராண்டுக்குப் பின் என் தோழன் அபு முஹமது திரும்பிவந்தான். அவன் இலங்கையில் இருந்தபோது ஆதாமின் திருவடியைக் கண்டு வணங்கியதாக என்னிடம் சொன்னான்.

[88] அல்ஹஜ் ஆசி—கிப்.

ரம்ஜான் முடிந்த பிறகு வாஜீர் எனக்கு ஓர் ஆடையை அனுப்பினான். அதற்குப் பிறகு நாங்கள் தொழுகைக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த இடத்திற்குச் சென்றோம். வாஜீரின் மாளிகையிலிருந்து தொழுகை மண்டபத்திற்குச் செல்கின்ற வழி முழுவதும் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. தரையில் துணி விரிக்கப்பட்டிருந்தது. அதன் இருபுறத்திலும் குவியல் குவியலாகச் சோழிகள் கொட்டப்பட்டிருந்தன. வழியிலிருந்த அமீர்கள் பிரபுக்கள் ஆகியவர்களுடைய வீடுகள் வாழை கமுகு தென்னை முதலியவற்றால் அழகு செய்யப் பட்டிருந்தன. சாலையின் இரு மருங்கிலும் இருந்த மரங்களில் கயிறுகளைக் கட்டி அவற்றில் தென்னங் குலைகளைத் தொங்க விட்டிருந்தார்கள். அவை சாலையின் குறுக்கே தலைக்குமேல் அழகாகத் தொங்கிக் கொண்டிருந்தன. வீட்டுத் தலைவர்கள் வீட்டின்முன் நின்று, வாஜீர் தங்கள் வீட்டிற்குமுன் வந்து சேர்ந்ததும், ஒரு பட்டுத் துணியையோ நூல் துணியையோ அவன்முன் போட்டார்கள். அவ்வாறு போடப்பட்ட துணி களையும் ஆங்காங்கே குவிக்கப்பட்டிருந்த சோழிகளையும் வாஜீரின் அடிமைகள் எடுத்துக் கொண்டார்கள். வாஜீர் எகிப்தில் நெய்யப்பட்ட கம்பளி ஆடையை உடலில் அணிந்து, தலையில் தலைப்பாகை தரித்து, கழுத்தில் பட்டுக் குட்டை கட்டி, காலில் செருப்பணிந்து நடந்து சென்றான், அவனுக்கு நிழல் தருவதற் காகப் பணியாட்கள் நான்கு குடைகளை அவன் தலைக்குமேல் பிடித்துக்கொண்டு சென்றார்கள். அவனுடன் சென்ற ஏனைய மனிதர் அனைவருமே வெறுங்காலுடன் நடந்து சென்றனர். எக்காளமும் கொம்பும் குடமுழவும் அவனுக்கு முன் முழங்கின. போர்வீரர்கள் 'ஆண்டவன் பெரியவன்' என்று கத்திக்கொண்டு அவனுக்கு முன்னும் பின்னும் சென்றார்கள். இவ்வாறு ஊர்வலம் வழிபாட்டு மண்டபத்தை அடைந்தது.

தொழுகை முடிந்தபின் வாஜீரின் மகன் சமயக் கருத்துகள் சிலவற்றை விளக்கிச் சொற்பொழிவாற்றினான். அது முடிந்ததும் வாஜீர் சிவிகை ஒன்றில் ஏறிக்கொண்டான். அப்போது, வழக்கம் போல, பிற வாஜீர்களும் அமீர்களும் அவனுடைய சிவி கையின்முன் துணிகளைப் 'போட்டார்கள். (முன்பெல்லாம் வாஜீர் கள் சிவிகையில் ஊர்ந்து செல்லமாட்டார்கள். அரசர் மட்டுமே சிவிகை ஏறலாம் என்பது மரபு.) இந்தச் சீரெல்லாம் முடிந்ததும் பணியாட்கள் சிவிகையைத் தூக்கிக் கொண்டார்கள். நான் என் குதிரைமீது ஏறிக்கொண்டேன். இவ்வாறு நாங்கள் மாளி கைக்குப் போய்ச்சேர்ந்தோம். தலைமை வாஜீர் உயர்ந்த இருக்கை ஒன்றில் அமர்ந்திருந்தான். அவனருகில் பிற வாஜீர்

களும் அமீர்களும் அமர்ந்திருந்தார்கள். அடிமைகள் வாள், கேடயம், கழி ஆகியவற்றைக் கையில் ஏந்திக் கொண்டு நின்றார் கள். பின்னர் உணவு படைக்கப்பட்டது. அது முடிந்ததும் வெற்றிலையும் பாக்கும் வழங்கப்பட்டன. அதற்குப் பிறகு சந்தனம் கொடுக்கப்பட்டது. விருந்து முடிந்ததும் விருந்தினர் உடலெல்லாம் சந்தனம் பூசிக்கொள்வது வழக்கம். அன்றைய விருந்தில் சார்டின் வகையைச் சேர்ந்த சிறிய கடல் மீனும் படைக்கப்பட்டது. அது உப்பிட்டுக் காயவைக்கப்பட்டிருந்தது. ஆனால் அதனைச் சமைக்காமலே படைத்தார்கள், அது கூலத்தி லிருந்து (கொல்லத்திலிருந்து) அன்பளிப்பாக வந்தது. இவ்வகை மீன் மலபாரில் அதிகமாய்க் கிடைக்கிறது. தலைமை வாஜீர் ஒரு மீனை எடுத்து உண்ணத் தொடங்கினான், அதே சமயத்தில் 'இந்த மீனைத் தின்றுபாரும்; இது நம் ஊரில் கிடைப்பதில்லை' என்று என்னிடம் சொன்னான். 'நான் இதனை எப்படித் தின்ன முடியும்? இது சமைக்கப்படவில்லையே' என்று சொன்னேன். 'இது சமைக்கப்பட்டதுதான்' என்று வாஜீர் சொன்னான். 'இந்த மீனை எனக்கு நன்றாய்த் தெரியும். இது எங்கள் ஊரில் ஏராளமாய்க் கிடைக்கிறது' என்று நான் சொன்னேன்.

**என்னுடைய திருமணம்; நான் காஜியாக நியமிக்கப்படல்:**

ஷவ்வால் மாத இரண்டாம் நாள் மாநாயக சுலைமானுடைய மகளைத் திருமணஞ்செய்து கொள்ள நான் இசைந்தேன். தலைமை வாஜீரின் மாளிகையில், அவன் முன்னிலையில் அந்தத் திருமணம் நடக்க வேண்டுமென்று நான் விரும்பினேன். அவனும் அதற்கி சைந்து, வழக்கப்படி, வெற்றிலை பாக்கும் சந்தனமும் கொடுத்து, அழைக்க வேண்டியவர்களை அழைத்தான். மணவினை தொடங்கும் நேரம் வந்தது. விருந்தினர் காத்துக் கொண் டிருந்தனர். ஆனால் சுலைமான் வரவில்லை. அவனை அழைத்து வர ஆள் அனுப்பினார்கள்; அவன் வரவில்லை. மீண்டும் ஓர் ஆளை அனுப்பினார்கள்; அப்போதும் அவன் வரவில்லை. தன்னுடைய மகளின் உடல் நலம் சரியாயில்லை என்று சொல்லி யனுப்பி விட்டான். ஆனால், அவனுடைய மகள் திருமணஞ் செய்து கொள்ள விரும்பவில்லை என்றும், அந்த விஷயத்தில் தன்னுடைய விருப்பப்படி நடப்பதற்கு அவளுக்கு உரிமையுண்டு என்றும் தலைமை வாஜீர் என்னிடம் இரகசியமாய்ச் சொல்லி விட்டு, 'இத்தனை விருந்தினர் வந்திருக்கின்றனரே, இப்போது என்ன செய்யப் போகிறீர்? சுல்தானுவின் மாற்றாந்தாயை மணந்து கொள்கிறீரா?' என்று கேட்டான். (தலைமை வாஜீரின் மகன் அந்தப் பெண்ணின் மகளை மணந்து கொண்டிருந்தான்.)

நான் இசைந்தேன். உடனே காஜியையும் ஆவணப் பதிவாள ரையும் அழைத்து வருவதற்கு வாஜீர் ஆள் அனுப்பினான். இஸ்லா மதவாசகங்கள் ஓதப்பட்டன. வாஜீர் திருமண அன்பளிப்பை வழங் கினான். சில நாட்களுக்குப்பின் என்னுடைய புது மனைவி என் வீட்டுக்கு வந்தாள், அவள் மிகவும் உயர்ந்த குணம் படைத்தவள். அவள் முதலில் என் உடலுக்கு வாசனைத் தைலங்களைப் பூசினாள். பின்னர் என் ஆடைகளுக்கும் நறுமணமூட்டினாள். அந்த வேலை களைச் செய்யும்போது அவள் சிறிதும் முகஞ் சுளிக்கவில்லை. எப்போதும் புன்முறுவலுடன் காணப்பட்டாள்.

அவளைத் திருமணஞ் செய்துகொண்டபின் நான் காஜிப் பதவியை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று வாஜீர் என்னை வற்புறுத்தினான். அதற்கு ஒரு முக்கியமான காரணம் இருந்தது. இறந்து போனவர்களுடைய உடைமைகளை உரியவர் களுக்குப் பகிர்ந்து கொடுக்கும்போது சொத்தில் பத்தில் ஒரு பகுதியைக் காஜி எடுத்துக் கொள்வது வழக்கமாய் இருந்தது. அவ்வாறு செய்வது தவறு என்று நான் அப்போது காஜிப் பதவியை வகித்தவரிடம் எடுத்துச் சொல்லி அவரைக் கண்டித் தேன். 'வாரிசுதாரர்களுடன் கலந்து பேசி, ஏதாவது ஒரு தொகையை உமக்குச் சேரவேண்டிய கட்டணம் என்று நிர்ண யித்து. அதனை மட்டும் நீர் எடுத்துக்கொள்ள வேண்டும்' என்று நான் அவரிடம் சொன்னேன். அவர் எந்த வேலையையும் சரியாய்ச் செய்யவில்லை. அதனால்தான் வாஜீர் என்னைக் காஜியாய் நியமித் தான். நான் நடுவர் பதவியை ஏற்றபின் சட்டத்தை நிறை வேற்றும் பணியில் முழுமனத்துடன் ஈடுபட்டேன். வழக்கு விசாரணை நம் நாட்டில் நடப்பது போல இங்கே நடப்பதில்லை. அதனால் நான் பல சீர்திருத்தங்களைச் செய்தேன். விவாகரத்துச் செய்யப்பட்ட பெண்கள் தங்களை நீக்கி வைத்த மனிதர்களுடைய வீட்டிலேயே தங்கியிருந்தார்கள்—அதாவது, அவர்கள் மீண்டும் மணஞ் செய்துகொள்ளும் வரையிலும் தங்களுடைய முன்னைய கணவன்மார்களின் இல்லத்திலேயே வசித்தார்கள், எந்தக் காரணத்தைக் கொண்டும் அவ்வாறு செய்யக்கூடாது என்று நான் கடுமையான தடைவிதித்தேன். அதுவே நான் செய்த முதற் சீர்திருத்தம். தாங்களே நீக்கிவைத்த பெண்களைத் தங்கள் வீட்டில் தொடர்ந்து வைத்துக் கொண்டிருந்த ஆடவர்கள் சுமார் இருபத்தைந்து பேரை என்னுடைய நீதிமன்றத்திற்குக் கொண்டு வந்து, அவர்களுக்குக் கசையடி கொடுத்து, அவர்களைத் தெருத் தெருவாய் இழுத்துக்கொண்டு போகுமாறு ஆணையிட்டேன். விவாகரத்துக்குட்பட்ட பெண்களைத் தங்களுடைய முன்னைய கணவர்களுடைய வீட்டிலிருந்து வெளியேற்றினேன். தொழுகை

முறைகளை அனைவரும் கண்டிப்பாய்க் கடைப்பிடிக்குமாறு செய்வதற்கேற்ற நடவடிக்கைகளை எடுத்தேன். வெள்ளிக் கிழமைத் தொழுகை முடிந்தவுடனே, பள்ளிவாசலுக்கு வந்திருந்த மக்கள் வெளியே போய், கடைத் தெருக்களுக்கும் பிற தெருக்களுக்கும் சென்று, தொழுகைக்கு வராதவர்களைக் கண்டுபிடித்து இழுத்துக் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்தேன். தொழுகைக்கு வராதவர்களுக்குக் கசையடி கொடுத்து, அவர்களைத் தெருவில் இழுத்துக்கொண்டு போவதற்கேற்ற ஆணைகளைப் பிறப்பித்தேன். நிரந்தர அலுவலர்களாய் இருந்த இமாம்கள் மவஜன்கள் ஆகியவர்கள் தங்களுடைய கடமைகளைச் சரிவரச் செய்ய வேண்டுமென்று பணித்தேன். பிற தீவுகளிலிருந்த குற்றவியல் நடுவர்களுக்கும் இத்தகைய ஆணைகளை அனுப்பினேன். இறுதியாகப், பெண்கள் சரியானபடி ஆடை அணிய வேண்டுமென்று சொன்னேன். ஆனால் அந்த முயற்சியில் நான் வெற்றிபெறவில்லை.

**வாஜீர் அப்துல்லா** — வாஜீர் அப்துல்லா, முஹமதுல் ஹஜ்ரமியின் மகன். அவனை சுல்தான் ஷஹாபுதீன் நாட்டைவிட்டு வெளியேற்றி, சவைதுத்தீவுக்கு அனுப்பியிருந்தான். அவன் இப்போது மஹல் தீவுக்குத் திரும்பி வந்தான்.

தலைமை வாஜீரின் அழைப்பிற்கிணங்க அப்துல்லா மஹல் தீவுக்குத் திரும்பி வந்தான். அவனுடைய மனைவிகளுள் ஒருத்தியின் மகளை நான் மணந்துகொண்டிருந்தேன். அவள் என்னுடைய அன்புக்குப் பெரிதும் உரியவளாய் இருந்தாள். எனவே, என் உறவினனான அப்துல்லா மஹலுக்குத் திரும்பி வந்ததும் அவனுக்குப் பரிசுகள் சிலவற்றை நான் அனுப்பினேன். பின்னர், அவனைக் கண்டு பேசி, அவனுடன் சேர்ந்து மாளிகைக்குச் சென்றேன். அங்கே அவன் தலைமை வாஜீரை வணங்கித் தன்னுடைய பணிவைத் தெரிவித்துக் கொண்டான். தலைமை வாஜீர் அவன் வசிப்பதற்காக மிகவும் அழகிய மாளிகை ஒன்றை அளித்தான். அந்த மாளிகைக்கு அடிக்கடி சென்று அப்துல்லாவைக் கண்டு பேசுவது என் வழக்கம் ஆயிற்று. ரம்ஜான் மாதம் முழுவதையும் நான் தொழுகையிற் கழித்தேன். அப்போது அப்துல்லாவைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் என்னை வந்து பார்த்தார்கள். வ ஜீர் ஜமாலுதீன் என்னைக் காணவந்த போது மட்டும் அப்துல்லா அவனுக்குத் துணையாக வந்தான். அவனாக வந்து என்னைப் பார்க்கவில்லை. ரம்ஜான் முடிந்து நான் வெளியே போகத் தொடங்கியதும், எனக்கும் அப்துல்லாவுக்கும் பகைமை உண்டாயிற்று. அதன் காரணத்தை இப்போது சொல்லப்

போகிறேன். என்னுடைய மனைவி அப்துல்லாவின் மனைவிகளுள் ஒருத்தியின் மகள் என்பது உங்களுக்குத் தெரியும். அவளுடைய தாய்மாமன்மார் அப்துல்லாவுக்கு எதிராக என்னிடம் வழக்குத் தொடர்ந்தனர். அவர்கள் வாஜீர் ஜமாலுதீன் உல் சஞ்சரியின் மக்கள். ஜமாலுதீன் உல் சஞ்சரி தன் மக்களுக்குப் பாதுகாப்பாளனாய் அப்துல்லாவை நியமித்திருந்தான். எனவே, ஜமாலுதீன் உல் சஞ்சரியின் உடைமைகள் அப்துல்லாவின் பொறுப்பில் இருந்தன. இப்போது ஜமாலுதீன் உல் சஞ்சரியின் மக்கள் தங்கள் தந்தையின் உடைமைகளை அடைவதற்குச் சட்டப்படி நிர்ணயிக்கப்பட்ட வயதை அடைந்துவிட்டார்கள். அப்படி இருந்தும், அப்துல்லா அந்தச் சொத்துகளை அவர்களிடம் ஒப்படைக்கவில்லை. எனவே அவனை நீதிமன்றத்திற்கு அழைக்குமாறு அவர்கள் வேண்டிக் கொண்டார்கள். பிரதிவாதிகளை நீதிமன்றத்திற்கு அழைப்பதற்கு நான் கையாண்ட முறை அவர்களுக்கு ஒரு காகிதத்தை அனுப்புவதுதான். அந்தக் காகிதத்தில் நான் உரிய செய்தியை எழுதியனுப்புவதும் உண்டு. ஒன்றும் எழுதாமல் வெறும் காகிதத்தை அனுப்புவதும் உண்டு; அது எப்படி இருந்தாலும் காகிதம் கைக்கு வந்த உடனே பிரதிவாதி நீதிமன்றத்திற்கு வந்தாக வேண்டும் என்பது விதி. அவ்வாறு வராதவர்களுக்குத் தண்டனை அளிப்பது என் வழக்கம். எனவே, வழக்கம்போல, இந்த வழக்கில் பிரதிவாதியாயிருந்த அப்துல்லாவுக்கும் நான் ஒரு காகிதத்தை அனுப்பினேன். நான் கையாண்ட முறை அப்துல்லாவுக்குப் பிடிக்கவில்லை. எனவே, அவன் என்மீது சினங்கொண்டு என்னை வெறுத்தான். ஆனால், அவன் தன்னுடைய பகையுணர்ச்சியை மறைத்துக் கொண்டு தன் சார்பில் பேசுவதற்காக ஓர் ஆளை அனுப்பினான். அவன் பொய்ச் செய்திகள் பலவற்றை நீதிமன்றத்தில் சொல்லி, அச் செய்திகளை அப்துல்லா தன்னிடம் சொல்லியனுப்பியதாக வாக்கு மூலம் கொடுத்தான்.

அந்தத் தீவில் வாழ்ந்த மக்கள் அனைவரும்—வலியவராயினும் சரி மெலியவராயினும் சரி—தலைமை வாஜீர் ஜமாலுதீனுக்கு மரியாதை செய்வதைப் போலவே, அப்துல்லாவைக் கண்டவிடத்தும் மரியாதை செய்வது வழக்கமாய் இருந்தது. தெருவில் ஒருவன் அப்துல்லாவைக் காண்பதாக வைத்துக்கொள்வோம். அவன் உடனே தன்னுடைய சுட்டு விரலால் தரையைத் தொட்டு, பின்னர் அந்த விரலை முத்தமிட்டு, அதன் பின்னர் அதனைத் தன் தலையில் வைக்கவேண்டும். இதுவே அப்துல்லாவையும் ஜமாலுதீனையும் மக்கள் வணங்கிய முறை. தலைமை வாஜீர் ஜமாலுதீனுக்குக் காட்டும் மரியாதையைப் பொதுமக்கள் அப்துல்

லாவுக்குக் காட்டக்கூடாது என்று தன்குரா மூலம் அறிவிக்க ஏற்பாடு செய்தேன். பொது அறிவிப்பாளன் அரசியின் அரண்மனைக்குச் சென்று, பலர் முன்னிலையில் அந்த அறிவிப்பை வெளியிட்டான். என்னுடைய ஆணையை மீறுபவர் கடுந்தண்டனைக்கு ஆளாவர் என்றும் அறிவிக்குமாறு செய்தேன். மேலும், பொதுமக்கள் அவ்வாறு செய்வதை அனுமதிக்கக் கூடாது என்று அப்துல்லாவுக்கும் தெரிவித்தேன். அதனுல் அவனுக்கு என்மீது இருந்த பகை அதிகமாயிற்று. இதற்கிடையில் நான் இன்னும் ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொண்டேன். அவள் மக்களின் மதிப்பிற்குரிய வாஜீர் ஒருவனுடைய மகள். அந்த வாஜீர், சுல்தான் தாவூதீன் வழியில் வந்தவன்; சுல்தான் அஹமது ஷினூராஜாவின் பேரன். இறந்துபோன சுல்தான் ஷஹாபுதீனை மணந்து விதவையாகி இருந்த பெண் ஒருத்தியையும் பின்னர் மணந்து கொண்டேன். வாஜீர் கொடுத்திருந்த தோட்டத்தில் மூன்று மாளிகைகள் எனக்காகக் கட்டப்பட்டிருந்தன. என்னுடைய நான்காம் மனைவி வாஜீர் அப்துல்லாவின் மனைவிகளுள் ஒருத்தியின் மகள் என்பது உங்களுக்குத் தெரியும். அவள் தன் சொந்த வீட்டிலேயே வசித்தாள். அவள் தான் மற்றவர்களைக் காட்டிலும் என் அன்புக்கு மிகுதியும் பாத்திரமாய் இருந்தவள். இந்தத் திருமணங்களை எல்லாம் நான் செய்துகொண்ட பிறகு, என் செல்வாக்கைக் கண்டு வாஜீர் அப்துல்லாவும் பொது மக்களும் மிகவும் அஞ்சினுர்கள். என்னைப் பற்றிய பொய் வதந்திகளைத் தலைமை வாஜீரிடமும், தலைமை வாஜீரைப் பற்றிய பொய் வதந்திகளை என்னிடமும் பலர் சொல்லத் தொடங்கினர். அதற்கெல்லாம் காரணமாயிருந்தவன் அப்துல்லாவே. அதனுல், அவனுக்கும் எனக்கும் இருந்த பகை மேலும் வளர்ந்தது.

**நான் அவர்களிடமிருந்து பிரிந்து செல்லுதலும் அதற்குக் காரணமும் :**

ஒருநாள் முன்னைய சுல்தான் ஜமாலுதீனின் அடிமைகளுள் ஒருவனுடைய மனைவி தலைமை வாஜீரிடம் சென்று, தன் கணவன் சுல்தானின் வைப்பாட்டிகளுள் ஒருத்தியுடன் கள்ள உறவு வைத்துக் கொண்டிருப்பதாக முறையிட்டாள். வாஜீரும் அது உண்மைதானு என்பதைத் தெரிந்து கொள்வதற்காகத் தன்னுடைய ஆட்களை அந்த அடிமையின் வீட்டுக்கு அனுப்பினுன். அவனும் அந்தப் பெண்ணும் ஒரே சமுக்காளத்தில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்ததை வாஜீரின் ஆட்கள் கண்டார்கள். உடனே அந்தக் குற்றவாளிகள் சிறையில் அடைக்கப்பட்டார்கள்.

அடுத்தநாள் காலையில் நான் அந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு, அத்தாணி மண்டபத்திற்குச் சென்று, வழக்கம்போல, என்னுடைய இருக்கையில் அமர்ந்தேன். அந்தக் குற்றவாளிகளைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. அப்போது ஒரு கணிகை என்னிடம் வந்து 'தங்களுக்கு ஏதாவது வேண்டுமா என்று வாஜீர் கேட்டுக் கொண்டு வரச்சொன்னார்' என்று கூறினாள். 'ஒன்றும் தேவை இல்லை' என்று நான் சொல்லிவிட்டேன். அந்தக் குற்றவாளிகளைப் பற்றி நீதிமன்றத்தில் நான் பேசவேண்டும் என்பது வாஜீரின் நோக்கம். என்னுடைய கவனத்திற்குக் கொண்டுவரப்பட்ட வழக்கு எதுவாயிருந்தாலும் அதனை விசாரித்துத் தீர்ப்புக் கூறுவது நான் வகுத்துக்கொண்ட விதியாய்இருந்தது. ஆனால், அன்று நான் அவ்வாறு செய்யவில்லை. தலைமை வாஜீரின்மீது எனக்கிருந்த சினமும் வெறுப்புமே அதற்குக் காரணம். பின்னர், நான் என் வீட்டிற்குத் திரும்பிவந்து, வழக்கமாக நான் தீர்ப்புக் கூறும் இடத்தில் அமர்ந்துகொண்டேன். உடனே வாஜீர் ஒருவன் அங்கு வந்து தலைமை வாஜீரின் சார்பில் என்னிடம் பேசத் தொடங்கினான். 'அடிமையும் சுல்தானின் வைப்பாட்டியும் நேற்றுச் சட்டத்திற்கு எதிரான உடலுறவு கொண்ட செய்தி உங்களுக்குத் தெரியுமன்றோ? அந்த விஷயத்தில் சட்டப்படி என்ன செய்யத் தக்கதோ அதனைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்' என்று தலைமை வாஜீரின் சார்பில் அவன் சொன்னான். 'இந்த வழக்கில் சுல்தானுடைய அரண்மனைக்கு வெளியில் தீர்ப்புக் கூறுவது தக்கதன்று' என்று நான் சொல்லி விட்டு, மீண்டும் அரண்மனைக்குச் சென்றேன். அப்போது பொது மக்கள் பலர் அங்கு வந்துசேர்ந்தனர். சுல்தானின் வைப்பாட்டியும் அடிமையும் என்முன் கொண்டுவரப்பட்டனர். அவர்கள் இருவருக்கும் கசையடி கொடுக்குமாறு முதலில் ஆணையிட்டேன், அந்த ஆணை நிறைவேற்றப்பட்டபின், அந்தப் பெண்பிள்ளையை விடுதலை செய்துவிட்டு அடிமையைச் சிறையில்அடைக்குமாறு ஆணையிட்டேன். அதற்குப் பிறகு நான் என் வீட்டிற்குத் திரும்பினேன்.

அந்த அடிமையை விடுதலை செய்துவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்வதற்காக வாஜீர் தன்னுடைய முக்கியமான அலுவலர் பலரை என்னிடம அனுப்பினான். 'தன்னுடைய எஜமானனுடைய கவுரவத்திற்கு இழுக்கு நேரும்படி நடந்து கொண்ட நீக்ரோ அடிமை ஒருவனுக்காக நீங்கள் இன்று என்னிடம் வந்து மன்றாடுகிறீர்கள். ஆனால் நேற்றுத் தன்னுடைய அடிமை ஒருவனுடைய வீட்டிற்குள் நுழைந்ததற்காக சுல்தான் ஷஹாபுதீனை அரியணையிலிருந்து இறக்கியது மட்டுமன்றி,

அவனைக் கொல்லவும் செய்தீர்களே, அதுமட்டும் எவ்வாறு நியாயமாகும்?' என்று நான் அவர்களைக் கேட்டேன். அவர்களுடைய வேண்டுகோளுக்கு இசையாதது மட்டுமன்றி, அந்த அடிமையை மூங்கிற்கழியில் அடித்து அவனுடைய கழுத்தில் ஒரு கயிற்றைக்கட்டித் தெருத்தெருவாய் இழுத்துக் கொண்டு போகுமாறும் நான் ஆணையிட்டேன். (சாட்டையால் அடிப்பதைக் காட்டிலும் மூங்கிற்கழியில் அடிப்பது அதிகக் கடுமையானது.) வாஜீரின் ஆட்கள் உடனே திரும்பிப்போய் நடந்தவற்றை வாஜீருக்குத் தெரியப் படுத்தினார்கள். அதனால் பெரிதும் சினமடைந்த வாஜீர் ஏனைய வாஜீர்களையும் படைத்தலைவர்களையும் அழைத்து வைத்துக்கொண்டு, எனக்கு ஆள் அனுப்பினான். நான் அந்தக் கூட்டத்திற்குச் சென்றேன். ஆனால், நான் வாஜீருக்கு வழக்கமாய்ச் செய்யும் மரியாதையைச் செய்யவில்லை. கால்களைச் சிறிது மடக்கி, 'சலாம்' என்று சொன்னதுடன் நிறுத்திக்கொண்டேன். பின்னர், அங்கிருந்தவர்களைப் பார்த்து, 'நான் என்னுடைய கடமைகளைச் சரியாய்ச் செய்ய இயலாத காரணத்தால் காஜிப் பதவியிலிருந்து விலகிக் கொள்கிறேன். அதற்கு நீங்கள் அனைவரும் சாட்சி' என்று சொன்னேன். அப்போது வாஜீர் என் பெயரைச் சொல்லி அழைத்தான். உடனே நான் மேடைமீதேறி வாஜீருக்கு எதிரில் அமர்ந்து கொண்டேன். பின்னர், அவன் கேட்ட கேள்விகளுக்கு மிகவும் உறுதியான குரலில் விடையளித்தேன், அதற்குள் மாலைத் தொழுகைக்கு மவஜன் அழைக்கும் குரல் கேட்டது. உடனே வாஜீர், 'என்னுடைய கோபத்தைக் காட்டுவதற்காக இந்த மனிதனை என் அவைக்கு அழைத்தேன். ஆனால், அவன் தன்னுடைய கோபத்தை என்மீது காட்டிவிட்டான். அரசின் அதிகாரமெல்லாம் என் கையிலிருந்தும் நான் என்ன பயனைக் கண்டேன்?' என்று சொல்லிக் கொண்டே உள்ளே போய் விட்டான். நான் இந்திய அரசனுடைய நண்பன் என்ற காரணத்திற்காகவும் அவன் என்னை மிகவும் மதித்தான் என்பதற்காகவுமே மாலத்தீவு மக்கள் என்னிடத்தில் மிகவும் மரியாதையாக நடந்தார்கள். அவன் எவ்வளவோ தொலைவில் இருந்தான். எனினும் அவர்கள் அவனுக்கு மிகவும் அஞ்சினார்கள்.

தலைமை வாஜீர் தன்னுடைய மாளிகைக்குள் சென்றதும் பழைய காஜியை அழைத்துப் பேசினான். அவன் என்னிடம் வந்து 'பலபேர் கூடியிருந்த சபையில் தலைமை வாஜீருக்குக் காட்ட வேண்டிய பணிவை நீர் ஏன் காட்டவில்லையென்று அறிந்து கொள்ள அவர் விரும்புகிறார்' என்று சொன்னான். அவரைப் பற்றி நான் உயர்வாக நினைத்திருந்தபோது அதற்கேற்ற

பணிவுடன் அவரிடம் நடந்துகொண்டேன். இப்போது நான் அவரை உயர்வாக மதிக்கவில்லை. மேலும், ஒரு முசல்மான் இன்னொரு முசல்மானைக் காணும்போது சலாம் என்று சொல்ல வேண்டும் என்பதுதான் விதி. அவ்வாறே நானும் சொன்னேன்' என்று விடையளித்தேன். அதே ஆளை மீண்டும் ஒரு முறை வாஜீர் என்னிடம் அனுப்பினன். 'நீர் இந்தத் தீவை விட்டுப் போய்விடுவது என்று தீர்மானித்து விட்டீர், நீர் போவதை வாஜீர் தடுக்கவில்லை. ஆனால், போவதற்குமுன் உம்முடைய மனைவிகளின் சீதனத்தையும் நீர் பிறருக்குக் கொடுக்க வேண்டிய கடன்களையும் கொடுத்துவிட வேண்டும்' என்று அவன் சொன்னான். அந்தச் சொற்களைக் கேட்டதும் நான் குனிந்து வணங்கிவிட்டு, வீட்டுக்குப்போய், நான் செலுத்த வேண்டிய தொகைகளைச் செலுத்தினேன். அந்தக் காலத்தில் வாஜீர் எனக்குச் சமுக்காளங்கள் செப்புப் பாத்திரங்கள் முதலிய பல பொருள்களைக் கொடுத்திருந்தான். உண்மையில், நான் எது கேட்டாலும் அவன் கொடுக்கத் தவறியதில்லை. அவனுக்கு என்மீது அவ்வளவு அன்பு! என்னை மிகவும் உயர்வாக மதித்து நடத்தினான். ஆனால், இப்போது அவன் மனம் மாறிவிட்டது. என்னைக் கண்டு அவன் அஞ்சத் தொடங்கினான்.

நான் என் கடன்களைக் கட்டிவிட்டேன் என்பதையும், மாலத்தீவை 'விட்டுப் போவதற்குத் தயார் செய்துகொண்டிருந்தேன் என்பதையும் கேள்விப்பட்ட வாஜீர் எனக்குச் செய்த தீங்கை நினைத்து வருந்தத் தொடங்கினான். எனவே, நான் போவதற்குத் தேவையான இசைவை வழங்குவதில் காலந் தாழ்த்தத் தொடங்கினான். நான் போயே தீருவேன் என்று இறைவன் சாட்சியாய்ச் சூளுரைத்து விட்டு, என் பொருள்களை எடுத்துக் கொண்டு, கடற்கரையிலிருந்த பள்ளிவாசல் ஒன்றுக்குச் சென்றுவிட்டேன். என் மனைவிகளுள் ஒருத்திக்கு மணவிலக்கு அளித்துவிட்டேன். இன்னொருத்தி கருவுற்றிருந்தாள். அவள் எனக்காக ஒன்பது மாதம் காத்திருக்க வேண்டும் என்றும் அந்தக் கெடுவுக்குள் நான் திரும்பிவரத் தவறினால் அவள் தன் விருப்பம்போல நடந்து கொள்ளலாம் என்றும் சொல்லிவிட்டேன், மீதியிருந்த இருமனைவியரை என்னுடன் அழைத்துக் கொண்டேன். அவர்களுள் ஒருத்தி முன்னைய சுல்தான் ஷஹாபுதீனை மணந்து கொண்டிருந்தவள். அவளுடைய தகப்பன் முலுக் தீவில் வசித்துக்கொண்டிருந்தான், அவனிடம் அவளை ஒப்படைக்கும் நோக்கத்துடன்தான் அவளை என்னுடன் அழைத்துக்கொண்டேன். என்னோடிருந்த இன்னொரு மனைவி சுல்தானவுக்கு நெருங்கிய உறவினள்,

அவளுடைய மகள் சுல்தானுவோடு குருதிக் கலப்புடைய சகோதரி உறவு கொண்டவள்.

நான் தரைப்படைத் தலைவனையும் கடற்படைத் தலைவனையும் அழைத்து, அவர்களோடு கலந்து பேசி, ஒரு ரகசிய ஒப்பந்தம் செய்துகொண்டேன். 'நான் இங்கிருந்து மா'பாருக்கு (சோழ மண்டலக் கரைக்கு) செல்ல எண்ணியுள்ளேன். என்னுடைய சட்டகன்[39] அந்த ராஜ்யத்தின் அரசனாய் இருக்கிறான். அவனுடைய இசைவுடன், அவனுடைய படையை அழைத்துக் கொண்டு, மீண்டும் இந்தத் தீவுகளுக்கு வந்து, இவற்றை வென்று அவனுடைய ஆட்சியில் இணைத்துவிடுவேன். அதன் பிறகு, அவனுடைய பிரதிநிதியாக இந்தத்தீவுகளை நான் ஆட்சி செய்வேன். என்னுடைய கப்பல்கள் இங்கே வந்துசேர்ந்ததும் நான் அவற்றின்மீது வெள்ளைக் கொடிகளைப் பறக்க விடுவேன். அவற்றைக் கண்டதும் நீங்கள் இருவரும் வாஜீருக்கு எதிராய்க் கலகம் தொடங்கவேண்டும்' என்று நான் அவர்களிடம் கூறினேன். வாஜீர் என்னுடைய நண்பனாயிருந்த வரையிலும் இத்தகையதொரு திட்டத்தை நான் நினைக்கவேயில்லை. ஆனால், அவன் என்னைக் கண்டு அச்சம் கொண்டு 'இந்த ஆள் நான் உயிருடனிருக்கும்போதோ என்னுடைய சாவுக்குப்பின்னரோ தலைமை வாஜீர்ப் பதவியைப் பிடித்துக் கொள்வான் என்பதை நான் உறுதியாய் நம்புகிறேன்' என்று மக்களிடம் சொல்லத் தொடங்கினான். என்னைப் பற்றிப் பலரிடம் விசாரித்தான். 'எனக்கு எதிராகக் கிளர்ச்சியைத் தூண்டி விடுவதற்காக இந்திய அரசன் இவனுக்குப் பணம் அனுப்பியிருப்பதாய் நான் கேள்விப்பட்டேன்' என்றும் அவன் சொல்லத் தொடங்கினான். எனவே, நான் போவதை அவன் விரும்பவில்லை. சோழமண்டலத்திலிருந்து நான் ஒரு படையுடன் திரும்பிவரக் கூடும் என்று அவன் அஞ்சினான். எனக்காக ஒரு கப்பலைத் தான் தயார் செய்து கொடுக்கும் வரையிலும் நான் போகக்கூடாதென்று அவன் சொன்னான். ஆனால் நான் அதைப்பற்றிக் கவலைப்படவில்லை.

என்னுடைய மனைவிகளுள் ஒருத்தியின் மகள் சுல்தானுவுக்குச் சகோதரி முறையில் உறவுடையவள் என்று நான் மேலே சொன்னது உங்களுக்கு நினைவிருக்கும். அவள் சுல்தானுவிடம் சென்று, 'அந்த ஆளுடன் என் தாயார் போவதைத் தடுக்க வேண்டும்' என்று வேண்டிக்கொண்டாள். ஆனால் சுல்தானுவால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அவள் என்னுடன்

[39] என் மனைவியின் சகோதரியின் கணவன்.

போவதற்கு முடிவு செய்துவிட்டாள் என்பதை அறிந்ததும் 'உன்னிடமிருக்கும் நகைகள் அனைத்துமே சுங்கச் சாவடியின் வருமானத்திலிருந்து செய்யப்பட்டவை. அவற்றையெல்லாம் ஜலாலுதீனே உனக்குக் கொடுத்தான் என்பதற்குச் சான்றிருந்தால் நீ அவற்றை எடுத்துக் கொள்ளலாம். இல்லாவிட்டால் அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்' என்று சுல்தானு அவளுக்குச் சொல்லியனுப்பினுள். அந்த நகைகள் மிகவும் விலை உயர்ந்தவை. அப்படியிருந்தும் என் மனைவி அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிட்டாள். நான் பள்ளி வாசலில் தங்கியிருந்தபோது, வாஜீர்களும் பிற தலைவர்களும் அங்கு வந்து என்னைக் கண்டு, நான் போகக் கூடாதென்று மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். 'நான் போவதாகச் சத்தியம் செய்துவிட்டேன். இல்லாவிட்டால், நான் திரும்பி, வந்துவிடுவேன்' என்று அவர்களிடம் தெரிவித்தேன். உடனே அவர்கள் 'அப்படியாளுல் நீர் இந்தத் தீவிலிருந்து வேருெரு தீவுக்குச் சென்று சிறிது காலம் தங்கிவிட்டுப் பின்னர் இங்கு வந்துவிடலாமே' என்று சொன்னுர்கள். அவர்களுடைய மன நிறைவுக்காக நான் அந்த ஏற்பாட்டுக்கு இணங்குவதாகச் சொல்லிவைத்தேன். நான் புறப்பட வேண்டிய நாள் வந்ததும் வாஜீரிடத்தில் விடை பெற்றுக் கொள்வதற்காகச் சென்றேன், அப்போது அவன் என்னைக் கட்டிப் பிடித்துக் கண்ணீர் வடித்துக் கதறியழுதான். அந்தக் கண்ணீர் என் கால் மீது விழுந்தது. அடுத்த நாள் இரவு முழுதும் தீவுக்கு அவனே காவலிருந்தான். நான் செய்துகொண்ட திருமணங்களின் வாயிலாய் எனக்கு உறவினராகிவிட்டவர்களும் என்னுடைய நண்பர்களும் சேர்ந்து அவனுக்கு எதிராகக் கலகஞ் செய்யக் கூடும் என்று அவன் அஞ்சியதே அதற்குக் காரணம்.

இறுதியில் நான் மஹல் தீவைவிட்டுப் புறப்பட்டு ஆலி என்னும் வாஜீரின் அதிகார வரம்பிலிருந்த தீவை அடைந்தேன், அங்கே என்னுடைய மனைவிக்குக் கடுமையான நோய் கண்டதால். அவள் திரும்பிப்போக விரும்பினுள். அவளுக்கு நான் மணவிலக்கு அளித்து அங்கேயே விட்டுவிட்டேன். அவள் வாஜீரின் மகனுடைய மனைவியின் தாயாதலால் மணவிலக்குப் பற்றிய செய்தியை நான் அவனுக்குக் கடித மூலம் தெரியப் படுத்தினேன். அன்றியும், ஒன்பது மாதக் கெடுவைத்து நான் விட்டு விட்டு வந்த மனைவிக்கும் மணவிலக்கு அளித்து விட்டு, எனக்கு மிகவும் பிடித்தமான அடிமைப் பெண் ஒருத்தியை அழைத்துக் கொண்டேன். அந்தச் செயல்களை எல்லாம் செய்து கொண்டிருந்தபோதே நான் என்னுடைய பயணத்தையும் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தேன்.

அவ்வாறு நாங்கள் கடந்து சென்றுகொண்டிருந்த தீவுகளுள் ஒன்றில் ஒரே மார்பகத்தை உடைய பெண் ஒருத்தியைக் கண்டோம். அவளுக்கு இரண்டு பெண்கள் இருந்தார்கள். அவர்களுள் ஒருத்தி தன் தாயை எல்லா வகையிலும் ஒத்திருந்தாள். இன்னொருத்திக்கு இரண்டு மார்பகங்கள் இருந்தன. அவற்றுள் ஒன்று பெரியது; அதில் பால் இருந்தது. ஆனால் இன்னொன்று சிறியது; அதில் பாலும் இல்லை. அவர்களைக் கண்டு நான் வியப்படைந்தேன்.

**ஒரு மார்புடைய பெண்கள்**

அதற்குப் பிறகு நாங்கள் ஒரு சிறு தீவை அடைந்தோம். அதில் ஒரே ஒரு வீடுதான் இருந்தது. அதில் ஒரு நெசவாளி வசித்தான். அவன் தன் குடும்பத்துடன் வாழ்ந்தான். அவனுக்கு ஒரு சிறு தென்னந் தோப்பு இருந்தது. பிற தீவுகளுக்குப் போவதற்காக அவன் ஒரு சிறு படகையும் வைத்திருந்தான். மீன் பிடிப்பதற்கும் அவன் அந்தப் படகைப் பயன்படுத்தினான். அந்தத் தீவில் சிறு வாழை மரங்கள் சில இருந்தன. அங்கே நிலப் பறவைகள் என்ற முறையில் இரு காகங்களை மட்டும் கண்டோம். எங்கள் கலம் அந்தத் தீவை அடைந்தபோது, அவை எங்கள் கலத்திற்கு மேல் பறந்து சுற்றிப் பார்த்துவிட்டுப் போய்விட்டன. அந்த நெசவாளியைக் கண்டு நான் உண்மையிலேயே பொறாமை அடைந்தேன். அந்தத் தீவு என்னுடையதாய் இருந்தால், உலகத்தின் தொல்லைகளிலிருந்து விடுபட்டு, அங்கே தனியாய் வாழ்ந்து, என்னுடைய காலத்தை முடித்துக் கொள்ளலாமே என்று எண்ணமிட்டேன்.

அதன்பின் நான் முலுக் தீவை அடைந்தேன். அங்கே இப்ராஹிமின் தலைமையில் இயங்கிய கப்பல் ஒன்று நின்றுகொண்டிருந்தது. அந்தக் கப்பலில் ஏறிச் சோழமண்டலக் கரைக்குச் செல்வது என்று முடிவு செய்தேன். இப்ராஹிமும் அவனுடைய தோழர்களும் என்னைக் கண்டு பேசினார்கள். அவர்கள் எனக்கு ஒரு சிறந்த விருந்தும் அளித்தார்கள். அந்தத் தீவில் எனக்கு இருபது புஸ்துச் சோழியும் இருபது ஜாடி தென்னந் தேறலும் கொடுக்க வேண்டும் என்றும், ஒவ்வொரு நாளும் ஒரு குறிப்பிட்ட அளவு வெற்றிலை பாக்கு மீன் ஆகியவற்றையும் கொடுக்க வேண்டும் என்றும் வாஜீர் எழுதியிருந்தான். நான் அங்கே எழுபது நாள் இருந்தேன். அப்போது இரு பெண்களை மணந்து கொண்டேன். மிக அழகிய தீவுகளுள் முலுக்கும் ஒன்று. நிலவளமிக்க அந்தத் தீவில் மரஞ் செடி கொடிகள் அடர்த்தியாய்

**முலுக்**

வளர்ந்திருந்ததால் அது பச்சைப் பசேல் என்று இருந்தது. அங்கே ஓர் அற்புதத்தைக் கண்டேன். அங்கு வளர்ந்து நிற்கின்ற மரங்களின் கிளைகளை வெட்டித் தரையிலோ சுவரின் மீதோ நட்டுவைத்தால் விரைவில் அவற்றில் இலைகள் தோன்றுகின்றன. ஒவ்வொரு கிளையும் ஒவ்வொரு மரமாக வளர்ந்து விடுகின்றது. அங்கு வளர்கின்ற மாதுளை மரங்கள் ஆண்டு முழுவதும் பழுப்பதையும் கண்டேன். மாலுமி இப்ராஹிம் போகும்போது அத் தீவைக் கொள்ளையடித்துப் பொருள்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போய்விடுவான் என்று அங்கு வாழ்ந்த மக்கள் அஞ்சினார்கள். அதனால், அவனுடைய கப்பலில் இருந்த போர்க்கருவிகள் அனைத்தையும் பிடுங்கி வைத்துக் கொண்டு கப்பல் புறப்படும் போது அவற்றைத் திருப்பிக் கொடுத்து விடுவது என்று அவர்கள் திட்டமிட்டார்கள். அதனால் ஏற்பட்ட பூசலினால் நாங்கள் மீண்டும் மஹல் தீவுக்குச் சென்றோம். ஆனால், அங்கே நாங்கள் கரையிறங்கவில்லை. முலுக் தீவில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைப் பற்றி நான் வாஜீருக்குக் கடிதம் எழுதினேன். மாலுமிகளின் ஆயுதங்களைப் பறித்துக்கொள்வது நியாயமன்று என்று வாஜீர் எழுதியனுப்பினான். நாங்கள் மீண்டும் முலுக் தீவுக்குச் சென்று, அங்கிருந்து 745ஆம் ஆண்டு ரபீ மாத இடையில்[40] (1344ஆம் ஆண்டு ஆகஸ்டு 26ஆம் நாளன்று) எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். அதேயாண்டு ஷாபான் மாதத்தில் (டிசம்பர், 1344) வாஜீர் ஜமாலுதீன் இறந்துபோனான். அப்போது கருவுற்றிருந்த சுல்தானாவுக்குச் சிறிது காலஞ் சென்று குழந்தை பிறந்தது. அதன்பின் வாஜீர் அப்துல்லா அவளை மணந்து கொண்டான்.

**இலங்கை**

எங்களுடைய கப்பலை ஓட்டுவதற்குப் பயிற்சி பெற்ற மீகாமன் இல்லை. ஆதலால், மாலத் தீவிலிருந்து சோழமண்டலக் கரைக்குப் போவதற்கு வழக்கமாக மூன்றுநாள் போதுமெனினும், நாங்கள் ஒன்பதுநாள் பயணஞ் செய்த பின்னர், சிலன் (இலங்கை) தீவைத்தான் அடைய முடிந்தது. அங்கே சரந்திப்[41] மலை புகைத் தூபி போல உயர்ந்து நிற்பதைத் தொலைவிலிருந்தே கண்டோம். எங்களுடைய கப்பல் சிலன் தீவை நெருங்கியபோது, 'இந்தத் துறைமுகம்

[40] ஆகஸ்டு 22-கிப்.

[41] சிலன் தீவு என்றும் சரந்திப் மலை என்றும் இபன்பதூதா தனித் தனியாய்க் குறிப்பிடுகிறார். அரேபியர் இலங்கைத்தீவை சரந்திப் என்று சொன்னார்கள்.

வணிகர் அச்சமின்றிப் புகுவதற்கேற்ற நாட்டில் இல்லை. இந்த நாட்டை ஆள்பவன் சுல்தான் ஐரி ஷக்ரவுதி (ஆரியச் சக்ரவர்த்தி) என்பவன் ஆவான். அவன் வேண்டுமென்றே பிறருக்குத் துன்பம் செய்பவன்; நீதியை மதிக்காதவன்; கொள்ளையடிப்பதற்கென்றே கப்பற்படை ஒன்றை வைத்திருப்பவன்' என்று மாலுமிகள் சொன்னார்கள். அதனால் அங்கே கரை இறங்குவதற்கு நாங்கள் அஞ்சினோம். ஆனால், அதற்குள் கடுங்காற்று அடிக்கத் தொடங்கிவிட்டது. அதனால் கப்பல் கவிழ்ந்துவிடும் என்று நாங்கள் அஞ்சினோம். எனவே, 'என்னைக் கரையில் இறக்கி விடுங்கள். உங்களுக்குத் தீங்கு நேராதவாறு நான் பார்த்துக் கொள்கிறேன்' என்று மாலுமிகளிடம் தெரிவித்தேன். அவர்கள் அதற்கிசைந்து என்னைக் கரையில் இறக்கி விட்டார்கள். உடனே உருவ வழிபாட்டினர் என்னிடம் வந்து 'நீ யார்!' என்று கேட்டார்கள். 'நான் மா'பார் சுல்தானுடைய நண்பன் மட்டுமன்றி அவனுடைய சகலையும் ஆவேன். அவனைப் பார்ப்பதற்காகச் சென்றுகொண்டிருக்கிறேன். கப்பலில் இருக்கிற பொருள்களை அவனுக்குப் பரிசு கொடுப்பதற்காக நான் எடுத்துக் கொண்டு போகிறேன்' என்று அவர்களிடம் தெரிவித்தேன். உடனே அவர்கள் தங்களுடைய அரசனிடம் போய் நான் தெரிவித்த செய்திகளைச் சொன்னார்கள். அரசனும் தன்னைக் காணுமாறு எனக்குச் சொல்லி அனுப்பினான். உடனே நான் தலைநகராகிய பட்டாலா (புட்டலம்) நகருக்குச் சென்றேன். அது ஓர் அழகிய சிறு நகரம். அதனைச் சுற்றி ஒரு சுவரும் மரத்தாலான பரிகங்களும் அரண்களும் இருந்தன. அதன்அருகில் இருந்த கடற்கரை முழுவதும் வெள்ளம் அடித்துக் கொண்டு வந்து தள்ளிய லவங்க மரங்கள் மலைபோலக் குவிந்து கிடந்தன. அவற்றை மா'பார் மக்களும் மலபார் மக்களும் விலை கொடுக்காமல் எடுத்துக்கொண்டு போனார்கள். ஆனால், அந்தச் சலுகைக்குப் பதிலாக அவர்கள் சிலன் அரசனுக்கு உயர்தரத் துணிகள் போன்ற பரிசுகளை வழங்கினார்கள். சிலன் தீவிலிருந்து மா'பாருக்குச் செல்ல ஒரு பகலும் ஓரிரவும் பிடிக்கும். சிலன் தீவில் பிரேசில் மரம் மிகுதியாய் வளர்கிறது. அதுபோலவே இந்தியச் சோற்றுக் கற்றாழையும் அங்கே அதிகமாய் வளர்கிறது. அதனை அல்கல்கி (கிரேக்க மொழியிலுள்ள அகலோகோன் என்னும் சொல்லின் திரிபாயிருக்கலாம்) என்று சொல்கிறார்கள். ஆனால், அதற்கும் க்வமாரி அல்லது க்வாக்விலி என்பதற்கும் எவ்விதத் தோற்ற ஒற்றுமையும் இல்லை. அதைப் பற்றிப் பின்னர் எழுதுவோம்.

சிலன் தீவின் சுல்தான் ஐரி ஷக்ரவுதி என்னும் பெயர் உடையவன். அவனிடம் வலிமை மிக்க கப்பற்படை இருக்கிறது.

**சீலன் சுல்தான்**

ஒருமுறை நான் மா'பார்க் கரையில் இருந்தபோது, அவனுடைய படை அங்கு வந்தது. அதில் பெரியவையும் சிறியவையும் ஆகிய நூறு கலங்கள் இருந்தன. அப்போது மா'பார் சுல்தானுடைய கலங்களுள் எட்டு, யெமனுக்குப் போவதற்காகத் துறைமுகத்தில் நின்றுகொண்டிருந்தன. தேவையான பொருள்களை அவற்றில் ஏற்றுவதற்கும் அவற்றைப் பாதுகாப்பதற்கும் ஆட்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். எனவே, சீலன் படையினரால் அவற்றைப் பிடிக்க முடியவில்லை. அதனால், 'எங்கள் கலங்களும் யெமனுக்குப் போகின்றன. அவற்றின் பாதுகாப்புக்காகவே நாங்கள் இங்கு வந்திருக்கிறோம் (உங்களுக்குத் தீங்கு செய்வதற்காக வரவில்லை)' என்று அவர்கள் சொன்னார்கள்.

முசல்மானல்லாத அரசனுடைய அரண்மனைக்கு நான் போனவுடன், அவன் எழுந்து, என்னை மிகுந்த அன்புடன் வரவேற்றுத் தன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டு 'உம்முடைய தோழர்கள் அச்சமின்றிக் கரையிறங்கலாம். இங்கிருக்கும் வரையில் அவர்கள் என் விருந்தினராய் இருப்பார்கள். மா'பார் சுல்தான் என்னுடைய நண்பன்' என்று அவன் சொன்னான். பிறகு நான் தங்கியிருப்பதற்கு ஏற்ற வசதிகளை அவன் செய்து கொடுத்தான். நான் அவனுடன் மூன்று நாள் இருந்தேன். அவன் என்னிடம் காட்டிய அன்பு ஒவ்வொரு நாளும் அதிகரித்தது. அவனுக்குப் பாரசீக மொழி தெரிந்திருந்தது. அதனால். வெளிநாடுகளைப் பற்றியும் அவற்றின் அரசர்களைப் பற்றியும் நான் சொன்ன செய்திகளை அவன் மிகுந்த மகிழ்ச்சியுடன் கேட்டான். ஒரு நாள் நான் அவனைக் காணச் சென்றபோது, முத்துக் குளிப்போர் கொண்டு வந்த முத்துகள் அவன்முன் கிடந்தன. அவனுடைய அலுவலர்கள் அவற்றைத் தரம்பிரித்துக் கொண்டிருந்தார்கள். 'நீர் பயணஞ் செய்த நாடுகளில் முத்துச் சலாபம் பார்த்திருக்கிறீரா?' என்று அவன் என்னைக் கேட்டான். 'ஆம், இபன் ஷவ்வா மலிக்குச் சொந்தமான க்வைஸ், கிஷ் ஆகிய தீவுகளில் முத்துச் சலாபத்தைப் பார்த்திருக்கிறேன்' என்று விடையளித்தேன். 'நானும் அவற்றைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன்' என்று சொல்லி, என்னிடம் சில முத்துகளைக் கொடுத்து, 'அந்தத் தீவுகளில் கிடைக்கும் முத்துகள் இந்த முத்துகளைப் போலிருக்கின்றனவா?' என்று கேட்டான். 'அங்கே நான் பார்த்தவை மட்டரக முத்துகள்' என்று சொன்னேன். என்னுடைய விடை அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. 'இந்த முத்துகளை நீர் வைத்துக்

கொள்ளலாம். கூச்சப்பட வேண்டாம். உமக்கு என்ன வேண்டுமோ அதனைக் கேட்கலாம்' என்று அவன் சொன்னான். 'இந்தத்தீவுக்கு வந்ததிலிருந்து புகழ் பெற்ற ஆதாம் காலடியைக் காணவேண்டும் என்பதன்றி வேறு ஆசை எதுவும் என் மனத்தில் எழவில்லை' என்று சொன்னேன். (இந்தத் தீவு மக்கள் ஆதாமை பாபா என்றும், ஹவா என்றும், மாமா என்றும் சொல்கிறார்கள்). 'ஓ, அது எளிதில் நிறைவேறக் கூடிய ஆசைதான். உம்மை அங்கு அழைத்துக்கொண்டு போவதற்கு ஏற்பாடு செய்கிறேன்' என்று அரசன் சொன்னான். 'அதுதான் நான் விரும்புவது' என்று சொல்லிவிட்டு, 'மாலத் தீவிலிருந்து நான் ஏறிவந்த கப்பல் இப்போது மா'பாருக்குப் போகலாமன்றோ? நான் திரும்பி வந்ததும், என்னைத் தங்களுடைய கப்பலில் ஏற்றி மா'பாருக்கு அனுப்புவீர்களா?' என்று நான் கேட்டேன். 'ஆஹா, அப்படியே செய்யலாம்' என்று அரசன் சொன்னான்.

இந்தச் செய்தியை நான் கப்பல் தலைவனுக்குச் சொன்ன போது, 'நீர் திரும்பிவரும் வரையிலும் நான் காத்துக் கொண்டிருப்பேன். ஓராண்டானாலும் உம்மை அழைத்துக் கொண்டுதான் போவேன்' என்று சொல்லிவிட்டான். இந்தச் செய்தியை நான் அரசனுக்குத் தெரிவித்தேன். அவன் 'அப்படி ஆனால் நீர் திரும்பிவரும் வரையிலும் கப்பல் தலைவன் என்னுடைய விருந்தாளியாய் இருக்கட்டும்' என்று சொன்னான்.

நான் ஊர்ந்து செல்வதற்கான சிவிகை ஒன்றை சுல்தான் எனக்குக் கொடுத்தான். அதனை அவனுடைய ஆட்கள் தோளில் தூக்கிக் கொண்டார்கள். நான்கு யோகியரையும், மூன்று பார்ப்பனரையும், தன்னுடைய தோழர் பத்துப் பேரையும் சுல்தான் எனக்கு வழித்துணையாய் அனுப்பினான். மேலும், உணவுப் பொருள்களைத் தூக்கிச் செல்வதற்கென்று பதினைந்து பணியாட்களையும் அனுப்பினான். வழியில் தண்ணீருக்குப் பஞ்ச மில்லையாதலால், அதனையும் எடுத்துக்கொண்டு போகும் தேவை ஏற்படவில்லை. என்னுடன் வந்த யோகிகள் ஆண்டுதோறும் ஆதாம் சிகரத்திற்குப் புனிதப் பயணம் மேற்கொள்ளும் வழக்கம் உடையவர்கள்.

முதல் நாளன்று நாங்கள் ஓர் ஆற்றின் கரையில் தங்கினோம். அதனைக் கடப்பதற்கு மூங்கிலால் ஆன மிதவையைப் பயன்படுத் தினோம். அங்கிருந்து நாங்கள் சுல்தானுடைய ராஜ்யத்தின் ஒரு கோடியில் இருந்த மனார் மண்டலி என்னும் அழகிய நகரத்திற் குச் சென்றோம். அந்த ஊர் மக்கள் எங்களுக்குச் சிறந்ததொரு விருந்தளித்தார்கள். விருந்தில் காட்டிலிருந்து உயிரோடுபிடித்துக்

கொண்டு வந்த முற்று எருமைக் கறியும், அரிசிச் சோறும், நெய்யும், மீனும், கோழிக் கறியும், பாலும் படைக்கப்பட்டன. அந்த ஊரில் ஒரே ஆளைத் தவிர வேறு முசல்மான் யாரும் இல்லை. அவனும் குராசானிலிருந்து வந்து உடல் நலத்தை முன்னிட்டு அங்குத் தங்கியிருந்தான். அவனும் எங்களோடு ஆதாமுடிக்கு வந்தான். மனார் மண்டலியிலிருந்து நாங்கள் பந்தர் சலாவாத் என்னும் சிறு நகரை அடைந்தோம். அதற்குப் பிறகு, நீரோடைகள் பலவற்றை உடைய கரடு முரடான நிலப்பகுதியின் வழியாகப் பயணஞ் செய்தோம். அங்கே யானைகள் பலவற்றைக் கண்டோம். ஆனால் அவை புனிதப் பயணிகளுக்கும் வெளி நாட்டாருக்கும் எவ்விதத் துன்பமும் தருவதில்லை. அதற்குக் காரணமாய் இருந்தது கபீப் என்பருடைய புதல்வரான ஷெயிக் அப்துல்லா என்பவருடைய அருளாகும். ஆதா முடிக்குப் போகும் வழியை முதன் முதலில் கண்டுபிடித்தவர் அவரே. அவருடைய காலத்திற்குமுன் முசல்மானியர் ஆதாமுடிக்குச் செல்வதைப் புறச்சமயிகள் தடுத்தார்கள்; அவர்களுக்குப் பலவகையில் தொல்லை கொடுத்தார்கள்; அவர்களோடு வாணிகஞ் செய்ய மாட்டார்கள்; அவர்களோடு ஒருங்கிருந்து உண்ணமாட்டார்கள். ஆனால், ஷெயிக் அப்துல்லாவுக்கும் காட்டு யானைகளுக்கும் இடையில் நடைபெற்ற அற்புத நிகழ்ச்சிக்குப் பிறகு [42] அவர்கள் முசல்மானியரை உயர்வாக மதித்து, அவர்களைத் தங்கள் வீட்டிற் குள் அனுமதித்து, அவர்களுடன் ஒருங்கிருந்து உண்ணவுந் தொடங்கினார்கள். தங்கள் மனைவி மக்களையும் முசல்மானிய ரோடு தங்குவதற்கு அனுமதிக்கும் அளவுக்கு அவர்கள் முசல் மானியரை இப்போது மதிக்கிறார்கள். இன்றைக்கும் அவர்கள் ஷெயிக் அப்துல்லாவை மிகவும் போற்றிப் பாராட்டுகிறார்கள். அவரை அவர்கள் 'பெரிய ஷெயிக்' என்று சொல்கிறார்கள்.

அதன் பிறகு நாங்கள் குன்கர் என்னும் நகரை அடைந்தோம். அங்கேதான் சிலன் தீவின் முதன்மையரசன் வசிக்கின்றான். அந்த நகரம் இருபெரு மலைகளுக்கு இடையிலுள்ள பள்ளத்

[42] இபன்பதூதா சொல்லும் கதை பின்வருமாறு:-

ஒருசமயம் ஷெயிக் சுமார் முப்பது கடுநோன்பு முஸ்லிம் துறவிகளுடன் ஆதாமுடிக்குச் சென்றுகொண்டிருந்தார். அவர்களுக்கு மிகுந்த பசியெடுத்த தால், ஷெயிக்கின் பேச்சைக் கேட்காமல், ஒரு யானைக் குட்டியைப் பிடித்துக் கொன்று தின்றுவிட்டார்கள். அன்றிரவு யானைகள் ஒன்றுதிரண்டு வந்து அந்த முப்பது துறவிகளையும் கொன்றுவிட்டன. ஷெயிக் யானைக் கறியைத் தின்னவில்லை. ஆதலால் யானைகள் அவரைக் கொல்லவில்லை. மாறாக ஒருயானை அவரைத் தூக்கித் தன்னுடைய முதுகின்மேல் வைத்துக்கொண்டு போயிற்று.—See, Gibb. pp. 95-6.

தாக்கில், ஒரு பெரிய விரிகுடாவின் அருகில் அமைந்துள்ளது. அந்த விரிகுடாவில் மணிக்கற்கள் கிடைப்பதால் அதனை ரத்தின விரிகுடா என்று சொல்கின்றனர்.

**குன்கர்**

நகருக்கு வெளியில், ஷாவுஷ் என்னும் பட்டப் பெயர் பெற்றவரும் ஷிராஜைச் சேர்ந்தவரும் ஆன ஷெயிக் உஸ்மானின் பள்ளிவாசல் இருக்கிறது. அரசனும் குடிகளும் அந்தப் பள்ளிவசாலுக்குச் சென்று, ஷெயிக் உஸ்மானுக்குத் தங்கள் மரியாதையைத் தெரிவித்துக் கொள்வது வழக்கம். அவர்தான் ஆதாமுடிக்குச் செல்பவர்களுக்கு வழிகாட்டியாய் இருந்தார். அவருடைய கால்களுள் ஒன்றும் கைகளுள் ஒன்றும் வெட்டப் பட்ட பிறகு அவருடைய புதல்வர்களும் அடிமைகளும் வழிகாட்டி களாய்ப் பணியாற்றினார்கள். அவர் ஒரு பசுவைக் கொன்று விட்டார் என்பதற்காக அவருடைய கை கால்கள் அவ்வாறு துண்டிக்கப்பட்டன. பசுவைக் கொன்றவனைக் கொன்றுவிட வேண்டும் அல்லது கொலை செய்யப்பட்ட பசுவின் தோலுக்குள் அவனை வைத்துக் கட்டித் தீயிலிட்டு எரித்துவிடவேண்டும் என்பது இந்துக்கள் வகுத்துள்ள விதி. ஆனால், ஷெயிக் உஸ்மான் இந்துக்களின் அன்பைப் பெற்றவராதலால், அவரைக் கொல்லாமல், அவருடைய கைகால்களை மட்டும் வெட்டி விட்டார்கள். அவருடைய வசதிக்காக அவர்கள் கடைத்தெரு ஒன்றில் கிடைத்த வருவாயை ஒதுக்கி வைத்தார்கள்.

குன்கரின் சுல்தான் குனர்[43] என்று சொல்லப்படுகிறான். அவனிடம் ஒரு வெள்ளை யானை இருக்கிறது. வெள்ளை யானையை நான் வேறெங்கும் கண்டதில்லை. புனிதத்துவம் வாய்ந்த முக்கிய மான சமயங்களில் அரசன் அதன்மீது செல்கின்றான். அப்போது அதனுடைய நெற்றியில் பெரிய பெரிய ரத்தினங்களைச் சூட்டி அணி செய்கிறார்கள். ஒரு சமயம் அந்த ராஜ்யத்துப் பிரபுக்கள் அவனுக்கெதிராய்க் கிளர்ந்தெழுந்து, அவனுடைய கண்களைப் பிடுங்கிவிட்டு, அவனுடைய மகனை அரியணை ஏற்றிவிட்டார்கள். கண்ணிழந்த பழைய அரசன் அந்த நரத்திலேயே இப்போதும் வாழ்கிறான்.

**ரத்தினங்கள்**

பஹ்ரமான் என்று சொல்லபடுகின்ற மாணிக்கக்கல் இந்த ராஜ்யத்தில் மட்டும் கிடைக்கிறது. அந்தக் கற்களுள் சில விரிகுடாவிலிருந்தும் சில நிலத்திற்கு அடியிலிருந்தும் எடுக்கப்படுகின்றன. விரிகுடாவி லிருந்து எடுக்கப்படுகின்ற கற்களே மிகவும் சிறந்தவையென்று

[43] கோனர்—அழகக் கோனர் என்பதுபோல.

உள்ளூர் மக்கள் கருதுகிறார்கள். சிலன் தீவிலுள்ள பலவேறு இடங்களிலும் மணிக்கற்கள் கிடைக்கின்றன. இந்தத் தீவில் இருக்கிற நிலம் முழுவதும் தனி மனிதருக்குச் சொந்தமானது. நிலத்தை யார் வேண்டுமானாலும் விலைக்கு வாங்கிக்கொள்ளலாம். அவ்வாறு ஒரு நிலத்தை வாங்குபவன் அதில் மணிக்கற்கள் இருக்கின்றனவா என்று கண்டுபிடிப்பதற்காக அதனைத் தோண்டுவான். அந்தக் கற்கள் இருந்தால், தோண்டிய இடத்தில் வெண்மையாகவும் புரை புரையாகவும் உள்ள கற்கள் கிடைக்கும். நிலத்துக்கு உடையவன் அவற்றைச் சாணைக்காரரிடம் அனுப்புவான். அவர்கள் அந்தக் கற்களை உடைத்து அவற்றிற்குள் இருக்கும் மணிக் கற்களை எடுப்பார்கள். இவ்வாறு மாணிக்கம், புட்பராகம், நீலம் ஆகிய கற்கள் சிலன் தீவில் கிடைக்கின்றன. நூறு பணத்திற்குக் குறையாத விலைமதிப்புடைய கற்கள் அனைத்தையும் அரசனுக்காக ஒதுக்கி வைத்து விடுவது இந்த நாட்டு வழக்கம். அரசன் அவற்றை விலைகொடுத்து வாங்கிக் கொள்கிறான். மீதியுள்ள கற்களை அவற்றைத் தோண்டி எடுத்தவர்களே வைத்துக் கொள்கிறார்கள். நூறு பணம் ஆறு பொன் நாணயத்திற்குச் சமம்.

சிலன் தீவில் வாழும் பெண்கள் அனைவருமே பல நிற மணிக் கற்கள் கோத்த மாலையைக் கழுத்தில் அணிந்துகொள்கிறார்கள். மேலும், அவர்கள் கையில் வளையல்களையும் காலில் சிலம்பு களையும் அணிந்துகொள்கிறார்கள். சுல்தானுடைய குடும்பத்துப் பெண்கள் மணிக்கற்களால் ஆன பின்னல் வலை போன்ற நகை களைத் தங்கள் தலையில் அணிந்துகொள்கிறார்கள். சுல்தானுடைய வெள்ளை யானையின் நெற்றியை ஏழு ரத்தினங்கள் அணிசெய் கின்றன. அந்த ரத்தினங்கள் கோழிமுட்டையைக் காட்டிலும் பெரியவை. சுல்தான் ஐரி ஷக்ரவுதியின் அருகில் மாணிக்கத் தாலான ஒரு கையளவுள்ள கிண்ணத்தைக் கண்டேன். அதில் சோற்றுக் கற்றாழை எண்ணெய் ஊற்றிவைக்கப்பட்டிருந்தது. அதைக் கண்டதால் எனக்கு ஏற்பட்ட வியப்பை சுல்தானிடம் தெரிவித்தபோது, மாணிக்கத்தில் செய்யப்பட்ட இன்னும் பெரிய பொருள்கள் தன்னிடம் இருப்பதாய் அவன் சொன்னான்.

நாங்கள் குன்கரிலிருந்து புறப்பட்டு, உஸ்தா முஹமது அல்லூரியின் பெயரைத் தாங்கிய குகையொன்றனை அடைந்தோம். அந்தக் குகை ஒரு சிறு விரிகுடாவின் அருகிலுள்ள மலையின் சரிவில் இருக்கிறது. அதைத் தோண்டியவர் உஸ்தா முஹமது அல்லூரியே. அவர் ஒரு நல்ல மனிதர். பின்னர், அவர் அந்தக்

**கருங்குரங்கு**

குகையை விட்டுவிட்டு, கவுர்பூஜ்ஞு என்னும் பெயருடைய விரி குடாவுக்குச் சென்று, அதன் கரையில் தங்கினர். கவுர்பூஜ்ஞு என்றால் குரங்குகள் குடா என்பது பொருள். அங்குள்ள மலை களில் குரங்குகள் ஏராளமாய் இருக்கின்றன. அவை கறுப்பு நிறமும் நீண்டவாலும் உடையவை. ஆண் குரங்குகளுக்குத் தாடியிருக்கிறது. அந்தக் குரங்குகளுக்குத் தலைமை தாங்கிய குரங்கு ஒன்று உண்டென்றும், பிற குரங்குகள் அதனைத் தங்க ளுடைய அரசனைப்போல மதித்துக் கீழ்ப்படிகின்றன என்றும் ஷெயிக் உஸ்மானும் அவருடைய மகனும் வேறு சிலரும் சொன் னார்கள். தலைமைக் குரங்கு தன்னுடைய தலையில் இலைகளாலான ஒரு முடியைத் தரித்துக்கொண்டு கைத்தடியின்மீது சாய்ந்து நிற்கும். கையில் தடிவைத்துக் கொண்டிருக்கின்ற நான்கு குரங்குகள் தலைமைக் குரங்கின் இரு மருங்கிலும் நடந்து வரும். தலைமைக் குரங்கு அமர்ந்தால் அவைகள் அதன்பின்னால் நின்று கொள்ளும். அதனுடைய மனைவிகளும் குட்டிகளும் வந்து ஒவ் வொரு நாளும் அதன்முன் அமர்ந்து கொள்ளும். பிற குரங்குகள் சிறிது தள்ளி அமர்ந்துகொள்ளும். அப்போது தலைமைக் குரங்கின் பின்னால் நிற்கும் குரங்குகளுள் ஒன்று அந்தக் குரங்கு களிடம் ஏதோ செய்தியை அறிவிக்கும். உடனே அந்தக் குரங்குகள் அங்கிருந்து போய்விடும். சிறிது நேரத்தில் அவை வாழைப் பழம், எலுமிச்சம் பழம் போன்ற பழங்களை எடுத்துக் கொண்டு வரும். அவற்றைத் தலைமைக் குரங்கும், அதனுடைய மனைவிமக்களும் பின்னால் நிற்கும் நான்கு குரங்குகளும் தின்னும். அந்த நான்கு குரங்குகளும் வேறொரு குரங்கைத் தலைவன் முன்னால் நிறுத்தி, அதனைத் தங்கள் கைத்தடியால் அடித்து, அதனுடைய ரோமத்தைப் பிய்த்தெறிந்ததைக் கண்டதாக யோகி ஒருவர் என்னிடம் சொன்னர்.

அந்தக் குரங்குகள் கையில் எவளேனும் இளம் பெண் அகப் பட்டுக் கொண்டால், அவற்றின் காம வெறியிலிருந்து அவள் தப்ப இயலாது என்று நம்பத் தகுந்தவர்கள் என்னிடம் சொன் னார்கள். சிலன் தீவைச் சேர்ந்த ஒருவன் என்னிடம் சொன்ன செய்தியொன்றை இப்போது சொல்கிறேன். அவன் வீட்டில் ஒரு கருங்குரங்கு இருந்ததாம். அவனுடைய பெண்களுள் ஒருத்தி ஓர் அறைக்குள் சென்றபோது, அந்தக் குரங்கும் அவள் பின்னால் சென்று, அவளைப்பிடித்து, அவளோடு புணர்ந்ததாம். அவள் போட்ட கூச்சலைக் கேட்டு, வீட்டிலிருந்தவர்கள் ஓடிப்போய்ப் பார்த்த போது அது அவளைத் தழுவிக் கொண்டிருந்ததாம். அதனைக் கொன்றுதான் அந்தப் பெண்ணை விடுவித் தார்களாம்.

அங்கிருந்து நாங்கள் மூங்கில் விரிகுடாவுக்குச் சென்றோம். அதுதான் அபு அப்துல்லா தமக்குக் கிடைத்த இரு மாணிக்கங்களை சுல்தானுக்குக் கொடுத்த இடம். இச்செய்தியை நாம் முன்பு கூறியுள்ளோம். அதன் பிறகு நாங்கள் முதியவன் வீடு என்னும் இடத்தை அடைந்தோம். அதுவே மக்கள் வாழ்ந்த பகுதியின் கடைசியிடம். அதற்குப் பிறகு நாங்கள் பாபா டாஹிர் குகைக்கும் சபீக்கின் குகைக்கும் சென்றோம். பாபா டாஹிர் ஒரு நல்ல மனிதர். சபீக் என்ற இந்து முதலில் அரசராக இருந்தவர். பின்னர்த் தம்முடைய பதவியைத் துறந்து விட்டு இறை வழிபாட்டுக்கென அந்தக் குகையில் வசித்து வந்தார்.

**பறக்கும் அட்டை**

அந்த இடத்தில். உள்ளூர் வாசிகள் ஜோலு என்று சொல்கிற பறக்கும் அட்டையை நாங்கள் பார்த்தோம். அது நீருக்கு அருகில் உள்ள மரஞ் செடிகளின்மீது வசிக்கிறது. எவனுவது ஒருவன் அந்தப் பக்கம் வந்தால் அது அவன் மீது பாய்ந்து ஒட்டிக்கொள்கிறது. அது உடலின் எந்தப் பகுதியில் ஒட்டினுலும் அந்தப் பகுதியிலிருந்து குருதி வடிகிறது. அந்தப் பக்கம் போகிற மக்கள் தங்கள் கையில் ஓர் எலுமிச்சம் பழத்தையும் மரக்கத்தி ஒன்றையும் வைத்துக் கொள்கிருர்கள். அட்டை உடலில் ஒட்டினுல், உடனே அந்தப் பழத்தைப் பிழிந்து அதனுடைய சாற்றை அதன்மீது விடுகிருர்கள். அட்டை கீழே விழுந்து விடுகிறது. அதற்குப் பிறகு அட்டை ஒட்டிய இடத்தை மரக் கத்தியால் சுரண்டுகிருர்கள். ஒரு காலத்தில் அந்தப் பக்கமாய்ப் போய்க்கொண்டிருந்த புனிதப் பயணி ஒருவரின் உடலில் அட்டை ஒட்டிக் கொண்டது என்றும், அவர் நோய் வாய்ப்படிருந்ததால் எலுமிச்சஞ் சாற்றை அதன்மீது பிழிய அவரால் இயலவில்லை என்றும், அதனுல் அவர் உடலிலிருந்த குருதி முழுவதும் வடிந்து அவர் இறந்து போனுர் என்றும் என்னிடம் சொன்னுர்கள். அந்தப் பயணியின் பெயர் பாபா கூஜி என்பது. அங்குள்ள குகை ஒன்று அவருடைய பெயரைத் தாங்கிக் கொண்டிருக்கிறது. அங்கிருந்து நாங்கள் ஏழு குகைகள் என்னும் இடத்திற்கும் பிறகு இஸ்கந்தர் (அலக்சாந்தர்) தீவுக்குப் போனேம். அங்கே சப்ஹானி என்னும் குகையும், நீர் நிலையும், கோட்டையும் இருந்தன. நாங்கள் சென்றபோது அந்தக் கோட்டையில் மனிதர் வசித்து வந்தனர். அதற்குக் கீழே, 'சிந்தனையாளர் மூழ்கிய இடம்' என்னும் விரிகுடா இருந்தது. அதே இடத்தில் ஆரஞ்சுக் குகையும், சுல்தான் குகையும் இருந்தன. சுல்தான் குகைக்கு அருகில்தான் மலைக்குப் போகும் வாயில் இருந்தது.

**சரந்தீப்மலை (ஆதாமுடி)**

சரந்தீப் மலை உலகத்தின் மிக உயர்ந்த மலைகளுள் ஒன்று. சிலன் தீவுக்கு ஒன்பது நாள் பயணத்தில் இருக்கும் போதே அந்த மலையை நாங்கள் கடலிலிருந்து பார்த்தோம். **மலையேறுதல்** நாங்கள் அதன்மீது ஏறிப் பார்த்தபோது, அதனுடைய அடிவாரத்தை மேகம் மறைத்துக் கொண்டிருந்தது. அந்த மலையில் பசுமை மாறாத பலவகை மரங்களும் பலவேறு நிறமுடைய மலர்களும், கையகலமுள்ள ரோஜாப் பூவும் இருக்கின்றன. அந்த ரோஜா மலரில் எல்லாம் வல்ல இறைவன் பெயரும் தீர்க்கதரிசியின் பெயரும் பொறிக்கப் பட்டிருக்கின்றன என்று மக்கள் சொல்கிறார்கள். ஆதாம் திருவடிக்குச் செல்வதற்கு இரண்டு வழிகள் இருக் கின்றன. ஒன்றின் பெயர் ஆதாம் வழி, இன்னொன்றின் பெயர் ஏவாள்வழி. ஆதாம் வழி கரடுமுரடானது, ஏறுவதற்குக் கடினமானது. ஏவாள் வழி ஏறுவதற்கு எளியது. பயணிகள் இறங்கும்போது ஏவாள் வழியில் இறங்குகிறார்கள். ஏறும் போது அந்த வழியிற் செல்பவர்கள் புனிதப் பயணஞ் செய்த வர்கள் என்று கருதப்பட மாட்டார்கள். மலையடிவாரத்தில் தலை வாயிலுக்கருகில் இஸ்கந்தர் (அலக்சாந்தர்) பெயர் தாங்கிய அழகுக் குகையும் நன்னீர் ஊற்றும் இருக்கின்றன.

மலையேறுவதற்கு உதவக்கூடிய படிகளைப் பண்டைக் காலத்து மக்கள் பாறையில் வெட்டி வைத்திருக்கிறார்கள். மேலும், அங்கே இருப்புக் கம்பங்கள் நாட்டி அவற்றில் சங்கிலி களையும் பிணைத்து வைத்துள்ளார்கள். மலையேறுபவர்கள் அந்தச் சங்கிலிகளைப் பிடித்துக் கொண்டு ஏறலாம். அங்கே பத்துச் சங்கிலிகள் இருக்கின்றன. அவற்றுள் இரண்டு அடிவாரத்தில் வாயிலுக்கருகில் இருக்கின்றன. அங்கிருந்து மேலே போகப் போக ஒன்றன்பின் ஒன்றாக ஏழு சங்கிலிகள் இருக்கின்றன. பத்தாம் சங்கலியை '(முஸ்லிம்) சமய நம்பிக்கைச் சங்கிலி' என்று சொல்கின்றனர். அந்த இடத்தை அடைந்த மனிதன் கீழே பார்த்தால் விழுந்துவிடக் கூடும் என்னும் அச்சமும் ஒருவகை மருட்சியும் அவனைப் பற்றிக்கொள்ளும். உடனே அவன் 'ஆண்டவனைத் தவிர வேறு கடவுளில்லை; முஹமதுவே தீர்க்க தரிசி' என்று வாய்விட்டுச் சொல்வான். பத்தாம் சங்கலியைத் தாண்டியதும் ஒரு மோசமான பாதை இருக்கிறது. பத்தாம் சங்கிலியிலிருந்து கிசிர்க் குகைக்கு ஏழு மைல். அந்தக் குகை ஒரு பரந்த வெளியில் இருக்கிறது. அதனருகில் உள்ள கிசிர் ஊற்றில் மீன்கள் ஏராளமாய் இருக்கின்றன. ஆனால், அவற்றை யாரும்

பிடிப்பது கிடையாது. குகைக்குப் பக்கத்தில் பாறையில் குடையப்பட்ட நீர்த் தொட்டிகள் இரண்டு இருக்கின்றன. அவை பாதையின் இருமருங்கிலும் அமைந்துள்ளன. பயணிகள் தங்களுடைய பொருள்களை அங்குள்ள சிகிர்க் குகையில் வைத்து விட்டு, மேலும் இரண்டு மைல் ஏறி, ஆதாம் திருவடியுள்ள இடத்தை அடைகிறார்கள்,

**ஆதாம் திருவடி**

அகன்ற இடத்தில் இருக்கின்ற உயர்ந்த கரிய பாறை ஒன்றில் தந்தை ஆதாமின் திருவடி அமைந்துள்ளது. ஆதாமின் கால் பாறையில் புதைந்ததால் பாறை குழியாகிவிட்டது. அந்தக் குழி அவருடைய திருவடியின் உருவத்தைத் தெளிவாகக் காட்டுகிறது. அது பதினொரு சாண் நீளமுள்ளது. முன்னொரு காலத்தில் சீனர் அங்குச் சென்று, திருவடியின் பெருவிரல் புதைந்திருந்த பகுதியையும் அதனை அடுத்த சில பகுதிகளையும் பாறையிலிருந்து வெட்டியெடுத்துக் கொண்டுபோய், ஜைட்டுன் நகரிலுள்ள கோயிலில் வைத்துவிட்டனர். அந்தத் திருச் சின்னத்தைக் காண்பதற்காகச் சீனாவின் மிகத் தொலைவிலுள்ள பகுதிகளிலிருந்தும் மக்கள் செல்கிறார்கள். திருவடி பதிந்துள்ள பாறையில் ஒன்பது தொளைகள் போடப்பட்டுள்ளன. புறச் சமயப் பயணிகள் அந்தத் தொளைகளில் பொன், மணி, முத்து முதலியவற்றைப் போடுகிறார்கள். ஆதாமுடிக்குச் செல்கின்ற பக்கிரிகள் கிசிர்க் குகையை அடைந்தவுடனே ஒருவரையொருவர் முந்திக்கொண்டு அந்தப் பாறையை நோக்கி ஓடுகிறார்கள். பாறையை அடைந்ததும் அதிலுள்ள தொளைகளில் கைவிட்டு அங்கு என்னென்ன பொருள்கள் இருக்கின்றனவோ அவற்றை எல்லாம் எடுத்துக் கொள்கிறார்கள். நாங்கள் போனபோது அந்தத் தொளைகளில் சிறிதளவு பொன்னும் சில கற்களும் இருந்தன. அவற்றை எங்களுடைய வழிகாட்டிக்குக் கொடுத்து விட்டோம். ஆதா முடிக்குச் செல்கின்ற பயணிகள் கிசிர்க் குகையில் மூன்று நாள் தங்கி, ஒவ்வொரு நாளும் காலை மாலை ஆகிய இரு வேளைகளிலும் திருவடியைக் கண்டு வழிபடுவது வழக்கம். நாங்களும் அவ்வாறே செய்தோம்.

மூன்று நாட்களுக்குப் பின்னர் நாங்கள் ஏவாள் வழியாய்க் கீழே இறங்கி ஷியாமின் குகைக்கு அருகில் முகாமிட்டோம். ஷியாமே ஆதாமின் மகனான ஷைத். அதன் பின் நாங்கள் மீன் குடாவுக்கும், குரும்லா, ஜபர்க்காவான், தில் தினிவா, ஆட்டக்

வலஞ்சா என்னும் நகரங்களுக்கும் சென்றேம். கடைசியில் சொன்ன நகரத்திற்றுன் கபீபின் புதல்வரான ஷெயிக் அபு அப்துல்லா குளிர்காலத்தின் போது தங்கியிருந்ததார். இந்த நகர்கள் அனைத்தும் மலைமீது இருக்கின்றன. மலையடிவாரத்தில் திரக்தீரவான் (நடக்கும் மரம்) இருக்கிறது. அந்த முதிய மரத்தின் இலைகளுள் ஒன்றுகூட உதிர்வதில்லை. அதனுடைய இலைகளைக் கண்ட யாரையுமே நான் பார்க்கவில்லை. மலையின் முடிமீதிருந்து அந்த மரத்தைப் பார்ப்பவர்கள் அது வெகு தொலைவில் மலையடிவாரத்தில் இருக்கிறதென்று கருதுகிறுர்கள். அதுபோலவே அடிவாரத்திலிருந்து பார்ப்பவர்கள் அது வெகு தொலைவில் மேலே இருக்கிறதென்று கருதுகிறுர்கள். அதனுல் தான் அதற்கு நடக்கும் மரம் என்ற பெயர் வழங்குகிறது. அந்த மரத்தின் இலைகள் உதிர்வதைக் காணவேண்டும் என்ற நோக்கத்துடன் மலையடிவாரத்தில் எப்போதும் காத்துக் கொண்டிருக்கிற யோகியர் சிலரை நான் அங்கே கண்டேன். யாரும் அடைய இயலாத ஓரிடத்தில் அந்த மரம் வளர்ந்திருக்கிறது. அந்த மரத்தைப் பற்றி உருவழிபாட்டினர் பல கதைகளைச் சொல்கின்றனர். அந்த மரத்தின் இலைகளைத் தின்றுல் முதுமை மாறி மீண்டும் இளமை தோன்றும் என்பது அந்தக் கதைகளுள் ஒன்று. ஆனுல் அது பொய்.

அந்த மலையடிவாரத்தில் இருக்கின்ற விரிகுடாவில்தான் இரத்தினங்கள் கிடைக்கின்றன. அதனுடைய நீர் மிகுந்த நீல நிறமுடையது—அதாவது, பார்ப்பதற்கு அவ்வாறு தோன்றுகிறது. அங்கிருந்து இரண்டு நாள் பயணஞ் செய்தபின் நாங்கள் கடற்கரையிலுள்ள பெரிய நகரமான தீனூரை அடைந்தோம். அங்கு வணிகர் வாழ்கின்றனர். அந்த நகரத்தில் ஒரு பெரிய கோயில் இருக்கிறது. அதிலிருக்கின்ற தெய்வச் சிலைக்குத் தீனூராண்டவன் என்பது பெயர். அந்தக் கோயிலில் பார்ப்பனரும் யோகியரும் ஆயிரம் பேர் இருக்கின்றனர். மேலும் உருவவழிபாட்டினருக்குப் பிறந்த மகளிர் ஐந்நூறு பேர் இருக்கின்றனர். ஒவ்வோர் இரவிலும் தெய்வச் சிலையின்முன் ஆடுவதும் பாடுவதும் அவர்களுடைய பணி. நகரமும் அதில் வருகின்ற வருவாயும் கோயிலுக்குச் சொந்தமானவை. கோயிலில் வசிப்போருக்கும் வழிபாட்டிற்கு வருவோருக்கும் கோயிலில் உணவளிக்கப்படுகிறது. கோயிலிலுள்ள சிலை தங்கத்தாலானது; ஓராள் உயரமுடையது, அதனுடைய கண்களில் மாணிக்கங்கள் பதிக்கப்பட்டுள்ளன. அவ்விரு மாணிக்கங்களும் இரவில் விளக்கைப்போல ஒளிவிடுகின்றன என்று நான் கேள்விப்பட்டேன்.

பின்னர், தீனூரிலிருந்து ஆறு பரசங்குத் தொலைவிலுள்ள க்வாலி (காலே) என்னும் சிறு நகரை அடைந்தோம். அங்கு வாழ்ந்த முசல்மான் ஒருவன் தன் வீட்டில் எங்களுக்கு விருந்தளித்து உபசரித்தான். அங்கிருந்து நாங்கள் கலன்பு (கொழும்பு) என்னும் நகருக்குப் புறப்பட்டோம். சிலன் தீவிலுள்ள மிகப் பெரிய, மிக அழகிய, நகரங்களுள் அதுவும் ஒன்று. அங்கேதான் கடற்படைத் தலைவனை—அதாவது, ஜலஸ்திப் பதவி வகித்த—பிரபு வாழ்ந்தான். அவனிடம் ஐந்நூறு அபிசீனியர் ஊழியம் புரிகின்றனர்.

**கொழும்பு**

அங்கிருந்து புறப்பட்ட மூன்று நாட்களுக்குப்பின் பட்டாலா என்னும் நகரை அடைந்தோம். அந்த நகரைப் பற்றி நான் முன்னரே கூறியுள்ளேன். அங்கே கப்பல் தலைவன் இப்ராஹிம் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தான். நான் முன்னர்ச் சொன்ன சுல்தானை மீண்டும் கண்டு பேசினேன்.

**பட்லம்**

பின்னர் எங்கள் கப்பல் மா'பாருக்குப் புறப்பட்டது. காற்று மிகக் கடுமையாய் வீசியதால் எங்கள் கப்பலில் நீர் புகுந்துவிடும் என்று அஞ்சினோம். கப்பலை ஓட்டுவதற்கேற்ற பயிற்சி பெற்ற மாலுமி இல்லாததால் எங்கள் கப்பல் கட்டுக் கடங்காமல் பாறைகளை நோக்கிச் செல்லத் தொடங்கியது. நல்ல வேளையாகப் பாறை மீது மோதவில்லை. அதற்குப் பிறகு அது ஆழமற்ற பகுதியொன்றை அடைந்து தரைதட்டி நின்றுவிட்டது. நாங்கள் சாவின் வாயிலுக்குச் சென்றுவிட்டோம். பயணிகள் தங்களுடைய உடைமைகளைக் கடலில் எறிந்துவிட்டு ஒருவரிடம் ஒருவர் விடை பெற்றுக் கொள்ளத் தொடங்கினர். பின்னர் நாங்கள் பாய் மரத்தை வெட்டிக் கடலில் போட்டோம். மாலுமிகள் பலகைகளை இணைத்து மிதவையொன்று செய்தார்கள். அப்போது நாங்கள் கரையிலிருந்து இரண்டு பரசங்குத் தொலைவில் இருந்தோம். நானும் மிதவையில் ஏறிக்கொள்ள விரும்பினேன். என்னுடன் என்னுடைய தோழர் இருவரும் வைப்பாட்டிமார் இருவரும் இருந்தனர். 'எங்களை விட்டுவிட்டு நீ மட்டும் போக விரும்புகிறாயா?' என்று அவர்கள் கேட்டார்கள். உடனே நான் என்னுடைய தோழர் இருவரையும் பார்த்து 'நீங்கள் என் அன்பிற்கு மிகவும் உரியவளான இந்த இளம் பெண்ணோடு மிதவையில் ஏறிக்கொள்ளுங்கள்' என்று சொல்லிவிட்டேன். இன்னொரு பெண் 'நான் நன்றாக நீந்தக்கூடியவள். என்னுடைய

**மா'பாருக்கு**

இடுப்பில் ஒரு கயிற்றைக் கட்டி, அதனை மிதவையுடன் இணைத்துக் கொண்டு. நான் நீந்திக் கரை சேர்கிறேன்' என்று சொன்னாள். என்னுடைய தோழர்களும் வைப்பாட்டி ஒருத்தியும் மிதவையில் ஏறிக்கொண்டார்கள். (அந்தத் தோழர்களுள் ஒருவன் பர்ஹானுல் தூசரி என்பவனுடைய மகனான முகமது; இன்னொருவன் எகிப்து நாட்டைச் சேர்ந்தவன்.) என்னுடைய வைப்பாட்டிகளுள் இன்னொருத்தி தான் சொன்னபடியே மிதவையுடன் தன்னைக் கயிற்றால் இணைத்துக் கொண்டாள். மாலுமிகளும் அவ்வாறே செய்தார்கள். அவர்கள் புறப்படு வதற்குமுன் நான் என்னுடைய உடைமைகள், அணிமணிகள், அம்பர் முதலியவற்றை அவர்களிடம் ஒப்படைத்தேன். காற்று வாய்ப்பாய் அடித்ததால் அவர்கள் அபாயமின்றிக் கரை சேர்ந்தார்கள். நான் கப்பலிலேயே தங்கிவிட்டேன். கப்பல் தலைவன் ஒரு பலகைமீது ஏறி அதன் துணையுடன் கரை சேர்ந்தான். மாலுமிகளுள் சிலர் என்னுடன் தங்கிவிட்டனர். அவர்கள் நான்கு மிதவைகள் செய்வது என்று முடிவு செய்து அந்தப் பணியைத் தொடங்கினார்கள். ஆனால், அந்தப் பணி முடிவுறுவதற்குள் இரவு வந்துவிட்டது. கப்பலினும் நீர் புகுந்து விட்டது. நான் கப்பலின் பின்கோடி மேடைத் தளத்தின்மீது ஏறி இரவைக் கழித்தேன். காலையில் உருவ வழிபாட்டினர் சிலர் தம்முடைய படகில் வந்து எங்களைக் காப்பாற்றிக் கரை சேர்த்தனர். இவ்வாறு நாங்கள் மா'பாரை அடைந்தோம். அந்த உருவ வழிபாட்டினர் திறை செலுத்திய சுல்தானுக்கு நாங்கள் நண்பர்கள் என்று சொன்னோம். உடனே அவர்கள் நாங்கள் கரையிறங்கிய செய்தியை சுல்தானுக்குக் கடித மூலம் தெரிவித்தார்கள். அப்போது சுல்தான் இரண்டு நாள் பயணத் திற்கு அப்பாலிருந்த உருவ வழிபாட்டினருடன் போர் செய்து கொண்டிருந்தான். எனக்கு நேர்ந்தவற்றை எல்லாம் எழுதி நானும் சுல்தானுக்கு ஒரு கடிதம் அனுப்பினேன்.

உருவ வழிபாட்டினர் எங்களை ஒரு பெரிய காட்டிற்கு அழைத்துக் கொண்டுபோய்க் கர்ப்பூசனி போன்ற ஒரு பழத்தைக் காண்பித்தனர். அது மகுல் என்னும் குட்டைப் பனையில் காய்க்கிறது. அந்தப் பழத்திற்குள் பஞ்சு போன்ற ஒரு பொருள் இருக்கிறது. அதில் தேன் போன்ற வேறொரு பொருள் இருக்கிறது. அதனை எடுத்துப் பண்ணியம் போன்ற தின்பண்டம் செய்கிறார்கள். தல் என்னும் பெயருடைய அந்தப் பண்டம் சர்க்கரைபோல இனிக்கிறது. உருவ வழிபாட்டினர் எங்களுக்குத் தல்லும் நல்ல மீனும் அளித்தனர். அங்கே நாங்கள் மூன்று நாள் இருந்த பின்னர், சுல்தான் அனுப்பிய க்வமாருதீன் என்னும்

அமீரும் குதிரைப் படையினர் கால்லாட் படையினர் ஆகியோர் சிலரும் வந்து சேர்ந்தனர். அவர்களோடு சிவிகை ஒன்றும் பத்துக் குதிரைகளும் வந்தன. நான் ஒரு குதிரைமீது ஏறிக்கொண்டேன். அது போலவே, கப்பல் தலைவனும் என்னுடைய வைப்பாட்டி ஒருத்தியும், பிற தோழர்களும் குதிரை ஏறிக்கொண்டார்கள். என்னுடைய இன்னொரு வைப்பாட்டி சிவிகையில் ஏறிக் கொண்டாள். பின்னர் நாங்கள் எங்கள் பயணத்தைத் தொடங்கி முதலில் ஹர்க்காட்டு[44] என்னும் கோட்டையை அடைந்து இரவைக் கழித்தோம். அங்கேயே நான் என் வைப்பாட்டி களையும், என்னுடைய தோழர்கள் அடிமைகள் ஆகியவர்களுள் சிலரையும் விட்டுவிட்டு, மீண்டும் பயணத்தைத் தொடங்கி, அன்றிரவு சுல்தானுடைய முகாமை அடைந்தேன்.

மா'பார் சுல்தானுடைய பெயர் கியாசுதீன் உல் தாமகானி என்பதாகும். தொடக்கத்தில் அவன் சுல்தான் முகமதுவின் அலுவலர்களுள் ஒருவனான அபு உல்ரஜா[45] என்பவனுடைய தலைமையில் ஒரு குதிரை வீரனாயிருந்தான். பின்னர் சாயீத் சுல்தான் ஜலாலுதீனுடைய மகனான அமீர் ஹாஜி என்பவனிடம் பணிபுரிந்தான். இறுதியில் அவனுக்கு அரசுரிமை கிடைத்தது. அதற்குமுன் அவன் சிராஜுத்தீன் என்னும் பெயருடையவனாய் இருந்தான். ஆனால், அரியணை ஏறியபின் கியாசுதீன் என்னும் பெயரை வைத்துக்கொண்டான். மா'பார் முன்னர் டில்லி அரசனான சுல்தான் முகமதுவின் அதிகாரத்தில் இருந்தது. பின்னர் என்னுடைய மாமனார் ஷரீப் ஜலாலுதீன் அஹசன்ஷா சுல்தான் முகமதுவுக்கு எதிராய்க் கிளர்ச்சி செய்து மா'பாரைச் சுயேச்சை பெற்ற ராஜ்யமாக்கி, அதனை ஐந்தாண்டு ஆட்சி செய்தான். அதன்பின் அவனைக் கொன்றுவிட்டு அவனுடைய அமீர்களுள் ஒருவனான அலாவுதீன் உதைஜி என்பவன் அரசனானான். அவன் அரியணை ஏறிய ஓராண்டுக்குப் பின் உருவ வழிபாட்டினரோடு போருக்குச் சென்று, அவர் களுடைய பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டு வந்தான். அடுத்த ஆண்டும் அவன் உருவ வழிபாட்டினரோடு போருக்குப் போய், அவர்களைத் தோற்கடித்து, அவர்களுள் மிகப்

[44] இது இன்றைய ஆர்க்காடாயிருக்க முடியாது. அது வடக்கே வெகு தொலைவில் இருக்கிறது. தஞ்சாவூர் அல்லது தென்னார்க்காட்டு மாவட்டத்தில் ஏதாவது ஓரிடமாயிருக்கலாம்.—See Colas, i, p. 31.

[45] இபன்பதூதா அங்குச் சென்றபோது இந்த அலுவலன் பியானாவுக்கு அதிகாரியாய் இருந்தான். சுல்தான் முகமதுவின் ஆலோசனைக் குழுவில் இவன் ஓர் உறுப்பினன். N. V. R.

பலரைக் கொன்று குவித்தான். அந்தப் பெரு வெற்றி பெற்ற அதே நாளில் அவன் தண்ணீர் குடிப்பதற்காகத் தன்னுடைய தலைக் கவசத்தைக் கழற்றினான். அப்போது எவனோ ஒருவன் எய்த அம்பு அவனுடைய உயிரைக் குடித்துவிட்டது. அதன்பின் அவனுடைய மருமகன் குத்புதீன் என்பவன் அரியணை ஏற்றப் பட்டான். அதற்குப் பிறகு சுல்தான் கியாசுதீன் அரசனாக்கப் பட்டான். அவன், சுயேச்சை பெற்ற மா'பாரின் முதல் அரசனான்; ஷரீப் ஜமாலுதீன் அஹ்சன்ஷாவின் மகளை மணந்து கொண்டான். அவளுடைய சகோதரியை டில்லியிலிருந்தபோது நான் திருமணம் செய்துகொண்டிருந்தேன்.

**சுல்தான் கியாசுதீன் அவைக்கு நான் சென்றது பற்றி**

நாங்கள் சுல்தானுடைய முகாமை நெருங்கியதும் எங்களை வரவேற்பதற்காக அவன் தன்னுடைய உள்படு கருமத் தலைவர்களுள் ஒருவனை அனுப்பினான். அவன் ஒரு மரக் கோபுரத்தில் அமர்ந்திருந்தான். யாரும் பூட்ஸ் (காலணி) அணியாமல் சுல்தான் முன்னால் செல்லக் கூடாதென்பது இந்தியாவில் பின்பற்றப்படும் வழக்கம். என்னிடம் பூட்ஸ் இல்லை. அதைக் கண்ட உருவ வழிபாட்டினன் ஒருவன் தன்னுடைய பூட்ஸை எனக்குக் கொடுத்தான். அப்போது அங்கே முசல்மான்கள் பலர் இருந்தனர். ஆனால் அவர்களுள் யாரும் எனக்கு உதவ முன்வரவில்லை. பூட்ஸை அணிந்துகொண்டு நான் சுல்தான்முன் சென்றேன். அவன் என்னை அமருமாறு பணித்து, காஜியையும் சத்ருல் ஜமான் பாஹாவுதீன் என்னும் பெயருடைய ஹாஜியையும்[46] அழைத்து வருமாறு ஆள் அனுப்பினான். அதற்குப் பிறகு சுல்தான் தன்னுடைய கூடாரத்திற்கு அருகிலிருந்த மூன்று கூடாரங்களில் நான் தங்குவதற்கு ஏற்பாடு செய்தான். மா'பாரில் கூடாரத்தை 'கியாம்' என்று சொல்கிறார்கள். ('கியாம்' என்பது ஒருமை. கைமாஹ்' என்பது பன்மை.) சுல்தான் எனக்குச் சமுக்காளங்களையும், இந்த ஊர் உணவான (நெல்லஞ்) சோறு இறைச்சி ஆகியவற்றையும் அனுப்பினான். நம்மூரைப் போலவே இந்த ஊரிலும் உணவின் இறுதியில் மோர் தருகிறார்கள்.

பின்னர் நான் சுல்தானைக் கண்டு பேசியபோது, மாலத் தீவுக்கு ஒரு படையை அனுப்புவதற்குரிய திட்டம் ஒன்றைச் சமர்ப்பித்தேன். அவனும் அதனை ஏற்றுக்கொண்டு, வீரர்களை மாலத்தீவுகளுக்கு ஏற்றிச் செல்வதற்கென்று கப்பல்கள்

[46] மெக்காவுக்குச் சென்று திரும்பியவன்.

சிலவற்றைத் தெரிந்தெடுத்தான். மேலும் மாலத்தீவு சுல்தானுவுக்கு ஒரு பரிசையும், அந்த ராஜ்யத்தின் அமீர்கள் வாஜீர்கள் ஆகியவர்களுக்கு ஆடைகளையும் அனுப்புவது என்றும் முடிவு செய்தான். அன்றியும், சுல்தானுவின் சகோதரியை மணந்து கொள்ளவும் தீர்மானித்து, அதற்குரிய ஒப்பந்தத்தைத் தயாரிக்கும் பணியை என்னிடம் ஒப்படைத்தான். இறுதியாக, ஏழைகளுக்கு அளிப்பதற்கேற்ற பொருள்களை மூன்று கப்பல்களில் ஏற்றுமாறு பணித்தான். பின்னர் என்னை அழைத்து, 'நீர் மாலத்தீவுக்குப் போய்விட்டு ஐந்து நாளில் திரும்ப வேண்டும்' என்று தெரிவித்தான். ஆனால், கடற்படைத் தலைவனுன க்வாஜா சர்லக் மாலத் தீவுக்குப் போய்ச் சேர்வதற்கே மூன்று மாதம் பிடிக்கும் என்று சொன்னான். உடனே சுல்தான் என்னைப் பார்த்து, 'அப்படியானல் நீர் பட்டனுக்கு வாரும். இந்தப் போரை முடித்த பின்னர் நாம் மதுரைக்குப் போவோம். பிறகு அங்கிருந்து நீர் மாலத்தீவுக்குப் போகலாம்' என்று சொன்னான். எனவே நான் சுல்தானுடன் தங்கி, என்னுடைய அடிமைப் பெண்களையும் தோழர்களையும் வரவழைத்துக் கொண்டேன்.

**சுல்தானுடைய படையின் முன்னேற்றம்; பெண்களையும் குழந்தைகளையும் இரக்கமின்றிக் கொன்று குவித்தல்.**

நாங்கள் கடந்து செல்ல வேண்டிய பகுதி மரமும் கோரைப் புல்லும் நிறைந்து, மிக அடர்ந்த காடாயிருந்தது. படையிலிருந்த ஒவ்வொருவரும்—உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வேறுபாடின்றி—ஒவ்வொரு கைக் கோடரியை வைத்துக்கொள்ள வேண்டும் என்றும், எதிர்ப்பட்ட மரம் செடி கொடிகளை வெட்டி வீழ்த்த வேண்டும் என்றும் சுல்தான் ஆணையிட்டான். போர் வீரர்களும் அவ்வாறே செய்ய ஆயத்தமானார்கள். அவர்களுடைய வேலையை மேற்பார்வை இடுவதற்கு சுல்தான் தன் குதிரைமீது ஏறிச்சென்றான். காலை முதல் நண்பகல் வரையில் அந்த வேலை நடந்தது. பின்னர் அனைவரும் உணவு கொண்டனர். மீண்டும் மரம் வெட்டும் வேலை தொடங்கி மாலை வரையில் நடந்தது. காட்டில் வாழ்ந்த முஸ்லிமல்லாதோர் அனைவரும் சிறை பிடிக்கப் பட்டனர். இரு முனைகளும் கூராக்கப்பட்ட கழிகளைச் சிறை பிடிக்கப்பட்ட ஆடவரிடம் கொடுத்து, அவற்றைத் தம் தோளில் சுமந்துகொண்டு வருமாறு சுல்தான் ஆணையிட்டான். அவர்களுடன் அவர்களுடைய பெண்டு பிள்ளைகளும் இருந்தார்கள். பாசறையைச் சுற்றிலும் திண்ணிய கழியரண் அமைத்துக்கொள்வது இந்த நாட்டு வழக்கம். அவ்வரணைக்

'கட்கர்' என்று சொல்கின்றனர். அதில் நான்கு வாயில்கள் உண்டு. அரசன் தங்கியிருக்கிற பகுதியைச் சுற்றிலும் இன்னொரு கட்கரை அமைக்கின்றனர். முதன்மையான கழியரணுக்கு வெளியில் மூன்றடி உயரமுள்ள மேடைகளை அமைத்து, அவற்றின்மீது தீமூட்டி, விடியும் வரையில் அது அணையாதவாறு பார்த்துக்கொள்கின்றனர். அடிமைகளும் பாராக்காரர்களும் தீயின் அருகில் அமர்ந்துகொள்கிறார்கள். அவர்கள் கையில் சிறு குச்சிகளாலான பந்தங்கள் இருக்கின்றன. இரவில் முஸ்லிமல்லாதவர்கள் முகாமைத் தாக்க வந்தால், பாராக்காரர்கள் தங்கள் கைப்பந்தங்களைக் கொளுத்துகிறார்கள். அந்த வெளிச்சம் இரவைப் பகலாக்குகிறது, அதனால் குதிரை வீரர்கள் எதிரிகளைத் துரத்தியடிப்பது மிவும் எளிதாகிறது.

சிறை பிடிக்கப்பட்ட முஸ்லிமல்லாதவர்களை மறுநாள் காலையில் நான்கு பிரிவுகளாக்கி, வெளிவாயில் நான்கினுக்கும் கொண்டுபோனார்கள். அங்கே அவர்களே முன்னாள் சுமந்து கொண்டு வந்த கூர்ங்கழிகளை நட்டு, அவற்றில் அவர்களைக் கழுவேற்றி விட்டார்கள். பின்னர்ப் பெண்களைக் கழுமரத்தோடு சேர்த்து அவர்களுடைய கூந்தலாலேயே கட்டிக் கொன்றார்கள். அதன்பின் அவர்களுடைய கையிலிருந்த குழந்தைகளைக் கொன்று வீழ்த்தினார்கள். அதற்குப் பிறகு, படை அந்த முகாமிலிருந்து நகர்ந்து, எதிர்ப்பட்ட இன்னொரு காட்டின் மரங்களை வெட்டத் தொடங்கியது. அன்று சிறை பிடிக்கப்பட்ட இந்துக்களுக்கும் அதே கதி நேர்ந்தது. இத்தகைய கொடுமையை வேறு எந்த அரசனும் செய்ததில்லை. அதனால்தான் ஆண்டவன் கியாசுதீனை வெகு விரைவில் கொன்றுவிட்டான்.

ஒரு நாள் கியாசுதீனுடன் நானும் காஜியும் உணவருந்திக் கொண்டிருந்தோம். அப்போது உருவ வழிபாட்டினன் ஒருவன் சுல்தான்முன் கொண்டுவரப்பட்டான். அவனுடன் அவனுடைய மனைவியும் ஏழு வயது மகனும் இருந்தார்கள். உருவ வழிபாட்டினனுடைய தலையை வெட்டிவிடுமாறு சுல்தான் தன்னுடைய ஆட்களுக்குச் சாடை காட்டினான். பின்னர் அவனுடைய மனைவியையும் மகனையும் கொன்றுவிடுமாறு அரபு மொழியில் ஆணையிட்டான். உடனே நான் வேறுபுறம் திரும்பிக் கொண்டேன். பின்னர் என் மனம் ஒரு நிலைக்கு வந்தபோது திரும்பிப் பார்த்தேன். மூன்று தலைகள் அங்கே தரையில் உருண்டு கிடந்தன.

இன்னொரு நாள் நான் கியாசுதீனுடன் இருந்தபோது ஓர் இந்து அவன்முன் கொண்டுவரப்பட்டான். அவனைப் பார்தத

சுல்தான் எனக்குத் தெரியாத மொழியில் சில சொற்களைச் சொன்னான். உடனே அவனுடைய வீரருட் பலர் தம் வாளை உருவினர். அதைக் கண்டதும் நான் அவசரமாக எழுந்து நின்றேன். 'நீர் எங்கே போகிறீர்?' என்று சுல்தான் என்னைக் கேட்டான். 'பிற்பகல் (4 மணி) தொழுகைக்கு' என்று நான் விடையளித்தேன். என் எண்ணத்தை அறிந்துகொண்ட சுல்தான் சிரித்துக்கொண்டே அந்த இந்துவின் கை கால்களை வெட்டிவிடுமாறு கட்டளையிட்டான். நான் திரும்பி வந்தபோது அந்தப் பரிதாபத்திற்குரிய இந்து தன்னுடைய ரத்தத்திலேயே நீந்திக்கொண்டிருந்தான்.

### இந்துக்களின் தோல்வியும் இஸ்லாத்தின் பெரு வெற்றியும்

கியாசுதீனுடைய ராஜ்யத்திற்கு அடுத்த ராஜ்யத்தை பலால்தேவ் என்னும் இந்து அரசன் ஆண்டுகொண்டிருந்தான். அவன் ஒரு வலிமைமிக்க அரசன். அவனுடைய படையில் ஒரு லட்சம் இந்து வீரர் இருந்தனர்; அன்றியும் முசல்மானியர், தூர்த்தர்கள், குற்றவாளிகள், தப்பியோடிய அடிமைகள் ஆகியோர் 20,000 பேர் இருந்தனர். அந்த அரசன் மா'பாரை வென்று தன்னுடைய ஆட்சிக் கீழ்க் கொண்டுவர விரும்பினான். மா'பார் முஸ்லிம் படையில் 6,000 வீரர்களே இருந்தார்கள். அவர்களுள் பாதிப்பேரே சிறந்த போர் வீரர்கள்; ஏனையவர்கள் ஒன்றுக்கும் உதவாதவர்கள். பலால்தேவின் படையுடன் முஸ்லிம் படை குபான் (கொப்பம்) என்னும் இடத்தில் மோதித் தோற்றுப் பின்வாங்கித் தலைநகரான மதுரையை அடைந்தது. பலால்தேவ் குபானுக்கு அருகில் தன் பாசறையை அமைத்துகொண்டான்.

**கண்ணனூர்க் கொப்பம்**

குபான் (கண்ணனூர்க் கொப்பம்) முஸ்லிம்களுடைய முக்கியமான ராணுவ நிலையமாய் இருந்தது. அதனை, பலால்தேவ் முற்றுகை இட்டான். முற்றுகை ஆறுமாதம் நீடித்தது. முஸ்லிம்களின் உணவுப் பொருள்கள் தீர்ந்துபோயின. இன்னும் பதினான்கு நாட்களுக்குமேல் முற்றுகை நீடித்தால் அவர்கள் பட்டினிகிடந்து சாகவேண்டிய நிலை ஏற்படும். அப்போது பலால்தேவ், 'நீங்கள் சரணடைந்து கோட்டையை என்னிடம் ஒப்படைப்பதற்கு இசைந்தால் உங்களுக்கு எவ்வித ஆபத்தும் நேராமல் உங்களை அனுப்பிவிடுகிறேன்' என்று கோட்டைக்குள் இருந்த முஸ்லிம் வீரர்களுக்குச் சொல்லியனுப்பினான். அவர்கள் 'இந்தச் செய்தியை எங்கள் சுல்தானுக்கு நாங்கள் சொல்ல வேண்டும்' என்றார்கள். அதைக் கேட்ட பலால்தேவ் பதினான்கு நாள் போர்நிறுத்தத்திற்கு இசைந்தான். எனவே, முஸ்லிம்

வீரர்கள் தங்களுடைய நிலைமையையும் பலால்தேவின் செய்தியை யும் விளக்கி, சுல்தானுக்கு ஒரு கடிதம் அனுப்பினார்கள். அடுத்த வெள்ளிக்கிழமையன்று, தொழுகைக்காகக் கூடியிருந்தவர் களுக்கு சுல்தான் அந்தக் கடிதத்தைப் படித்துக் காட்டினான். அதைக் கேட்ட முஸ்லிம்கள் 'நாங்கள் ஆண்டவனுக்காக எங்கள் உயிரைத் தியாகம் செய்ய விரும்புகிறோம். இந்துக்கள் கொப்பத் தைப் பிடித்துக்கொண்டால், அதற்குப் பிறகு அவர்கள் இங்கேயும் வந்து முற்றுகையிடுவார்கள். அவர்களிடம் அகப்பட்டு உயிர் துறப்பதைக் காட்டிலும் போர்க்களத்தில் உயிர்விட விரும்புகிறோம்' என்று அழுதுகொண்டே சொன்னார்கள். அடுத்த நாள் அவர்கள் போருக்குப் புறப்பட்டார்கள். அவர்கள் தங்களுடைய தலைப்பாகைகளை அவிழ்த்துத் தங்களுடைய குதிரைகளின் கழுத்தில் கட்டிவிட்டார்கள். அவ்வாறு செய்தது அவர்கள் சாவதற்குத் தயாராய் இருந்தார்கள் என்பதற்கு அடையாளம். அவர்களுக்குள் மிகவும் சிறந்த வீரர் சுமார் முந்நூறு பேர் முன்னணியிற் சென்றனர். படையின் வலப் பகுதிக்கு சைபுதீன் பஹாதூர் தலைமை தாங்கினான். அவன் பக்தியும் வீரமும் மிக்க வழக்கறிஞன். இடப்பகுதிக்கு அல்மாலிக் முகமது தலைமை ஏற்றான். மூவாயிரம் வீரர்களைக் கொண்ட மையப்பகுதி சுல்தான் தலைமையில் சென்றது. இன்னொரு மூவாயிரம் பேர் கொண்ட கடைசிப் பகுதிக்கு அசதுதீன் கைக்குஸ்ரு அல்பாரிசி தலைமை தாங்கினான். இவ்வாறு அணிவகுத்து நின்ற முஸ்லிம் படை நண்பகல் குறுந்துயில் நேரத்தில் இந்துக்களின் பாசறையைத் தாக்கியது. இந்துக்கள் அந்தத் தாக்குதலை அந்த நேரத்தில் எதிர்பார்க்கவில்லை. அவர்களுடைய குதிரைகளும் மேய்ச்சலுக்குப் போய்விட்டன. யாரோ திருடர் தம் பாசறையைத் தாக்குவதாக நினைத்த இந்து வீரர்கள் தாறுமாறாகக் கிளம்பி வெளியே போய் எதிரிகளைத் தாக்கினார்கள். அதற்குள் கியாசுதீனும் தன் அணியுடன் வந்து விட்டான். இந்துக்கள் படுதோல்வி அடைந்தார்கள். இந்து அரசன் எண்பது வயதினனாயிருந்த போதிலும், ஒரு குதிரைமீது ஏறித் தப்பியோட முயன்றான். அப்போது சுல்தானுடைய உறவினனும் அவனுக்குப்பின் அரியணை ஏறியவனும் ஆன நாசிருதீன் அவனைப் பார்த்துவிட்டான். உடனே அவன் தன் குதிரையைத் தட்டிவிட்டு இந்து அரசனைத் துரத்திப்பிடித்து அவனைக் கொல்வதற்குத் தன் வாளை ஓங்கினான். அவன்தான் அரசன் என்பது நாசிருதீனுக்குத் தெரியாது. ஆனால், பக்கத்தி லிருந்த அடிமை ஒருவன் அவன்தான் அரசன் என்று சொல்லவே, நாசிருதீன் அவனைக் கொல்லாமல், சிறைபிடித்துக் கொண்டு போய், சுல்தான்முன் நிறுத்தினான். சுல்தானும் அப்போதைக்கு

அவனை மரியாதையுடன் நடத்தினான். பின்னர் அவனை விடுதலை செய்வதாகச் சொல்லி, அவனுடைய யானை, குதிரை, பிற செல்வங்கள் ஆகிய அனைத்தையும் பறித்துக்கொண்டான். அதற்குப் பிறகு அவனைக் கொன்று அவனுடைய தோலையுரிக்குமாறு தன்னுடைய ஆட்களுக்குக் கட்டளையிட்டான். அவ்வாறு உரித்த தோலில் வைக்கோலைத் திணித்து, அதனை மதுரை நகரின் சுவரில் தொங்கவிட்டான். அந்த உறைதிணி உருவை நான் என் கண்ணாலேயே கண்டேன்.

**பட்டன்**

நான் பாசறையிலிருந்து புறப்பட்டு பட்டன் நகருக்குப் போய்ச் சேர்ந்தேன். அது கடற்கரையிலுள்ள ஓர் அழகிய பெரிய நகரம். அங்கே ஒரு சிறந்த துறைமுகம் இருக்கிறது. அந்தத் துறைமுகத்தில் திண்ணிய உத்தரங்களின்மீது கட்டப்பட்ட பெரிய விதான மண்டபம் ஒன்று இருக்கிறது. அதுவும் மரத்தால் கட்டப்பட்டதே. அதை அடைவதற்கு மூடுவழி ஒன்றிருக்கிறது. பகைவர் கடல் வழியாய் அந்த நகரத்தைத் தாக்க வந்தால், துறைமுகத்திலுள்ள கப்பல்கள் எல்லாம் மண்டபத்தோடு பிணைக்கப்படுகின்றன. அவற்றிலுள்ள போர்வீரர் அனைவரும் விதான மண்டபத்திற்குள் சென்றுவிடுகின்றனர். அதனால் பகைவர் அவர்களைத் தாக்குவதற்கு வழியில்லாமற் போகிறது. இந்த நகரில் கருங்கல்லாற் கட்டப்பட்ட அழகிய பள்ளிவாசல் ஒன்று இருக்கிறது. இங்கே திராட்சையும் மாதுளையும் ஏராளமாய்க் கிடைக்கின்றன. இங்கே தான் நான் முஹமதுல்லாஹூரி என்னும் ஷெயிக்கைக் கண்டேன். அந்த பக்திமான் எப்போதும் ஆன்ம விசாரணையில் ஈடுபட்டிருந்தார். அவருடைய தலைமயிர் மிக நீளமாய் வளர்ந்திருந்தது. அவர் ஒரு சிங்கத்தைப் பிடித்துப் பழக்கித் தம்முடன் வைத்திருந்தார். அது பக்கிரிகளுடன் சேர்ந்து உண்டுவிட்டு அவர்களுடனேயே அமர்ந்துகொள்ளும். ஷெயிக்குடன் சுமார் முப்பது பக்கிரிகள் இருந்தார்கள். அவர்களுள் ஒருவர் ஒரு சிறு மானை வளர்த்தார். அந்த மானும் சிங்கமும் ஒரே இடத்தில்தான் வசித்தன. ஆனால், சிங்கம் மானை எவ்வகையினும் துன்புறுத்தவில்லை. நான் பட்டனில் தங்கியிருந்தேன்.

**மதுரை**

இதற்கிடையில் சுல்தான் கியாசுதீனுடைய வீரியத்தைப் பெருக்குவதற்காக யோகி ஒருவர் குளிகைகள் சிலவற்றைச் செய்திருந்தார். அந்தக் குளிகைகளைச் செய்வதற்குப் பயன்படுத்திய மருந்துச் சரக்குகளுள் இரும்புத்தூளும் இருந்ததாம். சுல்தான் மருந்தைச் சிறிது அதிகமாகவே சாப்பிட்டுவிட்டதால் நோய்வாய்ப்

பட்டான். அந்த நிலையில் அவன் பட்டனுக்கு வந்தான். நான் அவனைக் கண்டு ஒரு பரிசு கொடுத்தேன். பின்னர் அவன் கடற் படைத் தலைவன் க்வாஜா சரூரை அழைத்து, 'மாலத்தீவுக்குப் போவதற்காகத் தெரிந்தெடுக்கப்பட்டுள்ள கப்பல்களைப் பயணத் திற்குத் தயார் செய்வதன்றி இப்போது நீ வேறெந்த வேலையும் செய்யவேண்டியதில்லை' என்று சொன்னான். நான் அளித்த பரிசுக்குரிய தொகையை எனக்குக் கொடுக்க விரும்புவதாய் சுல்தான் சொல்லியனுப்பினான். நான் அதனைப் பெற்றுக் கொள்ள மறுத்துவிட்டேன். ஆனால், பின்னர் அதற்காக வருத்தப் பட்டேன். சுல்தான் விரைவில் இறந்துபோனான். எனக்கு ஒன்றும் கிடைக்காமல் போய்விட்டது. அவன் பட்டனில் இரண்டு வாரம் தங்கியிருந்தபின் தலைநகரான மதுரைக்குப் போய்விட்டான். நான் அதற்குப்பின் பதினைந்து நாள் பட்டனில் தங்கியிருந்து விட்டு மதுரைக்குச் சென்றேன். அது அகன்ற தெருக்களையுடைய பெரிய நகரம். முதன்முதலில் அதனைத் தம்முடைய தலைநகராக் கியவர் என்னுடைய மாமனாரான சுல்தான் ஷரீப் ஜலாலுதீன் அஹ்சன்ஷா ஆவார். அந்த நகரம் டில்லி நகரத்தைப்போல இருக்கவேண்டும் என்று அவர் விரும்பினார். அதனால் அதில் அழகிய பல கட்டடங்களைக் கட்டினார்.

நான் மதுரைக்குச் சென்ற சமயத்தில் அங்கே ஒரு தொற்று நோய் பரவியிருந்தது. அந்த நோய் கண்டவர்கள் வெகு விரைவில் இறந்துபோனார்கள். பொதுவாக, அவர்கள் இரண்டு மூன்று நாட்களில் இறந்துபோனார்கள். நான்கு நாளுக்குமேல் இருந்தவர் யாருமில்லை. நான் வெளியே போன சமயத்தில் எல்லாம் நோய் கண்டவர்களையும் செத்துப் போனவர்களையும் அன்றி வேறு யாரையும் பார்க்கவில்லை. அங்கே நான் ஓர் இளம்பெண்ணை விலைக்கு வாங்கினேன். அவள் உடல் நலமுடையவள் என்றுதான் அவளை விற்றவன் எனக்குச் சொன்னான். ஆனால், மறுநாளே அவள் இறந்துபோனாள். ஒருநாள் என்னைக் காண்பதற்கு ஒரு பெண் வந்தாள். அவள் சுல்தான் அஹ்சன்ஷாவின் வாஜீர்களுள் ஒருவனுடைய விதவை. அவளுடன் அவளுடைய எட்டு வயது மகனும் வந்தான். அவன் துடிப்பும் புத்திசாலித்தனமும் உடையவனாகக் காணப்பட்டான். அவள் வறுமையில் வாடுவ தாகச் சொன்னாள். எனவே, அவளுக்கும் அவள் மகனுக்கும் சிறிது பணம் கொடுத்தனுப்பினேன். அப்போது அவர்கள் இருவருமே உடல்நலத்தோடுதான் இருந்தனர். ஆனால் அடுத்த நாளே அவள் மீண்டும் என்னைக் கண்டு, தன் மகன் இறந்து விட்டான் என்றும் சவப் போர்வை ஒன்று வேண்டும் என்றும் சொன்னாள். சுல்தான் இறந்துபோன சமயத்தில் அவனுடைய

அத்தாணி மண்டபத்தில் நூற்றுக்கணக்கான பெண்களை நான் பார்த்தேன். அவர்கள் எல்லாம் சுல்தானைத் தவிர மற்றவர் களுக்குச் சோருக்குவதற்குத் தேவையான அரிசிதீட்ட வரவழைக்கப்பட்டவர்கள். அவர்களுக்கும் நோய் கண்டது. உடனே அவர்கள் தெருவில் தூக்கியெறியப்பட்டார்கள். அவர்கள் வெயிலில் வாடி வேதனைப்படுவதை நான் கண்டேன்.

கியாசுதீன் மதுரையை அடைந்த சமயத்தில் அவனுடைய தாய், மனைவி, மகன் ஆகியவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தார்கள். அவன் அரண்மனையில் மூன்று நாள் தங்கியிருந்தபின் ஒரு பரசங்குத் தொலைவிலிருந்த ஆற்றுக்குப் போனுன். (அதன் கரையில் இந்துக்களின் கோயில் ஒன்றிருக்கிறது.) அவனைக் காண்பதற்கு நான் ஒரு வியாழக்கிழமையன்று சென்றேன். நான் காஜியுடன் தங்கியிருக்கலாம் என்று அவன் சொன்னுன். எனக்குத் தேவையான கூடாரங்கள் கட்டி முடிந்ததும், ஏராள மான மக்கள் ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு வேகமாய்ச் செல்வதை நான் கண்டேன். அவர்களுள் ஒருவன் சுல்தான் இறந்துபோனுன் என்று சொன்னுன்; அவனுடைய மகன்தான் இறந்துபோனுன் என்று இன்னொருவன் சொன்னுன். அவனுடைய மகன்தான் இறந்துபோனுன் என்பதை நாங்கள் விசாரித்துத் தெரிந்துகொண்டோம். சுல்தானுக்கு வேறு ஆண்மகன் இல்லை. தன் ஒரே மகனுடைய சாவு சுல்தானுடைய நோயை மிகுதிப் படுத்தியது. அடுத்த வியாழக்கிழமையன்று சுல்தானுடைய தாயும் இறந்தாள்.

### சுல்தான் சாவு; அவனுடைய சகோதரன் மகன் அரியணை ஏறுதல்; புதிய சுல்தானிடமிருந்து நான் பிரிந்து போதல்

அதற்கடுத்த வியாழக்கிழமையன்று கியாசுதீனும் இறந்து போனுன்' அந்தச் செய்தியைக் கேள்விப்பட்டதும், கலகம் மூளக்கூடும் என்று அஞ்சி, நான் நகரத்திற்குத் திரும்பி னேன். அதற்குள் சுல்தானுடைய சகோதரன் மகனை நாசிருதீன் ஆற்றங்கரைக்கு வரவழைக்கப்பட்டான். வழியில் அவனை நான் கண்டுபேசினேன். தன்னுடன் ஆற்றங்கரை முகாமுக்குத் திரும்பிவருமாறு அவன் என்னை அழைத்தான். நான் மறுத்துவிட்டேன். அதனுல் அவன் மனவருத்தமடைந் தான். கியாசுதீன் பட்டத்திற்கு வருமுன் நாசிருதீன் டில்லியில் வீட்டு வேலைக்காரனுய் இருந்தான். கியாசுதீன் அரியணை ஏறியதும், அவன் பக்கிரி வேடம் பூண்டு தப்பியோடி மதுரையை அடைந்தான். அவன் மதுரை அரசனுக வேண்டுமென்பது

விதியின் கட்டளைபோலும். அவன்தான் அரசன் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டதும், புலவர்கள் அவன் புகழைப் பாடினார்கள். அவர்களுக்கெல்லாம் அவன் மிகவுயர்ந்த பரிசுகளைத் தந்தான். முதலில் அவன் புகழ் பாடிய புலவன் காஜி சதருல் ஜமான். அவனுக்கு 500 பொன்னையும் விலையுயர்ந்த ஆடையொன்றையும் நாசிருதீன் அளித்தான். அடுத்துப் பாடியவனான வஜீரல் காஜிக்கு நாசிருதீன் 2,000 வெள்ளிப் பணம் கொடுத்தான். எனக்கு 300 பொன்னும் ஓர் ஆடையுங் கொடுத்தான். மேலும் பக்கிரிகளுக்கும் வறியவர்களுக்கும் அவன் பல பொருள்களைக் கொடுத்தான். நாசிருதீன் அரியணை ஏறியபின் சமயப்பிரசாரகன் செய்த முதற் சொற்பொழிவில் அவனுடைய பெயரை இணைத்துப் பேசியபோது, தங்கத் தட்டுகளிலும் வெள்ளித் தாம் பாளங்களிலும் குவித்து வைத்திருந்த ட்ராக்மா தினார் ஆகிய நாணயங்களை அந்தப் பிரசாரகன் தலைமீது கொட்டினார்கள். கியாசுதீனுடைய இறுதிச் சடங்குகள் ஆடம்பரமாய்ச் செய்யப் பட்டன. ஒவ்வொரு நாளும் அவனுடைய கல்லறையருகில் திருக் குரான் முழுதும் ஓதப்பட்டது. அது முடிந்தும் திருக்குரானின் பத்தாம் பகுதியை ஓதக் கடமைப்பட்டவர்கள் அதனை ஓதினார்கள். அதற்குப் பிறகு அங்குக் கூடியிருந்த மக்களுக்கு உணவளிக்கப்பட்டது. இறுதியில், அவரவர் தகுதிக் கேற்ற வாறு வெள்ளிப் பணம் வழங்கப்பட்டது. இத்தகைய சடங்குகள் நாற்பது நாள் நடந்தன. அதற்குப் பிறகு, சுல்தான் செத்த நாளை ஆண்டுதோறும் அவனுடைய நினைவு நாளாய்க் கொண்டா டினார்கள்.

பழைய சுல்தானிடம் வாஜீராகப் பணிபுரிந்தவனை வேலை யிலிருந்து நீக்கி அவனிடமிருந்த செல்வத்தைக் கட்டாயப்படுத்தி வாங்கியதே புதிய சுல்தான் செய்த முதல் வேலையாயிருந்தது. அவனுக்குப் பதிலாக மாலிக் பத்ருதீன் வாஜீரானான். நான் மாலத் தீவிலிருந்து வந்து பட்டனில் தங்கியிருந்தபோது, என்னை வரவேற்பதற்காக கியாசுதீன் அனுப்பிய தூதன் அவன்றான். ஆனால், விரைவிலேயே அவன் இறந்துபோனான். எனவே, கடற் படைத் தலைவனாயிருந்த க்வாஜா சுரூரை நாசிருதீன் புதிய வாஜீராக நியமித்தான். மேலும், அவனுக்கு க்வாஜா ஜஹான் என்னும் பட்டத்தையும் அளித்து, அனைவரும் அவனை அவ்வாறே அழைக்கவேண்டும் என்றும் நாசிருதீன் ஆணையிட்டான். (டில்லி சுல்தானுவடய வாஜீருக்கும் க்வாஜா ஜஹான் என்ற பட்டப் பெயர் இருந்தது.) அவனை யாரேனும் வேறு பெயரிட்டு அழைத்தால் அவர்கள் குறிப்பிட்ட ஓர் அபராதம் கட்ட வேண்டும் என்பது நாசிருதீன் ஆணை. அதற்குப் பிறகு நாசிருதீன்

தன்னுடைய அத்தை மகனைக் கொன்றுவிட்டு அவனுடைய மனைவியை மணந்துகொண்டான். அவள் பழைய சுல்தான் கியாசுதீனுடைய மகள். தன்னுடைய அத்தை மகன் சிறையில் இருந்த போது, மாலிக் மசூத் அங்கே சென்று, அவனைக் கண்டு பேசியதாய்க் கேள்விப்பட்ட நாசிருதீன் மாலிக் மசூதைக் கொன்றுவிட்டான். பின்னர் அவன் தாராள மனம் படைத்தவனும் பெருவீரனுமான மாலிக் பஹாதூரையும் கொன்றுவிட்டான்.

**காய்ச்சல்**

மாலத் தீவுக்குப் போவதற்காக கியாசுதீன் தெரிந்தெடுத்த கப்பல்களையெல்லாம் என்னிடம் ஒப்படைக்குமாறு நாசிருதீன் ஆணையிட்டான். அதற்குள் நான் காய்ச்சலில் படுத்துவிட்டேன். இந்தப் பக்கத்தில் அந்தக் காய்ச்சல் ஆளைக் கொல்லாமல் விடாது. எனவே, நான் இறந்துபோவது உறுதியென்று நினைத்தேன். எனினும் ஆண்டவன் அருளால் நான் ஒரு மருந்து சாப்பிட்டுக் குணமடைந்தேன். அந்த மருந்து மிகவும் சாதாரணமானது; இந்த நாட்டில் ஏராளமாய்க் கிடைப்பது. அதுதான் புளி. ஒருபவுன் புளியை நீரில் கரைத்துக் குடித்தேன். அதனால், மூன்றுநாள் எனக்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டது. நான்காம் நாள் காய்ச்சல் நீங்கி விட்டது. எனக்கு மதுரை நகர் பிடிக்கவில்லை. அதனால் நான் அங்கிருந்து போவதற்கு சுல்தானுடைய இசைவைக் கேட்டேன். 'நீர் ஏன் இப்போது போக வேண்டும்? மாலத் தீவுக்குப் புறப்படுவதற்கு இன்னும் ஒரு மாதந்தானே இருக்கிறது? அதுவரையில் நீர் இங்கே இருந்தால், உலகத் தலைவன் (பழைய சுல்தான்) உமக்குக் கொடுக்க எண்ணிய பொருள்கள் அனைத்தையும் உமக்கு நான் தருவேன்' என்று சுல்தான் சொன்னான். ஆனால், நான் அங்கிருப்பதற்கு மறுத்துவிட்டேன்.

**பட்டனுக்குத் திரும்பல்**

எனவே, நான் பட்டனுக்குத் திரும்பிச் செல்வதற்கும் அங்கே எனக்கு விருப்பமான கப்பலில் ஏறிப் பயணஞ் செய்வதற்கும் சுல்தான் ஏற்பாடு செய்தான். நான் பட்டனை அடைந்தபோது, யெமனுக்குச் செல்வதற்காக எட்டுக் கப்பல்கள் அங்கே நின்று கொண்டிருந்தன. அவற்றுள் ஒன்றில் நான் ஏறிக் கொண்டேன். வழியில் நான்கு போர்க்கப்பல்கள் எங்களுடைய கப்பலைத் தாக்கின. ஆனால், சிறிது நேரத்தில் அவை திரும்பிப் போய்விட்டன. பின்னர் எங்கள் கப்பல் கூலத்தை அடைந்தது. எனக்கு மதுரையில் கண்ட காய்ச்சலின் விளைவுகளிலிருந்து நான் இன்னும் சரியானபடி விடுதலை அடையவில்லை. எனவே, நான் கூலத்திலேயே மூன்று மாதம் தங்கிவிட்டேன். அதன்பிறகு

நான் சுல்தான் ஜமாலுதீனைக் காண்பதற்காக ஹனுவுருக்குப் புறப்பட்டேன். வழியில், ஹனுவுருக்கும் பகனூருக்கும் இடையில் உருவவழிபாட்டினர் எங்களுடைய கப்பலைத் தாக்கினர்.

**மீண்டும் கோழிக் கோட்டில்**

ஹனுவுருக்கும் பகனூருக்கும் இடையிலுள்ள சிறு தீவை நாங்கள் அடைந்தபோது, ஒரு டஜன் போர்க் கப்பல்களுடன் அங்கு வந்த இந்துக்கள் எங்களைத் தாக்கினார்கள். சண்டை கடுமையாய் நடந்தது. இறுதியில் நாங்கள் தோற்றோம். என்னிடமிருந்த பொருள்கள் அனைத்தையும் அவர்கள் பறித்துக்கொண்டார்கள். அவசரத் தேவைகளுக்காக நான் ஒதுக்கி வைத்திருந்த சேமிப்புப் பணம், சிலான் அரசன் எனக்களித்த ரத்தினங்கள், என்னுடைய ஆடைகள், பக்தி மிகுந்த நல்ல மனிதர்கள் என் பயணத்திற்காகக் கொடுத்திருந்த உணவுப் பொருள்கள் ஆகிய எல்லாவற்றையும் நான் இழந்துவிட்டேன். என்னிடம் எஞ்சி நின்றது ஒரே ஒரு கால்சட்டைதான். பிற பயணிகளும் மாலுமிகளும் தங்களுடைய உடைமைகள் அனைத்தையும் இழந்தார்கள். இறுதியில் எங்களை வற்புறுத்திக் கரையிறங்கச் செய்தார்கள். நான் கோழிக்கோட்டுக்குத் திரும்பி, ஒரு பள்ளிவாசலை அடைந்தேன். சட்ட வல்லுநர் ஒருவர் ஓர் ஆடையையும், காஜி ஒரு தலைப்பாகையையும், வணிகர் ஒருவர் இன்னோர் ஆடையையும் எனக்கு அனுப்பினர். மஹல் தீவில் வாஜீர் ஜமாலுதீன் இறந்தபின் அவனுடைய விதவையான சுல்தானா கதீஜா வாஜீர் அப்துல்லாவை மணந்து கொண்டாள் என்றும் நான் வரும்போது கருவுற்றிருந்த என்னுடைய மனைவிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்திருந்தது என்றும் நான் கோழிக்கோட்டுக்குப் போனபிறகு கேள்விப் பட்டேன். நான் மீண்டும் மாலத் தீவுக்குப் போக விரும்பினேன். ஆனால் வாஜீர் அப்துல்லாவுக்கும் எனக்கும் இருந்த பகைமை மீண்டும் நினைவுக்கு வந்தது. எனவே, திருவுள்ளக் குறிப்பறியும் நோக்கத்துடன் நான் திருக்குரானைத் திருப்பினேன். "தேவ தூதர்கள் வந்து, 'அஞ்சற்க, கவலற்க' என்று அவர்களிடம் சொன்னார்கள்" (திருக்குரான்—XLI—30) என்னும் வாக்கியத்தைக் கண்டு, ஆண்டவன்மீது பாரத்தைப் போட்டுவிட்டு, நான் கோழிக்கோட்டிலிருந்து புறப்பட்டேன், பத்து நாளுக்குப் பிறகு மாலத் தீவுகளை அடைந்து கன்னலூசில் இறங்கினேன். பிறகு அந்தத் தீவின் ஆளுநனை அப்துல் ஆஜீஸ் அல்மக்த ஷாவி என்னை அன்புடன் வரவேற்று, உபசரித்து, எனக்கு ஒரு படகையும் கொடுத்தான். நான்

கன்னலூாசிலிருந்து ஹஃலுலி என்னும் தீவுக்குப் போனேன். அதுதான் சுல்தானுவும் அவளுடைய சகோதரிகளும் நீர் விளையாடுவதற்காகவும் பொழுதுபோக்கிற்காகவும் போகின்ற இடம். உள்ளூர்வாசிகள் அந்தக் கேளிக்கைகளைத் 'தைஜர்' என்று சொல்கிருர்கள். சுல்தானு அந்தத் தீவிலிருக்கும்போது வாஜீர்களும் தலைவர்களும் அவளுக்குப் பரிசுப் பொருள்களை அனுப்புவது வழக்கம். அங்கே நான் சுல்தானுவின் சகோதரியையும், அவளுடைய கணவனையும், வாஜீர் ஜமாலுதீனுடைய மகனும் சமயப் பிரசாரகனும் ஆன முகமதுவையும், முன்பு என் மனைவியாயிருந்த அவனுடைய தாயையும் கண்டு பேசினேன். முகமது நான் தங்கியிருந்த இடத்திற்கு வந்து என்னுடன் உணவுகொண்டான்.

அதற்குள் அந்தத் தீவின் மக்கள் சிலர் வாஜீர் அப்துல்லாவைக் கண்டு என் வரவை அறிவித்தனர். அவன் என்னுடைய நிலைமையைப் பற்றியும் என்னுடைய தோழர்கள் யார் என்பதைப் பற்றியும் விசாரித்தான்.

நான் என்னுடைய இரண்டு வயது மகனை அழைத்துக் கொண்டு போவதற்காக வந்திருக்கிறேன் என்று அவர்கள் வாஜீரிடம் சொன்னுர்கள். குழந்தையின் தாய் என்னுடைய திட்டத்தை வாஜீருக்குச் சொல்லி எனக்குத் தடைவிதிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். ஆனல், வாஜீர் 'அவளுடைய திட்டத்திற்கு நான் இடையூறு செய்யமாட்டேன்' என்று சொல்லிவிட்டான். நான் மஹல் தீவுக்கு வரவேண்டுமென்று அவன் என்னை வற்புறுத்தி அழைத்து, என்னுடைய நடவடிக்கைகளைக் கவனிப்பதற்கு வசதியாகத் தன்னுடைய மாளிகையின் உப்பரிகைக்கு எதிரிலிருந்த ஒரு வீட்டில் நான் தங்குவதற்கு ஏற்பாடு செய்தான். அந்த ஊர் வழக்கப்படி அவன் எனக்குக் காற்சட்டை மேற்சட்டை முதலியவற்றையும் வெற்றிலை பன்னீர் ஆகியவற்றையும் அனுப்பினுன். நானும் அவனை வணங்கும்போது அவன்முன் போடுவதற்கென்று இரண்டு பட்டுத் துணிகளை எடுத்துக் கொண்டு அவன் மாளிகைக்குச் சென்றேன். அவன் எனக்குப் பேட்டி தரவில்லை. எனவே, என்னிடமிருந்த பட்டுத் துணிகளைப் பணியாட்கள் வாங்கி வைத்துக்கொண்டார்கள். பின்னர் அவர்கள் என் மகனை எடுத்துக்கொண்டு வந்தார்கள். அவன் அங்கேயே இருப்பதுதான் அவனுக்கு நல்லது என்பதை நான் உணர்ந்தேன். அதனுல் அவனை என்னேடு கொண்டுபோகும் எண்ணத்தைக் கைவிட்டேன். நான் மஹல் தீவில் ஐந்து நாள் தங்கியிருந்தேன்.

அதற்குமேல் அங்கிருப்பது நல்லதன்று என்று கருதி அங்கிருந்து போவதற்கு நான் இசைவு கேட்டேன். அப்போது வாஜீர் என்னைத் தன் மாளிகைக்கு வரச் சொன்னான். நான் சென்றேன். அப்போது பணியாட்கள் என்னிடமிருந்து வாங்கி வைத்திருந்த இரண்டு துணிகளையும் கொண்டுவந்து என்னிடம் கொடுத்தார்கள். நான் அவற்றை வாங்கி வாஜீரின்முன் போட்டு அவனை வணங்கினேன். அவன் என்னைத் தன் அருகில் அமர்த்தி என்னுடைய நலனை விசாரித்தான். பின்னர் அவனுடன் நான் உணவருந்தினேன். கை கழுவும்போது அவனும் நானும் ஒரே கிண்ணத்தில் கழுவினோம். அவ்வாறு செய்வதற்கு அவன் வேறு யாரையும் அனுமதித்ததில்லை. அதற்கப்புறம் பணியாட்கள் வெற்றிலை கொண்டுவந்து கொடுத்தார்கள். பிறகு நான் விடை பெற்றுக்கொண்டேன். வாஜீர் எனக்குப் பல நூறாயிரம் சோழிகளையும் ஆடைகள் சிலவற்றையும் கொடுத்தனுப்பினான். இவ்வாறு அவன் என்னை மிக நல்ல முறையில் நடத்தினான்.

**வங்காளத்திற்கு**

நான் மீண்டும் மஹல் தீவிலிருந்து புறப்பட்டு, நாற்பத்து மூன்று நாள் கடற்பயணத்திற்குப் பின், ஏராளமான நெல் விளைகின்ற பெரிய நாடாகிய வங்காளத்தை அடைந்தேன்.

*Voyages D' Ibn Batoutah*, ed. C. Defremery and Dr. B.R. Sanguninetti, Vol. iv, pp. 46—210.[47].

[47] 1347ஆம் ஆண்டின் தொடக்கததில் சீனவிலிருந்து திரும்பி மொராக்கோவுக்குப் போகும் வழியில் இபன் பதூதா மீண்டும் கோழிக்கோட்டிற்கும் கொல்லத்திற்கும் சென்றார். ஆனால், அதைப் பற்றிய குறிப்பு மிகவும் சுருக்கமாய் இருக்கிறது. புதிய செய்தியும் அதில் இல்லை.

# XXXI. மரிக்ஞெல்லி ஜான்–கி.பி. 1347

## அ. கொல்லம்

நாங்கள் புனித ஸ்டீபன் விழாவன்று[1] தொடங்கிக் குருத்தோலை விழாநாள் வரையிலும் இந்துமாக்கடலில் பயணஞ் செய்தோம். அதற்குப் பிறகு இந்தியாவிலுள்ள மிகச் சிறந்த பட்டினங்களுள் ஒன்றான கொலும்பும் என்னும் நகரை அடைந்தோம். அங்கேதான் உலக முழுதும் செல்கின்ற மிளகு பயிராகிறது. மிளகுக் கொடி திராட்சைக் கொடியைப் போல இருக்கிறது. திராட்சையைப் போலவே மிளகும் பயிரிடப் படுகிறது. கொடிகளில் கொத்துக் கொத்தாக மிளகு காய்க்கிறது. மிளகு முதலில் தானே வளரும் திராட்சைக் குலையைப் போலப் பச்சை நிறமாயிருக்கிறது. பின்னர் அது ஏறக்குறைய நம்முடைய நாட்டில் விளையும் திராட்சைப் பழத்தைப்போல மாறிவிடுகிறது. அங்கே சிவப்பு நிற மிளகும் இருக்கிறது. அதை நான் சுவையூட்டு பொருளைப் போலப் பிழிந்து என் தட்டில் விட்டுச் சாப்பிட்டேன். மிளகு முற்றின பிறகும் அதனை அப்படியே விட்டுவிடுகிறார்கள். அது வெயிலில் காய்ந்து உலர்ந்து சுருங்கிய பின்னர் அதனை ஒரு தடியால் தட்டி, அது நிலத்தில் விழுமுன், துணியில் பிடித்துக் கொள்கிறார்கள். இவ்வாறுதான் மிளகு அறுவடை செய்யப் படுகிறது.

மேலே சொன்ன செய்திகளெல்லாம் நானே கண்டவை. மிளகுக் கொடி முதலியவற்றை நான் கண்டது மட்டுமன்றி என் கையால் தொட்டும் பார்த்தேன். அங்கே நான் பதினான்கு மாதம் இருந்தேன். சிலர் சொல்வதைப்போல, மிளகை அங்கு வறுப்பது கிடையாது. அது காட்டில் தானே வளரும் தாவரமும் அன்று. மனித முயற்சியால் அவன் போட்டுள்ள தோட்டங்களில் அது பயிர்செய்யப்படுகிறது. மேலும், மிளகுத் தோட்டங்கள்

[1] 1347 டிசம்பர் 24ஆம் நாள் என்று கருதலாம்—யூல்.

சாரசன்மாருக்குச் சொந்தமானவை என்று சொல்வதும் உண்மை அன்று. அவை புனித தாமஸ் கிறிஸ்துவர்களுக்குச் சொந்த மானவை. அன்றியும் அங்கிருக்கிற எஃகுத் தொழிற்சாலையும் கிறிஸ்துவர்களுக்குத்தான் சொந்தம். போப்பாண்டவரின் பிரதிநிதி என்ற முறையில் அந்தத் தொழிற்சாலையிலிருந்து எனக்கு மாதமொன்றுக்கு நூறு பொற்பணம் இடை ஆதாயமாய்க் கிடைத்தது. பிறகு நான் கொல்லத்தை விட்டுப் புறப்பட்டபோது அதே தொழிற்சாலை எனக்கு ஆயிரம் பொற் பணங் கொடுத்தது.[2]

அங்கே லத்தீன் வழிபாட்டு முறையைப் பின்பற்றிய புனித ஜார்ஜ் மாதா கோயில் ஒன்று இருக்கிறது. அதில்தான் நான் வசித்தேன். அந்தக் கோயிலை நான் அழகிய ஓவியங்களால் அணி செய்தேன். அங்கே நான் கிறிஸ்துவ வாழ்க்கை முறையைப் போதித்தேன். கொல்லத்திற் சிறிது காலம் வாழ்ந்தபின் நான் மகா அலக்சாண்டர் அடைந்த பெருமையைக் காட்டிலும் மிகுந்த பெருமையைத் தரக்கூடிய செயல் ஒன்றனைச் செய்தேன். அவன் இந்தியாவில் ஒரு தூபியை நட்டுவிட்டுச் சென்றான். நானும் உலகின் மூலையில், சொர்க்கத்திற்கு எதிரில், என்னுடைய வருகையின் நினைவுச் சின்னமாக ஒரு கற்றூணை நாட்டி, அதற்கு எண்ணெய் முழுக்காட்டினேன். அது ஒரு பளிங்குத் தூண். அதன்மீது கற்சிலுவை ஒன்றை நாட்டினேன். உலகம் முடியும் வரையில் அது இருக்கவேண்டும் என்று நான் விரும்பினேன்.

[2] பணத்தின் மதிப்பு மிகவும் மாறிப் போயிருப்பதால், போப்பாண்டவரின் பிரதிநிதி என்ற முறையில் மரிக்னெல்லிக்கு எவ்வளவு தொகை கிடைத்தது என்று சொல்வது கடினம். ஒரு பணம் $2\frac{1}{2}$ பென்சுக்குச் சமம் என்று மார்ஸ்டன் கருதுகிறார். (Marco polo p. 656) சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் கொச்சிப் பணம் $1\frac{1}{2}$ பென்சுக்கும், கோழிக்கோட்டுப் பணம் 6 பென்சுக்கும், கொல்லத்துப் பணம் 15 பென்சுக்கும் சமமாயிருந்தனவென்று விஸ்ச்சர் சொல்கிறார். அதே நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் பனையகாட் பணம் $4\frac{1}{2}$ பென்சுக்கும், தஞ்சாவூர்ப் பணமும் கோழிக்கோட்டுப் பணமும் 6 அல்லது 7 பென்சுக்கும், மதுரைப் பணம் $3\frac{1}{2}$ பென்சுக்கும் சமமாயிருந்தனவென்று மடத்துறவி பவோலினோ சொல்கிறார். 100 பணம் 6 தினாருக்குச் சமமென்று—அதாவது, ஒரு பணம் சுமார் 8 பென்சுக்குச் சமம் என்று—இபன் பதூதா (iv, 174) சொல்கிறார். மரிக்னெல்லி சொல்கிற பணமும் அத்தகையதுதான் என்று நாம் கருதலாம். எனவே, அவர் மாதம் ஒன்றுக்கு 3 ஷில்லிங் 6 பென்ஸ் இடையாதாயம் பெற்றார் என்றும், ஊருக்குப் போகும்போது 33 பவுன் அன்பளிப்பாய்ப் பெற்றாரென்றும் நாம் கருதலாம். இபன் பதூதா டில்லியில் இருந்தபோது பொருள்களின் விலைவாசிகள் எப்படி இருந்தனவென்று எழுதி வைத்துள்ளார். அந்தக் கணக்குப்படி பார்த்தால், மரிக்னெல்லி அன்று பெற்றதொகையின் இன்றைய மதிப்பு அதைப் போலக் குறைந்தது பத்து மடங்காகவேனும் இருக்குமென்று சொல்லலாம்—யூல்.

என்னுடைய பதவிச் சின்னங்களையும் போப்பாண்டவருடைய பதவிச் சின்னங்களையும் இலத்தீன் மொழி எழுத்துகளிலும், இந்திய மொழி எழுத்துகளிலும் தூணின்மீது பொறித்து வைத்தேன்.[3]

அந்தத் தூண் நாட்டப்பட்டபோது, நான் அதற்கு விழா எடுத்துச் சமயச் சடங்குகளைச் செய்தேன். அப்போது தலைவர்கள் என்னை சாலமனுடைய சிவிகை போன்ற ஒரு சிவிகையில் வைத்துச் சுமந்துசென்றார்கள்.

கொல்லத்தில் நான் பதினாறு மாதம் தங்கி எனது கீர்த்தி மிக்க பணியை முடித்தபிறகு, அங்கு வாழ்ந்த துறவிகளிடம் விடை பெற்றுக்கொண்டு, நான் சாபா ராணியைக் காணச் சென்றேன். அங்கு நான் நல்ல முறையில் நடத்தப்பட்டேன். அங்கே கிறிஸ்துவர் இருக்கின்றனர். இன்னும் சிலரைக் கிறிஸ்துவ மதத்தில் சேர்த்தபிறகு நான் கடல்வழியாய் செய்லனை அடைந்தேன். அது சொர்க்கத்திற்கு எதிரில் அமைந்திருக்கின்ற ஒரு பெரிய மலை.

—Yule, *Cathay* iii, pp. 216-20.

## ஆ. இலங்கை : ஆதாம் தோட்டம், அங்குள்ள கனிகள் முதலியவை பற்றி

இலங்கையிலுள்ள ஆதாம் தோட்டத்தில் வளர்கின்ற வாழை மரத்தை முதலில் நாம் குறிப்பிடவேண்டும். உள்ளூர்வாசிகள் அதனை அத்தியென்று சொல்கிறார்கள். ஆனால் அந்தத் தாவரம் மரத்தின் இயல்புகளைக் காட்டிலும் தோட்டச் செடியின் இயல்பு களையே மிகுதியாய்ப் பெற்றிருக்கிறது. அதனுடைய பருமனைப் பார்க்கும்போது அது மரத்தைப் போலத் தோன்றுகிறது. அதன் அடிமரம் ஓக் மரத்தின் அடிமரத்தைப் போலப் பருமனாய் இருந்தாலும், பலம் பொருந்திய ஒருவன் தன்னுடைய விரலாலேயே அதனைக் குத்தி ஓட்டை செய்துவிடலாம், அவ்வளவு மென்மையாய் அது இருக்கிறது. அவ்வாறு குத்திய ஓட்டையிலிருந்து நீர் வருகிறது. அந்த மரத்தின் இலைகள் மிக

[3] அந்தக் கம்பத்தைப் புனித தாமஸ் நாட்டினர் என்று பால்டேயஸ் சொல்கிறார்.—Land of the Perumals, p. 212. முந்நூறாண்டுக் காலம் செவி வழியாய் வந்த செய்தியில் மரிக்ஞெல்லி ஜானின் இடத்தை தாமசின் பெயர் பிடித்துக்கொண்டது போலும்.—யூல். அந்தத் தூண் இப்போது அந்த இடத்தில் இல்லை.

அழகியவை. அவை மிகவும் அகலமாகவும் நீளமாகவும் இருக்கின்றன. அவற்றின் நிறம் மரகதத்தைப் போலப் பச்சையாய் இருக்கிறது. உண்மையில் அவை உணவு மேசை விரிப்பாய்ப் பயன்படுகின்றன. ஆனால், ஓர் இலையில் ஒரு மனிதனுக்கான உணவுதான் படைக்கப்படுகிறது. பிறந்த குழந்தைகளைக் குளிப்பாட்டி, உப்புத் தடவி, உடலின் மீது துணி எதனையும் போர்த்தாமல், வாழையிலையைத் தரையின்மீது விரித்து, அதன் மீது ரோஜா, சோற்றுக் கற்றாழை ஆகியவற்றையிட்டு, அவற்றின்மீது அந்தக் குழந்தைகளைப் படுக்கவைத்து விடுகிறார்கள். வாழை இலை சுமார் 45 அங்குல நீளம் இருக்கிறது. அதனை எதனோடு ஒப்பிடலாம் என்று எனக்குத் தெரியவில்லை. எலிகம்பனே (கைப்பும் நறுமணமும் உள்ள செடி) ஒன்றுடன்தான் அதனை ஒப்பிட முடியும் என்று நான் கருதுகிறேன். வாழையின் தலையில்தான் காய் காய்க்கிறது. ஒரே குலையில் மூந்நூறு பழங்களைக் காணமுடியும். முதலில் அவை தின்பதற்கு ஏற்றவையாய் இல்லை. ஆனால், அவற்றைச் சிலநாள் வீட்டில் வைத்திருந்தால் அவை தாமாகவே பழுத்துவிடுகின்றன. அப்போது அவை நல்ல மணமும், அதைக் காட்டிலும் அதிக சுவையும் உடையவையாய் இருக்கின்றன. பழம் மனிதனுடைய மிக நீண்ட விரலைக் காட்டிலும் நீளமாய் இருக்கிறது. பழத்தை எந்த இடத்தில் வெட்டினாலும், வெட்டுப்பட்ட பகுதி ஒவ்வொன்றிலும் சிலுவையில் அறைந்த மனித உருவம் ஒவ்வொன்றைக் காணலாம். ஊசியால் வரைந்த உருவம்போல அவ்வுருவம் தோன்றுகிறது. அதனை நானே என் கண்ணால் கண்டேன்.[4] இந்த இலையைத்தான் ஆதாமும் ஏவாளும் தங்கள் இடையிற் கட்டிக்கொண்டார்கள்.

**தென்னை :** நம் நாட்டில் இல்லாத இன்னும் எத்தனையோ மரங்களும் பழங்களும் அங்கே இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, நார்கில் என்னும் மரத்தைச் சொல்லலாம். நார்கில் என்பது இந்தியக் கொட்டை. நார்கில் மரத்தின் பட்டை மிகவும் மென்மை வாய்ந்தது. அதன் இலைகள் பேரீச்ச மரத்தின் இலைகளைப்போல அழகாய் இருக்கின்றன. உள்ளூர் வாசிகள் அவற்றில் கூடையும் தானியத்தை அளப்பதற்கேற்ற படிகளும் செய்கிறார்கள். அடி மரத்தில் வீட்டுக் கூரைக்குத் தேவையான துலாக்கட்டை, விட்டம் முதலியவற்றைச் செய்கிறார்கள்.

[4] வாழைப்பழத்துச் சிலுவையைப் பற்றி மரிக்னொல்லி எழுதிவைத்துள்ளதைப் போலவே, மாண்டவிலேயும் எழுதிவைத்துள்ளார். ஆனால், அவர் வாழைப்பழம் என்பதை 'சொர்க்கத்து ஆப்பில்' என்று எழுதியுள்ளார். இந்தச் சிலுவையைப் பற்றி இன்னும் சிலரும் எழுதியுள்ளனர்.—யூல்.

நார்கில் மட்டையைக் கப்பல் தளைக்கயிறு திரிக்கப் பயன் படுத்துகிறார்கள். ஓட்டில் கோப்பையும், மூடியுடன் கூடிய கிண்ணமும் செய்கிறார்கள். கரண்டி (அகப்பை) செய்வதற்கும் ஓடு பயன்படுகிறது. அந்தக் கரண்டிக்கு நஞ்சை முறிக்கும் ஆற்றல் உண்டு. ஓட்டிற்குள் சுமார் இரண்டு விரல் கனமுள்ள விதைப் பருப்பு இருக்கிறது. அது தின்பதற்கு மிக நன்றாய் இருக்கிறது. ஏறக்குறைய வாதுமைக் கொட்டையைப் போலச் சுவையாய் இருக்கிறது. அதனைத் தீயிலிட்டால் எரிகிறது. அதிலிருந்து சர்க்கரையும் எண்ணெயும் எடுக்கலாம். பருப்புக்குள் புதுப்பாலைப் போலக் குமிழியிடுகிற திரவம் ஒன்றிருக்கிறது. அதிலிருந்து மிகச் சிறந்த ஒயின் கிடைக்கிறது.[5]

**மாம்பழம் :** அங்கே அம்புரன்[6] என்னும் பழத்தைத் தருகின்ற இன்னொரு மரம் இருக்கிறது. அந்தப் பழம் மிகுந்த மணமும் சுவையும் பொருந்தியது. அது ஓரளவு பீச் பழத்தைப் போல இருக்கிறது.

**பலா :** அங்கே இன்னொரு வியத்தகு மரமும் இருக்கிறது. அதன் பெயர் சக்கே பருஹே[7] என்பதாகும். அது ஓக் மரத்தைப் போலப் பெரியது. அதனுடைய காய் கிளையில் காய்ப்பதற்கு மாறாக அடிமரத்தில் காய்க்கிறது. பார்ப்பதற்கு அது மிகவும் விந்தையாய் இருக்கிறது. ஆட்டுக் குட்டி அல்லது மூன்று வயதுக் குழந்தை அளவு அது பெரியது. அதனுடைய மேல்தோல் பைன்மரக் கூர்ங்குடையைப் போலக் கடினமானது. எனவே அதனைக் கோடரியால் வெட்டித்தான் பிளக்கவேண்டும்: உள்ளே இருக்கின்ற சதை ஒப்பற்ற மணமுடையதாகவும் தேனைப் போன்ற இன்சுவை உடையதாகவும் இருக்கிறது. மிகச் சிறந்த இத்தாலி முலாம் பழத்தையன்றி வேறெதனையும் அதற்கு ஒப்பாய்க்கூற இயலாது. சதைக்குள் சுமார் 500 கொட்டைகள் இருக்கிறன. வறுத்துச் சாப்பிடுவதற்கு அவை தலைசிறந்தவை.

—*Ibid.* pp. 235-7.

## இ. இலங்கை பௌத்தத் துறவிகள்

அங்கே நோன்புறுதி பூண்ட துறவியர் சிலர் இருக்கின்றனர். அவர்கள் தங்களுடைய உடலை மிகமிகத் துப்புரவாய் வைத்துக்

[5] இளநீரைக் கள் என்று மரிக்னெல்லி தவறாக எழுதியுள்ளார். இன்னும் பிற்காலத்தில் வந்த சிலரும் இத் தவற்றைச் செய்துள்ளனர்.

[6] மாம்பழம்—ஆம்ரா

[7] சக்கை வரிக்கன்.

கொள்கிறார்கள். ஒரு வீட்டில் யாரேனும் துப்பிவிட்டனர் என்றால் அந்த வீட்டில் ஒரு கணமும் அவர்கள் இருக்க மாட்டார்கள். அவர்கள் துப்புவதென்பது மிகவும் அருமை. துப்ப நேர்ந்தால் அவர்கள் நெடுந்தொலைவு சென்று துப்பிவிட்டு வருவார்கள். பிற செயல்களுக்கும் அவர்கள் அவ்வாறே நெடுந் தூரம் செல்கிறார்கள்.

அவர்கள் ஒரு நாளைக்கு ஒரு பொழுதே உண்கிறார்கள். நீரையும் பாலையும் அன்றி அவர்கள் வேறு எதனையும் பருகுவதில்லை. மிகவும் தகுதி வாய்ந்த முறையில் அவர்கள் தொழுகை நடத்துகிறார்கள். சிறுவர்களுக்கு அவர்கள் எழுத்தறிவு ஊட்டுகிறார்கள். முதலில் மணலில் விரல் கொண்டு எழுதுவதற்கும், பின்னர் இலைகளாகிய காகிதத்தில் எழுத்தாணி கொண்டு எழுதுவதற்கும் அவர்கள் கற்றுத் தருகிறார்கள். காகிதத்தில் எழுதுகின்றனர் என்பதைக் காட்டிலும ஒரு வகை மரத்தின் இலையில் எழுதுகின்றனர் என்பதுதான் உண்மை.

அவர்கள் வாழ்கின்ற மடத்தில், ஏனைய மரங்களின் இலைகளினின்று வேறுபடுகின்ற இலைகளையுடைய மரங்கள சில வளர்கின்றன. அந்த மரங்களைச் சுற்றிலும் மணிகளையும் பொன்னணிகளையும் கொண்ட மாலைகளைச் சூட்டி அவற்றின் முன் விளக்குகளை வைத்து அந்தத் துறவிகள் வழிபடுகிறார்கள்.[8] இந்தப் பழக்கத்திற்கு ஆதாமின் சொற்களே ஆதாரம் என்று அந்தத் துறவிகள் சொல்லிக்கொள்கிறார்கள், எதிர்காலத்தில் மரத்தின் மூலமாகத்தான் தனக்குப் பாவ விமோசனம் உண்டாகும் என்று ஆதாம் சொன்னதால், அவர்கள் மரத்தை வழிபடுகிறார்களாம்! அந்தக் கூற்றுக்கு 'Dicite in gentibus quia Dominus regnabit in ligno' என்னும் தாவீதின் வாசகம் இசைவாய் இருப்பதை நாம் பார்க்கலாம். எனினும், Curabit a ligno என்பதுதான் சரியான மொழிபெயர்ப்பாய் இருக்கும் என்று நான் கருதுகிறேன்.[9]

நாளைக்கென்று அவர்கள் உணவுப் பொருள் எதனையும் வைத்துக்கொள்வதில்லை. அவர்கள் வெறுந்தரையில் படுத்து உறங்குகிறார்கள்; வெறுங்காலில் நடக்கிறார்கள்; கையில் தடி வைத்திருக்கிறார்கள். அவர்கள் நம்முடைய சிறுமடத்துறவி களைப்போலத் தளர்த்தியான கைகளையுடைய நீண்ட மேலங்கியை

[8] அரச மரம்.

[9] வழிபாட்டுப் பாடல் (Psalm) xcvi, 10-வதுல்.

அணிந்துகொள்கிறார்கள். ஆனால் அவர்கள் பிடரிக் கவிகை அணிந்து கொள்வதில்லை. தோளின் மீது மடிப்பு மடிப்பாயுள்ள கையற்ற மேலாடை ஒன்றை ஏசுவின் திருத்தூதர்களைப் போல அணிந்து கொள்கிறார்கள். ஒவ்வொரு நாளும் அன்றைய உணவுக்கான அரிசியைப் பிச்சை எடுத்துக் கொண்டு வருவதற் காக அவர்கள் தெருவில் ஊர்கோலமாய்ச் செல்கிறார்கள். பொது மக்கள் மட்டுமன்றி அரச குடும்பத்தினரும் அவர்களை எதிர்கொண்டழைத்து, அவர்களுடைய எண்ணிக்கைக்கு ஏற்றவாறு அரிசி கொடுத்தனுப்புகிறார்கள். அந்த அரிசியைத் தேங்காய் நீரோடும் வாழைப் பழத்தோடும் கலந்து வேகவைத்துத் துறவிகள் உண்கிறார்கள். இவற்றை எல்லாம் நான் என் கண்ணால் கண்டேன். உண்மையில் என்னையும் அவர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவனைப் போலக் கருதி எனக்கு ஒரு விருந்து கொடுத்தார்கள்.

—*Ibid*, *Cathay*, iii pp. 242-44.

# XXXII. வாங்டா-யுவான்
# கி.பி. 1330-1349

## அ. பவழம்

யாலி (காலே) என்னும் நகருக்கும் கோலம்பூ (கொழும்பு) என்னும் நகருக்கும் இடையில் தாபோஷான் இருக்கிறது. சிஹ்ஷுன் ஆட்சிக் காலத்துக் கெங்வு ஆண்டு (கி.பி. 1330) பத்தாம் மாதத்தில், குளிர் காலத்தில், நான் தொந்தரம் என்னும் மலையின் அடிவாரத்திற்கு அருகில் இரண்டு நாள் கப்பற் பயணஞ் செய்துகொண்டிருந்தேன். இரவு முழுவதும் சிறந்த நிலா வெளிச்சம் இருந்தது. அதனுல் இரவு பகல்போலத் தோன்றியது. கடல் அமைதியாகவும் தெளிவாகவும் இருந்தது. அதனுல் நீருக்கடியில் இழைந்து இயங்கிக் கொண்டிருந்த பொருள்கள் அனைத்தையும் என்னுல் நன்கு காணமுடிந்தது. நீருக்கடியில் இருந்த மரம் ஒன்று அசைந்தாடிக்கொண்டிருந்தது. அதனை நான் மாலுமிகளுக்குக் காட்டி, 'இது தூய லாங்கான் பவழந்தானே?' என்று கேட்டேன். அவர்கள் 'இல்லை' என்று விடையளித்தார்கள். 'அப்படியானுல், இது சந்திரனில் இருக்கிற (மந்திர சக்தி வாய்ந்த) சோலோ மரத்தின் நிழலா?' என்று கேட்டேன். 'இல்லை' என்றே மீண்டும் அவர்கள் சொன்னுர்கள்.

உடனே நான் ஒரு பையனை நீருக்கடியில் அனுப்பி அதனைக் கொண்டுவரச் சொன்னேன். அவன் தொட்டால் வழுக்கி ஓடுகின்ற மென்மையான ஒரு பொருளைப் பற்றி இழுத்துக் கொண்டு வந்தான். ஆனுல், நீருக்கு வெளியில் வந்ததும் அது இரும்பு போலக் கடினமாகிவிட்டது. அதனை நான் சோதனை செய்து பார்த்தேன். அது ஓரடி நீளமிருந்தது. சிறிது நேரத்தில் அந்தக் கிளை ஒரு முடிச்சைப் போலச் சுருண்டு கொண்டது. மேலும் எனக்கு வியப்பூட்டிய செய்தி என்னவென்றுல், அந்தக்

கிளையில் ,சிவப்பு நிறமான ஒரே ஆணுறுப்பை உடைய மலர் ஒன்றிருந்தது. பாதி விரிந்திருந்த அந்த மலர் பாதி விரிந்த தாமரை அல்லது பியோனி மலரைப் போல இருந்தது.

மாலுமிகள் கையில் மெழுகு திரிகளை வைத்துக்கொண்டு என்னைச் சுற்றிலும் நின்று பார்த்துக்கொண்டு இருந்தார்கள். திடீரென்று அவர்கள் சிரித்துக்கொண்டே பறவைகளைப் போலக் குதிக்கத் தொடங்கினார்கள். 'ஆஹா, இது பவழ மரந்தான்! இப்போது அது பூத்திருக்கிறது. கடலில் உள்ள வியக்கத்தக்க பொருள்களுள் சீனரும் அறியாத விந்தைகள் சில இருக்கின்றன. நாற்பதாண்டுக் காலத்துக்கு மேலாக நாங்கள் மாலுமிகளாய் இருக்கிறோம். எனினும் இந்த அற்புதத்தை நாங்கள் கண்டதில்லை. இன்னும் ஆயிரமாண்டு காத்திருந்தாலும் இதைப் போன்ற அற்புதத்தைக் காண்போம் என்று எதிர்பார்க்க முடியாது. இது தங்களுடைய பொருள். இதனைத் தாங்களே வைத்துக்கொள்ளுங்கள்' என்று அவர்கள் சொன்னார்கள்.

அடுத்த நாள் அந்த அற்புதத்தைப் பற்றி பழம்பாணியில் அமைந்த நூறு பாடல்களைக் கொண்ட ஒரு கவிதையை இயற்றினேன். ஊருக்குப் போனபிறகு அதனை யூச் சாங்கைச் சேர்ந்த ஆன் யூ ஹிசின் ஷெங்கிடம் காட்டினேன். அவரும் அந்த அற்புதத்தைப்பற்றி ஒரு கவிதையை இயற்றினார். இன்றைக்கும் அதனை (நான் சங்கிலுள்ள) சூன்ட்சூ டாங்கில் காணலாம்.

—*Tao i chih lio*, 79 Ta Fo shan, translated by Rockhill; T'oung Pao xvi pp. 383-384.

## ஆ. கொழும்பு[1]

கவோ லாங்அப் (கொழும்பு) டாபோஷான் அடிவாரத்தில் இருக்கிறது. அந்த விரிகுடாவின் கரை முழுவதுமே கூர்முனைகளையுடைய பாறைகள் நிறைந்ததாய் இருக்கின்றது. அவற்றுள் சில நின்றுகொண்டிருக்கின்றன; சில கீழே கிடக்கின்றன. தரை ஈரமாய் இருக்கிறது; மண் வளமற்றதாய் இருக்கிறது; அரிசி கிடைப்பது அருமையாய் இருக்கிறது. இங்கு வெப்பம் அதிகமாய் இருக்கிறது. மக்கள் பண்பாடற்றவர்களாய் இருக்கிறார்கள்.

கப்பல் பழுதுபட்டதால் அந்த இடத்தில் சில நாள் தங்க வேண்டிய நிலையிலிருக்கின்ற மாலுமிகள் கப்பலில் உள்ள

[1] சீன ஆசிரியர்களுள் வாங்டா யுவான் ஒருவரே கொழும்புத் துறை முகத்தைக் குறிப்பிடுபவர்.

பண்டங்கள் அனைத்தையும் அரசனுக்குத் தந்துவிட வேண்டும். தங்களிடமுள்ள பொன்னையும் நகைகளையும்கூட அரசனுக்கே கொடுத்துவிட வேண்டும். அவை எல்லாம் ஆண்டவன் தனக்கு அனுப்பியவை என்று அரசன் கருதுகிறான். மாலுமிகளின் மனைவி மக்கள் அவற்றை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள் என்பதையும், பட்டினியிலிருந்தும், குளிரிலிருந்தும் தங்களைக் காத்துக் கொள்வதற்கு அவர்கள் அவற்றையே நம்பி இருந்தார்கள் என்பதையும் பற்றி அரசன் நினைத்துப் பார்ப்பது இல்லை.

அங்கு வாழ்கின்ற மக்கள்—ஆண் பெண் இரு பாலாரும்—தங்கள் தலைமயிரை மேலே தூக்கி முடிந்துகொள்கிறார்கள். அவர்கள் ஜாவாப் பருத்தித் துணியால் ஆன சராங்கை உடுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் கடல்நீரைக் காய்ச்சி உப்பு எடுக்கிறார்கள்; கரும்புச் சாற்றைப் புளிக்க வைத்து மதுபானம் தயாரித்துக் கொள்கிறார்கள்.

அங்கு அரசன் ஒருவன் இருக்கிறான். அங்கே மாணிக்கக் கற்கள் கிடைக்கின்றன. செங்காலாவில் (பெலகாம் அருகில்) கிடைக்கின்ற கற்களைப் போலவே அவை இருக்கின்றன.

பா-டான், நூல் துணி, ஈயம், சம்ஷு, பன்னீர், சம்பங்கி மரம், பொன், வெள்ளி முதலியவை சீனருடைய வாணிகப் பொருள்களாகும்.

—*Tao i chih lio*, 65 Kao-lang-pu, tr. Rockhill, T'oung Pao xvi p.p 384-5.

## இ. மன்னார் வளைகுடாவில் முத்துச் சலாபம்(?)

முன்பு அதற்கு வெய்யூவன் என்னும் பெயர் வழங்கியது. இப்போது அதனைப் 'புதுத் துறைமுகம்' என்று சொல்கின்றனர். கடற்கரை வடக்கிலிருந்து தெற்கு முகமாய்ப் பரவி இருக்கிறது. அங்கே மக்கள் பல இடங்களில் சிதறி வாழ்கிறார்கள். அங்குக் காணப்படுகின்ற மண்ணும் தட்பவெப்ப நிலையும் மக்களுடைய பழக்கவழக்கங்களும் (ஷாலி) பட்டனில் (ஜர்பட்டன்)[2] இருப்பதைப் போலவே இருக்கின்றன.

[2] இந்த இடத்தைப் பற்றிப் பின்னால் வருகின்ற (ஏ) குறிப்பைப் பார்க்க.

துறைமுகத்திலிருந்து சுமார் எட்டு லீ தொலைவில் கடலுக்குள் ஏராளமான முத்துச் சிப்பிகள் இருக்கின்றன. முத்துக் குளிக்கும் பணியைத் தொடங்குவதற்குமுன் கடல் தெய்வங்களின் தயவைப் பெறுவதற்காக, தலைவன் விலங்குகள் பலவற்றைக் காவு கொடுக்கிறான். அதன்பிறகு அவன் முத்துக் குளிப்பதற்கான நாளையும் படகுகளையும் ஆட்களையும் தெரிந் தெடுக்கிறான்.

ஒவ்வொரு படகிலும் அவ்வைந்து பேர் இருக்கின்றனர். அவர்களுள் இருவர் துடுப்பு வலிக்கின்றனர். ஏனைய இருவர் கயிறுகளை எச்சரிக்கையாகப் பிடித்துக்கொள்கின்றனர். ஐந்தாம் மனிதன்தான் நீரில் மூழ்கி முத்தெடுப்பவன். அவன் தன் கழுத்தில் ஒரு பையைத் தொங்கவிட்டுக் கொள்கிறான். அதனுடைய வாய் திறந்திருப்பதற்காக அதில் மூங்கில் வளையம் ஒன்று பொருத்தப்பட்டுள்ளது. அவன் இடுப்பில் ஒரு கல்லையும் கையில் ஒரு கயிற்றையும் கட்டிக்கொண்டு நீருக்குள் மூழ்குகிறான். கடலின் அடியில் இருக்கின்ற முத்துச் சிப்பிகளை வாரிப் பையில் போட்டுக்கொண்ட பிறகு, கயிற்றை இழுக்கிறான். மேலே அந்தக் கயிற்றைப் பிடித்துக்கொண்டிருப் பவர்கள் அவனை நீருக்குமேல் இழுத்து அவனையும், அவன் எடுத்து வந்த முத்துச் சிப்பிகளையும் படகில் இறக்குகிறார்கள். இவ்வாறு படகு நிறையும் வரையிலும் செய்துகொண்டே இருக்கிறார்கள். படகு நிறைந்ததும், அரசாங்கத்தார் குறிப் பிடுகின்ற இடங்களுக்குச் சென்று, முத்துச் சிப்பிகளைக் குவியல் குவியலாய்க் கொட்டி வைக்கிறார்கள். அவற்றை யாரும் எடுத்துப் போகாமல் அரசுக் காவலர் பார்த்துக்கொள்கின்றனர். சிப்பியிலுள்ள சதை அழுகிப்போகும் வரையிலும் சிப்பிக் குவியல்கள் அங்கேயே இருக்கின்றன. பின்னர், ஓட்டை அகற்றி விட்டு, அழுகிப்போன சதையை அகற்றுவதற்காக அதனை ஒரு சல்லடையில் போட்டு நீரை ஊற்றிச் சலிக்கின்றனர். சதையும் நீரும் சல்லடைக் கண்களில் ஒழுகிவிடுகின்றன. முத்துகள் மேலே நின்றுவிடுகின்றன. மீண்டும் அந்த முத்துகளை ஒரு சல்லடையில் போட்டுச் சலித்துத் தரம் பிரிக்கின்றனர். கிடைக்கின்ற முத்துக்களில் பாதியை அரசு எடுத்துக் கொள்கிறது. மீதியைப் படகிலிருந்த ஐவரும் பங்கு போட்டுக் கொள்கின்றனர். ஆனால், அவர்கள் எல்லாருமே பங்கு போடும் வரையிலும் உயிரோடு இருக்கின்றனர் என்று சொல்லமுடியாது. எத்தனையோ பேர் கடலில் வாழ்கின்ற கொடிய மீன்களுக்கு இரையாகி விடுகின்றனர். அந்தோ, என்ன கொடுமை!

முத்துக் குளிப்பவர்களுள் தொடர்ந்து சில ஆண்டுகள் தங்களுடைய பங்கைப் பெறுகின்ற நற்பேறுடையவர்கள். தங்களிடம் சேர்ந்துள்ள முத்தை விற்றுப் பணமாக்கி, யாதேனும் ஒரு வாணிகத்தில் ஈடுபட்டுப் பொருளீட்டி, பெரும் பணக்காரர் களாக வாழ்கிறார்கள். ஆனால் அத்தகையோர் மிகச் சிலரே.

—*Tao i chih lio* 72; Ti-san chiang,[3] tr. Rockhill, T'oung Pao xvi pp. 385-7.

## ஈ. வட மாலத்தீவுகள்

பெயிலியு என்னும் தீவுக் கூட்டத்தில் சுமார் ஆயிரம் சிறு தீவுகளும் எண்ணற்ற பிற தீவுகளும் இருக்கின்றன. மேலைக் கடலுக்குப் போகிற கலமொன்று செங்காலாவுக்கு (இலங்கையில் உள்ள பெல்லிகம்) அருகில் போய்விட்டால், திடீரென்று திசை மாறுகின்ற அலையோட்டத்திற் சிக்கிக் கொள்ளும். அப்போது எதிர்க்காற்றும் அடிக்கத் தொடங்கினால், கலம் மாலத்தீவை நோக்கிச் சென்றுவிடும். அடுத்த ஆண்டு இளவேனிற்காலம் வரையிலும் கலம் அங்கே தங்கிவிட்டு, மீண்டும் தென்கிழக்குக் காற்று அடிக்கும்போதுதான் அது வடக்கு நோக்கிப் பயணஞ் செய்ய முடியும். அந்தத் தீவுகளைச் சுற்றிலும் கத்தி முனை போன்ற கூர் முனைகளையுடைய பாறைகள் நீருக்கடியில் மறைந்து நிற்கின்றன. அவற்றில் மோதிய எந்தக் கப்பலும் உடைந்துதான் போகும்.[4]

[3] வாங்டா யுவானுக்கு முன்னர் வாழ்ந்த ஆசிரியர்களும் அவருக்குப் பின்னர் வாழ்ந்த ஆசிரியர்களும் எழுதிய எந்த நூலிலும், நான் பார்த்த வரையில், டிசான் சியாங் என்னும் பெயர் காணப்படுவதில்லை. சிலானிலிருந்து முத்து வந்தது என்பது சௌஜு-குவாவுக்குத் தெரியும். ஆனால் நகரத்தின் பெயரை அவர் கூறவில்லை. மன்னார் வளைகுடாவில் முத்து எடுத்ததைப் பற்றி மார்க்கபோலோ (II, 331) எழுதியுள்ள குறிப்புப் பெரும்பாலும் வாங்டா யுவான் குறிப்பைப் போலவே இருக்கிறது. சிலானிலிருந்த பெட்டலர் என்னும் இடத்திலிருந்து (இபன் பதூதா சொல்கின்ற பத்தலா) மன்னார் வளைகுடாவிற்குள் அறுபது மைல் சென்று முத்துக் குளித்தார்கள் என்று மார்க்கபோலோ சொல்கிறார்.—Rockhill.

[4] மாலத்தீவுகள் பதின்மூன்று மாகாணங்களாய்ப் பிரிக்கப்பட்டிருந்தன என்று பைரார்டு (I, 93, 95) சொல்கிறார். அங்கு 12,000 தீவுகள் இருந்தன என்று உள்ளூர் வாசிகள் தம்மிடம் தெரிவித்ததாக அவர் எழுதி வைத்துள்ளார். 'பதின்மூன்று மாகாணங்களுக்கும் பன்னீராயிரந் தீவுகளுக்கும் வேந்தன்' என்பது அரசனுடைய பட்டப் பெயர். முதலாம் இராஜராஜ சோழன் 'பண்டைத் தீவுகள் பலவற்றை, (அவற்றின் தொகை 12,000)' வென்றான் என்று அவனுடைய கல்வெட்டுகள் கூறுகின்றன.

தேங்காய், காய்ந்த மீன், நூல்துணி, சோழி ஆகியவை அங்குக் கிடைக்கும் பொருள்கள்.

கடல் வணிகர் அந்தச் சோழிகளைத் கப்பல் நிறைய ஏற்றிக் கொண்டு வூ-டியெஹ் (ஒரிசா?) அல்லது பெங்-கா-லா (வங்காளம்)வுக்குச் சென்று, அவற்றை அங்கே விற்றுவிட்டு, அவற்றிற்குப் பதிலாக அரிசியை வாங்கிக்கொண்டு வருகின்றனர். ஒரு கப்பல் நிறையச் சோழியைக் கொண்டுபோனால் அந்தக் கப்பல் நிறையவோ அதற்கும் அதிகமாகவோ அரிசி கிடைக்கும். சோழியே அங்கு நாணயமாய்ப் பயன்படுகிறது. மிகப் பழங்காலத்திலிருந்து அங்குச் சோழி நாணயமாய்ப் பயன்பட்டு வந்துள்ளது.

—*Tao i chih lio.* 63; Pei Liu, tr. Rockhill. T'oung Pao xvi, pp. 387-8.

## உ. கயின் கோலன்

தூலான் பாறைகளுக்கு அருகில் கயின்கோலன் (காயங்குளம்) இருக்கிறது. அங்கே காணப்படுகின்ற கரிசல்மண் தானிய விளைவிற்கு ஏற்றதாய் இருக்கிறது. உழவர்கள் உயிர் வாழ்வதற்குத் தேவையான தானியங்களை ஆண்டுதோறும் வூட்டியெஹிலிருந்து பெற்றுக்கொள்கிறார்கள். வூட்டியெஹி லிருந்து வருகின்ற படகுகள் சில சமயங்களில் காற்று வாய்ப்பாய் இல்லாததால் முழுச்சுமை ஏற்றிக்கொண்டு வருவதில்லை; அவை தாமதமாகவும் வந்து சேர்கின்றன. அதற்குள் குதிரைக் கப்பல்கள் (கன்மைலி—கொமரத் தீவுகளி லிருந்து) போய்விடுகின்றன. காற்று மிகவும் வேகமாய் அடித்தால் அவற்றால் வழக்கம்போல வேகமாய் முன்னேக்கிச் செல்ல இயலாது. வேறு சில சமயங்களில் எதிர்க்காற்றில் அவை சிக்கிக் கொள்கின்றன. அதனால் அவை லம்பிரிக் கடலுக்குச் செல்லாமல் நின்றுவிடுகின்றன. அங்குச் சென்றால் அவை கவோலங்பு (கொழும்பு) விரிகுடாவில் இருக்கின்ற பாறைகளில் மோதி நொறுங்கிவிடும். எனவே, அவை குளிர்காலத்தில் இங்கேயே தங்கிவிட்டு, அடுத்த ஆண்டு வேனிற்காலத்தில்தான் இங்கிருந்து புறப்படுகின்றன. எட்டு அல்லது ஒன்பதாம் மாதத்தில் கலங்கள் மீண்டும் (கன்மைலியிலிருந்து?) இங்கு வரும்போது, அவற்றுடன் சேர்ந்து குலிபோவுக்கு (கோழிக் கோட்டிற்கு) செல்கின்றன. அவ்வாறு ஒன்று சேர்ந்து போனால் கடற்கொள்ளைக்காரரிடமிருந்து தப்பலாம்.

இங்கு வாழ்கின்ற மக்கள்—ஆண்பெண் இருபாலாரும்—கோழிக்கோட்டில் வாழ்கின்ற மக்களைப்போலவே ஆடை அணிந்துகொள்கிறார்கள். ஆங்காங்குக் கிராம ஆட்சித் தலைவர்கள் இருக்கிறார்கள். ஆனால் முதன்மைத் தலைவர் யாரும் இல்லை.

மிளகு, தேங்காய், வெற்றிலை, பாக்கு, லியுமீன் ஆகியவை இங்கே கிடைக்கின்ற பொருள்கள்.

இங்கு வருகின்ற சீனருடைய வாணிகப் பொருள்கள் தங்கம். இரும்பு, நீல நிறமும் வெள்ளை நிறமும் உடைய பீங்கான் பொருள்கள், பட்டன் நூல்துணி, (ஜர்பட்டன் துணியா?) பல வண்ண சாட்டின் துணி, இரும்பாலான பொருள்கள் முதலியவை ஆகும்.

—*Tao i chih lio*, 82 Hsiao Ku-nan, tr, Rockhill. T'oung Pao, xvl pp. 445-7.

## ஊ. ஹிலி (எலி)

இந்த நாடு ஹிசியாவோ-கூனன் (கயின்கோலன்) குலிபோ (கோழிக்கோடு) ஆகியவற்றிற்கு இடையில் இருக்கிறது.[5] சீனர் இதனைச் 'சிறு துறைமுகம்' (ஹிசியாவோசியாங் கூ) என்றும் சொல்கின்றனர். அந்த மலை தட்டையாகவும் செடி கொடிகள் அற்றதாகவும் இருக்கிறது. அது பல லீ தொலைவு பரந்திருக்கிறது. (sic)

மக்கள் ஒன்றுக்கொன்று சற்றே தள்ளியிருக்கிற வீடுகளில் வசிக்கிறார்கள். வீட்டைச் சுற்றிலும் அதில் வாழும் குடும்பத்திற்குத் தேவையான பொருள்கள் விளைகின்ற நிலம் இருக்கிறது. ஆனால் மண் அவ்வளவாக உழவிற்கு ஏற்றதென்று சொல்ல முடியாது.

இங்கு வெப்பம் அதிகமாய் இருக்கிறது. மக்கள் தூய்மையாய் வாழ்கிறார்கள். அவர்கள் எளிதில் உணர்ச்சி வசப்படுபவர்கள். வெளியே போகும்போது அவர்கள் வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு போகிறார்கள். ஆண் மக்கள் மட்டுமன்றிப் பெண்களும் தங்களுடைய தலைமயிரை வெட்டி, அதனைச் சுற்றி ஒரு லியு-பூவை (அதாவது, மாலத்தீவுகளிலிருந்து இறக்குமதி ஆகின்ற நூல் துணியை) கட்டிக் கொள்கிறார்கள்.

[5] இந்தக் கூற்றுத் தவறானது. எலி (ஏழில் மலை) கோழிக்கோட்டிற்கு வடக்கே உள்ளது.

மிளகு அங்கே விளையும் இயற்கைப் பொருள். அது வேறு துறைமுகங்களில் கிடைக்கின்ற மிளகைக் காட்டிலும் உயர்தர மானது. மலைமீது படர்ந்திருக்கும் மிளகுக் கொடிகள் எண்ணில் அடங்கா. மிளகுக்கொடி விஸ்டாரியத் திராட்சையைப் போல வளர்கிறது. அது குளிர்காலத்தில் பூத்து வேனிற் காலத்தில் காய்க்கிறது. மக்கள் அதனை அறுவடை செய்து, மூக்கைத் துளைக்கின்ற அதனுடைய வாசனையை நீக்குவதற்காக வெயிலில் உலர்த்துகிறார்கள். அறுவடை செய்வோர் அந்தக் கடுமையான வாசனையைப் பற்றிக் கவலைப் படுவதில்லை. அதனால் தொல்லை உறுகின்றவர்கள் இருந்தால், அவர்கள் சூவன் ஹிசியுங் என்னும் கஷாயத்தைக் குடித்துத் துன்ப நீக்கம் பெறுகிறார்கள்.

வெளித் துறைமுகங்கள் அனைத்திலும் கிடைக்கின்ற மிளகு இந்த நாட்டு மிளகுதான், அதாவது—இங்குச் செலவானது போக ஏற்றுமதி செய்யப்பட்ட மிளகாகும்.

—*Tao i chih lio* 64; Hsia-li, tr. Rockhill. T'oung Pao xvi, p. 453.

## எ. கோழிக்கோடு

வாணிக மையங்கள் பலவற்றுள்ளும் குலிபோ (கோழிக் கோடு) மிகவும் முக்கியமானது. அது ஹிசிலானுக்கு (சிலானுக்கு) அருகில் அமைந்துள்ளது. மேலைக் கடலில் அதுவே முதன்மையான துறைமுகம். நிலம் மேடு பள்ளமற்றதாய் இருக்கிறது. மண் வளமற்றது. எனினும் தானியம் அங்கே ஓரளவு விளைகிறது.

போதுமான தானியம் அங்கு விளையாததால், மக்கள் தங்கள் தானியத் தேவைகளை நிறைவு செய்வதற்காக ஒவ்வோராண்டும் ஹுட்டியெஹிலிருந்து (ஒரிசாவிலிருந்து) வரும் கப்பல்களை எதிர் பார்க்கிறார்கள். எதிரெதிராக வருபவர்களுள் ஒவ்வொருவரும் ஒதுங்கி மற்றவருக்கு வழி விடுகிறார்கள். சாலையில் கிடக்கின்ற பிறருடைய பொருள்களை அவர்கள் எடுத்துக் கொள்வதில்லை. அவர்கள் நேர்மைக்கு மதிப்பளிக்கிறார்கள். அந்த விஷயத்தில் அவர்கள் மிகப் பழங்காலப் பாணியைப் பின்பற்றுகிறார்கள். எவனாகிலும் ஒருவன் ஒரு மாட்டைத் திருடிவிட்டால், தலைவன் மாடுகளை எண்ணிப் பார்த்து, அவற்றின் எண்ணிக்கை குறைந்தால், திருடனுக்குத் தண்டனை அளிக்கிறான். திருடிய வனுடைய உடைமைகள் அனைத்தையும் திருட்டுக் கொடுத்தவன்

எடுத்துக் கொள்ளலாம் என்பதும், திருடியவன் கொல்லப்பட வேண்டும் என்பதும் தீர்ப்பு.

அரசுத் தலைமையகம் கரையிலிருந்து வெகுதொலைவில் மலை மீது இருக்கிறது. ஆனால், வாணிக மையம் கடற்கரையில் இருக்கிறது.

உள்நாட்டு விளைபொருள்களுள் மிளகும் ஒன்று. அது ஹிசியாலியில் (ஹிலி) கிடைக்கிற மிளகைப் போலவே இருக்கிறது. மக்கள் தாங்கள் அறுவடை செய்த மிளகு அனைத்தையும் பொதுப் பண்டசாலைகளில் போட்டு வைக்கிறார்கள். போஹோ (பஹர்) என்பது 375 கட்டி எடையுள்ளது. ஏற்றுமதி வரி பத்தில் இரு பங்கு. கஜங் இலை, பிசாங் துணி, பன்னீர், பலாப்பழம், கடச்சு முதலியவை பிற வாணிகப் பொருள்கள். இங்கே கிடைக்கின்ற முத்து, பவழம், சாம்பிராணி முதலியவை கன்மைலியிலிருந்தும் போலாங்கிலிருந்தும் (கொமரத்தீவுகள், பிரான்கு மக்கள் நாடுகள்?) வருகின்றன. இங்கிருந்து ஏற்றுமதி ஆகின்ற பொருள்கள் ஹிசியாவோ கூனன் (காயங்குளம்) துறைமுகத்திலிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களைப் போன்றவையே.

இங்கே சிறந்த குதிரைகள் இருக்கின்றன. அவை மிக மேற்கேயுள்ள நாடுகளிலிருந்து கப்பல் கப்பலாய் வந்து இறங்குகின்றன. குதிரையின் விலை நூறு பொன் முதல் ஆயிரம் பொன் வரையிலும் இருக்கிறது. சில குதிரைகளுக்கு நான்காயிரம் பொன் கொடுத்து வாங்குபவர்களும் இருக்கிறார்கள். குதிரைகள் அத்தகைய உயர்ந்த விலைகளுக்கு விற்கவில்லையென்றால், அவற்றைக் கொண்டுவந்த வெளி நாட்டினர் குதிரை வாணிகம் இலாபமற்றது என்று கருதுவர்.

—*Tao i chih lio* 83. Ku-li-fo Tr. Rockhill. Toung Pao xvi pp. 454-5

## ஏ. ஜர்பட்டான்

இந்த நாடு குலிபோவுக்கு அப்பால் இருக்கிறது. நிலம் மேடு பள்ளமற்றது. மண் வளமிக்கது. ஆனால், உழுது பண்படுத்தப் பட்ட நிலங்கள் குறைவாய் இருக்கின்றன. இது வெப்ப மிகுந்த நாடு. ஆண் பெண் இருபாலாரும் நூல்துணியை உடுத்திக் கொண்டு, தலையில் ஒரு தலைப்பாகையை அணிந்துகொள்கின்றனர். கடல்மீது செல்வதே அவர்களுடைய முக்கியமான

தொழில். முத்து வாணிகத்திற்கு இதுவே முதன்மையான துறைமுகம்.

எவனுகிலும் குற்றஞ் செய்துவிட்டால், அவனை ஓரிடத்தில் நிறுத்தி, அவனைச் சுற்றிலும் சுண்ணும்பால் ஒரு வட்டமான கோடு கிழித்துவிடுகிறுர்கள். அவன் கோட்டைத் தாண்டி வெளியே வரக்கூடாது என்பது விதி. அதுவே அவ்வூர் மக்கள் தருகின்ற மிகக் கடுமையான தண்டனையாகும்.

பட்டன் துணியும் முத்தும் இந்தத் துறைமுகத்து வாணிகப் பொருள்கள். முத்து டிசான் சியாங்கிலிருந்து (மன்னுர் வளைகுடாவா? சிலாணு?) கொண்டுவரப்படுகின்றது. டிசான் சியாங்கில் எடுக்கப்படுகின்ற முத்து அனைத்தையும் திரட்டி, ஒன்று சேர்ப்பது அங்குள்ள முத்துச் சலாப அலுவலகத் தின் பணியாகும். அவ்வாறு திரட்டப்பட்ட முத்தைச் சிறு படகுகளில் ஏற்றி இங்கே (ஜர்பட்டன்) கொண்டுவருகின்றனர். இங்கே இருக்கின்ற பணக்கார வணிகர்கள் முத்தின் விலையைக் குறைப்பதற்குப் பொன்னையும் வெள்ளியையும் பயன்படுத்து கிறுர்கள்(?). டிசான் சியாங்கிலிருந்து முத்தை எடுத்துக் கொண்டு வருபவர்கள் இங்கே வருகின்ற சீன வணிகர்களுக்கு நேராக விற்க முயன்றுல் அவர்கள் பெறக்கூடிய விலை மிகவும் குறைவாகத்தான் இருக்கும்; ஏனெனில், இங்கே உள்ள முத்து வணிகர்கள் டிசான் சியாங்கு வணிகர் விற்கிற விலையைக் காட்டிலும் குறைந்த விலைக்கு விற்கத் தொடங்குவார்கள். அந்தப் போட்டியின் காரணமாக டிசான் சியாங்கு வணிகர்கள் தங்க ளுடைய முத்தை மிகக் குறைந்த விலைக்கு விற்க நேரிடும்.

—*Tao i chih lio* 66. Sha-li-pa-tan. tr. Rockhill; T'oung Pao xvi pp. 464–5.

# XXXIII. பெயி ஹிசின்-கி.பி. 1436

## அ. இலங்கை

காற்று வாய்ப்பாய் இருந்தால், சுமன்தலாவிலிருந்து புறப்பட்ட பன்னிரண்டாம் நாள் ஹிசிலான் ஷான் (சிலான்) என்னும் நாட்டை அடையலாம். இது ஒரு பரந்த நாடு; இங்கு மக்கள் நெருக்கம் அதிகம். இந்த நாட்டு மக்கள் திரட்டி வைத்துள்ள செல்வங்கள் சவோவா (ஜாவா) மக்கள் திரட்டி வைத்துள்ள செல்வங்களுக்கு நிகரானவை. உள்நாட்டில் ஒரு மலை இருக்கிறது. அது ஆகாயத்தை முட்டிக்கொண்டு உயர்ந்தோங்கி நிற்கிறது. அந்த மலையின் முகட்டில் நீல மெயிலான் கற்களும், மஞ்சள் நிற யாக்குக் கற்களும், நீல-சிவப்பு ரத்தினங்களும் இருக்கின்றன. பெருமழை பெய்யும்போது, மலையிலிருந்து இறங்குகின்ற நீர் அந்தக் கற்களை அடித்துக் கொண்டுவந்து, கீழே உள்ள மணலில் தள்ளுகிறது. அவற்றை மக்கள் பொறுக்கியெடுத்துக் கொள்கிறார்கள். கடற்கரையின் அருகில் நீரடித்திடல்கள் இருக்கின்றன, அவற்றில் முத்துச் சிப்பிகள் ஏராளமாய் இருக்கின்றன. மக்கள் வலைகளைப் பயன் படுத்தி, அந்தச் சிப்பிகளைத் திரட்டிக்கொண்டுவந்து, குட்டையிற் போட்டுவிடுகிறார்கள். சிப்பிகள் அழுகிப்போன பிறகு, அவற்றைச் சல்லடையிற்போட்டுச் சலித்து, முத்துகளைப் பிரித்து எடுத்துக்கொள்கிறார்கள்.

கடற்கரையில் தட்டையான கல் ஒன்றிருக்கிறது. அதன் மீது மூன்றடி நீளத்திற்கு மேற்பட்ட காலடி பதிந்த குழி ஒன்றிருக்கிறது. அதிலுள்ள நீர் வற்றிப்போவதே கிடையாது. முன்னொரு காலத்தில் புத்தர் டிசுவிலான் (நிக்கோபார்) தீவு களுக்குப் போய்க்கொண்டிருந்தபோது, இந்தத் தீவிலுள்ள மலைக்குப் போனதாகவும் அப்போது அவருடைய திருவடி இந்த இடத்தில் பதிந்ததாகவும் இங்கு வாழ்கின்ற மக்கள் சொல்

கிருர்கள். அந்தத் திருவடியை மக்கள் இன்றும் வழிபடுகிருர்கள். அதற்குக் கீழே சாக்கிய புத்தர் நிர்வாணக்கோயில் என்னும் பெயருடைய கோயில் ஒன்று இருக்கிறது. அவருடைய உண்மையான உடல்—அதாவது, அவரைப்போன்ற உருவச்சிலை-இந்தக் கோயிலில் ஒருக்களித்துப் படுத்துக்கொண்டிருக்கிறது. அவர் சமாதி அடைந்த இடத்தில் அவருடைய உடலின் திருச்சின்னங்களும் இருக்கின்றன.

இங்கு எப்போதும் வெப்பமாகவே இருக்கிறது. மக்கள் பொதுவாக, பணக்காரர்களாய் இருக்கிருர்கள். இங்கு அரிசி ஏராளமாய்க் கிடைக்கிறது.

இங்கு ரத்தினங்களும், முத்தும், அம்பரும், சாம்பிராணியும் கிடைக்கின்றன. இங்கே வந்து வாணிகஞ் செய்கின்ற சீனருடைய வாணிகப் பொருள்கள் தங்க நாணயங்கள், செப்பு நாணயங்கள், வெள்ளை நிறமும் நீல நிறமும் உடைய பீங்கான் பொருள்கள், பல்வண்ண சாட்டின் துணிகள், பல்வண்ண மென்பட்டு வலைகள் ஆகியவை ஆகும்.

ஆண் பெண் இருபாலாரும் தலைமயிரை முடிந்து கொள்கின்றனர். அவர்கள் மேலே ஓர் அங்கியையும் இடுப்பில் ஒரு நூல்துணியையும் அணிந்துகொள்கிருர்கள்.

யுங்லோ ஏழாம் ஆண்டில் (1409) இங்கு வந்த செங்ஹோவும் பிறரும் பேரரசருடைய பெயரில் இந்தக் கோயிலுக்குப் பொன் வெள்ளிப் பூசைப்பாத்திரங்களையும் பொற்சரிகைப் பூ வேலை செய்த பல்வண்ணக் கொடி ஒன்றையும் வழங்கினுர்கள். அன்றியும், கோயிலில் எழுதுத்துகள் பொறிக்கப்பட்ட கல் ஒன்றையும் பதித்தார்கள். மேலும், அரசனுக்கும் அவனுக் கடக்கிய தலைவர்களுக்கும் பேரரசர் பெயரால் பல பரிசுகளைக் கொடுத்தார்கள்,

நன்றியற்ற அரசன் அலியக்கோனுவர் (அழகக் கோனுர் - அதாவது, ஆறும் விஜயபாஹு, 1397–1409) செங்ஹோவின் தூதுக் குழாத்திற்கு எதிராகச் சதி செய்தான். ஆனால், கடற் படைத் தலைவனுன செங்ஹோ (அவன் ஓர் அலி) அந்தச் சதியை முறியடிப்பதற்கான ஏற்பாடுகளை ரகசியமாய்ச் செய்து முடித்து, தன்னுடைய ஆட்கள் விரைவாகவும் ஓசையின்றியும் (சத்தம் வராமல் இருப்பதற்காக அவர்கள் வாயில் துணியை வைத்து அடைத்துக்கொண்டார்களாம்!) முன்னேறி, அரண்மனைக்குச் செல்லுமாறு பணித்தான். அவர்களும் அவ்வாறே செய்து,

நள்ளிரவில் துப்பாக்கிச் சூடு நடத்தி, அரசனைச் சிறை பிடித்து விட்டார்கள்.

யுங்லோ ஒன்பதாம் ஆண்டில் (கி.பி. 1411) இலங்கை அரசன் சீனப் பேரவைக்குச் சென்று, பேரரசரை வணங்கி, மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். பேரரசரும் அவனை மன்னித்து அவனுடைய நாட்டை அவனுக்கே திருப்பிக் கொடுத்து விட்டார். அதிலிருந்து உலகின் நான்கு திசைகளிலும் வாழ்ந்த காட்டு மிராண்டிகள் சீனவைக் கண்டு அஞ்சி நடுங்கினார்கள். அதற்குப் பிறகு அவர்கள் வழிதவறி நடக்கவில்லை.

—*Hsing ch'a Sheng lan*. 26 Hsi-lan shan, tr. Rockhill, T'oung Pao xvi pp. 381-383.

## (ஆ) கொச்சி

இந்த இடம் இந்தியத் தலைநிலத்தில் ஹிசிலானுக்கு (இலங்கைக்கு) எதிரில் இருக்கிறது. உள் நாட்டில் இது குலியுடன் (கோழிக் கோட்டோடு) இணைந்திருக்கிறது. இங்கே எப்போதும் வெப்பமாகவே இருக்கிறது; மண் வளமற்றது; விளைவு மிகவும் குறைவாய் இருக்கிறது. கிராமங்கள் கடற்கரையில் இருக்கின்றன. மக்கள் நேர்மை உடையவர்கள், ஆண் பெண் இருபாலாரும் தலைமயிரை முடிந்துகொள்கிறார்கள். அவர்கள் நீளங் குறைந்த அங்கியொன்றையும் இடுப்பில் ஒரு நூல் துணியையும் அணிந்து கொள்கிறார்கள்.

இங்கே முகுவர் என்ற சாதியைச் சேர்ந்த மக்கள் சிலர் இருக்கின்றனர். அவர்கள் வீடு கட்டிக் கொள்வதில்லை. குகைகளிலும் மரத்தில் கட்டப்பட்ட கூடுகளிலும் அவர்கள் வசிக்கிறார்கள். மீன் பிடிப்பதே அவர்கள் தொழில். ஆண் பெண் இருபாலாரும் பிறந்த மேனியாகவே இருக்கின்றனர். புல்லையோ தழையையோ இடுப்பிற்கு முன்னும் பின்னும் கட்டிக்கொள்கின்றனர். ஒரு முகவன் இன்னொரு முகவன் எதிரில் வருவதைப் பார்த்துவிட்டால், முன்னவன் ஓர் ஓரத்தில் பதுங்கி மறைந்து கொள்வான். பின்னவன் தன்னைத் தாண்டிப் போகும் வரையிலும் முன்னவன் பதுங்கிக் கொண்டே இருப்பான்.

இங்கே மிளகு ஏராளமாய் விளைகிறது. பணக்காரர்கள் தாங்கள் அறுவடை செய்த மிளகைப் பெரிய பெரிய பண்டசாலைகளில் போட்டுவைக்கிறார்கள். வணிகர் பணம் என்னும் சிறு தங்க நாணயத்தைப் பயன்படுத்துகின்றனர். பல்வண்ண

சாட்டின் துணி, வெண்பட்டு, நீல நிறமும் வெள்ளை நிறமும் உடைய பீங்கான், பொன், வெள்ளி ஆகியவை இங்கு வாணிகப் பொருள்களாய் இருக்கின்றன.

பேரரசரின் பெருங்கருணையை மிகுந்த நன்றியுணர்வுடன் பாராட்டுகின்ற கொச்சி அரசன் பேரரசருக்கு எப்போதும் பரிசுப் பொருள்களை அனுப்பிக்கொண்டே இருக்கிறான்.

—*Hsing ch'a Sheng lan*, 30 Ko-chih, tr. Rockhill, T'oung Pao, xvi p 452.

## (இ) கோழிக்கோடு

காற்று வாய்ப்பாய் இருந்தால் ஹிசிலானிலிருந்து (சிலானிலிருந்து) புறப்பட்ட பத்தாம் நாள் இந்த இடத்தை அடையலாம். இது ஒரு முக்கியமான சிறு தீவு. அண்மையிலிருக்கும் செங்கியாலாவைப் போலவே (சிலானைப் போலவே) மேலைக்கடல் நாடுகளுடன் நடைபெறுகின்ற வாணிகத்திற்கு இது முக்கியமான மையமாய் இருக்கிறது. இது ஒரு பரந்த இடம். மண் வளமற்றது. ஆனால், கோதுமை போதுமான அளவில் இங்கே கிடைக்கிறது.

இங்கு வாழும் மக்கள் நேர்மையானவர்கள். சாலையில் நடப்பவர்கள் ஒருவர்க்கொருவர் வழிவிடுகிறார்கள். சாலையில் கிடக்கின்ற பிறர் பொருள்களை அவர்கள் எடுத்துக்கொள்ள மாட்டார்கள். உள்ளங்காலில் பிரம்பால் அடிக்கும் தண்டனை இங்குக் கிடையாது. ஒருவனைத் தண்டிக்க வேண்டுமானால், அவனை ஓரிடத்தில் நிறுத்தி, சுற்றிலும் சுண்ணாம்பால் ஒரு கோடு கிழித்துவிடுவார்கள். குற்றவாளி அந்தக் கோட்டைத் தாண்டக் கூடாது என்பது விதி.

இந்த ஊர் அரசனும் குடிமக்களும் தொலைவிலுள்ள மலைமீது வாழ்கின்றார்கள். ஆனால், வாணிகம் முழுதும் கடற்கரையில் நடைபெறுகிறது.

ஆண்கள் ஒரு நீண்ட அங்கியையும் தலையில் ஒரு வெள்ளை நூல் துணியையும் அணிந்துகொள்கிறார்கள். பெண்கள் நீளங் குறைந்த அங்கி ஒன்றையும் பல் வண்ணத் துணியையும் அணிந்துகொள்கிறார்கள். அவர்களுடைய காதுகளில் தங்க நகைகள் தொங்கிக்கொண்டிருக்கின்றன. தலையில் அவர்கள் முத்து மணி பவழம் முதலியவற்றால் ஆன மாலையையும், கையிலும் காலிலும் பொன்னாலோ வெள்ளியாலோ செய்த கடகம் தண்டை ஆகியவற்

றையும். கைவிரல்களிலும் கால்விரல்களிலும் கல்லிழைத்த பொன் வெள்ளி மோதிரங்களையும் அணிந்துகொள்கிறார்கள். அவர்கள் தங்கள் தலைமயிரை மேலே தூக்கி முடிந்துகொள்கிறார்கள். அவர்களுடைய முகம் வெண்மையாய் இருக்கிறது. கூந்தல் கருமையாய் இருக்கிறது.

கோச்சிஹில் (கொச்சியில்) இருப்பதைப் போலவே இங்கேயும் முகவர் இருக்கின்றனர். இங்கேயும் அவர்கள் நிர்வாணமாய் இருக்கிறார்கள்.

ஹிசியாலியில் (ஏழில் மலையில்) விளைகின்ற மிளகு இங்கேயும் விளைகிறது. விற்பனையாகும் வரையிலும் அது பண்டசாலையில் போட்டுவைக்கப்படுகிறது. இங்கே ரோஜா எண்ணெய், போலோமி (பலாப் பழம்), கட்சு, பூப்போட்ட சீட்டித் துணி, முத்து, பவழம், சாம்பிராணி புட்சுக், அம்பர் ஆகிய பொருள்கள் கிடைக்கின்றன. ஆனால், அவை எல்லாமே வெளியூர்களிலிருந்து இங்கே கொண்டுவரப்பட்டவை. இங்கே இருக்கிற சிறந்த குதிரைகள் மேலைநாடுகளிலிருந்து இறக்குமதியானவை. குதிரை ஒன்றுக்கு நூறு பொன் ஆயிரம் பொன் என்று உயர்ந்த விலை கொடுத்து வாங்குகின்றனர்.

தங்கம், வெள்ளி, பல்வண்ண சாட்டின் துணி, நீல நிறமும் வெள்ளை நிறமும் உடைய பீங்கான், கஸ்தூரி, கருப்பூரம், பாதரசம், உருள்மணி முதலியவை இங்கு வரும் சீனருடைய வாணிகப் பொருள்களாகும்.

இவ்வூர் அரசன் பேரரசருடைய பெருங்கருணையை வியந்து போற்றி, தூதுக் குழுக்களையும் தங்கத் தகட்டில் எழுதப்பட்ட விண்ணப்பங்களையும் திறைப்பொருள்களையும் சீனப் பேரவைக்கு எப்போதும் அனுப்பிக் கொண்டே இருக்கிறான்.

—*Hsing ch'a Sheng lan*, **31 Ku-li, tr. Rockhill, T'oung Pao xvi, pp. 561-62.**

# XXXIV. மாஹுவான்–கி.பி. 1451

## அ. நிக்கோபாரும் சிலானும்

டிசுவிலான் ஷான் (நிக்கோபார்) என்னும் தீவுக் கூட்டம் பெருங்கடலில் இருக்கிறது. அதில் மூன்று நான்கு தீவுகள் இருக்கின்றன. அவற்றுள் மிகவும் உயர்ந்தது சு-டு-மான்[1] என்று சொல்லப்படுகின்றது. மவோஷான் (புலோவெஹ்) என்னும் இடத்திலிருந்து புறப்பட்டு, வடகிழக்குச் காற்றின்முன் பயணஞ்செய்தால் மூன்று நாட்களில் நிக்கோபாரை அடையலாம்.

அங்கு வாழ்கின்ற மக்கள் அனைவரும் குகைகளில் வசிக்கிறார்கள். அவர்கள் அனைவருமே—ஆண் பெண் இருபாலாரும்—விலங்குகளைப் போல நிர்வாணமாய் இருக்கின்றனர். அவர்கள் நெல்லைப் பயிர் செய்வதில்லை. வள்ளிக் கிழங்கு வாழைப்பழம் பலாப்பழம் போன்ற பொருள்களையும், மீன் இறால் போன்ற பொருள்களையும் உண்கிறார்கள்.

உடம்பில் ஒரு சிறு துணியை அணிந்தாலும் வெம்புண்ணும் சீழ்ப்புண்ணும் வந்துவிடும் என்னும் தவறான கருத்து அவர்களிடையில் நிலவுகிறது. அதற்கும் ஒரு கதை சொல்கிறார்கள். பண்டைக் காலத்தில் புத்தர் கடல்கடந்து இந்தத் தீவுகளுக்கு வந்தபோது, தம்முடைய ஆடைகளைக் களைந்து வைத்துவிட்டு நீராடினாராம். அப்போது உள்ளூர்வாசிகள் அவற்றைத் திருடிக் கொண்டு போய்விட்டார்கள்ளாம். அதனால் புத்தர் அவர்களைச்

[1] பென்டுமான் என்பது தவறாக சுடுமான் என்று எழுதப்பட்டிருக்கக் கூடும். அந்தமானை அன்டுக்மான் என்று செளஜூகுவா எழுதியுள்ளார். மாஹுவான் சொல்கின்ற டிசுவிலான் ஷான் அந்தமானையும் உள்ளடக்கியதாய் இருக்கக்கூடும்—ராக்ஹில்.

சபித்துவிட்டாராம். இது சிஹ்லுவான்வு நாடு[2] என்று பொது வாகச் சொல்லப்படுகிறது.

டிசுவிலான் தீவுகளிலிருந்து மேற்கு நோக்கி ஏழெட்டு நாள் பயணஞ்செய்தால் யிங்-கோ-டிசுவித் தலைநிலத்தைக் காணலாம்.[3] மேலும் இரண்டு மூன்று நாள் பயணத்திற்குப் பிறகு புத்தர் கோயில் மலைக்குப் (தொந்தரம்) போய்ச் சேரலாம். அதன் பிறகு சிலானில் நாம் காண்கிற முதல் துறைமுகமான பியஹ்-லோ-லி[4] என்னும் இடத்தை அடையலாம். மலையின் அடிவாரத்தில், கடற்கரையோரத்தில், ஒரு பெரிய பாறை இருக்கிறது. அதன் மீது ஒரு கால் பதிந்த அடையாளம் இருக்கிறது. அது அங்கு எவ்வாறு தோன்றியது என்பது இன்னும் விளங்காத ரகசிய மாகவே இருக்கிறது. அதனை மக்கள் பக்தியுடன் வழிபடு கிறார்கள். அது சுமார் இரண்டடி நீளமுடையது. அது புத்தர் பிரான் காலடி பதிந்த இடம் என்று மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. காலடி பதிந்த அந்தக் குழியில் வற்றாத ஊற்று ஒன்றிருக்கிறது. மக்கள் அந்த ஊற்று நீரைக் கையிலெடுத்துத் தங்கள் கண்ணையும் முகத்தையும் கழுவிக் கொள்கிறார்கள். புத்தர் திருவடி நீர் தங்களைத் தூய்மையாக்கும் என்று அவர்கள் நம்புகிறார்கள்.

கோயிலில் புத்தர் உறங்கிக் கொண்டிருக்கிறார்—அதாவது, அவருடைய உருவச் சிலையைக் கிடந்த திருக்கோலத்திற் காண்கிறோம். மஞ்சம் அகில் மரத்தாலானது. விலையுயர்ந்த பலவகைப் பொருள்கள் அதனை அணி செய்கின்றன. மஞ்சம் ஒரு மேடையின்மீது இருக்கிறது. மேடையும் அழகாயிருக்கிறது. புத்தருடைய பல் முதலிய பிற திருச்சின்னங்களும் இந்தக் கோயிலில் இருக்கின்றன. இந்த இடத்தில்தான் புத்தர் பரி நிர்வாணம் எய்தினார் என்று சொல்கின்றனர்.

[2] இதற்குப் போதுமான விளக்கம் இன்னும் கிடைக்கவில்லை. See, however, Gerini, *Geog. of Ptolemy*, pp. 386, n. 3. pp. 413-15.

[3] Phillips nenders it by Hawk's Beak Hill—Duyvendak, p. 47.

[4] பெல்லிகம்: இது காலேயிலிருந்து சுமார் 13 மைல் தொலைவிலுள்ளது. சீனக் கப்பல்கள் பெல்லிகத்திற்கு வந்து சேர்வதற்குமுன் காலேயை அடைந்தன என்பதும், காலேயிலிருந்து பெல்லிகத்தை அடைவதற்கு இரண்டு மூன்று நாள் ஆகும் என்பதும் தவறான செய்திகள். வாங்டாயுவான் எழுதி வைத்துள்ள செய்திகளை மனதிற் கொண்டு நோக்கும்போது, கொழும்பு அந்தக் காலத்தில் ஒரு முக்கிய துறைமுகமாய் இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. ஆனால், மிங் வமிச ஆட்சிக் காலத்து ஆசிரியர்கள் அதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. இது விசித்திரமாய் இருக்கிறது.

இந்த இடத்திலிருந்து (அதாவது, பெலிகத்திலிருந்து) தரைவழியாக வடமேற்கே பயணஞ் செய்தால்[5] அரசன் வசிக்கிற ஊரை[6] அடையலாம். அரசன் சோலிமன்—அதாவது சோழ மண்டலத்திலிருந்து வந்தவன்.

மக்கள் புத்தரை வழிபடுகிறார்கள். யானையையும் பசுவையும் மிகவும் உயர்வாக மதிக்கிறார்கள். அவர்கள் ஆவின் சாணத்தை எரித்துத் சாம்பலை உடல் முழுவதும் பூசிக்கொள்கிறார்கள்; ஆவின்பாலை அருந்துகிறார்கள், ஆனால் அதன் ஊனை உண்பதில்லை. பசு செத்துப்போனால், அதன் உடலைப் புதைத்து விடுகிறார்கள். பசுவைக் கொல்பவன் மரண தண்டனை அடைகிறான். அந்தத் தண்டனையிலிருந்து தப்ப வேண்டுமானால் பொன்னால் செய்த பசுவின் தலையைக் கொடுக்க வேண்டும். காலையில் எழுந்ததும் மக்கள் ஆவின் சாணத்தை நீரில் கரைத்துத் தரையை மெழுகிவிட்டு புத்தரை வழிபடுகிறார்கள். பொது மக்கள் இல்லங்களில் மட்டுமன்றி அரசன் மாளிகையிலும் இந்தப் பழக்கம் கடைப்பிடிக்கப்படுகிறது. [புத்தரைக் கும்பிடும் போது, மக்கள் தங்களுடைய கைகளையும் கால்களையும் நீட்டி வயிறும் மார்பும் தரையிற் படுமாறு படுத்துக் கொள்கிறார்கள்.]—Duyvendak, p. 47.

தலைநகருக்கு அருகிலுள்ள பெரிய மலை (அதாவது, ஆதாம் சிகரம்) மேக மண்டலத்தைக் கிழித்துக்கொண்டு நிற்கிறது. அதன்மீது இரண்டடி ஆழமும் எட்டடி நீளமும் உள்ள காலடிப் பதிவு ஒன்றிருக்கிறது. அது மனித குலத்தின் முதல் தந்தையாகிய ஆஜனுடைய (ஆதாமினுடைய) காலடி பதிந்த இடம் என்று மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன.

இந்த நாடு பெரும் பரப்புடையது; இங்கு ஏராளமான மக்கள் வாழ்கிறார்கள்; சவோவாவை (ஜாவாவை) நிகர்க்கும் வகையில் இங்கே செல்வமும் துய்க்கும் பொருள்களும் மலிந்து கிடக்கின்றன.

மக்கள் தங்கள் உடலின் மேற்பகுதியைத் துணியால் மறைப்பதில்லை. கீழ்ப்பகுதியை மறைப்பதற்கு ஒரு துணியைக் கட்டிக் கொள்கிறார்கள். அவர்களுடைய உடலிலுள்ள ரோமமெல்லாம் மழிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் தலைமயிரை அவர்கள் மழித்துக்

[5] ஒரு பிரதியில் நான்கைந்து லீ என்றும், இன்னொரு பிரதியில் ஐம்பது லீ என்றும் எழுதப்பட்டுள்ளது.

[6] கம்போலா—டென்னட், சிலோன், II, P. 224.

கொள்வதில்லை. அதனைச் சுற்றி நூல்துணியாலான பாகையை அணிந்துகொள்கிறார்கள்.

ஒருவனுடைய தந்தை இறந்துபோனால், துக்கம் கொண்டாடுவதற்கு என்று குறிப்பிடப்பட்ட காலம் வரையிலும், அவன் தன்னுடைய உடலிலுள்ள ரோமத்தை மழித்துக்கொள்வதில்லை. பெண்கள் தங்களுடைய தலைமயிரைப் பின்றால் முடிந்து கொள்கிறார்கள். முடிச்சைச் சுற்றி ஒரு வெள்ளைத் துணியைக் கட்டிக் கொள்கிறார்கள். [பிறந்த குழந்தை ஆணாயிருந்தால் அதனுடைய தலையை மழித்து விடுகிறார்கள்; பெண்ணாயிருந்தால் அவ்வாறு செய்வதில்லை, அவள் பருவமடையும் வரையிலும் அதனை வளரவிட்டு விடுகிறார்கள்.] (Duyvendak, p. 47) பெண்கள் உண்ணல் பருகல் ஆகிய செயல்களை மறைவாகச் செய்கிறார்கள். அவற்றை ஆண்கள் பார்த்தல் தகாது.

அவர்களுடைய உணவில் வெண்ணெய் இன்றியமையாத பகுதியாய் இருக்கிறது. அவர்களுடைய வாயில் வெற்றிலை பாக்கு இல்லாத நேரமே கிடையாது.

இறந்தவர்களுடைய உடலைச் சுட்டு, எலும்புகளைப் புதைத்து விடுகிறார்கள். [ஒரு குடும்பத்தில் யாரேனும் இறந்துவிட்டால், அந்தக் குடும்பத்தின் உறவினர்களும் பக்கத்து வீடுகளில் வசிப்பவர்களும் ஆகிய பெண்கள் சாவு வீட்டில் திரண்டு மாரடித்துக் கொண்டு, உரத்த குரலெடுத்து அழுவது வழக்கம்]—Duyvendak p. 47.

நீலம் சிவப்பு மஞ்சள் என்று நிறத்தால் மூன்று வகைப்பட்ட யாஹு என்னும் கற்களும், நீல மீ-லன் கற்களும் இங்கே கிடைக்கின்றன. ஹிசி-லா-னி, கூ-மோர்-லான் என்னும் இரு வகைக் கற்களும் மழை பெய்யும் மலையின் (ஆதாம் சிகரத்தின்) சரிவுகளில் விரைந்து பாய்கின்ற நீரோடு கலந்துவந்து அடிவாரத்து மணலில் விழுகின்றன.

கடலில் இருக்கின்ற ஒரு தீவின்மீது விழுந்து மிதக்கின்ற ஞாயிற்று ஒளியே முத்துச் சிப்பியின் ஆதாரமாய் இருக்கிறது.[7]

[7] மாஹுவானுடைய மூல நூலில் பின்வரும் செய்தி காணப்படுகிறது: சிலானிற் கிடைக்கின்ற ரத்தினங்களெல்லாம் புத்தருடைய கண்ணீர்த் துளிகளினின்று தோன்றியவை என்பது இங்குப் பொதுவாக அடிபடும் பேச்சு. சிலானுக் கருகிலுள்ள கடலில் மிதந்துகொண்டிருக்கிற நீண்ட மணல் திடல் ஒன்றிருக்கிறது. அது உறைபனி போல வெண்மையாய் இருக்கிறது. அதன்

மக்கள் அங்கே ஒரு குட்டையைத் தோண்டியிருக்கிறார்கள். இரண்டுமூன்று ஆண்டுக்கு ஒருமுறை அவர்கள் முத்துச் சிப்பிகளை அந்தக் குட்டையில் பரவலாய்ப் போட்டு வைக்கிறார்கள். அவற்றை யாரும் திருடிக்கொண்டு போய் விடாமல் அரசு அலுவலர் காவல் காக்கின்றனர். சில நாட்களுக்குப் பின் முத்தைச் சலித்து எடுத்துக்கொள்கிறார்கள். [அவ்வாறு சலித்தெடுத்த முத்தை உரிய அதிகாரிகளிடம் கொடுப்பதற்கு மாறாகச் சிலர் திருட்டுத்தனமாய் விற்பனை செய்து விடுவதும் உண்டு.]—Duyvendak, p. 47.

இங்கே நெல்லும், எள்ளும், அவரையும் விளைகின்றன. ஆனால் கோதுமை இங்கே விளைவதில்லை. தென்னை மரங்கள் ஏராளமாய் இருக்கின்றன.

பழ வகைகளுள் இங்கே வாழை, பலா, முலான் ஆகியவை கிடைக்கின்றன. கரும்பும் மனிதர் தின்னக்கூடிய பிற பொருள்களும் இங்கே இருக்கின்றன.

இங்கே ஆடு மாடு முதலிய கால்நடைகளும், கோழி வாத்து முதலிய பறவைகளும் இருகின்றன.

ஒவ்வொன்றும் ஒரு கண்டரின் ஆறு லீ எடையுள்ள தங்க நாணயங்களை வணிகர் பயன்படுத்துகின்றனர். சீனக் கஸ்தூரி, மென் பட்டு வலை, பூவேலை செய்த பட்டுத் துணி, நீல நிறமும் வெள்ளை நிறமும் உடைய பீங்கான், தாமிரம், இரும்பு, கருப்பூரம் ஆகியவை இங்கே வாணிகப் பொருள்களாய் இருக்கின்றன.

முத்தும் விலைமதிப்புள்ள ரத்தினங்களும் இவர்கள் சீனப் பேரரசருக்கு அனுப்பும் திறைப் பொருளாகும்.

—*Ying yai sheng lan*, 10 Hsi-lan. Tr, Rockhill. T'oung Pao xvi, pp. 377-381. Modified by Duyvendak, *Ma Huan Reexamined*, Verhandelingen der Koninklijke Akademie van Wetenschappen, Amsterdam, Afdeeling Letterkunde, Nieuwe Reeks, Deel xxxii, No. 3.

---

மீது ஞாயிற்று ஒளியும் திங்கள் ஒளியும் விழுகின்றபோது அவற்றின் பிரதிபலிப்புக் கண்ணைக் கூசவைக்கிறது. அந்த ஒளியால் ஈர்க்கப்படும் முத்துச் சிப்பிகள் அனைத்தும் அந்தத் திடலுக்கு வந்து கூடுகின்றன.

—Cited by Rockhill, p. 380 n. 2, See Duyvendak, P. 47.

## ஆ. மாலத்தீவு*

[சுமன்டலாவிலிருந்து புறப்பட்டு, (புலோ வெஹின் தென்கடற் கரையிலுள்ள?) ஹிசியா மவோ-ஷானைத் தாண்டி, தென் திசையிற் சென்றால்—காற்றும் வாய்ப்பாயிருந்தால்-பத்து நாள் பயணத்திற்குப்பின் இந்த நாட்டை அடையலாம். இதனுடைய பெயர் டெயிஹ்கான் என்பதாகும். இங்கே மதில் சூழ்ந்த நகரம் எதுவும் இல்லை. மலைச்சாரல்களில் மக்கள் நெருக்கமாக வாழ்கிறார்கள்.]—Duyvendak.

மேற்கே போகப்போகக் கடல்வழியின் இயல்பு மாறிக் கொண்டே போகிறது; நகரத்துப் பெரு வாயில் போலக் கடலில் பாறைகளாலான வாயில் ஒன்று இருக்கிறது.

லியு என்னும் ஒரே பெயரைத் தாங்கிய பெருந்தீவுகள் எட்டு இருக்கின்றன. ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் போவதற்கு மக்கள் படகுகளைப் பயன்படுத்துகிறார்கள். பிற தீவுகளைச் 'சிறு லியு' என்று சொல்கிறார்கள். அவற்றின் தொகை சுமார் 3000 இருக்கும் அதனால், அவற்றை 'ஆழமிலாக் கடலின் மூவாயிரம் (தீவுகள்)' என்றும் சொல்கிறார்கள்.

(இந்தச் சிறு தீவுகளில் வாழ்கின்ற?) மக்கள் குகைகளிலும் (மரக்கிளைகளிற் கட்டிய) கூடுகளிலும் வசிக்கிறார்கள். அவர்கள் தானியத்தையும் பருப்பையும் பார்த்ததில்லை; மீனையும் இறாலையுமே உண்கிறார்கள். அவர்கள் ஆடை எதுவும் அணிந்து கொள்வதில்லை. இடையை மறைக்க முன்னும் பின்னும் இலைகளைக் கட்டிக்கொள்கிறார்கள். [வாய்ப்பில்லாக் காற்றடித்து, கடல் கொந்தளித்து, கப்பலின் சுக்கான் உடைந்து, மீகாமன் திசை தெரியாமல் தவித்து நிற்கின்ற வேளையில், கப்பல் லியுத் தீவுகளுக்குப் பக்கத்தில் இருக்குமானால், காற்றும் கடலும் அதனை லியுத் தீவுகளின் கரைக்கு இழுத்துக் கொண்டு போய் விடும். கரையோரத்தில் கடல்நீர் வடிந்துபோவதால் கப்பல் அங்குள்ள மணல் திட்டுகளில் மோதிக் கவிழ்ந்துவிடும். எனவே, கப்பல் அந்தப் பக்கம் போகிறதா என்பதை, பொதுவாக, மாலுமிகள் அனைவருமே எச்சரிக்கையாய்க் கவனிப்பார்கள்.]—Duyvendak.

* இது ஒரு தீவுக் கூட்டம். எண்ணற்ற தீவுகள் இங்கிருக்கின்றன. ஆனால், நாம் மாலத் தீவுகள் என்று எழுதாமல் பெரும்பாலும் மாலத் தீவு என்றே எழுதுவோம்.

—மொழிபெயர்ப்பாளர்.

டியஹ்கான் இராஜ்யத்திலுள்ள மக்கள் அனைவருமே இஸ்லா மதத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் நல்லொழுக்கம் உடையவர்கள்; மதகுருக்கள் சொல்லும் அறவுரையை ஏற்று நடப்பவர்கள். மீன்பிடித்தல் அவர்களுடைய தொழில். தென்னை மரங்களைப் பயிர்செய்வதில் அவர்களுக்கு விருப்பம் அதிகம். ஆடவர்கள் கறுப்பு நிறம் உடையவர்கள். தலையில் அவர்கள் வெண்பாகை ஒன்றை அணிந்துகொள்கிறார்கள். இடையில் ஒரு சிறு துணியை (மூலத்திலுள்ள சொற்களை நேராக மொழிபெயர்த்தால்-ஒரு கைக்குட்டையை) கட்டிக் கொள்கிறார்கள்.

மகளிர் நீளங்குறைந்த மேற்சட்டை ஒன்றைப் போட்டுக் கொள்கின்றனர்; உடலின் கீழ்ப்பகுதியை மறைப்பதற்கு ஒரு சிறு துணியையும் முகத்தை மறைப்பதற்கு ஒரு பெரிய துணியையும்[8] அணிந்துகொள்கின்றனர். சாவு திருமணம் போன்ற நிகழ்ச்சிகளில் அவர்கள் தங்களுடைய மதத்திற் சொல்லியுள்ள சடங்குகளைச் செய்கிறார்கள்.

இங்கு எப்போதுமே கோடைகாலத்தைப் போல வெயில் காய்கிறது. இந்த நாட்டு மண் வளமற்றது. அரிசி கிடைப்பது அரிதாய் இருக்கிறது. இங்கு கோதுமையே இல்லை, வாணிகத்திற்கு வெள்ளி நாணயங்கள் பயன்படுகின்றன.

இங்கே தென்னையும் லக மரமும் வளர்கின்றன. (ஆனால் லக மரம் குறைவாக வளர்கின்றது. தென்னை மிகுதியாக வளர்கின்றது.) [இங்கே தேங்காய் ஏராளமாய்க் கிடைக்கிறது. அதனை வாங்கிக்கொண்டு போவதற்காகப் பலவேறு இடங்களிலிருந்தும் வணிகர் வருகின்றனர். பிறநாட்டு வணிகர் இங்கே வந்து வாங்கிக் கொண்டுபோகும் பொருள்களுள் ஒரு வகைத் தேங்காய் ஓடு குறிப்பிடத் தக்கது. அந்த ஓட்டிலிருந்து இந்நாட்டு மக்கள் ஒரு வகை மதுக்கிண்ணம் செய்கிறார்கள். கிண்ணத்திற்குக் கருங்காலி மரக் கால்களைப் பொருத்தி, கால்களுக்கும் கிண்ணத்தின் உட் பகுதிக்கும் உள்ளூரிலேயே தயாராகிற ஒருவகை மெருகெண்ணெய் (வார்னிஷ்) பூசுகிறார்கள். தேங்காய் ஓட்டிற்கு மேலுள்ள நாரைப் பயன்படுத்தி நல்ல கயிறு திரிக்கிறார்கள். வீடுகளில் இந்தக் கயிற்றுச் சுருள்கள் ஏராளமாய்க் குவித்துவைக்கப் பட்டுள்ளன. அவற்றை வெளிநாட்டாரும் வாங்கிச் செல்கின்றனர். இந்தக் கயிறு கப்பல் கட்டுவதற்கும் பிற வேலைகளுக்கும்

[8] இபன் பதூதா குறிப்பைப் பார்க்க—பக். 421-22.

பயன்படுகிறது. கப்பலைக் கட்டுவதற்கு உள்ளூர் வாசிகள் ஆணியைப் பயன்படுத்துவது இல்லை. பலகைகளை ஒன்றோடொன்று இணைப்பதற்கு இந்தக் கயிறும் மர ஆப்பும் இங்கே பயன்படுகின்றன. கயிற்றுத் தையலின்மீது உள்ளூர் மரப்பிசின் ஒன்றைப் பூசிவிடுகின்றனர். அதனால் பலகைகளின் இணைப்பிலுள்ள ஓட்டை எல்லாம் மறைந்து விடுகின்றன[9].

—Duyvendak p. 57.

[அம்பர்கிரிசைத் திரட்ட விரும்புபவர்கள் பல சமயங்களில் லியுத் தீவில் தங்கிவிடுகிறார்கள். வேலை ஏற்றம் நிகழும்போது அவர்கள் அம்பர்கிரிசைப் பிடிக்கிறார்கள். அம்பர்கிரிஸ் பார்ப்பதற்கு மரப்பிசின் போல இருக்கிறது. ஆனால் அது நாறுவதில்லை. அதனைத் தீயில் போட்டு எரித்தால், அதிலிருந்து ஒரு வகை முடைநாற்றம் வீசுகிறது. அது உயர்ந்த விலைக்கு விற்கிறது. வெள்ளியைக் கொடுத்து அம்பர்கிரிசை வாங்கிக் கொள்கிறார்கள்.]—Duyvendak p. 57.

[மாலத்தீவு மக்கள் சிப்பிகளை (சோழிகளை) ஏராளமாய்ப் பிடித்து மலை போலக் குவித்து வைக்கிறார்கள். அவற்றை அவர்கள் வலை வீசிப் பிடித்துக் கொண்டு வந்து கரையில் போட்டுவிடுகிறார்கள். சதை அழுகிப்போன பிறகு சோழிகளை எடுத்துச் சுத்தம் செய்து பிற நாட்டு வணிகர்களுக்கு விற்றுவிடுகிறார்கள் சோழியை அவர்கள் ஹை-வி-யு[10] என்று சொல்கிறார்கள்.]—Duyvendak p. 58.

அவர்கள் மென்மையான பட்டுக்குட்டை நெய்வதில் பிற நாட்டினரைக் காட்டிலும் திறமை மிக்கவர்கள். பொற்சரிகைப் பூப் போட்ட குட்டைகளையும் அவர்கள் நெய்கிறார்கள். அவற்றை ஆடவர் தம் தலையிற் சுற்றிக்கொள்கின்றனர். [சில குட்டைகளின் விலை ஐந்து அவுன்ஸ் வெள்ளிக்குச் சமமாயிருக்கிறது.]

[9] இந்த இடத்தில் ராக்ஹில்லின் மொழிபெயர்ப்புப் பின்வருமாறு அமைந்துள்ளது: தேங்காயின் தோலில் (நாரில்) கயிறு திரிக்கலாம். அந்தக் கயிற்றைப் பலகைகளில் கோத்து, அவற்றை இணைத்துக் கப்பல் கட்டுகிறார்கள். அதற்குப் பிறகு, கயிறு கோத்த இடங்களின்மீது மரப் பிசினைப் பூசிவிடுகிறார்கள். இரும்பாணி அடித்துக் கட்டின கப்பல்களைப் போலவே இந்தக் கப்பல்களும் வலிமை பொருந்தியவையாய் இருக்கின்றன,

[10] ராக்ஹில் பின்வருமாறு எழுதியுள்ளார்: 'அவர்கள் சிப்பிகளைத் திரட்டி ஹிசியன்லோவிலுள்ள கோலாவுக்கு (சியாமிலுள்ள கெடாவுக்கு) விற்றுவிடுகிறார்கள். மகரமீன் கறியைத் துண்டு துண்டாக வெட்டிப் பக்கத்து நாடுகளுக்கு விற்றுவிடுகிறார்கள். அதற்கு லியுயூ (மாலத்தீவு மீன்) என்று பெயர்.'

[இங்கே காய்கறிகள் குறைவு.] இங்கே ஆடு மாடு முதலிய கால்நடைகளும் வீட்டில் வளர்க்கும் கோழியும் வாத்தும் இருக்கின்றன. [அம்பர்கிரிசையும் தேங்காயையும் வாங்கு வதற்காக இரண்டொரு சீனக் கப்பலும் அங்கே போவதுண்டு. ஆனால், அது ஒரு சிறு நாடு ]

—*Ying yai sheng tan.* 14 Liu-shan Tieh-kan. Tr. Rockhill : T'oung Pao xvi, pp. 388-390 (Modified by Duyvendak, *Ma Huan Re-examind.* Verhandelingen der Koninklijke Akademie Van Wetenschappen, Amsterdam, Afdeeling Letterkunde, Nieuwe Reeks, Deel xxxii No-3.)

## இ. கோச்சிஹ் (கொச்சி)

(மாஹுவான் எழுதிய குறிப்பு : ஜியோ பிலிப்ஸ் எழுதிய பொழிப்பு.)

கொயிலும் என்னும் இடத்திலிருந்து ஒரு பகலும் இரவும் பயணஞ் செய்தால் கொச்சியை அடையலாம்[11] என்று மாஹுவான் சொல்கிருர். கொயிலும் என்பது இன்றைய கொல்லம் என்றும் அன்று அரபு ஆசிரியர்கள் குறிப்பிட்ட கலவும் மலே என்றும் கருதலாம். (மலபார் என்னும் தலைப்பில் யூல் எழுதியுள்ள அருஞ்சொல் விளக்கத்தைப் பார்க்க ) டாங் வமிச ஆட்சிக்காலத்தில் (கி.பி. 618-913) அது முஹ்லே என்னும் பெயரில் சீன மாலுமிகளுக்கு அறிமுகமாய் இருந்தது.

அந்த ஊரின் அரசன் சூரிய வமிசத்தைச் சேர்ந்தவன்;[12] பௌத்தமதத்தில் உண்மையான நம்பிக்கை உடையவன்;[13] யானைகளிடத்திலும் பசுக்களிடத்திலும் மிகுந்த பக்தி உடையவன்; இரவிலும் பகலிலும் புத்தர் சிலையை வணங்கு வதில் ஒரு நாளும் தவருதவன்.[14] அவன் தன் உடலின் மேற்

[11] வடமேற்குத் திசையில்—ராக்ஹில்.

[12] சோலி மனிதன்—ராக்ஹில்.

[13] மாஹுவான் இந்து மதத்திற்கும் பௌத்த மதத்திற்கும் வேறுபாடு காணவில்லை.

[14] ராக்ஹில் மேலும் சில செய்திகளைச் சொல்கிருர். 'அவன் ஒரு கோயிலைக் கட்டி, அதில் பொன்னாலான கடவுள் (புத்தர்) சிலை ஒன்று வைத்திருக்கிருன். மேடையில் நீல மணியாலான புடைப்புகள் இருக்கின்றன. சுற்றிலும் ஓர் அகழி இருக்கிறது. ஒரு பக்கத்தில் ஒரு கிணறும் இருக்கிறது. ஒவ்வொரு நாள் காலையிலும், மணியடித்துக் கொண்டே, அந்தக் கிணற்று நீரை இறைத்து, கடவுள் தலையில் பலமுறை ஊற்றுகிருர்கள். இதுவே அங்கு நடைபெறும் சடங்கு.'

பகுதியில் எவ்வித ஆடையையும் அணிவதில்லை; இடையில் மட்டும் ஒரு பட்டுத் துணியை அணிந்து கொள்கிறான்; அது நழுவி விழாமல் இருப்பதற்காக வண்ணப் பட்டுக் கச்சை ஒன்றைக் கட்டிக் கொள்கிறான்; தலையில் வெள்ளை அல்லது மஞ்சள் நூல் துணியைத் தலைப்பாகையாகக் கட்டிக்கொள்கிறான். அரசு அலுவலர்களும் பிரபுக்களும் அரசனைப்போலவே ஆடை அணிந்து கொள்கிறார்கள். வீடுகள் தென்னை மரத்தால் கட்டப்பட்டவை. கூரைக்குத் தென்னங்கீற்றை வேய்கிறார்கள். ஒரு சொட்டு மழை நீரும் வீட்டிற்குள் புகுவதில்லை.[15]

இங்கு வாழ்கின்ற மக்கள் ஐந்து வகுப்புகளாகப் பிரிந்து உள்ளார்கள். நாயர்கள்[16] அரசனுக்குச் சமமானவர்கள். முதல் வகுப்பைச் சேர்ந்தவர்கள் தலையை மழித்துக்கொண்டு, தோளில் ஒரு நூலைத் தொங்க விட்டுக்கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் மிகவும் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்று மக்கள் கருதுகிறார்கள்[17]. முகமதியர்கள் இரண்டாம் வகுப்பைச் சேர்ந்தவர்கள். வாணிகத்தில் முதலீடு செய்பவர்களான சிட்டிகள் மூன்றாம் வகுப்பைச் சேர்ந்தவர்கள். கோலிங் என்று சொல்லப் படுகின்ற தரகு வணிகர்கள் நான்காம் வகுப்பைச் சேர்ந்தவர்கள். முகவர்கள் ஐந்தாம் வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்கள் அனைவரினும் தாழ்ந்தவர்கள், மிகவும் வறியவர்கள். அவர் களுடைய வீடுகள் மூன்றடி உயரத்திற்குமேல் இருத்தல் கூடாது என்பதும், அவர்கள் நீளமான ஆடைகளை அணிந்து கொள்ளுதல் குற்றம் என்பதும் அரசு வகுத்துள்ள விதி. அவர்கள் வெளியே போகும்போது ஒரு நாயரோ சிட்டியோ எதிர்ப் பட்டால் அவர்கள் தரையில் விழுந்து வணங்க வேண்டும். அந்த மேல்வகுப்பார் தொலைவில் சென்று மறையும் வரையிலும் அவர்கள் எழுந்திருத்தல் கூடாது. அவர்கள் மீன் பிடித்தும் மூட்டை தூக்கியும் வயிறு வளர்க்கிறார்கள்.

சீனாவில் தலைச்சுமை அங்காடியர் செய்வதைப் போலவே, இந்த நாட்டு வணிகரும் தம்பொருள்களைவிற்பனை செய்கின்றனர். இங்கு சோக்கியர் (யோகியர்) என்னும் ஒரு வகுப்பினரும்

[15] ராக்ஹில் இன்னும் ஒரு செய்தி சொல்கிறார். 'இத்தகைய வீட்டைத் தவிர, ஒவ்வொரு குடும்பத்தினரும் தம் உடைமைகளைத் தீயினின்றும் கள்ளவரிடமிருந்தும் காப்பதற்காக, ஒவ்வொரு கொட்டாரத்தைக் கட்டிக் கொள்கின்றனர்.'

[16] மாஹுவானுடைய மூல நூலில் 'நான்குவென்' என்னும் சொல் பயன் பட்டுள்ளது.—ஜியோ பிலிப்ஸ்.

[17] இவர்கள் பார்ப்பனர்களாய் இருக்கக்கூடும்.—ஜியோ பிலிப்ஸ்.

இருக்கின்றனர். சீனாவில் தவோ நெறியைப் பின்பற்றுபவர்களைப் போலவே இவர்களும் மிகவும் எளிய வாழ்க்கை நடத்துகிறார்கள். ஆனால் இவர்கள் மணஞ் செய்துகொள்கிறார்கள். இவர்கள் பிறந்ததிலிருந்து தங்களுடைய தலைமயிரை மழிப்பதும் இல்லை; வாருவதும் இல்லை. மாறாக, அதனைப் பல சடைகளாகப் பின்னித் தோள்மீது தொங்கவிட்டுக் கொள்கிறார்கள்.[18] அவர்கள் ஆடை அணிந்து கொள்வதில்லை; சிறு பிரப்பஞ் சிம்பொன்றை இடையில் மாட்டி, அதன்மீது வெள்ளைக் காலிக்கோத் துணி ஒன்றைத் தொங்கவிட்டுக்கொள்கிறார்கள். சாலையில் நடக்கும் போது அவர்கள் சங்கை ஊதிக்கொண்டே போகிறார்கள். அவர்களுடன் அவர்களுடைய மனைவிமார்களும் செல்கிறார்கள். அவர்கள் ஒரு சிறு துணியை இடையிற் கட்டிக்கொள்கிறார்கள்; வேறு ஆடை எதனையும் அவர்கள் அணிவதில்லை. அவர்கள் செல்கிற வீடுகளில் எல்லாம் அவர்களுக்கு அரிசியும் பணமும் தருகிறார்கள்.

இந்த நாட்டில் மழைக் காலம் மழையற்ற காலம் என்னும் இரு பருவங்களே இருக்கின்றன. மழைக்காலத்தின் முதல் இரண்டு மாதங்களில் அவ்வப்போது சிறிது மழை பெய்யும். அப்போது மக்கள் கடுமழைக் காலத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களைச் சேமித்து வைத்துக் கொள்கிறார்கள். அடுத்த இரண்டு மாதம், பகல் இரவு என்று பாராமல் மழை தொடர்ந்து கொட்டிக்கொண்டே இருக்கும். அதனால் தெருக்கள் வணிகர் கூடும் சந்தைகள் ஆகிய எல்லா இடங்களுமே ஆறுகளைப்போலக் காட்சி அளிக்கும். அப்போது யாருமே வீட்டை விட்டு வெளியே போகமாட்டார்கள். அடுத்த இரண்டு மாதக் காலத்தில் மழை சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கி, அதற்கு அடுத்த ஆறு மாதம் மழை அறவே பெய்யாமல் நின்றுவிடும். இங்கு மண் வளமற்றது. ஆனால் மலைமீது மிளகு விளைகிறது. மிகப் பரவலான இடத்தில் மிளகைப் பயிர்செய்கிறார்கள். அதனுடைய விலை ஒரு போஹாராவுக்கு ஐந்து தேல் ஆகும். போஹாரா[19] என்பது சீனக் கட்டி நானூறுக்குச் சமமான எடை உடையது.

[18] 'அவர்கள் தங்கள் உடலில் மாட்டுச் சாணஞ் சுட்ட சாம்பலைப் பூசிக் கொள்கிறார்கள்'—ராக்ஹில்.

[19] பஹார். இந்தப் பெயருடைய எடை இடத்திற்கிடம் வேறுபடுகிறது. ஒரு தேல் 6 ஷில்லிங் 8 பென்சுக்குச் சமம் என்னும் கணக்குப்படி, கொச்சியில் மிளகை 1 பவுன் 13 ஷில்லிங் 4 பென்சுக்கு—அதாவது, ஒரு பவுண்டு எடையுள்ள மிளகை ஒரு பென்னிக்கும் குறைந்த விலைக்கு—விற்றனர் என்று கருதலாம்.—பிலிப்ஸ்.

வாணிகம் அனைத்தும் சிட்டிகள் கையில் இருக்கிறது. அவர்கள் மிளகு அறுவடையானதும் அதனைக் குடியானவர்களிடமிருந்து வாங்கி, வெளிநாட்டு வாணிகக் கலங்கள் அந்த வழியாகப் போகும்போது அவற்றிலுள்ள வணிகர்களுக்கு விற்று விடுகிறார்கள். அவர்கள் மணிக்கற்கள் முதலிய வேறு பல விலை உயர்ந்த பொருள்களையும் வாங்கியும் விற்றும் வாணிகம் செய்கிறார்கள். மூன்றரைக் கண்டரீன் எடையுள்ள முத்தை நூறு அவுன்ஸ் வெள்ளிக்கு வாங்கலாம். பவழத்தைக் கட்டி கட்டியாக நிறுத்து, ஒரு கட்டிக்கு இன்ன விலை என்று கூறி விற்பனை செய்கிறார்கள். மட்டரக முத்தை அறுத்து, உருள்மணி ஆக்கி, அதற்கு மெருகேற்றுகிறார்கள். உருள்மணிகளையும் எடை போட்டே விற்பனை செய்கிறார்கள். இந்த நாட்டு நாணயம் பணம் என்னும் பெயருடைய தங்க நாணயமாகும். அதனுடைய எடை ஒரு கண்டரீன். அன்றியும், டா-வுர்ஹ் என்னும் பெயருடைய ஒரு சிறு வெள்ளி நாணயமும் இங்கே வழக்கில் இருக்கிறது. விலை குறைந்த பொருள்களை வாங்குவதற்கு அந்த நாணயத்தை மக்கள் பயன்படுத்துகிறார்கள். பதினைந்து டாவுர்ஹ் ஒரு பணத்திற்குச் சமம். இந்த நாட்டில் கழுதையும் வாத்தும் இல்லை; கோதுமையும் வாற்கோதுமையும் இல்லை. நெல்லும், மக்காச் சோளமும், தினை வகைத் தானியமும், சணலும் இங்கு ஏராளமாய்க் கிடைக்கின்றன. நம்முடைய கலங்கள் இங்கே வந்து திரும்பிப் போகும்போது அவற்றில் பேரரசருக்குப் பரிசுப் பொருள்கள் அனுப்பப்படுகின்றன.

—Geo. Phillips in JRAS 1896, pp. 341–44; *cf.* Rockhill, T'oung Pao xvi pp. 449-52.

## ஈ. குலி (கோழிக்கோடு)

இந்தத் துறைமுகத்தைப் பற்றி மாஹுவான் நீண்ட குறிப்பு ஒன்றை எழுதிவைத்துள்ளார். இது ஒரு பெரிய வாணிக மையம் என்றும் பல திசைகளிலிருந்தும் வணிகர் இங்கே வந்த வண்ணமாய் இருக்கின்றனர் என்றும் அவர் விவரிக்கிறார். கோழிக்கோடு கொச்சியிலிருந்து மூன்று நாள் பயணத்தில் இருக்கிறது. தெற்கே கொச்சியும் வடக்கே கண்ணனூரும் இதன் எல்லைகளாய் இருக்கின்றன; மேற்கே கடலிருக்கிறது. கிழக்கே, 500 லீ தொலைவில் (167 மைல்) மலைக்கப்பால் கான்பாமெயி[20] என்னும் நகரமோ ராஜ்யமோ இருக்கிறது.

[20] கோயம்பாடி. இது கோயம்புத்தூரின் பண்டைப் பெயர்களுள் ஒன்று. (ஜியோ பிலிப்ஸ்); ராக்ஹில் இதனைக் 'கான்பாயி' என்று எழுதியுள்ளார். அதனால் இது காம்பேயைக் குறிக்கிறது என்று அவர் கருதுகிறார். டைவென்

அது பருத்தி நூல் துணி உற்பத்திக்குப் பேர்போனது. அங்கும் அதனை அடுத்துள்ள மாவட்டங்களிலும் சிஹ்லி (சிஹ்லிப்பு) என்னும் பெயருடைய துணி நெய்யப்படுகிறது. அது துண்டு துண்டாக நெய்யப்படுகிறது. ஒவ்வொரு துண்டும் 4 அடி 5 அங்குல அகலமும் 25 அடி நீளமும் உடையது. அதனுடைய விலை அங்கு வழக்கிலிருக்கிற தங்க நாணயம் எட்டு முதல் பத்து வரையிலும் இருக்கும். மேலும் புழுக் கூட்டிலிருந்து எடுத்த மேனியாயிருக்கும் பட்டுக்குச் சாயமேற்றி அதனை நெசவுக்குத் தயார் செய்கிருர்கள். பிறகு அதனைப் பல் வண்ணப் பூப்போட்ட பட்டுத் துணியாக நெய்கிருர்கள். அவ்வாறு நெய்யப்பட்ட ஒவ்வொரு துண்டும் நான்கைந்தடி அகலமும் பன்னிரண்டு பதின்மூன்றடி நீளமும் உள்ளதாய் இருக்கிறது. அதனுடைய விலை அங்கு வழக்கிலிருக்கிற நூறு பொன்னுகும்.

இனி நாம் கோழிக்கோட்டுக்குத் திரும்புவோம். அங்கே மிளகு ஏராளமாய் விளைகிறது. ஆயிரம் மிளகு மரத்திற்கும் அதிகமாய்ப் பயிர் செய்யும் குடியானவர்கள் அங்கே பலர் இருக்கின்றனர். மூவாயிரம் மிளகு மரமுடைய தோட்டக் காரர்கள் அங்கே பணக்காரர் என்று கருதப்படுகிருர்கள். அரசன் நாயர் வகுப்பைச் சேர்ந்தவன். கொச்சியரசனைப் போலவே அவனும் புத்த மதத்தைச் சேர்ந்தவன். அதனுல், அவன் மாட்டிறைச்சி உண்பதில்லை. அவனுடைய கண்காணி ஒரு முகமதியன். அதனுல் அவன் பன்றி இறைச்சி தின்பதில்லை. முன்னெரு காலத்தில் இருந்த அரசனும் அவனுடைய கண் காணியும் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்களாம். அரசன் பன்றிக் கறி தின்பதை நிறுத்திவிட்டால், கண்காணி மாட்டுக் கறி தின்பதை விட்டுவிடுவது என்பதுதான் அந்த ஒப்பந்தம். அவர்களுடைய சந்ததியார்கள் இன்று வரையிலும் அவ்வொப்பந்தத்தை இம்மியும் பிசகாது கடைப்பிடித்து வருகிருர்கள். காலையில் எழுந்ததும் அரசன் புத்தர் சிலையின்முன் விழுந்து வணங்குகிருன். அதன் பிறகு அவனுடைய பணி யாட்கள் மாளிகைக்குப் பக்கத்திலுள்ள ஆவின் சாணம் அனைத்தையும் எடுத்துக்கொண்டுவந்து கடவுள் சிலையின்மீது பூசுகிருர்கள். அந்தச் சாணத்தில் ஒரு பகுதியை நெருப்பி விட்டு எரித்து, சாம்பலை ஒரு சிறு துணிப்பையில் போட்டு

டக்கும் பெலியோவும் பிலிப்ஸின் கருத்தை ஆதரிக்கிருர்கள், மாஹுவா னுடைய நூலிலிருந்து இந்தச் சொல்லைப் பெயர்த் தெழுதிய ஒரு சீன ஆசிரியர் இதனைக் 'கான்பாபிட்டி' என்று எழுதியுள்ளார். இதனைப் பிலிப்சும் பெலியோ வும் தங்கள் கருத்துக்கு ஆதாரமாய்க் காட்டுகிருர்கள். T P, xxx. 1933, p. 290, n, 1.

வைக்குமாறு அரசன் கட்டளையிடுகிறான். அந்தப் பையை அவன் தன் உடலில் கட்டிக்கொள்கிறான். அதனை உடலினின்று அகற்றுவதே இல்லை. காலைக் கடன்களை முடித்ததும், அவன் அந்தப் பையிலுள்ள சாம்பலில் ஒரு சிறு பகுதியை எடுத்து, நீரில் குழைத்து, அதனைத் தன் நெற்றியிலும் கை கால்களிலும் பூசிக்கொள்கிறான். புத்தரிடம் தனக்குள்ள பெரும் பக்தியைக் காட்டுவதற்காகவே அவன் அவ்வாறு செய்கிறான்.

அரசனுடைய குடிமக்களுள் பலர் முகமதிய மதத்தைச் சேர்ந்தோர். இந்த ராஜ்யத்தில் இருபது முப்பது பள்ளி வாசல்கள் இருக்கின்றன. முகமதியர் வாரத்தில் ஒரு நாள் அங்கே தொழுகைக்குச் செல்கின்றனர். அவ்வாறு அவர்கள் தொழுகைக்குச் செல்கின்ற நாட்களில் கடைத்தெருவில் யாரும் இருக்கமாட்டார்கள். அதனால் அந்த நாட்களில் காலை நேரத்தில் வாணிகம் நடைபெறுவதில்லை. தொழுகை முடிந்து அவர்கள் பிற்பகலில் திரும்பிவந்த பின்னரே விற்றல் வாங்கல் தொடங்குகின்றன.

**சீனக் கலங்கள்**

சீனக் கப்பல் துறைமுகத்திற்கு வந்து சேர்ந்தவுடன், அரசனுடைய கண்காணியும் சிட்டி ஒருவனும் அதில் ஏறி, அதிலுள்ள சரக்குகளுக்கு ஒரு பட்டியல் தயார் செய்கிறார்கள். அதற்குப் பிறகு சரக்குகளின் விலையை நிர்ணயம் செய்வதற்கு என்று -நாள் குறிக்கிறார்கள். அன்று வணிகர் பலரும் அந்தக் கப்பலுக்குச் சென்று, முதலில் பட்டுத் துணிகளை முக்கியமாக, கின்கிஸ் (கின்காப்) துணிகளைப் பார்வையிட்டு, அவற்றின் விலையை நிர்ணயிக்கிறார்கள். அதன் பிறகு ஏனைய சரக்குகளின் விலையையும் உறுதி செய்கிறார்கள். விலை பேசி முடிந்ததும், கூடியிருக்கும் வணிகர் அனைவரும் கைகோத்துக் கொள்கின்றனர். அப்போது தரகன் 'இந்தச் சரக்குகளின் விலை முடிவாகிவிட்டது; அதனை இனி எவ்வகையிலும் மாற்ற முடியாது' என்று சொல்கிறான்.

முத்துக்கும் மணிக்கற்களுக்கும் உரிய விலையை வெய்நகித் தரகன் முடிவு செய்கிறான். பின்னர்க் கப்பலிலுள்ள சரக்குகளைக் கொடுத்துவிட்டுச் சீனர் முத்தையும் மணியையும் வாங்கிக் கொள்கின்றனர். அந்தச் சரக்குகளின் விலையைத்தான் தரகன் முன்னரே உறுதி செய்துவிட்டானே.

கணக்குப் போடுவதற்கு உதவுகின்ற துணைக் கருவியான மணிச்சட்டம் அவர்களிடத்தில் இல்லை. அதனால் அவர்கள்

தங்கள் கையிலும் காலிலுமுள்ள விரல்களைப் பயன்படுத்து கிறார்கள். அவர்களுடைய கணக்கில் தவறு நேர்வதே இல்லை. இது ஒரு விந்தையன்றோ?

அரசுரிமையை இங்கே விசித்திரமான முறையில் முடிவு செய்கிறார்கள். அரசன் இறந்துபோனால், அவனுடைய மகன் பட்டத்திற்கு வருவதில்லை. அதற்கு மாறாக, அவனுடன் பிறந்தாளின் மகன் அரியணை ஏறுகிறான். ஒருவனுடைய சகோதரியின் மகன் அவன் மகனைக் காட்டிலும் அவனோடு நெருங்கிய குருதித் தொடர்புடையவன் என்று மக்கள் கருதுவதே அதற்குக் காரணம். அரசனுக்குச் சகோதரியில்லை என்றால் அவனுடைய தம்பி பட்டத்திற்கு வருகிறான். தம்பியும் இல்லையென்றால், திறமையும் தகுதியும் உடைய ஒருவன் அரசனாகிறான். இந்த விதி நீண்ட நெடுங்காலமாய்ப் பின்பற்றப்படுகிறது.

குற்றங்களை விசாரித்து நீதி வழங்குவதற்கு இங்கே கடுஞ்சோதனை முறை பெரு வழக்காயிருக்கிறது. எடுத்துக் காட்டாக, ஒருவன் மீது குற்றம் சாட்டப்பட்டால், கொதிக்கிற எண்ணெயில் விரலை விடுமாறு அவனுக்கு ஆணை கடுஞ்சோதனை யிடுகிறார்கள். அதன்பின் அவனை மூன்று நாளைக்குச் சிறையில் அடைத்து விடுகிறார்கள். அந்தக் கெடு முடியும் வரையிலும் அவனுடைய விரல் புண்ணாக வில்லையென்றால் அவன் குற்றமற்றவன் என்றும், புண்ணாகி விட்டால் குற்றவாளி என்றும் தீர்ப்புக் கூறுகிறார்கள். குற்றவாளி தண்டனை அடைகிறான். குற்றமற்றவன் மேள தாளத்தோடு வீட்டிற்கு அழைத்துச் செல்லப்படுகிறான். அங்கே அவனுடைய உறவினர்களும் நண்பர்களும் அவனை ஆடம்பரமாக வரவேற்று, பரிசு கொடுத்து, விருந்து வைத்து மகிழ்கிறார்கள்.

வாழையும் பலாவும் இங்கே நிறைய வளர்கின்றன. அன்றியும் முலாம்பழம், சுரைக்காய், விலங்கொடு மக்களும் உண்ணக்கூடிய கிழங்கு முதலிய பல காய்கறிகளும் இங்கே விளைகின்றன. வாத்து, நாரை, தூக்கணாங்குருவி முதலிய பலவேறு பறவைகளும் மரக் கிளைகளில் தொங்கிக்கொண்டு இருக்கிற வௌவால்களும் இங்கே இருக்கின்றன. இங்கே காணப்படும் வௌவால் பிணந்தின்னிக் கழுகைப் போலப் பெரிதாக இருக்கிறது.

கொச்சியில் போலவே இங்கும் பணம், டாவுர்ஹ் ஆகியவை புழக்கத்தில் இருக்கிற காணயங்கள், நிறுத்தலளவைக்குப்

போஹோறாவும் பன்லாஷிஹறூம் பயன்படுகின்றன. டாங்கோலி என்னும் முகத்தலளவைப் படி ஒன்றும் இங்கே வழக்கில் இருக்கிறது.

பலவகை ரத்தினங்களும் முத்தும் பதித்த தங்க இடுப்புக் கச்சையை இவ்வூர் அரசன் பேரரசருக்குப் பரிசு தருவது வழக்கம்.

—Geo. Phillips in JRAS 1896, 345-48; *cf.* Rockhill; T'oung Pao xvi, pp. 455-60.

## பிற்சேர்க்கை I

## பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியாண்டுகளில் நீர்வழிச் செலவுத்திறம்

இபன் மஜீத் தாம் கி.பி. 1489-90 இல் எழுதிய ஒரு நூலில் பின்வருமாறு கூறுகிறார்: கலிக்கட்டிலிருந்து பயணஞ் செய்கிற கலங்கள் மலாக்காவில் நுழைய முயலும்போது என்ன நடக்கிறது என்பதை இப்போது பார்ப்போம். சில சமயங்களில் பருவக் காற்று அந்தக் கலங்களைச் சிதற அடித்து விடுகிறது; சில சமயங்களில் அது கலங்களை மலாக்காவுக்கு அப்பால் அடித்துக் கொண்டு போய்விடுகிறது. சிறந்த படைக்கலம் பூண்டு சம்பாவி லிருந்து வருகின்ற கலங்கள் மட்டுமே இந்த அபாயத்தி லிருந்து தப்புகின்றன. அவ்வாறு தப்பவேண்டுமானால், அவை நிருஸ் தொடங்கும் போதோ அதற்குச் சற்று முன்னோ பின்னோ புறப்படத் தயாராய் இருக்கவேண்டும். ஹார்மஸ், மெக்கா ஆகிய இடங்களிலிருந்து வருகின்ற கலங்களைப் பருவக்காற்று மலாக்காவுக்குத் திருப்பிக் கொண்டுவருகிறது. தாமதமாக வருகின்ற கலங்கள் நிருஸ் 120ஆம் நாள் அங்கே (மலாக்காவில்) நுழைகின்றன.

இந்தக் குறிப்பிலிருந்து நாம் ஊகித்தறியும் செய்தி என்ன வென்றால், பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதி ஆண்டுகளில், இந்தியாவோடும் தென் அரேபியாவோடும் செங்கடலோடும் சம்பாவோடும் மலாக்காவுக்கு முறையான தொடர்பு இருந்தது என்பதே ஆகும்.

—Ferrand, *Malaka Le Malayu et Malayur*, JA. 11 : 11 (1918), p. 401.

## பிற்சேர்க்கை II

## வெளிநாட்டு வாணிகத்தில் குஜராத்திகள் பங்கு

1511ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில், அல்புகர்க் 18 சிறு கப்பல்களைக் கொண்ட படையுடன் கொச்சியிலிருந்து மலாக்காவுக்குப் போனான். அந்தப் பயணத்தைப் பற்றிய குறிப்புகளில் பின்வரும் செய்தியைக் காண்கிறோம். 'அந்தச் சிறுகப்பல் தொகுதி சிலானை அடைந்தது. அந்த இடத்தில் இருந்து சுமாத்ராத் தீவு கிழக்குத் திசையில் இருந்தது. அப்போது ஒரு கப்பல் தென்பட்டது. அருகில் வருமாறு அல்புகர்க் அந்தக் கப்பலுக்குக் கட்டளையிட்டான். அவ்வாறு அது அருகில் வந்ததும் அல்புகர்க்கின் வீரர்கள் அதனைப் பிடித்துக் கொண்டார்கள். அந்தக் கப்பலில் குஜராத்தி வீரர்கள் இருந்தார்கள். அவர்களைக் கண்டதும் அல்புகர்க்கின் வீரர்கள் சரியான வழியில்தான் தங்கள் கலங்கள் சென்றுகொண்டிருந்தன என்று மிகவும் மகிழ்ந்தார்கள். குஜராத்திற்கும் கீழை நாடுகளுக்கும் பெரு வாணிகம் நடந்துகொண்டிருந்ததால், கீழை நாடுகளுக்குச் செல்லும் வழியைப் பிற நாட்டினரைக் காட்டிலும் குஜராத்திகள் மிகவு நன்றாய் அறிந்திருந்தார்கள்[1].

—Ferrand, JA. 11 : 12 (1918) p : 165.
Cf. *Commentaries*, Vol. iii, p. 58.

[1] ஜாவா என்னும் தலைப்பின்கீழ் ஹாப்சன்-ஜாப்சன் 'ராஸ்மாலா'வை மேற்கோள் காட்டுகிறார். குஜராத்தில் பொதுவாக வழங்கும் செய்தி ஒன்றுள்ளது. 'ஜாவாவுக்குப் போனவன் திரும்பி வரமாட்டான்; திரும்பி வந்தால், இரண்டு தலைமுறைக்குப் போதுமான செல்வங்களுடன்தான் வருவான்.' இதுவே அந்தச் செய்தி.

## பிற்சேர்க்கை III

## மலாக்காவில் இந்திய வணிகரும் இந்தியச் சரக்குகளும் (பதினறும் நூற்ருண்டு)

### 1. டுவார்ட்டே பார்போசா

'மூர் இன வணிகர் பலர் அங்கே வாழ்கின்றனர். புறச்சமய வணிகரும் அங்கே இருக்கின்றனர். செட்டிகள் அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள். அவர்கள் சோல்மெண்டல் (சோழ மண்டலம்) என்னும் நாட்டிலிருந்து வந்தவர்கள். அவர்கள் அனைவருமே பணக்காரர்கள். ஜுங்கே (ஜன்க்) என்று சொல்லப் படுகின்ற பெருங்கலங்கள் அவர்களிடத்தில் இருக்கின்றன. அவர்கள் பலவேறு இடங்களில் பலவேறு வகைப்பட்ட பொருள்களை வாங்கியும் விற்றும் வாணிகம் செய்கிருர்கள். அந்தப் பொருள்களை வாங்குவதற்காகப் பிற நாடுகளிலிருந்து மூர் இன வணிகர்களும் முஸ்லிமல்லாத வணிகர்களும் அங்குச் செல்கிருர்கள். அவர்களுள் சிலர் சீனுவிலிருந்தும் பிற நாடுகளிலிருந்தும் இரண்டு பாய்மரங்களை உடைய கலங்களில் வருகின்றனர். அவர்கள் பலவேறு பொருள்களைத் தங்களுடன் கொண்டுவருகிருர்கள். அவை பட்டுநூற் கண்டுகள், பீங்கான் குடுவைகள், டமாஸ்க் துணிகள், சரிகைத் துணிகள், பல்வண்ண சாட்டின்கள் என்பவை ஆகும். அவர்கள் வாங்கி விற்கும் பொருள்கள் கஸ்தூரி, பேதி மருந்து, வண்ணப் பட்டு, இரும்பு, வெடியுப்பு, நல்ல வெள்ளி, முத்து, சிறு முத்து, பேழை, வண்ண விசிறி, மிளகு, காஞ்சிரைப் பூண்டு, காம்பேத்துணி, சிவப்புத் துணி, குங்குமப்பூ, மெருகேற்றிய—மெருகேற்ருத பவழம், பெவியகேட் துணி, பல்வண்ணப் பருத்திநூல் துணி, வங்கத்து வெண்டுகில், பாதரசம், அபின், ரசகந்தகை, காம்பே மருந்து முதலியவை ஆகும். அந்த மருந்துப் பொருள்களுள் சில நம்மிடம் (போர்ச்சுகீசியரிடம்) இல்லை. அவற்றுள் ஒன்றைப் புட்சோ, என்றும், இன்னென்றைக் காச்சோ என்றும், வேருென்றை மாஜிக்கன் என்றும் அவர்கள் சொல்கிருர்கள். அவையெல்லாம் கசப்புக் காய்கள். அவற்றை அவர்கள் லெவான்டிலிருந்து மெக்கா வழியாய்க் காம்பேயிக்குக் கொண்டுவருகிருர்கள். அவை ஜாவாவிலும் சீனுவிலும் நல்ல விலைக்கு விற்கின்றன.'

—Cited by Ferrand JA. 11 : 11 (1918) pp. 407-8. Cf. Longworth Dames ii 172-3.

### 2. காஸ்டனேடா

'...... நகரத்தின் வடபகுதியில் க்வெலின் (க்லிங், இந்திய நாட்டுக் கலிங்க ராஜ்யத்து மக்கள்) என்னும் வணிகர்

வாழ்கின்றனர். இந்தப் பகுதி நகரின் பிற பகுதிகளைக் காட்டிலும் மிகவும் பெரியது. மலாக்காவில் வெளிநாட்டு வணிகர் பலர் இருக்கின்றனர். அவர்கள் நான் முன்பு சொன்னவாறு மற்றவர்களோடு கலவாமல் தனித்து வாழ்கிறார்கள். அவர்களுள் சிலர் மூர் இனத்தவர்; சிலர் புறச்சமயிகள். புறச்சமயிகள் பெரும்பாலும் பெலியகேட்டில் இருந்து வந்தவர்கள். அவர்கள் இங்கேயே நிரந்தரமாய்க் குடியேறி விட்டார்கள். அவர்கள் மிகுந்த செல்வமுடையவர்கள். இன்றைக்கு அவர்கள்தான் உலகிலேயே மிகப்பெரிய வணிகர்கள். அவர்கள் தங்களுடைய செல்வத்தை இத்தனை இத்தனை பஹார் தங்கம் என்றுதான் கணக்கிடுகிறார்கள். அவர்களுள் சிலருடைய சொத்தின் மதிப்பு 60 க்வின்டால் தங்கம் (க்வின்டால் என்பது 100 கிலோ கிராம்). ஒரே நாளில் மூன்று நான்கு கப்பல்களிலுள்ள விலை மதிப்புள்ள சரக்குகளை வாங்கிக்கொண்டு, அவற்றில் வேறு சரக்குகளை ஏற்றி, சரக்குகளுக்குரிய பணத்தை ரொக்கமாய்க் கொடுக்காதவர்களை அவர்கள் பணக்காரர் என்று கருதுவதில்லை. எனவே, இந்தத் துறைமுகமே மிகவும் முக்கியமான துறைமுகம்; இங்கேதான் உலகிலுள்ள மிக விலை உயர்ந்த சரக்குகள் விற்கவும் வாங்கவும் படுகின்றன... அவை (சீனக் கப்பல்கள்) மிளகையும், கம்பாயா வங்கம் பெலியகேட் ஆகிய இடங்களிலிருந்து வருகின்ற துணிகளையும் வாங்குகின்றன. தானியம், குங்குமப்பூ, மஞ்சட் பவழம், செவ்வீயம், பாதரசம், அபின், கம்பாயாவிலிருந்து வருகின்ற காச்சோ பூச்சோ ஆகிய மருந்துகள், செங்கடல் வழியாய் வருகின்ற வாணிகப் பொருள்கள் ஆகியவற்றையும் சீனக் கப்பல்களில் வரும் வணிகர் வாங்கிக் கொள்கின்றனர்... மலபாரிலிருந்து மிளகை ஏற்றிக்கொண்டு பெராவோ என்னும் கப்பல்கள் இங்கு வருகின்றன. அன்றியும் சோழ மண்டலம் வங்கம் முதலிய இந்தியாவின் பலவேறு பகுதிகளிலிருந்தும் தெனுசரிம் பெகு முதலிய இடங்களிலிருந்தும் உணவுப் பொருள் களையும் விலை உயர்ந்த வேறு சரக்குகளையும் எடுத்துக்கொண்டு வணிகர் இங்கே வருகின்றர். மொலுக்கஸ்க் கிராம்பு, போர்னியோக் கருப்பூரம், பந்தாச் சாதிப்பத்திரி சாதிக்காய், டிமர் வெண் சந்தனமரம் செஞ்சந்தன மரம் முதலிய சரக்குகளையும் அவர்கள் மலாக்காவுக்குக் கொண்டு வருகிறார்கள். எனவே, நான் முன்பே சொன்னவாறு, இந்தக் காலத்தில் இதுவே உலகின் மிகப் பெரிய, மிகுந்த செல்வச் செழிப்புடைய, வாணிக மையமாகும்.'

—Castanheda (1528-38): Bk II ch. ii. on the city of Malaca: cited by Ferrand—JA. 11 : 12 (1918) pp. 148-49.

## பிற்சேர்க்கை IV—சீதி ஆலி

*சீதி ஆலி கபுதன் (1554) இயற்றிய மொஹித் (மாக்கடல்*[1]*) என்னும் துருக்கி மொழி நூலிலிருந்து எடுக்கப்பட்ட சில பகுதிகள்; இந்தியக் கடல்களில் நீர்வழிச் செலவுத்திறன் பற்றியவை; ஜோசப் வான் ஹாமர் மொழிபெயர்த்தவை.*

### எட்டாம் பயணம் - ஏடனிலிருந்து குஜராத்து வரையில்

ஏடனிலிருந்து புறப்பட்டால், ஏடன்மலை கண்ணுக்கு மறையும் வரையிலும் நேர் கிழக்காய்க் கலத்தைச் செலுத்த வேண்டும்; அப்படியே ஒரு பகலும் இரவும் போகவேண்டும்; பிறகு, தென்காற்று வீசத் தொடங்கும் வரையிலும் வடகிழக்கே போகவேண்டும்; அதன் பிறகு, இயலுமானால், கிழக்கு வடகிழக்கில் போகவேண்டும்; இயலாவிட்டால், வடகிழக்கிலேயே போய், அதற்கப்புறம் கிழக்கு வடகிழக்குத் திசையில் போகவேண்டும். அவலமாவோடு (?) சேர்ந்து ஒரு சிறிது அசைவு இருக்குமானால், அதைப்பற்றிக் கவலைப்பட வேணடாம்; அதனால் தீமை எதுவும் நேராது. சிறிது நெருங்கிய வழியில் போவதாய் இருந்தால், வடகிழக்காய்ப் போகலாம். மீண்டும் கிழக்கு வடகிழக்குத் திசையில் திரும்பிவிட வேண்டும். விண்மீன் அளவு சமமாகும் வரையில் அவ்வாறு செய்யவேண்டும். வட விண்மீன் குழு[2] 5 அங்குலமும், அம்பு வடிவ வட விண்மீன் குழு 6 அங்குலமும், அகத்திய நட்சத்திரமும் வட விண்மீன் குழுவும் $3\frac{1}{2}$ அங்குலமும் இருந்தால் அளவு சரியாக இருக்கிறதென்று கொள்ள வேண்டும். இந்த அளவில் (உயரத்தில்) கடலில் அடிக்கடி கடல் பாம்புகள் காணப்படும். அவற்றை நன்றாய்க் கவனித்துக் கொள்ளவேண்டும். அது ஒரு நல்ல அறிகுறி. அவை கண்ணில் படாவிட்டால், அவை மீண்டும் கண்ணில் படும்வரையிலும் நேர் கிழக்கே செல்லவேண்டும். அதற்குப் பிறகு வடகிழக்குத் திசையில் திரும்பிக் கரைதெரியும் வரையிலும் செல்லவேண்டும். ஆனால் பாம்புகளைப் பார்த்துக் கலஞ்செலுத்துவதைக் காட்டிலும் கடலின் ஆழத்தை அறிந்து கலஞ்செலுத்துவதே மிகவும் நல்லது. பாம்புகள் ஒரு நாளைக்கு இரண்டு மூன்று முறையே கண்ணில் படுகின்றன. பருவக்காற்று வீசும்போது, சில சமயங்களில்

[1] Ferrand *Relation*, ii 484.

[2] இந்த விண்மீன்களைப் பற்றிய செய்தியில் ஏதோதவறு இருக்கிறது.

'தமனி' என்னும் கலம் பாரசீகக் கரையில் கோஹோலது தகபட்டைப் போன்ற இடங்களின்மீது மோதிவிடுகின்றது. இந்த நேரத்தில் கலம் இடர் மிகுந்த(காட்டுமிராண்டித்தனமான) கால்வாயில் சென்றுகொண்டிருக்கிறது. இங்கே சுழிகள் அதிகமாய் இருக்கின்றன. அதனால் கலத்தை மிகவும் எச்சரிக்கையாய்ச் செலுத்தவேண்டும். இந்த இடத்தைத்தவிர, குஜராத்துக்கும் சிந்துக்கும் இடையிலுள்ள ஜகது வளைகுடாவிலும் சுழிகள் இருக்கின்றன. இங்கே காற்று எப்போதும் கடலிலிருந்து கரையை நோக்கி வீசுகிறது; நீரோட்டம் கரையிலிருந்து வருகிறது. அதனால் எதிர் நீரோட்டமும் பேரலைகளும் இங்கே அதிகமாய் இருக்கின்றன. அவற்றில் சிக்கிக் கொண்ட கலம் கவிழ்ந்து போகக்கூடிய அபாயத்திற்கு உட்படுகிறது. கடவுள் தான் அதனைக் காப்பாற்ற வேண்டும். எனவே, இந்த இடங்களுக்குக் கலம் போகாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும். கலத்தைப் பாரசீகக் கரையிலிருந்து அரேபியக் கரைக்குத் திருப்பி அபாயம் நிறைந்த இந்த இடத்தைத் தாண்டும் வரையிலும், வடக்கு வடகிழக்குத் திசையிலும் வடக்கு வடகிழக்குக்கும் வடகிழக்குக்கும் இடையிலுள்ள திசையிலும் செலுத்தவேண்டும். அதன்பிறகு கலத்தைக் கிழக்கு வடகிழக்குத் திசையில் சேலுத்தவேண்டும். துருவம் 6 அங்குலம் அல்லது $6\frac{1}{4}$ அங்குலத்தில் காணும் வரையிலும் அகத்திய நட்சத்திரக் காற்றை (தெற்குத் தென்கிழக்கு) நம்பக்கூடாது என்பதைத் தெரிந்து கொள்க. அதற்குப் பிறகு நீரோட்டம் நேர்கிழக்கே செல்கிறது. பெருங் கொந்தளிப்பும், யமனில் இஜம் என்னும் பறவைகளும் பனி சபாப் என்னும் பறவைகளும் அம் உல் சனனி என்னும் பறவைகளும் புயல் சின்னங்கள் என்பதை அறிக. அப்போது அப் பறவைகள் கரையில் இருக்கும்; வேனிற் காலத்தில் அவை கடல்மீது பறக்கும். சில சமயங்களில் துருவம் 6 அங்குலத்தில் காணும்வரையில்—அதாவது, அட்சரேகை 19°54, வரையிலும்—அந்தப் பறவைகளைக் காணமுடியும்.

— JASB, v (1836) pp. 456-57.

## பதினான்காம் பயணம்—ஏடனிலிருந்து மொனம்பார் (மலபார்) வரையில்

மேலே ஏடனிலிருந்து குஜராத்துக்குப் போகும் கடல் வழியை விவரித்தோம். அதே வழிதான் மலபாருக்கும் செல்கிறது. துருவம் $6\frac{1}{2}$ அங்குலம் அல்லது 7 அங்குலத்தில்

காணும் வரையில் போகவேண்டும்.[3] பிறகு பாய் திருப்பித் திசை மாற்றிச் செல்ல இயன்றால். கிழக்குக்கும் கிழக்குத் தென்கிழக்குக்கும் இடையில் கலத்தைச் செலுத்துக; அல்லது நேர்கிழக்கேயும் செல்லலாம். இந்தத் திசையில் கலத்தைச் செலுத்த இயலாது போனால், துருவம் 7½ அங்குலம் அல்லது 8 அங்குலத்தில் தெரியும் வரையில் கிழக்குக்கும் கிழக்கு வடகிழக்குக்கும் இடையில் கலத்தைச் செலுத்துக. அங்கிருந்து, துருவம் 6 அங்குலத்தில் தெரியும் வரையில், கிழக்குக்கும் கிழக்குத் தென்கிழக்குக்கும் இடையில் கலத்தைச் செலுத்துக.[4] அதன் பிறகு கரை—அதாவது, அஜதிவ்[5] அல்லது அதை அடுத்துள்ள ஏதாவது ஓரிடம்—கண்ணுக்குத் தெரியும் வரையில் நேர் கிழக்கே செல்க. பின்னர், கரையை அடைக. அங்குலம் துருவம் முதலியவை முன்னரே விளக்கப்பட்டுள்ளன.

*Ibid*, p. 458

## இருபதாம் பயணம்—தபுலிலிருந்து திப் தீவுவரையில்

முதலில் மேற்குத் தென்மேற்குத் திசையில் கலத்தைச் செலுத்துக. கரை கண்ணிலிருந்து மறைந்ததும், தைராவை நோக்கி, தென்மேற்குக்கும் மேற்குத் தென்மேற்குக்கும் இடையில் கலத்தைச் செலுத்துக. கரை தெரியும் வரையில் அவ்வாறே செய்க. அங்கிருந்து துருவம் 3 அங்குலத்தில் தெரியும் வரையில் தெற்குத் தென்கிழக்கே செல்க, அங்கிருந்து தென் துருவத்தை நோக்கி பர்க்கடைன் (B and Yin the little bear) 8½ அங்குலத்தை அடையும் வரையிலும் தெற்குத் தென்மேற்கே செல்க. அங்கிருந்து பொயுக்கா அல்லது அதற்கு அருகிலுள்ள இடம் வரையிலும் நேர் மேற்கே செல்க. மேலே சொன்னவற்றை மனத்திற்கொண்டு தென்மேற்குக்கும் மேற்குத் தென்மேற்குக்கும் இடையில் கரை தெரியும் வரையில் செல்க. மாலத்தீவுகளில் வாழும் மக்களுள் சிலர் பயிற்சி பெற்ற நாய்களின் துணையுடன் மனிதக் குரங்கை வேட்டையாடி அதன் இறைச்சியை உண்கின்றனர் என்பதைத் தெரிந்துகொள்க. அந்த மனிதக் குரங்கை நிஸ்நாஸ் என்று சொல்கின்றனர். அது பார்வைக்குக் குரங்கு போல இருந்தாலும், பேசும் ஆற்றலைப் பெற்றுள்ளது. (குரங்குகளையும் நாம், பொதுவாக, நிஸ்நாஸ்

[3] சுமார் அட்சரேகை 17°

[4] அட்ச ரேகை 15°

[5] அன்கோலாவுக் கருகிலுள்ள அஜிதீவா, அட்சரேகை 14° 40°

என்றே சொல்கிறோம்.) எகிப்தின் மேலாளாயிருந்து இறந்து போன ஜனும் ஹம்சா என்பவரின் உடன்பிறந்தார் அன்றொரு நாள் என்னிடம் ஒரு செய்தி சொன்னார். அது பின்வருமாறு :

ஒருமுறை அவர் வாணிகத்திற்காக யமனின் கடைக் கோடியிலிருந்த ஒரு கிராமத்திற்குச் சென்றார். (கிராமத்தைச் சுற்றிலும் சுவர் எழுப்பியிருந்தனர்.) அந்தக் கிராமத்தி லிருந்த ஒரு வீட்டின்முன் இரண்டு பையன்கள் தரையில் படுத்து அழுதுகொண்டிருந்தார்கள். அவர்களுடைய காலில் தளை பூட்டியிருந்தது. அவர்கள்மீது இரக்கம் கொண்டு அவர் அந்தத் தளையை அறுத்துவிட்டார். வீட்டுக்குடையவர் அதைக் கண்டு சிரித்துக்கொண்டே வெளியே வந்து, 'இவை நாங்கள் வேட்டையாடிப் பிடித்த குரங்குகள் (நிஸ்நாஸ்)' என்று சொன்னார். வணிகர் அதனை அவ்வளவாக நம்பவில்லை. எனவே அடுத்தநாள் வீட்டுக்காரர் வணிகரை அழைத்துக் கொண்டுபோய் நிஸ்நாஸ் வேட்டையைக் காட்டினார். சில நிஸ்நாஸ் கடலிலிருந்து வருகின்றன. அவற்றின் ஊன் அருஞ்சுவைப் பொருளாய்க் கருதப்படுகிறது. நிஸ்நாஸ் பேசும் ஆற்றல் பெற்றவை என்பதைத் தத்துவ வாதிகளும் எழுதிவைத்துள்ளார்கள்.

—*Ibid*, pp. 461-62.

## இருபத்தாறும் பயணம் – கோழிக்கோட்டிலிருந்து கர்டபுன் வரையில்

கோழிக்கோட்டிலிருந்து புறப்பட்டு, காற்று வாய்ப்பாய் இருந்தால் மேற்குக்கும் மேற்குத் தென்மேற்குக்கும் இடையில் கலத்தைச் செலுத்துக. சில சமயங்களில் மேற்குத் தென் மேற்கிலும் செல்லலாம். அப்படிச் செய்தால், கொல்பைனி* என்னும் தீவை அடையலாம்.

இந்தச் சமயத்தில்—அதாவது, யஜ்த ஜெர்தியன் ஆண்டின் 140ஆம் நாளாகிய ஜெலலியன் (மார்ச்) மாதம் 5ஆம் நாள்—கடல் மூடிக்கொள்ளக் கூடும். அப்போது நீரோட்டம் வடக்கு வடமேற்குத் திசையில் செல்கிறது. அப்போது கலத்தைத் தென் துருவத்தை நோக்கிச் செலுத்துக. நீரோட்டம் தென் துருவத்தை நோக்கிப் பாயுமானால் பாய் திருப்பித் திசை மாற்றுக. காற்றின் வேகம் குறைந்தால், தென்மேற்கு, தென்மேற்குக்கும் தெற்குத் தென்மேற்குக்கும் இடையிலுள்ள திசை, தெற்குத் தென்மேற்கு

* கால்பெனி—லட்சத்தீவுகளுள் ஒன்று.

ஆகிய திசைகளில் ஒரு பகலும் ஓர் இரவும் கலத்தைச் செலுத்த லாம். அதனால் எவ்விதத் தொல்லையும் நேராது. காற்றின் வேகம் மேலும் குறைந்தால், கலத்தைத் திருப்பி வடதுருவத்தை நோக்கிச் செலுத்துக. நேராக வடதுருவத்தை நோக்கிச் செலுத்தாவிட்டாலும், அந்தத் திசையில் கலஞ் செல்கிறதா என்பதைக் கவனிக்கவேண்டும். வடதுருவம் 3 அங்குலத்திற்குக் குறைவாய்த் தெரியும்போது (அட்சரேகை 10°) அவ்வாறு செய்வது முக்கியமானது; ஏனெனில், அத்திசையில் காற்று வாய்ப்பாய் இருக்கும். புறப்படும்போதே காற்று வாய்ப்பாய் இருந்தால், மேற்குக்கும் மேற்குத் தென்மேற்குக்கும் மையத் திசையில் இரண்டு ஜாமும் மேற்குத் தென்மேற்குத் திசையில் எட்டு ஒன்பது ஜாமும் செல்லவேண்டும். அவ்வாறு செய்தால் புல்தீவுக் கூட்டத்தைக் கடந்துவிட்ட மகிழ்ச்சியை நீங்கள் அடைவீர்கள். பிறகு, மேற்குக்கும் மேற்கு வடமேற்குக்கும் இடையிலுள்ள திசையிலும் மேற்கு வடமேற்குத் திசையிலும் துருவம் 4½ அங்குலத்தில் காணும் வரையிலும் சென்று, அதன் பிறகு நேர்மேற்கே சென்றால் கர்டபுன்னை அடையலாம். கோழிக்கோடு மிளகுத் தோட்டத்திற்குப் பேர் போனது. அதனுடைய அரசனான சமெரு என்பவன் போர்ச்சுகீசியருடன் பொருதுகொண்டிருக்கிறான். இந்தப் பக்கத்துக் கடற்கரைகளில் கலங்களைக் கரைக்கு இழுப்பதற்கும், அவற்றைக் கடலில் பாய்ச்சுவதற்கும், இவைபோன்ற வேறு வேலைகளைச் செய்வதற்கும் யானைகள் பயன்படுகின்றன.

—*Ibid*, p. 465.

## இருபத்தேழாம் பயணம்—டையூவிலிருந்து மலாக்கா வரையில்

டையூவிலிருந்து புறப்பட்டு, துருவம் 5 அங்குலத்தில் தெரியும் வரையில், தெற்குத் தென்கிழக்கே சென்று, கலம் கரைக்கு 6 ஜாம் தூரத்தை அடையும் வரையில் கரையை நோக்கிச் செல்ல வேண்டும். அதன் பிறகு தெற்குத் தென்மேற்குத் திசையில் செல்க. இலங்கைக்கு அருகிலுள்ள கடலில் பெரிய அலைகள் அடிக்கின்றன. அதனால் கரையை விட்டுத் தள்ளியிருப்பது நல்லது. கரையிலிருந்து தள்ளிப் போகப் போக அலைகளின் உயரமும் குறைந்துகொண்டே போகிறது. ஒரே மூச்சில் திசையை மாற்றிக் கொள்வதற்கு மாறாகச் சிறிது சிறிதாக மாற்றிக் கொள்ளவேண்டும். முதலில் பர்க்கடைன் (B and Y in the little bear) 8 அங்குலத்திற்குக் காலங்குலம் குறைந்து தெரியும் வரையிலும் செல்லவேண்டும். பின்னர் பர்க்கடைன் 7¾ அங்குலத்தில்

தெரியும் வரையிலும் தென்கிழக்கே செல்லவேண்டும். அதன் பின்னர், நேர்கிழக்கே 18 ஜாம் வேகத்தில் செல்லவேண்டும். அவ்வாறு செய்தால் சிலானைக் கடந்துவிடலாம். தொடர்ந்து மின்னிக் கொண்டிருக்கும் மின்னல் சிலான் அண்மையில் இருக்கிறது என்பதற்கு அறிகுறியாகும். மழையிருந்தாலும் இல்லாவிட்டாலும் அந்த மின்னல் மின்னிக்கொண்டே இருப்பதால், பொய் சொல்பவனை சிலான் மின்னல் என்று சொல்வது வழக்கமாய்விட்டது. சிலானைக் கடந்த பிறகு துருவம் 2 அங்குலத்தில் தெரியும் வரையில், கிழக்கு வடகிழக்கு, கிழக்கு வடகிழக்குக்கும் கிழக்குக்கும் மையத்திசை ஆகிய திசைகளில் செல்லவேண்டும். பிறகு நஜ்பாரித் (நிக்கோபார்) தீவுக் கூட்டத்தைச் சேர்ந்த சர்ஜல் தீவை அடையும் வரையிலும் நேர் கிழக்கே செல்லவேண்டும். அந்தத் தீவைத் தாண்டிய பின்னர்க் கிழக்குக்கும் கிழக்குத் தென்கிழக்குக்கும் மையத்திசையில் கரை தெரிகிற வரையிலும் சென்று, அதன் ஓரமாகவே போனால் பலுசன்பிலன்[7] தீவுக் கூட்டத்தை (ஒன்பது தீவுகள்) அடையலாம். அங்கிருந்து தென்துருவத்தை நோக்கிச் செல்ல வேண்டும். அவ்வாறு செல்லும்போது வலப்பக்கத்தில் சில தீவுகள் தெரியும். அவற்றுள் அருகில் தெரிகின்ற போலோட் ஜோராத் தீவுகளை அடையும் வரையில் தென்துருவத்தை நோக்கிச் செல்லவேண்டும். அங்கிருந்து கிழக்குத் தென்கிழக்கே சென்றால் கடல் 10 ஆளுயரத்திற்குமேல் ஆழமாயிருக்கும். பத்துப் பதினோர் ஆளுயரம் இருந்தாலும் கவலைப்பட வேண்டியதில்லை. 12 ஆளுயரத்திற்கு அப்பால் ஆழ்கடல் இருக்கிறது. அதற்குள் ஷாப் கபௌசியைத் தாண்டிவிடலாம். பிறகு, பொலுப்பசலார் மலை எதிரில் தோன்றும் வரையிலும் வடகிழக்கே செல்க. ஆழங் காணும் கருவி 24 ஆளுயரம் காட்டும் வரையிலும் அவ்வாறு செல்ல வேண்டும். வளைந்த 'ஷாப்' ஒன்று கடலுக்குள் நீண்டு செல்வதால் இந்த இடத்தில் கலத்தை மிகவும் எச்சரிக்கையாய்ச் செலுத்தவேண்டும். அதனால்தான் வடக்கு வடகிழக்கே பொலுப்பசலார் மலையைக் காணும் வரையிலும் 24 ஆளுயர ஆழமுடைய பகுதியில் செல்லவேண்டும் என்று சொல்கிறேன். அதற்குப் பிறகு நிலத்தை நோக்கிக் கிழக்கு வடகிழக்குத் திசையில் மலாக்கா வரையில் போகவேண்டும். ஷ-லி[9] நாட்டு மக்கள் பலுசன்பிலனிலிருந்து புறப்பட்டு, தென்துருவத்தை நோக்கி இரண்டு ஜாம் செல்கிறார்கள்.

—*Ibid*. pp. 465-66.

[7] மலேயாக் கரையிலுள்ள புலோ சம்பெலன், அட்சரேகை 45°

[8] அரோவாஸ் தீவுகள்.

[9] சோழநாடு.

## இருபத்தெட்டாம் பயணம்—டையூவிலிருந்து ஷட்டிஜம்[10] (வங்காளம்) வரையில்

டையூவிலிருந்து புறப்பட்டு சிலான் செல்லும் வரையிலும் மேலே சொன்ன வழியையே பின்பற்றுக. சிலானைத் தாண்டியதும், அந்தத் தீவு கலத்திற்கு மேற்குப் பக்கம் இருக்குமாறு வடகிழக்குத் திசை நோக்கிச் செல்க. அதற்குப் பிறகு, வடகிழக்குக்கும் வடக்கு வடகிழக்குக்கும் மையத் திசையில் ரக்கஞ்சுக்கு[11] எதிரில் வரும் வரையிலும் செல்க. அங்கே துருவம் 9 அங்குலத்திற்குக் காலங்குலம் குறைவாய் இருக்கும்; அசெல்லி கிட்டத்தட்ட 6 அங்குலம் இருக்கும். இந்த வழியில் நிலந் தென்பட்டால் நல்லது. இல்லாவிட்டால், துருவம் 9½ அங்குலம் இருக்கும் வரையில் கிழக்கு வடகிழக்குத் திசையில் செல்க. அப்படிச் செய்தால் தர்தீவ் என்னும் தீவை அடையலாம். இப்போது அந்தத் தீவு கண்ணுக்குத் தெரிந்தால் நல்லது. இல்லாவிட்டால் நிலம் தெரியும் வரையில் நேர் கிழக்கே செல்க. ஆனால், பெஷ்ட் ஹயுமியுனைக்[12] கடக்கும்போது எச்சரிக்கையாய் இருக்கவேண்டும். அது ஒரு பாலைவனப் பாறை. அதைச் சுற்றி உள்ள கடல் 20 ஆளுயர ஆழமுடையது. தர்தீவைப்[13] பற்றியும் எச்சரிக்கையாய் இருக்கவேண்டும். அதைச் சூழ்ந்துள்ள கடல் ஐந்தே ஆளுயர ஆழமுடையது. ரக்கஞ்சு தென்பட்டால் 25 ஆளுயர ஆழத்தில் வடக்கு வடமேற்கே செல்க. அப்போது ஹயுமியுன் கலத்திற்கு வலப்பக்கம் இருக்கும். அந்த இடத்தில் மிகுந்த எச்சரிக்கை தேவை. ஹயுமியுனைத் தாண்டி, ஆழம் காணும் கருவி 16 ஆளுயரம் காட்டும் வரையிலும் நிலத்தை நோக்கிச் செல்க. அப்படிச் செய்தால் தர்தீவை அடையலாம். தர்தீவைத் தாண்டிய பிறகு, 12 ஆளுயர ஆழமுள்ள கடல் பகுதியில் வடக்கு வடமேற்குத் திசையில் சென்றால், பகல்[14] என்று சொல்லப்படுகின்ற பெரிய 'குர்' ஒன்றை அடையலாம். அதற்குப் பிறகு ஐந்து முனைகளை அடையலாம். அறியாதவர்கள் அவற்றைத் தீவுகள் என்று சொல்கிறார்கள். அதற்குப் பிறகு ஒரு 'கொப்பா' வரும். (கொப்பா என்பது ஆழமற்ற பகுதிகளையும்

10 சிட்டகாங்

11 அரக்கான், அட்சரேகை 20° 10°

12 Probably oyster island, a barren rock off Arrakan. or St. Martin's reef. (J. von Hammer).

13 Probably Nardiel or Narkol deep of Horsburgh, off the *Tek Naaf* entrance. (J. von Hammer).

14 மக்கல் தீவாயிருக்கலாம் (ஜே. வான்ஹாமர்).

நீரடித் திட்டுகளையும் குமுறும் அலைகளையும் உடைய வளைகுடா என்று பொருள்படும்.) இந்த இடத்தைக் கக்கர் திவா[15] என்று சொல்கின்றனர். அதற்குப் பிறகு வடக்கு வடகிழக்கே சென்றால் கலத்திற்கு எதிரில் ஜெஞ்சிலியா[16] என்னும் தீவு தோன்றும். இந்தத் தீவை நெருங்கும்போது கலம் கரையை ஒட்டிப் போகாமல் தள்ளிப் போக வேண்டும்; ஏனெனில், அதனுடைய தென்முனையில் கடல் ஆழமற்றதாய் இருக்கின்றது; நீரின் நிறம் வெள்ளையாய் இருக்கின்றது. கரையிலிருந்து தள்ளியுள்ள பகுதியில் நீரின் நிறம் பசுமையாய் இருக்கின்றது. அந்த வழியிலேயே சென்றால், சிறிது சிறிதாகக் கடல் அமைதி அடைவதையும் அதன் ஆழம் அதிகமாகிப் பதினேழு பதினெட்டு ஆளுயரம் இருப்பதையும் காணலாம். அதற்குப் பிறகு மீண்டும் நீரின் நிறம் வெண்மை அடைவதையும் கடலின் ஆழம் குறைவதையும் காணலாம். இந்த ஆழம் குறைந்த பகுதி வறண்ட பாலைவனம் போன்ற பெஷ்ட் குரியனுக்குத் தென்புறம் இருக்கிறது. இங்கே கடல் பேரிரைச்சல் போடுகிறது. ஜெஞ்சிலியாத் தீவுக்கு மிக அண்மையிலும் செல்லாது, மிகச் சேய்மையிலும் செல்லாது, இடைப்பட்ட வழியில் செல்க. கடலின் ஆழம் பதினெட்டு ஆளுயரத்தை நெருங்கும்போது கலம் ஜெஞ்சிலியாவைத் தாண்டிவிட்டது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். பின்னர், கடலின் ஆழம் 7 ஆளுயரமாகக் குறையும் வரையில் வடதிசையில் செல்க. அங்கிருந்து தொடர்ந்து வடதிசையிற் செல்க. கடலின் ஆழம் 6 ஆளுயரம் இருக்கும் வரையில் (ஆறு ஆளுயரத்திற்குக் குறையக் கூடாது) அவ்வாறே செல்க. அப்படிச் செய்தால் குர் முனையை அடையலாம். அதுவே ஷட்டிஜம் என்பது. வேலை ஏற்றம் நிகழும் வரையில் அங்கேயே நின்று, அது நிகழும்போது ஷட்டிஜம் துறைமுகத்திற்குள் போகலாம்.

வங்காளத்தில் யானைத் தந்தமும் கருங்காலிக் கட்டையும் ஏராளமாய்க் கிடைக்கின்றன. மிக மென்மையான மஸ்லின் தலைப்பாகையும் மிகவுயர்ந்த ஜீட்டரும்[17] இந்தியாவின் மிகச் சிறந்த பண்டங்களும் இங்கே கிடைக்கின்றன. மால்மல் என்று சொல்லப்படும் மிக உயர்ந்த மஸ்லின் அணியரைப் பட்டிகை

[15] குதுப் தீவு—சிட்டகாங்குக்குத் தெற்கில் (ஜே. வான்ஹாமர்)

[16] இப்போது அத்தகைய தீவு அங்கு இல்லை; ஆனால், சீதி ஆலியன் காலத்தில் இருந்திருக்கக்கூடும். (இந்தியக் கடற் படையைச் சேர்ந்த லாயிட் என்பவரின் கருத்தை வான்ஹாமர் ஆதாரமாய்க் காட்டுகிறார்.)

[17] சௌதர் : நான்கு நூல்களையுடைய மென்றுகில்—வான்ஹாமர்).

இங்கே கிடைக்கிறது. மிகவும் விலையுயர்ந்த அத்தகைய பட்டிகையை மால்மலி ஷாஹி என்று சொல்கின்றனர். அறியாதார் அதனை மார்மரே ஷாஹி (மிக உயர்ந்த பளிங்கு) என்று சொல்கின்றனர். இங்கே கடல் சிங்கங்களும் (Sea Bull) இருக்கின்றன. அவற்றுள் மிகவும் சிறந்தவை வங்காளத்திற்கும் டில்லிக்கும் இடையில் உள்ள உள்நாட்டு ஏரிகளில் வாழ்கின்றன. அவை கடலில் வாழ்வதில்லை. உள்நாட்டு ஏரிகளில்தான் வாழ்கின்றன. எனினும், அவற்றைக் கடல் சிங்கம் என்று வணிகர் சொல்கின்றனர். உள்நாட்டில் வடபகுதியிலுள்ள ஏரிகளிலும், ஆப்கானிய மலைகளினும் காண்டாமிருகங்கள் இருக்கின்றன. ஆனால் அவற்றின் கொம்பு இரு கை நீளமே உள்ளது. அபிசீனியாவில் இருக்கின்ற காண்டாமிருகங்களின் கொம்பு மிகவும் நீளமாய் உள்ளது என்று சொல்கின்றனர். ஒட்டைச் சிவிங்கிகள் அபிசீனியாவில் இருக்கின்றன. இந்தியாவில் அவை இல்லை.

—*Ibid*. v (1836) pp. 466-67

## பின்னிணைப்பு I—மாட்வான்லின்

கீழே காணும் குறிப்பை எழுதியவர் மாட்வான்லின். கி.பி. பதின்மூன்றும் நூற்றுண்டின் இடையில் இது எழுதப்பட்டது. பான்கூ எழுதிய குறிப்புடன் இதனை ஒப்பு நோக்குவது பயன் தரும்.

### ஹோவங்ட்சி

ஹான் காலத்திற்றுன் ஹோவங்ட்சியிலிருந்து[1] முதன் முறையாய்த் தூதர் வந்தனர்; பேரரசர் ஔட்டியின் கால முதல், குறிப்பிட்ட காலத்தில் தவருது வந்து, பேரரசருக்கு அவர்கள் தங்களுடைய பணிவைத் தெரிவித்துக்கொண்டு செல்கிருர்கள். ஹோப்பூ, ஜினன்[2] ஆகிய நாடுகளுக்குத் தெற்கில் 30,000 லீ தொலைவில் அந்த ராஜ்யம் இருக்கிறது. அந்த ராஜ்யத்தின் பழக்கவழக்கங்கள் ட்சூயை[3] நாட்டின் பழக்க வழக்கங்களைப் போலவே இருக்கின்றன. அங்கே அழகிய முத்து, வியூலி, உயர்தர ரத்தினம் ஆகியவையும் வேறு பல விசித்திரப் பொருள்களும் கிடைக்கின்றன. ஏறக்குறைய இரண்டு ட்சுன்[4] சுற்றளவுள்ள முத்துகளும் அங்கே கிடைக்கின்றன. அவற்றைக் காட்டிலும் சின்ன முத்துகளும் அங்கே கிடைக் கின்றன. ஆனுல், எல்லாமே ஒரு சிறிதும் குறைபாடில்லா உருண்டை வடிவமாயிருக்கின்றன. மழமழப்பான ஒரு மேற் பரப்பில் அவற்றை வைத்தால் அவை ஒரு நாள் முழுதும் அசைந்துகொண்டே இருக்கும். அதற்குப் பிறகுதான் அவை நிலையாக நிற்கும்.

—*Ethnographie* Meridionaux, ed. Hervey de Saint-Denys, pp. 412-13.

[1] கி. மு. 140-86. டெகுவிக்னஸ் சொன்னது: 'ஹோவங்ட்சி என்னும் இராஜ்யம் இந்தியாவிலிருக்கிறது. ஆனுல், இந்தியாவில் எந்த இடத்திலிருக்கிறது என்பது சரியாய்த் தெரியாது.' ஹெர்வி டிசெயின்ட்-டெனிஸ்.

[2] டாங்-கிங்-H. de. S-D.

[3] ஹைனன் தீவின் தென்பகுதி. H. de. S-D.

[4] சுமார் 3 சென்டிமீட்டர், H. de. S-D.

## பின்னிணைப்பு II—மாட் வான் லின்

சோழ நாட்டைப் பற்றி மாட்வான்லின் எழுதியுள்ள நீண்ட குறிப்பை சௌஜ-குவா எழுதியுள்ள குறிப்போடு (அதிகாரம் XXIII பிரிவு ஈ.) ஒப்பிட்டுப் பார்த்தல் பயன்தரும். அவ்விரு குறிப்புகளிலும் ஒற்றுமைகள் பல இருக்கின்றன; ஆனால், முக்கியமான வேறுபாடுகளும் உள. அவரவர் எத்தகைய வேறுபட்ட ஆதாரங்களை வைத்துக்கொண்டு தத்தம் குறிப்புகளை எழுதினர் என்பதை அந்த வேறுபாடுகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

## இட்சூலியன் (சோழநாடு)

இந்த ராஜ்யம் கிழக்குப் பக்கத்தில் கடற்கரை யோரமாய் 5,000 லீ நீண்டு கிடக்கிறது; மேற்குப் பக்கத்தில் மேற்கிந்தியாவிலிருந்து (டியன்ட்சோவிலிருந்து) இது 1,500 லீ தள்ளி இருக்கிறது; தெற்கில் போலானிலிருந்து 2,000 லீ தள்ளி இருக்கிறது; வடக்குப் பக்கத்தில் டுன்டியெனிலிருந்து 3,000 லீ தள்ளியிருக்கிறது. பண்டைக் காலத்தில் இந்த ராஜ்யத்திற்கும் சீனவுக்கும் தொடர்பில்லாமல் இருந்தது. இந்த ராஜ்யத்தை அடையவேண்டுமானால், குவாங்ட்சியோவிலிருந்து கடல் வழியாக ஏறக்குறைய 4,11,400 லீ பயணஞ் செய்யவேண்டும்.

இட்சூலியன் இராஜ்யத்தின் தலைநகரம் ஏழு மதில்களை உடையது. அவை ஏழு ட்சீ உயரமுள்ளவை; ஒன்றிலிருந்து ஒன்று நூறு காலடி தள்ளியிருக்கிறது. எல்லாவற்றிற்கும் வெளியே உள்ள சுவர் தெற்குவடக்காய்ப் பன்னிரண்டு லீ நீளமும் கிழக்குமேற்காய் ஏழு லீ நீளமும் இருக்கிறது. முதலில் உள்ள நான்கு சுவர்கள் செங்கல்லில் கட்டப்பட்டவை. ஐந்தாம் சுவரும் ஆறும் சுவரும் மண்ணால் கட்டப்பட்டவை. ஏழாம் சுவர் மரத்தில் கட்டப்பட்டது. சுவர்கள் எல்லாவற்றிலும் கொழு கொம்புப் பலகணிகளோ பூ வேலைப்பாடுகளோ காணப்படுகின்றன. முதல் மூன்று சுற்றுகளில் பொதுமக்கள் வசிக்கிறார்கள். அங்கே நீர்நிலைகள் பல இருக்கின்றன. நான்காம் சுற்றில் உயர் அலுவலர் நால்வரின் வீடுகள் இருக்கின்றன. ஐந்தாம் சுற்றில் அரசனுடைய புதல்வர்கள் வசிக்கிறார்கள். ஆறும் சுற்றில் புத்தர் கோயில் இருக்கிறது. அதில் பணிபுரியும் பௌத்த குருமார் நூறு பேர் இருக்கின்றனர். இறுதிச் சுற்றில் அரசன் வசிக்கிறான். அங்கே மன்னன் மாளிகை இருக்கின்றது என்று சொல்வதைக் காட்டிலும் அரசு நகர் இருக்கின்றது என்பது பொருத்தமாக இருக்கும்; ஏனெனில் அங்கே நானூறுக்கு மேற்பட்ட

கட்டடங்கள் உள. அவ்வீடுகளுள் இரண்டாந்தர வீடுகள் முப்பத்தொன்று இருக்கின்றன. அவற்றுள் பன்னிரண்டு மன்னன் மாளிகைக்கு மேற்கிலும், எட்டு தெற்கிலும், பதினொன்று வடக்கிலும் இருக்கின்றன. இப்போது ஆட்சி செய்கின்ற அரச வமிசம் மூன்று தலைமுறையாய் அரசோச்சி வருகிறது.[5]

அரசனுடைய உயர் அலுவலர் நால்வருள் ஒருவனுக்கு நீதி வழங்கும் அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. குற்றம் சாட்டப் பட்டவர்களுக்குக் காலிலும் கையிலும் தளைபூட்டி ஐம்பது முதல் நூறு கசையடி தரப்படுகிறது. பெருங் குற்றம் செய்தவர் களுடைய தலையை வெட்டிவிடுகிறார்கள்; அல்லது, யானையின் காலால் இடறச் செய்கிறார்கள்.

விருந்து நடைபெறும்போது அரசனும் அவனுடைய உயர் அலுவலர் நால்வரும் கைகுவித்தும் பௌத்த குருக்களைப்போல உடலை வளைத்தும் ஒருவர்க்கொருவர் தம்முடைய மரியாதையைத் தெரிவித்துக் கொள்கின்றனர். அவர்கள் இறைச்சி தின்கிறார்கள்; ஆனால் மதுபானம் செய்வதில்லை. பலவகைப்பட்ட வடிசாறும் மாவடையும் மிகவும் சுவையுடைய வேறு பண்டங்களும் விருந்தின்போது படைக்கப்படுகின்றன. அவர்கள் பருத்திநூல் ஆடைகளை அணிந்துகொள்கிறார்கள். விருந்து நடைபெறுகின்ற நேரத்தில் ஆடலும், பாடலும் நிகழ்கின்றன. உணவுப் பண்டங் களைப் பணிப்பெண்கள் படைக்கிறார்கள்.

தான் காதலிக்கும் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள விரும்புகின்ற ஆடவன் பொன்னாலோ வெள்ளியாலோ செய்த மோதிரம் ஒன்றை இரு வீட்டாருக்கும் தெரிந்த ஒரு பெண்ணிடம் கொடுத்துப் பெண்ணின் வீட்டிற்கு அனுப்புகிறான். மூன்று நாள் கழித்து, மணமகனுடைய சுற்றத்தார் கூடி, திருமணம் செய்துகொண்டு வாழப்போகும் மணமக்களுக்கு விளை நிலம், ஆடு, மாடு முதலியவற்றைக் கொடுக்க இயலுமா அல்லது வெறும் வெற்றிலை பாக்கையும் தேறல் முதலியவற்றையுமே தருவதா என்பதை ஆலோசிப்பர். பெண் வீட்டாரும் கலந்து ஆலோசித்து, மணமகனுக்குப் பொன்மோதிரங்களோ வெள்ளி மோதிரங்களோ சிலவற்றையும், ஆடைகள் சிலவற்றையும், மணப்பெண்ணுக்கென்று உயர்தர ஆடைகள் சிலவற்றையும் அனுப்புவர். இத்தகைய முதல்நிலைச் சீர்களெல்லாம் முடிந்த

[5] இது முதலாம் இராஜராஜன் காலத்து நிலைமையை விவரிக்கும் செய்தி என்று கருதலாம்.

பிறகு, ஆடவன் அந்தப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள மறுத்தால் பெண் வீட்டார் அவனுக்கு அளித்த பரிசுகளை அவன் திருப்பித் தரவேண்டும்; பெண் மறுத்தால் மாப்பிள்ளை வீட்டார் அளித்த பரிசுகளைப்போல இருமடங்கு பொருள்களைத் தர வேண்டும்.

போர்க்களத்தில் வீரர்களைப் பின்வருமாறு அணிவகுத்து நிறுத்துகிறார்கள்: முதல் அணியில் யானைகளை நிறுத்தி அவற்றிற்குப் பின்னால் சிறிய ஆயுதங்களையும் கேடயங்களையும் உடைய வீரர் நிற்கின்றனர்; இரண்டாம் அணியில் நெசவுத் தொழிலிற் பயன்படும் நாடாவைப் போன்ற முனைகளை உடைய ஈட்டி ஏந்திய வீரர் நிற்கின்றனர்; மூன்றாம் அணியில் நீண்ட வாள்களை ஏந்திய வீரரும் நான்காம் அணியில்—அதாவது, கடைசியில்—வில்வீரரும் நிற்கின்றனர். படைகளை நான்கு பிரிவுகளாக்கி, அவற்றிற்கு மேலே சொன்ன நான்கு உயர் அலுவலர்களும் தலைவர்களாய் இருக்கிறார்கள். இட்சூலியன் இராஜ்யத்திற்குத் தென்கிழக்கில் சுமார் 2500 லீ தொலைவில் சிலன்சி என்னும் இராஜ்யமிருக்கிறது. சில சமயங்களில் இவ்விரு ராஜ்யங்களுக்கும் போர்மூள்கிறது. இட்சூலியன் நாட்டில் முத்து, பவழம், படிகம், சாதிக்காய், பாக்கு, பருத்தி நூல், துணி(கிபெயி) முதலியவை கிடைக்கின்றன. யானை, ஆடு, மாடு, கிளி, பீசன்ட் (நெடுவால் பகட்டு வண்ணக் கோழி) முதலியவை இந்த நாட்டில் இருக்கின்றன. ஏராளமான (வெள்ளை) மல்லிகையும் பிற மலர்களும் இங்கே இருக்கின்றன. பழ வகைகளுள் இலந்தை, பலா, ப்ளம், தெங்கு முதலியவை இங்கே விளைகின்றன. பச்சைப்பயறு உளுந்து முதலிய பருப்புகளும், நெல் கோதுமை முதலிய தானியங்களும் இங்கே விளைகின்றன. மூங்கில் இந்த மண்ணில் நன்கு வளர்கிறது.

இந்த ராஜ்யத்திற்கும் சீனப் பேரரசுக்கும் பண்டைக் காலத்தில் தொடர்பில்லாமல் இருந்தது. சாங் வமிச ஆட்சிக் காலத்தில்தான் முதன் முறையாய் இந்த ராஜ்யத்தின் தூதர்கள் சீனாவுக்கு வந்தார்கள். டாச்சாங் சியாங்பூ எட்டாம் ஆண்டு ஒன்பதாம் மாதத்தில் (1009) அவர்கள் வந்தார்கள். அந்தத் தூதுக் குழுவின் தலைவனாயிருந்தவன் அப்போது ஆட்சிசெய்து கொண்டிருந்த லோட்சா லோட்சா* என்னும் அரசனுடைய தலைமை அலுவலர்கள் நால்வருள் ஒருவன். அதற்குப் பிறகு பூக்கியாசின் என்னும் தூதனும் அவனுடைய ஆலோசகர்களான

* ராஜ ராஜன்

ஓங்கூபங் என்பவனும் யாக்கின்கியா என்பவனும் வந்தார்கள். அவர்கள் தங்களுடைய அரசனிடமிருந்து ஒரு கடிதமும் பரிசுப் பொருள்களும் திறைப் பொருள்களும் கொண்டுவந்தார்கள். அவர்கள் தாங்கள் கொண்டு வந்திருந்த பரிசுப் பொருள்களான முத்தையும் மணியையும் ஒரு தட்டில் வைத்து எடுத்துக்கொண்டு பேரரசர் அமர்ந்திருந்த அரியணையின் படி வரையிலும் சென்று, தட்டினை அங்கே வைத்துவிட்டு, மீண்டும் அத்தாணி மண்டபத்தின் கடைசி வரையிலும் சென்று, இருமுறை தாழ்ந்து வணங்கினார்கள். தங்களுடைய பற்றையும் பணிவையும் அண்மையில் நின்று மட்டுமன்றிச் சேய்மையில் நின்றும் தெரிவித்துக் கொள்வதற்காகவே அவ்வாறு செய்ததாக மொழி பெயர்ப்பாளன் மூலம் அவர்கள் தெரிவித்தார்கள்.

அவர்கள் தங்கள் அரசனிடமிருந்து கொண்டுவந்திருந்த கடிதம் ஏறக்குறையப் பின்வருமாறு இருந்தது : பெருமை வாய்ந்த சாங் வமிசத்தினர் இப்போது பேரரசை ஆட்சி செய்து கொண்டிருக்கின்றனர் என்றும், அந்த வமிசத்தைச் சேர்ந்த அரசர் இருவர் தங்களுக்குமுன் ஆட்சி செய்தனர் என்றும், தாங்கள் அந்தப் பதவியை இப்போது வகிக்கவேண்டுமென்பது இறைவனுடைய கட்டளை என்றும் என்னுடைய ராஜ்யத்திற்கு வந்திருந்த கப்பல் ஒன்றிலிருந்த வணிகர் ஒருவர் வாயிலாகத் தங்களுடைய குடிமகனாகிய அடியேன் கேள்விப்பட்டேன். நற்பேறு காரணமாக என் காதில் விழுந்த சொற்கள் சிலவற்றைக் கேட்டபோதுதான் தங்களுக்கு என் பணிவைத் தெரிவித்துக் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் முதன்முதலில் என் மனத்தில் தோன்றியது.[6] நன்மை விளைக்கும் தங்களுடைய செல்வாக்கு வெகுதொலைவு பரவி இருக்கிறது என்பதையும், தங்களுடைய குடிமக்கள் தங்களிடத்தில் மிகவும் பணிவாய் நடந்துகொள்கிறார்கள் என்பதையும், தங்களுடைய சிறந்த அறிவும் திறமையும் தங்களுக்குமுன் ஆட்சி செய்தவர் அனைவருடைய திறமையையும் அறிவையும் விஞ்சிவிட்டன என்பதையும் நான் மிக விரைவில் அறிந்துகொண்டேன். தாங்கள் நீதியை மதிக்கின்றீர்கள். தங்களுடைய உயர்குணம் காரணமாகவே தங்களுடைய ஆட்சியில் அமைதி நிலவுகின்றது. தங்கள் வலிமை மிக உயர்ந்தது; தங்களை வெல்ல யாராலும் இயலாது; ஆனால், பிறருடன் போர் தொடங்குவதற்குத் தாங்கள் விரும்புவதில்லை. பிறருக்கு அறிவுரை கூறும் தகுதி தங்களுக்கு இருக்கிறது. தங்களுடைய உண்மையான பக்தியின் வாயிலாய்த் தாங்கள்

[6] இது பின்னால் விளக்கப் படுகிறது.

கடவுளுக்குத் தொண்டு செய்கிறீர்கள். வலிமையற்ற நாணலும் தங்கள் கருணையை உணர்கிறது. கடலிலுள்ள மீன்களும் தங்களுடைய பரிவினால் பயனடைகின்றன. அதனால்தான் இறைவன் தங்களுக்கு அறிவொளி தந்து தங்களைக் காக்கிறான். அதனால்தான் அறிவும் கவர்ச்சியும் பிறர் உணர்கின்ற வகையில் தங்களிடத்தில் எப்போதும் பேரொளி வீசித் திகழ்கின்றன. தங்களுடைய குடிமகனாகிய அடியேன் ஒரு கடையேன்; அறியாச் சிறியேன். என்னுடைய முன்னோர்களைப்போலவே, நானும் சீன நாகரிகம் என்னும் ஒளி வீசாத் தொலைவில் இருக்கிற காட்டுமிராண்டித்தனமான நகரத்தில் வசிக்கிறேன். மெழுகு திரிகளின் துணையோடு ஏதோ ஓரளவு வெளிச்சத்தை நான் காண்கிறேன். தங்களைப் புகழ்ந்து பேசுவோருடைய பேரொலி உலகம் எல்லாம் கேட்கிறது. அது என் காதில் மட்டும் விழாமல் இருக்குமா? என்னுடைய முதுமையும், நம் இருவருக்கும் இடையில் நீண்டு பரந்து கிடக்கிற கடல்களும், அவற்றைக் கடந்து வருவதிலுள்ள இடர்களும் திறைப்பொருள்களை எடுத்துக்கொண்டு நானே நேரில் வந்து தங்களுக்குச் சமர்ப்பிக்க இயலாது செய்துவிட்டன. தங்களருகில் நின்று என் கண்ணாலேயே தங்களுடைய பெருமையைக் காணும் பேறு எனக்குக் கிடைக்கவில்லை. எனவே, என்னுடைய உள்ளத்தில் பொங்கி எழுகின்ற உண்மையான உணர்ச்சிகளை இந்தக் கடிதத்தில் கொட்டுகிறேன். அன்றியும், என்னுடைய நாட்டிற் கிடைக்கின்ற பொருள்கள் சிலவற்றைத் தங்களுக்கு அனுப்புகிறேன். இனிய வாசனையால் ஈர்க்கப்பட்ட எறும்புகளைப்போல, பகலவனுடைய பெருங் கவர்ச்சியால் ஈர்க்கப்பட்ட சூரியகாந்திப் பூவைப்போல, என்னுடைய தூதர் ஐம்பத்திருவரும் தங்களுடைய கீர்த்தியால் ஈர்க்கப்பட்டுத் தங்களுடைய அரியணையின் அடிப்படியில் நிற்பர். முத்தால் அணி செய்யப்பட்ட அங்கி குல்லாய் ஆகிய ஆடைகளையும், பலவகைப் பருமனும் 21,000 வியாங்[7] எடையும் உள்ள முத்தையும், 90 யானைத் தந்தங்களையும், 60 பவுண்டு எடையுள்ள சாம்பிராணியையும் தங்களுக்குச் சமர்ப்பிக்குமாறு அவர்களைப் பணித்துள்ளோன்.'

மேலே சொன்ன பரிசுகள் அரசன் அனுப்பியவை. தூதர்களும், 6,600 வியாங்கு முத்து, 3,300 பவுண்டு நறுமணப் பொருள்கள் ஆகிய பரிசுகளைப் பேரரசருக்குக் கொடுத்தார்கள்,

[7] வியாங் என்பது சீனப் பவுண்டில் பதினாறில் ஒரு பங்கு. 38 கிராம் கொண்டது ஒரு சீனப் பவுண்டு. எனவே 21,000 வியாங் என்றால் 800 கிலோகிராம் முத்து என்று பொருள்படும். இத்தகைய உயர்வு நவிற்சியைப் பொருட்படுத்தாமல் தள்ளிவிடலாம்.— H. de. S-D.

தன்னுடைய ராஜ்யத்திற்கு வந்த வெளிநாட்டுக் கப்பல் தலைவன் சொன்ன சொற்கள் சிலவற்றையே தன்னுடைய நற்பேறு காரணமாகத் தான் கேள்விப்பட்ட சொற்கள் என்று லோட்சா லோட்சா பேரரசருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டான். 'சென்ற பத்தாண்டுக் காலத்தில் கடலிற் புயற் சின்னமே தோன்றவில்லை'[8] என்பவையே அச்சொற்கள். சென்ற பத்தாண்டுக் காலத்தில் பேரரசை ஆட்சி செய்த அரசர் மிகுந்த பக்தி உடையவர் என்பதும் அவர் நற்குணங்கள் அனைத்தையும் பெற்றவர் என்பதும் வியப்பூட்டத்தக்க அந்தச் சொற்களின் உட்பொருள் என்பதை லோட்சா லோட்சா உணர்ந்தான். அதனாற்றான் பேரரசுக்குத் தூதுக் குழு ஒன்றை அனுப்ப வேண்டும் என்று அவன் விரும்பினான்.

சான் ஊவனும்[9] அவனுடைய தோழர்களும் எழுபத்தேழு பகலும் எழுபத்தேழு இரவும் பயணஞ்செய்து நோவூட்டான், போலி-சி-லான் என்னும் தீவுகளைக் கடந்து இட்சென்-பின் என்னும் இராஜ்யத்தை அடைந்தார்கள். அங்கிருந்து பயணத்தை மீண்டும் தொடங்கிய கலம் இரவு பகலாய்ப் பயணஞ் செய்து, ஒய்-மா-லோ-லி என்னும் தீவைத் தாண்டி அறுபத்தொரு நாளுக்குப்பின் கூலோ என்னும் இராஜ்யத்தை அடைந்தது. அங்கே கூலோ என்னும் பெரியமலை ஒன்றிருக்கிறது. அதனாற்றான் அந்த நாடே கூலோ என்னும் பெயர் பெற்றது. பயணம் மீண்டும் தொடர்ந்தது. கலம் கியா-பா, கூ-போ-லவோ, இட்சியூ-பவோ-லாங் ஆகிய தீவுகளைக் கடந்து, அறுபத்தொரு நாளுக்குப்பின் சான்-போ-ட்சியின் கரையை அடைந்து நங்கூரம் பாய்ச்சியது. பயணம் மீண்டும் தொடர்ந்தது. பதினெட்டு இரவும் பதினெட்டுப் பகலும் பயணஞ் செய்தபின், கலம் மான்சான் ஆற்றுக் கடல்வாயைக் கடந்து, டியன்-ட்சோத் தீவுகளின் கரையோரமாய்ச் சென்று, பின்-டியு-லாங் தீவு கண்ணுக்குத் தெரிகிற இடத்தை அடைந்தது. பயணிகள் அங்கிருந்தபடியே கிழக்கே சுமார் 100 லீ தொலைவிலிருந்த சி-ஊவாங்-மூ[10]வின் கல்லறையைக் கண்டார்கள். பயணம் மீண்டும் இருபது பகலும் இருபது இரவும் தொடர்ந்தது. கலம் யாங்-சான், கியூ-சிங்-சான் என்னும் தீவுகளைத் தாண்டி,

[8] இதுவும் அறிவிற்குப் பொருந்தாத உயர்வு நவிற்சியே. மாட்வான் லின்னே இத்தகைய செய்திகளை ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்.

[9] சோழ நாட்டிலிருந்து சென்ற முதல் தூதன்.

[10] இவரைப் பற்றிய செய்திகளுள் பாதி வரலாறாகவும் பாதி கட்டுக் கதைகளாகவும் இருக்கின்றன. H. de. S-D.

பீ-பாத் தீவின் கரையைத் தொட்டுவிட்டு, இறுதியில் கூவங்-இட்சியூ(கான்டன்) துறைமுகத்தை அடைந்தது. இந்தப் பயணம் தொடங்கி முடிவதற்கு மொத்தம் 1,150 நாட்கள் ஆயின.

தூதுக் குழுவை மிகவும் மரியாதையாக வரவேற்க வேண்டும் என்றும், தம்மைப் பேட்டி காண்பது அரசு முறையில் அளிக்கப்படும் விருந்துகளுக்கு அழைப்பது முதலிய சடங்குகளில் கூயிட்சே தூதுக் குழாத்திற்கு எத்தகைய மதிப்பளிக்கப் பட்டதோ அதே வகையான மதிப்பார்வத்தை இந்தக் குழுவினிடமும் காட்டவேண்டும் என்றும் பேரரசர் தம்முடைய ஆட்களுக்கு ஆணை இட்டார். தூதுக்குழு சீனவுக்குப் போய்ச் சேர்ந்த ஆண்டு, இட்சின்-இட்சாங் (அப்போது ஆட்சி செய்துகொண்டிருந்த பேரரசர்) அரியணை ஏறிய பத்தாம் ஆண்டு நிறைவு விழாக் கொண்டாடப்பட்ட ஆண்டாதலால், சான் ஊவனும் அவனுடைய தோழர்களும் ஈ-சிங்-சென்யூவன் பௌத்தக் கோயிலுக்குச் சென்று, பேரரசர் நீண்ட நாள் வாழ வேண்டும் என்று புத்த குருமார் பிரார்த்தனை செய்வதைப் போலவே பிரார்த்தனை செய்தார்கள்.

டியன்-ஹி நான்காம் ஆண்டில் (1020) இட்-சூலியனிலிருந்து இன்னொரு தூதுக் குழு வந்து கூவங்-இட்சியூத் துறைமுகத்தை அடைந்தது. அந்தக் குழுவினர் கரையில் இறங்கிய உடனே அதனுடைய தலைவனாய் இருந்த பா-லான்-டெ-மோலி சோர்வுண்டாக்கும் நோயினால் இறந்துபோனான். அவன் கொண்டு வந்திருந்த அறிமுகச் சான்றுக் கடிதங்கள் பேரரசருக்கு அனுப்பப்பட்டன. அவற்றைப் படித்துப்பார்த்த பேரரசர் தூதுக் குழுவின் உறுப்பினர் அனைவரையும் மரியாதையாய் நடத்தி, அவர்களுக்கு விலை உயர்ந்த பரிசுகளை வழங்கி, அவர்களை அவர்களுடைய நாட்டிற்குத் திருப்பி அனுப்பினார்.

மிங்-டவோ இரண்டாம் ஆண்டில் (1033) இட்சூலியனிலிருந்து இன்னுமொரு தூதன் வந்தான். அவன் தன்னுடைய அரசனிடமிருந்து ஒரு கடிதம் கொண்டுவந்தான். அது பொன் எழுத்துகளில் எழுதப்பட்டிருந்தது. அவன் முத்தால் அணிசெய்யப்பட்ட ஆடை குல்லாய் ஆகியவற்றையும், 105 லியாங் முத்தையும், 100 யானைத் தந்தங்களையும் பேரரசருக்குப் பரிசு கொடுத்தான். தன்னுடைய நாட்டிலிருந்து சீனவுக்குப் புறப்பட்ட தூதர் பலர் கடலில் ஏற்பட்ட புயல்களிற் சிக்கி மாண்டுபோயினர் என்றும் அவர்கள் பேரரசருக்குக் கொடுப்

பதற்காக எடுத்துவந்த பரிசுப் பொருள்களும் கடலில் மூழ்கிப் போய் விட்டன என்றும் அந்தத் தூதன் சொன்னான். பேரரசர் அமர்ந்திருந்த அரியணையின் அருகில் சென்று, சா-டியன்[11] என்னும் சடங்கைச் செய்வதற்கு அந்தத் தூதன் பெரிதும் விரும்பினான். அந்தச் சடங்குக்கென்றே அவன் முதல்தர முத்துகளைக் கொண்டுவந்திருந்தான். அந்தச் சடங்கைச் செய்வதன் மூலம் அவன் பேரரசருக்குத் தன்னுடைய பெரும் பற்றையும் பணிவையும் தெரியப்படுத்த விரும்பினான். அவன் அவ்வாறு செய்வதற்குப் பேரரசர் தம்முடைய இசைவைத் தெரிவித்தார். உடனே அவன் அரியணையருகில் சென்று, மண்டியிட்டு, தன்னிடமிருந்த முத்துகளை ஒரு தட்டில் வைத்து, தட்டைத் தலைக்குமேல் உயர்த்திப் பிடித்தான். பின்னர் அந்த முத்துகளை எடுத்துப் பேரரசருடைய காலடியிற் பரப்பினான். அவன் பெயர் பூ-யா-தோலி என்பது. பேரரசர் அவனுக்குக் கௌரவப் பட்டங்களை வழங்கினார்.

ஹி-னிங் பத்தாம் ஆண்டில் (1077) மீண்டும் இட்சூலியனிலிருந்து தூதுக்குழு ஒன்று வந்தது. அதில் இருபத்தோர் உறுப்பினர் இருந்தனர். பட்டாணி அளவு பெரியவையாய் இருந்த முத்துகளையும், பெரிய வியூலி ஒன்றையும், கருப்பூரம் சாம்பிராணி பன்னீர் முதலிய பலவகைப்பட்ட நறுமணப் பொருள்களையும், உணவுக்குச் சுவையூட்டும் பொருள்களையும், பொரிகம் காண்டாமிருகப் பல் போன்ற அரிய பொருள்களையும், நேர்த்தி மிக்க துணிகளையும், மருந்துச் சரக்குகளையும் அவர்கள் பேரரசருக்குக் கொடுத்தார்கள். தூதுக் குழுவின் தலைவன் சாட்டியன் என்னும் சடங்கையும் செய்தான். பேரரசர் அவனுக்கு உயர்ந்ததொரு பட்டம் வழங்கிக் கௌரவித்து, அரசாங்க மருத்துவ மனையிலிருந்த உயர்தர மருந்துகள் பலவற்றையும் கொடுத்தார். தூதுக் குழுவின் பிற உறுப்பினர்க்கும் பேரரசர் விலை உயர்ந்த பரிசுகள் பலவற்றைக் கொடுத்தார். தூதர்கள் திரும்பிப் போகும்போது, இட்சூலியன் அரசனுக்குப் பேரரசர் அளித்த 81,800 காசுகளையும்[12] 52,000 சீன வெள்ளியையும்[13] எடுத்துக் கொண்டு போனார்கள்.

[11] அரியணையின் படிகளில் முத்தையும் கருப்பூரத்தையும் கலந்து பரப்புதல்—H. de. S.D.

[12] சிறிய கலப்பு உலோக நாணயம்; அதன் மையத்தில் சதுரமான ஓட்டை இருந்தது. H. de. S.D.

[13] மொத்தம் 3,000 கிலோகிராம் வெள்ளி.

இட்சூலியன் இராஜ்யத்தைப் பற்றி இப்போது சொன்ன செய்திகள் சீன வரலாற்று ஆண்டுப் பதிவுகளில் காணப் படுகின்றன. அந்தக் குறிப்புகளின்படி, இட்சூலியன் இராஜ்யம் கூவங்-இட்சியூத் துறைமுகத்திலிருந்து கடல் வழியாகச் சரியாய் 4,11,400 லீ தொலைவில் இருந்தது என்றும் இட்சூலியன் இராஜ்யத்திலிருந்து கூவங் இட்சியூத் துறைமுகத்தை அடைவதற்குச் சரியாய் 1,150 நாட்களாயின என்றும் அறிகிறோம். அந்தக் குறிப்புகளையெல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்தால் அவற்றுள் மூன்றே செய்திகள் மட்டும் நம்பத்தக்கவையாய் இருக்கின்றன என்று நான் கருதுகிறேன். அவையாவன : (1) இட்சூலியன் இராஜ்யம் சீனுவிலிருந்து வெகு தொலைவிலிருந்தது; (2) பழங் காலத்தில் அதற்கும் சீனுவுக்கும் தொடர்பில்லை; (3) அந்த ராஜ்யம் டாச்சாங்-சியாங்பூக் காலத்தின் இடைப் பகுதியில் தான் முதன் முதலில் சீனுவுக்குத் திறைப் பொருள்களை அனுப்பியது.

லோட்சா-லோட்சா அனுப்பியதாகக் கூறப்படும் கடிதம் மிகவும் விந்தையானது. அதனுடைய வாசகத்தை எழுதுவதற்கு மிகுந்த முயற்சி செலவாகி இருக்கும். அதிலுள்ள சொற்றொடர் களையும் சொல்லணிகளையும் நடையின் பொதுத் தன்மையையும் நோக்கும்போது அது சீனர் ஒருவரால் எழுதப்பட்டது என்பது தெளிவாய்த் தெரிகிறது. பிற மொழிகளின் சாயலே அந்த நடையில் இல்லை. சீனுவிலிருந்து சென்று வெளிநாட்டில் குடியேறிய அரைகுறைப் படிப்புள்ள சீனன் எவனேனும் அந்தக் கடிதத்தை எழுதியிருப்பானே என்று பார்த்தால், அப்படியும் இருக்காது என்னும் முடிவுக்குத்தான் நாம் வர இயலும். அதை எழுதியவன் சீன மொழியில் சிறந்த புலவன் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. உண்மையிலேயே சோழ அரசன் எழுதியனுப்பிய கடிதம் ஒன்று இருந்திருக்குமானல், அதனைப் படித்துப் பார்த்த சீனப் புலவன் ஒருவன் அதனுடன் தன்னுடைய கைச்சரக்கையும் சேர்த்து அதற்கு ஒப்பனை செய்வதாக நினைத்து அதன் உருவத்தைச் சிதைத்துவிட்டான் என்று நாம் கருதலாம். அப்படியொரு கடிதம் உண்மையில் இருக்கவில்லை என்றும், சீன இலக்கியவாணன் ஒருவனுடைய கற்பனையில் தோன்றியதுதான் அந்தக் கடிதம் என்றும் சொல்வதே அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய கருத்தாய் இருக்கும்.

—*Ethnographie*, Meridionaux, ed. Hervey de Saint-Denys, pp. 571-82.

## பின்னிணைப்பு III—மாட் வான் லின்

மலபாரைப் பற்றி மாட்வான்லின் எழுதிய குறிப்பை சௌஜு–குவா எழுதிய குறிப்போடு (அதிகாரம் XXIII பிரிவு ஆ) ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

### நான்பி (மலபார்)

இந்த ராஜ்யம் தென்மேற்கில் இருக்கிறது. சான்போட்சியி லிருந்து (பருவக் காற்று) வாய்ப்பாய் இருக்கும் சமயத்திற் புறப்பட்டால் ஒரு மாதத்தில் நான்பியை அடையலாம். அங்கே எப்போதும் காற்று அடித்துக்கொண்டிருக்கிறது. அரசன் வெளியே போக விரும்பினால், புறப்படுவதற்குமுன் உயரலுவலர் தலைமையில் நூறுக்கும் மேற்பட்ட போர்வீரர்களை அனுப்பி, வழியெல்லாம் நிறைந்து கிடக்கும் புழுதியை அடக்குவதற்காக நீர் தெளிக்க ஏற்பாடு செய்கிறான். அவன் மிக உயர்ந்த உணவை உண்கிறான். நூற்றுக் கணக்கான பணியாட்கள் அவனுக்குப் பலவேறு வகைப்பட்ட பண்டங்களைப் படைக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் இரு வேளை உண்ணும்போதும் அவன் இவ்வாறுதான் உண்கிறான். அவனுக்கு உணவு சமைத்துப் படைக்கும் பணியைக் கவனிப்பதற்காகவே உயர் அலுவலன் ஒருவன் இருக்கிறான்.

நான்பி மக்கள் போரில் பெரு விருப்புடையவர்கள். பட்டாக் கத்தியும் ஈட்டியும் அவர்களுக்குக் கைவந்த கருவிகள். வில் வித்தையிலும் அவர்கள் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள். நாணயம் அச்சடிக்கும் கலையில் அவர்கள் வல்லவர்கள். அவர்கள் வெள்ளி யோடு மட்ட உலோகத்தைக் கலந்து, நாணயங்களைச் செய்து, அவற்றில் அரசின் முத்திரையைப் பொறித்து, புழக்கத்தில் விடுகிறார்கள். அவை வாணிகத்திற்குப் பயன்படுகின்றன. அவர்கள் பல்வண்ணப் பருத்தி நூலாடைகளை நெய்கிறார்கள்; முத்துக் குளிக்கும் தொழிலையும் செய்கிறார்கள். நான்பிக்கும் சீனவுக்கும் இடையிலுள்ள தொலைவு மிகப் பெரிதாகையால், அந்த நாடுகளுக்குள் நெடுங்காலம் தொடர்பில்லாமல் இருந்தது. ஒரு நாள் நான்பியைச் சேர்ந்த சீ-லோ-பாட்சி-லி-யு என்னும் பெயருடைய வணிகன் ஒருவனும் அவனுடைய மகனும் டிசியூவன் இட்சியூ நகருக்கு வந்து அதனுடைய மையத்திற் குடி யேறினார்கள். அதற்குப் பிறகு சீனக் கப்பல்கள் நான்பிக்குச் சென்று வாணிகஞ் செய்யத் தொடங்கின.

—*Ethnographie*, Meridionaux, ed. Hervey de Saint-Denys, pp. 587-88.

## பின்னிணைப்பு IV—இபன் பதூதா

*இபன் பதூதா எழுதியுள்ள (அதிகாரம் XXX பிரிவு ஆ) குறிப்பைப் படித்தபின், அதனுடைய தொடர்ச்சியாகக் கீழே தரப்படுகின்ற குறிப்பைப் படிக்க வேண்டும்.*

## சுல்தான் இறந்துவிட்டான் என்ற பொய் வதந்தியும் மாலிக் ஹோஷாங் தப்பியோடியதும்

சுல்தான் தௌலதாபாதுக்குத் திரும்பும் வழியில் நோயுற்றான். அவன் இறந்தேபோனான் என்ற பொய் வதந்தியைச் சிலர் கிளப்பிவிட்டனர். அதைக் கேள்விப்பட்ட சிலர் டில்லியரசுக்கு எதிராகக் கிளம்பினர். மாலிக் கமாலுதீன் குர்க் என்னுபவனுடைய மகனை மாலிக் ஹோஷாங் அப்போது தௌலதாபாதில் இருந்தான். சுல்தான் உயிரோடிருக்கும் வரையிலும் அவனைத் தவிர வேறு யாருக்கும் தான் கீழ்ப்படியப் போவதில்லை என்றும், சுல்தான் இறந்து போனாலும் அவனுக்கே விசுவாசமாய் இருக்கப் போவதாகவும் ஹோஷாங் வாக்குறுதி அளித்திருந்தான். சுல்தான் இறந்துபோனான் என்ற வதந்தி கிளம்பியவுடன் ஹோஷாங் புரப்ராஹ் என்னும் இந்து அரசனுடைய ஊருக்கு ஓடிவிட்டான். (புரப்ராஹ் தௌலதா பாதுக்கும் கோவகன் தானாவுக்கும் இடையில், அடைதற்கரிய ஒரு மலைப்பாங்கான இடத்தில், ஆட்சி செய்துகொண்டிருந்தான்.) ஹோஷாங் ஓடிப் போனான் என்ற செய்தியைக் கேட்டதும், அதனால் ஏதேனும் அபாயம் நேரக்கூடும் என்று சுல்தான் கருதினான். ஆகையால், அவன் தௌலதாபாதிற்கு விரைவாய்த் திரும்பினான். பின்னர், அவன் தன்னுடைய குதிரைப் படையுடன் ஹோஷாங்கைத் துரத்திக்கொண்டுபோய் அவனை வளைத்துக் கொண்டான். ஹோஷாங்கைத் தன்னிடம் ஒப்படைக்குமாறு இந்து அரசனுக்குச் சொல்லியனுப்பினான். ஆனால், அவன் 'என்னுடைய விருந்தினனைக் கைவிடமாட்டேன்' என்று சொல்லியனுப்பிவிட்டான். ஆனால், ஹோஷாங் சுல்தானுடைய கோபத்திற்கு ஆளாக விரும்பவில்லை. எனவே, அவன் இரகசியமாய் சுல்தானுக்கு ஒரு செய்தியனுப்பினான். சுல்தானும் அவனுடைய ஆலோசகர்களும் ஹோஷாங் தௌலதாபாதிற்கு வருவதே நல்லது என்று கருதினார்கள். அன்றியும், சுல்தானுடைய ஆசிரியரான குட்லுக்கான் ஹோஷாங் வரும் வரையிலும் அங்கேயே இருந்து, சுல்தான் அவனைத் தண்டிக்கமாட்டான் என்று உறுதி கூறி, தக்க பாதுகாப்புடன் அவனை சுல்தானிடம் அனுப்ப வேண்டுமென்றும் சுல்தானுடைய ஆலோசகர்கள்

சொன்னார்கள். சுல்தான் திரும்பிப் போய்விட்டான். அதன் பிறகு ஹோஷாங் குட்லுக்கானைக் கண்டு பேசினான். சுல்தான் அவனைக் கொல்லமாட்டான் என்றும் அவனுக்குப் பதவியிறக்கம் எதுவும் நேராதென்றும் குட்லுக்கான் உறுதியளித்தான். எனவே, ஹோஷாங் தன் உடைமைகளை எடுத்துக்கொண்டு. தன்னுடைய மனைவி மக்கள் நண்பர்கள் முதலியவர்களுடன் புறப்பட்டுப் போய், சுல்தானைக் கண்டான். அவன் வரவால் மிகவும் மகிழ்ச்சியடைந்த சுல்தான் அவனுக்குப் பொன்னுடை போர்த்தி மகிழ்வித்தான்.

*Voyages D'Ibn Batoutah* ed Defremery [and Sanguinetti Vol. ii, pp. 335-36; *cf*. Elliot and Dowson, iii, p. 619.

# மேற்கோள் நூற்பட்டியல்

## (BIBLIOGRAPHY)

### Periodicals

Bulletin de 1 'Ecole Francaise D' Extreme-Orient (BEFEO), Hanoi.

Indian Historical Quarterly (IHQ), Calcutta.

Journal of Oriental Research (JOR), Madras.

Journal of the (Royal) Asiatic Socitey, Bengal (JASB), Calcutta.

Journal of the Royal Asiatic Society (JRAS), London.

Spolia Zeylanica : Colombo, Ceylon.

T'oung Pao (TP), Leyden.

### Books and Monographs

Adler, M.N. : The Itinerary of Benjamin of Tudela, London, 1907.

Asher, A : The Itinerary of Rabbi Benjamin of Tudela, (New York), Vols. I and II.

Barbier de Meynard : Le Livre des Routes et des Provinces pas Ibn-KHordadbeh, public, traduit et annote. J.A. 6 : 5 (1865) : Pages 1-127, 227—95, and 446—532.

Beal : Si-Yu-Ki. Buddhist Records of the Western World, 2 Vols. in one, London. (n-d.)

Bombay Gazetteer : Vol. I. Parts i and ii (1896).

Bretschneider: Mediaeval Researches from Eastern Asiatic Sources. Fragements towards the kdowledge of the

Geography and history of Central and Western Asia from the 13th to the 17th Century. 2 Vols. (Trubner's Oriental Series), London, 1910.

Buzurg Ibn Shahriyar: The Book of the Marvels of India, English Translation by L. Marcel Devic (The Golden Dragon Library), London, 1928.

Buzurg Ibn Shahriyar: Kitab 'Ajayab-ul-Hind or Livre des Merveilles de L'Inde, Texte Arabe par P.A. Van der Lith traduction Francaise par L. Marcel Devic, Leide, 1883—1886.

Cary: History of Rome, London, 1936.

Cary and Warmington: The Ancient Explorers, London, 1929.

Chavannes: Memoire Compose a I' ep que de la grande dynastie T'ang sur les Religieux Eminents qui allerent chercher la loi dans les pays d'occident part I-Tsing. Librairie Ernest Leroux, Paris, 1894.

Chavannes: Notes Additionnelle sur les Tou-kiue (Turks) occidentaux, TP, ii. 5 (1904) pp. 1—110.

Day: The Land of the Perumals, or Cochin, Its Past and its Present. Madras, 1863.

Defremery and Sanguinetti: Voyages D'Ibn Batoutah, (societe Asiatique), Paris, Vol. III, 1855, Vol. IV, 1858.

Duyvendak. Ma Huan Re-examined. (Verhandelingen der Konninklijke Akademie van Wetenschappen-Afd. Letterkunde Niewe Reeks, Deel xxxii No. 3) Amsterdam, 1933.

Elliot and Dowson: The History of India as told by its own Hiptorians, 8 Vols., London, 1867—77.

Ferrand: Relations des Voyages et Textes Geographiques Arabes, Persans et Turks Relatifs a I' Extreme-Orient du VIII au XVIII siecles. 2 Vols, Librairie Ernest Leroux Paris, 1913—14.

Ferrand: Voyage du Marchand Arab Sulayman en Inde et en Chine-Redige en 851 suivi de remarques Par Abu Zayd Hasan vers 816. Paris, 1922,

Gibb: Ibn Battuta, Travels in Asia and Africa, 1323—1354, (Broadway Travellers) London, 1929.

Giles: The Travels of Fa-hsien, Cambridge, 1923.

Hervey de Saint-Denys: Ethnographie des peoples etrangers a la Chine par Ma Touan-Lin, Meridionaux, Geneve, 1883.

Hirth and Rockhill, Chau Ju-kua: His work on the Chinese and Arab Trade in the twelfth and thirteenth centuries, entitled Chu-fan-chi. Academy of Sciences, St Petersburg, 1912.

I-Tsing: A Record of the Buddhist Religion as practised in India and the Malay Archipelago (A.D, 671—695), tr. by J. Takakusu. Clarendon Press, Oxford, 1896.

I-Tsing: Memoire, see Chavannes.

Krom: Hindoe - Javaansche Geschiedenis, 'S-Gravenhage, (1931).

Legge: Fa-Hien's Record of Buddhistic Kingdoms, Clarendon Press, Oxford, 1886.

Levi, Sylvain: Pour l'historie du Ramamyana, JA: 11: 11 (1918).

Levi, Sylvain: Ptolemee, Le Niddesa et la Brhatkatha, in Etudes Asiatiques, 2 Vols.

Major: India in the Fifteenth Century, (Hakluyt Society) London, 1857.

Ma-Touan-Lin: See Hervey de Saint-Denys.

McCrindle: Ancient India as Described by Megasthenes and Arrian, Calcutta. 1877.

McCrindle: Ancient India as Described in Classical Literature, Westminster, 1901.

McCrindle: Topographia Christiana of Cosmas Indicopleusters, (Hakluyt Society) London, 1897.

Oakeshott: Commerce and Society, A short History of Trade and its effect on Civilization. Oxford, 1936.

Pelliot: Les grands voyages maritimes Chinois, TP xxix, (1933) pp. 237-452.

Pelliot: Encore apropos des voyages de Tcheng Houo, TP xxxiii (1936), pp. 210-22.

Reinaud : Relation des Voyages faits par les Arabes et les Persans dans I 'Inde eta la China dans le IX siecle de I'ere chretienne 2 Vols., Paris 1845.

Reinaud and Guyard : Geographie D'Aboulfeda, Vol, I and Vol. II, Pt. i, Paris 1848; Vol. II, Pt. ii, continuation by Stanislas Guyard, Paris 1883.

Ricci : The Travels of Marco Polo (Broadway Travellers). London, 1931.

Rockhill : Notes on the relations and trade of China with the Eastern Archipelago and the Coasts of the Indian Ocean during the fourteenth century, TP XV and XVI (1914 and 1915).

Rockhill : The Journey of William of Rubruck to the Eastern Parts of the World 1253—55, (Hakluyt Society) London, 1900.

Sachau : Alberuni's India (Trubner's Oriental Series), 2 Vols. in one, Kegan Paul Trench, Trubner & Co., Ltd., London, 1914.

Schoff : Parthian Stations by Isidore of Charax, an account of the overland trade route between the Levant and India in the first century B.C., Philadelphia, 1914.

Schoff : Periplus of the Outer Sea by Marcian of Heraclea. Philadelphia, 1927.

Schoff : Periplus of the Erythraean Sea, New York, 1912.

Smith: Early, History of India, 'Oxford, 1924.

Spies (Otto) : An Arab Account of India in the fourteenth century, being a translation of the chapters on India from Al Qalqashandi's Subh-ul-A'sha. (Bonner Orientalische. Studien Heft 14). Stuttgart, 1936.

Watters : On Yuan Chwang's Travels in India (629—645 A.D.) 2 Vols, London 1904-5.

Yule. Mirabilia Descripta (The Wonders of the East) by Friar Jordanus, (Hakluyt Society) London 1863.

Yule and Cordier : Cathay and the Way Thither, 4 vols. (Hakluyt Society), London, 1913—16.

Yule and Cordier : The Book of Ser Marco Polo, 2 Vols, Messrs John Murray, London, 1903; Notes and Addenda by Cordier, London 1920.

# பொருட் குறிப்பு அகராதி